# அருட்பெருஞ்ஜோதி அகவல்

## உரைவிளக்கம்

(முதல் பாகம்)






சரவணானந்தா

முதற்பதிப்பு : 1974 - 3000 பிரதிகள்
இரண்டாம் பதிப்பு : 1990 - 2000 பிரதிகள்
மூன்றாம் பதிப்பு : 1997 - 1000 பிரதிகள்





வெளியீடு:
தயவு நூல் வெளியீட்டு அறக்கட்டளை
தயவு சத்திய ஞான கோட்டம்,
4, நாகசாமி அய்யர் சந்து,
திண்டுக்கல் - 624 001.

விலை ரூ. 250/-
(இரண்டு பாகங்களும் சேர்த்து)

அச்சிட்டோர்:
சோலை பிரிண்டர்ஸ்,
1079, முருகன் காலனி, திருத்தங்கல்-626 130.
(சிவகாசி). போன்: 72443, 23017.

4-4

# தயவு

# அருட்பெருஞ்ஜோதி அகவல் உரையின் மூன்றாம் பதிப்பு

## சிறப்பு முன்னுரை

திரு அருட்பிரகாச வள்ளற் பெருமான் அருள் அகநிலை நின்று அனகமாகவே ஓதியுள்ளது **அருட்பெருஞ்ஜோதி அகவல்.** இதற்குச் சத்விசாரத்தால் மெய்ப்பொருள் கண்டு, பரோபகாரச் செயலால் அனுபவப் பொருள் அனுபவத்தில் பெற வேண்டுவதே திருவருட் சம்மதம். ஆண்டவர் அருட்பெருஞ்ஜோதி தனிப்பெருங்கருணையாய் நம் சத்திய ஞான ஆலயத்தில் எழுந்தருளி ஆட்கொண்டு அருள்பாலித்து வாழ்விக்கும் உண்மையை, வள்ளல் அடிகள் மூலம் இப்பேர் அகவற்பாவில் வழங்கப் பெற்றுள்ளது. அருட்ஜோதிக் கடவுள் தன் இயல் உண்மை அறிவின்ப விளக்கத்தை, எல்லாம் வள்ளல் உளத்திருந்து அனகமாக வெளியிட்டுள்ளார். ஆதலின் நாம் மெய்யுணர்ந்து மெய்ப்பொருள் கண்டு கொண்டு, வாழ வேண்டுவதே நம் கடமையாய்க் கொள்ளவேண்டும்.

பொறிபுலன் உணர்வாலும், மனோகற்பனை யூகத்தாலும் காணப்பெறும் பொருள் உபாயப் பொருளே! அகம் உணர்ந்த ஞான யோகியர் கண்டுகொண்டது உண்மைப் பொருளாகும். அதனால் உள் உவகையும், அற்புத சித்திகள் பெற்று ஆனந்தக் கூத்தாடி அடங்குதல் முடிவாம். அம்முடிவும் நித்தியானந்த வாழ்வு அல்ல! இன்றைய வள்ளல் சன்மார்க்கம், அகவுண்மை நிலை நின்றே அனகமாக வாழ்தல் ஒன்றே இலட்சியமாய்க் கொண்டதாம்! இவ்வுயர் குறிக்கோளோடே, அனுபவப் பொருள் காண முனையப்படுகின்றது.

இதற்கு முன், 1974ல், வள்ளலார் சித்தி நூற்றாண்டு விழாவின் போது முதன்முதலாக உரை விளக்க நூல், சென்னை இராமலிங்கர் பணிமன்றம் மூலம் பொள்ளாச்சி திருநிறை, நா.மகாலிங்கம் அவர்களால் பதிப்பிக்கப் பெற்று வெளிப்போந்தது. பின்னர் மகாலிங்கம் அவர்களே பெரும் பொருட்செலவில், அற்புதமான முறையில், 1990ல் இரண்டாம் பதிப்பு வெளியிட்டு, பலர்க்கும்

கிடைக்கும்படி செய்துள்ளார். அப் பிரதிகளும் தீர்ந்துவிட்ட இது சமயம், பலர் விருப்பத்திற்கிணங்க நல்ல கவர்ச்சிகரமான முறையில் மிகச் சிறப்பாக அச்சிடப் பெற்று வெளிவருகின்றது.

இது, நம் சத்திய ஞான கோட்டம், **'தயவு நூல் வெளியீட்டு அறக்கட்டளை'** மூலம் வெளிக் கொணரப் பெறுகின்றது. இதுகாறும் சுத்த சன்மார்க்கம் இன்னதென உலகறியாதிருந்த ஒன்றை பலர் தெரிந்து கொண்டு வரவேற்கின்றனர். மற்ற பழநெறிமுறை எதுவும், மக்கள் சமுதாயத்தை ஒன்றுபடுத்தி ஒத்து வாழச் செய்யாத பெருங்குறையை நீக்கி, எல்லோரையும் தயவோடு ஒன்றுபட்டு ஒத்து வாழ வைப்பது இந்தச் சுத்த தயாநெறிமுறை ஒன்றே என்ற கருத்தை ஏற்று தழைத்தோங்கச் செய்யவே, அருள் ஆண்டவரே, திருஅருட்பிரகாச வள்ளல் வழி உபகரிக்கின்றார்.

இனி, இம்முறை இறைவன் திருவுள்ளப்படி வரும் நூற்றாண்டுகளில் எவ்வெவர்க்கும் நல்லின்ப வாழ்வு வழங்க உள்ளது மெய்யாகும்.

கடவுள் உண்மை **தயவு** ஆக எல்லோர் அகத்தும் இருந்து கொண்டு, அனகமாக நிரம்பி வாழ்விக்க வருகின்றதாலே, பன்னாட்டுப் பன்மொழிகளில் அச்சாகி, பலர் உள்ளத்தும் பதிவுற்று, நித்திய வாழ்வில் இணைந்து நீடு ஓங்கச் செய்ய தயவோடு வேண்டுகின்றனன்.

தயவு
சத்தியஞானகோட்டம்,
திண்டுக்கல்.
*3-3-97.*

இங்ஙனம்,
ஆசிரியன்,
**சரவணானந்தா.**

# முன்னுரை

## (இரண்டாம் பதிப்பு)

அனாதிநித்திய பரம்பொருள் பிரபஞ்ச தோற்றத்திற்குமுன், அருவமாய் ஒன்றும் இல்லாததுபோல் இருந்துள்ளது. அது, இருள்மய காரொளிநிலையாகும். அதுவே வெளிப்பட்டபோது 'அருள்' ஒளியே நிறைவாய் வெளிநிறைந்த ஒன்றாய்த் திகழலா யிற்று. அந்த அருள்நிறை ஒளியே பிரபஞ்சத்துயாவுமாய் விளங்கி பக்குவமனிதனில் அருட்பெருஞ்ஜோதியாக விளங்கிக் கொண்டும் விளக்கிக் கொண்டும் உள்ளதைத் திருவருளால் உணர்ந்து அது வாகி நின்றவரே நம் திருஅருட்பிரகாசவள்ளலார்.

முன்னுற்ற மெய்ஞ்ஞானியர் பலரும், அருள் ஏக தேசத்தால் உண்மையை அயலாய் இருந்து கண்டு அரும்பெரும் முயற்சி யால், அனந்த சக்தி சித்திகளைப் பெற்றும் முடிவில், அகம் மறைந்து போயினர். வள்ளற் பெருமானார், அகநிலை பெற்று நின்றதோடு அவணின்று அனகமாகச் சுத்த தயவு முறையால் நித்தியானந்த வாழ்வு பெறலானார். அந்நிலையான பெருவாழ்வு தன் போல் எவரும் பெற வேண்டியே சுத்த சன்மார்க்கத்தை தயவோடு வழங்கிவிட்டுள்ளார். அதைத்தான் திருவருட்பாவில் ஆறாம் திருமுறையில், அருட்பெருஞ்ஜோதி அகவலாக விரித்து வழங்கியுள்ளார். இந்த அகவலின் அடைவு இருநிலை கொண்ட தாகும். அதாவது, விசாரஞானத்தோடு கூடிய தோத்திரத்தால் போற்றிப்போற்றி, அகத்தே சார்ந்து நிற்றல் முதலாம் நிலை. அந்நிலையில் இருந்து தயவு செய்து கொண்டேயிருத்தல் இரண் டாம் நிலை. இந்த முறையில் தான், அகவலைப் பயின்று வாழ்வே உரையாகக் கொள்ளவேண்டுவது திருவுள்ளம்.

எனவே, அகவலின் உயர்பயன்பெற விரும்புகின்ற அன்பர் கள் பொருளுணர்ந்து ஓதத் திருவாணைப்படி 1974ல், உரைவிளக்க நூல் ஒன்று, அருட் செல்வர் திருநிறை நா.மகாலிங்கம் அவர்கள் மூலம் வெளியாக்கப்பெற்றது. அந்த உரைக்கு முதலாய்த் தோன்றி யது, தினசரி நாட்குறிப்பு ஏட்டில், நாளும் ஓர் இணையடிக்குச் சிற்றுரை தீட்டின நூலேயாகும். அது, 1960 ஆரம்ப முதல், 1962

மார்ச்சு வரை வரைந்துவைத்த குறிப்பேயாகும். பின் 1972ல் விரிவாக, ஒராயிரம் பக்கங்களில் வரைந்து வைத்ததையே, வள்ளலார் நூற்றாண்டில் இராமலிங்கர் பணி மன்றம் மூலம் வெளியாக்கப்பெற்றது.

அருட்பிரகாசரின் அருளடியையே உளம் கொண்டு, அது உணர்த்த வெளியானதே அவ்வுரை நூலாகும். அது வடலூரில், 1974 மே 24ல், சாலைசகாப்த நன்னாளில் வெளியிடப்பெற்றது. அடுத்து, சென்னையிலும் பாராட்டு விழாவோடு வெளிப்படுத்தி சிறப்பித்தனர்.

அவ்வுரையைப் பலர் அன்போடு போற்றி ஏற்றுக் கொண்டனர். ஒரு சிலர், சுத்த சன்மார்க்கச் சிறப்பினை யுணராதார் குறைகண்டனர் முதலில். நாளடைவில் உண்மையை அறிந்து ஏற்றுக் கொண்டுள்ளனர்.

பின்னர் ஒரு சிலர், சிற்றுரை பல எழுதினார்கள். அவையெல்லாம், புறத்திருந்து விளக்க வந்தன ஆதலின், அனகப்பொருள் வழங்கி வாழ்விக்க கூடாதனவாய்த் தோற்றினவாம்.

சுத்த சன்மார்க்கச் சிறப்போடு, தயா வாழ்வால் உலக மக்கட் சமுதாயத்திற்கெல்லாம் உதவும் முறையில் கிடைக்கப்பெற்றுள்ள நம் உரைநூலுக்கு நல்ல வரவேற்பு ஏற்பட்டுள்ளது. பலரும் இந்த இரண்டாம் பதிப்பு வரவேண்டினர். திருவருளும் இசைந்திட அருட்செல்வரே இவ் வெளியீட்டை நன் முறையில் உலகவர்க் கெல்லாம் வழங்குவிக்கின்றார்.

வள்ளலாரே ஒவ்வொருவரின், ஆன்ம சித்திவளர்க்கத்திலும், புறத்திலும் இருந்து அருட்பெருஞ் ஜோதி வழியில் செலுத்த வெளிப்பட உள்ளார். உலகம் தெரிந்தும் தெரியாமலோ, பேரழிவுக்கும் ஆக்கத்திற்கும் ஊடே முன்னேறிக் கொண்டிருக்கின்றது. அருட்ஜோதி உதயமாகி இருள்மாயா நெறிமுறைகளை ஒழித்து, எல்லோரையும் நல்லாறுபடுத்தி வாழ்விக்க வருகின்றது பெரு நெறிமுறை.

தயா ஜோதிப் புத்தொளியில், பழையனவற்றின் உண்மை எல்லாம் வெளிப்பட்டு, மேற்செல்ல வழிகாட்டிவிட்டு அமைதி பெற உள்ளனவாம்.

மாபிரபஞ்சம் ஏகமானது: அதனை ஆள்கின்ற மாபெரும் பரம்பொருள் எல்லாம் வல்ல ஒன்றாகவேயுள்ளது. அது ஒவ்வொரு சிற்றணுவினின்றும் தன் உண்மையை வெளிப்படுத்த மேற்கொண்ட பெருஞ் செயலே இந்த உலகக் காரியம் எல்லாம். இவ்வுலககாரிய அருஞ் செயலில், அருட்பெருஞ் ஜோதியாய்த் தானே வெளிப்பட்டு, அருட்பிரகாசவள்ளல் என விளங்க வந்துள்ளது சத்தியம்.

இதுகாறும், அருவமாய் உள்ளிருந்தபடி எவருமாய்த் தோற்றி எவ்வளவோ சக்தி சித்திச் செயல்களை வெளிப்படுத்திவிட்டு மறைந்து போய்க் கொண்டே இருந்த அப்பரம் பொருள், அக நிலை நின்றே அனகமுற்று அழியா இன்ப வாழ்வொடு திகழத் திருவுள்ளம் கொண்டு விட்டுள்ளார். இம்மாதிரி, அழியாவடிவுடன் வெளியுற்று, மாபிரபஞ்சத்தில் அதிமனிதனாய் வாழும் பேறு மக்கள் இனத்திற்கே ஏற்பட்டுள்ளது மெய்யாகும். ஏனென்றால், அவர் ஒருவரே அகமிருந்து அனகமாய் இயங்குகின்றது உண்மையாம். ஆகையால் இனியும் மக்கள் சமுதாயம் அறியாமையால் அல்லல் பட்டு அழியவேண்டியதே இல்லை. தம்தம் உண்மையை சத்திய ஞானத்தால் அறிந்து பற்றி இருந்து கொண்டு சுத்த தயா முறையால் நித்திய வாழ்வில் தழைத்திடல் கடமையாகும்.

ஒன்றான தயவு நெறி ஏற்கப்படாததால், பலவாகிய பழைய நெறிமுறைகளால், மன்பதை முழுவதும் சமய மத, ஜாதி இன பழக்க வழக்கக் கொள்கை கோட்பாடுகளால், சிதறிச்சிதைந்து கொண்டேயுள்ளது. இவற்றால் உலகில் ஒரு நன்மையும் உண்டானதேயில்லை. இனியும் உண்டாகப் போவதில்லை. ஏன் இந்த அவலப் பிழைப்பு எல்லாம்! அன்பும், அறிவும் கொண்டு இன்பமாய் ஒத்து வாழ வேண்டிய மானிடவர்க்கம், புலனிச்சைப் பெருக்கும், மூடப் பழக்க வழககமும் கொண்டு வீண்போதல் நன்றல்லவே!

இவற்றை எல்லாம் ஒழித்து அருட்பெருநெறியை எல்லோரும் ஏர்கவேண்டும். உலகம் அதுவேண்டுவது; சமாதான முறையில் ஒத்து வாழ முற்பட்டால்தான் நல்லது; இல்லையேல் பெருங்கேடும், பேரழிவும் உண்டாகிப் பின் நல்வழிக்கு வந்து அருள் வாழ்வுக்குப் பாத்திரமாக வேண்டி நேரும்.

உண்மையை உணரவும், அதுகொண்டு அடைய வேண்டி யதை அடைந்து சிறப்புற்றிலங்கவுமே, இந்த மனிதப்பிறப்பு நமக்கு வழங்கப்பட்டுள்ளது. இதில் உள்ளுணர்வை உரையாக்கி அனுபவத்தை எல்லாம் மொழிவழி பிறரை அடையச் செய்து வாழ்விக்கவே வருவிக்கப் பெற்றுள்ளோம். அகநிலை நின்று அப்படியே முழுமையாக வெளிப்படச் செய்துள்ள உபாயப் படைப்பே நம் தமிழ் என்றால் அது முற்றிலும் மெய்யே ஆகும். இதில் தான் ஆதிமுதலே எழுத்தும், சொல்லும், பொருளும் இலக்கியமும் இலக்கணமும் மெய்ப்பொருள் வெளியீட்டிற்கே அமைந்தனவாக அருளப் பெற்றதாகும். அவ்வளவு இருந்தும் உண்மை அனுபவம் பெறப்படும் முன், அகம் புறம் எனத் தோற்றி மனிதனை இருநிலையில் அலைக்கழித்து விட்டது. இன்பம், அங்குண்டு இங்கில்லை, இங்குண்டு அங்கில்லை எனக்கருதி உள்ளடங்கிடச் செய்தது முன்னோரை. பின்னர் புலனெறிவளர, அகமெய்ப்பொருள் இருளில் மறைந்தது. அதனால் உலகம் புறத் துறையில் வேகங் கொண்டு, மோகம் கொண்டும் பிழைத்துக் கொண்டுள்ளது. இன்றுவரை அவ்விரு நெறிமுறையாலும் வாழ்வு ஏற்படவில்லை.

உண்மையில் அகமெய்ந் நிலையே, அனகமாகச் செயலொடு விளங்கலை அறியாததினால், அகம் புறம் வேறுவேறாகக் கொண்டு அவத்தையுற நேர்ந்ததும் அபக்குவ அறியாமையே. பக்குவமுற்ற இந்நாள்தான் பரன்நிலை, இரண்டல்ல, இரண்டற்ற ஒன்றன் விரிவே. அகம் புறம் என இரண்டாய்க் கொள்ளக் கூடாது. 'அகம் அனகம்' என ஏகமாய்க் கொண்டு வாழ்வதே சரியான முறையாகும் என்ற கருத்து வள்ளல் அனுபவத்தில் வெளியாகிவிட்டுள்ளது. இப்போது தான்,

"கண்டதெலா மநித்தியமே கேட்டதெலாம் பழுதே
கற்றதெலாம் பொய்யேநீர் களித்ததெலாம் வீணே
உண்டதெலா மலமேயுட் கொண்டதெலாங் குறையே
உலகியலீ ரிதுவரையு முண்மையறிந் திலிரே
விண்டதனா லென்னிநீர் சமரசசன் மார்க்க
மெய்ந்நெறியைக் கடைப்பிடித்து மெய்ப்பொருணன் குணர்ந்தே
எண்டகுசிற் றம்பலத்தே யெந்தையரு ளடைமின்
இறவாத வரம்பெறலா மின்பமுற லாமே."

—திருவருட்பா - ஞானசரியை

இதுதான் அகமிருந்து வாழும் அனகநெறி முறை வாழ்வாம். உண்மை இறைமை இப்படி இருக்க, அறியாமையால் அவலமுற்ற காலம் எல்லாம் வீணாயிற்றே எனக் குறைபட்டுக் கொள்ள வேண்டியதில்லை. ஏனென்றால், இந்தப் பக்குவ ஞான தயவு வாழ்வு உண்டாக இவ்வளவ் காலம் இப்படி எல்லாம், அடிபட்டு, அலைபட்டுத் தேறி வந்ததாக வேண்டியே திருவருள் அடங்கி நின்று இது சமயம்தான், இந்த அனக உண்மையை வெளியாக்கி ஆட்கொண்டுள்ளது ஆம். இனிமேல், இந்த மெய்ந்நெறி கொண்டு தழைத்திடும் உலகம் எல்லாம். இதற்கு இந்த அகவல் உரை விளக்கம் நன்கு உதவும்.

இதில், அருட்பெருஞ்ஜோதி ஒன்றே சத்தான மெய்ப்பொருள், அதனைச் சூழ எல்லாப் பொருள்களும், இயக்கங்களும், உணர்வுக ளும், அற்புத சித்துச் செயல்களும், ஆனந்த அனுபவங்களும் சூழ உருவாகி உருவாகி நீங்கிக் கொண்டே இருப்பனவாய், அகமிருந்து அறிகின்றோம். இப்படி அகமே அனகமாய் விரிந்திலங்கக் கண்டு கண்டு தயவு பெருகப்பெருக வாழ்வதால், அகமெய் இயல்பே புற மெய்யுருவையும் அழியாமையாக்கி விளங்கச் செய்வதாம். இவ்வ னுபவம் தர வந்துள்ளது இந்த அகவல். இதன் உட்பொருள், சென்ற னவும், நின்றனவும், வருவனவும் அமையப்பெற்றதால், மெய்ஞ் ஞான, விஞ்ஞான உண்மை எல்லாம் பொருந்தக் காணலாம். தயவு விளைவால் பொய்ப்போகத்தில் இச்சை யொழிந்து மெய்யனுபவத் தில் வாழ்வு தழைக்க உலகம் எல்லாம் அமைதியும், ஆனந்தமும் கொண்டிலங்கும்.

அகவல் மூலம் அனக நலம் பெருக

தயவு

சரவணானந்தா

சத்திய ஞானக்கோட்டம்
4, நாகசாமி ஐயர் சந்து
திண்டுக்கல்-1.

*10.9.90.*

# அணிந்துரை

நூற்று எட்டு ஆண்டுகளுக்கு முன்னால், 1872ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் பதினெட்டாம் தேதி திரு அருட்பிரகாச வள்ளலார் திரு அகவலை இயற்றி அருளினார்.

வள்ளல் பெருமான் இந்தத் திருஅகவலை எழுதும்போது அதற்கு எந்தத் தலைப்பையும் கொடுக்கவில்லை.

''திருச்சிற்றம்பலம்'' என்று மந்திரச் சொல்லினால் தொடங்கி 1596 அடிகளையும் எழுதி, ''திருச்சிற்றம்பலம்'' என்ற மந்திரச் சொல்லுடன் முடித்திருக்கிறார்.

இந்தத் திருஅகவலை எழுதுவதற்கு மூன்று ஆண்டுகளுக்கு முன்னால் 1869ஆம் ஆண்டு இந்தத் திருஅகவலுக்கு உரிய காப்புச் செய்யுளை இயற்றி இருக்கிறார்.

" அருட்சபை நடம்புரி அருட்பெரும் ஜோதி!
தெருள்பெரும் சீர்சொல திகழ்வசித்தியே!''

இதுதான் அந்தத் திருஅகவலுக்கு உரிய காப்புச் செய்யுள்.

உயிர்களின் தெற்குப் பகுதியில், அதாவது உயிர்களின் உச்சந் தலையில் இடைவிடாமல் நடம்புரிந்துகொண்டு இருப்பவர் தான் அருட்பெரும் ஜோதி ஆண்டவர்.

அருட்பெரும்ஜோதி ஆண்டவரின் அருள் ஆற்றலைத் தெளிவாகப் புரிந்து கொள்வதுடன் மற்றவர்களும் புரிந்துகொள்ளும்படி உபதேசித்தால் எல்லா வகையான சித்திகளும் பெற்று வாழ்வாங்கு வாழலாம்.

இதுதான் மேலே இருக்கும் திருஅகவலின் காப்புச் செய்யுளுக்கு உரிய பொருள்.

மேட்டுக்குப்பம் சித்திவளாகத் திருமாளிகையின் முன்னால் 1873ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 22ஆம் தேதி வள்ளலார் சன்மார்க்கக் கொடியைக் கட்டினார். அந்தக் கொடிக்கு உரிய

விளக்கத்தையும் உப்தேசித்தார். இதுதான் அவர் இறுதி யாக ஆற்றிய மகோபதேசம் என்கிற பேருபதேசம்.

இந்த உபதேசத்தில் தான், தாம் எழுதிய திரு அகவலுக்கு உரிய பெயரான "திருஅருட்பெரும் ஜோதி அகவல்" என்ற தலைப்பைச் சொல்லுகிறார்.

''நான் சென்ற ஆண்டு எழுதிய 'திருஅருட்பெரும் ஜோதி அகவ'லில் ஒன்பது திரைகளின் விளக்கத்தைக் காணலாம்'' என்கி றார்.

இந்த இடத்தில் சன்மார்க்க அன்பர்களுக்கு ஒரு சந்தேகம் எழலாம். வடலூர் சத்திய ஞான சபையில் ஏழு திரைகள்தானே இருக்கின்றன. திருஅருட்பெரும் ஜோதி அகவலில் வள்ளல்பெரு மான் ஒன்பது திரைகளைப் பற்றிக் குறிப்பிடுகின்றாரே? அது ஏன் என்று புரியாமல் திகைக்கலாம்.

மனித வாழ்க்கையில் ஏற்படும் அறியாமை முதலிய தடைக ளைத்தான் ஏழு திரைகள் குறிப்பிடுகின்றன.

மாமனித நிலைக்குச் சென்று பேரின்பப் பெருவாழ்வை அடை வதற்கு இன்னும் இரண்டு வகைத் தடைகள் இருக்கின்றன.

அவற்றை வள்ளல் பெருமான் தத்துவ நிலைகள் என்றும் விஷய நிலைகள் என்றும் சொல்லுகிறார்.

இந்த இரண்டும் பல திரைகளின் தொகுதியாகும்.

உலக அனுபவங்களைக் கடந்து, உயிர் அனுபவத்தையும், அருள் அனுபவத்தையும், இறை அனுபவத்தையும் அடைவதற்கு இந்த இருவகைத் திரைகளையும் கடந்து மேலே செல்ல வேண்டும்.

இவ்வாறு செல்வதற்குப் பஞ்ச பூதங்களின் தன்மைகளை மாற்ற வேண்டும். அவற்றை சுத்த பஞ்ச பூதங்களாக உயர்த்த வேண் டும்.

இப்படி உயர்த்துவதற்கு ஆணவம், பொறாமை முதலிய ஆறு தீய உணர்வுகளைப் போக்கவேண்டும்.

இவைகளைப் பற்றித்தான் கலாந்தம் முதலிய ஆறு அந்தங்களும் பேசுகின்றன.

இவற்றுடன், ஒன்பது திரைகளையும், பதினாறு வெளிகளையும் பற்றிய விளக்கங்களை திருஅருட்பெரும் ஜோதி அகவலில் வள்ளல் பெருமான் சொல்லுகிறார்.

உயிர், மனம், உடல் என்ற மூன்றில் உயிர் மட்டும்தான் உணர்ச்சியுடையது.

உயிரைப் போலவே மனமும், உடலும் உணர்ச்சி பெற்று ஒன்றுபட்டு விளங்கும்படிச் செய்யும் பயிற்சிதான் சுத்த சன்மார்க்கம் என்கிற இயற்கை உண்மை நெறிப் பயிற்சியாகும்.

இந்தப் பயிற்சியைத்தான் 'சகச நிட்டை' என்றும் சொல்கிறார் வள்ளல் பெருமான்.

இந்தப் பயிற்சியின் முறையைப் பற்றி திருஅருட்பெரும் ஜோதி அகவலில் 513-வது அடியில் இருந்து 544-வது அடிவரை— முப்பத்திரண்டு அடிகளையுடைய பதினாறு செய்யுட்களில் மிகத் தெளிவாக, தாம் பெற்ற அனுபவங்களையும், அதற்காகத் தாம் மேற்கொண்ட பயிற்சிகளையும் பற்றி மிக அற்புதமாக விளக்கி இருக்கிறார்.

இந்தப் பயிற்சிகளின் முடிவில் தாம் பெற்ற ஒலி—ஒளி உடலைப்பற்றியும் விளக்கி இருக்கிறார்.

இந்த அனுபவ உண்மையை ''தோல் எலாம் குழைந்திட....'' என்று தொடங்கி முப்பத்து இரண்டு அடிகளில் அதாவது 16 செய்யுட்களில், தம் உடல் சுத்த உடலாக, பிரணவ உடலாக, ஞான உடலாக மாறிய அற்புதத்தை உயர் விஞ்ஞான முறைப்படி, உடல் தத்துவங்களின் ஞானயோக பரிணாம முறையில் மாற்றம் அடையும் அதிசயத்தை விவரித்து இருக்கிறார்.

இந்த இருவகைத் திரைகளும், அதாவது எட்டாவது, ஒன்பதாவது தத்துவ விஷயத் திரைகளும், உண்மை நெறியில் வள்ளல் பெருமான் சொல்லி இருக்கும் நான்கு பேறுகளை அடைவதற்காக விலக வேண்டிய திரைகள்.

வள்ளலார் சொல்லும் நான்கு பேறுகள் என்ன?

ஏமசித்தி, சாகாக்கல்வி, கடவுள் மயமாதல், தத்துவ நிக்ரகம் செய்தல் என்பவை.

திருஅருட்பெரும் ஜோதி அகவலில் ஒன்பது திரைகளைப் பற்றிச் சொல்லி இருக்கும் வள்ளல் பெருமான், சத்திய ஞான சபையில் ஏழு திரைகள் விலகினாலே அருட்பெரும் ஜோதி ஆண்டவரை தரிசிக்கும்படிச் செய்திருக்கிறார்.

ஏன் அப்படி செய்திருக்கிறார்?

சத்திய ஞானசபையில் காட்டப்பட்டிருக்கும் ஏழு திரைகளும் தனித்தனி திரைகள்.

இந்த ஏழு திரைகள் நீக்கப்பட்டதுமே அருட்பெரும் ஜோதியை உயிர் கண்டு பேரின்பம் அடைகிறது.

சாதாரண மக்கள் இந்த அளவுக்கு உயர்வதே முதல் நிலையாகும்.

இந்த நிலையில் உள்ள உயிர்களை ''கோன் கண்ட குடிகள்'' என்கிறார். அதாவது இறைவனை நேரில் தரிசித்த உயிர்கள் என்கிறார் வள்ளலார்.

இறைவனை நேரில் தரிசித்தாலே போதும் என்று சத்திய ஞான சபையைத் திருப்பணி செய்யும்போது வள்ளலார் எண்ணி இருக்கிறார் போலும்.

சத்திய ஞான சபையில் 1872ஆம் ஆண்டு, ஜனவரி மாதம் 25 ஆம் தேதி ஜோதி தரிசனம் காட்டினார்.

அதன் பிறகு அருட்பெரும் சித்திவளாகத் திருமாளிகையில் தாம் பெற்ற பெருவாழ்வின் பரிணாம அனுபவங்களை, எல்லோரும் பெற்று பெருவாழ்வு வாழ வேண்டும் என்ற பெருங்கருணையினால் எழுதப்பட்டது திருஅருட்பெரும் ஜோதி அகவல்.

அதில் ஏழு திரைகள் மட்டும் விலகினால் போதாது. தத்துவத் திரைகளும் விஷயத் திரைகளும் விலக வேண்டும் என்பதை

உணர்ந்து தாம் அனுபவித்த அனுபவங்களையே அருட்பெரும் ஜோதி அகவலில் குறிப்பிடுகிறார்.

சத்திய ஞான சபையை நிர்மாணித்தபோது 1870ஆம் ஆண்டில் தாம் பெற்ற அனுபவத்தைக் காட்டுகிறார்.

சித்திவளாகத் திருமாளிகையில் 1872ஆம் ஆண்டில் வள்ளல் பெருமான் தாம் பெற்ற பெரும் பேற்றை அடைவதற்கு இன்னும் இரண்டு தடைத் திரைகளை நீக்கியாக வேண்டும் என்பதை அனுபவத்தில் காண்கிறார்.

அந்த ஞான யோக பரிணாம அனுபவத்தைத்தான் திருஅருட் பெரும் ஜோதி அகவலில் எட்டாவது, ஒன்பதாவது திரைகளாகக் குறிப்பிட்டு இருக்கிறார்.

இது வள்ளல் பெருமானின் ஞானயோக பரிணாமத்தைக் காட்டுவதாகும்.

எனவே வடலூர் சத்திய ஞான சபையின் ஏழு திரைகளையும், திருஅருட்பெரும் ஜோதி அகவலில் வரும் ஒன்பது திரைகளையும் ஒன்றாக எண்ணித் திகைக்க வேண்டியதில்லை.

ஏழு திரைகளைக் கடந்தவர்களை ''கோன் கண்ட குடிகள்'' என்று கூறிய திருஅருட்பிரகாசர், ஒன்பது திரைகளையும் கடந்தவர்களை ''கோன் கொண்ட குடிகள்'' என்று சிறப்பித்துச் சொல்கிறார்.

திருஅருட்பாவிலேயே திருஅருட்பெரும் ஜோதி அகவல் திருஅருட்பிரகாச வள்ளலாரின் ஞானயோக பரிணாம வளர்ச்சியைப் பற்றித் கூறும் சத்திய சரித்திர வாக்குகள் ஆகும்.

திருஅருட்பெரும் ஜோதி அகவலுக்கு வெறும் தமிழ் அறிவும் சன்மார்க்க பக்தியும் மட்டும் இருந்தால் உரை காண முடியாது.

ஓரளவு 'கோன் கண்ட குடி' என்ற அளவுக்காவது, அதாவது அருட்பெரும் ஜோதியை தம்முன் காணுகின்ற அளவுக்காவது உயர்ந்து இருக்கவேண்டும். அப்படிப்பட்ட சன்மார்க்க ஞானிகளால்தான் திருஅருட்பெரும் ஜோதி அகவலுக்கு விளக்கமாக உரை எழுத முடியும்.

திருஅருட்பெரும் ஜோதி அகவலுக்கு உரை விளக்கம் எழுதி இருக்கும் சுவாமி சரவணானந்தா அவர்கள் வள்ளலார் கூறி இருக்கும் கோன் கண்ட குடிநிலைக்கு உயர்ந்தவர்.

நம் காலத்தில் வாழும் சமரச சுத்த சன்மார்க்க ஞானி அவர்.

அவரால்தான் திருஅருட்பெரும் ஜோதி அகவலுக்கு உரை எழுத முடியும். மிக எளிமையாகவும், விரிவாகவும் சுவாமி சரவணானந்தா அவர்கள் திருஅருட்பெரும் ஜோதி அகவல் முழுவதற்கும் உரை எழுதி இருக்கிறார்.

அவர் வாழும் காலத்தில் நாம் வாழும் பேறு பெற்று இருக்கிறோம். சன்மார்க்கிகள் 'கோன் கண்ட குடிகளாக' உயர்வதற்கு அருட்பெரும் ஜோதியைத் தம்முள் கண்டு இன்புறும் அளவுக்கு இந்த திருஅருட்பெரும் ஜோதி உரை விளக்கம் துணைபுரியும் என்று நம்புகிறேன்.

சமரச சுத்த சன்மார்க்க ஞானியான சுவாமி சரவணானந்தரின் இந்த அரும் பணிக்கு சன்மார்க்க உலகம் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறது.

சுவ ாமி சரவணானந்தா அவர்களின் திருஅருட்பெரும் ஜோதி உரை ‹ிளக்க நூலை இரண்டாம் பதிப்பாக இராமலிங்கர் பணிமன்றம் வெளியிடுவதில் பெருமை அடைகிறது.

சுவாமி சரவணானந்தா அவர்களின் சன்மார்க்கப் பணி தொடர்ந்து நடைபெறவேண்டும் என்று அருட்பெரும் ஜோதி ஆண்டவரைப் பிரார்த்திக்கிறேன்.

அருட்பெரும் ஜோதி! அருட்பெரும் ஜோதி!
தனிப்பெரும் கருணை! அருட்பெரும் ஜோதி!

*18-9-90* **நா.மகாலிங்கம்**
*சென்னை-32.* இராமலிங்கர் பணிமன்றத் தலைவர்

# முன்னுரை

## (முதல் பதிப்பு)

திருவருட் பிரகாச வள்ளற் பெருமான் அருளிய திருவருட் பாவாகிய ஞானக்களஞ்சியத்தில் தனிப்பெருஞ் சிறப்புடைய தாய் மிளிர்வதானது அருட்பெருஞ்சோதி அகவலாகும். வள்ளற் பெருமான் அருளிய அருட்பாவில் மெய்ஞ்ஞான விளக்கத்தின் மேலானதாக இதனைக் கருதிப் போற்றுவது மரபு. வழிபாட்டில் அருட்பெருஞ்சோதி அகவலை ஓதி உணர்வது சன்மார்க்க சங்கத் தவரின் சீரிய செயலாகும். வாரந்தோறும் வியாழக்கிழமையில் அகவலைத் திருவடிப்புகழ்ச்சியுடன் பாராயணம் செய்து வரும் சன்மார்க்கிகள் பலருள். வள்ளற் பெருமானோடு பழகிய ஆனந்த நாத சண்முக சரணாலய சுவாமிகள் ''திருவருட் பிரகாச வள்ளற் பெருமான் அருளிய திருப்பாசுரங்கள் யாவும் விசேடமே யாயினும், முன்னைந்து திருமுறைகள் சமயத்திற்குட்பட்ட சொரூப தோத்திரமாயும், ஆறாவது திருமுறை சமயாதீத பரவஸ்துவினிலக்கணத்தை யுள்ளடக்கி நிற்கும் தோத்திரப் பாக்களாயும், அதிலும் அத்திருமுறை முன்புள்ள அருட்பெருஞ் ஜோதி அகவற் பாவானது அவ்வள்ளற் பெருமானுக்கு அருள் தரிசனம் உண்டாங் காலையில், அருளிச் செய்ததையும் உணரப் பெற்றேன்'' என்று குறித்தார். வேதத்துள் ஸ்ரீருத்திரம் போல அருட்பாவுள் அருட்பெருஞ்ஜோதி அகவல் விளங்குகிறது. 'இஃது அருட்பாவின் அட்டவணை' என்று அழகரடிகளாரும் திரு.வி.கவும் பாராட்டுகின்றனர்.

மேட்டுக்குப்பம் சித்திவளாகத்தில் பெருமான் தங்கியிருந்த போது, அருட்பெருஞ் சோதியின் நிறையருளில் திளைத்த ஞானப் பெருக்கால், அவ்வகவலை ஓரிரவிலேயே அடிகள் எழுதி அருளினார் கள். அருட்பெருஞ்ஜோதி என்று தொடங்கி அருட்பெருஞ் ஜோதி என்று முடியும் இதனைப் பொருளறியாது ஓதினாலும்கூட, அருட்பெருஞ்ஜோதி என்னும் மகாமந்திரத்தை ஓராயிரம் முறைக்குமேல் உரைத்த புண்ணியம் நமக்கு உண்டாகும். அள வாலும், பொருளாலும், அருளுணர்வின் செறிவாலும் விழுமிய இவ்வகவல் தோத்திர அழகும், சாத்திர நுட்பமும் வாய்ந்தது. ஆகமங்களில் பரந்தும், அறிவியலில் கரந்தும் உள்ள உண்மை

விளக்கங்கள் எல்லாம் இவ்வகவலில் சிறந்து தோன்றுகின்றன. 1596 அடிகளால் அமைந்த இவ்வகவல் தமிழிலக்கியத்திலேயே மிகப் பெரிய அகவலாகும். சுவாமிகளின் திருக்கரத்தாலேயே 24 தாள்களில் கடுக்காய் மையில் எழுதப்பெற்ற 'சுந்தரக்கை சாத்திய திருஏட்டு' வடிவில் இவ் அருட்பெருஞ்ஜோதி அகவல் இன்றுவரை சாலையில் இருந்து வருவது நம் தவப்பயனாகும்.

உயிர்களின் தோற்றம், திருவருள்திறம், ஐம்பூத நிலைகள், ஐந்தொழில், ஆறந்தங்கள், ஏழு திரைகள், கரும, யோக, ஞான சித்தியின் விளக்கம், ஞான சித்தி அனுபவம், அருட்பெருஞ் ஜோதியின் அருமை பெருமை, ஜோதியை உறவு நிலையில் வைத் தழைக்கும் உரிமை உணர்வுகள், சாகாக் கலை முதலிய அருட் செய்திகள் அகவலின் நூற்பொருளாக அமைந்துள்ளன. சன் மார்க்க உலகுக்குச் சத்திய ஞானசபையை வழிபாட்டு நிலைய மாகவும், அங்கே ஓதி உருகும் தோத்திர நூலாக அகவலையும் அமைத்துச் சபையைச் சிந்திப்பதும், அகவலை வந்திப்பதும் நாம் கடனாகக் கொள்ள வேண்டும் என்று பெருமான் குறிப்புக் காட்டி னார்கள் போலும்!

சித்தி நூற்றாண்டு விழா நினைவாக வள்ளற் பெருமான் கருத் துக்களை மேலும் பரப்புவதற்கான வகையில் பல நூல்கள் வெளியிட வேண்டும் என்ற விருப்பம் எங்களுக்குத் தோன்றியது. அதன் பிளைவாக 'வள்ளலார் வாழ்வும் வாக்கும்', 'வள்ளலார் கண்ட ஒருமை வாழ்வு' முதலிய நூல்கள் இராமலிங்கர் பணிமன் றத்தில் வெளியாகியுள்ளன. திருவருட்பா முழுமைக்கும் உரை வேந்தர் பேராசிரியர் திரு ஔவை துரைசாமி அவர்களை உரை எழுதுமாறு வேண்டி மூன்று திருமுறைகளுக்கு உரை எழுதும் பணி நிறைவேறியுள்ளது. சென்னைப் பல்கலைக்கழகம் அதனை வெளியிட இசைந்துள்ளது. திருவருட்பாவில் சில பகுதி களுக்குச் சில உரைகள் அவ்வப்போது வெளி வந்துள்ளன. ஆயின் அருட்பெருஞ்சோதி அகவலுக்கு விளக்கவுரை ஒன்றும் இதுகாறும் எழுதப்பெறவில்லையே! பாட்டின் பொருள் உணர்ந்து பயில்வதற்கு ஏற்ற வாய்ப்பில்லையே என்று பலகாலும் நான் எண்ணிவந்தேன்! ஆனால் திருவருள் இருந்த திறம் என்னை வியப்பில் ஆழ்த்தியது.

திண்டுக்கல் சுவாமி சரவணானந்தா அவர்கள் கடந்த பல ஆண்டுகளாகத் தவஞானப் பயிற்சியும் தத்துவ முதிர்ச்சியும்

கொண்டு அரிய துறவுநிலையில் வாழ்ந்துவரும் பெரியாராவார். 1910-ஆம் ஆண்டு திண்டுக்கல்லில் தோன்றிய இவ்வருளாளர் இளம் வயது முதலே அருள்தொண்டில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர். திருவருட்பாவில் பேரீடுபாடுடைய தவத்திரு சபாபதியடிகளிடம் சுவாமிகள் அருளுபதேசம் பெற்றதோடு திருவருட் பிரகாச வள்ளலாரின் அருட் காட்சியையும், அவர்தம் இயற்கைக் கற்பூர மணத்தையும் ஒருங்கே அடையப் பெற்ற பெரியாராகச் சுவாமிகள் விளங்குகின்றார்கள். சன்மார்க்க உண்மைகளை விளக்குகின்ற பல அருள் நூல்களை இயற்றியுள்ளார். அவர்கள் திருவருட்பாவுக்கு அரிய விளக்கங்கள் எழுதி இருப்பதையும், அருட்பெருஞ்சோதி அகவலுக்கு ஒரு பேருரையை எழுதி வைத்திருப்பதையும் அறிந்து நான் பெரிதும் மகிழ்ந்தேன். அவர்களைக் கண்டு நான் உரையாடிக்கொண்டிருந்தபோது எவ்விதத் தடையும் கூறாமல் அருள் உணர்ச்சியோடு இவ்வகவல் உரையினை அச்சிட்டுக் கொள்ளுங்கள் என்று என்னிடம் அன்போடு வழங்கினார்கள். நான் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவில்லை. சன்மார்க்க உலகத்திற்கு அவர்கள் வழங்கிய இந்நன்கொடைக்கு நாம் என்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளோம்.

இவ்வுரை சுவாமிகளின் அருளனுபவத்தையும் அறிவாற்றலையும் அழகுறக் காட்டுகின்றது. சுவாமிகளின் புதிய விளக்கங்கள் பலகால் அவர்கள் செய்த ஆராய்ச்சியின் பயனாக வெளிவந்துள்ளன. ஆடம்பரம், விளம்பரம் விரும்பாமல் அமைதியாக இருந்து அவர்கள் ஆற்றிவந்த இப்பணிக்கு ஈடில்லை. ஞான சபைத் திருப்பணி நடந்து வரும் இக்காலத்தில், அகவலின் விளக்க உரை நூல் வடலூர்த் திருநாளாகிய இவ்வைகாசி 11ல் வெளிவருவது பெருமானின் திருவருட் குறிப்பேயாகும் என்று கருதுகிறேன்.

இந்த நூலை ஆர்வத்தோடு அழகுற வெளியிட்டுள்ள நாவல் ஆர்ட் அச்சகத்தாரின் உரிமையாளர் திரு. நாச்சியப்பன் அவர்களுக்கு எங்கள் நன்றி. அச்சக புருப் பார்த்தல், திருத்தல் முதலிய பணிகளைச் சுவாமிகளே செய்தார்கள் என்றாலும் சென்னையில் அப்பணிகளைச் செய்த பேராசிரியர் திரு.மு. இராமலிங்கனாருக்கும் நம் நன்றி உரித்தாகுக. அகவல் வெளியீட்டு விற்பனையில் வரும் நிதி முழுவதையும் வடலூர் ஞான

சபைத் திருப்பணிக்கே வழங்குவதென இராமலிங்கர் பணி மன்றம் முடிவு செய்துள்ளது. எனவே சன்மார்க்க உலகம் இந்த அருள் நூலை வாங்கிப் பெரும் பயன் எய்துமென நம்புகிறோம்.

''வள்ளலார் கழல் வாழ்த்தல் வாழ்வாவதே!''

இராமலிங்கர் பணிமன்றம் — அன்புள்ள,
சென்னை-86 — நா.மகாலிங்கம்
18-5-74

# PRELUDE

The Boundless Benevolent Effulgence is known as Arutperunjothi in Tamil language. Benevolence or Compassion or Karuna is the innate nature of the Almighty. This compassion emanates as fivefold aspects namely 1. matter, 2. energy, 3. intellect, 4. spirit and 5. grace. Man, when he attains perfection realises that the Compassionate Effulgence is the source of all that is manifested and unmanifested.

The truth of this Effulgence has not been realised so far. Man, endowed with reasoning mind, is slowly rising from the physical plane and making faltering steps towards the spiritual plane. This, he is able to achieve by trial and error through many births in his long journey towards perfection. His intellectual faculty constitutes the middle plane from where he can either look down at the material/physical world or look up in wonderment at the spiritual plane. When he looks up, he comprehends, though partially, truths about spirit, soul and God.

Many of the oriental sages were adepts in comprehending the higher realms of spiritualism. By sheer concentration of their minds on the ultimate reality, they were able to perform miracles called siddhis. They also had charted out ways and means to attain these occult powers. They focussed all their attention on the soul from where they drew all their inspiration and spiritual powers. Various religious and philosophical systems came into existence during this time. The most discussed among them is Advaita.

Since all mystical powers and experiences originate from the soul, it was considered to be Divinity Itself and the perennial source of our lives. It was also held that we are but eternal souls temporarily encased in this physical body. The followers of Advaita thought that the grace of the Lord would deliver us from this physical imprisonment. Advaita preaches that Soul and God remain as one without duality. The aim is to merge this Soul into God-head and become an inseparable entity.

But a serious question arises with this hypothesis. How can one hold one's consciousness without a vehicle to hold it? The physical body is like the glass of an electric bulb. As long as the bulb is intact light will glow from the bulb. The moment the bulb cracks, the glow stops emanating. Similar is the case with the physical body. When it is dropped and the principle of consciousness is merged with the Almighty, it ceases to be functional. But the philosophers of Advaita insist that this illusory body is only needed till the principle of consciousness merges with the Brahman. They maintain that after merger we can drop the mortal frame and remain in oneness with God forever. They conveniently forget that though the soul is eternal in existence, such existence alone cannot be called as illumination. To get illumination and divine experience, some sort of vehicle (either Suddha or pranava or Gnana) is needed throughout eternity.

Saiva Siddanta holds a different view in the realisation of oneness with Siva, the Supreme Being. It states that realisation according to Advaita is only speculative and as such the soul can never get rid off its bondage. Soul has no inherent or active power which makes it free from bondage. Only through the grace of Siva, the bondage is removed. Only then can the soul be able to merge with Siva. Even here the soul in its divine oneness loses its identity and individuality and becomes more or less a non-entity.

Thus almost all religious and philosophical systems insist on a body-less liberation. After illumination, they insist, one has necessarily to shed one's mortal frame. But common sense tells us that one should have the semblance of a body whether physical, psychical or ethereal to hold on one's consciousness. Those sages of yore never thought that it is possible to lead illumined lives, at the same time retaining this frame. They taught humanity to aspire for the dizzy height of God-head and in the process to discard its physical body.

Such outmoded, stale, fossilised and institutionalised religious and philosophical systems placed more and more fetters on man

instead of liberating him. He has been groaning under its weight during the centuries of his existence.

Fortunately, the Almighty Himself has come to the rescue of mankind. All the above said miracles, siddhis and liberation are only a fraction of His compassion. The major portion has just now been revealed to mankind through his chosen disciple Thiru Arul Prakasa Vallalar (Ramalinga Swami of Vadalur).

The soul of man is nothing but a spark of God and as such is God Himself in miniature. The compassionate Lord exists in every heart in the form of guiding light. Hitherto, man was thinking that he was separated from God and that he had to reach Him through his individual efforts. He has forgotten his divine identity and is searching everywhere except within himself. Now the Compassionate Effulgence has shown that He is within him and He is guiding him and in course of time and with His guidance, he can become He. In other words, God has emanated as a human being in order to make man realise himself as one with Effulgence.

The divine light has descended from lofty heights into the human material frame in order to make it immortal. That way it is different from the ancient paths. From the soul of man, it spreads throughout, transmuting the mortal body into an immortal golden one during the process.

Now, what has man to do to make this divine Effulgence grow in his soul? He has to eschew the thought that he is the physical body and alienate himself from its clingings. A life of utter mercy towards all beings must be lived, always thinking about his own smallness in the scheme of things and the greatness of the Lord. By doing so, he will find himself little by little the Divine grace filling up his whole being, body, mind and spirit all included. He will realise that the abode of the Soul and the Effulgence are one and the same, namely the mid portion of the forehead, the place of the third eye. By constantly placing his mind there, he finds the Effulgence spreading the whole of his being. He also will find the inadequacy of the paths of yore and disentangle himself from

them. Slowly he finds the Effulgence engulfing him, but without losing his consciousness. He has become It, It has become him and both remain an inseparable single unit. Now he has found himself to be that Effulgence and lives on forever obeying the commands of the Effulgence. In this process nothing is lost; everything is gained.

The distinction or the veil between I and Thou is removed leading to the fact that every being is God Himself. We find that God alone is the 'I' of everything. Plurality is gone and individuality alone remains. Then and only then man begins to realise that this 'I am' can be found in the ninth plane of awareness. The other eight are fire, sun, moon, and stars which belong to the visible part of the Effulgence and soul, vital life, mental faculty and physical sense organs, all functioning inside man. Beyond these eight planes, **lies the awareness of the Divine Effulgence waiting to be realised.**

Incidentally, it is interesting to note that the English letter 'I' occupies the ninth place in the alphabet. So also in Tamil the letter ஐ (I) occupies the same position. Besides, this identy of 'I am' can be realised in the physical body in the region of cerebro spinal cavity which is in the form of 'ப' (Pa). This 'ப' forms the ninth consonant in Tamil.

This Lord of Infinite Light of Grace, Arutperunjothi, was completely realised by Vallalar (Ramalingswami of Vadalur). He has made all supplications, prayers, songs etc. to the Lord in thousands of verses. This single verse 'Arutperunjothi Agaval' contains the essence of all his teachings and is considered as the most valuable jewel in the crown of the Lord.

This Agaval or Call Divine is the longest poem in Tamil containing 1596 lines. This outpouring was composed by Vallalar in a single night and at one stretch. This stupendous effort was not due to his material learning or scholarship but through the grace of the Lord. There are many great works in Tamil but none can equal this divine poem in its sublimity.

Compassion occupies the core place of the Lord. The universe is enlightened by this compassion. Similarly if man aspires for illumination, he must start his quest from within. This practical way, called அனகநெறி (anaganeri), is the way of Suddha Sanmarga which leads to Sachidananda. He who makes his life anew by following this way, finds Aruntperunjothi in one and all and paves the way to Universal Brotherhood.

Any work of divine inspiration needs divine guidance for its interpretation. Mere scholarship and a great knowledge of lexicon are of no use in the interpretation of such esoteric works. One has to reach the ninth plane (the plane of the soul) to find out the true significance of such works.

The inner guiding Light commanded me on the eve of first of January 1960 to begin this interpretation. A couple of lines were taken every morning for interpretation. The work went on without any break and was finished in 798 days (1596/2) i.e. from 1st January 1960 to 8th March 1962. The much feared conjunction of eight planets in Capricon (makam) took place on February 4th and 5th of 1962. February 4th was a Sunday and also a new moon day.

"திரையெலாந் தவிர்த்துச் செவ்வியுற் றாங்கே
வரையெலாம் விளங்க வயங்கு செஞ் சுடரே."

The above two lines were taken on that day for annotation. It means that all the obstructing veils were removed and the sun rose splendidly on the mountain tops.

This has rather a special significance. We can observe the dawn of the divine Effulgence from the position of the middle star poosam in Cancer. We are safe in the hands of the divine light, which guides all the planets, seen in the opposite sign Capricon, the sea-monster. Westerners were not able to realise this significance because western hemisphere experienced solar eclipse on that day. These are only examples to show how the inner reflects in the outer World.

The concept of Siva found in this work is refreshingly different from concepts prevalent during the middle ages. It goes back to prehistorical time. Infinite Divine Light was called Siva by the ancient Tamils. They also called It as Kandazhi (கந்தழி). They came to know of it with their mind's eye or third eye. The last level of grace is only revealed now through Saint Ramalinga. Since Tamil language is based on Siva Tatva, it has become a proper medium of expression for divine light. But we must remember that Sivam mentioned here has no religious connotation in it. Arutsivam means Arutperunjothi. Sivam contains three letters. The letter சி Si is the light வ va is the power of grace or compassion and ம் m is the life experienced in man. So Sivam means the divine light not only converging into the soul of man but also diverging from there, completely transmuting him into an immortal one in the process.

In this Agaval, the evolution of the Universe, through the grace of the Lord, is vividly described. Arutperunjothi is evoked in five hundred alternate lines of the couplets. By going through these lines patiently, we will be able to draw inspiration, realise our own identity with the Lord and live in Him.

Not only that. Regular study of this work kindles us and brings out the dormant spiritual personality in us; it also brings a wonderful peace of mind. Purity of mind and deed is absolutely essential. In course of time the divine light makes us feel its presence in our forehead and from then on our transmutation begins.

Agaval is to be invoked in the presence of the Inner Light. Also a few lines may be taken for recitation daily and their meaning deeply pondered over. As time goes on, truth will be revealed step by step. This interpretation more or less is a guidebook towards illumination. So, it is earnestly requested to go through line by line slowly so as to get the maximum benefit.

An English rendering of this volume is now available. It is earnestly hoped that the ideals of Vallalar spread to all corners of the World. Ahimsa and Universal Brotherhood are ideals which find an honoured place in every heart irrespective of caste, creed,

religion or nationality. When it is actively practised, the coming generations will find our earth—a place of peace and prosperity.

Fanatics are always there ready to fight tooth and nail any new thought which apparently contradicts the age old beliefs. They are afraid that their ignorance would be exposed and their comfortable way of life might become shaky by these so called unconventional ideas. **They cling tenaciously to their old faiths, afraid to transcend the thoughts of the ancestors. When such people go through these pages, they will find to their astonishment that there exists no contradiction at all. Rather they will find these expositions more beneficial to them than the thoughts of yore; they will realise that their regard towards this work and its author Thiru Arutprakasa Vallalar growing day by day. They will come to know for sure that this Divine light is guiding them in their daily lives and avoiding all pitfalls. Finally they come to understand that they live in Him, work for Him, liberated by Him and become ONE WITH HIM.**

May that day be speeded up by the Grace of Arut Prakasa Vallalar!

DAEIOU

SARAVANANANDA

# உள்ளுரை

# அகவல் பொருளடக்கம்

வரிசை
எண் பக்கம்

---

★ எண்-உள் தலைப்புகளின் தொகை

# அருட்பெருஞ்ஜோதியில் திருவருட்பா

அருட்பெருஞ்ஜோதி என்ற சொற்றொடர், நிறை அருள் அனுப வத்தால் கண்ட இறை பரம்பொருளின் உண்மையை, உலகவர் எல்லோர்க்கும் உணர்த்தி உய்வளிக்க வந்ததாகும். அகண்ட பேரிறை நிலை, அளவு கடந்த வான் வெளி முற்றும் அனாதியே நிரம்பி, பேருலகெல்லாம் விளங்கியோங்கிப் பெரும் பயனுறச் செய்துகொண்டுள்ளதாகும். அந்த வான் வெளிநிறையொளி தானே, உலகம் யாவுமாய், பொருள்கள் எல்லாமாய், உயிர்கள் எவையுமாய், அவ்வுயிர்களிற் சிறந்த மக்கள் யாவருமாய், மக் களில் அருள் அறிவாய் விளங்கி, அந்த அருள் அறிவால் மெய் யாக உணர்ந்து அடைந்து அனுபவிக்கப்படுகின்ற ஒன் றாக, அதுவே அருட்பெருஞ்ஜோதியாக இருக்கின்றதாம். ஆம். அகண்ட பெருஞ்ஜோதிமயமாய் என்றும் இருக்கும் கடவுள் உண்மை, இன்று எல்லாம் ஆன, எல்லாம் வல்ல அருட் பெருஞ்ஜோதியாக அறிந்துகொள்ளப்பட்டிருக்கின்றது.

மேற்படி அருட்பெருஞ்ஜோதி இறை உண்மையைக் கண்டு, அனுபவத்தில் பெற்று, அதுவாகியிருந்து கொண்டு, வெளியிட் டவர் நம் திருவருட்பிரகாச வள்ளலார் ஆவர். வேறு விதமாகக் கூறுவதாயின், அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர்தானே, இது காறும் எவருமாய் உள்ளிருந்து விரிந்து அவரவராய் விளங்கி நின்றும், அவ்வுருவத் தோற்றத்தை விடுத்து மறைவுற்றுக் கொண்டும் இருந்தவர், இப்பொழுதுதானே தனது நிறை அருள் அனுபவம் வெளிப்பட்டு என்றும் நிலவும்படி இந்த அருட்பிர காசர் வண்ணமாய்த் திகழ்கின்றவராகி விட்டுள்ளார் என்பது உண்மையாம். இதற்குமுன் இவ்வண்ணம் ஆனது இல்லை. அதனால் முன்தோன்றி மறைந்த எந்த ஒருவரும் அடையாத பேறு பெற்றுள்ளவர் நம் வள்ளலார் என்றால் அது முற்றிலும் உண்மை! உண்மை!! உண்மையே!!

அருட்பெருஞ்ஜோதிக் கடவுள் உண்மை வெளிப்படுத்தப்படு வதற்கென்றே நம் வள்ளல் அடிகள், சிதம்பரம் இராமலிங்கம் எனப் பிள்ளைப் பேருடன் விளங்கி இருந்தார். அந்தப் பிள்

ளைமை உள்ளத்தில் விளங்கின இறையொளியே, தமிழ் மொழிக்கும் அது கொண்டு குறிக்கப்படுகின்ற, கடவுள், இயவுள், செய்யுள், யாவுக்கும் அடிப்படையாய்க் கண்டிருந்தார். அதனால், அவர்க்கு உள்ளும் புறமும் வெளிப்பட்டு விளங்கின மெய்யனு பவக் காட்சியில், எத்தெய்வத்தையும், எப்பெரியார்களையும் கண்டு போற்றியும், பிற எவ்வெவரையும் இரக்கத்தோடு, தேற் றியும் மேல்நிலைக்கு ஏற்றியும் வந்தார். அப்படியே செய்து பக் குவப்படுத்திக் கொண்டும் உள்ளார் என்பதை அருளாளர் காண்பர்.

இந்த அருள் ஒளி கொண்டு, அருட்ஜோதியின் துணை கொண்டுதான், நம் பெருமானின் உண்மை வரலாற்றையும், அவர் தம் திருவருட்பா விளக்கத்தையும் உள்ளவாறு கண்டு தெளிதல் வேண்டும். மற்றபடி, கடினபாடு பட்டுப் பலகாலும், பலவிடத்தும் பலவான செய்திகளையும், ஏடுகளையும் தேடித் தேடித் திரட்டி, வகைப்படுத்தித் தொகுத்து, நல்ல முறையில் அச்சிட்டு வெளிப் படுத்துதல் போதாது. ஆராய்ச்சியும், பேருழைப்பும் கண்டு, புறப்புலனெறி உலகம் போற்றிக் கொள்ளக்கூடும்; ஆனால் அருள் ஆட்சியாலும் தயவுப் பணியாலும்தான் எல்லோருக்கும் பெரும்பயன் உண்டாவது திண்ணம்.

அருட்பெருஞ்ஜோதியில் திருவருட்பாவைக் காணவேண்டும் என்பது முக்கியம். அருட்பெருஞ்ஜோதியில் (அருட்பெருஞ் ஜோதியினால், அருட்பெருஞ் ஜோதி கண்டு திருவருட்பாவைக் காணவேண்டுமேயன்றி) அருட்பெருஞ்ஜோதியில்லாத, இல்லாமல் அருட்பாவைக் காணச் சொன்னதாகக் கொள்ளக்கூடாது. அருட் பாவில் அருட்பெருஞ்ஜோதி இருக்கின்றது உண்மைதான். எனினும், அக அருட்கண் கொண்டு காணாவிடில், அருட்பாவில் அருட்பெருஞ்ஜோதி இருந்தும் இல்லாதது போன்றேயுள்ளதாம். ஆகவே, அருள் ஒளி கொண்டு இத்திருவருட்பாவை நோக்கும் போது, இதில் விடுபட்டுள்ள முக்கியக் குறிப்புகளும், பகுதி களும், முடிந்த திரிதேக சித்தி வாழ்வு அனுபவமும் இணைக்கப் படவேண்டியதின் அவசியம் நன்கு விளங்கும். அங்ஙனம் இணைக்கப்படவேண்டியவை ஈண்டு குறிப்பாம்.

*1. திருவருட்பா-பெயர்ச் சிறப்பு*

திருவருட்பா, திருவருளால் பாடப்பெற்றது என்பதில் சிறப்பு ஒன்றுமில்லை. ஏனெனில், திருவருளின் துணை இன்றி,

எவராலும், எந்தப் பாவும் இசைக்கப்படுவதில்லை. ஆகையால் தெய்வ நம்பிக்கையும் பக்தியும் கொண்டு பாடப்பெற்றுள்ள எவருடைய செய்யுளும் அருட்பா எனக் கொள்வதில் குற்றமு மில்லை, தவறுமில்லை. எனினும் இதுவரை வெளியான பெரி யோர்களின் பாக்களுக்குத் திருவருட்பா என்ற பெயர் வழங்கப் படவில்லை. ஆனால், இப்போது வள்ளலாரின் நூலுக்கே இந்தத் திருவருட்பா என்ற பெயர் வெளியாகி நிலவவும் நேர்ந்துள்ளது. மேலும், இந்தப் பாக்களும், இதனுடன் விளங்கும் பிற பகுதி களும், இதுகாறும் அறிந்து அடையப்பெறாத, அருட்பெருஞ் ஜோதிக் கடவுள் உண்மையை அனுபவத்தில் அடையப்பெற்ற தனிப்பெருஞ் சிறப்பு கொண்டிலங்குகின்றதால், இதற்குமட்டும் திருவருட்பா என்ற சிறப்பு மிகப் பொருந்துவதாயுள்ளதாம். எனவே, இத்திருவருட்பா, திருவருளால் பாடப்பெற்றதோடு, அவ்வருள் நிறை பரம்பொருளை யுள்ளவாறு கண்டு அடையும்படி செய்வது என்று உணர்த்தப் பெறுகின்றோம். இதற்கு இதனை உலகுக்கு வழங்கி விளங்கும் வள்ளலே சான்றாக உள்ளார். இதனால்தான் திருவருட்பாவின் உயர்வு என்றும் சிறந்து திகழ்வ தாம்.

### 2. குறிப்பு விளக்கங்கள்.

திருவருட்பாவில் தோத்திரப்பகுதி மிகுதியே எனினும், இது வெற்று பக்தி நூல் அல்ல. அப்பக்திப் பாடல்களும்கூட பழைய தெய்வநிலைப் பேற்றைக் கடந்து, முடிவில் அருட்பெருஞ் ஜோதிக் கடவுள் நிலை எய்தவே உதவ வந்தனவாகக் கொள்ள வேண்டியுள்ளதாம். ஆதலின், அருள் ஒளி கொண்டே எப்பாட லுக்கும் மெய்ப்பொருள் கண்டு தெளிதல் பொருந்தும். அந்த அருள் ஒளியைப் பெற வேண்டித்தான் உரைப் பகுதியாகவும், குறிப்புகளாகவும், விளக்கங்களாகவும் பல இணைக்கப்பட் டுள்ளன. அவற்றில் முக்கியமானவை:-

(அ) ஜீவகாருண்ய ஒழுக்கம்.

(ஆ) உண்மை நெறி.

(இ) விண்ணப்பங்கள்.

(ஈ) சன்மார்க்கக் குறிப்பு விளக்கங்கள் முதலியன.

### 3. மகாவுபதேசம்

இதில்தான் ஜீவதயவும், சத்விசாரமும் எவ்வளவு முக்கியம் என்பதும் பழநெறிப்பற்று மேலேறவிடாதென்பதும், ஒன்றான அருட்பெருஞ்ஜோதியையே கொண்டு உய்வு பெற வேண்டும்

என்பதும் குறித்து மிக விளக்கமாக வழங்கியுள்ளார். இதன் வழிநின்று பயின்ற அருட்பெருஞ் ஜோதி அகவற்பாவை ஓதினால் உண்மை எல்லாம் விளங்கும். முடிவில் ஓதரிய உண்மையாம் அருட்பெருஞ் ஜோதி சித்தியின் விளக்கமும் தெளிவாம்.

**4. வள்ளல் பெற்ற சித்தியின் தனிச் சிறப்பு**

முன்னோர் அடைந்த முடிவு நிலை, உடலை நீத்து, இறையிற் கலந்து மறைந்து ஒழிவதேயாம். கன்ம சித்தி, யோகசித்தி, ஞானசித்தி பெற்றவர்களும், காயகல்ப சித்தி பெற்றவர்களும், சூக்கும ஒளியுடம்பு பெற்ற தேவதேகிகளும், இறையடியிற்றங்கி பிறவா நிலையுற்ற முத்தர்களும், பூரண சித்தி நிலை கொண்டு விளங்காது போனவர்களேயாவர். அன்னோர் முத்தி முடிவு ஒரு முடிவன்று! அருட்பெரும்பதி மயமானோர் அதுவாகி, அழி யாது, மறையாது அருட்பெருஞ் சித்திச் செயலோடு என்றும் வாழ்ந்து கொண்டிருத்தல் வேண்டும். இந்நிலையே நம் வள்ளல் பெற்றது. முத்தி என்பது நிலை முன்னுறு சாதனம் என்றும், சித்தி என்பது நிலை சேர்ந்த அனுபவம் என்றும், சித்தியின் பொருட்டே, முத்தியை அடைவது என்றும் அனுபவத்தில் கண்டுதான் அகவலின்கண் குறித்துள்ளார்.

முன்னோர், கடவுள் நிலையைத் தமக்கு வேறாக அயலாகக் கண்டு, திருவருளால் அடைய முயன்று முடிவில் அத்திருவருளும் கூட்டிவைக்க, அவர்களும் அக்கடவுள் நிலையிற் கலந்து, கரைந்து மறைந்து போயினர் என்பது உண்மையே. இந்த ஒரு முடிவு தான் சைவ சமயத் தனிப் பெருமை கொண்ட மணிவாசகர் பெற்ற, தில்லை சோதியில் மறைந்த பெருநிலையாக சைவ உலகம் போற்றிக் கொண்டுள்ளது. இப்படி மறைவுறு முன், பெற்றி ருந்த அனுபவம், ''கன்னற் கனிதேர் களிறென்னக் கடைமுறை, என்னையும் இருப்பதாக்கினன்'', என்ற திருவண்டப் பகுதி அகவலிற் கூறியுள்ளதும் மெய்யே. அன்றைய அனுபவ நிலை அவர் உடல் நிலையிலிருந்து, திருவருளால் பாச நீக்கம் பெற்ற ஆன்மாவாய், சிவானந்த பரவச நிலையினின்று கண்டு, தான் அது வாய் முன்னும், பின்னும், என்றும் இருப்பதையுணர்ந்து வெளி யிட்டதாகும். அந்த ஆனந்த அனுபவம் மணிவாசகராய் இருக் கும்வரை இருந்ததும் உண்மையே. ஆனால், அவர் தில்லை சோதி யில், இல்லையாம்படி மறைந்துவிட்ட தருணம்,

> ''அவர்க்குத் தனி இருப்பு மில்லை, ஆனந்தானுபவமுமில்லை தனி வாழ்வுமில்லை என்பதுதான் சத்தியம்''.

நம் அருட்பிரகாசரின் நிலை வேறு. இவர் கடவுளை அடையச் செல்லவில்லை. கடவுளே இவர் தம் வடிவையே அருட் பெருஞ்ஜோதி அனுபவம் என்றும் கொண்டு விளங்கற்கான சுத்த பிரணவ ஞான தேகமாக ஆக்கிக் கொண்டு திகழலாகி விட்டார்.

''என்சாமி எனதுதுரை என்னுயிர்நா யகமே
இன்றுவந்து நான் இருக்கும் இடத்திலமர் கின்றார்
பின்சாரும் இரண்டறை நாழிகையி லேயெனது
பேருடம்பிற் கலந்து உளத்தே பிரியாமல் இருப்பார்!!''

என்றபடி அருட்பெருஞ்ஜோதிபதியே இந்த அருட்பிரகாச வடிவிற் போந்து அற்புத சித்தியோடு விளங்குதல் உண்மை யாகும். இனிமேலும், அந்த ஒன்றான கடவுள்தானே எல்லோரு மாய் உண்ணின்று விளங்கலாலே, அவர்தம் திரிதேக சித்திப் பேறுதான் ஒவ்வொருவருக்கும் ஆணை செய்யப்பட்டுள்ளது என்பது முழு உண்மையாகும். உலகமெல்லாம் இவ்வுண்மை கண்டு அடைந்து, உய்யும் வழிவகை செய்யவேண்டும் நம் திரு வருட்பா.

அருட்பெருஞ்ஜோதி வாழ்க!

ஓம்

# அருட்பெருஞ்ஜோதி உண்மை விளக்கம்

அருட்பெருஞ் ஜோதியே அனாதி நிலைப்பொருள்
அருட்பெருஞ் சக்தியே யாவும் ஆயது
அருட்பே ராற்றல் அகநின் றியக்க
அருட்பேருலகத் தணுமுதற் பொருள்களும்
அருட்பெரு மியக்க ஆக்க மனைத்தும்
அருட்பெரு முயிருணர் வுடலிடை தோற்றிட
அருளறி வோங்க ஐம்புல னிகந்து
அருளறி வுக்குமுன் ஆறறி வாமனம்
அருணனி யுற்றிட அகத்தி லொன்றி
அருணிலை மோனத் தான்ம ஞானமாய்
அருளலா யோக சித்தியுங் கடந்து
அருளது தானே அருட்பெரு நிலைகொள
அருட்பெருஞ் சோதி அனுபவ மாவது
அருட்பெருஞ் ஜோதி அகவல் லமையிது
அருட்பிரகாசர் அகநின் றெழுந்து
அருட்பிர காச வடிவது கொண்டு
அருட்பிர பஞ்சத் தார்ந்திடு மக்கட்(கு)
அருட்பிர சாதம் அளித்தழி யாதுற
அருட்பெரும் ஆனந்த அற்புதச் சித்தியோ(டு)
அருட்பெரும் வாழ்வில் விளங்கச் செய்வது;
அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் உண்மை
அருட்பெரும் பக்குவம் அடைந்திடா வரைக்கும்
அருட்பெருந் தன்மையாய் அகமறைந் திருந்து
அருட்பெரும் உலகுயிர்த் தோற்றம் யாவுமாய்
அருட்குண மனிதனில் அவனே தானாய்
அருட்பயன் அளித்தும் அடைந்தும் விளங்கலை
அருட்பெருஞ் ஜோதி அகவலிற் காண்பாம்,
அருட்பெருஞ் ஜோதி அதுதா னான
அருளொளி வள்ளல் நம் அகமும் புறமும்
அருளொளி கூட்டி அகிலமீ தென்றும்
அருணிறை இன்பொடு அழிவிலா துலவிட
அருணிறை வளிப்பது ஆணை ஆணையே.

## (விளக்கம்)

அருட்பெருஞ்ஜோதி உண்மை விளக்கம் என்ற மகுடத் துடன் இங்கு நம் திருவருட்பிரகாச வள்ளலாற் கண்டு, அடைந்து வழங்கிய அருட்பெருஞ்ஜோதி அகவலின் குறிப்பும், விளக்கமும் பயனும் விரித்துரைக்க நேர்ந்துள்ளது. அருட்பெருஞ் ஜோதியை உபாய முறையால் ஓங்கார வண்ணச் சித்திர வடிவில் அமைத்து, அதனையே விரித்து ''அருட்பெருஞ்ஜோதி உண்மை விளக்கம்'' என்ற தலைப்பாக நிறுத்தப் பெற்றுள்ளது. இதுவே, பிரணவத்தின் அடிநடு முடிவாம் அ-உ-ம் கொண்டு விளங்குவ தாய், நிறைஞான முழுமதிக்குரிய பதினாறு கலை கொண்டது சுட்டும் பதினாறு எழுத்துடைய மகுடமாய்த் திகழ்கின்றதாம். ஓம் வடிவம், உபாய ஞானம் குறிப்பதும், இத்தலைப்பே அகநிறை உண்மை ஞானம் கொண்டதுமாய்ப் பின், விரிந்திலங்கும் செய்யுள் அனுபவ ஞான விளக்கம் குறிப்பதாயும் கொள்ளலாம். இவற்றில் முன்ஞானம், பின்ஞானம் இரண்டுமே, உண்மை ஞான அனுபவ ஞானமாய், பதினாறோடு பதினாறு சேர்ந்து முப்பத்திரண்டு கலை நிறைவாய் விளங்குவதாம். இக் குறிப்பு தரும் செய்யுள் ஈண்டு முப்பத்திரண்டு அடிகொண்டதாய் அமைந்துள்ளது. இது திரு ஞான சம்பந்தர், மணிவாசகரின் ஞானானுபவத்தையும், அறங் கள் 32 என்றதன் கருத்தையும் கொண்டதாய் விளங்குவதாம்.

அருட்பெருஞ்ஜோதியின் தத்துவமும், தத்துவாதீத அனுபவ உண்மையும் ஒருவாறு அகவல் ஒளியிற் காண்பாம். அறிவரிய கடவுள் உண்மையை ஏகதேச அருள் உணர்வாற் கண்ட பெரியோர்கள், கடவுள் விளக்கத்தை வெளிப்படுத்தச் சில பல உபாய முறைகளைக் கையாண்டனர். எல்லாம் உண்மையைச் சுட்ட வந்த கற்பனைகளேயாம். எந்த ஒரு வடிவமும், அதற்குரிய ஒரு கற்பனைப் பெயரும் கடவுளர் உண்மையை உள்ளபடி காட்டுவதாயில்லை. அறிவாற் சுட்டி, அறிந்ததெல்லாம் பரம் பொருளின் (ஏகதேசங்களே) சின்னஞ்சிறு கூறுகளே யன்றி நிறைவுடையதல்லவாம். இவன் கடவுளுக்கு வேறாய் இருப்ப தாகவே கருதி அடைய முயன்று முடிவில் கருதிய பொருளிற் கலந்து மறைந்து போகத்தான் முடிந்ததாம். பகுத்தறிவாலும், தத்துவ கற்பனா உணர்வாலும் கண்ட முடிவு, மனிதனை அழிவற்ற நல்லின்ப வாழ்வில் தழைத்தோங்கச் செய்யவில்லை. இதுசமயம் பரம்பொருளின் நிறை உண்மைதானே அருட்பெருஞ்ஜோதியாக

வெளிப்பட்டுள்ளது. இந்த அருட்பெருஞ்ஜோதி, கற்பனாதீத மான எல்லாம் வல்ல நித்திய மெய்ப் பொருளின் உண்மையை அருள் உணர்வால் உணர்ந்து, அகமிருந்து அனுபவித்து ஆனந்த மாய்த் திகழச் செய்கின்றது பக்குவ மனிதனை.

அந்த அருட்பக்குவ நிறை மனிதர் இன்று நம் திருவருட்பிர காச வள்ளலாராகத் திகழ்கின்றார். இந்த அருட்பிரகாசர் யார்? நித்தியமாயுள்ள அருட்பெருஞ்ஜோதியே, அகண்ட பிரபஞ்சத்து எல்லாப் பொருட்களாயும், உயிர்களாயும், இயல்களாயும், செயல்க ளாயும், தத்துவங்களாயும் தோன்றித் தோன்றி விளங்கி வந்து, இப் போது அதுவே (அந்த அருட்பெருஞ்ஜோதியே) இந்த அருட்பிர காசராகி, அக-அனக நிறை அனுபவத்தோடு விளங்குகின்றார் என்பது உண்மையாகும். இவ்வுண்மையை அறியாதார், இந்த 'அருட்பிரகாசர்' என்ற பெயர், பிறர் மூலமாகப் புனைந்துரைக்கப் பட்டதுதானே என்பர்! உண்மையில், அருட்பெரும்பதியே யாவ ருள்ளும் இருந்து அவரவராய் விளங்கி, அருள் விளை ஆடலைப் புரிகின்றதை அறியும்போது, அந்த அருட்ஜோதி பதியே, அய லொரு உள்ளத்திலிருந்து வெளிப்படுத்தி, வள்ளலாருக்கு இவ் வருட்பிரகாசப் பெயரை வழங்கச் செய்துள்ளது என்று தெளிய லாகும். கடவுட் பேரருளின் பெரும் உண்மை எவ்விடத்தும் எவ்வெவற்றின் வண்ணமாயும் என்றென்றும் இருந்து வந்தும், இத்தருணமே ஒரே ஒரு ஆன்ம சிற்றணுவிலே, நிறை இயல்பொடு உணர்ந்து கொள்ளப்பட்டிருக்கின்றதாம். அந்த ஒரு சிற்றணுவே வள்ளல் உள்ளமாக, சத்திய ஞான சபையாக விளங்கி, அருட் பெருஞ்ஜோதி அனுபவத்தை வெளியாக்கி விட்டுள்ளதாம். எங்கும் அருட்பெருஞ்ஜோதியே எல்லாம் அருட்பெருஞ்ஜோதியே என்று இன்று நம் உள்ளத்திலிருந்து உணர்கின்றோம் நாம். இது காறும் இந்த உண்மை விளங்காதிருந்தது, வெளிப்படாதிருந்தது, புறநிலை அனுபவமே அறிந்து கொள்ளப்பட்டு வந்தது. காரணம், அருள் விளக்கம் நம் உள்ளத்தில் ஏற்படாததே. அந்த அருள் உள்ளும் புறமும் எப்போதும் இருந்து செயல் புரிந்துவருகின்றது உண்மையே எனினும், அபக்குவ அறியாமைக் காரணமாய் அக மறைந்திருந்தது போல் தோன்றுகிறது. உண்மையில் அந்த அருளை எதுவும் மறைத்திருக்கவில்லை. அவ்வறியாமைதான் பெரும்மறைப் பாக இருந்து, அது நீங்க உண்மை உள்ளபடி விளங்குகின்றதாம்.

ஆகவே, எல்லாம் வல்ல அருட்பேராற்றல்தானே அறியப் படாதவரை, அதுவே, புறத்துற்ற எல்லாமாய்த் திகழ்கின்ற உண்மையும் அறியப்பட முடியாதிருந்தது. அகநிலையில் நித்த நிறைவாயிருந்து கொண்டு புறத்தே தேகாதி பிரபஞ்சம் எல்லாம் தோற்றி விளங்கச் செய்து கொண்டுள்ள பரம்பொருள், தன் பேரருளாலேயே யாவையும் விளங்கச் செய்கின்றதோடு 'தானே' ஒவ்வொன்றின் உண்ணின்றும் விளங்குகின்றது உண்மையே. மனிதன் தன்னை புறத்தானாய்க் கருதிக் கொண்டு அகநிலைப் பதி யோடு கூட முயன்று வந்தது தவறே. அகநிலையிற் கலக்கக் கருதிச் சென்றொழிந்தது சரியல்ல. அந்த ஒழிவே, புற அழிவே முடிவெனக் கொண்டிருந்ததும் சரியல்லவாம். இப்போது உணர்ந்து கொள்ளப்பட்டிருக்கின்ற அருள் உணர்வால், அந்த அகப்பூரணத்திருந்தே யாவும் புறத்திலங்கும் உண்மையாய் விளங்கலால், தானும் அப்படி அகமிருந்து புறநிலை கொண்டிலங் குவதையும் அறிகின்றான் மனிதன். இப்படி அகமிருந்து அருட் பேராற்றலோடு வாழ்கின்ற மனிதன் அருள் ஒளிமயமாய் இருந்து கொண்டு அருட்செயல் புரிந்து கொண்டு, அருட்பெருஞ்ஜோதி யாகவே வாழத் தலைப்படுகின்றான். இதுதான் சமய மதாதீத சுத்த சன்மார்க்க வாழ்வாக உலக மக்கள் சமுதாயம் முழுமைக் கும் ஒத்ததாய்த் திருவருளால் வெளியாகியுள்ளது இன்று.

உலகில் மேற்படி அருட்பெருஞ்ஜோதி வாழ்வு வெளிப்பட்டு எல்லோருக்கும் பெருநலம் வழங்க இருப்பதால், அந்த சுத்த நெறி முறையை விரித்துக் கூற வந்ததே இந்த அருட்பெருஞ் ஜோதி அகவல் ஆகும். இதனால் இவ் அகவலின் பொருள் விளக்கம் அருள் நிலை நின்று, அருட்பெரு நோக்கோடு காண வேண்டுவது முக்கியம். பழைய நெறி முறைகளைப் பயின்று, அவற்றின் கருத்துக்களை அடிப்படையாய் உளம் கொண்டு, இவ் அகவல் அடிகளை ஆராயப் புகின் மெய்ப்பொருள் விளங்காது. இதில் பழ மரபுகள் ஒட்டியும் தழுவியும், விளக்கியும் சில குறிப் புகள் வந்துள்ள இடங்களில் கூட அருட்பொது நோக்கு கொண்டு எவரும் ஆய்தல் வேண்டும். அப்போதுதான் இந்த அருட்பெருஞ்ஜோதியின் உண்மையே முன்வந்த எல்லாவற் றிற்கும் உரிய உண்மையாய் இருந்து அது அதுவாய் இலங்கின தாகச் சந்தேகமின்றித் தெளிந்து ஏற்றுப் பயனுறலாகும்.

உலகம், மக்கள் எல்லோருக்கும் நல்லின்ப வாழ்வு பெற்றுத் தழைத்து விளங்கற்கரிய இடமாக அருட்பெருங்கடவுளால் அமைக்கப்பட்டுள்ளது. ஒன்றான அருட்பெருங்கடவுளை, அருட் பெருஞ்ஜோதியாக இன்று எவ்வெவருள்ளும் இருந்து விரிந்து விளங்குவதை பேரருள் ஞானத்தாலே உணர்கின்றோம். இவ் வருள் ஞானம் கொண்டு அன்போடு கூடி வாழத் தெரிந்து கொள்ளாததாலேதான், இதுவரை உலக மக்கள் சமுதாயம் அவத்தைப்பட்டு அழிந்தும், அழிவைவிட மேலும் மேலும் பெருகிக் கொண்டும் இருக்கின்றதாம். பழநெறி முறையால் ஒன்றான அருள் வாழ்வுக்குத் தடையே ஏற்படுகின்றது. அந்தப் பழ நெறியையும் கூட முதலில் ஒரு நல்ல குறிக்கோளோடுதான் முன்னோர் வகுத்தளித்தனர். பலரும் அம்மாதிரி சில பல கொள்கை கோட்பாடுகளையும், வந்தனை வழிபாடுகளையும் ஏற் படுத்தினதினால், அவற்றைத் தழுவிய பின்னோர், வேறு வேறு பிரிவினராய்க் கூடி மக்கள் சமுதாயம் ஒன்று பட்டு அகவுரிமை யோடு வாழமுடியாது செய்து விட்டனர். அதனால் உலகில் இன்று பேரவத்தையே பெருகி இருக்கின்றதைக் காண்கின் றோம். இந்நிலை மாறவேண்டும். மாறவேண்டும் என்பதுதான் நல்லோர் எல்லோரும் விரும்புகின்றனர். அதே சமயம் தம் சமயமத நெறிமுறைகளைக் கைவிடத் துணிகின்றார்களில்லை பலரும். இதற்கு என்ன செய்வது? இதற்கு முதலில் செய்ய வேண்டுவது யாதெனின், அருட்பெருஞ்ஜோதியின் உண்மையை ஒவ்வொருவரும் உணர்ந்து கொள்ளவேண்டியதே முதற்படி யாகும். ஒவ்வொருவருக்கும், உடம்பும், உயிரும், உணர்வும், வாழ்வும் தனித்தனியாக இருக்கின்றது. தனித்தனி ஒவ்வொரு வரும் நல்லின்ப வாழ்வு பெற உரிமை உடையவர்களே. தன் போல் பிறரும் நலம் விழைவது இயல்பே என்பதை உளம் கொண்டு, எவர்க்கும் துன்பஞ் செய்யாது, அன்பு செய்திருப்பது நம் கடமையாகும். அன்புச் செயலால்தான் மெய் இன்பம் உண்டாகும். இந்த உலகில் எவ்வுயிர்க்கும் இன்பம் உண்டா கவே இயற்கை நியதி முறை ஏற்பட்டுள்ளது. இதனால், இவ் வியற்கை இன்பச் செயல் முறைக்குக் காரணமாகிய இயற்கை நியதி அல்லது விதிமுறை, பேரன்பு அல்லது அருளின் அடிப் படையில் தோன்றியுள்ளது என்பதை அறிவோம். அந்த அருட் பெரும் அடிநிலையே அருட்பெருஞ்ஜோதியாய் எவர் உள்ளும் இருந்து அன்புச் செயல்புரியத் தூண்டிக் கொண்டிருக்கின்றது. ஆகவே, அன்புச் செயல் பெருகப் பெருக அருட்பெருஞ்ஜோதி

யுண்ணின்று விரிந்து உடம்பும் உயிரும், உணர்வும், வாழ்வும் நிறை இன்பமயமாகி நிலவுவது திண்ணம். இப்படி அருட் பெருஞ்ஜோதியை உளம் கொண்டு வாழ்வதால் முன்னம் விதிக் கப்பட்டிருந்த தடைகளெல்லாம் ஒழிவது திண்ணம். அப்போது இந்த அருட்பெருஞ்ஜோதி முறையால், முன்பு எச்சமயத் தலை வர்களும் எதிர்பார்த்திருந்த நன்மையைவிட பன்மடங்கு பெரு நன்மை உண்டாவது சத்தியம். இதனால், இந்த அருட்பெருஞ் ஜோதியின் ஏற்பால் யாரும் எந்தவிதமான குற்றமும், குறைவும் கேடும் அடையவே மாட்டார்கள்! இது நிச்சயம். எனவே அருட்பெருஞ்ஜோதி உண்மையை இந்த அகவலிற் கண்டு கொள்ள வாரீர்.

## அகவலுக்கு உரை காணும் வாய்ப்பு

திருவருள் கூட்டிவைக்கத் திருவருட்பாவைக் கண்டுபயிலும் வாய்ப்பு 1930 முதல் ஏற்பட்டது. முதலிலிருந்து முடிவு வரை ஓதியுணரற்கான சூழ்நிலையையும் வாழ்வுமுறையையும் திரு வருளே கூட்டி வைக்க மேற்கொள்ளப்பட்டது. அருள் நெறி படர்வார்க்கு சூழ்நிலையும், கோள் நிலையும் நன்மையே செய்யும் என்பது நாளடைவில் புலனாயிற்று. ஜீவ தயவுப் பணியில் ஈடு பட்டு எஞ்சிய போதெல்லாம் அருட்பாவின் கண்ணும் அதற் கான விளக்கங்களினிடத்தும் மனம் சென்று சென்று தினமும் புதிய கருத்துக்கள் வெளியாகக் கண்டு வர நேர்ந்தது.

1938 தைப்பூசத்தின் போதும், அடுத்து சில தினங்களும் வடலூர் மேட்டுக்குப்பத்தில் உறைந்த சமயம், வள்ளற் பெரு மானின் உண்மை பல உணரவும் காணவும் முடிந்தது. அடுத்து சத்திய ஞானசபைத் தத்துவ விளக்க நூல் வெளியிடத் திரு வருளே உதவியது. மற்ற பல கருத்துக்கள் அப்போதப்போது வெளியாயின. 1943ல் சுத்த சன்மார்க்க உண்மை வெளிப்பட, வானக் கோளின் கணித முறைப்படி கடக நடு பூசக் காலில் சூரியன், சந்திரன், குரு விளங்கினபோது, கலிமுடிந்து கிருதயுகம் தோன்றும் என்ற குறிப்புக்கு மேலாக, அந்தக் கடக நடு (நம் உடலின் தலைநடு விளங்கும் காற்குளம் என்னும்) பூசத்தொரு காலில் வெளிப்பட்ட இரவிமதியும் குருவுமே நமது அகத்தே சுத்த, ஞான பிரணவ தேகத்தைக் குறிப்பதாய்க் கண்டு கொள்ளப்பட்டது.

புறவுலகில் கடகத்திடை முக்கோட் காட்சி தோன்றி மறைந்தது பெரி தல்ல, அதன் உண்மை நமது, அக அம்பரத்தில் சுத்தமாகி திரி தேகக் காட்சியைக் காட்டி நிலை கொண்டுள்ளது மிக மிக முக்கிய மாம். இக்கருத்துடன் சுத்த சன்மார்க்க விளக்கம் தரவல்ல சுத்த தயவு பாக்கள் பலப்பல தொடர்ந்து வரையத் திருவுளம் கூட்டி வைத்தது. தயவே எல்லாமாய்க் கண்டு போற்றிக் கொள்ள நேர்ந்ததுதான் மிக முக்கியம். சத்விசாரத்துடன் பரோபகாரச் செயலும் இடையறாது தொடர்ந்தது. பலவான செய்யுளும் உரைகளும் அப்போதப்போது வெளியாயின.

1960ல் தான், முதல் நாள் தொடங்கி அருட்பெருஞ்ஜோதி அகவலுக்குத் தினமும் ஈரடிக்கு விளக்கம் வரைந்திடப் பெற்றது. அது எந்தக் காலத்தும் தடைபடாது இரண்டு ஆண்டும் இரு திங்களும், ஏட்டு நாட்களும் எழுதி நிறைவு செய்யப்பெற்றது. அந்த நாட்களில் உரை காணவிருந்த அடிகளுக்கும், புறச் சூழ் நிகழ்ச்சிகளுக்கும் பன்முறை விளக்கம் பொருந்தி வந்தனவாம். 798 நாட்களில் அகவல் அடிகள் 1596க்கும் விளக்கம் நாட்குறிப்பு ஏடுகளில் சுருக்கமாகவே வரைந்து வைக்கப்பெற்றிருந்தன. பின் னர் 1969ல் அருட்சுடரில் அகவலுக்கு உரை வழங்கச் சாலை சகாப் தத் திங்களாகிய வைகாசி முதல் ஒருவாறு ஆறு அடிகளுக்கு விரிந்த முறையில் விளக்க உரை தொடர்ந்து அனுப்ப ஏற்பாடா கியது. விரிவான உரை விளக்கத்தை முழுமையாக உருவாக்கக் கருதிய தருணம் நான்கு பெரிய நோட்டுப் புத்தகங்களில் ஒரா யிரம் பக்கங்களில் உருவாக்கும் பணியில் ஈடுபட நேர்ந்தது. அது வும் திருவருளால் நான்கு திங்களில் நலமே நிறைவுற்றது. வள்ள லாரின் சித்தி நிலைப்பேறு உற்ற நூற்றாண்டின் நினைவாக முழு நூலையும் வெளியிட உளம் கொண்டபோது, அத்திருவருளே அப்பெரும்பணியைத் தக்கோர் மூலம் வெளிப்படுத்த முனைந் தது அருட்பெருஞ்ஜோதியின் திருவுள்ளமேயாகும்.

அருட்பிரகாசரின் திருவுள்ளப்படி அவர்தம் சத்திய வாக்கு உலகம் எல்லாம் பரவட்டும்.

தயவு



# அருட்பெருஞ் ஜோதிச் சின்னமும் அனுபவமும்

சுத்த தயா வொழுக்கத்தோடு, சத்விசாரம் செய்து வந்தால் நமது உலகுயிர் வாழ்வின் குறிக்கோளும் பயனும் இவை இவை என நன்கு விளங்கும்.

தயவு அடிப்படையில் நமது இறை இயல் உண்மையைக் காணத் தொடங்குவோம். நம் உண்மைத் தோற்றம், .கரு ஆரம் பத்தில் ஒரு சிறு ஒளிப்புள்ளியாகப் பிரகாசிக்கத் தொடங்கு கின்றது. அந்தப் புள்ளியை மையமாகக் கொண்டே ஒவண்ணக் கருப்பிண்டம் உருவாகி வளர்ந்து வந்து, உலகிடை தோற்றி விளங்குகின்றோம் ஒவ்வொருவரும். ஒருவனை, அவன் ஒரு நல்ல புள்ளி, என்பது அகவுண்மை சுட்ட வந்ததே.

கண், நாக்கு, மூக்கு, செவி, ஞானக் கூட்டத்து தலை நடுவுள்ளிருந்து, ஐவண்ண ஐந்தியல் ஆற்றல் கொண்டு விரிந்து, இறை இன்ப அனுபவம் பெற இருக்கின்றோம் நாம். நமது புற வடிவம் தூல ஐந்தெழுத்துருவாய் இருப்பதும்; நம்,கை கால்களில் ஐந்தைந்து விரல்கள் விளங்குதலும், அகத் துறைக்காம் ஐந்நிலப் பாங்கும், அக அனுபவத்திற்காம் சாக்கிராதி துரியாதீத ஐந்நிலை யும், உடல், உயிர், அறிவு, ஆன்மா, அருள் ஆகிய ஐஞ்சக்தி கொண்டும் திகழ்கின்றோம். பொதுவாக, உடலும், உயிரும், அறிவும் கொண்ட மனிதன், சாதாரணமாகப் பிறப்பதும், குறிப் பிட்ட காலம் இருப்பதும், பின் இறந்து போவதுமாய் இருக் கின்றான். விசேட ஆன்மசக்தியைக் கொண்டவனோ யோகாதி சயச் சித்திகளோடு பலகாலம் விளங்கி விட்டு முடிவில் அடங்கிப்

போகின்றான். இந்நிலை வரைதான் மனித வாழ்வு உலகறிய விளைந்துள்ளது.

மேற்படி யோகசக்தியின் விளைவு கண்டு வியப்பில் ஆழ்ந்த உலகினர்க்கு, அருட்சக்தியின் விளைவு வெளிப்படவே திருவருட் பிரகாச வள்ளல் தோற்றுவிக்கப்பட்டுள்ளார். அருளின் நிறை விளைவு, அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரையே வள்ளலார் மூலம் வெளியாக்கிவிட்டதாம். இப்பொழுது அருட்பிரகாசர், அருட் சக்தியை முழுமையாகப் பெற்றுக் கொண்டதினால், அதிலேயே மற்ற நாற்சக்தியும் கூடிய நிறை இறைவாழ்வாக அமைந்துள்ள தாம். இவர் தானே அக ஆன்ம சிற்சபையினின்று, அனக நிறை வால், ஐஞ்சக்தியோடு, ஐந்தொழிலையும் கொண்டு, அகண்ட வெளிநிறை பெருஞ்ஜோதி வடிவினராய், அருட்பெருஞ்ஜோதியே தன் பேருருவாய் விளங்குகின்றவராய் உள்ளார். இதுவே அருட் பெருஞ்ஜோதியின் சின்னத்தின் மேனிலையாம்.

அருட்பெருஞ்ஜோதி நிலையை அடைவிப்பது, கடவுள் தயவே. அனைத்து நாட்டு மொழியாம் ஆங்கிலத்தில் இத்தயவை, "DAEIOU" என்று எழுதித் தயவு என்றே உரைக்கலாம். இதில் D-என்பதை ஒன்றாகிய (A B C— என்னும் மூவியல் கொண்ட) இறைவனைக் குறிக்கவும், அவ்விறைவனின் ஐஞ்சக்தி ஐந்தி யலையே "AEIOU" என்னும் ஐந்து உயிர் எழுத்தாகவும் கொண்டு கூட்டி, இத்தயவினால் அனைத்துலக மக்களும் இறை நலவாழ்வு பெற்று இனிது தழைத்து ஓங்கலாம் என்பது குறித்தே இச் சின்னத்தின் அடியில் மலர்ச்சியுற்றியங்குகின்றது இத்தயவு.

தயவு அனுபவம், கடவுளான்மப்புள்ளியிலிருந்து விரிந்து நம்மில் நிறைந்து சூழ்ந்து அகண்ட பேரொளியாய், அருட்பெருஞ் ஜோதியாய் விளங்கிக் கொண்டிருப்பதாக.

தயவு

# அருட்பெருஞ்ஜோதி அகவல்

## உயிர் வளம்

அருட்பெருஞ் ஜோதி யருட்பெருஞ் ஜோதி
அருட்பெருஞ் ஜோதி யருட்பெருஞ் ஜோதி

அருட்சிவ நெறிசா ரருட்பெரு நிலைவாழ்
அருட்சிவ பதியா மருட்பெருஞ் ஜோதி

ஆகம முடிமேல் ஆரண முடிமேல்
ஆகநின் றோங்கிய வருட்பெருஞ் ஜோதி

இகநிலைப் பொருளாய்ப் பரநிலைப் பொருளாய்
அகமறப் பொருந்திய வருட்பெருஞ் ஜோதி

ஈனமின் றிகபரத் திரண்டின்மேற் பொருளாய்
ஆனலின் றோங்கிய வருட்பெருஞ் ஜோதி

உரைமனங் கடந்த வொருபெரு வெளிமேல்
அரைசுசெய் தோங்கு மருட்பெருஞ் ஜோதி

ஊக்கமு முணர்ச்சியு மொளிதரு மாக்கையும்
ஆக்கமு மருளிய வருட்பெருஞ் ஜோதி

எல்லையில் பிறப்பெனு மிருங்கடல் கடத்தியென்
அல்லலை நீக்கிய வருட்பெருஞ் ஜோதி

ஏறா நிலைமிசை யேற்றியென் றனக்கே
ஆறாறு காட்டிய வருட்பெருஞ் ஜோதி

ஐயமுந் திரிபு மறுத்தென துடம்பினுள்
ஐயமு நீக்கிய வருட்பெருஞ்ஜோதி

ஒன்றென விரண்டென வொன்றிரண் டெனவிவை
யன்றென விளங்கிய வருட்பெருஞ் ஜோதி

ஓதா துணர்ந்திட வொளியளித் தெனக்கே
ஆதார மாகிய வருட்பெருஞ் ஜோதி

ஔவிய மாதியோ ராறுந் தவிர்த்தபேர்
அவ்வியல் வழுத்து மருட்பெருஞ் ஜோதி

திருநிலைத் தனிவெளி சிவவெளி யெனுமோர்
அருள்வெளிப் பதிவள ரருட்பெருஞ் ஜோதி

சுத்தசன் மார்க்க சுகத்தனி வெளியெனும்
அத்தகைச் சிற்சபை யருட்பெருஞ் ஜோதி

சுத்தமெய்ஞ் ஞான சுகோதய வெளியெனும்
அத்து விதச்சபை யருட்பெருஞ் ஜோதி

தூயக லாந்த சுகந்தரு வெளியெனும்
ஆயசிற் சபையி லருட்பெருஞ் ஜோதி

ஞானயோ காந்த நடத்திரு வெளியெனும்
ஆனியில் சிற்சபை யருட்பெருஞ் ஜோதி

விமலபோ தாந்தமா மெய்ப்பொருள் வெளியெனும்
அமலசிற் சபையி லருட்பெருஞ் ஜோதி

பெரியநா தாந்தப் பெருநிலை வெளியெனும்
அரியசிற் றம்பலத் தருட்பெருஞ் ஜோதி

சுத்தவே தாந்தத் துரியமேல் வெளியெனும்
அத்தகு சிற்சபை யருட்பெருஞ் ஜோதி

சுத்தசித் தாந்த சுகப்பெரு வெளியெனும்
அத்தனிச் சிற்சபை யருட்பெருஞ் ஜோதி

தகரமெய்ஞ் ஞானத் தனிப்பெரு வெளியெனும்
அகர நிலைப்பதி யருட்பெருஞ் ஜோதி

தத்துவா தீத தனிப்பொருள் வெளியெனும்
அத்திரு வம்பலத் தருட்பெருஞ் ஜோதி

சச்சிதா னந்தத் தனிப்பர வெளியெனும்
அச்சிய லம்பலத் தருட்பெருஞ் ஜோதி

சாகாக் கலைநிலை தழைத்திடு வெளியெனும்
ஆகா யத்தொளி ரருட்பெருஞ் ஜோதி

காரண காரியங் காட்டிடு வெளியெனும்
ஆரணச் சிற்சபை யருட்பெருஞ் ஜோதி

ஏக மனேக மெனப்பகர் வெளியெனும்
ஆகமச் சிற்சபை யருட்பெருஞ் ஜோதி

வேதா கமங்களின் விளைவுகட் கெல்லாம்
ஆதார மாஞ்சபை யருட்பெருஞ் ஜோதி

என்றா தியசுடர்க் கியனிலை யாயது
வன்றாந் திருச்சபை யருட்பெருஞ் ஜோதி

சமயங் கடந்த தனிப்பொருள் வெளியாய்
அமையுந் திருச்சபை யருட்பெருஞ் ஜோதி

முச்சுடர் களுமொளி முயங்குற வளித்தருள்
அச்சுட ராஞ்சபை யருட்பெருஞ் ஜோதி

துரியமுங் கடந்த சுகபூ ரணந்தரும்
அரியசிற் றம்பலத் தருட்பெருஞ் ஜோதி

எவ்வகைச் சுகங்களு மினிதுற வளித்தருள்
அவ்வகைச் சிற்சபை யருட்பெருஞ் ஜோதி

இயற்கையுண் மையதா யியற்கையின் பமுமாம்
அயர்ப்பிலாச் சிற்சபை யருட்பெருஞ் ஜோதி

சாக்கிரா தீதத் தனிவெளி யாய்நிறை
வாக்கிய சிற்சபை யருட்பெருஞ் ஜோதி

சுட்டுதற் கரிதாஞ் சுகாதீத வெளியெனும்
அட்டமேற் சிற்சபை யருட்பெருஞ் ஜோதி

நவந்தவிர் நிலைகளு நண்ணுமோர் நிலையாய்
அவந்தவிர் சிற்சபை யருட்பெருஞ் ஜோதி

உபயபக் கங்களு மொன்றெனக் காட்டிய
அபயசிற் சபையி லருட்பெருஞ்ஜோதி

சேகர மாம்பல சித்தி நிலைக்கெலாம்
ஆகர மாஞ்சபை யருட்பெருஞ் ஜோதி

மனாதிகட் கரிய மதாதீத வெளியாம்
அனாதிசிற் சபையி லருட்பெருஞ் ஜோதி

ஓதிநின் றுணர்ந்துணர்ந் துணர்தற் கரிதாம்
ஆதிசிற் சபையி லருட்பெருஞ் ஜோதி

வாரமு மழியா வரமுந் தருந்திரு
வாரமு தாஞ்சபை யருட்பெருஞ் ஜோதி

இழியாப் பெருநல மெல்லா மளித்தருள்
அழியாச் சிற்சபை யருட்பெருஞ் ஜோதி

கற்பம் பலபல கழியினு மழிவுறா
அற்புதந் தருஞ்சபை யருட்பெருஞ் ஜோதி

எனைத்துந் துன்பிலா வியலளித் தெண்ணிய
வனைத்துந் தருஞ்சபை யருட்பெருஞ் ஜோதி

பாணிப் பிலதாய்ப் பரவினோர்க் கருள்புரி
ஆணிப்பொ னம்பலத் தருட்பெருஞ் ஜோதி

எம்பல மெனத்தொழு தேத்தினோர்க் கருள்புரி
அம்பலத் தாடல்செய் யருட்பெருஞ் ஜோதி

தம்பர ஞான சிதம்பர மெனுமோர்
அம்பரத் தோங்கிய அருட்பெருஞ் ஜோதி

எச்சபை பொதுவென வியம்பின ரறிஞர்கள்
அச்சபை யிடங்கொளு மருட்பெருஞ் ஜோதி

வாடுத னீக்கிய மணிமன் றிடையே
ஆடுதல் வல்ல வருட்பெருஞ் ஜோதி

நாடகத் திருச்செய னவிற்றிடு மொருபே
ராடகப் பொதுவொளி ரருட்பெருஞ் ஜோதி

கற்பனை முழுவதும் கடந்தொளி தருமோர்
அற்புதச் சிற்சபை யருட்பெருஞ் ஜோதி

ஈன்றநற் றாயினு மினிய பெருந்தய
வான்றசிற் சபையி லருட்பெருஞ் ஜோதி

இன்புறு நானுளத் தெண்ணியாங் கெண்ணியாங்
கன்புறத் தருசபை யருட்பெருஞ் ஜோதி

எம்மையு மென்னைவிட் டிறையும் பிரியா
தம்மையப் பனுமா மருட்பெருஞ் ஜோதி

பிறிவுற் றறியாப் பெரும்பொரு ளாயென்
னறிவுக் கறிவா மருட்பெருஞ் ஜோதி

சாதியு மதமுஞ் சமயமுங் காணா
ஆதிய நாதியா மருட்பெருஞ் ஜோதி

தநுகர ணாதிக டாங்கடந் தறியுமோர்
அநுபவ மாகிய வருட்பெருஞ் ஜோதி

உனுமுணர் வுணர்வா யுணர்வெலாங் கடந்த
அநுபவா தீத வருட்பெருஞ்ஜோதி

பொதுவுணர் வுணரும் போதலாற் பிரித்தே
அதுவெனிற் றோன்றா வருட்பெருஞ் ஜோதி

உளவினி லறிந்தா லொழியமற் றளக்கின்
அளவினி லளவா வருட்பெருஞ் ஜோதி

என்னையும் பணிகொண்டிறவா வரமளித்
தன்னையி லுவந்த வருட்பெருஞ் ஜோதி

ஓதியோ தாம லுறவெனக் களித்த
ஆதியி றில்லா வருட்பெருஞ் ஜோதி

படியடி வான்முடி பற்றினுந் தோற்றா
அடிமுடி யெனுமோ ரருட்பெருஞ் ஜோதி

பவனத் தினண்டப் பரப்பினெங் கெங்கும்
அவனுக் கவனா மருட்பெருஞ் ஜோதி

திவளுற் றவண்டத் திரளினெங் கெங்கும்
அவளுக் கவளா மருட்பெருஞ் ஜோதி

மதனுற்ற வண்ட வரைப்பினெங் கெங்கும்
அதனுக் கதுவா மருட்பெருஞ் ஜோதி

எப்பாலு மாய்வெளி யெல்லாங் கடந்துமேல்
அப்பாலு மாகிய வருட்பெருஞ் ஜோதி

வல்லதா யெல்லா மாகியெல் லாமும்
அல்லதாய் விளங்கு மருட்பெருஞ் ஜோதி

எப்பொருள் மெய்ப்பொரு ளென்பர்மெய் கண்டோர்
அப்பொரு ளாகிய அருட்பெருஞ் ஜோதி

தாங்ககி லாண்ட சராசர நிலைநின்
றாங்குற விளங்கு மருட்பெருஞ் ஜோதி

சத்தர்க ளெல்லாந் தழைத்திட வகம்புறத்
தத்திசை விளங்கு மருட்பெருஞ் ஜோதி

சத்திக ளெல்லாந் தழைக்கவெங் கெங்கும்
அத்தகை விளங்கு மருட்பெருஞ் ஜோதி

முந்துறு மைந்தொழின் மூர்த்திகள் பலர்க்கும்
ஐந்தொழி லளிக்கு மருட்பெருஞ் ஜோதி

பெரிதினும் பெரிதாய்ச் சிறிதினுஞ் சிறிதாய்
அரிதினு மரிதா மருட்பெருஞ் ஜோதி

காட்சியுங் காணாக் காட்சியு மதுதரும்
ஆட்சியு மாகிய வருட்பெருஞ் ஜோதி

இன்புறு சித்திக ளெல்லாம் புரிகவென்
றன்புட னெனக்கரு ளருட்பெருஞ் ஜோதி

இறவா வரமளித் தென்னைமே லேற்றிய
அறவாழி யாந்தனி யருட்பெருஞ் ஜோதி

நானந்த மில்லா நலம்பெற வெனக்கே
ஆனந்த நல்கிய வருட்பெருஞ் ஜோதி

எண்ணிய வெண்ணியாங் கியற்றுக வென்றெனை
யண்ணியுள் ளோங்கு மருட்பெருஞ் ஜோதி

மேயினை மெய்ப்பொருள் விளங்கினை நீயது
வாயினை யென்றரு ளருட்பெருஞ் ஜோதி

எண்ணிற் செழுந்தே னினியதெள் ளமுதென
அண்ணித் தினிக்கு மருட்பெருஞ் ஜோதி

சிந்தையிற் றுன்பொழி சிவம்பெறு கெனத்தொழில்
ஐந்தையு மெனக்கரு ளருட்பெருஞ் ஜோதி

எங்கெங் கிருந்துயி ரேதேது வேண்டினும்
அங்கங் கிருந்தரு ளருட்பெருஞ் ஜோதி

சகமுதற் புறப்புறந் தங்கிய வகப்புறம்
அகம்புற முற்றுமா மருட்பெருஞ் ஜோதி

சிகரமும் வகரமுஞ் சேர்தனி யுகரமும்
அகரமு மாகிய வருட்பெருஞ் ஜோதி

உபரச வேதியி னுபயமும் பரமும்
அபரமு மாகிய வருட்பெருஞ் ஜோதி

மந்தண மிதுவென மறுவிலா மதியால்
அந்தணர் வழுத்து மருட்பெருஞ் ஜோதி

எம்புயக் கனியென வெண்ணுவா ரிதய
வம்புயத் தமர்ந்த வருட்பெருஞ் ஜோதி

செடியறுத் தேதிட தேகமும் போகமும்
அடியருக் கேதரு மருட்பெருஞ் ஜோதி

துன்பறுத் தொருசிவ துரிய சுகந்தனை
அன்பருக் கேதரு மருட்பெருஞ் ஜோதி

பொதுவது சிறப்பது புதியது பழயதென்
றதுவது வாய்த்திக ழருட்பெருஞ் ஜோதி

சேதனப் பெருநிலை திகழ்தரு மொருபரை
யாதனத் தோங்கிய வருட்பெருஞ் ஜோதி

ஓமயத் திருவுரு வுவப்புட னளித்தெனக்
காமயத் தடைதவி ரருட்பெருஞ் ஜோதி

எப்படி யெண்ணிய தென்கருத் திங்கெனக்
கப்படி யருளிய வருட்பெருஞ் ஜோதி

எத்தகை விழைந்தன வென்மன மிங்கெனக்
கத்தகை யருளிய வருட்பெருஞ் ஜோதி

இங்குறத் திரிந்துள மிளையா வகையெனக்
கங்கையிற் கனியா மருட்பெருஞ் ஜோதி

பாருயப் புரிகெனப் பணித்தெனக் கருளியென்
ஆருயிர்க் குள்ளொளி ரருட்பெருஞ் ஜோதி

தேவியுற் றொளிர்தரு திருவுரு வுடனென
தாவியிற் கலந்தொளி ரருட்பெருஞ் ஜோதி

எவ்வழி மெய்வழி யென்பவே தாகமம்
அவ்வழி யெனக்கரு ளருட்பெருஞ் ஜோதி

வையமும் வானமும் வாழ்த்திட வெனக்கருள்
ஐயறி வளித்த வருட்பெருஞ் ஜோதி

சாமா றனைத்துந் தவிர்த்திங் கெனக்கே
ஆமா றருளிய வருட்பெருஞ் ஜோதி

சத்திய மாஞ்சிவ சக்தியை யீந்தெனக்
கத்திறல் வளர்க்கு மருட்பெருஞ் ஜோதி

சாவா நிலையிது தந்தன முனக்கே
ஆவா வெனவரு ளருட்பெருஞ் ஜோதி

சாதியு மதமுஞ் சமயமும் பொய்யென
ஆதியி லுணர்த்திய வருட்பெருஞ் ஜோதி

மயர்ந்திடேல் சிறிது மனந்தளர்ந் தஞ்சேல்
அயர்ந்திடே லென்றரு ளருட்பெருஞ் ஜோதி

தேசுறத் திகழ்தரு திருநெறிப் பொருளியல்
ஆசறத் தெரித்த வருட்பெருஞ் ஜோதி

காட்டிய வுலகெலாங் கருணையாற் சித்தியின்
ஆட்டியல் புரியு மருட்பெருஞ் ஜோதி

எங்குல மெம்மின மென்பதொண் ணூற்றா
றங்குல மென்றரு ளருட்பெருஞ் ஜோதி

எம்மத மெம்மிறை யென்ப வுயிர்த்திரள்
அம்மத மென்றரு ளருட்பெருஞ் ஜோதி

கூறிய கருநிலை குலவிய கீழ்மேல்
ஆறிய லெனவுரை யருட்பெருஞ் ஜோதி

எண்டர முடியா திலங்கிய பற்பல
அண்டமு நிறைந்தொளி ரருட்பெருஞ் ஜோதி

சாருயிர்க் கெல்லாந் தாரக மாம்பரை
யாருயிர்க் குயிரா மருட்பெருஞ் ஜோதி

வாழிநீ டூழி வாழியென் றோங்குபே
ராழியை யளித்த வருட்பெருஞ் ஜோதி

மாய்ந்தவர் மீட்டும் வருநெறி தந்திதை
யாய்ந்திடென் றுரைத்த வருட்பெருஞ் ஜோதி

எச்சநி னக்கிலை யெல்லாம் பெறுகவென்று
அச்சந் தவிர்த்தவென் னருட்பெருஞ் ஜோதி

நீடுக நீயே நீளுல கனைத்தும்நின்
றாடுக வென்றவென் னருட்பெருஞ் ஜோதி

முத்திறல் வடிவமு முன்னியாங் கெய்துறு
மத்திற லெனக்கரு ளருட்பெருஞ் ஜோதி

மூவகைச் சித்தியின் முடிபுகள் முழுவதும்
ஆவகை யெனக்கரு ளருட்பெருஞ் ஜோதி

கருமசித் திகளின் கலைபல கோடியும்
அரசுற வெனக்கரு ளருட்பெருஞ் ஜோதி

யோகசித் திகள்வகை யுறுபல கோடியும்
ஆகவென் றெனக்கரு ளருட்பெருஞ் ஜோதி

ஞானசித் தியின்வகை நல்விரி வனைத்தும்
ஆனியின் றெனக்கரு ளருட்பெருஞ் ஜோதி

புடையுறு சித்தியின் பொருட்டே முத்தியை
அடைவதென் றருளிய வருட்பெருஞ் ஜோதி

முத்தியென் பதுநிலை முன்னுறு சாதனம்
அத்தக வென்றவென் னருட்பெருஞ் ஜோதி

சித்தியென் பதுநிலை சேர்ந்த வநுபவம்
அத்திற லென்றவென் னருட்பெருஞ் ஜோதி

ஏகசிற் சித்தியே யியலுற வனேகம்
ஆகிய தென்றவென் னருட்பெருஞ் ஜோதி

இன்பசித் தியினிய லேக மனேகம்
அன்பருக் கென்றவென் னருட்பெருஞ் ஜோதி

எட்டிரண் டென்பன வியலுமுற் படியென
அட்டநின் றருளிய வருட்பெருஞ் ஜோதி

இப்படி கண்டனை யினியுறு படியெலாம்
அப்படி யேயெனு மருட்பெருஞ் ஜோதி

படிமுடி கடந்தனை பாரிது பாரென
அடிமுடி காட்டிய வருட்பெருஞ் ஜோதி

ஜோதியுட் ஜோதியின் சொருபமே யந்த
மாதியென் றருளிய வருட்பெருஞ் ஜோதி

இந்தசிற் ஜோதியி னியலுரு வாதி
யந்தமென் றருளிய வருட்பெருஞ் ஜோதி

ஆதியு மந்தமு மறிந்தனை நீயே
ஆதியென் றருளிய வருட்பெருஞ் ஜோதி

நல்லமு தென்னொரு நாவுளங் காட்டியென்
அல்லலை நீக்கிய வருட்பெருஞ் ஜோதி

கற்பக மென்னுளங் கைதனிற் கொடுத்தே
அற்புத மியற்றெனு மருட்பெருஞ் ஜோதி

கதிர்நல மென்னிரு கண்களிற் கொடுத்தே
அதிசய மியற்றெனு மருட்பெருஞ் ஜோதி

அருளொளி யென்றனி யறிவினில் விரித்தே
அருணெறி விளக்கெனு மருட்பெருஞ் ஜோதி

பரையொளி யென்மனப் பதியினில் விரித்தே
அரசது வியற்றெனு மருட்பெருஞ் ஜோதி

வல்லப சத்திகள் வகையெலா மளித்தென
தல்லலை நீக்கிய வருட்பெருஞ் ஜோதி

ஆரிய லகம்புற மகப்புறம் புறப்புறம்
ஆரமு தெனக்கரு ளருட்பெருஞ் ஜோதி

சூரிய சந்திர ஜோதியுட் ஜோதியென்
றாரியர் புகழ்தரு மருட்பெருஞ் ஜோதி

பிறிவே தினியுனைப் பிடித்தன முனக்குநம்
மறிவே வடிவெனு மருட்பெருஞ் ஜோதி

எஞ்சே லுலகினில் யாதொன்று பற்றியும்
அஞ்சே லென்றரு ளருட்பெருஞ் ஜோதி

மாண்டுழ லாவகை வந்திளங் காலையே
ஆண்டுகொண் டருளிய வருட்பெருஞ் ஜோதி

பற்றுக ளனைத்தையும் பற்றறத் தவிர்த்தென
தற்றமு நீக்கிய வருட்பெருஞ் ஜோதி

சமயங் குலமுதற் சார்பெலாம் விடுத்த
அமயந் தோன்றிய வருட்பெருஞ் ஜோதி

வாய்தற் குரித்தெனு மறையா கமங்களால்
ஆய்தற் கரிய வருட்பெருஞ் ஜோதி

எல்லாம் வல்லசித் தெனக்களித் தெனக்குனை
யல்லா திலையெனு மருட்பெருஞ் ஜோதி

நவையிலா வுளத்தி னாடிய நாடிய
வவையெலா மளிக்கு மருட்பெருஞ் ஜோதி

கூற்றுதைத் தென்பாற் குற்றமுங் குணங்கொண்
டாற்றன்மிக் களித்த வருட்பெருஞ் ஜோதி

நன்றறி வறியா நாயினேன் றனையும்
அன்றுவந் தாண்ட வருட்பெருஞ் ஜோதி

நாயினுங் கடையே னீயினு மிழிந்தேன்
ஆயினு மருளிய வருட்பெருஞ் ஜோதி

தோத்திரம் புகலேன் பாத்திர மல்லேன்
ஆத்திர மளித்த வருட்பெருஞ் ஜோதி

எச்சோ தனைகளு மியற்றா தெனக்கே
அச்சோ வென்றரு ளருட்பெருஞ் ஜோதி

ஏறா நிலைநடு வேற்றியென் றனையீண்
டாறாறு கடத்திய வருட்பெருஞ் ஜோதி

தாபத் துயரந் தவிர்த்துல குறுமெலா
ஆபத்தும் நீக்கிய வருட்பெருஞ் ஜோதி

மருட்பகை தவிர்த்தெனை வாழ்வித் தெனக்கே
யருட்குரு வாகிய வருட்பெருஞ் ஜோதி

உருவமு மருவமு முபயமு மாகிய
அருணிலை தெரித்த வருட்பெருஞ் ஜோதி

இருளறுத் தென்னுளத் தெண்ணியாங் கருளி
அருளமு தளித்த வருட்பெருஞ் ஜோதி

தெருணிலை யிதுவெனத் தெருட்டியென் னுளத்திருந்து
அருணிலை காட்டிய வருட்பெருஞ் ஜோதி

பொருட்பத மெல்லாம் புரிந்துமே லோங்கிய
அருட்பத மளித்த வருட்பெருஞ் ஜோதி

உருள்சக டாகிய வுளஞ்சலி யாவகை
அருள்வழி நிறுத்திய வருட்பெருஞ் ஜோதி

வெருள்மன மாயை வினையிரு ணீக்கியுள்
அருள்விளக்கேற்றிய வருட்பெருஞ் ஜோதி

சுருள்விரி வுடைமனச் சுழலெலா மறுத்தே
அருளொளி நிரப்பிய வருட்பெருஞ் ஜோதி

விருப்போ டிகலுறு வெறுப்புந் தவிர்த்தே
அருட்பே றளித்த வருட்பெருஞ் ஜோதி

அருட்பேர் தரித்துல கனைத்து மலர்ந்திட
அருட்சீ ரளித்த வருட்பெருஞ் ஜோதி

உலகெலாம் பரவவென் னுள்ளத் திருந்தே
அலகிலா வொளிசெய் யருட்பெருஞ் ஜோதி

## ஐம்பூதவியல் வகை

விண்ணினுள் விண்ணாய் விண்ணடு விண்ணாய்
அண்ணி நிறைந்த வருட்பெருஞ் ஜோதி

விண்ணுறு விண்ணாய் விண்ணிலை விண்ணாய்
அண்ணி வயங்கு மருட்பெருஞ் ஜோதி

காற்றினுட் காற்றாய்க் காற்றிடைக் காற்றாய்
ஆற்றலி னோங்கு மருட்பெருஞ் ஜோதி

காற்றுறு காற்றாய்க் கானிலைக் காற்றாய்
ஆற்ற விளங்கு மருட்பெருஞ் ஜோதி

அனலினு ளனலா யனனடு வனலாய்
அனலுற விளங்கு மருட்பெருஞ் ஜோதி

அனலுறு மனலா யனனிலை யனலாய்
அனலுற வயங்கு மருட்பெருஞ் ஜோதி

புனலினுட் புனலாய்ப் புனலிடைப் புனலாய்
அனையென வயங்கு மருட்பெருஞ் ஜோதி

புனலுறு புனலாய்ப் புனனிலைப் புனலாய்
அனையெனப் பெருகு மருட்பெருஞ் ஜோதி

புவியினுட் புவியாய்ப் புவிநடுப் புவியாய்
அவைதர வயங்கு மருட்பெருஞ் ஜோதி

புவியுறு புவியாய்ப் புவிநிலைப் புவியாய்
அவைகொள விரிந்த வருட்பெருஞ் ஜோதி

விண்ணிலை சிவத்தின் வியனிலை யளவி
அண்ணுற வமைத்த வருட்பெருஞ் ஜோதி

வளிநிலை சத்தியின் வளர்நிலை யளவி
அளியுற வமைத்த வருட்பெருஞ் ஜோதி

நெருப்பது நிலைநடு நிலையெலா மளவி
அருப்பிட வகுத்த வருட்பெருஞ் ஜோதி

நீர்நிலை திரைவளர் நிலைதனை யளவி
ஆர்வுற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

புவிநிலை சுத்தமாம் பொற்பதி யளவி
அவையுற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

## மண்ணியல் வகை

மண்ணினிற் றிண்மையை வகுத்ததிற் கிடக்கை
யண்ணுற வமைத்த வருட்பெருஞ் ஜோதி

மண்ணினிற் பொன்மை வகுத்ததி லைமையை
யண்ணுற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

மண்ணினி லைம்பூ வகுத்ததி லைந்திறம்
அண்ணுற வமைத்த வருட்பெருஞ் ஜோதி

மண்ணினி னாற்றம் வகுத்தது பல்வகை
அண்ணுறப் புரிந்த வருட்பெருஞ் ஜோதி

மண்ணினிற் பற்பல வகைகரு நிலையியல்
அண்ணுறப் புரிந்த வருட்பெருஞ் ஜோதி

மண்ணினி லைந்தியல் வகுத்ததிற் பல்பயன்
அண்ணுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

மண்ணிடை யடிநிலை வகுத்ததிற் பன்னிலை
யண்ணுற வமைத்த வருட்பெருஞ் ஜோதி

மண்ணிலைந் தைந்து வகையுங் கலந்துகொண்
டண்ணுறப் புரிந்த வருட்பெருஞ் ஜோதி

மண்ணியற் சக்திகள் மண்செயற் சக்திகள்
அண்ணுற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

மண்ணுருச் சத்திகள் மண்கலைச் சத்திகள்
அண்ணுற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

மண்ணொளிச் சத்திகள் மன்கருச் சத்திகள்
அண்ணுற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

மண்கணச் சத்திகள் வகைபல பலவும்
அண்கொள வமைத்த வருட்பெருஞ் ஜோதி

மண்ணிலைச் சத்தர்கள் வகைபல பலவும்
அண்ணுற வமைத்த வருட்பெருஞ் ஜோதி

மண்ணினிற்.பொருள்பல வகைவிரி வெவ்வே
நண்ணுறப் புரிந்த வருட்பெருஞ்ஜோதி

மண்கரு வுயிர்த்தொகை வகைவிரி பலவா
அண்கொள வமைத்த வருட்பெருஞ் ஜோதி

மண்ணுறு நிலைபல வகுத்ததிற் செயல்பல
அண்ணுற வமைத்த வருட்பெருஞ் ஜோதி

மண்ணிடைப் பக்குவம் வகுத்ததிற் பயன்பல
அண்ணுற வமைத்த வருட்பெருஞ் ஜோதி

மண்ணியல் பலபல வகுத்ததிற் பிறவும்
அண்ணுற வமைத்த வருட்பெருஞ் ஜோதி

## நீரியல் விரி

நீரினிற் றண்மையும் நிகழூ ரொழுக்கமும்
ஆருற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

நீரினிற் பசுமையை நிறுத்தி யதிற்பல
வாருற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

நீரிடைப் பூவியல் நிகழுறு திறவியல்
ஆர்தர வகுத்த வருட்பெருஞ் ஜோதி

நீரினிற் சுவைநிலை நிரைத்ததிற் பல்வகை
ஆருறப் புரிந்த வருட்பெருஞ் ஜோதி

நீரினிற் கருநிலை நிகழ்த்திய பற்பல
ஆருற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

நீரிடை நான்கிய னிலவுவித் ததிற்பல
ஆர்தர வகுத்த வருட்பெருஞ் ஜோதி

நீரிடை யடிநடு நிலையுற வகுத்தன
லார்தரப் புரிந்த வருட்பெருஞ் ஜோதி

நீரிடை யொளியியல் நிகழ்பல குணவியல்
ஆர்தர வகுத்த வருட்பெருஞ் ஜோதி

நீரிடைச் சத்திகள் நிகழ்வகை பலபல
ஆர்தர வகுத்த வருட்பெருஞ் ஜோதி

நீரினிற் சத்தர்க ணிறைவகை யுறைவகை
ஆர்தரப் புரிந்த வருட்பெருஞ் ஜோதி

நீரிடை யுயிர்பல நிகழுறு பொருள்பல
ஆருற வமைத்த வருட்பெருஞ் ஜோதி

நீரிடை நிலைபல நிலையுறு செயல்பல
ஆர்கொள வகுத்த வருட்பெருஞ் ஜோதி

நீருறு பக்குவ நிறைவுறு பயன்பல
ஆருற வமைத்த வருட்பெருஞ் ஜோதி

நீரியல் பலபல நிறைத்ததிற் பிறவும்
ஆர்தரப் புரிந்த வருட்பெருஞ் ஜோதி

## தீயியல் விரி

தீயினிற் சூட்டியல் சேர்தரச் செலவியல்
ஆயுற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

தீயினில் வெண்மைத் திகழியல் பலவா
வாயுற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

தீயிடைப் பூவெலாந் திகழுறு திறமெலாம்
ஆயுற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

தீயிடை யொளியே திகழுற வமைத்ததில்
ஆய்பல வகுத்த வருட்பெருஞ் ஜோதி

தீயிடை யருநிலை திருநிலை கருநிலை
ஆயுற வமைத்த வருட்பெருஞ் ஜோதி

தீயிடை மூவியல் செறிவித் ததிற்பல
ஆய்வகை யமைத்த வருட்பெருஞ் ஜோதி

தீயிடை நடுநிலை திகழ்நடு நடுநிலை
ஆயுற வமைத்த வருட்பெருஞ் ஜோதி

தீயிடைப் பெருந்திறற் சித்திகள் பலபல
ஆயுற வமைத்த வருட்பெருஞ் ஜோதி

தீயிடைச் சித்துகள் செப்புறு மனைத்தும்
ஆயுற வமைத்த வருட்பெருஞ் ஜோதி

தீயிடைக் சக்திகள் செறிதரு சத்தர்கள்
ஆய்பல வகுத்த வருட்பெருஞ் ஜோதி

தீயிடை யுயிர்பல திகழுறு பொருள்பல
ஆய்வகை யமைத்த வருட்பெருஞ் ஜோதி

தீயிடை நிலைபல திகழ்செயல் பலபயன்
ஆய்பல வகுத்த வருட்பெருஞ் ஜோதி

தீயினிற் பக்குவஞ் சேர்குண மியற்குணம்
ஆய்பல வகுத்த வருட்பெருஞ் ஜோதி

தீயிடை யுருக்கியல் சிறப்பியல் பொதுவியல்
ஆயுற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

தீயியல் பலபல செறித்ததிற் பலவும்
ஆயுறப் புரிந்த வருட்பெருஞ் ஜோதி

## காற்றியல் விரி

காற்றிடை யசையியல் கலையிய லுயிரியல்
ஆற்றலி னமைத்த வருட்பெருஞ் ஜோதி

காற்றிடைப் பூவியல் கருதுறு திறவியல்
ஆற்றலின் வகுத்த வருட்பெருஞ் ஜோதி

காற்றினி லூறியல் காட்டுறு பலபல
ஆற்றலி னமைத்த வருட்பெருஞ் ஜோதி

காற்றினிற் பெருநிலை கருநிலை யளவில
ஆற்றவும் வகுத்த வருட்பெருஞ் ஜோதி

காற்றிடை யீரியல் காட்டி யதிற்பல
ஆற்றவும் வகுத்த வருட்பெருஞ் ஜோதி

காற்றினி லிடைநடு கடைநடு வகம்புறம்
ஆற்றவும் வகுத்த வருட்பெருஞ் ஜோதி

காற்றினிற் குணம்பல கணம்பல வணம்பல
ஆற்றலி னமைத்த வருட்பெருஞ் ஜோதி

காற்றிடைச் சக்திகள் கணக்கில வுலப்பில
ஆற்றவு மமைத்த வருட்பெருஞ் ஜோதி

காற்றிடைச் சத்தர்கள் கணிதங் கடந்தன
ஆற்றவும் வகுத்த வருட்பெருஞ் ஜோதி

காற்றிடை யுயிர்பல கதிபல கலைபல
ஆற்றலி னமைத்த வருட்பெருஞ் ஜோதி

காற்றிடை நானிலைக் கருவிக ளனைத்தையும்
ஆற்றுற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

காற்றிடை யுணரியல் கருதிய லாதிய
ஆற்றுற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

காற்றிடைச் செயலெலாங் கருதிய பயனெலாம்
ஆற்றவும் வகுத்த வருட்பெருஞ் ஜோதி

காற்றினிற் பக்குவக் கதியெலாம் விளைவித்
தாற்றலின் வகுத்த வருட்பெருஞ் ஜோதி

காற்றினிற் காலங் கருதுறு வகையெலாம்
ஆற்றவும் வகுத்த வருட்பெருஞ் ஜோதி

காற்றியல் பலபல கணித்ததிற் பிறவும்
ஆற்றவும் வகுத்த வருட்பெருஞ் ஜோதி

## வெளியியல் விரி

வெளியிடைப் பகுதியின் விரிவிய லணைவியல்
அளியுற வமைத்த வருட்பெருஞ் ஜோதி

வெளியிடைப் பூவெலாம் வியப்புறு திறனெலாம்
அளியுற வமைத்த வருட்பெருஞ் ஜோதி

வெளியினி லொலிநிறை வியனிலை யனைத்தும்
அளியுற வமைத்த வருட்பெருஞ் ஜோதி

வெளியிடைக் கருநிலை விரிநிலை யருநிலை
அளிகொள வகுத்த வருட்பெருஞ் ஜோதி

வெளியிடை முடிநிலை விளங்குற வகுத்தே
அளிபெற விளக்கு மருட்பெருஞ் ஜோதி

வெளியினிற் சத்திகள் வியப்புற சத்தர்கள்
அளியுற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

வெளியிடை யொன்றே விரித்ததிற் பற்பல
அளியுற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

வெளியிடை பலவே விரித்ததிற் பற்பல
அளிதர வமைத்த வருட்பெருஞ் ஜோதி

வெளியிடை யுயிரியல் வித்தியல் சித்தியல்
அளிபெற வமைத்த வருட்பெருஞ் ஜோதி

வெளியி னனைத்தையும் விரித்ததிற் பிறவும்
அளியுற வமைத்த வருட்பெருஞ் ஜோதி

## அகப்புற விரி

புறநடுவொடு கடை புணர்ப்பித் தொருமுதல்
அறமுற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

புறந்தலை நடுவொடு புணர்ப்பித் தொருகடை
அறம்பெற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

அகப்புற நடுக்கடை யணைவாற் புறமுதல்
அகப்பட வகுத்த வருட்பெருஞ் ஜோதி

அகப்புற நடுமுத லணைவாற் புறக்கடை
அகப்பட வமைத்த வருட்பெருஞ் ஜோதி

கருதக நடுவொடு கடையணைந் தகமுதல்
அருளுற வமைத்த வருட்பெருஞ் ஜோதி

தணியக நடுவொடு தலையணைந் தகக்கடை
அணியுற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

அகநடு புறக்கடை யணைந்தகப் புறமுதல்
அகமுற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

அகநடு புறந்தலை யணைந்தகப் புறக்கடை
அகலிடை வகுத்த வருட்பெருஞ் ஜோதி

அகநடு வதனா லகப்புற நடுவை
அகமற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

அகப்புற நடுவா லணிபுற நடுவை
அகப்பட வமைத்த வருட்பெருஞ் ஜோதி

புறநடு வதனாற் புறப்புற நடுவை
அறமுற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

புகலரு வகண்ட பூரண நடுவால்
அகநடு வகுத்த வருட்பெருஞ் ஜோதி

புறத்தியல் கடைமுதற் புணர்ப்பாற் புறத்துறும்
அறக்கணம் வகுத்த வருட்பெருஞ் ஜோதி

அகப்புறக் கடைமுத லணைவா லக்கணம்
அகத்துற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

அகக்கடை முதற்புணர்ப் பதனா லகக்கணம்
அகத்திடை வகுத்த வருட்பெருஞ் ஜோதி

## ஐம்பூதக் கலப்பின் விரி

வானிடைக் காற்றும் காற்றிடை நெருப்பும்
ஆனற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

நெருப்பிடை நீரும் நீரிடைப் புவியும்
அருப்பிட வகுத்த வருட்பெருஞ் ஜோதி

நீர்மேல் நெருப்பும் நெருப்பின்மே லுயிர்ப்பும்
ஆர்வுற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

புனன்மேற் புவியும் புவிமேற் புடைப்பும்
அனன்மேல் வகுத்த வருட்பெருஞ் ஜோதி

பகுதிவான் வெளியிற் படர்ந்தமா பூத
வகல்வெளி வகுத்த வருட்பெருஞ் ஜோதி

## வெளிவகை விரி

உயிர்வெளி யிடையே வுரைக்கரும் பகுதி
அயவெளி வகுத்த வருட்பெருஞ் ஜோதி

உயிர்வெளி யதனை யுணர்கலை வெளியில்
அயலற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

கலைவெளி யதனைக் கலப்பறு சுத்த
அலர்வெளி வகுத்த வருட்பெருஞ் ஜோதி

சுத்தநல் வெளியைத் துரிசறு பரவெளி
அத்திடை வகுத்த வருட்பெருஞ் ஜோதி

பரவெளி யதனைப் பரம்பர வெளியில்
அரசுற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

பரம்பர வெளியைப் பராபர வெளியில்
அரந்தெற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

பராபர வெளியைப் பகர்பெரு வெளியில்
அராவற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

பெருவெளி யதனைப் பெருஞ்சுக வெளியில்
அருளுற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

குணமுதற் கருவிகள் கூடிய பகுதியில்
அணைவுற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

மனமுதற் கருவிகள் மன்னுயிர் வெளியிடை
அனமுற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

காலமே முதலிய கருவிகள் கலைவெளி
ஆலுற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

துரிசறு கருவிகள் சுத்தநல் வெளியிடை
அரசுற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

இவ்வெளி யெல்லா மிலங்கவண் டங்கள்
அவ்வயி னமைத்த வருட்பெருஞ் ஜோதி

## அண்டப்பகுதி விரி

ஓங்கிய வண்ட மொளிபெற முச்சுடர்
ஆங்கிடை வகுத்த வருட்பெருஞ் ஜோதி

சிருட்டித் தலைவரைச் சிருட்டியண் டங்களை
அருட்டிறல் வகுத்த வருட்பெரு ஜோதி

காவல்செய் தலைவரைக் காவலன் டங்களை
ஆவகை யமைத்த வருட்பெருஞ் ஜோதி

அழித்தல்செய் தலைவரை யவரண் டங்களை
அழுக்கற வமைத்த வருட்பெருஞ் ஜோதி

மறைத்திடு தலைவரை மற்றுமண் டங்களை
அறத்தொடு வகுத்த வருட்பெருஞ் ஜோதி

தெளிவுசெய் தலைவரைத் திகழுமண் டங்களை
அளிபெற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

விந்துவாஞ் சத்தியை விந்தினண் டங்களை
அந்திறல் வகுத்த வருட்பெருஞ் ஜோதி

ஓங்கார சத்திக ளுற்றவண் டங்களை
ஆங்காக வமைத்த வருட்பெருஞ் ஜோதி

சத்தத் தலைவரைச் சாற்றுமண் டங்களை
அத்தகை வகுத்த வருட்பெருஞ் ஜோதி

நாதமாம் பிரமமும் நாதவண் டங்களும்
ஆதரம் வகுத்த வருட்பெருஞ் ஜோதி

பகர்பரா சத்தியைப் பதியுமண் டங்களை
அகமற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

பரசிவ பதியைப் பரசிவாண் டங்களை
அரசுற வமைத்த வருட்பெருஞ் ஜோதி

எண்ணில்பல் சத்தியை யெண்ணிலண் டங்களை
அண்ணுற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

அளவில்பல் சத்தரை யளவி லண்டங்களை
அளவற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

உயிர்வகை யண்ட முலப்பில வெண்ணில
அயர்வற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

## கடல் வகை

களவில கடல்வகை கங்கில கரையில
அளவில வகுத்த வருட்பெருஞ் ஜோதி

கடலவை யனைத்துங் கரையின்றி நிலையுற
அடலன லமைத்த வருட்பெருஞ் ஜோதி

கடல்களு மலைகளு கதிகளு நதிகளும்
அடலுற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

கடலிடைப் பல்வளங் கணித்ததிற் பல்லுயிர்
அடலுற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

### மலைவளம்

மலையிடைப் பல்வளம் வகுத்ததிற் பல்லுயிர்
அலைவற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

### எண் வகை

ஒன்றினி லொன்றே யொன்றிடை யாயிரம்
அன்றற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

பத்திடை யாயிரம் பகரதிற் கோடி
அத்துற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

நூற்றிடை யிலக்க நுவலதி லனந்தம்
ஆற்றிடை வகுத்த வருட்பெருஞ் ஜோதி

கோடியி லனந்த கோடிபல் கோடி
ஆடுற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

### வித்தும் விளைவும்

வித்திய லொன்றா விளைவியல் பலவா
அத்தகை யமைத்த வருட்பெருஞ் ஜோதி

விளைவிய லனைத்தும் வித்திடை யடங்க
அளவுசெய் தமைத்த வருட்பெருஞ் ஜோதி

வித்தும் பதமும் விளையுப கரிப்பும்
அத்திற லமைத்த வருட்பெருஞ் ஜோதி

வித்திடை முளையும் முளையிடை விளைவும்
அத்தக வமைத்த வருட்பெருஞ் ஜோதி

வித்தினுள் வித்தும் வித்ததில் வித்தும்
அத்திறம் வகுத்த வருட்பெருஞ் ஜோதி

விளைவினுள் விளைவும் விளைவதில் விளைவும்
அளையுற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

முளையதின் முளையும் முளையினுண் முளையும்
அளைதர வமைத்த வருட்பெருஞ் ஜோதி

வித்திடைப் பதமும் பதத்திடை வித்தும்
அத்துற வமைத்த வருட்பெருஞ் ஜோதி

பதமதிற் பதமும் பதத்தினுட் பதமும்
அதிர்வற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

ஒற்றுமை வேற்றுமை யுரிமைக ளனைத்தும்
அற்றென வகுத்த வருட்பெருஞ் ஜோதி

பொருணிலை யுறுப்பியல் பொதுவகை முதலிய
அருளுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

உறவினி லுறவும் உறவினிற் பகையும்
அறனுற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

பகையினிற் பகையும் பகையினி லுறவும்
அகைவுற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

பாதியு முழுதும் பதிசெயு மந்தமும்
ஆதியும் வகுத்த வருட்பெருஞ் ஜோதி

## ஒற்றுமை வேற்றுமை இயல்

துணையு நிமித்தமுந் துலங்கதி னதுவும்
அணையுற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

உருவதி னுருவும் உருவினுள் ளுருவும்
அருளுற வமைத்த வருட்பெருஞ் ஜோதி

அருவினுள் ளருவும் மருவதி லருவும்
அருளிய லமைத்த வருட்பெருஞ் ஜோதி

கரணமு மிடமுங் கலைமுத லணையுமோர்
அரணிலை வகுத்த வருட்பெருஞ் ஜோதி

உருவதி லருவும் மருவதி லுருவும்
அருளுற வமைத்த வருட்பெருஞ் ஜோதி

வண்ணமு வடிவு மயங்கிய வகைபல
அண்ணுற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

சிறுமையிற் சிறுமையும் சிறுமையிற் பெருமையும்
அறிதர வகுத்த வருட்பெருஞ் ஜோதி

பெருமையிற் பெருமையும் பெருமையிற் சிறுமையும்
அருணிலை வகுத்த வருட்பெருஞ் ஜோதி

திண்மையிற் றிண்மையுந் திண்மை யினேர்மையும்
அண்மையின் வகுத்த வருட்பெருஞ் ஜோதி

மென்மையின் மென்மையும் மென்மையில் வன்மையும்
அன்மையற் றமைத்த வருட்பெருஞ் ஜோதி

அடியினுள் ளடியு மடியிடை யடியும்
அடியுற வமைத்த வருட்பெருஞ் ஜோதி

நடுவினுண் ணடுவும் நடுவதி னடுவும்
அடர்வுற வமைத்த வருட்பெருஞ் ஜோதி

முடியினுண் முடியும் முடியினின் முடியும்
அடர்தர வமைத்த வருட்பெருஞ் ஜோதி

## அகப்புறப்பூ

அகப்பூ வகவுறுப் பாக்க வதற்கவை
அகத்தே வகுத்த வருட்பெருஞ் ஜோதி

புறப்பூ புறத்திற் புனையுரு வாக்கிட
அறத்துடன் வகுத்த வருட்பெருஞ் ஜோதி

அகப்புறப் பூவகப் புறவுறுப் பியற்றிட
அகத்திடை வகுத்த வருட்பெருஞ் ஜோதி

புறப்புறப் பூவதிற் புறப்புற வுறுப்புற
அறத்திடை வகுத்த வருட்பெருஞ் ஜோதி

## நால்வகை தோற்ற விரி

பாரிடை வேர்வையிற் பையிடை முட்டையில்
ஆருயி ரமைக்கு மருட்பெருஞ் ஜோதி

ஊர்வன பறப்பன வுறுவன நடப்பன
ஆர்வுற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

அசைவில வசைவுள வாருயிர்த் திரள்பல
அசலற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

அறிவொரு வகைமுத லைவகை யறுவகை
அறிதர வகுத்த வருட்பெருஞ் ஜோதி

வெவ்வே றியலொடு வெவ்வேறு பயனுற
அவ்வா றமைத்த வருட்பெருஞ் ஜோதி

சித்திர விசித்திர சிருட்டிகள் பலபல
அத்தகை வகுத்த வருட்பெருஞ் ஜோதி

## ஆண்பெண் இயல்

பெண்ணினுள் ளாணு மாணினுட் பெண்ணும்
அண்ணுற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

பெண்ணினுண் மூன்று மாணினுள் ளிரண்டும்
அண்ணுற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

பெண்ணிடை நான்கு மாணிடை மூன்றும்
அண்ணுற வமைத்த வருட்பெருஞ் ஜோதி

பெண்ணிய லாணு மாணியற் பெண்ணும்
அண்ணுற வமைத்த வருட்பெருஞ் ஜோதி

பெண்டிறல் புறத்து மாண்டிற லகத்தும்
அண்டுற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

பெண்ணியன் மனமு மாணிய லறிவும்
அண்ணுற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

தனித்தனி வடிவினுந் தக்கவாண் பெண்ணியல்
அனைத்துற வகுத்த வருட்பெருஞ் ஜோதி

## காத்தருள் விரி

உனற்கரு முயிருள வுடலுள வுலகுள
வனைத்தையும் வகுத்த வருட்பெருஞ் ஜோதி

ஓவுறா வெழுவகை யுயிர்முத லனைத்தும்
ஆவகை வகுத்த வருட்பெருஞ் ஜோதி

பைகளின் முட்டையிற் பாரினில் வேர்வினில்
ஐபெற வமைத்த வருட்பெருஞ் ஜோதி

தாய்கருப் பையினுட் டங்கிய வுயிர்களை
ஆய்வுறக் காத்தரு ளருட்பெருஞ் ஜோதி

முட்டைவாய்ப் பயிலு முழுவுயிர்த் திரள்களை
அட்டமே காத்தரு ளருட்பெருஞ் ஜோதி

நிலம்பெறு முயிர்வகை நீள்குழு வனைத்தும்
அலம்பெறக் காத்தரு ளருட்பெருஞ் ஜோதி

வேர்வுற வுதித்த மிகுமுயிர்த் திரள்களை
ஆர்வுறக் காத்தரு ளருட்பெருஞ் ஜோதி

உடலுறு பிணியா லுயிருடல் கெடாவகை
அடலுறக் காத்தரு ளருட்பெருஞ் ஜோதி

சிசுமுதற் பருவச் செயல்களி னுயிர்களை
அசைவறக் காத்தரு ளருட்பெருஞ் ஜோதி

உயிருறு முடலையு முடலுறு முயிரையும்
அயர்வறக் காத்தரு ளருட்பெருஞ் ஜோதி

பாடுறு மவத்தைகள் பலவினு முயிர்களை
ஆடுறக் காத்தரு ளருட்பெருஞ் ஜோதி

முச்சுட ராதியா லெச்சக வுயிரையும்
அச்சறக் காத்தரு ளருட்பெருஞ் ஜோதி

வான்முகிற் சத்தியான் மழைபொழி வித்துயிர்
ஆனறக் காத்தரு ளருட்பெருஞ் ஜோதி

இன்புறு சத்தியா லெழின்மழை பொழிவித்
தன்புறக் காத்தரு ளருட்பெருஞ் ஜோதி

எண்ணியற் சத்தியா லெல்லா வுலகினும்
அண்ணுயிர் காத்தரு ளருட்பெருஞ் ஜோதி

அண்டப் புறப்புற வமுதம் பொழிந்துயிர்
அண்டுறக் காத்தரு ளருட்பெருஞ் ஜோதி

தேவரை யெல்லாந் திகழ்புற வமுதளித்
தாவகை காத்தரு ளருட்பெருஞ் ஜோதி

அகப்புற வமுதளித் தைவரா திகளை
அகப்படக் காத்தரு ளருட்பெருஞ் ஜோதி

தருமக வமுதாற் சத்திசத் தர்களை
அருளினிற் காக்கு மருட்பெருஞ் ஜோதி

காலமு நியதியுங் காட்டியெவ் வுயிரையும்
ஆலுறக் காத்தரு ளருட்பெருஞ் ஜோதி

விச்சையை யிச்சையை விளைவித் துயிர்களை
அச்சறக் காத்தரு ளருட்பெருஞ் ஜோதி

போகமுங் களிப்பும் பொருந்துவித் துயிர்களை
ஆகமுட் காக்கு மருட்பெருஞ் ஜோதி

கலையறி வளித்துக் களிப்பினி லுயிரெலாம்
அலைவறக் காத்தரு ளருட்பெருஞ் ஜோதி

விடய நிகழ்ச்சியான் மிகுமுயி ரனைத்தையும்
அடைவுறக் காத்தரு ளருட்பெருஞ் ஜோதி

துன்பளித் தாங்கே சுகமளித் துயிர்களை
அன்புறக் காத்தரு ளருட்பெருஞ் ஜோதி

கரணேந் தியத்தாற் களிப்புற வுயிர்களை
அரணேர்ந் தளித்தரு ளருட்பெருஞ் ஜோதி

எத்தகை யெவ்வுயி ரெண்ணின வவ்வுயிர்க்
கத்தகை யளித்தரு ளருட்பெருஞ் ஜோதி

எப்படி யெவ்வுயி ரெண்ணின வவ்வுயிர்க்
கப்படி யளித்தரு ளருட்பெருஞ் ஜோதி

ஏங்கா துயிர்த்திர ளெங்கெங் கிருந்தன
ஆங்காங் களித்தரு ளருட்பெருஞ் ஜோதி

சொல்லுறு மசுத்தத் தொல்லுயிர்க் கவ்வகை
அல்லலிற் காத்தரு ளருட்பெருஞ் ஜோதி
சுத்தமு மசுத்தமுந் தோயுயிர்க் கிருமையின்
அத்தகை காத்தரு ளருட்பெருஞ் ஜோதி

வாய்ந்திடுஞ் சுத்த வகையுயிர்க் கொருமையின்
ஆய்ந்துறக் காத்தரு ளருட்பெருஞ் ஜோதி

எவையெலா மெவையெலா மீண்டின வீண்டின
அவையெலாந் காத்தரு ளருட்பெருஞ் ஜோதி

## அடக்கியருள் விரி

அண்டத் துரிசையு மகிலத் துரிசையும்
அண்டற வடக்கு மருட்பெருஞ் ஜோதி

பிண்டத் துரிசையும் பேருயிர்த் துரிசையும்
அண்டற வடக்கு மருட்பெருஞ் ஜோதி

உயிருறு மாயையி னுறுவிரி வனைத்தும்
அயிரற வடக்கு மருட்பெருஞ் ஜோதி

உயிருறு மிருவினை யுறுவிரி வனைத்தும்
அயர்வற வடக்கு மருட்பெருஞ் ஜோதி

காமப் புடைப்புயிர் கண்டொட ராவகை
ஆமற வடக்கு மருட்பெருஞ் ஜோதி

பொங்குறு வெகுளிப் புடைப்புக ளெல்லாம்
அங்கற வடக்கு மருட்பெருஞ் ஜோதி

மதம்புரை மோகமு மற்றவு மாங்காங்
கதம்பெற வடக்கு மருட்பெருஞ் ஜோதி

வடுவுறு மசுத்த வாதனை யனைத்தையும்
அடர்பற வடக்கு மருட்பெருஞ் ஜோதி

சுத்தமு மசுத்தமுந் தோய்ந்தவா தனைகளை
அத்தகை யடக்கு மருட்பெருஞ் ஜோதி

நால்வயிற் றுரிசும் நண்ணுயி ராதியில்
ஆலற வடக்கு மருட்பெருஞ் ஜோதி

நால்வயிற் படைப்பு நால்வயிற் காப்பும்
ஆலற வடக்கு மருட்பெருஞ் ஜோதி

மூவிடத் திருமையின் முன்னிய தொழிற்கரில்
ஆவிடத் தடக்கு மருட்பெருஞ் ஜோதி

மூவிட மும்மையின் முன்னிய தொழிற்கரில்
ஆவிட மடக்கு மருட்பெருஞ் ஜோதி

தத்துவச் சேட்டையுந் தத்துவத் துரிசும்
அத்தகை யடக்கு மருட்பெருஞ் ஜோதி

சுத்தமா நிலையிற் சூழுறு விரிவை
அத்தகை யடக்கு மருட்பெருஞ் ஜோதி

## திரை விளக்கம்

கரைவின்மா மாயைக் கரும்பெருந் திரையால்
அரைசது மறைக்கு மருட்பெருஞ் ஜோதி

பேருறு நீலப் பெருந்திரை யதனால்
ஆருயிர் மறைக்கு மருட்பெருஞ் ஜோதி

பச்சைத் திரையாற் பரவெளி யதனை
அச்சுற மறைக்கு மருட்பெருஞ் ஜோதி

செம்மைத் திரையாற் சித்துறு வெளியை
அம்மையின் மறைக்கு மருட்பெருஞ் ஜோதி

பொன்மைத் திரையாற் பொருளுறு வெளியை
அன்மையின் மறைக்கு மருட்பெருஞ் ஜோதி

வெண்மைத் திரையான் மெய்ப்பதி வெளியை
அண்மையின் மறைக்கு மருட்பெருஞ் ஜோதி

கலப்புத் திரையாற் கருதனு பவங்களை
அலப்புற மறைக்கு மருட்பெருஞ் ஜோதி

விடய நிலைகளை வெவ்வேறு திரைகளால்
அடர்புற மறைக்கு மருட்பெருஞ் ஜோதி

தத்துவ நிலைகளைத் தனித்தனித் திரையால்
அத்திற மறைக்கு மருட்பெருஞ் ஜோதி

திரைமறைப் பெல்லாந் தீர்த்தாங் காங்கே
அரசுறக் காட்டு மருட்பெருஞ் ஜோதி

தோற்றமா மாயைத் தொடர்பறுத் தருளி
ஊற்றலைக் காட்டு மருட்பெருஞ் ஜோதி

சுத்தமா மாயைத் தொடர்பறுத் தருளை
அத்தகை காட்டு மருட்பெருஞ் ஜோதி

எனைத்தா ணவமுத லெல்லாந் தவிர்த்தே
அனுக்கிர கம்புரி யருட்பெருஞ் ஜோதி

விடய மறைப்பெலாம் விடுவித் துயிர்களை
அடைவுறத் தெருட்டு மருட்பெருஞ் ஜோதி

சொருப மறைப்பெலாந் தொலைப்பித் துயிர்களை
அருளினிற் றெருட்டு மருட்பெருஞ் ஜோதி

மறைப்பின் மறந்தன வருவித் தாங்கே
அறத்தொடு தெருட்டு மருட்பெருஞ் ஜோதி

எவ்வகை யுயிர்களு மின்புற வாங்கே
அவ்வகை தெருட்டு மருட்பெருஞ் ஜோதி

கடவுளர் மறைப்பைக் கடிந்தவர்க் கின்பம்
அடையுறத் தெருட்டு மருட்பெருஞ் ஜோதி

சத்திகண் மறைப்பைத் தவிர்த்தவர்க் கின்பம்
அத்துறத் தெருட்டு மருட்பெருஞ் ஜோதி

சத்தர்கண் மறைப்பைத் தவிர்த்தவர்க்கின்பம்
அத்தகை தெருட்டும் அருட்பெருஞ் ஜோதி

படைக்குந் தலவர்கள் பற்பல கோடியை
அடைப்புறப் படைக்கும் அருட்பெருஞ்ஜோதி

காக்கும் தலைவர்கள் கணக்கில்பல் கோடியை
ஆக்குறக் காக்கு மருட்பெருஞ் ஜோதி

அடக்குந் தலைவர்க ளளவிலர் தம்மையும்
அடர்ப்பற வடக்கு மருட்பெருஞ் ஜோதி

மறைக்குந் தலைவர்கள் வகைபல கோடியை
அறத்தொடு மறைக்கு மருட்பெருஞ் ஜோதி

தெருட்டுந் தலைவர்கள் சேர்பல கோடியை
அருட்டிறந் தெருட்டு மருட்பெருஞ் ஜோதி

ஐந்தொழி லாதிசெய் யைவரா திகளை
ஐந்தொழி லாதிசெய்யருட்பெருஞ் ஜோதி

இறந்தவ ரெல்லா மெழுந்திட வுலகில்
அறந்தலை யளித்த வருட்பெருஞ் ஜோதி

செத்தவ ரெல்லாஞ் சிரித்தாங் கெழுதிறல்
அத்தகை காட்டிய வருட்பெருஞ் ஜோதி

இறந்தவ ரெழுகவென் றெண்ணியாங் கெழுப்பிட
அறந்துணை யெனக்கரு ளருட்பெருஞ் ஜோதி

செத்தவ ரெழுகெனச் செப்பியாங் கெழுப்பிட
அத்திற் லெனக்கரு ளருட்பெருஞ் ஜோதி

சித்தெலாம் வல்ல திறலளித் தெனக்கே
அத்தனென் றோங்கு மருட்பெருஞ் ஜோதி

ஒன்றதி ரண்டது வொன்றினி ரண்டது
ஒன்றினு ளொன்றது வொன்றெனு மொன்றே

ஒன்றல ரண்டல வொன்றினி ரண்டல
ஒன்றினு ளொன்றல வொன்றெனு மொன்றே

ஒன்றினு லொன்றுள வொன்றினி லொன்றில
ஒன்றுற வொன்றிய வொன்றெனு மொன்றே

## மெய்ப்பொருள்

களங்கநீத் துலகங் களிப்புற மெய்ந்நெறி
விளங்கவென் னுள்ளே விளங்குமெய்ப் பொருளே

மூவிரு நிலையின் முடிநடு முடிமேல்
ஓவற விளங்கு மொருமைமெய்ப் பொருளே

எழுநிலை மிசையே யின்புரு வாகி
வழுநிலை நீக்கி வயங்குமெய்ப் பொருளே

நவநிலை மிசையே நடுவுறு நடுவே
சிவமய மாகித் திகழ்ந்தமெய்ப் பொருளே

ஏகா தசநிலை யாததி னடுவே
ஏகா தனமிசை யிருந்தமெய்ப் பொருளே

திரையோ தசநிலை சிவவெளி நடுவே
வரையோ தருசுக வாழ்க்கைமெய்ப் பொருளே

ஈரெண் ணிலையென வியம்புமே னிலையிற்
பூரண சுகமாய்ப் பொருந்துமெய்ப் பொருளே

எல்லா நிலைகளு மிசைந்தாங் காங்கே
எல்லா மாகி யிலங்குமெய்ப் பொருளே

மனாதிகள் பொருந்தா வானடு வானாய்
அனாதியுண் மையதா யமர்ந்தமெய்ப் பொருளே

தானொரு தானாய்த் தானே தானாய்
ஊனுயிர் விளக்கு மொருதனிப் பொருளே

அதுவினு ளதுவா யதுவே யதுவாய்ப்
பொதுவினுள் நடிக்கும் பூரணப் பொருளே

இயல்பினு ளியல்பா யியல்பே யியல்பா
உயலுற விளங்கு மொருதனிப் பொருளே

அருவினு ளருவா யருவரு வருவாய்
உருவினுள் விளங்கு மொருபரம் பொருளே

அலகிலாச் சித்தா யதுநிலை யதுவாய்
உலகெலாம் விளங்கு மொருதனிப் பொருளே

பொருளினுட் பொருளாய்ப் பொருளது பொருளா
யொருமையின் விளங்கு மொருதனிப் பொருளே

ஆடுறு சித்திக ளறுபத்து நான்கெழு
கோடியும் விளங்கக் குலவுமெய்ப் பொருளே

கூட்டுறு சித்திகள் கோடிபல் கோடியும்
ஆட்டுற விளங்கு மரும்பெரும் பொருளே

அறிவுறு சித்திக ளனந்தகோ டிகளும்
பிறிவற விளக்கும் பெருந்தனிப் பொருளே

வீடுக ளெல்லாம் விதிநெறி விளங்க
ஆடல்செய் தருளு மரும்பெரும் பொருளே

பற்றுக ளெல்லாம் பதிநெறி விளங்க
உற்றரு ளாடல்செய் யொருதனிப் பொருளே

## பராபர இயல்

பரத்தினிற் பரமே பரத்தின்மேற் பரமே
பரத்தினுட் பரமே பரம்பரம் பரமே
பரம்பெறும் பரமே பரந்தரும் பரமே
பரம்பதம் பரமே பரஞ் சிதம்பரமே

பரம்புகழ் பரமே பரம்பகர் பரமே
பரஞ்சுக பரமே பரஞ்சிவ பரமே

பரங்கொள்சிற் பரமே பரஞ்செய்தற் பரமே
தரங்கொள்பொற் பரமே தனிப்பெரும் பரமே

வரம்பரா பரமே வணம்பரா பரமே
பரம்பரா பரமே பதம்பரா பரமே

## பதவியல்

சத்திய பதமே சத்துவ பதமே
நித்திய பதமே நிர்க்குண பதமே

தத்துவ பதமே தற்பத பதமே
சித்துறு பதமே சிற்சுக பதமே

தம்பரம் பதமே தனிச்சுகம் பதமே
அம்பரம் பதமே யருட்பரம் பதமே

தந்திர பதமே சந்திர பதமே
மந்திர பதமே மந்தண பதமே

நவந்தரு பதமே நடந்தரு பதமே
சிவந்தரு பதமே சிவசிவ பதமே

## சிவரகசியம்

பிரமமெய்க் கதியே பிரமமெய்ப் பதியே
பிரமநிற் குணமே பிரமசிற் குணமே

பிரமமே பிரமப் பெருநிலை மிசையுறும்
பரமமே பரம பதந்தருஞ் சிவமே

அவனோ டவளா யதுவா யலவாய்
நவமா நிலைமிசை நண்ணிய சிவமே

எம்பொரு ளாகி யெமக்கருள் புரியுஞ்
செம்பொரு ளாகிய சிவமே சிவமே

ஒருநிலை யிதுவே வுயர்நிலை யெனுமொரு
திருநிலை மேவிய சிவமே சிவமே

மெய்வைத் தழியா வெறுவெளி நடுவுறு
தெய்வப் பதியாஞ் சிவமே சிவமே

புரைதவிர்த் தெனக்கே பொன்முடி சூட்டிச்
சிரமுற நாட்டிய சிவமே சிவமே

கல்வியுஞ் சாகாக் கல்வியு மழியாச்
செல்வமு மளித்த சிவமே சிவமே

அருளமு தெனக்கே யளித்தரு ணெறிவாய்த்
தெருளுற வளர்க்குஞ் சிவமே சிவமே

சத்தெலா மாகியுந் தானொரு தானாஞ்
சித்தெலாம் வல்லதோர் திருவருட் சிவமே

எங்கே கருணை யியற்கையி னுள்ளன
அங்கே விளங்கிய வருட்பெருஞ் சிவமே

யாரே யென்னினு மிரங்குகின் றார்க்குச்
சீரே யளிக்குஞ் சிதம்பர சிவமே

பொய்ந்நெறி யனைத்தினும் புகுத்தா தெனையருட்
செந்நெறி செலுத்திய சிற்சபைச் சிவமே

கொல்லா நெறியே குருவரு ணெறியெனப்
பல்கா லெனக்குப் பகர்ந்தமெய்ச் சிவமே

உயிரெலாம் பொதுவி னுளம்பட நோக்குக
செயிரெலாம் விடுகெனச் செப்பிய சிவமே

பயிர்ப்புறு கரணப் பரிசுகள் பற்பல
உயிர்த்திர ளொன்றென வுரைத்தமெய்ச் சிவமே

உயிருள்யா மெம்மு ளுயிரிவை யுணர்ந்தே
உயிர்நலம் பரவுகென்றுரைத்தமெய்ச் சிவமே

இயலரு ளொளியோ ரேகதே சத்தினாம்
உயிரொளி காண்கவென் றுரைத்தமெய்ச் சிவமே

அருளலா தணுவு மசைந்திடா ததனால்
அருணலம் பரவுகென் றறைந்தமெய்ச்சிவமே

அருளுறி னெல்லா மாகுமீ துண்மை
அருளுற முயல்கவென் றருளிய சிவமே

அருணெறி யொன்றே தெருணெறி மற்றெலாம்
இருணெறி யெனவெனக் கியம்பிய சிவமே

அருள்பெறிற் றுரும்புமோ ரைந்தொழில் புரியுந்
தெருளிது வெனவே செப்பிய சிவமே

அறிளறி வொன்றே யறிவுமற் றெல்லாம்
மருளறி வென்றே வகுத்த மெய்ச் சிவமே

அருட்சுக மொன்றே யரும்பெறற் பெருஞ்சுகம்
மருட்சுகம் பிறவென வகுத்தமெய்ச் சிவமே

அருட்பே றதுவே யரும்பெறற் பெரும்பே
றிருட்பே றருக்குமென் றியம்பிய சிவமே

அருட்டனி வல்லப மதுவே யெலாஞ்செய்
பொருட்டனிச் சித்தெனப் புகன்றமெய்ச் சிவமே

அருளறி யார்தமை யறியார் எம்மையும்
பொருளறி யாரெனப் புகன்றமெய்ச் சிவமே

அருணிலை யொன்றே யனைத்தும் பெறுநிலை
பொருணிலை காண்கெனப் புகன்றமெய்ச் சிவமே

அருள்வடி வதுவே யழியாத் தனிவடி
வருள்பெற முயலுகென் றருளிய சிவமே

அருளே நம்மிய லருளே நம்முரு
அருளே நம்வடி வாமென்ற சிவமே

அருளே நம்மடி யருளே நம்முடி
அருளே நம்நடு வாமென்ற சிவமே

அருளே நம்மறி வருளே நம்மனம்
அருளே நங்குண மாமென்ற சிவமே

அருளே நம்பதி யருளே நம்பதம்
அருளே நம்மிட மாமென்ற சிவமே

அருளே நந்துணை யருளே நந்தொழில்
அருளே நம்விருப் பாமென்ற சிவமே

அருளே நம்பொரு ளருளே நம்மொளி
அருளே நாமறி வாயென்ற சிவமே

அருளே நங்குல மருளே நம்மினம்
அருளே நாமறி வாயென்ற சிவமே

அருளே நஞ்சுக மருளே நம்பெயர்
அருளே நாமறி வாயென்ற சிவமே

அருளொளி யடைந்தனை யருளமு துண்டனை
அருண்மதி வாழ்கவென் றருளிய சிவமே

அருணிலை பெற்றனை யருள்வடி வுற்றனை
அருளர சியற்றுகென் றருளிய சிவமே

## சிவபதி

உள்ளகத் தமர்ந்தென துயிரிற் கலந்தருள்
வள்ளல்சிற் றம்பலம் வளர்சிவ பதியே

நிகரிலா வின்ப நிலைநடு வைத்தெனைத்
தகவொடு காக்குந் தனிச்சிவ பதியே

சுத்தசன் மார்க்க சுகநிலை தனிலெனைச்
சத்திய னாக்கிய தனிச்சிவ பதியே

ஐவருங் காண்டற் கரும்பெரும் பொருளென்
கைவரப் புரிந்த கதியே பதியே

துன்பந் தொலைத்தருட் ஜோதியால் நிறைந்த
இன்ப மெனக்கரு ளெழிற்சிவ பதியே

சித்தமும் வாக்குஞ் செல்லாப் பெருநிலை
ஒத்துற வேற்றிய வொருசிவ பதியே

கையற வனைத்துங் கடிந்தெனைத் தேற்றி
வையமேல் வைத்த மாசிவ பதியே

இன்புறச் சிறியே னெண்ணுதோ றெண்ணுதோ
றன்பொடென் கண்ணுறு மருட்சிவ பதியே

பிழையெலாம் பொறுத்தெனுட் பிறங்கிய கருணை
மழையெலாம் பொழிந்து வளர்சிவ பதியே

உளத்தினுங் கண்ணினு முயிரினு மெனது
குளத்தினு நிரம்பிய குருசிவ பதியே

## அருட்குரு

பரமுட னபரம் பகர்நிலை யிவையெனத்
திரமுற வருளிய திருவருட் குருவே

மதிநிலை யிரவியின் வளர்நிலை யனலின்
திதிநிலை யனைத்துந் தெரித்தசற் குருவே

கணநிலை யவற்றின் கருநிலை யனைத்துங்
குணமுறத் தெரித்துட் குலவுசற் குருவே

பதிநிலை பசுநிலை பாச நிலையெலாம்
மதியுறத் தெரித்துள் வயங்குசற் குருவே

பிரம ரகசியம் பேசியென் னுளத்தே
தரமுற விளங்குஞ் சாந்தசற் குருவே
பரம ரகசியம் பகர்ந்தென துளத்தே
வரமுற வளர்த்து வயங்குசற் குருவே

சிவரக சியமெலாந் தெரிவித் தெனக்கே
நவநிலை காட்டிய ஞானசற் குருவே

சத்திய லனைத்துஞ் சித்தியன் முழுதும்
அத்தகை தெரித்த வருட்சிவ குருவே

அறிபவை யெல்லா மறிவித் தென்னுள்ளே
பிறிவற விளங்கும் பெரியசற் குருவே

கேட்பவை மெல்லாங் கேட்பித் தெனுள்ளே
வேட்கையின் விளங்கும் விமலசற் குருவே

காண்பவை யெல்லாங் காட்டுவித் தெனக்கே
மாண்பத மளித்து வயங்குசற் குருவே

செய்பவை யெல்லாஞ் செய்வித் தெனக்கே
உய்பவை யளித்தெனு ளோங்குசற் குருவே

உண்பவை யெல்லா முண்ணுவித் தென்னுள்
பண்பினில் விளங்கும் பரமசற் குருவே

சாகாக் கல்வியின் றரமெலாங் கற்பித்
தேகாக் கரப்பொரு ளீந்தசற் குருவே

சத்திய மாஞ்சிவ சித்திக ளனைத்தையும்
மெய்த்தகை யளித்தெனுள் விளங்குசற் குருவே

எல்லா நிலைகளு மேற்றிச் சித்தெலாம்
வல்லா னெனவெனை வைத்தசற் குருவே

## உயிர்த்தாய்

சீருற வருளாந் தேசுற வழியாப்
பேருற வென்னைப் பெற்றநற் றாயே

பொருந்திய வருட்பெரும் போகமே யுறுகெனப்
பெருந்தய வாலெனைப் பெற்றநற் றாயே

ஆன்றசன் மார்க்க மணிபெற வெனைத்தான்
ஈன்றமு தளித்த வினியநற் றாயே

பசித்திடு தோறுமென் பாலணைந் தருளால்
வசித்தமு தருள்புரி வாய்மைநற் றாயே

தளர்ந்ததோ றடியேன் சார்பணைந் தென்னை
உளந்தெளி வித்த வொருமைநற் றாயே

அருளமு தேமுத லைவகை யமுதமும்
தெருளுற வெனக்கருள் செல்வநற் றாயே

இயலமு தேமுத லெழுவகை யமுதமும்
உயலுற வெனக்கரு ளுரியநற் றாயே

நண்புறு மெண்வகை நவவகை யமுதமும்
பண்புற வெனக்கருள் பண்புடைத் தாயே

மற்றுள வமுத வகையெலா மெனக்கே
உற்றுண வளித்தரு ளோங்குநற் றாயே

கலக்கமு மச்சமுங் கடிந்தென துளத்தே
அலக்கணுந் தவிர்த்தரு ளன்புடைத் தாயே

துய்ப்பினி லனைத்துஞ் சுகம்பெற வளித்தெனக்
கெய்ப்பெலாந் தவிர்த்த வின்புடைத் தாயே

சித்திக ளெல்லாந் தெளிந்திட வெனக்கே
சத்தியை யளித்த தயவுடைத் தாயே

சத்திநி பாதந் தனையளித் தெனைமேல்
வைத்தமு தளித்த மரபுடைத் தாயே

சத்திசத் தர்களெலாஞ் சார்ந்தென தேவல்செய்
சித்தியை யளித்த தெய்வநற் றாயே

தன்னிக ரில்லாத் தலைவனைக் காட்டியே
என்னைமே லேற்றிய வினியநற் றாயே

வெளிப்பட விரும்பிய விளைவெலா மெனக்கே
யளித்தளித் தின்புசெய் யன்புடைத் தாயே

எண்ணகத் தொடுபுறத் தென்னையெஞ் ஞான்றுங்
கண்ணெனக் காக்குங் கருணைநற் றாயே
இன்னரு ளமுதளித் திறவாத் திறல்புரிந்
தென்னை வளர்த்திடு மின்புடைத் தாயே

என்னுட லென்னுயி ரென்னறி வெல்லாம்
தன்னவென் றாக்கிய தயவுடைத் தாயே

தெரியா வகையாற் சிறியேன் றளர்ந்திடத்
தரியா ௨ ணைத்த தயவுடைத் தாயே

சினமுத பனைத்தையுந் தீர்த்தெனை நனவினுங்
கனவினும் பிரியாக் கருணைநற் றாயே

தூக்கமுஞ் சோம்புமென் றுன்பமு மச்சமும்
ஏக்கமு நீக்கிய வென்றனித் தாயே

## உயிர்த் தந்தை

துன்பெலாந் தவிர்த்துளே யன்பெலாம் நிரம்ப
இன்பெலா மளித்த வென்றனித் தந்தையே

எல்லா நன்மையு மென்றெனக் களித்த
எல்லாம் வல்லசித் தென்றனித் தந்தையே

நாயிற் கடையே னலம்பெறக் காட்டிய
தாயிற் பெரிதுந் தயவுடைத் தந்தையே

அறிவிலாப் பருவத் தறிவெனக் களித்தே
பிறிவிலா தமர்ந்த பேரருட் டந்தையே

புன்னிக ரில்லேன் பொருட்டிவ ணடைந்த
தன்னிக ரில்லாத் தனிப்பெருந் தந்தையே

அகத்தினும் புறத்தினு மமர்ந்தருட் ஜோதி
சகத்தினி லெனக்கே தந்தமெய்த் தந்தையே

இணையிலாக் களிப்புற் றிருந்திட வெனக்கே
துணையடி சென்னியிற் சூட்டிய தந்தையே

ஆதியீ றறியா வருளர சாட்சியிற்
ஜோதிமா மகுடஞ் சூட்டிய தந்தையே

எட்டிரண் டறிவித் தெனைத்தனி யேற்றிப்
பட்டிமண் டபத்திற் பதித்தமெய்த் தந்தையே

தங்கோ லளவது தந்தருட் ஜோதிச்
செங்கோல் செலுத்தெனச் செப்பிய தந்தையே

தன்பொரு ளனைத்தையுந் தன்னர சாட்சியில்
என்பொரு ளாக்கிய என்றனித் தந்தையே

தன்வடி வனைத்தையுந் தன்னர சாட்சியில்
என்வடி வாக்கிய என்றனித் தந்தையே

தன்சித் தனைத்தையுந் தன்சமு கத்தினில்
என்சித் தாக்கிய என்றனித் தந்தையே

தன்வச மாகிய தத்துவ மனைத்தையும்
என்வச மாக்கிய வென்னுயிர்த் தந்தையே

தன்கையிற் பிடித்த தனியருட் ஜோதியை
என்கையிற் கொடுத்த என்றனித் தந்தையே

தன்னையுந் தன்னருட் சத்தியின் வடிவையும்
என்னையு மொன்றென வியற்றிய தந்தையே

தன்னிய லென்னியல் தன்செய லென்செயல்
என்ன வியற்றிய வென்றனித் தந்தையே

தன்னுரு வென்னுரு தன்னுரை யென்னுரை
என்ன வியற்றிய வென்றனித் தந்தையே

சதுரப் பேரருட் டனிப்பெருந் தலைவனென்
றெதிரற் றோங்கிய வென்னுடைத் தந்தையே
மனவாக் கறியா வரைப்பினி லெனக்கே
இனவாக் கருளிய வென்னுயிர்த் தந்தையே

உணர்ந்துணர்ந் துணரினு முணராப் பெருநிலை
யணைந்திட வெனக்கே யருளிய தந்தையே

துரியவாழ் வுடனே சுகபூ ரணமெனும்
பெரியவாழ் வளித்த பெருந்தனித் தந்தையே

ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த
பேறளித் தாண்ட பெருந்தகைத் தந்தையே

எவ்வகைத் திறத்தினு மெய்துதற் கரிதாம்
அவ்வகை நிலையெனக் களித்தநற் றந்தையே

இனிப்பிற வாநெறி யெனக்களித் தருளிய
தனிப்பெருந் தலைமைத் தந்தையே தந்தையே

## உயிர்த் துணை

பற்றயர்ந் தஞ்சிய பரிவுகண் டணைந்தெனைச்
சற்றுமஞ் சேலெனத் தாங்கிய துணையே

தளர்ந்தவத் தருணமென் றளர்வெலாந் தவிர்த்துட்
கிளர்ந்திட வெனக்குக் கிடைத்தமெய்த் துணையே

துறையிது வழியிது துணிவிது நீசெயும்
முறையிது வெனவே மொழிந்தமெய்த் துணையே

எங்குறு தீமையு மெனைத்தொட ராவகை
கங்குலும் பகலுமெய்க் காவல்செய் துணையே

வேண்டிய வேண்டிய விருப்பெலா மெனக்கே
யீண்டிருந் தருள்புரி யென்னுயிர்த் துணையே

இகத்தினும் பரத்தினு மெனக்கிடர் சாரா
தகத்தினும் புறத்தினு மமர்ந்தமெய்த் துணையே

## உயிர் நட்பு

அயர்வற வெனக்கே யருட்டுணை யாகியென்
னுயிரினுஞ் சிறந்த வொருமையென் னட்பே

அன்பினிற் கலந்தென தறிவினிற் பயின்றே
இன்பினி லளைந்தவென் னின்னுயிர் நட்பே

நான்புரி வன்வெலாந் தான்புரிந் தெனக்கே
வான்பத மளிக்க வாய்த்தநன் னட்பே

உள்ளமு முணர்ச்சியு முயிருங் கலந்துகொண்
டெள்ளுறு நெய்யிலென் னுள்ளுறு நட்பே

செற்றமுந் தீமையுந் தீர்த்துநான் செய்த
குற்றமுங் குணமாக் கொண்டவென் னட்பே

குணங்குறி முதலிய குறித்திடா தெனையே
அணங்கறக் கலந்த அன்புடை நட்பே

பிணக்கும் பேதமும் பேயுல கோர்புகல்
கணக்குந் தீர்த்தெனைக் கலந்தநன் னட்பே

சவலைநெஞ் சகத்தின் றளர்ச்சியு மச்சமும்
கவலையுந் தவிர்த்தெனைக் கலந்தநன் னட்பே

## உயிர் உறவு

களைப்பறிந் தெடுத்துக் கலக்கந் தவிர்த்தெனக்
கிளைப்பறிந் துதவிய வென்னுயி ருறவே

தன்னைத் தழுவுறு தரஞ்சிறி தறியா
வென்னைத் தழுவிய வென்னுயி ருறவே

மனக்குறை நீக்கிநல் வாழ்வளித் தென்றும்
எனக்குற வாகிய என்னுயி ருறவே

துன்னு மனாதியே சூழ்ந்தெனைப் பிரியா
தென்னுற வாகிய வென்னுயி ருறவே

## இயற்கை உண்மை

என்றுமோர் நிலையாய் என்றுமோ ரியலாய்
என்றுமுள் ளதுவா மென்றனிச் சத்தே

அனைத்துல கவைகளு மாங்காங் குணரினும்
இனைத்தென வறியா வென்றனிச் சத்தே

பொதுமறை முடிகளும் புகலவை முடிகளும்
இதுவெனற் கரிதா மென்றனிச் சத்தே

ஆகம முடிகளு மவைபுகல் முடிகளும்
ஏகுதற் கரிதா மென்றனிச் சத்தே

சத்தியஞ் சத்தியஞ் சத்திய மெனவே
இத்தகை வழுத்து மென்றனிச் சத்தே

துரியமுங் கடந்ததோர் பெரியவான் பொருளென
உரைசெய் வேதங்க ளுன்னுமெய்ச் சத்தே

அன்றத னப்பா லதன்பரத் ததுதான்
என்றிட நிறைந்த வென்றனிச் சத்தே

## இயற்கை விளக்கம்

என்றுமுள் ளதுவாய் எங்குமோர் நிறைவாய்
என்றும் விளங்கிடு மென்றனிச் சித்தே

சத்திகள் பலவாய்ச் சத்தர்கள் பலவாய்
இத்தகை விளங்கு மென்றனிச் சித்தே

தத்துவம் பலவாய்த் தத்துவி பலவாய்
இத்தகை விளங்கு மென்றனிச் சித்தே

படிநிலை பலவாய்ப் பதநிலை பலவாய்
இடிவற விளங்கிடு மென்றனிச் சித்தே

மூர்த்தர்கள் பலவாய் மூர்த்திகள் பலவாய்
ஏற்பட விளக்கிடு மென்றனிச் சித்தே

உயிர்வகை பலவா யுடல்வகை பலவாய்
இயலுற விளக்கிடு மென்றனிச் சித்தே

அறிவவை பலவா யறிவன பலவாய்
எறிவற விளக்கிடு மென்றனிச் சித்தே

நினைவவை பலவாய் நினைவன பலவாய்
இனைவற விளக்கிடு மென்றனிச் சித்தே

காட்சிகள் பலவாய்க் காண்பன பலவாய்
ஏட்சியின் விளக்கிடு மென்றனிச் சித்தே

செய்வினை பலவாய்ச் செய்வன பலவாய்
எய்வற விளக்கிடு மென்றனிச் சித்தே

அண்ட சராசர மனைத்தையும் பிறவையும்
எண்டற விளக்கு மென்றனிச் சித்தே

எல்லாம் வல்லசித் தெனமறை புகன்றிட
எல்லாம் விளக்கிடு மென்றனிச் சித்தே

## இயற்கை இன்பம்

ஒன்றதி லொன்றென் றுரைக்கவும் படாதாய்
என்றுமோர் படித்தா மென்றனி யின்பே

இதுவது வென்னா வியலுடை யதுவாய்
எதிரற நிறைந்த வென்றனி யின்பே

ஆக்குறு மவத்தைக ளனைத்தையுங் கடந்துமேல்
ஏக்கற நிறைந்த வென்றனி யின்பே

அறிவுக் கறிவினி லதுவது வதுவாய்
எறிவற் றோங்கிய வென்றனி யின்பே
விடய மெவற்றினு மேன்மேல் விளைந்தவை
யிடையிடை யோங்கிய வென்றனி யின்பே

இம்மையு மறுமையு மியம்பிடு மொருமையும்
எம்மையு நிரம்பிடு மென்றனி யின்பே

முத்தர்கள் சித்தர்கள் சத்திகள் சத்தர்கள்
எத்திறத் தவர்க்குமா மென்றனி யின்பே

எல்லா நிலைகளி னெல்லா வுயிருறும்
எல்லா வின்புமா மென்றனி யின்பே

## அருளமுதம்

கரும்புறு சாறுங் கனிந்தமுக் கனியின்
விரும்புறு மிரதமு மிக்கதீம் பாலும்

குணங்கொள்கோற் றேனுங் கூட்டியொன் றாக்கி
மணங்கொளப் பதஞ்செய் வகையுற வியற்றிய

உணவெனப் பல்கா லுரைக்கினு நிகரா
வணமுறு மின்ப மயமே யதுவாய்க்

கலந்தறி வுருவாய்க் கருதுதற் கரிதாய்
நலந்தரு விளக்கமு நவிலருந் தண்மையும்

உள்ளதா யென்று முள்ளதா யென்னுள்
உள்ளதா யென்ற னுயிருள முடம்புடன்

எல்லா மினிப்ப வியலுறு சுவையளித்
தெல்லாம் வல்லசித் தியற்கைய தாகிச்

சாகா வரமுந் தனித்தபே ரறிவும்
மாகா தலிற்சிவ வல்லப சத்தியும்

செயற்கரு மனந்த சித்தியு மின்பமும்
மயக்கறத் தருந்திறல் வண்மைய தாகிப்

பூரண வடிவாய்ப் பொங்கிமேற் றதும்பி
ஆரண முடியுட னாகம முடியுங்

கடந்தென தறிவாங் கனமேற் சபைநடு
நடந்திகழ் கின்றமெய்ஞ் ஞானவா ரமுதே

சத்திய வமுதே தனித்திரு வமுதே
நித்திய வமுதே நிறைசிவ வமுதே

சச்சிதா னந்தத் தனிமுத லமுதே
மெய்ச்சிதா காச விளைவரு ளமுதே

ஆனந்த வமுதே யருளொளி யமுதே
தானந்த மில்லாத் தத்துவ வமுதே

நவநிலை தருமோர் நல்லதெள் ளமுதே
சிவநிலை தனிலே திரண்டவுள் ளமுதே

பொய்படாக் கருணைப் புண்ணிய வமுதே
கைபடாப் பெருஞ்சீர்க் கடவுள்வா னமுதே

அகம்புற மகப்புற மாகிய புறப்புறம்
உகந்தநான் கிடத்து மோங்கிய வமுதே

பனிமுத னீக்கிய பரம்பர வமுதே
தனிமுத லாய சிதம்பர வமுதே

உலகெலாங் கொள்ளினு முலப்பிலா வமுதே
அலகிலாப் பெருந்திற லற்புத வமுதே

## மணி

அண்டமு மதன்மே லண்டமு மவற்றுள
பண்டமுங் காட்டிய பரம்பர மணியே

பிண்டமுங் மதிலுறு பிண்டமு மவற்றுள
பண்டமுங் காட்டிய பராபர மணியே

நினைத்தவை நினைத்தவை நினைத்தாங் கெய்துற
அனைத்தையுந் தருமோ ரரும்பெறன் மணியே

விண்பத மனைத்து மேற்பத முழுவதுங்
கண்பெற நடத்துங் ககனமா மணியே

பார்பத மனைத்தும் பகரடி முழுவதுஞ்
சார்புற நடத்துஞ் சரவொளி மணியே

அண்டகோ டிகளெலா மரைக்கணத் தேகிக்
கண்டுகொண் டிடவொளிர் கலைநிறை மணியே

சராசர வுயிர்தொறுஞ் சாற்றிய பொருடொறும்
விராவியுள் விளங்கும் வித்தக மணியே

மூவரு முனிவரு முத்தருஞ் சித்தருந்
தேவரு மதிக்குஞ் சித்திசெய் மணியே

தாழ்வெலாந் தவிர்த்துச் சகமிசை யழியா
வாழ்வெனக் களித்த வளரொளி மணியே

நவமணி முதலிய நலமெலாந் தருமொரு
சிவமணி யெனுமருட் செல்வமா மணியே

## மந்திரம்

வான்பெறற் கரிய வகையெலாம் விரைந்து
நான்பெற வளித்த நாதமந் திரமே

கற்பம் பலபல கழியினு மழியாப்
பொற்புற வளித்த புனிதமந் திரமே

அகரமு முகரமு மழியாச் சிகரமும்
வகரமு மாகிய வாய்மைமந் திரமே

ஐந்தென வெட்டென வாறென நான்கென
முந்துறு மறைமுறை மொழியுமந் திரமே

வேதமு மாகம விரிவுக ளனைத்தும்
ஓதநின் றுலவா தோங்குமந் திரமே

## மருந்து

உடற்பிணி யனைத்தையு முயிர்ப்பிணி யனைத்தையு
மடர்ப்பறத் தவிர்த்த வருட்சிவ மருந்தே

சித்திக்கு மூலமாஞ் சிவமருந் தெனவுளந்
தித்திக்கு ஞானத் திருவருண் மருந்தே

இறந்தவரெல்லா மெழுந்திடப் புரியுஞ்
சிறந்தவல் லபமுறு திருவருண் மருந்தே

மரணப் பெரும்பிணி வாரா வகைமிகு
கரணப் பெருந்திறல் காட்டிய மருந்தே

நரைதிரை மூப்பவை நண்ணா வகைதரும்
உரைதரு பெருஞ்சீ ருடையநன் மருந்தே

என்றே யெனினு மிளமையோ டிருக்க
நன்றே தருமொரு ஞானமா மருந்தே

மலப்பிணி தவிர்த்தருள் வலந்தரு கின்றதோர்
நலத்தகை யதுவென நாட்டிய மருந்தே

சிற்சபை நடுவே திருநடம் புரியும்
அற்புத மருந்தெனு மானந்த மருந்தே

## மாற்றறியாப் பொன்

இடையுறப் படாத வியற்கை விளக்கமாய்த்
தடையொன்று மில்லாத் தகவுடை யதுவாய்

மாற்றிவை யென்ன மதித்தளப் பரிதாய்
ஊற்றமும் வண்ணமு மொருங்குடை யதுவாய்க்

காட்சிக் கினியநற் கலையுடை யதுவாய்
ஆட்சிக் குரியபன் மாட்சியு முடைத்தாய்

கைதவர் கனவினுங் காண்டற் கரியதாய்ச்
செய்தவப் பயனாந் திருவருள் வலத்தால்

உளம்பெறு மிடமெலா முதவுக வெனவே
வளம்பட வாய்த்து மன்னிய பொன்னே

புடம்படாத் தரமும் விடம்படாத் திறமும்
வடம்படா நலமும் வாய்த்தசெம் பொன்னே

மும்மையுந் தருமொரு செம்மையை யுடைத்தாய்
இம்மையே கிடைத்திங் கிலங்கிய பொன்னே

எடுத்தெடுத் துதவினு மென்றுங் குறையா
தடுத்தடுத் தோங்குமெய் யருளுடைப் பொன்னே

தளர்ந்திடே லெடுக்கின் வளர்ந்திடு வேமெனக்
கிளர்ந்திட வுரைத்துக் கிடைத்தசெம் பொன்னே

எண்ணிய தோறுமியற்றுக வென்றெனை
யண்ணியென் கரத்தி லமர்ந்தபைம் பொன்னே

நீகேண் மறக்கினு நின்னையாம் விட்டுப்
போகே மெனவெனைப் பொருந்திய பொன்னே

எண்ணிய வெண்ணியாங் கெய்திட வெனக்குப்
பண்ணிய தவத்தாற் பழுத்தசெம் பொன்னே

விண்ணியற் றலைவரும் வியந்திட வெனக்குப்
புண்ணியப் பயனாற் பூத்தசெம் பொன்னே

நால்வகை நெறியினு நாட்டுக வெனவே
பால்வகை முழுதும் பணித்தபைம் பொன்னே

எழுவகை நெறியினு மியற்றுக வெனவே
முழுவகை காட்டி முயங்கிய பொன்னே

## நல்நிதி

எண்ணிய படியெலா மியற்றுக வென்றெனைப்
புண்ணிய பலத்தாற் பொருந்திய நிதியே

ஊழிதோ றூழி யுலப்புறா தோங்கி
வாழியென் றெனக்கு வாய்த்தநன் னிதியே

இதமுற வூழிதோ றெடுத்தெடுத் துலகோர்க்
குதவினு முலவா தோங்குநன் னிதியே

இருநிதி யெழுநிதி யியனவ நிதிமுதற்
றிருநிதி யெல்லாந் தருமொரு நிதியே

எவ்வகை நிதிகளு மிந்தமா நிதியிடை
அவ்வகை கிடைக்குமென் றருளிய நிதியே

அற்புதம் விளங்கு மருட்பெரு நிதியே
கற்பனை கடந்த கருணைமா நிதியே

நற்குண நிதியே சற்குண நிதியே
நிற்குண நிதியே சிற்குண நிதியே

## சோதிமலை

பளகிலா தோங்கும் பளிக்குமா மலையே
வளமெலா நிறைந்த மாணிக்க மலையே

மதியுற விளங்கு மரகத மலையே
வதிதரு பேரொளி வச்சிர மலையே

உரைமனங் கடந்தாங் கோங்குபொன் மலையே
துரியமேல் வெளியிற் ஜோதிமா மலையே

## இயற்கைப் பொருண்மை

புற்பதந் திரைநுரை புரைமுத லிலதோர்
அற்புதக் கடலே யமுதத்தண் கடலே

இருட்கலை தவிர்த்தொளி யெல்லாம் வழங்கிய
அருட்பெருங் கடலே யானந்தக் கடலே

பவக்கடல் கடந்துநான் பார்த்தபோ தருகே
உவப்புறு வளங்கொண் டோங்கிய கரையே

என்றுயர்ச் சோடைக ளெல்லாந் தவிர்த்துள
நன்றுற விளங்கிய நந்தனக் காவே

சேற்றுநீ ரின்றிநற் றீஞ்சுவை தருமோர்
ஊற்றுநீர் நிரம்ப வுடையபூந் தடமே

கோடைவாய் விரிந்த குளிர்தரு நிழலே
மேடைவாய் வீசிய மெல்லிய காற்றே

களைப்பறக் கிடைத்த கருணைநன் னீரே
இளைப்பற வாய்த்த வின்சுவை யுணவே

தென்னைவாய்க் கிடைத்த செவ்விள நீரே
தென்னைவான் பலத்திற் றிருகுதீம் பாலே

நீர்நசை தவிர்க்கு நெல்லியங் கனியே
வேர்விளை பலவின் மென்சுவைச் சுளையே

கட்டுமாம் பழமே கதலிவான் பழமே
இட்டநற் சுவைசெய் யிலந்தையங் கனியே

புனிதவான் றருவிற் புதுமையாம் பலமே
கனியெலாங் கூட்டிக் கலந்ததீஞ் சுவையே

இதந்தரு கரும்பி லெடுத்ததீஞ் சாறே
பதந்தரு வெல்லப் பாகினின் சுவையே

சாலவே யினிக்குஞ் சர்க்கரைத் திரளே
ஏலவே நாவுக் கினியகற் கண்டே

உலப்புறா தினிக்கு முயர்மலைத் தேனே
கலப்புறா மதுரங் கனிந்தகோற் றேனே

நவையிலா தெனக்கு நண்ணிய நறவே
சுவையெலாந் திரட்டிய தூயதீம் பதமே

பதம்பெறக் காய்ச்சிய பசுநறும் பாலே
இதம்பெற வுருக்கிய விளம்பசு நெய்யே

உலர்ந்திடா தென்று மொருபடித் தாகி
மலர்ந்துநல் வண்ணம் வயங்கிய மலரே

இகந்தரு புவிமுத லெவ்வுல குயிர்களும்
உகந்திட மணக்குஞ் சுகந்தநன் மணமே

யாழுறு மிசையே யினியவின் னிசையே
ஏழுறு மிசையே யியலரு ளிசையே

திவளொளிப் பருவஞ் சேர்ந்தநல் லவளே
அவளொடுங் கூடி யடைந்ததோர் சுகமே

நாதநல் வரைப்பி னண்ணிய பாட்டே
வேதகீ தத்தில் விளைதிருப் பாட்டே

நன்மார்க்கர் நாவி னவிற்றிய பாட்டே
சன்மார்க்க சங்கந் தழுவிய பாட்டே

நம்புறு மாகம நவிற்றிய பாட்டே
எம்பல மாகிய வம்பலப் பாட்டே

என்மனக் கண்ணே என்னருட் கண்ணே
என்னிரு கண்ணே யென்கணுண் மணியே

என்பெருங் களிப்பே யென்பெரும் பொருளே
என்பெருந் திறலே யென்பெருஞ் செயலே

என்பெருந் தவமே என்றவப் பலனே
என்பெருஞ் சுகமே யென்பெரும் பேறே

என்பெரு வாழ்வே யென்றன்வாழ் முதலே
என்பெரு வழக்கே யென்பெருங் கணக்கே

என்பெரு நலமே யென்பெருங் குலமே
என்பெரு வலமே யென்பெரும் புலமே

என்பெரு வரமே யென்பெருந் தரமே
என்பெரு நெறியே யென்பெரு நிலையே

என்பெருங் குணமே என்பெருங் கருத்தே
என்பெருந் தயவே யென்பெருங் கதியே

என்பெரும் பதியே யென்னுயி ரியலே
என்பெரு நிறைவே யென்றனி யறிவே

## அமுத சித்தி

தோலெலாங் குழைந்திடச் சூழ்நரம் பனைத்தும்
மேலெலாங் கட்டவை விட்டுவிட் டியங்கிட

என்பெலா நெக்குநெக் கியலிடை நெகிழ்ந்திட
மென்புடைத் தசையெலா மெய்யுறத் தளர்ந்திட

இரத்த மனைத்துமுள் ளிறுகிடச் சுக்கிலம்
உரத்திடை பந்தித் தொருதிரளாயிட

மடலெலா மூளை மலர்ந்திட வமுதம்
உடலெலா மூற்றெடுத் தோடி நிரம்பிட

ஒண்ணுதல் வியர்த்திட வொளிமுக மலர்ந்திட
தண்ணிய வுயிர்ப்பினிற் சாந்தந் ததும்பிட

உண்ணகை தோற்றிட வுரோமம் பொடித்திடக்
கண்ணினீர் பெருகிக் கால்வழிந் தோடிட

வாய்துடித் தலறிட வளர்செவித் துணைகளிற்
கூயிசைப் பொறியெலாங் கும்மெனக் கொட்டிட

மெய்யெலாங் குளிர்ந்திட மென்மார் பசைந்திடக்
கையெலாங் குவிந்திடக் காலெலாஞ் சுலவிட

மனங்கனிந் துருகிட மதிநிறைந் தொளிர்ந்திட
இனம்பெறு சித்த மியைந்து களித்திட

அகங்கார மாங்காங் கதிகரிப் பமைந்திடச்
சகங்காண வுள்ளந் தழைத்து மலர்ந்திட

அறிவுரு வனைத்து மானந்த மாயிடப்
பொறியுறு மான்மதப் போதமும் போயிடத்

தத்துவ மனைத்துந் தாமொருங் கொழிந்திடச்
சத்துவ மொன்றே தனித்துநின் றோங்கிட

உலகெலாம் விட்ய முளவெலா மறைந்திட
அலகிலா வருளி னாசைமேற் பொங்கிட

என்னுளத் தெழுந்துயி ரெல்லா மலர்ந்திட
என்னுளத் தோங்கிய என்றனி யன்பே

பொன்னடி கண்டருட் புத்தமு துணவே
என்னுறத் தெழுந்த வென்னுடை யன்பே

தன்னையே யெனக்குத் தந்தரு ளொளியால்
என்னைவே தித்த என்றனி யன்பே

என்னுளே யரும்பி யென்னுளே மலர்ந்து
என்னுளே விரிந்த என்னுடைய யன்பே

என்னுளே விளங்கி யென்னுளே பழுத்து
என்னுளே கனிந்த வென்னுடை யன்பே

தன்னுளே நிறைவுறு தரமெலா மளித்தே
என்னுளே நிறைந்த என்றனி யன்பே

துன்புள வனைத்துந் தொலைத்தென துருவை
யின்புறு வாக்கிய என்னுடை யன்பே

பொன்னுடம் பெனக்குப் பொருந்திடும் பொருட்டா
என்னுளங் கலந்த என்றனி யன்பே

தன்வச மாகித் ததும்பிமேற் பொங்கி
என்வசங் கடந்த என்னுடை யன்பே

தன்னுளே பொங்கிய தண்ணமு துணவே
என்னுளே பொங்கிய என்றனி யன்பே

## நித்திய விளக்கு

அருளொளி விளங்கிட வாணவ மெனுமோர்
இருளற வென்னுளத் தேற்றிய விளக்கே

துன்புறு தத்துவத் துரிசெலா நீக்கிநல்
லின்புற வென்னுளத் தேற்றிய விளக்கே

மயலற வழியா வாழ்வுமேன் மேலும்
இயலுற வென்னுளத் தேற்றிய விளக்கே

இடுவெளி யனைத்து மியலொளி விளங்கிட
நடுவெளி நடுவே நாட்டிய விளக்கே

கருவெளி யனைத்துங் கதிரொளி விளங்கிட
உருவெளி நடுவே யொளிர்தரு விளக்கே

தேற்றிய வேதத் திருமுடி விளங்கிட
ஏற்றிய ஞான வியலொளி விளக்கே

ஆகம முடிமே லருளொளி விளங்கிட
வேகம தறவே விளங்கொளி விளக்கே

ஆரியர் வழுத்திய வருணிலை யனாதி
காரியம் விளக்குமோர் காரண விளக்கே

## நிறைவழி

தண்ணிய வமுதே தந்தென துளத்தே
புண்ணியம் பலித்த பூரண மதியே
உய்தர வமுத முதவியென் னுளத்தே
செய்தவம் பலித்த திருவளர் மதியே

பதியெலாந் தழைக்கப் பதம்பெறு மமுத
நிதியெலா மளித்த நிறைதிரு மதியே

பாலெனத் தண்கதிர் பரப்பியெஞ் ஞான்று
மேல்வெளி விளங்க விளங்கிய மதியே

## கருணைமழை

உயங்கிய உள்ளமு முயிருந் தழைத்திட
வயங்கிய கருணை மழைபொழி மழையே

என்னையும் பணிகொண் டென்னுளே நிரம்ப
மன்னிய கருணை மழைபொழி மழையே

உளங்கொளு மெனக்கே யுவகைமேற் பொங்கி
வளங்கொளக் கருணை மழைபொழி மழையே

நலந்தர வுடலுயிர் நல்லறி வெனக்கே
மலர்ந்திடக் கருணை மழைபொழி மழையே

தூய்மையா லெனது துரிசெலா நீக்கிநல்
வாய்மையாற் கருணை மழைபொழி மழையே

## அருட்பெருஞ்ஜோதி

வெம்மல விரவது விடிதரு ணந்தனிற்
செம்மையி லுதித்துளந் திகழ்ந்தசெஞ் சுடரே

திரையெலாந் தவிர்த்துச் செவ்வியுற் றாங்கே
வரையெலாம் விளங்க வயங்குசெஞ் சுடரே

அலகிலாத் தலைவர்க ளரசுசெய் தத்துவ
உலகெலாம் விளங்க வோங்குசெஞ் சுடரே

முன்னுறு மலவிருள் முழுவது நீக்கியே
என்னுள வரைமே லெழுந்தசெஞ் சுடரே

ஆதியு நடுவுட னந்தமுங் கடந்த
ஜோதியா யென்னுளஞ் சூழ்ந்தமெய்ச் சுடரே

உள்ளொளி யோங்கிட வுயிரொளி விளங்கிட
வெள்ளொளி காட்டிய மெய்யருட் கனலே

நலங்கொளப் புரிந்திடு ஞானயா கத்திடை
வலஞ்சுழித் தெழுந்து வளர்ந்தமெய்க் கனலே

வேதமு மாகம விரிவும் பரம்பர
நாதமுங் கடந்த ஞானமெய்க் கனலே

எண்ணிய வெண்ணிய வெல்லாந்தர வெனுள்
நண்ணிய புண்ணிய ஞானமெய்க் கனலே

வலமுறு சுத்தசன் மார்க்க நிலைபெறு
நலமெலா மளித்த ஞானமெய்க் கனலே

இரவொடு பகலிலா வியல்பொது நடமிடு
பரமவே தாந்தப் பரம்பரஞ் சுடரே

வரநிறை பொதுவிடை வளர்திரு நடம்புரி
பரமசித் தாந்தப் பதிபரஞ் சுடரே

சமரச சத்தியச் சபையி னடம்புரி
சமரச சத்தியத் தற்சுயஞ் சுடரே

சபையென துளமெனத் தானமர்ந் தெனக்கே
அபய மளித்ததோ ரருட்பெருஞ் ஜோதி

மருளெலாந் தவிர்த்து வரமெலாங் கொடுத்தே
அருளமு தருத்திய வருட்பெருஞ் ஜோதி

வாழிநின் பேரருள் வாழிநின் பெருஞ்சீர்
ஆழியொன் றளித்த வருட்பெருஞ் ஜோதி

என்னையும் பொருளென வெண்ணியென் னுளத்தே
அன்னையு மப்பனு மாகிவீற் றிருந்து

உலகியல் சிறிது முளம்பிடி யாவகை
அலகில்பே ரருளா லறிவது விளக்கிச்

சிறுநெறி செல்லாத் திறனளித் தழியா
துறுநெறி யுணர்ச்சிதந் தொளியுறப் புரிந்து

சாகாக் கல்வியின் றரமெலா முணர்த்திச்
சாகா வரத்தையுந் தந்துமேன் மேலும்

அன்பையும் விளைவித் தருட்பே ரொளியால்
இன்பையு நிறைவித் தென்னையு நின்னையும்

ஒருரு வாக்கியா னுன்னிய படியெலாஞ்
சீருறச் செய்துயிர்த் திறம்பெற வழியா

அருளமு தளித்தனை யருணிலை யேற்றினை
அருளறி வளித்தனை யருட்பெருஞ் ஜோதி

வெல்கநின் பேரருள் வெல்கநின் பெருஞ்சீர்
அல்கலின் றோங்கிய வருட்பெருஞ் ஜோதி

உலகுயிர்த் திரளெலா மொளிநெறி பெற்றிட
இலகுமைந் தொழிலையும் யான்செயத் தந்தனை
போற்றிநின் பேரருள் போற்றிநின் பெருஞ்சீர்
ஆற்றலி னோங்கிய வருட்பெருஞ் ஜோதி

மூவரும் தேவரு முத்தருஞ் சித்தரும்
யாவரும் பெற்றிடா வியலெனக் களித்தனை

போற்றிநின் பேரருள் போற்றிநின் பெருஞ்சீர்
ஆற்றலி னோங்கிய வருட்பெருஞ் ஜோதி

சித்திக ளனைத்தையுந் தெளிவித் தெனக்கே
சத்திய நிலைதனைத் தயவினிற் றந்தனை

போற்றிநின் பேரருள் போற்றிநின் பெருஞ்சீர்
ஆற்றலி னோங்கிய வருட்பெருஞ் ஜோதி

உலகினி லுயிர்களுக் குறுமிடை யூறெலாம்
விலகநீ யடைந்து விலக்குக மகிழ்க

சுத்தசன் மார்க்க சுகநிலை பெறுக
உத்தம னாகுக வோங்குக வென்றனை

போற்றிநின் பேரருள் போற்றிநின் பெருஞ்சீர்
ஆற்றலி னோங்கிய வருட்பெருஞ் ஜோதி

அருட்பெருஞ் ஜோதி யருட்பெருஞ் ஜோதி
அருட்பெருஞ் ஜோதி யருட்பெருஞ் ஜோதி

திருச்சிற்றம்பலம்



வடலூர் சத்திய தருமச்சாலை



வடலூர் சத்திய தருமச்சாலையில் எழுந்தருளியிருக்கும் வள்ளலார்

# அருட்பெருஞ் ஜோதி அகவல்

## உரை விளக்கம்

---

## முன்னுரை

1. எல்லாம் வல்ல கடவுள் உண்மையை, உள்ளபடி கண்டு அடைந்து அனுபவித்த அருட்பேரின்பத்தை, அன்பர் உலகம் ஏற்றுப் பெரும் பயனுற நம் திருவருட்பிரகாச வள்ளற் பெருமான் அருளியுள்ள அருட்பெருஞ் செய்யுள் இதுவாகும். இந்தப் பெருஞ் செய்யுளின் ஒப்பற்ற மெய்ப்பொருள் அந்த அருட்பெருஞ் ஜோதி யன்றி வேறன்றாம். ஆகையால், அருட்பெருஞ்ஜோதிக் கடவுளின் உண்மை விள்க்கத்தையும், போற்றிப் பெறும் அருளின்ப வாழ்வை யும் கூட்டி வைப்பதுதான் இவ் அகவலின் அனுபவப் பொரு ளாகும். இதற்கெல்லாம் அருள் ஒளியின் துணையே முக்கிய மானது; புறத்துணைக் கருவிகள், அதாவது, இலக்கண இலக் கிய ஆதரவுகள் இன்றியமையாதன வல்ல: எனினும் கூட அவை கள் தாமே முன்னுற்றுப் பொருந்தலும் திருவருட் சம்மதமேயாம்.

2. கடவுள் உண்மையை உள்ளுற யோகிருந்து கண்டவன் பழந்தமிழன். அவ்வுண்மையை அடிப்படையாய் வைத்தே தமிழ் மொழியையே உருவாக்கிவிட்டான். அவன் செய்த தமிழ்க் கற்பனைக் கடவுள்தான் சிவம் ஆம். இச் சிவம் என்னும் பெயர் பெறாத அக் கடவுளின் விளக்கம், முதலில் எங்கும் நிறை அகண்ட பெருஞ்ஜோதியாகக் காணப்பட்டிருந்தது. அந்தப் பேரொளியைக் கந்தழி (அடிமுடி காணவொண்ணா அழல் வடிவம்) என்று புருவநடுக் கண்ணின்று கண்டிருந்தான் அப்பழையோன். இக் காட்சியைக் கண்டது, அந்நெற்றி நடுக் கண்ணுக்கு மெய் யொளி கொடுக்கும் சிரநடுதிகழ் ஒரு சிற்றணு ஆகும். இந்த அணு ஒளி, கந்தழி ஜோதியின் சிறு கூறேயாம். இக் கடவுட் ஜோதி அணுதான், இம் மனிதனின் உடலையும் உயிரையும், மெய் யறிவையும் ஏற்று, யாவையும் கண்டு அனுபவிக்கின்றதாம். எங் கும் பரிபூரணமாயுள்ள கடவுள், ஒவ்வொரு சிற்றான்ம அணுவிலும் நீக்கமற இருந்து, ப்க்குவ மனித நிலையில் தன் உண்மையைக் கண்டிருப்பதாய் அறிகின்றோம். இதுதான் கற்பனையற்ற கடவுள்

நிலையும், இந்த மனிதன் நிலையுமாகும். இதுவே அருட்பெருஞ் ஜோதி நிலை.

3. இதுவரையும் கடவுள் நிலையை அதற்கு அயலான இடத்திலிருந்து கண்டுவந்த மனிதன், தான் வேறு, அது (கடவுள்) வேறு என எண்ணி, அத்தோடு ஒன்றுபட முயன்று ஒழிந்தான். இக் கடவுள் அனுபவம் பெறுவதற்கே சிவமாதி தெய்வக் கற்பனை களும், வேதாந்த சித்தாந்தங்களும் தோற்றுவிக்கப்பட்டனவாம். திருமந்திர சாத்திரத்தும், திருவாசக தோத்திரத்தும் சிவபதியைச் சார்ந்து கொள்ளும் உபாயம் தெளிவிக்கப்பட்டுள்ளனவாம். இவற்றின் முடிவு, கடவுட் ஜோதியைக் காட்டி அதிலே கலந்து மறையச் செய்வதாய் இருப்பது. இந்நிலையில் மனிதனுக்கு உலகியல் வாழ்வு இல்லாது போய்விடுகின்றது. இம் மனிதனாக விளங்கின கடவுளோ, தன் அருளால் என்றென்றும் வாழ்ந்து கொண்டும் உலகை எல்லாம் ஆண்டு கொண்டும் இருக்கின்றார். ஆகையால், அகத்தில் ஒடுங்கியொழியாது, அந்நிலையினின்று அருள்மய வாழ்வு வாழ்கின்ற மனிதன்கூட என்றென்றும் அக் கடவுள்மய அருள் இன்ப வாழ்வில் விளங்கக்கூடியவனாகி விடுகின்றான் என்பதுதான் நம் வள்ளல் கண்ட அக அனகநெறி முறையாம். இதுவே சுத்த சன்மார்க்கமாகும்.

4. திருவருட்பாவின் ஆறாம் திருமுறை சுத்த சன்மார்க்கத் தையே வழங்க வந்தது. சுத்த மனோ நிலையில் புருவமத்தி நின்று அருட்ஜோதிபதியைப் போற்றிப் போற்றி உட்கூடி, அன்பாற் கரைந்து கரைந்து அருள் ஒளி பொங்கி வழிந்து நிரம்பப்பெற்று வாழவைப்பது இந்த அகவல் துதிப்பாடல். சுத்த சன்மார்க்க அன்பர்கள் எல்லாம் இந்நெறி கண்டுகொண்டு உய்தல் வேண்டும; பழையனவாகிய நெறிகளில் உழன்று கொண்டிருக்கக்கூடாது. அருட்பெருஞ்ஜோதி வாழ்க.

5. சத்திய ஞான சபையில் வளர் அருட்பெருஞ்ஜோதியைப் போற்றிப் போற்றி அதுவாகி நிற்கப் பழகுதல் வேண்டும். அப்படி இருந்து கொண்டு தான் அனுபவமுறை வாழத் 'தயவு' செய்து கொண்டு விளங்கவே, ஆணை செய்துள்ளார் நம் வள்ளற் பெரு மான். ஆகவே, தயவுணர்வில் இருந்து உரையில் வெளிப்படுத்தப் பெறுகின்றது இவ்வுரை விளக்கநூல்.

6. இனி அருட்பெருஞ்ஜோதி அகவலின் விளக்கத்தைக் காண்போம். இரண்டிரண்டு அடிகளாக எடுத்துக்கொண்டு கருத்தினை விரித்துக் கூறுவோம்.

## 1. அருட்பெருஞ் ஜோதி

1. அருட்பெருஞ் ஜோதி அருட்பெருஞ் ஜோதி
2. அருட்பெருஞ் ஜோதி அருட்பெருஞ் ஜோதி

(உரை விளக்கம்): அருட்பெருஞ் ஜோதி என்ற சொல், பொருள் விளங்காத ஒன்றாக இல்லைபோல் தோன்றுகிறது. ஆனாலும் அதன் உண்மை விளக்கம் பெரிதும் பெருமையுடைத் தாகும். ஜோதி என்றால், நிறையொளியாம். பெருஞ் ஜோதி யாவது, மிகப் பெரிதாய் நிறைவுற்றதாய் உள்ள பேரொளியாம். உலகம் கண்ட பெரிய ஜோதி விண்மணியாம் சூரியனே. வான் விளங்கு விண்மீன் ஒவ்வொன்றும் பெரிய பெரிய ஜோதி என்பது அறிவியல் அனுபவம். ஆனால் இந்த ஜோதிகள் எல்லாம் தோற்றக் காரணமான நிறைபெருஞ் ஜோதியை ''கேலக்ஸ்சி'' (galaxy) என்கின்றனர். இந்நிறை ஜோதிக்கும் இதுபோன்ற பல பேரொளி நிலைகட்கும் இடம் கொடுத்துள்ள அகண்ட பெருவெளி முற்றும் நீக்கமற நிறைந்து நின்று எல்லா ஜோதி களின் தோற்ற ஒடுக்கங்களுக்கும் காரணமாயுள்ளதுதான் நமது அருட்பெருஞ் ஜோதி ஆகும். இந்த அருட்பெருஞ் ஜோதியாம் இறை ஒளி அளப்பரிய அகண்ட பெருவெளி எல்லாம் செறிந்து இயற்கையுண்மையாய் இருந்துகொண்டும், இயற்க்கை விளக்கத் தோற்றங்களாய் வெளிக்காட்டி மறைந்துகொண்டும், இயற்கை இன்பத்தை, முடிவில், நிறைமனித வடிவில் அனுபவ பூர்வமாய் வழங்கிக் கொண்டும் இருக்கின்றதாம். இவனது அனு பவத்தில் தான் இந்த அருட்பெருஞ்ஜோதியின் நிறை உண்மை விளக்கம் கண்டு கொள்ளப்படுகின்றது.

மேற்படி அருட்பெருஞ் ஜோது நான்கு நிலை கொணடதாய்க் குறிக்கப்படுகின்றது.
(புறத்தே)

1. வான் வெளி நிறை மின் காந்த ஒளி நிலை.
   (வான் கலந்த பெருஞ்ஜோதி அக்கினி நிலை)
2. விண்மணியாம் ஞாயிறு ஜோதி நிலை.

3. தண்மதி நிறைகலைச் சந்திர ஜோதி நிலை.
4. தீபச்சுடர் விளக்கின் ஒளி நிலை.

இவை போன்று பக்குவ மனிதனின் அக அனுபவத்தே நான்காய் விளங்கும் ஜோதி நிலையுளவாம். அவையாவன: (புறமிருந்து அகம் நோக்கிச் செல்லும்போது)

1. தேகேந்திரிய விளக்க ஒளிநிலை
2. மனோகரண விளக்க ஒளிநிலை
3. ஜீவ உணர்வு விளக்க ஒளிநிலை
4. ஆன்ம ஞான விளக்க ஒளிநிலை

இந்த நானிலை அனுபவம் உண்டாகவேண்டி, சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நெறிகளை வகுத்து, அவற்றின் அடைவாக, சாலோக, சாமீப, சாரூப, சாயுச்சிய பதவி விளக்கங் களையும் வழங்கினர் ஆன்றோர். இந் நானிலை முடிவே, நான்கு கால் ஒன்றாவது போல் முழு நிலை அனுபவத்தைக் கூட்டி வைப்பதாய்க் கொள்ளப்பட்டதாம். இதனையே முடிவாகக் கொண்டதால் இறையொளி கண்ட ஒருவன் அவ்வொளியில் நாட்டம் வைத்துக் கலந்து மறைந்தே போனான். அப்படி மறைந்து ஒழியாது, வாழ்வு பெற்று விளங்கவே நம் அக அனக சுத்த சன்மார்க்கம் திருவருளால் வெளியாக்கப்பட்டுள்ளது.

சுத்த சன்மார்க்கி, தயவோடு கூடிய சத்விசாரத்தால் அகம் விளங்கும் அருள் இறை ஒளியை ஆன்ம ஆலயமாகிய சத்திய ஞானசபையில் அருட்பெருஞ் ஜோதியாகக் கண்டு கலந்து அதுவாகி நின்று, அவ்வருட்பெருஞ் ஜோதியையே விரிவு செய்து ஜீவனிலும், கரணத்திலும், இந்திரிய தேகத்திலும் நிரம்பிடக் கொண்டு வாழ்வதால் அருட்பெருஞ் ஜோதியின் முழுநிலை அனுபவமும் பெற்று முடிவிலாதென்றும் விளங்கலாம் என்பது நம் வள்ளலார் கண்ட உண்மையாகும். ஆகவே இந்தக் கடவுட் பேறு எய்தும்படி திருவாய் மலர்ந்து அருளப்பெற்ற இவ் அருட் பெருஞ் ஜோதி அகவலின் தொடக்கத்தே இந்த நான்கு அருட் பெருஞ் ஜோதியைக் காண்கின்றோம். அடுத்து வரும் அடிகளின் விளக்கத்தை ஆய்ந்து கொள்ளுவோம்.

## 2. அருட் சிவம்

3. அருட்சிவ நெறிசார் அருட்பெரு நிலைவாழ்
4. அருட்சிவ பதியாம் அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** பழந்தமிழ் மக்கள் கண்டு வழிபட்ட கடவுட் ஜோதியாம் கந்தழியே, பின்னர் சிவம் என்னும் செம்பொருளாகக் கற்பிக்கப்பட்டதாகும். சிவம்தானே செங்கதிர்ச் சோதியாம் வான் ஞாயிறு—இதனை மேனாட்டார் 'சன்' (SUN) எனவும், கீழ்நாட்டார் 'சியீன்' எனவும் குறிக்கினறனர். தமிழன் வான் ஜோதியைப் புறத்தே கண்டு வணங்கினது அபக்குவ அறிவு நிலையாம். பக்குவத்தே அகத்தில் கடவுட் ஜோதியை ஞான சூரியனாகக் கண்டு போற்றினான். இவ் இறை ஒளியும் அது விளங்கும் இடமும் சிவக்குறியாம் இலிங்கமும் ஆவிடையும் போன்று இருக்கக் கண்டவன், புற ஞாயிற்றையும் அதன் கோட் பரிவாரத்தையும்கூட இலிங்க ஆவிடை வண்ணமாகவே கண்டு கொண்டான்.

கடவுட் ஜோதியால் உருவாகியுள்ள உலகை, ஐம்பூதச் சேர்க்கையால் தோன்றி ஐவண்ணமாய் விளங்கக் கண்டு பஞ்ச பூத இலிங்க வடிவம் கடவுளுக்கு அமைந்துள்ளதாய்க் கொண்டு 'நமசிவய' எனுந் தூல ஐந்தெழுத்துருவம் சிவஜோதிபதிக்குப் புனைந்து கொள்ளப்பட்டதாம். அப்படியுள்ள அக்கடவுட் ஜோதி பதியை உள் ஒளிர் சிவமாக உணர்ந்தவன், அதனைச் சிவாயநம எனப் போற்றிக் கொள்ளலால் சார்ந்து ஒன்றி அதுவாகி விடலாம் என்று உணர்ந்தான். இச் சிவாயநம என்பதுதான் சிவபதியின் சூக்குமத் திருவைந்தெழுத்து எனவும், அதுவே மந்திரமாய் விளங்கி கடவுட் சார்பைக் கூட்டி வைக்குங் காரணத் தால் அதுவே கடவுளை அடையும் நெறியாகவும் கருதிக் கொண் டான். இந்தச் சிவ நெறி விளக்கமாகவே சைவச் சாத்திர தோத் திரங்களும், மறை ஆகமங்களும், மூர்த்திதல தீர்த்தங்களும் ஆக் கிக் கொடுத்தனர் சைவப் பெருமக்கள்.

இன்று நாம் அந்தச் சிவபரம் பொருளை அருட்பெருஞ் ஜோதி யாக உள்ளவாறு காண்கின்றோம். அருள் உண்மை விளக்கத் தால் அருட்பெருஞ் ஜோதி நம் மெய்யறிவுத் தலத்தில் வெளிப் பட்டிலங்கும் நிலையையும், அதனை அருள் விசாரத்தால் கலந்து நிற்கும் உபாயத்தையும், அப்படிக் கலந்தொன்றிக் கொண்டு

இவ்வுலகில் அருளின்ப வாழ்வில் ஓங்கும் முறையையும் அறிந்து கொள்ளுகின்றோம். இவ்வுண்மையைக் குறிக்கவே நம் பெருமான் இவ்விரண்டு அடிகளை அருளியுள்ளார்.

"அருட்சிவ நெறிசார் அருட்பெரு நிலைவாழ்
அருட்சிவ பதியாம் அருட்பெருஞ் ஜோதி",

என்ற இதனை அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர் வாழ்த்தாகக் கொள்ள வேண்டுவது முக்கியம். அருட்பெருஞ் ஜோதி பதியையே சமய மதாதீதச் சுத்த அருள்நிலை நின்று போற்றிக் கொண்டதாகும். சிவமும், சிவநெறியாம் மார்க்கமும் ஏன் சிறப்பித்துக் கொள்ளப்பட்டன என்றால், கடவுள் உண்மையை அடி நிலையாய்க் கொண்டு உருவாக்கப்பட்ட தமிழ் அச்சிவானுபவமாம் கடவுள் நிலையைக் கூட்டி வைப்பது குறித்தாம் என்ப. தத்துவ கற்பனா இயல்பால் தமிழ் குறிக்கும் சிவானுபவக் கடவுள் நிலையைக் கொண்டு உண்மை கண்டு, தத்துவ கற்பனாதீத நிலையில் உலகெல்லாம் உய்யத்தருவது இந்த அருட்பெருஞ்ஜோதி அகவல் விளக்கமாகும்.

## 3. ஆகமம் ஆரணம்

5. ஆகம முடிமேல் ஆரண முடிமேல்
6. ஆகநின் றோங்கிய அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) ஆரணம் — என்பது வேதம், மறை என்னும் கடவுள் உண்மையைத் தன் அகம் கொண்டு விளங்கும் கற்பனா நூல் ஆகும். ஆகமமாவது — அவ்வேத மறைப் பொருளைத் தெளிந்து புற வழிபாட்டுத் துணையால இறை நிலை எய்த வழி வகை கூறும் நூலாகும்.

வேதமும், மறையும் பொதுவாக ஒன்றெனக் கருதுவர் சிலர்: அஃது அறிவுடைமையாகாது. வேதம், இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்னும் நான்கைக் குறிக்கும். மறையோ, அறம், பொருள், இன்பம், வீடு என்பனவாம். வேத மெய்ப் பொருள் புற நிலை நின்றே பிரம்மானுபவத்தைப் பற்றிப் பேசுகின்றது. மறை, தற்போத ஒழிவில், பதியோடு ஒன்றச் செய்கின்றது. இவையே வேதாந்த சித்தாந்த முடிவாம். வேதாந்த நெறி பிரம்மம் ஒன்றே உண்மையில் இருக்கின்றது; ஜெக ஜீவ, பரம் மாயா தோற்றம் என்கின்றது. ஆகையால் பிரம்மானுபவம் பெற மாயா

தேகாதி பிரபஞ்சத்தை விட்டொழித்துச் செல்ல வேண்டுமென் கின்றது. இப்படிச் சென்று அடைகின்ற அனுபவம் சூனியமே யாம்! நம் திருமறை நெறியோ, பதி பசு பாசத்தை வலியுறுத்து கின்றது. தற்சுதந்தரமற்ற பசுவானது பதி அருளைக் கொண்டு பாசத்தை யொழித்துவிட்டு, அப்பதியோடு கலந்து மறைய உள்ள தாம். இம்முறையான சிவானுபவம் பெறத்தான் சைவாகமம் விரித்து வழங்கப்பட்டுள்ளதாம். இப்படிப்பட்ட மறைந்தொழியும் முடிவைத்தான் அந்த ஆரணமும் ஆகமும் வழங்குவனவாயுள்ளன வாம். மனிதனுக்கு இந்த பிரம்மானுபவமும் சிவானுபவமும் இவ் வுலக வாழ்வு நிலைத்து விளங்கச் செய்யவில்லை. இந்த வேதாகம முடிவுக்குமேல், இவற்றிற்கு எட்டாத ஒன்றாய்த் திகழ்ந்து கொண்டிருப்பதுதான், உலகமெல்லாம் விளங்கச் செய்து கொண் டிருப்பதாகும். அந்த மேனிலைப் பரம்பொருளே தான் இன்று நமது அருட்பெஞ்ஜோதி ஆக இருக்கின்றதாம்.

நம் அருட்பெருஞ் ஜோதி பதியைத்தான் அவ்வேதாகமங்கள் பிரம்மம் என்றும், சிவம் என்றும் கற்பித்து லட்சியப் பொரு ளாய்க் கொண்டிருந்தன; எனினும், மருளறிவால் மருவிக் கொள்ளக் கருதி மடிவுறு முடிவே வழங்கிவிட்டனவாம். இப் பொழுது தான் அருளறிவால் இயல்பாகவே ஒன்றான அருட் பெருஞ்ஜோதியே 'ஓடும் உலகுயிராகி நின்றானே' என்ற திருமந்திர வாசக உண்மையால் தெளிந்து கொள்ளப்படுகின்றது. வேதாந்தி எந்தப் பிரம்மத்தை அடைந்து மறைய முனைந்தானோ, சித்தாந்தி எந்தச் சிவத்தைக் கலந்து ஒழியக் கருதினானோ, அது வதுவான ஒன்றை அருட்பெருஞ் ஜோதியாகவும், அதுவே மனி தனின் இயல் உண்மையாகவும் கண்டு அருளின்ப வாழ்வில் தழைக்கத் தொடங்குகின்றான் சுத்தசன்மார்க்கி.

*''பரமதனோ(டு) உலகுயிர்கள் கற்பனையே எல்லாம்*
*பகர்சிவமே என்றறிந்தோம் ஆதலினால் நாமே*
*பிரமமெனப் பிறர்க்குரைத்துப் பொங்கிவழிந் தாங்கே*
*பேசுகின்ற பெரியவர்தம் பெரிய மதம் பிடியேல்*
*உரமிகுபேர் உலகுயிர்கள் பரமிவை காரியத்தால்*
*உள்ளனவே காரணத்தால் உள்ளன இல் லனவே*
*தரமிகுபேர் அருளொளியால் சிவமயமே எல்லாம்*
*தாமெனவே உணர்வது சன் மார்க்க நெறி பிடியே.''*

என்றதால், அருள் ஒளிநிலை நின்று சூழ்ந்து நோக்கும்போது, அகத்திலுள்ள ஒன்றான அருட்பெருஞ் ஜோதிபதியே உண்மைச்

சிவமாய் இருக்க, அப்பதி உண்மை அனுபவத்தில் வெளிப்பட வேண்டியே தன் புற வண்ணத்தையே உலகுயிர்களாகத் தோற்றுவித்துக் கொண்டிருக்கின்றதாம். ஆகையால் அகநின்று அருளால் யாவையும் ஏற்று வாழவேண்டுமே யல்லாது, தேகாதி பிரபஞ்சத்தை விவகாரிக சத்தென விட்டொழித்துப் பரமார்த்திக சத்தாம் பிரம்மத்தில் மறைந்து விடுவது முறையன்றாம். இது போல் சிவபதி நிலையில் இருந்து கொண்டு, அப்பதி வண்ணமா கப் பசு பாசத்தையும் அருள்மயமாய் விளங்கச் செய்து கொண்டு வாழ்தல் முறையாம். "முப்பொருளும் ஒன்றதென்பார் வெண்ணி லாவே," என்றதால் பதி, பசு, பாசம் மூன்றும் ஒன்றன் முந்நிலைத் தோற்றமாய்க் கொள்ள வேண்டுமே யல்லாது முத்தனிப் பொருட் களாய்க் கொண்டு ஒழிவது வாழ்க்கை முறையாகாது. ஆகவே, பழமையான வேதாகம முடிவை அருட்பெருஞ் ஜோதியால் நிறைவு படுத்திக் கொண்டு வாழ்விக்க வந்தது நமது சுத்த நெறி.

## 4. இக பர நிலை

7. இகநிலைப் பொருளாய்ப் பரநிலைப் பொருளாய்
8. அகமறப் பொருந்திய அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** இகநிலை என்பது, இவ்வுலக அமைப்பு, இம்மை வாழ்வு, இப்பிறப்புமாம். பர நிலை என்பது, மேலுலக அமைப்பு, மறுமை வாழ்வு, வரும் பிறவியுமாம். இன்று விளங்கிக் கொண் டிருக்கிற இந்த அகண்ட பெரும் பிரபஞ்சமானது எண்ணற்ற பொருள்களைக் கொண்டு திகழ்கின்றதைக் காண்கின்றோம். இவ் வளவு பொருள்களும், தோற்றமும் மாற்றமும் மறைவும் கொண்டன வாய் அறிகின்றோம். இவை எல்லாம் இப்படி வெளிப்பட்டுத் தோற்ற நிலைக்கு வருவதற்கு முன் எப்படி என்னவாய் இருந்தன என்றும், இவற்றின் மறைவு நிலைக்குப்பின் எங்ஙனமிருக்கும் என்றும் ஆழ்ந்து சிந்தித்து நோக்கும்போது வெளியாவது இது: யாதெனில், இப்பேருலகப் பொருள்கள் யாவும் தோற்ற நிலைக்கு முன்னும், மறைவு நிலைக்குப் பின்னும் மிக நுண்ணிய சூக்கும நிலை யில் அருகிக் கிடப்பதாய் உணர்த்தப்படுகின்றோம். இந் நுண் ணிலையே பரநிலையாகப் பகரப்படுகின்றதாம்.

மேற்குறித்த பருப்பொருள் தோற்ற நிலையும், நுண்பொருள் சூக்கும நிலையும், மனிதனின் அனுபவத்தில், சூழுலக அமைப்பா

யும், இம்மை வாழ்வு இயலாயும், இப்பிறப்பின் விளைபயனாகவும் உள்ளனவாம். இவைகளை எல்லாம் கண்டு துய்க்கின்ற இவன் புற நிலையிலிருந்து காண்பதை விட்டு, சுத்த சத் விசாரத்தால் அக நிலையுற்று அறியத்தொடங்கினால் தான் உண்மை வெளியர்ம். ஆம், அவ்வக நிலைதான், மனிதனின் ஆன்மக்கடவுள் நிலையாக இருக்கின்றது. இவ்வகநிலைக் கண்ணின்றே யாவும் வெளியாகி யுள்ளனவாம். இந்த அக ஆன்மக் கடவுள் நிலையையே அருட் பெருஞ்ஜோதியாகக் கண்டு போற்றிக் கொள்ளப்படும். இவை எல்லாம் அகம் அறப் பொருந்தியுள்ளனவாம். 'அற' என்ற சொற் பகுதி மிக.நன்றாக என்ற பொருள் தருவதாகையால், யாவும் இந்த அக அருட்பெருஞ் ஜோதியில் மிக நன்றாகப் பொருந்தி நின்று காலத்தே வெளியாகி விளங்குகின்றனவாய்த் திருவருளால் உணர்த்தப்படுகின்றோம். மேலும் இவ்வருளனுபவமுறும் போது, அந்த அருட்பெருஞ் ஜோதியே யாவுமாய், நாம் ஒவ்வொருவரு மாய்க் கூட விளங்குவதாய் உணரப்படுவதால், உண்மையில் உள் ளது அவ்வருட்பெருஞ் ஜோதியே; 'நாம்' என்ற வேறு இல்லை யாம். இதனால் இந்த அருட் பெரும் பதி உண்மை மனிதனுக்கு அகம் அற, அதாவது அகங்காரமாகிய தற்போதம் ஒழிய வெளிப் படுகின்றதாம். ஆகவே, அற' என்றதற்கு நீங்குதல் அல்லது ஒழிதல் என்ற பொருளும் பொருந்தும்.

எனவே, நம் அருட்பெருஞ் ஜோதியே இகநிலைப் பொருளுக் கும், பரநிலைப் பொருளுக்கும் நிலைக்களனாய் நம்முடைய ஆன்மா லயமாம் சத்திய ஞான சபையின் கண் அகமறப் பொருந்தியுள் ளதை அருளாற் கண்டு போற்றிக் கொள்வோமாக.

## 5. இகபரத்தின் மேற்பொருள்

*9.* ஈனமின் றிகபரத் திரண்டின்மேற் பொருளாய்
*10.* ஆனலின் றோங்கிய அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** தூல, சூக்குமநிலை கொண்டிலங்கும் இக பரப் பொருள்கள் யாவும் என்றும் ஈனமின்றி, அதாவது குறைவில்லாது நிறைநிலையாகவே பொருந்தியுள்ள ஒரு முதல் நிலைதான் நம் அருட்பெருஞ் ஜோதி நிலையாம். இந்த உயர் நிலையையே முன் குறித்தத் தூல சூக்குமமாம் இருநிலைக்கும் காரணமாயுள்ளதால், இதனை மேற்பொருளாய், பரம்பொருளாய் உணர்கின்றோம்.

இப்பரம்பொருள் நிலையில்தானே யாவும் செறிந்து நின்று மேல் விளைவு கொண்டு இலங்குகின்றனவாம்.

பரம்பொருள் நிலையே பரமாகாச இறைநிலை என்றும் இயம்பப்படும். இவ்வாகாச நிலையே இங்கு ஆனல் என்று குறிக்கப்படுகின்றது. அகண்டவெளி நிறை ஆகாசநிலை நின்றே எப்பொருளும் உதித்திலங்கக் காண்கின்றோம். திருவருள் ஞானத்தால் இன்று நாம் பரமாகாசப் பரம்பொருளுண்மையை நம் ஆன்ம சிதாகாசத்தில் இருந்து கண்டு கொள்ளுகிறோம். ஆகவே இந்த அகண்ட பரமாகாச நிலையைத்தான் ஆனல் என ஓதியுள்ளார் நம் வள்ளற் பெருமான். இவ்வாகாச நிலையே யாவற்றிற்கும் முழு முதற் காரணமாய் அமைந்து என்றென்றும் இக பரப் பொருள்களை எல்லாம் தோற்றுவிக்கின்றது என்பது தெளிவு.

இன்றைய உலகில் எத்தனை வித உயிரினங்களை, பொருள் வகைகளை ஆற்றல் இயக்கங்களை, மற்றும் பலவற்றை எல்லாம் காண்கின்றோம்! இவ்வளவும் முதலில் எப்படித் தோன்றின என்பதைத் தெரிந்து கொண்டால், விதை முந்தியா—மரம் முந்தியா? முட்டை முந்தியா—குஞ்சு முந்தியா? ஆண் முந்தியா—பெண் முந்தியா? உயிர் முந்தியா—உடல் முந்தியா? என்பன போன்ற புதிர் வினாக்களுக்குச் சரியான விடை காண முடியும். ஆதி அந்தம் இல்லா அனாதி பரம்பொருள் தான் எல்லாத் தோற்றங்களுக்கும் முதற் காரணமாயுள்ளது என்று அறிதல் வேண்டும். அந்தப் பரம்பொருள் ஒன்றே எல்லாமாம் அருட்பெருஞ்ஜோதி ஆக, அகண்ட வெளி நிறை சிற்றணு தோறும் பரிபூரணமாகவே பொருந்தி நின்று, தனது உண்மையை வெளிப்படுத்திக் கொண்டிருக்கின்றதாம். இதனால் தான், அந்தக் காரண பரமாகாச நிலையில் கரந்து நின்ற இறையுண்மை வெளிப்படுகின்றபோது முதலில் சூக்கும நிலையும், பின்னர் தூல தோற்ற நிலையுமுறுகின்றதாம். இந்நிலை ஒவ்வொரு சிற்றணுவிலும் அமைந்திருப்பது. இவ் அணு அக இறையுண்மை அனகமுறுவதால், புறத்தே பொருட்சக்தி, கிரியா சக்தி, ஞான சக்தி, யோக சக்தி, அருட் சக்தி வெளியாகின்றனவாம். இவற்றில் பொருட்சக்தியால் பூத அணுத்தோற்றமும், அணுக்களால் ஆம் பொருட்களின் தோற்றமும் அமைகின்றன. அப்பூத அணுவினின்று கிரியா சக்தி வெளியாவதால் எல்லா இயக்கங்களும், உயிர் ஆற்றலும் வெளியாகின்றன. உயிருணர்வினுள் அறிவு விளக்கம்

ஏற்பட்டு அகத்தே தெளிவு ஏற்படுகின்றது. அகத் தெளிவிலே பக்குவ ஞானம் உண்டாக உண்டாகக் கரும, பக்தி, ஞான, யோகப்பயன் விளைகின்றது. அந்த யோக நிலைக்கப்பால் தான் அருள் உண்மை வெளிப்பட்டு கடவுட் பேரின்பம் அடையப் பெறு வதாம். இவ்வருட் பெருநிலை அடைவின் பொருட்டே இவ் வுலகில் சகலமும் ஒரு நியதிப்படி வெளியாக்கப்படுகின்றன. இந்த உலகம் முதலில் சடபூதப் பொருள்மயமாய்த் தோற்றி உயி ராற்றல் வெளியாய தருணம் அவ்வுயிர்ச்சக்தியைச் சூழப் பலவாகிய உயிரின வடிவ தோற்றங்கள் ஏற்படுகின்றன். இது, உயிரினங்களின் முதல் தோற்ற நிலை. பின்னர் உயிரினவிருத்தி, சேர்க்கை முறையால் பல்கிப் பெருகிக்கொண்டுள்ளனவாம். வேறு விதமாகக் குறிப்பதாயின், சூக்குமமாயிருந்த அணுவ்கத் தோற்ற நிலை குறிப்பிட்ட உயிர்ச்சக்தியாகக் காரியப்படும்போது புறத்தே அவ்வுயிர் விளக்கத்துக்குரிய தேக வடிவம் உருவாகிப் பின்னர் ஒவ்வொரு உயிரினத்தின் பிற்சந்ததியும் விருத்தியாகி யுள்ளனவாம். ஆகையால் முதலில், சூக்கும நிலையில் விதைதரு மரமும், முட்டையீன் உயிரும், மக்களைப் பெறும் தாயும், ஞானா னந்த அனுபவத்தைத் தரும் இச்சிறந்த மனிதப் பிறப்புத் தேகமும் உண்டாயினவாக அறியலாகும். இம்முறையே எல்லாத் தோற்றமும் வள்ர்ச்சியுமாம். இதன் நிறை விளக்கம், சிறந்த நாள் என்ற நூலில் காண்க - II உயிர்களின் வரலாறு பக்.5-20.

அக நின்று செயல்படுத்துகின்ற இறையருள் உண்மையை உள்ளவாறு அறியாக் காரணத்தால் இந்த உலக உயிர்களின் தோற்ற காரணத்தைப் பலவாறு கற்பனை செய்து கூறிக்கொண் டுள்ளனர் மக்கள். உயிருக்கு உடல் வருவது ஆணவ மாயா கன்ம மலத்தால் என்கிறார்கள்; கடவுள் சங்கல்பம் என்கிறார்கள்; உண்மை யாதெனில் எல்லாமாம் அருட்பெரும்பதியே தன் உண்மை வெளிப்பட்டு இயற்கை இன்பானுபவ நிலை விளங்கவே தனது பேரருளைத் தானே இவ்வுயிருடம்பாய் விரித்து விளங்கச் செய்கின்றார் என்பதுதான் உண்மை. இவ்வுண்மையறியாது, தேகானுபவநிலையினின்று தன்னையும், கடவுளையும், உலகையும் தனித்தனியாகக் கொண்டு நோக்கித் தடுமாற்றம் அடைந்து கொண்டுள்ளான் அபக்குவி. ஆனல் ஆகிய அருளம்பரத்தே நித்தநிறைவாகி, ஈனமின்றி விளங்கிக் கொண்டு, இகபரத்தை எல்லாம் தோற்றி விளங்கச் செய்து கொண்டிருப்பவர் நம் அருட் பெருஞ் ஜோதிபதியே என்பதை அறிந்து போற்றி அடைந்து மகிழ்வோம்.

## 6. உரைமனம் கடந்த வெளி

11. உரைமனங் கடந்த ஒருபெரு வெளிமேல்
12. அரைசுசெய் தோங்கும் அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) அகண்டமாயுள்ள, உலகெல்லாம் அடங்கிய, பெரு வெளியிடமே கடவுளரின் நிறையியல் செயல்படுகின்ற நிலையமாகும். அக்கடவுட் பெருவெளியின் எல்லை இவ்வளவு அவ்வளவு என்று எவராலும், எக்காலும் கணக்கிட்டுக் கூறமுடியாதாம். இந்தப் பிரபஞ்ச வெளியைப்பற்றி மனிதன், கண்ணாலும், அறிவியற் - கருவிகளாலும் காண்கின்றது மிகச் சிற்றளவினதேயாம். இக்கருவி கரணக் காட்சியைவிட ஜீவமனோகரணக் காட்சியால் காணும் வெளியிடம் பெரிதாகும். இதற்குமேல் மனோபகுத்தறிவு எல்லைக்கு அப்பால் மனிதனின் யூகம் செல்லுகின்றதில்லை. அவ்வறிவு நிலைக்கு அப்பால்தான் மனதுக்கு எவ்வாற்றாலும் விஷயமாகாத நமது பிரபஞ்ச வெளி போன்று அனந்தவெளி அடங்கிய பெருவெளியிருக்கின்றது. இதன் இருப்பைக் கற்பனை செய்து பாவிப்பதன்று, திருவ்ருள் உணர்வால் உண்மையாகவே உணர்தலாகும். இந்த அருளுண்மை விளங்கும் அளப்பரும் நிலையே கடவுளரின் நிறைநிலையாக இருக்கின்றதாம்.

அண்டகோடிகள் எல்லாம் விளங்குகின்ற அகண்ட வெளியைப் பற்றி மெய்யருள் உணர்வால் உணர முடிவதேயன்றி மனவறிவால் அறிந்துகொள்ள முடியாதாம். ஆதலின் அந்தப் பெரு வெளிநிலையை ஒரு, ஒப்பற்ற அருட்பெருவெளியாகக் குறிக்கப்படுகின்றது. இந்த அருட்பெரு நிலையை நமது ஆன்ம அகத்தினின்று காணவேண்டியிருக்கின்றது. அன்பு நிறைந்து, அருள்மயமாகி அகநின்று அருளால் உணரும் அப்பெருவெளிநிலை மனவாக்கிற்குச் சற்றும் எட்டாததாகும். இவ்வருள் வெளிநிலையில் பரிபூரணமாய் இருந்து கொண்டு புற உலகுயிர் அனைத்தையும் ஆண்டு அருள்கின்றவர் நம் அருளம்பலத்தரசர். இந்த அருளம்பல மன்னிய மாமன்னர், எந்த ஓர் ஆன்மாவின்கண் வெளிப்பட்டு அருளாலே கண்டு கொள்ளப்படுகின்றாரோ, அந்த சிற்றம்பலத்தில் எழுந்தருளி அருள் பாலிக்கின்றதோடு, சூழுற்றிலங்கும் பெருவெளியில் உள்ள யாவற்றையும் அவற்றின் அகத்திருந்து ஆள்கின்றதையும் அந்தக் குறிப்பிட்ட ஆன்மாவுக்கு அனுபவப்படச் செய்கின்றார். ஆகவே உண்மையில் உரைமனங்கடந்த பெருவெளியில் விளங்கும் அம்பலத்தரசர் அகத்திருந்தும் புறத்தே

தோன்றாதவராய் அனக ஆட்சியை எங்கெங்கும் புரிந்து கொண்டுள்ளாராம்.

அரைசு-அரசு என்பதன் விளக்கம்: 'சு' என்ற எழுத்து, சகர மெய்யும் உகரவுயிரும் கொண்டு சத்தான நம்பதி உண்மையையும் அவர் தம் அருளைந்தொழிற் செயல் உண்மையையும் சுட்டி நிற்பதாம். நமது அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் அகத்தே அருள் வண்ணமாயும், புறத்தே ஜோதியாலான உலகெல்லாமாயும் விளங்குகின்றார். இவ்விரு நிலை கொண்ட பதியின் முழு உண்மை, வெளிப்பட விளங்குகின்றதில்லை; புறக்காரியப்பாட்டு உலகநிலையே காணப்படுகின்றது. ஆகவே இக்காரிய உலகம் ஒரு பாதியாகவும், தோற்றரிய அருள்நிலை மறுபாதியாகவும் கொள்ளப்படும். இதனால் அரைசுவாம் கடவுள் ஆட்சியை மட்டும் புறத்தே காணும் ஒருவன் அக்கடவுளரின் மறுபாதி அருள் நிலையைக் காணாதிருக்கின்றான். திருவருளால் அகமுற்று நின்று நோக்கின் அருள் ஆட்சியின் மாண்பு விளங்கும். மேலும், அர என்ற சொல் ஒளியைச் சுட்டுவதால், ஒளி செய் உலகெல்லாம் ஆண்டவரின் அரைசுதானாம். உலக வழக்கில் அரைசு, அரசு என்பதன் மருவுநிலையெனக் கொள்ளுகின்றனர். உலகியல் அரசன், (ரசம்-சத்தாகிய அருள்) உண்மை அற்றவனே என்பதைக் குறிப்பதாக அமைந்து விட்டிருக்கின்றதாம். மேலும் 'ஐ' என்பது கடவுளையே குறிப்பதாயும் உள்ளதால் அரைசு என்பதின் உயர் பொருள் விளங்கும். ''ஆயிரம் பேரைக் கொன்றவன் அரை வைத்தியன்.'' என்பது பழமொழி. இதன் உண்மை யாதெனில், ஆயிரம் என்பது கடவுள் உண்மை விளங்கும் அக ஆன்மநிலையமே ஆயிரம் இதழ்க் கமலாலயமாக இருக்கின்றது. இதில் உறைபவன், தான் என்றும் தன் பதி என்றும் இரண்டு படாது விளங்குகிறான். இந்நிலையே கடவுளரின் இரு பாதியாம் உண்மை கொண்டதாம். இங்கு அரைநிமிஷ தியானமயமானால் இறையனுபவமுண்டாம். இறைவனே அருட்பெரும் முழு வைத்தியனாவான். ஆதலின், அவ்விறைவனின் கலப்பெய்தி தனது நாம ரூபப்பற்று அற்றவனே, ஆயிரம் பேரைக் கொன்றவன், அரை வைத்தியன் ஆவான் என்பது உண்மை.

ஆகவே நமது அருட்பெருஞ்ஜோதி பதியை மனமொழிக்கு அப்பால், அகண்டமாயுள்ள அருட்பெருவெளியில் திருவருளால் கண்டு நின்று அவரது அருளாட்சியின் பெருமையை வியந்து வியந்து போற்றுவோமாக.

## 7. ஊக்கம் முதலியன அருள்வது

13. ஊக்கமும் உணர்ச்சியும் ஒளிதரும் ஆக்கையும்
14. ஆக்கமும் அருளிய அருட்பெருஞ்ஜோதி

**(உ-வி)** மனிதன் உயிரும் உடம்பும் கொண்டு விளங்குகின் றான். பரு உடல் புறத்தே திகழ்கின்றதைக் காண்கின்றோம். இப்புற வடிவுக்கு ஆதாரமாக, அகத்தே நுண்ணிய ஆற்றல் வண் ணமாய் இருந்து செயல்படுத்திக் கொண்டு மனிதனை இலங்கச் செய்து கொண்டுள்ளது உயிராகும். இந்த அகவுயிருக்கும் புற உடலுக்கும் உதவியாயிருந்து அருள்கின்றது நம் அருட்பெருஞ் ஜோதியே ஆம்.

அகத்தில் உயிர் சக்தி நன்கு விளங்கும்போது உள்ளத்தில் ஊக்கம் அல்லது தைரியம் அதிகமாக இருக்கும். இதனால் மனோகரணத்திலும் திட ஆற்றல் திகழும். இந்த ஊக்கமும் உணர்ச்சியும் கொண்டு புறவாழ்வு சிறப்புற அமைவதாம். இத் தேகம் பூத முதலிய தத்துவங்களால் ஆக்கப்பட்டது. நாடி நரம் பாகிய ஆக்கையினால் பிணைக்கப்பட்டது. ஆகையால் ஆக்கை எனப்படுவதாம். இவ் ஆக்கை இளமையும் வலிவும், பொலிவும் கொண்டு விளங்கும்போது போற்றப்படுகின்றது. ஆனால் இந்த இளமையும் வனப்பும் நிலையாவெனக் கண்டு இழிவுரை கூறித் தூற்றினர் துறவறத்தார். சுத்த சன்மார்க்கத்தில் பயிலும் நாமோ இத்தேகத்தை அருள் ஒளியுருவாக மாற்றிடப்பெற்று, ஆக்கத்தோடு நல்ல செயல் திறனோடு, அருட்சித்தாம் அழியாச் செல்வத்துடன் வாழும்படி ஆணை செய்யப்பட்டுள்ளோம். இவ்வுண்மையைத்தான் நம் வள்ளற்பெருமான் தம் அனுபவத்திற் கண்டடைந்துதான் ஊக்கமும், உணர்ச்சியும், ஒளி தரும் ஆக்கையும், ஆக்கமும் அருளிய அருட்பெருஞ்ஜோதி என வழுத்தி யுள்ளார்.

## 8. பிறவித் தொல்லை நீங்கியது

15. எல்லையில் பிறப்பெனும் இருங்கடல் கடத்தி என்
16. அல்லலை நீக்கிய அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** அருள் உண்மையைக் கண்டடைந்து, ஆனந்த வாழ்வு பெறவே மனிதனுக்கு இறையாணை ஏற்பட்டுள்ளது. இந்த உண்மை அறியப்படாதவரை, உயிருக்கு இந்த மெய்ஞ்ஞானம்

விளங்காதவரை பிறவிச்சூழல் தொடர்ந்துகொண்டேதான் இருக் கின்றதாம். ஒவ்வொரு பிறவியிலும் உயிருக்குப் பலப்பலவாகிய துன்பங்கள் நேர்ந்து, அறிவு விளக்கமும், அனுபவமும் சிறிது சிறி தாக விளைகின்றன. ஓர் உயிருக்கு ஏற்படுகின்ற பிறவி இவ்வளவு தான் என்று கணக்கிட்டுச் சொல்லிவிட முடியாது! இதனால் இந்தப் பிறவியைப் பெருங்கடலுக்கு ஒப்பிடுகின்றனர். கடல் பெரிதாகத் தோற்றலாம்: நடுக்கடலில் இருப்பவருக்குக் கரையே தென்படுவதில்லைதான்; எனினும் அக்கடலுக்கு ஒரு கரை யிருக்கும் என்பதும், அக்கரையேறி வாழ்வுறலாம் என்பதும் மனிதனின் எண்ணம். ஆனால் இந்தப் பிறவிக்கடல் இருக்கிறதே இதற்கு எல்லையே இல்லை! கரையே இல்லை என்பது இங்கு குறிக்கப்படுகின்றது. அப்படியானால் இந்த எல்லையில்லாத பிறவிப் பெருங்கடலிலிருந்து மீள்வது எப்படி?

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார்."

என்பது வள்ளுவர் கண்டதும் முன்னோர் முடிவுமாம். இறைவன் திருவடியை அறிந்து பற்றிக்கொண்டுவிட்டால் போதும், அதுவே ஒருவனுக்குப் பிறவாத, பிறவிக்கடலைக் கடந்த பெருநிலையாம் என்பது கருத்து. இப்படி இறைநிலையுற்று, மேல் பிறவாமை யெய்தி விடுவதால் ஒருவன் பிறவிக்கடலைக் கடந்துவிட்டான் என்றால், அவனுக்கு இந்த இறையனுபவம் விளங்கும் மனிதவுடல் இல்லையாகிவிடுகின்றது. ஆகையால் கடவுளின்பானுபவத் திற்கு வழியில்லாது, உலகில் வாழ்வற்றுப் போய்விடுவதுதான் இப்பிறவியைப் பெற்றதின் பயனோ? ஓர் ஆன்மாவுக்கு இந்த இறை ஞானானுபவ தேகம் வருமுன்னும், தேக நீக்கத்தின் பின்னும் இருக்கும் நிலை எதுவோ அதுவே நீடிக்கின்றது உண்மையாம். ஆகையால் பிறவா நிலையை அடைந்துவிட்டதால் ஏதோ கடவுள் நிலையைப் பெற்றுவிட்டதாகக் கொள்ளுதல் பொருந்தாது. அப்படிப் பிறவாநிலையில் எவ்வளவு காலம் அருகிக்கிடந்தும் பேரின்பப்பயன் விளங்காது. ஆகையால் அப்பெரும்பயன் உண்டாக மறுபடியும் அவ் ஆன்மாவுக்கு மனிதப்பிறப்பு வழங்கப் படவேண்டியது அவசியமாம். இறைவனும் அந்தப் பக்குவ ஆன்மாவுக்கு உரிய காலத்தே மனிதப் பிறப்புத் தேகம் வழங்கி விடுவது உண்மை. எனவே, பிறவாநிலை பிறவிக்கடலைக் கடந்து விட்டதாகாது: அது பிறவிக் கடலின் எல்லை, அல்லது கரையாகக் கொள்ளமுடியாது. நமது அருட்பெருஞ்ஜோதி

ஆண்டவர் தனிப்பெருங் கருணையோடு என்றென்றும் விளங்கு கின்றவராவர். அவரது எல்லையற்ற கருணையின் ஐந்தொழில் எப்பொழுதும் விளங்கிக்கொண்டே யிருப்பது. அப்பெருங் கருணையின் தோற்றமே இத்தேகாதி பிரபஞ்சக் காரியப்பாடுகள் யாவுமாம். இந்த இறையருட் பிரபஞ்சத்தில் தோற்றுவிக்கப் பட்டுள்ள மனிதப் பிறவியில்தான் கடவுள் உண்மை விளக்கம் வெளிப்பட்டுள்ளது. அதாவது, நித்தியமான அருட்பெருங் கடவுளே, ஓர் ஆன்ம சிற்றணுவினின்று இவ்வுண்மை விளக்க அறிவு கொண்டு மனிதனாய்த் தோற்றி நின்று உணர்கின்றதாம். இதுவே மனிதனின் உண்மையான, இயற்கையான கடவுள் நிலையா யுள்ளது. ஆதலின், இவனது பிறவிச் சூழல், அக்கடவுள் நிலையில் அருள் ஐந்தொழில் நிலைக்களனாகவே யுள்ளதாம். இவ் வுண்மை கொண்டு அக நின்று அருள் நிறைவோடு, கடவுள் மயமாகி அருளின்ப வாழ்வில் வாழ்கின்றவனே என்றும் மறையாது, இறவாது, மேற்பிறவாது விளங்குகின்றவனாவான். இவ்விறவாநிலை பெறாதவரை, தன்னை உடல் வடிவினனாகக் கருதி, அல்லல் பிறவியை யொழிக்க முயன்று புறத்தே அலையுறுவ தாலும், அகத்தே அடங்கியொடுங்குவதாலும், பிறவாமை எய்தினாலும் கூடப் பயனின்றாம்.'

கடவுளான்ம உண்மையுடன் விளங்குகின்ற மனிதன் அகத்தே அல்லலில்லா ஆனந்தபதி மயமாய் இருக்கின்றான்; அதே சமயம் புறத்தே அல்லல் நிறை தேக வாழ்விலும் உழல் கின்றான். இவன் தேக வாழ்வில் விருப்பு வெறுப்பு கொண்டு அவத்தைப்படுகின்றதை விட்டு, அகமிருந்து அருள் வாழ்வு வாழத் தொடங்கினால் அந்த அருளே இவனைச் சுத்த உடம்பு கொண்டு சுகானந்தமோடு விளங்கச் செய்து விடுவதாம். இதனால், அல்லல் பிறவிமுற்றும் ஒழிந்து போகின்றது. இவனைச் சூழ்ந்திலங்கும் எல்லையில்லாத பிறவிப் பெருங்கடல், முடிவில்லாத அருள் ஐந்தொழில் விளங்கிக்கொண்டேயிருக்கும் எல்லையற்ற ஆனந்த சாகரமாக விளங்குவதாம். இந்த எல்லையற்ற அருட் பெருங்கடலுக்குக் கங்குகரை இல்லை என்பது உண்மையே! இதில் வாழ வந்த சுத்த சன்மார்க்கியை அருள் அம்பலமாகிய நீண்டரிய வெளிநிலைக்குத் தூக்கிக் கொண்டு, என்றென்றும் தன்மயமாய் வாழச்செய்து விட்டார் நம்பதி. இந்த நிறை இன்ப இறை நிலையே பிறவிப் பெருங்கடல் கடந்த பெருநிலையாம். நம் திருவருட்பிரகாச வள்ளலுக்கு, அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர்

தனிப்பெருங் கருணையால், எல்லையில் இருங்கடல் அல்லது பெருங்கடல் நிலையைக் கடத்திவிட்டு, அல்லல் செய் பிறவியை நீக்கிவிட்டு ஆனந்த நிலையில் ஏற்றி வைத்துள்ளார் என்பதை உலகுக்கு உணர்த்துவன இவ் அகவல் அடிகள்.

### 9. ஏறா நிலைமிசை ஏற்றியகு!

17. ஏறா நிலைமிசை ஏற்றியென் றனக்கே
18. ஆறாறு காட்டிய அருட்பெருஞ்ஜோதி

**(உ-வி)** கடவுள் விளங்கும் நிலையை நேரடியாகக் காண்பது என்பது மனித தரத்திற்கு அப்பாற்பட்டதாம். சாதாரண மனிதனின் அறிவாராய்ச்சிகளும், தவ ஞான பண்டிதர்களின் அறிவனுபவமும் சென்றடையப் பெறாத உயர்நிலையே அருட்பெருங் கடவுள் உண்மை ஓங்கும் இடமாம். அருமறைக்கும் எட்டாதது பரம்பொருள் எனப்படுவது உண்மையே. ஏனெனில் அந்த மறையாகமம் எல்லாம் மனித மனமாகிய நிலத்தில் அற்புதமாக விளைந்த விளைச்சலேயாம். அந்த மனநிலைக்கு வெளிப்படாதது பேரருள் இறையுண்மையாம். அம்மனோ எல்லை மேற் செல்ல வகையறியாது மோனமாகி விடுகின்றான் மௌன ஞானயோகி! இந்த மனோ வெளிக்கு அப்பால் விரிவுற்றுக் கிடக்கும் பெருவெளி நிலையைக் கடவுள் விளங்கிடமாய்க் கொண்டு அதிற் புகுந்து மறைந்தனர் கடவுளைக்காண முனைந்தோர் பலர். மற்றும் பலர் பலவான வழிமுறைகளைக் கற்பனை செய்து கொண்டு, அக்கடவுணிலைவ்ய எய்த முயன்றுள்ளனர். அப்படி முயற்சித்த எவரும் அவ்விறை நிலையுற்று, கடவுள் மயமாய் வாழ்ந்துகொண்டு தாமே சான்றுதர விளங்காது போயினர்.

இப்பொழுது நம் மாண்புறு வள்ளற் பெருமானே அருட் பெருஞ் ஜோதிக் கடவுளைச் சுத்த அருள் ஞானத்தால் உள்ள வாறு கண்டுகொண்டுள்ளார். இவர் கண்டுகொண்டுள்ள கடவுள் நிலை உயர்வற வுயர்ந்த அரும்பெரும் நிலையாகும் இவ்வுயர் நிலைக்கு ஏறிச் செல்ல எவராலும் எக்காலும் இயல

தாம். எவராலும் எக்காலும் இவ்வுயர் நிலைக்கு ஏறிச் செல்லவே முடியாது என்றால், பின்னர் இவர் மட்டும் எப்படி அந்நிலையை அடையமுடியும்? ஆம், இவராலும் அந்நிலைமிசை ஏறிவிட முடியாதுதான்! எனினும் அத்தீண்டரிய உயர்நிலைமிசை யொளிரும் அருட்பெருஞ் ஜோதிபதியே, தன் அருளையே உலகத்துற்ற யாவுமாய் விளங்கச் செய்துள்ள உண்மையை இவரது மெய்யறிவில் கண்டபோது, இவர் உள்ளூற்ற அருளிறை உண்மையை அவ் அக நிலையிலேயே இருந்து காண்பதாக உணர்ந்து கொண்டார். அதாவது, கடவுளே அகநிலையிலிருந்து, தன் அருளை வள்ளலாரின் அறிவுணர்வாக்கி இந் நிலையை உணர்ந்து கொள்ளச் செய்திருக்கின்றார் என்பதாம். எனவே தீண்டரிய கடவுள் நிலையில் விளங்கும் அருள் உணர்வு மயமான வள்ளலும் அவ்வுயர் நிலையிலிருந்துதான் விளங்குகின்றார் என்பது உண்மையாம்! இதனால் இவர் அம்மேனிலையில் திகழ் கின்றது பழமையான இயல் உண்மையே ஆம். ஆகையால், இவரும் புறத்திருந்து அந்த மேனிலைக்கு ஏறவில்லை என்பதும், இயற்கையாக அந் நிலையிற்றானே இருந்து தன்னைக் கண்டு கொண்டிருக்கிறார் என்பதும் மெய்யே. இதனால், ஏறாநிலை மிசை ஏற்றி என்றனக்கே ஆறாறு காட்டிய அருட்பெருஞ் ஜோதி என்கின்றார்.

இனி, அம்மேனிலை நின்று கண்ட ஆறாறு என்பது, பூத முதல் நாதம் ஈறாகவுள்ள முப்பத்தாறு தத்துவங்கள் என்று கூறுவர் ஒரு சாரார். ஆறு, ஆறு அல்லது ஆறு மார்க்கம், ஆறு அத்துவா, ஆறு அந்தம், ஆறு ஆதாரம், ஷண் மதம் என்றெல்லாம் கூறுவர் புறநெறியாளர் எல்லாம். இவைகள் யாவும் மக்களுக்கு உலகியலில் ஒரு ஒரு வகையில் சிறிது சிறிது பயன்பட்டொழிவனவேயாம். நம் சுத்த நெறியோ, மேனிலை நின்று வாழ்விப்பதா யுள்ளதாம். ஆகையால் இந்த ஆறாறுக் குரிய மெய்ப்பொருள் அம்மேனிலை நின்றே கண்டடைய வேண்டி யுள்ளதாம். ஆகவே இங்கு விளங்குகின்ற ''அருட்பெருஞ் ஜோதி''யே நமக்கு அருள் விளக்க ஆறெழுத்து மந்திர மொழி யாகத் தோற்றி, அதுவே அதனை அடையும் பெரும் நெறியாம் ஆறாகவும் உள்ளதை யுணர்த்துவதாம். எனவே, இந்த உயர்நிலைநின்று அருள் வாழ்வு பெற அருட் பெருஞ் ஜோதியைப் போற்றிக் கொள்வோம்.

## 10. ஐயமும் திரிபும் ஐயமும் நீக்கியது

**19.** ஐயமும் திரிபும் அறுத்தென துடம்பினுள்
**20.** ஐயமு நீக்கிய அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** நாம் போற்றிக்கொள்ளுகின்ற நமது அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர், நமக்கு உயிரிலும், உடலிலும் உண்டாகின்ற குறைபாடுகளை எல்லாம் தீர்த்து அருள் பாலிக்கின்றவராவார். உயிரின் குறைபாடு யாதெனில், அபக்குவ காலத்தே ஏற்படுகின்ற அறியாமையாம். இவ்வறியாமையினால் உண்மை விளங்காது, ஒன்றை மாறுபாடாகக் கருதிக்கொண்டு இடர்ப்பட நேருகின்ற தாம். இவையே முதலடியில் ஐயமும் திரிபுமாகக் குறிக்கப்பட்டன ஐயம் என்றால் சந்தேகம், தெளிவின்மை, மருள் உணர்வுமாம். திரிபு என்றால் மாறுபாடு, தெளிவின்மையால் ஒன்றைப் பிறி தொன்றாகக் கொள்ளல். வேறுபாடாகக் காண்டலை திரிசியக் காட்சி என்பர். இவை எல்லாம் ஆன்மாவாகிய உயிரின்கண் அருள் அறிவு ஏற்படாதபோது உள்ள மலபாச மறைப்பு நிலை யாம்; இதுவே, ஆணவம், மாயை, கன்மம் ஆக மொழியப்படும். அருள் ஞானமே ஆணவமாதி மலபாச ஆணிவேரை அறுத்துவிடு கின்றதாம். அவ்வருள் ஞானத்தால் உண்மைக்காட்சி உள்ளபடி விளங்கும் தருணம், ஐயத்திற்கும், திரிபிற்கும் இடமில்லையாம்.

இனி, இரண்டாம் அடியில் குறிக்கப்படும் ஐயம், உடலினுள் தோன்றும் கபம் அல்லது கோழை ஆகும். இக்கப தோஷத்தால் இரத்தம் முதலிய ஜீவதாதுக்கள் கெட்டு, உயிர்ப்பு ஆற்றல் தடைபட்டு மரணத்தையே வருவித்து விடும். நம் சுத்த சன் மார்க்க பதி நம் அசுத்த மாயா தேகத்தையே சுத்த நித்திய உடம் பாக ஆக்கி வாழ்விக்க எழுந்தருளுகின்றார். ஆதலால் இவ்வுடலில் கபம் சேர்ந்து தொல்லை செய்யா வண்ணம், தன் அருளொளி அமு தால் அக்கபத்தை யொழித்து விடுகின்றார். இவ்வனுபவ சாத்திய முறவே, சன்மார்க்க சாதகர் கரிசலாங்கண்ணியைத் தினமும் உட்கொள்ளல் வேண்டுமென்பது நம் வள்ளல் ஆணை.

''காறிக் காறிக் கரிசாலையிலேயிடு கபமாறும்,'' என்பது ஆன் றோர் அனுபவ வாசகம். ஆகவே. உயிரினிடத்தே மெய்யருள் ஒளியைக் காட்டி, அதனை உணர்விலும், உடலிலும் நிரப்பி ஐய மெலாம் போக்கிச் சுத்தப்பிரணவ ஞானதேக சித்தியோடு வாழ வைக்கும் நம் அருட்பெருஞ்ஜோதியைப் போற்றுவோமாக.

## 11. ஒன்று இரண்டு அன்றெனல்

21. ஒன்றென இரண்டென ஒன்றிரண் டென விவை
22. அன்றென விளங்கிய அருட்பெருஞ்ஜோதி

(உ-வி) உள்ளத்தில் அருள் ஒளியைக்கண்டு கொள்ளுகின்ற போது, எல்லாம் உள்ளங்கை நெல்லிக்கனிபோல உள்ளது உள்ளபடி காணமுடிகின்றதாம். அவ்வுள்ளொளியைக் காணாது மருளறிவாகிய மங்கொளியில் கடவுள் உண்மையைப் பற்றி அறிந்து கொண்டிருந்த தெல்லாம் திரிசியக் காட்சியே என்பது இன்று தெளிவாகின்றது. முன்னர், கடவுள் ஒன்றே உண்மையில் உள்ளதென்றும், 'ஏகம் சத்' என்றும், அதுவன்றிப் பிரிது எதுவும் உண்மையில் இல்லை எனவும், பிரிதாகத் தோற் றும் அவை பொய் மாயா தோற்றமே எனவும் கூறினர். அடுத்து, சத்தாம் பரம்பொருள் ஒன்றே உண்மையில் இருக்கின் றது என்பது சரியன்று; அப்படியுள்ள அப்பரம்பொருளை அறி கின்ற ஒருவனாம் ஓர் ஆன்மாவும் இருந்துதான் இந்த உண்மை யைக் காண்கின்றதால், அந்தப் பரமான்மாவும் இந்த ஜீவன்மா வும் ஆகிய இரண்டும் இருத்தலே உண்மை என்றனர். பின்னர் உண்மையானது எப்போதும் ஒன்றாகவே, அதற்கு ஒப்புவமை யான பிறிதொன்றும் எக்காலும் இல்லாததாகவே இருக்க வேண் டும்; ஆகையால் இரு தனிப்பொருளாக இருத்தல் முடியாது. ஆனால், கடவுளும் மனிதனும் இரண்டற்ற ஒன்றாய், அத்துவித மாய் இருக்கின்றதுதான் உண்மையாம். இவ்வத்துவித உண் மையைக் குறிக்கவே ஒன்றிரண்டு என்ற சொல் தோற்றுவிக்கப் பட்டுள்ளதாம். ஒன்று என்ற சொல்லே ஒன்றி இணைந்து இருத் தலையே சுட்டுவதாம். சங்கர நாராயணன், உமையொருபாகன் என்பவை ஒருவடிவில் இரு தெய்வ இயல் உண்மையைக் காண் பது கொண்டு இந்த ஒன்றிரண்டு என்ற குறிப்புச் சொல் வழங் கப்பட்டுள்ளதாம். ஆகவே, கடவுளை ஒன்றாகவும், இரண்டாகவும், ஒன்றிரண்டாகவும் படிப்படியாகக் கண்டு தேறின நிலையில் இருந்து வந்த நமக்கு, இதற்கும் மேலான பேருண்மையை நேரு றக் காட்டிக் கூட்டி வைக்கின்றார்.

நம் இறை காட்டிக் கொடுக்கின்ற அதீத உண்மை யாதெ னில், அருட்பெருஞ் ஜோதியேயாம். இந்த அருட்பெருஞ் ஜோதிக் காட்சியால் தெரியப்படுகின்ற உண்மை விளக்கம் இதுவாகும்; அகண்ட வெளி நிறை இயற்கையுண்மைப் பேரொளி நிலையே

கடவுளரின் பேருருவாகும். இவ்விறையொளியின் அருள் இயல் உண்மை வெளிப்பட்டு விளங்கும் சிற்றணுவே நித்திய ஆன்மா வாம். இந்த ஆன்ம அணுவேதான் அனாதி நித்திய மனிதனின் இயற்கை நிலையாம். ஆகவே ஒன்றான அருட்பெருஞ் ஜோதிக் கடவுளைத் தவிர வேறாக மனிதன் இல்லையாம். இது அந்த அருட்பெருஞ் ஜோதி நிலை நின்று உணரும்போதுதான் உண்மை யாய் விளங்குகின்றது. மற்றபடி அகம் பொருந்தாது, புறமிருந்து உள்நோக்கியவரைதான், கடவுள் ஒன்றாகவும், இரண்டாகவும், ஒன்றிரண்டாகவும் தோற்றி மறைகின்றதாம். மனிதன் தன்னைத் தேக வடிவினனாகக் கருதியிருந்தபோதும், சற்று பக்குவமுற்று தன்னை ஆன்ம வடிவினனாகப் பாவித்திருந்தபோதும், தான் வேறு கடவுள் வேறு என எண்ணி வந்தான். அப்போது கடவுளை அடைவதற்கு ஏற்படுத்தின மார்க்கங்கள் எல்லாம் புறத்தனவே யாம். யோக ஞானியரும், ஜீவான்ம பரமான்ம அத்துவிதானுபவ முறப் புறத்திருந்து உட்பொருந்தி சமாதி கூடி உடலை விட்டு ஒழிந்தே போயினர். இது சமயம் தான் மனிதன் அக நின்று அருட்பெருஞ்ஜோதி வண்ணமாக இருக்கும் தனது இயல் உண் மையை உணர்ந்து அருள்நிறை அனக வாழ்வால் நித்தியமாய் விளங்கக்கூடியவனாகின்றான். இந்த அனக அருள் நெறிதான் நம் வள்ளல் கண்ட சுத்த சன்மார்க்கம். இவ் இறையுண்மை வழங்கி வாழ்விக்கும் அருட்பெருஞ்ஜோதியைப் போற்றுவோம்.

## 12. ஓதாது உணர்தல்

**23. ஓதா துணர்ந்திட ஒளியளித் தெனக்கே**
**24. ஆதார மாகிய அருட்பெருஞ் ஜோதி**

**(உ-வி)** கடவுள் உண்மையை அறிந்து அடையும் உயர் சிறப்பு கொண்டு விளங்குவது இம்மனிதப் பிறப்பு. ஆனால், உண்மை அறிவு, சாதாரண பொறிபுலன் அறிவுக்கும், மனோகரண அறிவுக்கும், ஜீவபோதப் பகுத்தறிவுக்கும் வெளிப்படாது. அவற் றிற்கெல்லாம் மேற்பட்டு உள்ளத்தொருமையில் ஆன்மபோதத் தில் ஒருவாறு வெளிப்பட்டு, மேல்தயவினால், அன்பினால் நெகிழ்ந்து உருகுகின்ற தருணம்தான் அவ் இறையருள் ஒளி சிறிது சிறிதாக வெளிப்படவுள்ளதாம். இதனால்தான் இது காறும் மக்கள் அறிவு பல துறைகளிலும் எவ்வளவோ தூரம்

கடந்து சென்றும்கூட, இன்றளவும் இறையுண்மையைக் கண்டு கொள்ளவில்லையாம்.

ஓதுவது ஒழியேல் என்றும், ஓதாமல் ஒரு நாளும் இருக்க வேண்டாம் என்றும் முன்னோர் கூறிவைத்தனர். ஓதல் என்றால் படித்தல் என்பர். அதாவது பிறர் உள்ளக் கருத்தைப் புரிந்து கொள்ளற்கு உபாயமாக ஏற்பட்ட மொழியைப் பயின்று அறிந்து கொள்ளலாம். அப்படிப் பயின்று பெறும் அறிவு, படித்தறியும் விளக்கம் மேற்குறித்த அருள் உண்மையை எவ்விதத்தும் எவ்வ ளவும் உணர்த்தக்கூடியதாயில்லை. பன்னெடுங்காலம் முயன்று பயின்றும் அறிதற்கரியது அருட்பெரும்பதி உண்மை. படித் தறியக் கூடியதெல்லாம் வாச்சியப் பொருளேயன்றி இலட்சியப் பொருளல்லவாம். வாச்சியம் என்பது சொல்லினால் உரைக்கப் படுவது. இலட்சியம் என்பது முடிந்த குறிக்கோள் அனுபவப் பொருளாய் விளங்குவது. கடவுளின் அருட்பேருண்மையைக் கருவி கரண இந்திரியங்களால், வாயுரையால், சொற்பொருளால் வெளிப்படுத்த முடியாதாம். ஆகையால்தான் அவ்வுண்மை வாச்சியப் பொருளல்ல எனப்பட்டது. வாச்சியமே ஓதப் படுவது; இலட்சியம் ஓதப்படாதது. ஆனால் அந்த ஓதப்படாத மெய்ப்பொருளிலிருந்துதான் ஓதப்படுபொருள் யாவும் தோன்று கின்றன. ஓதப்படாத அம்மெய்ப்பொருள்தான் உள்ளிருக்கும் அருட் ஜோதியாய், ஊமை எழுத்தாய், ஓங்காரத் துட் பொரு ளாய் விளங்குகின்றதாம். ஓங்காரத்துள்ளிருக்கும் இறையருட் சக்தியின் நாத ஒலி வெளிப்பட்டு ஓதல் செயலாய் விளங்கு கின்றது. இப்போது ஓதல் என்றால் உள்வளர் ஊமை எழுத் தாம் ஓங்கார ஜோதியின் புறக் காரியப்பாடான ஒலிமொழியாக அறிவோம். இதனால் அவ்வோங்கார உண்மை கொண்டு விளங் கும் நூலுக்கு 'ஒத்து' என்ற சொல் வழங்கப்பட்டுள்ளதாம். ஒத்து என்றால் வேதம் என்பர். இதனை ஓதல், ஓதுவித்தல் முறையால், கர்ண பரம்பரையாக செவி வழி புகட்டப்பட வேண்டுமென்பது ஆன்றோர் கொள்கையாம்.

மேற்குறித்த ஓதல் முறையால் மட்டும் அருள் இறை உண் மையைக் கண்டுகொள்ள . முடியாது என்பது அனுபவம். ஆகையால் வேதங்களும் இறைவனை அறிய மாட்டா என மொழிந் துள்ளனர். அருள் ஒளி ஒன்றினால் தான் அவ் இறைவனை அறிய வும் அடையவும் முடியும். இதனைத்தான் நம் வள்ளற் பெருமான் உள்ளொளியாகப் பெற்று விளங்கினார் என்று உணர்த்தப் பெறு கின்றோம்.

''தவறாத வேதாந்த சித்தாந்த முதலாச்
சாற்றுகின்ற அந்தமெலாம் தனித்துரைக்கும் பொருளை
இவறாத சுத்தசிவ சன்மார்க்க நிலையில்
இருந்(து) அருளாம் பெருஞ்ஜோதி கொண்டறிதல் கூடும்.
எவராலும் பிறிதொன்றால் கண்டறிதல் கூடா(து)
என்னாணை என்மகனே அருட்பெருஞ் ஜோதியைத்தான்
தவறாது பெற்றனை நீ வாழ்க என்ற பதியே!
சபையினத் தரசேயென் சாற்றுமணிந் தருளே.''

என்ற அருள்விளக்கமாலைப் பாசுரத்தால், அகம் ஓங்கு சுத்த சிவ சன்மார்க்க நிலையிலிருந்து, அருட்பெருங் ஜோதியைக் கொண்டு தான் கடவுள் உண்மையைக் கண்டடையக் கூடும் என்பது குறிப்பு.

ஓதாதுணர்தல் என்றால் இப்படித் திருவருள் சார்பால் உள்ளொளி கண்டு ஒருமையில் திகழ்வதேயாகும். அப்படி நிற்பவர்களுக்கு, கலையறிவுக்கு எட்டாத இறையுண்மை உள்ளபடி வெளிப்பட்டிலங்குவதாம். உள்ளொளி நிலைபெறாத வெற்று மனோ ஒருமை கொண்ட கன்ம சித்தர்களும், தற்கால மேனாட்டு விசேட உளநூல் விற்பன்னர்களும் (Para—Psychologists) கூட எவ்வளவோ மறைபொருள்களைக் கண்டு வெளிப்படுத்தும் ஆற்றல் பெற்றிருக்கின்றனர் என்றால், நம் வள்ளல் பெற்ற கடவுள் ஆன்ம அருட்ஜோதி நிலையினின்று எம்மறை பொருளைத் தான் உள்ளவாறு கண்டு வெளியிடலாகாதோ! எதையும் ஓதாது உணர்ந்து உரைத்தல் சாத்தியமே என்பது தெளிவாம். ஆகவே நம் பெருமானார் அருள் ஒளி அனுபவத்தில் காணாதவெல்லாம் கண்டும், கேளாதவெல்லாம் கேட்டும், அறியாதனவெல்லாம் அறிந்தும் வெளியாக்கினது உண்மையே. முன்னர் இருந்த ஆன்ம ஞானிகளின் அனுபவங்களும் கூட வெளியாயினவாம். மறைபொருள் உண்மையைக் காத்து வந்த மகான்கள், சூக்கும வடிவினராய் இருக்கின்றவர்கள் கூட வள்ளலாரை அணுகிவந்து தம் அனுபவங்களை வெளிப்படுத்தினார்கள் என்பதும் மெய்யே. மேலும் இந்த அருட்பெருங் கடவுட் ஜோதி நிலையில் தாமே பூரணமாய்த் திகழ்வதைக் கண்டதோடு, தாமே ஒவ்வொருவரின் உள்ளொளியாயிருந்து அவரவர் வண்ணமாய் விளங்குவதையும் உணர்ந்திருந்தார். ஆகையினால் எவர் உள்ளத்தினையும் ஓதாதுணரும் மாண்பு பெற்றிருந்தார் என்பதும் உண்மையே. இந்த உள்ளொளியை வழங்கி முழு ஆகாவாய் நிரம்பி நின்ற

உண்மையை, ''எனக்கே ஆதாரமாகிய அருட்பெருஞ் ஜோதி'', என்று குறிப்பிட்டுள்ளார். எல்லாவற்றிற்கும் முழு முதற் காரணமாயிருக்கின்ற அருள் ஒளியைக் கொண்டதோடு அதுவே தானாக, தானே அதுவாக ஆக்கப்பெற்ற பெருநிலையே இங்கு தமது ஆதாரமாகப் பேசப்படுகின்றதாம். இம்மனித உடலில் அருட்பெருஞ் ஜோதி இறையொளி முழுமையாக, சிரநடுவுள் நிராதார நிலையில் திகழ்வது. அதுவே முழு ஆதாரமாய் உள்ளது. அனுபவத்தின் பொருட்டு அதுவே ஆறாய்ப்பிரிந்து கீழ் ஆதாரங்கள் ஆறில் கிளர்ந்து ஒளிவீசி விளங்கலை யோகியர் அறிவர். அன்னார் கீழிருந்து மேனிலைக்கு ஏறிச்சென்று ஒடுங்கி விடுதல் கூடுமேயல்லாது, அம்மேனிலை நின்று வாழ்வது அமை யாததாம். நம் சுத்த சன்மார்க்கமாம் அருள் நெறியில் அந்த மேலாதாரத்தே நிலை கொண்டு வாழ, அருள் ஒளியே ஆதாரமாகி விளங்குகின்றதாம். ஆகவே அந்த அருட்பெருஞ் ஜோதி ஆதா ரத்தின் பேரில் நம் பெருமான் நித்தியானந்த வாழ்வு கொண்டு விளங்குகின்றார் என்பது தெளிவாம். எனவே இவ்வருள் ஒளியைப் போற்றி ஏற்று உண்மையினை ஓதாதுணர்ந்து ஆதார மாய்க் கொண்டு அருள் இன்பில் ஓங்குவோமாக!

## 13. ஔவிய மாதி தவிர்த்த இயல்

25. ஔவிய மாதியோர் ஆறுந் தவிர்த்த பேர்
26. அவ்வியல் வழுத்தும் அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) திருவருளால் மனம் என்னும் பகுத்தறியும் ஆற்றல் பெற்றது மக்களினம். இதனால் மனிதன் தன்னைச் சூழ இருக்கும் உலகுயிர்ப் பொருள்களைப் பற்றியும், ஆற்றல் இயக்கங்களைப் பற்றியும், அகப்புற இயல்புகளைப் பற்றியும் பலகாலமாக ஆராய்ந்து அரும்பெரும் உண்மைகளை அறிகின்றான். அப்படி அறியலான உண்மைகளில் சிறந்ததுதான் ஆன்மக்கடவுள் ஞானமாம். ஆதியில் இந்த ஞானம் முழுமையாக வெளிப்பட வில்லை. மன உணர்வு புலன்வாயில் சென்று புற ஆராய்ச்சியில் இறங்கி, உண்மை காண வழி துறை தெரியாது மருட்கற்பனை களில் உழன்று கொண்டிருந்தது. உழலும் மனம் ஒருமையுற்று, சலனமற்று உள்ளொடுங்கி நிற்கும்போது, அதுவரை காணாத, அகமறைந்து கிடந்த உண்மை பல வெளிப்பட்டன. அவ்வெளிப் பாடுகளின் விளைவே ஆன்மக்கடவுள் தத்துவம். சில ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே இது வெளியாகி விட்டது.

ஒருமை மனத்தால் உட்கூடி உலைவற்றிருந்த மனிதனுக்குப் பேராற்றல் கிடைத்தது. அவ்வாற்றல் சாதாரண மனித தரத்திற்கு மேற்பட்ட தெய்வீகத்தன்மை கொண்டதாயுணர்ந்து அதனை அக ஆன்ம சக்தி என்றும், கடவுள் அருள் விசேட சக்தி என்றும் போற்றிக் கொண்டனர் ஆன்றோர். அவ்வகப் பெருஞ் சக்தியின் உண்மைய்ய மனத்தூய்மையின் அளவுக்குத்தகவே கண்டு கொள்ளப்பட்டது. மனத்தூய்மை என்பது மாசு நீங்கி, தேசு என்னும் இறையருட்டன்மை சார்ந்த நிலையாம். அருள் ஒளியாம் கடவுள் தேசை மறைத்துள்ளது மருள் இயல் அவா முதலிய மாசாம். சுத்த அன்பு அல்லது தயவு பெருகப் பெருகத் தான் ஆண்டவரின் அருளியல் உண்மை வெளிப்பட்டு நிறைவு பெற உள்ளது.

நிறை யன்பு சேரா இறை ஞானம் குறை ஞானமாகவே இருந்து வந்தது. இப்பொழுது அன்பால் அருள் உண்மை வெளிப்பட்டு, ஆண்டவர் விளக்கம் அருட்பெருஞ்ஜோதி ஆகக் கண்டு போற்றிக் கொள்ளப்படுகின்றது. இதனையே அவ்வியல் வழுத்தும் அருட்பெருஞ்ஜோதி எனப்படுகின்றது. அவ்வியல் என்றால், அகர உண்மை கொண்ட கடவுளின் மெய்யறிவின்ப அருட்பெருந் தன்மையாகும். இப்படி அருட்பெருங் கடவுளைக் கண்டு போற்றுகின்றவர்கள் யார் என்றால், அவர்கள் தாம் ஔவியம் ஆதி ஆறும் தவிர்த்தபேர்களாம். ஔவியமாவது பொறாமை என்ப; இது மாச்சரியமாகவும் உரைக்கப்படும். இது காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாச்சரியம் எனப்படும் ஆறின் ஈற்றில் உள்ளது. இவை ஆறும் மருள்நிலையில் உட்பகையாக, உண்மை கண்டுகொள்ளத் தடையாக, அருள் உண்மை ஞானத்திற்கு இடையூறாக இருப்பனவாம். இந்த அகப்பகை ஆறையும் வெல்லற்கு, ஆறியல் இறையைச் சாருதல் வேண்டும். அவ்வறு குண இறைவனைப் பகவன் அல்லது பகவான் என்பர். பகவனின் இயல் ஆறாவன: வீரியம், ஞானம், செல்வம், புகழ், ஈசுரத் தன்மை, அவாவின்மை ஆம். இவை ஆறும் மூலமுதல் ஆறு ஆதாரத்தெழும் சக்திகளாம். இவற்றின் பயன் யோகானுபவ சித்தியில் ஏகதேசம் விளங்குவதேயாம். சுத்த சன்மார்க்கியின் அனுபவம் மேனிலையில் ஆறியல் அருட்பெருஞ்ஜோதியினால் மட்டும் கைகூடும். நம் சுத்த நெறிக்கு ஜீவதயவே அடிநிலையாய் இருக்கின்றதால், அந்தத் தயவினால் ஞானக்கண்ணைத் திறப்பித்துக் கொள்ள வேண்டியது முதன்மையாம். தயா ஞானம் உண்

டாகிச் செயல்படும்போது பொறாமை என்னும் ஔவியமாதி ஆறும் அகல்வது அனுபவமே. முன் ஞானியர்க்கு இந்த அருள னுபவம் மேனிலை நின்று உண்டாகாததால், மருட்போத கீழா தார அனுபவத்தால் ஆறியல் கடவுள் உண்மை உள்ளவாறு கண்டடைய . முடியாதிருந்தது. அனுபவமெல்லாம் சமயமத யோகானுபவ எல்லையுட் குறுகிக்கிடந்ததாம். இத்தருணம்தான் சுத்த சன்மார்க்கத்தால் அருட்பெருஞ்ஜோதியைப் போற்றிப் பெறும் பயன் அடைகின்றோம்.

## 14. தனிவெளி — சிவவெளி — அருள்வெளி

**27. திருநிலைத் தனிவெளி சிவவெளி யெனுமோர்**

**28. அருள்வெளிப் பதிவளர் அருட்பெருஞ்ஜோதி**

**(உ-வி)** இதற்கு முன் குறிக்கப்பட்ட பன்னிரெண்டு இணை அடிகள் அகரம் முதல் ஔகாரம் முடியவுள்ள பன்னிரண்டு உயி ரெழுத்துக்களை முதலாகக் கொண்டு அமைக்கப்பெற்றுள்ளன. இவ்வமைப்பு உயிர்வர்க்க முறை எனப்படும். அடுத்து பதின் மூன்றாம் நிலையைச் சுட்ட, திருநிலைத்தனிவெளி என்ற சொற்றொ டர் இங்கு அமைக்கப்பட்டுள்ளதாம். இவ்வமைப்பு அருள் அனு பவத்தின் பொருட்டாம்.

நம் தமிழ் நெடுங்கணக்கில் பன்னீருயிருக்கு அடுத்துவருவது, ஃ—என்னும் ஆய்த எழுத்தாகும். இது, தனிநிலை என்றும், முப்பாற் புள்ளி என்றும் கூறப்படும். உயிர் நிலைக்குப் பின் னும், மெய்ந்நிலைக்கு முன்னும் வைக்கப்பட்டுள்ளது இந்த ஆய்தம். தமிழ்ச் சொற்களில் இந்த ஆய்தமும், மெய்யாம் புள்ளி எழுத்துக் களும் மற்றுஞ் சில உயிர்மெய் எழுத்துக்களும் மொழிக்கு முதலில் வரமாட்டா. ஆகவே இங்கு இந்தப் பதின்மூன்றாவது இணையடியை ஒரு வேறுபாட்டுத் தோற்றத்தோடு அமைக்கப்பட்டுள்ளதைக் காண்கின்றோம். அதாவது, தனிநிலை என்ற ஆய்தத்தைக் குறிக் கும் சொல்லை முதலாகக் கொண்டதோடு திரு என்னும் தெய்வப் பண்பு உணர்த்தும் அடை மொழியுஞ் சேர்த்து ஓதப்பெற்றுள்ள தாம். திருநிலைத் தனி என்றதைத் தனிநிலைத் திரு எனக் கொண்டு பொருள் காணவேண்டும். மேலும் இது பன்னிரண் டாம் உயிர்நிலைக்குமேல் பதின்மூன்றாவ்தாகக் கொள்ளப்படுவதின் காரணம் அனுபவக்குறிப்பேயாம். ''உயிரனுபவ முற்றிடில் அத னிடத்தே ஒங்கு அருளனுபவமுறும்'', என்பது வள்ளல் வாசகம்.

அன்றியும் இவ்வனுபவ நிலைகளைக் குறித்து நம் அடிகளார் விளக்கி யுள்ளது இதுவாகும். அனுபவத்திற் பெறப்படும் நிலைகளாவன:—

1. பூத நிலை
2. கரண நிலை
3. பிரகிருதி நிலை
4. மோகினி நிலை
5. அசுத்த மாயா நிலை
6. அசுத்தமகா மாயா நிலை
7. சுத்த மாயா நிலை
8. சுத்த மகா மாயா நிலை
9. சர்வ மகாமாயா நிலை
10. குண்டலி நிலை
11. பிரணவ நிலை
12. பரிக்கிரக நிலை.

இப்பன்னிரு நிலைக்கப்பால் அனுபவப்படுவது பதின்மூன்றாவதா கிய அருள்நிலையாம். இந்த அருள் அனுபவ நிலையில்தான் கட வுள் உண்மை கண்டு அடைதல் கூடும். அக்கடவுள் அனுபவமே சுத்த சிவானுபவமாகக் குறிக்கப்படுகின்றது.

நிறை மனிதனின் அருள் அனுபவத்தில் விளங்கும் கடவுள் ''அருட்பெருஞ் ஜோதி தனிப்பெருங்கருணை''யாக உள்ளது. இவ் வருள் விளக்கத் தொடர் வாசகத்தும் (அ,ருட்,பெ,ருஞ்,ஜோ,தி, த,னிப்,பெ,ருங்,க,ரு,ணை) பதின்மூன்று நேரசைகள் அமைந்தே விளங்குகின்றதாம். இவ்வனுபவம் வெளிப்படுவது நம் சிரநடுச் சிற்றலம்பலத்தின் கண்ணேயாம். இவ்விடம் பகர வடிவக் குழி யிடமாகவும், மேல் லகர மெய்யாம் — ல் — என்னும் பதின்மூன்றா வது மெய்ந்நிலை எழுத்தால் குறிக்கப்படுவதாம். ஆகவே இந்தப் பல் நிலையே அருட்பெருங்கடவுளர் தனிப்பெருங் கருணையுடன் திகழும் உண்மையைச் சுட்ட வந்துள்ள தாம். இப்படி வெளிப் பட்டிலங்கும் இக்கடவுள் உண்மை, இந்த ஆன்ம அணுவுக்கு அகத்தும் புறத்தும் அருட்பெருஞ் ஜோதியாகவே நிலவுகின்றதாம். இவ்வுண்மையைக் குறிக்க (அம்+பல்+அம்) அம்பலம் என்ற சொல் வழங்கப்பட்டுள்ளது. முதலிலுள்ள அம், ஆன்ம அணுவின் அகத்தே அருவ அருள் உணர்வாய் உள்ளது; ஈற்றிலுள்ள அம் ஆன்மாவின் புறம் சூழ்ந்த ஜோதியுருவாயுள்ளதாம். இவ்விரு நிலைக்கும் நடுவிலே தான் நம்பதி திரயோதசாந்த அருள் அனு பவத்தில் ''அருட்பெருஞ் ஜோதி தனிப்பெருங்கருணை'' யாய் வெளிப்பட்டு, நம்மைப் பேரின்பில் விளங்கச் செய்யப் பேரானந்த நடனம் புரிந்து கொண்டுள்ளார். இந்த அருட்பெருநிலையே, தனி நிலை என்னும் ஆய்த எழுத்தியலால் வெளியாக்கப்பட்டுள்ளதாம்.

இங்கு குறிக்கப்பட்டுள்ள மூன்று வெளிகளின் உண்மை, ஆய்த எழுத்திற் காணும் கீழுள்ள இருவட்டங்கள் கடவுளர் ஈரடிகளையும்

மேலுள்ள ஒரு வட்டம் முடிநிலையனுபவத்தையும் சுட்டுகின்றன வாம். வெளி என்பது வெற்றிடநிலையாம். புறத்துள்ள அகண்ட வெளி வட்ட வடிவமாக இருக்கின்றதைக் கொண்டு அதனைச் சுட்டுவதற்கு வட்டக் குறியீடு அமைத்தனர். இந்த புறவெளியின் உண்மை அனுபவமெல்லாம் ஆன்ம சிற்றணுவில் வெளியாகின்ற தால், அவ்வணுவுக்கும் அதனுள் மறைந்து நின்று ஆட்சி புரிகின்ற அருவ அருட்சக்திக்கும் கூட வட்டக்குறி அடையாளமே கொள்ளப் பட்டுள்ளதாம். புறத்தே ஜோதிமயமாயுள்ளது சிவவெளி என வும், அகத்தே அருள் சக்திமயமாயுள்ளது அருள்வெளி எனவும், இவ்விரண்டின் மேற்பக்குவ காலத்தே அனுபவப்படும் நித்தியா னந்தப் பெருநிலையை தனிவெளி எனவும் உணர்த்தப்படுகின்றோம். இத்தனிநிலை வெளியில் நித்திய வாழ்வு பெற்றுத் திகழ்வதே சுத்த சன்மார்க்கத் திரிதேக சித்திப் பெருநிலையாம். இதுதான் உண்மையான திருவாழ்வாகும். இந்தத் தனிநிலையுற்றிருந்து கொண்டே நம் வள்ளற்பெருமான், அகச் சிற்சபையும் புறப் பொற்சபையும் உரிமையிற் பெற்றுத்தான், சிற்சபையும் பொற் சபையும் சொந்தமென தாச்சு என்கின்றார். இப்பொற்சபையே சுத்த தேகமாகவும், சிற்சபையே ஞானதேகமாகவும் கொண்டாடு கின்றார் திருவருட் பிரகாசமாம் அருட்பெருவடிவில் விளங்குகின்ற நம் வள்ளலார்.

"ஆடும் கருணைத் திருநடத்தீர்
　　ஆடும் இடந்தான் யாதென்றேன்
பாடும் திருவும் சௌந்தரமும்
　　பலமும் காட்டும் இடமென்றார்
நாடும் படிநன் கருளுமென்றேன்
　　நங்காய் முன்பின் ஒன்றேயாய்
ஈடுந் தியபல் நடுவுளதாம்
　　என்றார் தோழி இவர்வாழி."

என்ற அருட்பாசுரத்தால் அருட்பெருஞ்ஜோதி நடனபதியின் அம்பல உண்மையும், அந்தப் பல்நிலைப்பதியின் திருவருளின் சேர்ப்பால், திருவும்-பொன்வடிவச் சுத்த தேகமும், சௌந்தரம்= அழகு=அம்=அ+(உ)+ம்=ஓம் என்னும் பிரணவ தேகமும், பலம்=பழம் ஆகிய ஞான தேகமும் பெறப்படும் இடமே கடவுள் ஆடும் அம்பலம் எனத் தெரிவிக்கப்பட்டுள்ளது.

ஆய்தம் குறிக்கும் முப்பாற் புள்ளியின் உண்மை, பதுமாசனத் திருக்கும் யோகியின் வடிவில், இருகாற் பெருவிரலின்கண் உதித் தொளிர் இடபிங்கலா நிலைச் சூரிய சந்திர வட்டங்களையும் மேற்

சிரத்தொளிர் சுழிமுனை ஜோதி வட்டத்தையும் குறிக்கும். மேலும் இவ்விருகலா நாடியின் முடிநிலை தீண்டி நிற்கும் இருகண்வட்ட நிலையையும், அவற்றின் நடுவுற்று அக்கினிகலா ஞானக்கண்ணாய் அதுவும் ஒரு வட்டமாய்த் திகழும் நிலையையும் உணர்த்துகின்றனவாம். மேல் உள்ள தனி வெளி சுட்டும் நுதற்கண்ணே மெய் யனுபவத்திற்கு உதவி நிற்கின்றதேபோல், முக்கன் என்று குறிக்கப்படும் தேங்காயின் அந்த மேனிலைக் கண்ணே அதற்கு விளைவுபெறக் காரணமாய் உள்ளதை அறிவோம்.

எனவே, நாம் நமது உண்மை நிலையாகிய திருவளர் தனி வெளிநிலையுற்று, அருள்வெளி சிவவெளி அனுபவமுண்டாக அருட் பெருஞ்ஜோதியைப் போற்றி செய்வோம்.

## 15. சுத்த சன்மார்க்க வெளி

**29.** சுத்தசன் மார்க்க சுகத்தனி வெளியெனும்

**30.** அத்தகை சிற்சபை அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** மேலே குறிக்கப்பட்ட தனிவெளியேதான் இங்கு சுத்த சன்மார்க்க வெளியாகப் பேசப்படுகின்றது. அந்த வெளிநிலை அருட்பெருஞ் ஜோதி கொண்ட ஆன்ம சிற்சபையே யெனத் தெளிவு செய்யப்படுகின்றது. இங்கிருந்துதான் சுத்த சன்மார்க்கமாம் பெருநெறி திறக்கப்படுகின்றது. மற்றெல்லா உலகச் சமய மத நெறிகள் யாவும் வேறு வேறு வெளிநிலைகளி லிருந்து ஆக்கப்பட்டிருக்கின்றனவாம். உலகநெறிகள் தோன்றிய வெளிகள் யாவை எனில், இந்திரியவெளி, கரணவெளி, ஜீவவெளி, ஆன்மவெளியாம். இவற்றுள் ஜீவ ஆன்மவெளி நின்று தோன்றியவை அகச் சமயமாகிய சைவம் வைணவம் முதலியனவாம். இந்திரிய கரண வெளிகளினின்று தோற்று விக்கப்பட்டவைகளே புறச்சமயங்கள் யாவுமெனலாம். பின்னுற்ற சிலர், நம் அகச்சமய உண்மையைப் போற்றிக் கொண்டு, இதி னின்று ஓரளவைத் தமது நெறியில் ஏற்றிக் கொண்டுள்ளனராம். இந்த உண்மைகள் எல்லாம் இன்றைய மக்கள் சமுதாயத்திற்கு விளங்குகின்றன இல்லை. அப்படி உண்மை அறியவேண்டு மானால், ஒவ்வொருவரும் சுத்தசன்மார்க்க நிலைக்கு ஏறிவர வேண்டும். 'இவறாத' (உலோபத்தன்மையற்ற, தயவுத்தன்மை நிறைந்த) சுத்த சிவ சன்மார்க்கத்தில்தான் எல்லா உண்மையும் உள்ளவாறு விளங்கும். அவ்வுண்மை கொண்டு உல்வா இன்ப வாழ்வு பெறலாம்.

நம் ஆன்ம வெளிநிலைக்குமேல் அருட்பெரு வெளி விளங்குகின் றது. அகச் சமயநெறியின் அந்தத்திலுள்ள இவ் அருள்வெளி யைப் புறத்திருந்து பாவித்தவர்களுக்கு அந்நிலை கிட்டவில்லை. அவர்கள் ஐயமுற்று புறநின்று ஒழிந்தார்கள். அந்நெறிகளுக்கு முற்றிலும் வேறானது நமது சுத்த சன்மார்க்கம். இந்த உண் மையைப் புரிந்து கொள்ளாமல்தான் பலரும் இதனை (சுத்த சன்மார்க்கத்தை) அவற்றோடு (பிற நெறிகளோடு) வைத்து மதிப் பிட்டும், ஒப்பிட்டும் பழமையின் விளைவு தான் இதுவென்றும், சிறந்த அப்பழநெறிகளைக் கைவிட்டு இப்புதுநெறியை மேற் கொள்ளுவதால், சமய மதங்களே அழிந்து, மக்களினமே கெட்டு ஒழிந்து போகும் என்றெல்லாம் கூச்சலிடுகின்றார்கள் அப்பழமை விரும்பிகள். உண்மையில் இவர்கள் தம் கொள்கைகளைக் கைவிடு வது, தாம் மேற்கொண்டிருந்தது மூடமென்றாகிவிடும் என்றும், தம் கௌரவம் போய் விடுமென்றும், தமது பிழைப்புக்கே ஆபத்து நேர்ந்துவிடும் என்றும்தான் இப்போது இப்பொது நெறியைக் காணவும் அஞ்சுகின்றார்கள்! அவ்வளவும் அறியாமையேயாம். நம் நெறியால் எல்லோருக்கும் பெருநலம் உண்டாவது நிச்சயம். பழைய வற்றின் முடிந்த லட்சியங்களும், அவற்றிற்கெல்லாம் மேலான பேரின்ப லட்சிய வாழ்வும் சித்திப்பது திண்ணம். ஆகையால் எல்லோரும் இந்தச் சுத்த அருட்பொது நெறியைக் கைக்கொண்டு உய்யலாம். ஆகவே ஈண்டு இச்சுத்த சன்மார்க்கத்தை நன்கு புரிந்து ஏற்றுக் கொள்வோமாக.

எங்கும் பரிபூரணமாய் என்றும் திகழ்ந்து கொண்டு அருட் பெருஞ்ஜோதியாய் விளங்குகின்ற ஆண்டவரை மெய்யருள் அறி வாலே நமது ஆன்ம சிற்சபையில் தான் காணவேண்டியிருக்கிறது. பிற எவ்விடத்தும், எக்காலத்தும், எதனாலும் எல்லாம் வல்லபதி யைக் கண்டு கொள்ளவே முடியாது! ஆகையால் தயவோடு, சத்விசார வசத்தராய், ஒருமை மனத்தால், புருவ நடுவுட் புகுந்து, சிற்சபையை அடைந்து அதுவாகி நிற்கப் பழகுதல் வேண்டும். புல நெறியில் மயங்கி புறத்துழலும் மக்களுக்கு இது கடினமாக இருக்கலாம்.

என்றாலும், தயாநன் முயற்சி செய்யின் திருவருளே முன் நின்று கூட்டி வைக்கும். இவ்வக அம்பலத்தே பொருந்தி நின்று புற வாழ்வில் விருப்பு வெறுப்பின்றி, சூழ் உலகில் ஜீவ விளக்க ஞான விளக்கப்பணி புரிந்து கொண்டு சுத்த இன்பானுபவத்தில் திகழ்வதே இந்நெறியின் குறிக்கோளாம். இதுதான் சுத்த சன் மார்க்க இயல் என்றும், அனகநெறிமுறை என்றும் தெளிதல்

வேண்டும். இதனால் உலகில் அருள் ஒளியின் கீழ் மக்கள் சமுதயாம் முழுவ்மயும் நல்லின்ப வாழ்வில் தழைத்தோங்கும்.

## சுத்தசன்மார்க்கம்

### (தனியொரு சிறப்புக் கட்டுரை)

உண்மை எல்லாம் காணவல்லது மக்களினம். அப்படி உண்மைகண்டு வெளிப்படுத்தின உயர் அறிவுடையவர்களே மக்களிற் சிறந்த பெரியோராகப் போற்றப்படுகின்றனர். அவர்கள் கண்ட மெய்ப்பொருளை அல்லது கடவுளை மக்கள் சமுதாயம் அறிந்து, அடைந்து ஆனந்திக்க வேண்டுமென்று கருணையுள்ளங் கொண்டு வழிவக்கை செய்து கொடுத்தனர். அவ்வழிமுறைகளே சமயமத மார்க்கங்களாம்.

மக்களின் உள்ளப்பண்பாடும், அறிவு ஆற்றலும், செயல் திறனும் ஒன்று போலில்லாது பலதரப்பட்டனவாயிருக்கின்றன. ஆகையால் அவரவர்களின் இயல்புக்கு ஒத்தபடி நெறிமுறைகள் தொகுக்கப்பட நேர்ந்துள்ளனவாம். அந்நெறிமுறைகள் நான்காய் உள்ளனவாம். அவை நான்கும் கீழிருந்து ஏறிச்சென்று கடவுளை அடையும் முறையாகும். அவை சரியை, கிரியை, யோகம், ஞானம் எனவும், தாசமார்க்கம், சற்புத்திரமார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் எனவும் கூறப்படும். ஞானசன்மார்க்க நிலை கடவு ளோடு கூடி ஒன்றிடச்செய்வதாம்.

சன்மார்க்கம் என்பதன் பொருள் விளக்கம்: சத்துமார்க்கமே சன்மார்க்கமாம். சத்தாவது, நித்தியமாய், இயற்கையுண்மைப் பொருளாய், எல்லாவற்றிற்கும் ஆதாரமாய் உள்ள கடவுள் நிலையைக் குறிப்பதாம். அந்தச் சத்துப் பொருளை அடையும் நெறியே சன்மார்க்கம் எனப்படுகின்றதாம். இச்சன்மார்க்கம், புறநிலை நின்று கட்வுளை நோக்கிச் சென்று அடையும் நெறி யாக இருக்கின்றது. கடவுள், எவ்வுயிர்க்கும், எப்பொருட்கும் அகம்புறம் எங்கும் நிரம்பியுள்ள்வரே எனினும் ஒருவனுடைய அகமாகிய ஆன்மாவில் தான் மெய்யறிவாகிய ஞா்னக்கண் ணுக்கு வெளிப்பட்டு, தன் 'நிறை நிலையை' எங்கும் நிரம்பியதன் வடிவைக் கண்டு கொள்ளச் செய்கின்றார். இந்த ஆன்மாவில் தோன்றிய கடவுட் சத்துண்மை வடிவை ஒருமையாற்பற்றி நின்று ஒன்றித்துப்போவதுவே சன்மார்க்க முடிவாகக் கொள்ளப் பட்டது. இந்த அளவு உண்மைகூட விளங்காத பலவாகிய

புறநெறிகளால் பெறப்படும் தெய்வநிலை அடைவு மிகக்குறை வுடையதேயாம். மேலும் இந்த அகப்புற நெறிகள் யாவும் குறிப்பிட்ட ஓர் ஒரு பிரிவினர்க்கே உரியதாய்க் கொள்ளப்படுவ தால், பொது மக்கட் சமுதாயத்திற்கு ஒருமைப்பாட்டு உரிமை வாழ்வுக்கு வழி ஏற்படவில்லை. மேலும் கடவுள் ஒருவரே சத்தாய் இருப்பதும், சித்தால் தேகாதி பிரபஞ்சம் யாவுமாய் விளங்குவதும், மனிதனின் அகத்தே வெளிப்பட்டு, நிறை இன்பில் நிலவச் செய்வதுமா யுள்ளாராம். ஆகையால் எவன் ஒருவன் இந்தச் சச்சிதானந்தப் பதியைத் தன்னகத்தே கண்டு அதுவாகி விடுகின்றானோ அவனே கடவுணிலை எய்தியவனாகக் கருதப் பட்டது.

மேற்குறிக்கப்பட்ட சன்மார்க்கத்தால் மனிதன் கடவுள் உண்மையை அகமிருந்து கண்டுகொண்டது சரியே. ஆனால், அந்தக் கடவுள் ஒருவரே தன் அருட்சித்வசத்தால் ஒவ்வொரு வரின் ஆன்ம வண்ணமாயிருந்து, அவரவரின் உயிர் உடல் வாழ்வுமயமாய் வெளிப்படுவதும், ஒடுங்குவதுமாயுள்ளாராம். ஆகையால் உண்மையில் ஒன்றான கடவுளேதான் தன் அருட்சித் தால் நாம் ஒவ்வொருவருமாய் விளங்குகின்றதை அருளால் உணர்கின்றோம். எனவே கடவுள் ஒருவரே அழிவற்ற, மாற்ற மில்லாத அகவடிவோடும், மாற்றமும் மறைவும் அடைகின்ற பலவாகிய புறவடிவங்களோடும் விளங்குகின்றதே உண்மை யாம். இவ்வுண்மையை அறிந்து கொள்ளாமல் தான் மனிதன் தன்னை அழிவடிவினனாகவும், கடவுளை மட்டும் நித்திய வடிவின ராகவும் கொண்டிருந்தான். அதனால் கடவுளை அடைய, புற நிலையை விட்டு அகத்தே சாரவேண்டியவனானான் அதற்கான மார்க்கமும் அப்படி தோற்றுவிக்கப் பட்டிருந்ததாம். இப்பொழுது உண்மையை உள்ளவாறு கண்டு கொண்டதால், நாம் கடவுளை இயல்பாகவே, அத்துவிதமாகக் கொண்டு விளங்குவதாய் உணர்கின்றோம். இவ்வுணர்வு விளங்குவதற்கென்றே நம் அக முடையானின் அருட்சித்துச் செயலாய் நம் இந்த மனித உடல் விளங்குகின்றதையும் அறிகின்றோம். இதனால் இதுவரை நாம் அழிபடும் தேகபோக வாழ்வில் உழன்றுகொண்டிருந்ததை விட்டு விட்டு, அழிவற்ற கடவுளான்ம நிலையிலிருந்து கொண்டு, கடவுளின் அருளால் அருட்சித்துச் செயலோடு வாழ வேண்டி யிருக்கின்றதாம்.

இந்த அகமிருந்து வாழும் அருட்பெரும் வாழ்வுதான் சுத்த சன்மார்க்கத்தால் வழங்கப்பெறுகின்றோம் இன்று. இப்பொழுது

சன்மார்க்கத்திற்குப் பொருள் இதுதான்: சத்து சித்து ஆனந்த மான கடவுள்தான் நமது உண்மையாகவும் இருக்கின்றதால், இதனை நன்கு உணர்ந்து கொண்டு, இதுவாக நிலைத்திருந்து கொண்டு, இதுவான நிறை இன்பவாழ்வில் என்றும் திகழ்வதே பொருந்தும். சுத்தம் என்பது யாதொரு கலப்புமற்ற சச்சிதா னந்த அருட்பெருஞ் ஜோதிக் கடவுளைக் குறிப்பதாம். அந்த அருட்பெருஞ்ஜோதிபதியின் வண்ணமாய்க் காட்டிக் கூட்டி வாழ்விக்கின்ற நெறிமுறையே இங்கு சுத்தசன்மார்க்கமாக மொழியப்படுகின்றது. ஆகவே, இச் சன்மார்க்கத்திற்கும், முன்னோர் கண்டிருந்த சன்மார்க்கங்களுக்கும் உள்ள உண்மை வேறுபாட்டைப் புரிந்து கொள்ள வேண்டும் யாவரும்.

## சுத்த தயவு நெறி

நமது சுத்தசன்மார்க்கத்தை இப்பொழுது சுத்த தயவு நெறியாகக் கொள்ள நேருகின்றது. இத்தயவு நம் சச்சிதானந்த பதியின் உண்மையையே சுட்டுகின்றதாய்க் கண்டு கொள்ளு கிறோம். ஆதலின் சுத்த சன்மார்க்கத்தில் இதன் விரிபொருள் விளக்கம் எவர்க்கும் எளிதில் ஏற்கத்தக்கதாய் அமைகின்றதாம். இத்தயவின், த—அகண்டாகாச வெளிநிறை அருட்பெருஞ் ஜோதியைக் குறிக்கிறது. இது சத்துப்பொருள் கொண்ட இறைவண்ணமானதாம். அந்த அருட்பெருஞ் ஜோதி அகண்ட வெளியில் தனியொரு ஆன்ம அணுவாயுள்ளதே யகரமாம். இந்த ஆன்மாவுக்கு வு—கரச்சேர்க்கையால் நிறை தயவு அனு பவம் உண்டாகி ஆனந்த வாழ்வு நிலவுவதாம். எனவே இத் தயவுதான் கடவுளின் நிறை உண்மை கொண்டு மனிதனாகி (மன்+நிதன்) அழிவற்ற நித்திய வடிவினன், மன்+இதன்= நிலைத்த இன்புருவினன், என்று விளங்கும் உண்மையைச் சுட்டு கின்றதாம். ஆகையால் சுத்த தயவுநெறி, அகமிருந்து, நிறை தயா இன்பவாழ்வாய் விளங்கும் சுத்த சன்மார்க்கமே.

## தயவு நெறி முறை

சுத்த சன்மார்க்கம் மனிதனை இறவா நிலையில் இருத்தி, நிறையின்போடு என்றென்றும் வாழச்செய்வதாம். இதற்குத் தயாவொழுக்கம், தயாவிசாரம், தயா இன்ப வாழ்வு எனும் மூன்று நிலைகள் உள்ளன. இவற்றால் அடையப் பெறுவது சுத்த தயா

இன்ப வாழ்வாம். இவ்வொழுக்கமும், விசாரமும், வாழ்வும் பற்றி இங்கு குறிப்பாம்.

(அ) தயாவொழுக்கம்: ஜீவ தயாவொழுக்கம் தான் நம் சுத்த நெறியின் முதற்படியாகும். இதனால், தேகேந்திரியத்திலும், மனோகரணத்திலும், ஜீவ ஆன்மாவிலும் தயவு ஒளிசேரும். நமது அகத்தும், புறத்தும் நன்மையே விளைவு கொள்ளும்.

(ஆ) தயாவிசாரம்: கடவுள் உண்மையும் நமது உண்மையுமான தயவு விளக்கத்தை தயவோடிருந்து கொண்டு செய்யும் விசாரத் தால் உள்ளூற அறிந்து தெளிவு பெற்று விளங்கலாகும்.

(இ) தயா இன்பம்: தயவு நிலையைச் சிரநடு சிற்றம்பலத்திற் கண்டு நின்று, சூழ்நர்க்குத் தயவோடு உயிர் விளக்கத்தாலும் அறிவு விளக்கத்தாலும் இன்பு செய்து விட்டு உளநிறை மகிழ் வோடு உள் நின்று ஒளிர்வதே தயா இன்பம் பெறும் முறை யாகும். இத்தயா இன்பக்குறிக்கோளோடுதான், கொலை புலை தவிர்த்த, தேகபோக இச்சையற்ற வாழ்வில் நாளும் முன் னேறி வரல் வேண்டும். அகமிருக்கும் தயா அமுதம் பெருகப் பெருக நித்தியமான கடவுள் தயா இன்ப வாழ்வு சூழுடலையும் சுத்த தயா இன்புருவாய்த் திகழச் செய்யும்.

மேற்படி சுத்தசன்மார்க்கத்தையே, நன்கு அறிந்து எவரும் ஏற்றுப் பயன் அடையவேண்டும். இந்நெறியை அறிந்து ஏற்றுக் கொள்ளும்போது இதுவரை நாம் பின்பற்றி வாழ்ந்து வந்ததை எண்ணும்போது, எவ்வளவு அறியாமையில் அவத்தைப்பட்டு அழிந்து கொண்டிருந்தோம் என்பதையுணர்வோம். பழநெறி முறையால் மனித சமுதாயம் உண்மையைத் தெரிந்து கொள் ளாமல் தயவில்லாக் கொள்கை கோட்பாடுகளால், சிறு இன்ப லட்சியங்களால், வேற்றுமை எண்ணங்களால் துன்பமே விளைந் துள்ளதெனக் காண்கின்றோம்.

நம் சுத்த தயவுப்பதி நம் ஆன்ம ஆலயத்தில் இருந்து, நம்மையும் (தய ஆக) உடன்கொண்டு, தயவு புரிகின்றார். அவருடைய ஆணைப்படியே நம்மைச் சூழ ஒவ்வொருவரும், ஒவ்வொரு பொருளும், ஒவ்வொரு சூழ்நிலையும் வருகின்றதை அறிகின்றோம். மேலும் நம்பதியே, எங்கும் நிறைந்துள்ளவராதலின் அப்படி நம்மைச் சூழவரும் எது ஒன்றிலும் அவரே இருந்து அதுஅது வாகத் தோற்றங் காட்டி நம்மைத் தயா இன்பம் பெறச் செய்ய

வந்துள்ளதாய்த் தெரிந்து கொண்டு, நாமும் தயவோடு எதிர் கொண்டு வாழ்வளித்தலே முறையாகும். எதிர்ப்படும் எவரையும் புறநோக்காகக் காண்பதோடு, உளநின்று ஒளிரும் பதியின் புற நிலையாகவே கண்டு ஆவன செய்திடல் நம் கடமையாம்.

நாம் காண்கின்ற எந்த மனித வடிவிலும், மனத்தால் கருதுகின்ற எவர் வடிவிலும், கற்பனா தெய்வ வடிவங்களிலும், பிற எவ்வுயிர் வடிவிலும் உள்ளீடாய் இருக்கின்றது நம் தயாபெரும் பதி ஒருவரே எனவும், அவரது ஏகதேச விளக்கமே, எங்கெங்கும் வெளியுற்று ஒளிர்வனவாக உண்மையாய் உணர்ந்து தயவு செய்வதே நம் கடமையாம். சுத்த சன்மார்க்க அன்பர்கள் எங்கும் அருட்பெருஞ்ஜோதியை அல்லது தயாபெருஞ் ஜோதியை உண்ணின்று கண்டு போற்றுதல் வேண்டும். பிற புறத்தெய்வங்களைக் காணும்தோறும் உள்ளொளியை மறவாது பற்றிநின்று விருப்பு வெறுப்பின்றி தயவோடு நடந்து கொள்ள வேண்டும். தயவில்லாத எச்செயலும் தெய்வ வழிபாடாகாது. காலத்தையும் பொருளையும் உலகச் சூழலையும் தயவு வாழ்வுக்கே பயன்படுத்தி வரல் கடவுளாணையாகும்.

நமது திருவருட்பிரகாச வள்ளலார் தயவு மிகவுடையவராய் இருந்து சத்விசாரத்தால் அகத்தே அருட்பெருஞ் ஜோதியைக் கண்டார். அதனால் எவ்விடத்தும் உண்மை கண்டு அருள் பெருக வாழலானார். முன்னம் பழ நெறிகளின் தொடர்பால் தெய்வத்தினிடத்து மிகு பக்தியும், ஜீவர்களிடத்துப் பெருந் தயவும் கொண்டு வாழ்ந்த போது பக்திப் பாடல்கள் ஆயிரக் கணக்கில் பாடினார்; துதித்தார். சுத்த நெறி சார்ந்த பின்னரோ எல்லாவற்றிற்கும் உள்ளொளியான அருட்பெருஞ் ஜோதியையே கண்டு போற்றலானார். நம்மையெல்லாம் இந்தச் சுத்த நெறியையே ஏற்க வேண்டுகின்றார். மற்ற நெறிகளால் நன்மை இல்லை. அதற்குச் சான்றாகத் தன்னையே எடுத்துக்கொண்டு மேல் நிலைக்கு வரும்படி கூறுகின்றார். ஆதலின் திருவருட்பாவை ஓதிவரும் அன்பர்கள் முதல் ஐந்து திருமுறைகளில் பற்று கொண்டு பழ நெறியில் நின்றுவிடக்கூடாது. ஆறாந் திருமுறையை சுத்த சன்மார்க்க லட்சியத்தோடு பயின்று தெளிந்து ஏற்று வாழ்தல் வேண்டும்.

சுத்த சன்மார்க்கத்தின் உண்மையைப் புரிந்து கொள்ளாமல் பழையனவற்றோடு வைத்து எண்ணிக்கொண்டும், பொருளைத்

திரிபுபடுத்திக் கூறிக் கொண்டும் இருக்கின்றனர் பலர். ''புன் மார்க்கத்தவர் போல வேறு சில புகன்றே புந்தி மயக்கடை யாதீர்,'' என்று அன்றே கூறினார். இன்றும் அம்மருள்நிலை மாறவில்லையே! சுத்த சன்மார்க்கம் என்றால் என்ன என்று கேட்கின்ற அன்பர்களுக்குப் பதில் கூறித் தெளிவு செய்ய யார், எங்கே இருக்கின்றார் என்று தேட வேண்டியிருக்கின்றது. மிகுதி யாக ஆராய்ந்தும், மணிக்கணக்கில், நாட்கணக்கில் விரிவுரை செய்து கொண்டும், கட்டுரைகள் வரைந்து கொண்டும் இருக்கும் அன்பர்கள் மூலம் சுத்த சன்மார்க்க விளக்கம் வெளியாகுமா, வெளிவருமா என்று பார்த்துப்பார்த்து மனம் மறுகுகின்றனர் ஒரு சில சன்மார்க்கத் தொண்டர்கள். திருவருளே அதனைத் தயவோடு வெளியிடத் தூண்டி உதவியதால் ஒருவாறு இங்கு இதனைக் குறிக்க நேர்ந்தது. இதனைக் கொண்டு உள்ளுணர்ந்து சார்ந்து நின்று திருமுன் விண்ணப்பம் செய்யும் அன்பர்கள் உண்மையை நேரடியாகக் கண்டு கொள்ளலாம். ஆறாந்திரு முறைத் துதிபாடல்களைப் புருவநடுவிலிருந்து, சிரநடுச் சிற்றம் பலத்தில் அருட்பெருஞ் ஜோதியை எழுந்தருளப் பண்ணிப் போற்றி, உண்மையைக் காட்டிக் கூட்டி வைக்கும்படியாக வேண் டிக்கொண்டிருந்தால் நாளடைவில் உண்மை எல்லாம் அறிந்து அடைந்து பயன் பெறலாம்.

தயவுமயமாக உள்ளிருந்து வாழ்வதுவே சுத்த சன்மார்க்க நெறிமுறை என்பதைத் தெளிவுபெறக் கொண்டு இடையறாது மறவாது செயலோடு வாழ்தல் வேண்டும். ''கையற வில்லாது நடுக்கண்புருவப்பூட்டு,'' என்ற வாசகமே இந்நெறிக்கு விளக்கம் தருவதாம். கையறவு என்றால், சோம்பல், செயலற இருத்தல்: அப்படிச் சோம்பியில்லாது லலாடத்தில் ஒருமையுற்று இருந்து கொண்டு தயவுச்செயல் புரிந்து கொண்டிருப்பதுவே இங்கு சுட்டப்படுகின்றதாம். ஆகையால் ஒவ்வொருவரும் அக அம்பலத்திலிருந்து பிரிவற விளங்கிக் கொண்டு தயா இன்ப வாழ்வு வாழவேண்டும். இது சுத்த சன்மார்க்க வாழ்வு முறையாம். எல்லோரும் இந்நெறி கொண்டு இன்புற்று விளங்குவார்களாக. அகமிருந்து விரிந்து விளங்கிக்கொண் டிருக்கும் அனக நெறியும் இதுவாகும்.

மேற்கொண்டு விளக்கங்களை சாகாக்கல்வி என்ற நூலில் காண்க. (பக்.16-26)

## 16. சுத்த மெய்ஞ்ஞான சுகவெளி

**31. சுத்தமெய்ஞ் ஞான சுகோதய வெளியெனும்**

**32. அத்துவிதச்சபை அருட்பெருஞ் ஜோதி**

(உ-வி) அகண்ட பிரபஞ்சவெளி அளவிடற்கரியதாய்ப் புறத்தே சூழ்ந்துள்ளது. அந்தப் பெருவெளியின் உண்மை விளக் கத்தை உள்ளவாறு அறிய வேண்டுமானால், நமது அகமாகிய ஆன்மாகாச அருட்பெருவெளியில் இருந்து, சுத்த மெய்யறிவால் தான் காணவேண்டும். இந்த அகவெளியே சுத்த சன்மார்க்கத் தனிவெளி எனவும், சுகவெளி எனவும், முன் குறிக்கப்பட்டது. இவ்வெளியில் தான் வளரொளியாக நம் அருட்பெருஞ் ஜோதியின் அனுபவம் வெளிப்பட உள்ளதாம். இது சுத்த சன்மார்க்கம் தோற்றுமிடமாம். ஆகப் பெருவெளியெலாம் நிரம்பி நித்தியமாய் விளங்கும் கடவுளை, அதன் உண்மை விளக்கம் அறியப்படுகின்ற இந்த அக வெளியில் நின்று அனுபவ பூர்வமாக அடைய வேண்டியிருக்கின்றதாம்.

புறத்திருந்து சென்று ஒடுங்கிப்போகும் பழைய சன்மார்க் கங்கள் போன்றல்லாது மெய்ஞ்ஞான விசாரத்தால் சுத்த மெய்ஞ்ஞான நிலையத்திருந்து அல்லது சத்திய ஞான சபையி லிருந்து வாழச்செய்வது இந்த சுத்த சன்மார்க்கம். திரு அம்பலவன் திருநோக்கம் பெற்றார்க்கு உரு அம்பலத்தே என்று உணர்த்தப் பெறுகின்றோம். இந்த அம்பலவாணன், அம்பல அன்பன் தான் அருளின்பானுபவத்தை அறிந்து நுகரத் தொடங்கு கின்றான். ஆகையால் இந்த அக அருள்வெளி சுகோதய வெளி யாக உரைக்கப்பெறுகின்றது.

*“அருளாலே அருளிறை அருள்கின்ற பொழுதங்கு*
*அனுபவமாவது என்னடி தாயே,*
*தெருளாலே மருளாலே தெரியாது தெரியும்*
*திருவடி இன்பமென் றறியடி மகளே.”*

என்ற பாவிளக்கத்தால் தெளிவுறும் உண்மை இதுவாகும். அருட்பெருஞ் ஜோதி ஆனந்தபதி இந்த அகவெளியில் அருள் ஞானத்தால் அறியப்பட அறியப்பட உள்ளிருந்து, இது வரை அனுபவித்தறியாத பேரின்பம் வெளியாகிப் பெருகுகின்றதாம். இதனால் இந்த அருள்வெளி சுகோதயவெளி என்பது உண் மையே.

அருட்பெருஞ்ஜோதியோ உதயாத்தமனமின்றி, தோன்றுதலும் மறைதலும் இல்லாது எக்காலும் அக சுத்த ஞானாகாச வெளியில் திகழ்ந்து நின்று பேரின்பமயமாய் விளங்குகின்றது. இப்படியுள்ள பதியே தான் இந்த அருளின்பானுபவம் வெளிப்படக் கொண்டு உலக வாழ்வில் விளங்கற்கு வேண்டி, இந்த மெய்ஞ்ஞான மனிதவடிவினனாகத் தோன்றியுள்ளதாம். அந்த அருட்பதியும் இந்த மெய்ஞ்ஞானியும் வேறல்ல ஒருவரே என்பது உண்மை. இவ்வுண்மைதான் அக ஆன்ம சிற்றணுவில், அத்துவித சிற்சபையில் அனுபவப்படுகின்ற அருட்பெருஞ்ஜோதியாம். இந்த மெய்ஞ்ஞானி எந்த அளவுக்கு உடற்பற்று நீங்கி, அருள் அனுபவம் பெறுகின்றானோ அந்த அளவுக்குச் சுகவாழ்வில் ஓங்குகின்றவனாகின்றான். பூரண நிலையில், சுகத்தின் உச்சமுற்றவனாய், சுத்த சுகானந்த வடிவினனாய் என்றும் திகழ்வான். முக்கியக் குறிப்பு: அகண்டமானது: கடவுள் பேருருவம். அவ் அகண்டத்தில் ஒரு சிற்றணுவைத் ''தன்' சிற்றுருவாய்க் கொண்டு அதில் தன் சச்சிதானந்த அனுபவத்தை ஏற்றுள்ளது கடவுள் மனிதனின் அல்லது சுத்தசன்மார்க்கியின் நிலையாம். அணுத்துவமாகிய கடவுள் சித்துரு அல்லது சிற்றுருதான் சிற்றம்பலம், சிற்சபை, ஆன்ம அணு எனப்படுகின்றதாம். இந்தச் சிற்றுருவைச் சூழ உள்ள இறைபேருருவம் தான் பேரம்பலம். பொன்னம்பலம் எனவும் கூறப்படும்.

## 17. கலாந்த வெளி

33. தூயக லாந்த சுகந்தரு வெளியெனும்
34. ஆயசிற் சபையில் அருட்பெருஞ் ஜோதி

*(உ-வி)*. சுத்த சன்மார்க்க அனுபவ உண்மை எல்லாம் வெளிப்பட்டு விளங்குமிடம் அருட்பெரும் அகவெளியாம். இந்த வெளிநிலை இம்மனித உயிருடம்பின் தலைபாகத்தில்தான் அமைந்திருக்கின்றதாகும். மனோ பகுத்தறிவு சுத்த அருள் உணர்வு மயமாகி அம்மேனிலையிற் பொருந்தி நிற்கும் போது அந்த அருட்பெரு வெளியில் படிப்படியாக மேலான அனுபவங்கள் தோன்றி விளங்கும். இவ்வகப்பெரும் அருள் வெளியில் எல்லையற்ற புறப்பெருவெளியின் அமைந்த எண்ணிலி கோடி அண்டங்களின் இரகசியமெல்லாம் வெளிப்பட்டிலங்குவதாம்.

மேற்படி அகப்பெரும்வெளியே அருள் அனுபவ, திரயோத சாந்த நிலையாக விளங்குவது. திரயோதசம் என்றால் பதின் மூன்று. ஆகையால் இந்த அருட்பெரும் வெளியை விரித்துக் கூற நேர்ந்தபோது:

1. அருள்வெளி, 2. தனிவெளி, 3. சுகோதய வெளி, 4. கலாந்த வெளி, 5. யோகாந்தவெளி, 6. போதாந்த வெளி, 7. நாதாந்தவெளி, 8. வேதாந்த வெளி, 9. சித்தாந்த வெளி, 10. தகரமெய்ஞ்ஞானவெளி, 11. தத்துவாதீத வெளி, 12. சச்சி தானந்தவெளி, 13. சாகாக்கலைவெளி எனப்பதின்மூன்று அனுபவ நிலைகளாகக் குறிக்கப்பட்டிருக்கின்றதாம். இங்கு கலாந்தவெளி யைப்பற்றிய குறிப்பு வந்துள்ளது. இது நான்காவது நிலையாம். இது முதல் ஒன்பதாவது ஆகிய சித்தாந்தவெளி நிலை முடிய உள்ள ஆறு நிலைகளும் ஷடாந்த நிலை என மொழியப்படும்.

ஈண்டு கலாந்த வெளியின் விளக்கத்தைக் காண்போம். கலை என்பது ஏகதேசக் கற்பனையால் தோற்றுவிக்கப்படும் அறிவனு பவச்செயல் விளக்கமாகும். இக்கலைப் பயிற்சியின் பயன் மனித னுக்குப் பரவசமூட்டி உள்ளும் புறமும் களிப்புறச் செய்வது மட்டு மன்றி அகவெளியில் கடவுள் ஒளியைத் தோற்றுவித்து வளர்ப்ப தாயும் உள்ளதாம். ஆதலின் கலாசக்தியின் புறத்தோற்றத்தைக் கண்டு பெரும் வியப்புற்று மயங்கிப் போதல் கூடாது. தூய்மை யான அருட்கலையின் இலட்சியப்பொருளையோர்ந்து, உள் ளுணர்வு கெடாது ஒன்றி நின்று சுத்த சுகானுபவமுறல் வேண்டும். இதுவே தூய கலாந்த நிலையாக இங்கு சுட்டப்படு கின்றதாம். உண்மைக்கலை, உள்மறைந்து கிடக்கும் கடவுள் இயல் தன்மையான 'ஐ'யைக் கல்லி வெளியனுபவத்திற்குக் கொண்டு வரும் செயலேயாகும். இதுவே (கல்+ஐ=) கலை என வழங்கப் பட்டுள்ளதாம். இத் தூய கலாந்தத்தால் பெறப்படும் மெய் இன்பமே பெருஞ்சுகானந்த வாழ்வாகும். இது வெளிப்பட்டு இலங்கும் வெளியிடம் நமது சத்விசார மெய்ஞ்ஞானத்தால் ஆய்ந்து கொள்ளப்படுகின்ற ஆன்ம சிற்சபையாகும். இந்த சிற்றம்பலத்தில் ஒளிர்கின்ற அருட்பெருஞ்ஜோதியே நமக்கு இக் கலாந்த வெளிச் சுகானுபவத்தை வழங்குவதாம்.

## 18: யோகாந்த வெளி

35. ஞானயோ காந்த நடத்திரு வெளியெனும்

36. ஆனியில் சிற்சபை அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** யோகம் என்றால் கூடுதல் அல்லது ஒன்றுதல் எனப் பொருள்படும். ஞானத்தால் உண்மையைக் கண்டு உள்ளொன்று தல் ஞானயோகமாக நவிலப்படும். சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பவற்றில் ஈற்றிலுள்ளது ஞானம். இந்த ஞானத் திலும், சரியாதி நான்குநிலையுளவாம். ஞானத்தில் ஞானமாக வுள்ள முடிநிலையே கடவுள் மயமான பெருநிலையாகும். இம்முடிவு நிலையை எய்துவதற்கு முன்னுள்ள சுத்த விசார நன்னிலையே ஞானத்தில் யோகநிலை எனலாகும். இந்த ஞானயோக அந்தத் தேதான் நம் அருட்பெருஞ் ஜோதி நடனபதி, ஆனியில், அதாவது கேடும் அழிவும் அற்ற ஆன்ம சிற் சபையில் திருநடனம் புரிந்து கொண்டுள்ளார். நமது அருட்பெருஞ் ஜோதி ஆனந்த நடனபதி திரு நடனம் புரிந்து கொண்டுள்ள அருளம்பலம் எவராலும், எத னாலும் தீண்டப்படாத அகவெளியிலுள்ளதாம். அப்படியானால் அந்த நடராஜபதியை ஒருவன் ஞானயோகத்தால் கண்டு ஒன்று வது எப்படி முடியும்? ஞானயோகத்தால் முடியாதுதான்! இங்கு அந்த ஞானயோகத்தால் அப்பதிநிலை சித்திப்பதாகச் சொல்ல வில்லையே நம் வள்ளற் பெருமான்! ஞானயோகத்தின் அந்தத்தே, அப்பாலே, அதீதத்திலேயல்லவா நம் அம்பலத்தரசர் ஆடிக் கொண்டுள்ளார் எனக் குறித்திருக்கின்றார். எனவே, ஞான யோகாந்தத்தே விளங்கும் பதிநிலையை ஒன்றுவதற்குப் புறத் திருந்து சென்றடைதல் கூடாதாம். ஆகையால், சுத்த அருள் ஞானத்தால், நாமே அந்தப் பதியோடு இரண்டற இருக்கும் உண்மையையோர்ந்து, அங்கு உடனின்று வாழக்கூடும் என்பது குறிப்பு. இதுகாறும் சுத்தசன்மார்க்கம் வெளிப்படாதிருந்ததால், ஞானயோகாந்தத்தே கடவுள் மயமான வாழ்வு சித்திக்கா திருந்தது. இப்பொழுது நம் வள்ளல் பெற்ற சுத்தசன்மார்க்கத் தால் அவ் யோகாந்தத்திலங்கும் பதியோடு ஒன்றி வாழ்தல் சாத்தியமாகின்றதாம்.

## 19. போதாந்த வெளி

37. விமலபோ தாந்தமா மெய்ப்பொருள் வெளியெனும்

38. அமலசிற் சபையில் அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) போதாந்தம் என்பது மெய்யுணர்வின் முடிவு நிலையாம். போது என்ற சொல் மலர்ந்து விரிந்த பூவைக் குறிப்பதாம். ஒரு பூவானது மலர்ச்சி பெறாதபோது அரும்பாக இருக்கும்; அப்போது அதனிடத்தே மறைந்து கிடக்கும் நிறமும், மணமும், இன்சுவைத்தேனும் விளங்குவதில்லை. இதுபோலத்தான் ஓர் ஆன்மாவானது பக்குவமுறாத காலையில் அரும்பென அருகிப் புற வண்ணத்தோற்றமும், உயிர் உணர்வும், அறிவானந்த அனுபவமும் பெறாது கிடக்கின்றதாம். இப்படி அரும்பு நிலையிலுள்ள ஆன்மா கட்டவிழாது, தளையுண்டு கிடக்கும் நிலையை மலம் என்கின்றனர். 'ம்' என்ற எழுத்து உச்சரிக்கப்படும்போது உதடுகள் மூடிக்கொள்ளுவதும், 'ர்' என்று ஒலிக்கும்போது இதழ் விரிந்து உட்காற்று வெளிப்படுவதும் அறிவோம். இவ்வுண்மையே மலம் மலர் என்றதன் கருத்துகொண்டு விளங்குவதாம்.

விமலம் என்ற சொல் கடவுணிலையைக் குறிப்பது. எவ்வாறெனில், 'வி' என்பது இன்மைப் பொருளையுணர்த்தலின், கடவுள் இயல்பாகவே மலம் ஒன்றுமில்லாத அனாதிமுத்தசித்துரு உள்ளவர் என்ற கருத்தைச் சுட்டவந்ததாம். மேலும், 'வி' என்ற எழுத்து, வகர அருள் மெய்யும், இகர அருட் பிரணவ உயிரும் கொண்டு அருள் வண்ணமாய்த் திகழ்வது. இதனால் இந்த நிறை அருள் உண்மையோடு மறை யுற்றுக்கிடக்கும் இறைநிலையை விமல நிலையாக விளம்பினது உண்மைக்காரணமேயாம். அப்படியுள்ள விண்வெளி நிறை விமல பதியின் ஒரு சிற்றணுவான ஆன்மா பக்குவமுறும்போது, மலபாசக் கட்டவிழ்ந்து அருள் மணத்தோடு ஆன்மானுபவம் ஏற்படுகின்றதாம். ஆன்மாவுக்கு இதுகாறும் மல மறைப்பு இருந்து நீங்கினதாக அறியப்படுகின்றது. இதனால் ஆன்மா, அசுத்தமாகிய மலத்தோடிருந்து பின்னர் சுத்தமுறுவதால் இது அமலநிலை என்று குறிப்பிடுவர். ஓர் ஆன்மாவுக்கு இம்மல நீக்க அருள் அனுபவம் இம்மனிதப் பிறப்பில் சிற்சபையில் விளங்குவதாம். ஆகவே, விமலம் என்பதற்கும், அமலம் என்பதற்கும் பொருள்: இயற்கையில் மலமேயில்லாத அருட்பெரும்பதி நிலையைக் குறிப்பது விமலமாம். ஆன்மாவுக்கு அபக்குவத்தில் மலம் இருந்து, பக்குவத்தில் அம்மல நீக்கம் பெறப்பட்டு அமல நிலை ஏற்படுவது அனுபவம்.

விமல மெய்ப்பொருளாகிய கடவுளை அடைய, ஆன்மாவுக்கு அமல நிலையுண்டாக வேண்டுமாம். ஆனால் இவ் அமல நிலை,

சிற்சபையின் கண்ணின்று அருட் பெருஞ்ஜோதி மயமானாலன்றி வேறு வழியில் பாசநீக்க, போதநாசமும், இறையனுபவ வாழ்வு முன்டாகா. முன் சுத்த நெறியின்மையால் விமல நிலை அடைய முனைந்த மனிதன், அமல நிலை பெறற்கு தேகாதியையே துறக்க வேண்டுமெனக் கொண்டது தவறாம். அருட்பெருஞ்ஜோதிச் சிற் சபையில் இருந்து வாழ முனைவது தான் விமலமூர்த்தியோடு கலவாதே ஒன்றி அதுவாகி வாழும் முறை என்பது இன்றைய அனுபவமாம். உண்மையில் உள்ளது அருட்பெருஞ்ஜோதி ஒன்றே. அந்த அருளே பெருஞ் ஜோதியைப் பசுபாசமாய், தேகாதியாவுமாய் ஆக்கிக் கொண்டிருப்பதுதான் உண்மை. இவ்வருள் உண்மைக் காரியப்பாட்டையுணராத மனிதன்தான் அவ்வருளை, இருள் மாயா மலமாக நினைத்து ஒழிக்க முயன்று, தேகாதியை இழந்து ஒழிந்தே போகின்றான். நிறை அருள் கொண்டு அமல சிற்சபையிலிருந்து அருட் பெருஞ்ஜோதியைப் போற்றி வாழ்வு பெறுகின்றவனே, போதாந்த நிலைக்கு மேல் விளங்கும் விமலானந்த வாழ்வு கொண்டு நிலவுவான் என்பது உண்மையாம்.

## 20. நாதாந்த வெளி

39. பெரியநா தாந்தப் பெருநிலை வெளியெனும்
40. அரியசிற் சபையில் அருட் பெருஞ் ஜோதி

**(உ-வி)** நாதம் என்பது ஒலி, ஓசையாகும். இவ்வுலகில் சிற்றணு முதல் பேரண்ட கோடிகள் வரை யாவும் அரிய ஓர் ஆற்றலால் இயங்கிக் கொண்டேயிருக்கின்றனவாம். அந்த இயக்கத்தால் சிற்றசைவு முதல் பெருஞ் சுழற்சி வேகம் வரை காணப்படுகின்றன. இவ்வியக்க சக்தியால் மிக நுண்ணிய ஒலி முதல் அளவரிய பேரோசைவரை யுண்டாகின்றனவாம். செவிப் புலனாய்க் கேட்கப்படும் ஒலியோ மிகச் சிற்றெல்லை கொண்டதே யாகும். அவ்வெல்லைக்கு அப்பாலுள்ள ஒலியைக் காதால் சாதா ரணமாய்க் கேட்க முடியாது. வானொலிக் கருவி முதலியவற்றால் கேட்டறிதல் கூடும். சாதாரண நாதவொலியையே ஏழிசைப் பண்ணொலியாய் ஆக்கிக் கொண்டு இசைத்து இசையமுதம் பருகி மகிழ்கின்றான் மனிதன். நாத சங்கீத ஒலியிலே மனம் லயித்து பரவசம் அடைவது தெய்வீக நிலை எனக் கொண்டாடப் படுகின்றது. அத்தெய்வ நிலைப் பேற்றை நாதப் பிரம்மானுபவம்

என்கின்றனர் அம்மேதையர். இதைவிட யோக சித்தர்கள் மன ஒடுக்க நிலையில் நாத அந்தத்திலே ஜோதிக் காட்சியைக்கண்டு அதனாலே அற்புத சித்திகளும் எய்திவிடுகின்றனர். இவற்றை எல்லாம்விட நம் ஞானசித்தராகிய வள்ளற்பெருமானோ திரு வருளாலே உள்ளுருகி ஒருமையுற்று நின்று பரநாதநிலைக்கு அப்பால் விளங்கும் பெருஞ்ஜோதி மலையைக் கண்டார். அந்தப் பெருஞ்ஜோதிக்கு நடுவே மாற்றறியாப் பொன்ஒளி அம்பலத்தைக் கண்டார். அவ் அம்பல நடுவிலே வள்ளற் பெருஞ் ஜோதிக் கடவுளையே கண்டார். கண்டு கலந்து அதுவாகி விளங்கி விடு கின்றார். இதுவன்றோ நாதாந்த வெளியில் ஒவ்வொருவரும் பெற வேண்டிய பெருநிலை! ஜோதியுட் ஜோதியுட் ஜோதியாய் உள்ள கடவுட்காட்சியைத்தான் நாதாந்தப் பெருவெளியில் கண்டு கொள்ளவேண்டியிருக்கின்றதாம். அருள் விசாரத்தால் அறிவரிய சிற்றம்பலத்துற்று அருளனுபவத்தால் நித்தியானந்த முற வேண்டுவது நம் கடமையாகும். மற்றபடி நாதகீதத்தில் மயங்கிப் பெறும் சுகமும், நாதாந்த ஜோதிக் காட்சியில் பெறப்படும் நவ நாத சித்தர்களின் கருமசித்திகள் தரும் இன்பமும் பெரியன வல்லவாம். நம் வள்ளல் அனுபவம் தரும் இன்பமும் சான்றும் இவை:

"ஈற்றறியேன் இருந்திருந்திங் கதிசயிப்ப தென்நீ
என்கின்றாய் நீ எனைவிட் டேகுதொறு நான்தான்
காற்றறியாத் தீபம்போல் இருந்திடுமத் தருணம்
கண்டபரி சென்புகல்வேன் அண்டபகி ரண்டம்
தோற்றறியாப் பெருஞ்ஜோதி மலைபரநா தத்தே
தோன்றியதாங் கதனடுவே தோன்றியதொன் றதுதான்
மாற்றறியாப் பொன்னொளியோ அவ்வொளிக்குள் ஆடும்
வள்ளலருள் ஒளியோஈ ததிச ரிக்கும் வகையே."

சிற்றம்பல வாழ்வு பெற்று அருள் ஒளிவண்ணமாய்த் திகழ்பவர் பெரிய நாதாந்தப் பிரபஞ்சமுற்றும் கண்டு அருட்சித்து விளைத்துக்கொண்டிருப்பர். இது வள்ளல் அனுபவம்.

## 21. வேதாந்த வெளி

41. சுத்தவே தாந்தத் துரியமேல் வெளியெனும்
42. அத்தகு சிற்சபை அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) எங்குமாய் நிறைந்திலங்கும் கடவுட்ஜோதி, சுத்த அருள் ஞானத்திற்கு அல்லாது, பிற எந்த ஒன்றிற்கும் வெளிப்

பட்டு விளங்குவதாயில்லையாம். இந்த அருள் ஞானநிலையே சுத்த வேதாந்தமாகப் பகரப்படுகின்றது. இதற்குமுன் யோகாந்த வெளியாகவும் போதாந்த வெளியாகவும் உரைக்கப் பட்டவையும் கூட இந்த அருள் ஞானபீடத்தின் அடிப்படையாய் அடங்கி யுள்ளனவாம். யோகாந்தம்-ஞானத்தில் ஞானநிலையைப் பதிவடி வாய்க் குறித்தது; போதாந்தம் - மலபாசம் ஒழிந்தவிடத்து விளங் கும் நிலையைப் பதிவடிவம் என்றது. இங்கு சுத்தம் என்ற சொல் அருள் உண்மையையுணர்த்தி, அவ்வருள் மெய்ஞ்ஞான அனுபவ நிலையையே முடிவு செய்துள்ளதாம்.

அருளுடன கூடிய சுத்த சத்விசாரத்தால் நமது சிற்சபையி னிடத்தே அருட்பெருஞ் ஜோதிபதியைக் கண்டு போற்றிக் கலந்து நின்று விளங்குதல் வேண்டும். இவ்விசார அனுபவம், சாக்கிரத்தே தொடங்கி, சொப்பனத்தும் தொடர்ந்து, சுழுத்தி யில் அசைவற நின்று மேல் துரியத்தில் சொல்லரிய மெய்யருள் உணர்வு மயமாய்த் திகழ்ந்து விளங்குவதாம். இப்படித்தான் சுத்த வேதாந்த வெளியிலே அருட்பெருஞ் ஜோதிபதி அனுபவம் பெறவேண்டி உள்ளதாம். இவ்வருணிலை பெறாது, மருள் தேகப் பற்றொடு கூடிய மனோ உணர்வு கொண்டு அகத்தே ஆன்மக் கடவுளை எவ்விதத்தும் வெற்றுப்பாவனை செய்தும், நிஷ்டை கூடியும், நிர்விகற்பசமாதி நிலையுற்றும் அடைந்துவிட முடியாது. எனவேதான் பழைய வேதாந்த வித்தகர்கள், ''பிரக்ஞானம் பிரம்மம்'' ''அயம் ஆத்மா பிரம்மம்'', ''தத்துவ மசி'', ''அகம்பிரம் மாஸ்மி'' என்ற வேதாந்த மகா வாங்கியங்களை நெடுநாட் பயின் றும், பாவித்தும் அந்தப் பிரம்மானுபவத்தோடு வாழாது கடந்து சென்றனராம்.

ஆகவே சுத்த அருள் விசாரத்துடன் இருந்து ஒருமையுற்று உள்ளொளியிற் கூடி நின்று, துரியானுபவம் பெற வேண்டுவது நம் கடமையாகும். அத்துரிய நிலையிலே அமிழ்ந்து கிடந்து விடுவது கடவுளாணை அன்று. அந்தச் சுத்த நிலையிலிருந்து தய வோடு, அத் துரியானுபவம் கெடாது, அக நிலையை விடாது அனகதயா வாழ்வு வாழ வேண்டும். இவ்வாழ்க்கை நிலையே சகச நிலை எனவும், சாக்கிராதீத நிலை எனவும், சுத்த சன்மார்க்க அனுபவநிலை எனவும் மொழியப்படும். இப்பேரனுபவ நிலையை எய்தவே வேதாந்த பரவெளியில் அருட்ஜோதியைப் போற்று வோம்.

## 22. சித்தாந்த வெளி

43. சுத்தசித் தாந்த சுகப்பெரு வெளியெனும்

44. அத்தனி சிற்சபை அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** வேதாந்தி, கடவுளை அறிவால் கண்டடையவே முயன்றான். அறிவால் அறிந்து, ''அது நான்'', என்ற பாவனையிலிருந்து பெற்றுவிடக்கூடுமென்று இறுமாந்து போனான். அப்படி முடியாது என்று மறுத்தெழுந்தான் சித்தாந்தி. இவன் தன்னைத் தற்சுதந்தரமற்ற, பாசத்தால் கட்டுண்டு கிடக்கும் ஆன்மப் பசுவாக எண்ணினான். அப்பாச நாசமுற்றுப் பதிபதம் அடைய, அப்பதியின் அருளை வேண்டிட முனைந்தான். அவ்வருள் பெறற்கான உபாய நெறி, ஆகம சிற்பகலாந்தமாகவும், பண்ணிசைத் துதிமுறை நாதாந்தமாகவும் விரிவு செய்யப்பட்டதாம். இதனால் இந்தச் சித்தாந்தத்தில், கலாந்தமும் நாதாந்தமும் அடங்கும் என்ப. இம்முறையால் தான் சிவானுபவ சித்தி பெற முடியுமே அல்லாது வேதாந்தத்தால் பெற முடியாது என்று வலியுறுத்தவே, ''வேதாந்த முடிவாம் சித்தாந்தம்,'' எனச் சிறப்பித்துக் கூறுகின்றனர் சைவசித்தாந்திகள்.

சித்தாந்த முறைப்படி ஆகமநெறிவழுவாது ஆலய வழிபாடியற்றித் திருவருளைப் பூரணமாய்ப் பெற்றுவிட முடியுமா? மேலும் அந்நெறிமுடிவு ஒருவனுக்குச் சிவானந்த வாழ்வுடன் இவ்வுலகில் நிலவச் செய்வதாயில்லையே! அப்படி நிலவச் செய்யத்தான் இப்பொழுது சுத்த சித்தாந்தமாகிய சன்மார்க்க நெறி திருவருளால் தோற்றுவிக்கப்பட்டுள்ளதாம்.

சுத்த சித்தாந்தத்தில் விளங்கும் அருட்பெருஞ் ஜோதி பதியைத் தனிச் சிறப்புற்றிலங்கும் நம் அருள் ஞானசபையின் கண்ணே சுத்த சத் விசாரத்தால் காண்கின்றோம். தயாவொருமையினால் இரண்டற்று அதுவாகி நிற்கும் பேரருட் பெருநிலையை எய்துகின்றோம். இது சுத்தசன்மார்க்கம் வழங்கும் சுத்த சித்தாந்த சுகப் பெருவெளி அனுபவமாகும். இந்தப் பெருஞ் சுக வாழ்வே ஓரான்மாவுக்குரிய உண்மையானந்த வாழ்வாகும். ஈதல்லாது பதி ஐக்கியமுற்று தனி இன்ப வாழ்வற்றுக் கிடக்கும் நிலை ஓர் ஆன்மாவுக்கு முடிவு நிலை எனக் கொள்ளக் கூடாது. தொகுத்துக் கூறல்: அருள் அனுபவ நிலையில் இங்கு குறிக்கப்பட்ட ஆறந்த முடி பொருளாகக் கண்டுகொள்ளப்பட்ட நம்

அருட்பெருஞ் சோதிபதியைப் போற்றி அடையவே துதி முறையில், அருட்பாவைத் தொகுத்துள்ளார் நம்பெருமானார். மற்றபடி சாத்திரத் கலையை விளம்பரப்படுத்தவும், விரித்துக் கூறவும், அவற்றில் அனுபவத்தை அடைவிக்கவும் அல்லவாம். ஆகையால் அருள் உண்மையைக் கூட்டி வைப்பதே இவ் அகவல் அடிகளின் கருத்தாகும். நம் அருட்பெருஞ் சோதி வெளி நிலையை, அருள் வெளிமுதலான பதின்மூன்று நிலைகளிற் குறிக்க வந்து இதுவரை ஒன்பது நிலை விளக்கம் வழங்கப்பட்டுள்ளதாம்; மேலும் வரும் நான்கு நிலைகளும் அருள் அனுபவத்தின் விளக்கங் களேயாம்.

## 23. தகரமெய்ஞ்ஞான வெளி

45. தகரமெய்ஞ் ஞான தனிப்பெரு வெளியெனும்
46. அகர நிலைப்பதி அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** அகண்டமாய் விரிந்துள்ள பேருலகப் பெரு வெளியே கடவுளரின் நிறைநிலைப் புறவடிவமாகக் கொள்ளுவர் உண்மை கண்டோர். அவ் அகல் வான்வெளியில் நின்றே யாவும் தோன்றியிருக்கின்றனவாம். இந்த அகண்டவெளியில் அனாதியாயுள்ளது அருள் இறையுண்மையாகும். இவ்வருள் உண்மை, அணுவுக்கு அணுவாய் எங்கும் என்றும் இருந்துகொண்டு, மெய்யறிவு விளைவில் வெளிப்பட்டு விளங்கி அனுபவப்பட்டு உள்ளதாம். ஆகாச வெளியே அகர எழுத்தால் சுட்டப்படும். வெளி என்றால் வெற்றிடம், பரந்து விரிந்த அகலிடம். இவ் வெளியிடத்தில் தோற்றரிய இறையொளி மய ஆகாசம் நிரம்பியுள்ளது. இந்த ஒளிவெளி ஆகாச நிலையைத்தான் இறைவன் நிறை வடிவமாகக் கொள்ளப்படும். இவ்வாகாச பூதநிலையை 'ஈதர்' (Ether) என்று கூறுவர் மேனாட்டார். ஆனால், அக உண்மை அறியா மேனாட்டார் ஆகாச பூத விளக்கத்தைப் புரிந்து கொள்ளாது, இதனை வெற்று யூகமென நினைக்கின்றனர். இக் கருத்தே அன்னோர் குறித்துள்ள பொருளாம். (Ether is the Subtle medium supposed to fill all space.) யாதெனில், ஆகாசம் என்பது, வெளிமுழுவதும் நிரம்பியுள்ளதாகக் கருதப்படும் ஒரு மிக நுண்ணிய ஊடகம் என்பதாம். உண்மையில் இந்நிலை பொருள் நிலையான இறை இயற்பொருளேயாம். இறு என்னுப பகுதிப் பொருளால் குறிக்கப்படும் இறைவன், என்றும் இருப்

பவன் என்பது உட்கோள். இந்த இறை பரம்பொருளின் அணு நிலையே நம் ஆன்ம சிற்றணுவாய் இருந்துகொண்டு, தன்னைத்தானே வெளிப்படுத்திக்கொள்ள ஜீவ தேகாதி பிரபஞ்ச வடிவங்கள் எல்லாம் ஆக்குவதும் அழிப்பதும் ஆக இருந்து வருகின்றதாம்.

பரமாகாச சொரூபியான கடவுள், வெளிமுற்றும் நிரம்பி இருந்து கொண்டுள்ளார். அக்கடவுள்தானே ஆன்ம சிற்றணு வில் கூட அகர ஆகாச வண்ணமாய்த் திகழ்கின்றார். அந்த ஆன்மக் கடவுள் அணு சடபூதப் பொருளில் பிரித்தறிய முடி யாத நிலையில் கிடந்து, பின்னர் ஓரறிவு முதல் புல்லாதி ஜீவ வடிவைப் பெறும்போது உயிர் உணர்வாகிய அறிவுகொண்டு விளங்குகின்றதாம். உயிர் உணர்விலே ஐம்புலன் அறிவுக்கு அப்பாலான மனோ அறிவு விளைவுண்டாம்போது பக்குவ மனிதப் பிறப்பு தேகம் கொண்டு விளங்குகின்றது அக்குறிப்பிட்ட ஆன்மா. இந்த ஆறாவதாகிய மனோ அறிவுக்கு மேல்தான் அருள் அறிவு ஏழாம் நிலையில் தோன்றுகின்றதாம். இந்த அருள் அறிவால்தான் அந்த ஆன்மா தன்னைத்தான் அறிந்து கொள்ளுகின்றது.

அகண்டாகாச நிறைவிலே சிற்றணுவான ஆன்மா, சிதாகாச வண்ண மாய், மனிதனின் ஏழாவதாம் நிராதார நிலையில் வெளிப் பட்டுத் தன்னைத்தான் அறிந்து கொள்ளுகின்றது. இந்த நிரா தார நிலையம், அருள் ஞான பீடம், பகரவடிவக் குழியும் அதன் மேலிருக்கும் லகரமெய்யால் சுட்டப்படும் திரயோதச அருள்வெளி நிலையையும் குறிப்பதாம். இதனையே அக அனுபவத்தில் ''த்'' என்னும் மெய்ந்நிலையாகப் பகரப்படும். எவ்வாறெனில், ''த்'' என்று உச்சரிக்கும்போது நுனிநா மேற்பல் அடியைத் தீண்டி நிற்கின்றதேபோல் அருள்ஞான உணர்வாகிய நாவினால் அக நிலையில் உணர்த்தப்பெறும் இடம் நம் கடவுளான்மப் பல் நிலைத் தானமாக இருக்கின்றதாம். இதனை அறிந்தே இந்தத் தகர மெய்யெழுத்தைத் தமிழ் நெடுங்கணக்கில் ஏழாவது வரிசையில் வைத்துள்ளனர் தம் தமிழ் ஞானச் சித்தர்கள். இதனாலேயே நம் கடவுளைத் தகராகாசவடிவினர் என்றும், தகரககன நடனபதி என்றும், தகராலய மூர்த்தி என்றும் கூறினர். சித்தாந்த தசகாரியத்தும் ஏழாவது விளங்குவது சிவரூபமாம் கடவுள் வடிவேயாம். அன்றியும் அருட்பதி வண்ண ஓங்காரத்

தின்—அகரம், பதியுருவாயும், உகரம்—அப்பதியை யுணர உள்ள ஆன்மாவின் உயிர் வடிவாயும், மகரம்—அவ்வுயிர் சென் றடையும் நிலையாயும் இருக்கின்றனவாம். இவற்றில் அக ரத்தை எழுத்துடன் கொண்டும், உகர மகர மெய்யை எண் ணுடன் கொண்டும் முடிந்த அனுபவத்தை அ+உ+ம்=ஓம் என்னும் ஒன்றாய்க் கொண்டுள்ளனர். தொடக்க எண்களின் ஈற்றில் உகரம் வந்து வந்து ஆயிரம் என்னும் எல்லையுறும்போது "ம்" என ஒலித்து நிற்கிறதாம். இதனாலேதான் ஆயிரம் என்ற எண்ணைக் கூட தகர எழுத்து வடிவமாய்க் குறிக்கப்படுகின்றது. நம் தமிழில் இது கொண்டு நம் பதியை ஆயிரம் இதழ்த் தாம ரையில் விளங்குபவராகவும், அகர ஆகாச வடிவ மனித தேகப் பிரமாணம் எட்டு சாண் உள்ளது கொண்டு, பரமாகாசப் பதிவடி வுக்கும் எட்டு என்ற அகர எழுத்து எண் கொள்ளப்படுவதால் தகராகாசம் (1000+8) ஆயிரத்தெட்டின் வண்ணமாகக் கடவுள் தத்துவம் ஆக்கப்பட்டுள்ளதாம். ஆகவே தகர மெம்ஞ்ஞானத் தனிப்பெரு வெளி வண்ணக் கடவுளை நமது அக அகரநிலைப் பதியில் அருட்பெருஞ் ஜோதியாகக் கண்டு, போற்றிக்கொள்ள நேருகின்றது. இந்த ஜோதி பதியை அருட்பெருஞ்ஜோதி அகண்ட தீபமாகத் திகழ வைத்துள்ளார் நம் அடிகளார். இத் தெய்வீக தீபமே தகரவிளக்கு எனக் குறிக்க நேர்ந்ததாம்.

மேற்படி தகர மெய்ப் பொருளை ஆதாரமாய்க் கொண்டு வழங்கப்பட்டதுதான் தயவு என்ற சொல். இது தகராகாச நிலையில் யகர ஆன்மா வகரவுகர அருட்பெருஞ் சித்தியோடி லங்கும் அனுபவ நிலையையுணர்த்திக் கூட்டிவைப்பதாம். இச் சித்தி நிலையைத்தான் தகரவித்தை என்றும், வகரவித்தை என்றும் சித்தர்கள் குறிப்பது. தகர வித்தையால் காயசித்தியும் வகர வித்தையால் வாதசித்தியும் அல்லது சுவர்ணசித்தியும் பெறுவது அச் சித்தர்களின் குறிக்கோள். சுத்த சன்மார்க்கத் தில் சுத்தமாதி முத்தேக சித்தி பெறுவதற்குத் துணையாகக் கிடைக்கப்பெற்றுள்ளது இத்தயவு என்று அறியலாகும். இன்னும் தகர உண்மையை விரிக்கிற் பெருகும் ஆதலின் பிற இடத்திற் குறிப்பாம்.

## 24. தத்துவாதீத வெளி

47. தத்துவாதீத தனிப்பொருள் வெளியெனும்
48. அத்திரு அம்பலத் தருட்பெருஞ்ஜோதி

**(உ-வி)** முன் அடியில் தகரமெய் யெழுத்து நம் ஏழாம் ஞான பூமியில் தோற்றி விளங்கும் பரமாகாசப் பரம்பொருளைக் குறிக்க வந்ததாகக் கண்டோம். அப் பரம்பொருளே தத் என நின்று அது எனப் பொருள் ஆகின்றதாம். இவ்விரண்டில் தத்—வடமொழிவழி தகராகாச அரவண்ணப்பதியைச் சுட்டுவதாம். அது (அ+த்+உ) தகராகாசபதியின் அருள் ஐந்தொழில் செயல் உண்மையைத் தமிழ்வழியில் கொண்டு விளங்கும் கடவுள் வண்ணத்தைக் குறிக்கின்றதாம். தத் என்னும் கடவுள் நிலை, இறை பரம்பொருள் உண்மை ஒன்றேயாம். ஒன்றான கடவுள்தன் உண்மையைப் பூரணமாக வெளிப்படுத்த வேண்டி, எண்ணற்ற ஆன்மாக்களாய்த் தோற்றிப் பக்குவத்தே நம்போல் மனிதர் பல ராய் விளங்குதல் உண்மையே. பலவாகிய தோற்றத்திற்கு அதீதமாய் இருக்கின்றது அவ் வொன்றான கடவுள் நிலை. அப்படி அதீதமாய் இருக்கும் அதுவே இந்த மனிதப் பிறப்பில், மனிதனா கவே விளங்குகின்றது. ஆகவே அதுவே மனிதன் என்றாம். இவ் வுண்மைவைத்தே ''அது நீ'' அல்லது ''தத்துவம்'' என்று உணர்த்தினர் ஆன்றோர். அதீதமாகிய மேனிலையிலுள்ள பர மான்ம பதி, ஜீவான்மாவாய் விளங்கவந்தபோது, அம் மேனிலை நின்று கீழே இறங்கி வந்துவிட்டதாகாது. உண்மையில் கடவுள் அதீதநிலையில்தான் எப்பொழுதும் இருந்துகொண்டுள்ளார். ஒரு ஜீவான்ம அணுவில், அதன் அகத்தேதான் அவ்வான்மபோதத்திற் குச் சிறிதும் அறியப்படாராய் அதீதமாகவே விளங்கிக்கொண்டுள் ளார் என்பது சத்தியம். ''தவமான சத்திய ஞானப் பொதுவில் துவமார் துரியம் சொரூபமதாமே'', என்பது திருமந்திர விளக்கம்.

மேற்படி கடவுள் தத்துவம் சத்திய ஞானம் கொண்டிலங்கும் இம் மனிதப் பிறப்பு வடிவில்தான் வெளிப்பட்டு அருளறிவுக்கு அனுபவமாகின்றது. இந் நிலை கொண்ட இம் மனிதப் பிறவி நிறைதத்துவம் கொண்டது என்ப. அந் நிறைத்தத்துவம் தான்-ஆன்ம, ஜீவ, கரண, இந்திரியமும் புற ஆதார ஐம்பூதப் பிரபஞ்சமும் சேர்ந்து 96 தத்துவங்களாய் விரிந்திலங்குவதாம். புற நிலையில் மனிதன் இத் தொண்ணூற்றாறு தத்துவ வடிவி னனாய் இருப்பதும், அக நிலையில் தத்துவாதீதத்தில்தான் பதிமய மாய் இருக்கின்றதும் உண்மையே, ஆகையால் பதி அனுபவங் கொண்டிலங்க வேண்டின் திருவருள் விசேடத்தினைச் சத் விசாரஞ் செய்து அகநிலை சிற்றம்பலத்தே யுற்று அருள் வாழ்வு

வாழவேண்டியுள்ளதாம். அவ் வாழ்வு பெறவே வள்ளல் வழி காட்டுகின்றார்.

## 25. சச்சிதானந்த வெளி

**49. சச்சிதா னந்தத் தனிப்பர வெளியெனும்**

**50. அச்சிய லம்பலத் தருட்பெருஞ் ஜோதி**

**(உ-வி)** அச்சு-ஆதியான ஆன்மக் கருவாய் இருக்கின்றது. அதுவே கடவுளுக்குரிய சத்திய நித்திய சிற்றம்பலமாகும். இவ் வம்பலத்தேயிருந்து சுத்த சன்மார்க்க ஆட்சி புரிகின்றார் நம் அருட்பெருஞ்ஜோதி அம்பலத்தரசர். உலகம் இந்த அம்பலத் தையும், இதிலிருந்து அருளாட்சி புரிந்து வருகின்ற அருளரசையும் அறிந்துகொள்ளாதிருக்கிறது. ஏனெனில் இதுகாறும் அருள் ஞானம் வெளிப்படாமல், சுத்த சன்மார்க்கம் விளங்காமல், இதற் கெல்லாம் மனித உள்ளம் அருட்பக்குவம் அடையாமல் இருந்ததே காரணமாகும். ஆன்மாலயத்தில் இருக்கும் ஆண்டவர் என்றும் விளங்குவதால் சத்தாகவும், யாவுமாய்த் தோற்றி உண்மையை வெளியாக்கித் தயவுச் செயலோடு விளங்கலால் சித்தாகவும், இச்செயலால் உயிரினுக்கு இன்பம் விளைவித்துக்கொண்டு இருப் பதையும் உணர்த்தித்தான் அதுவாய் விளங்கும் ஒருவனும் அப்படி யிருந்துகொண்டு உலகில் தயவுச்செயல் தாங்கிப் பிறருக் குப் பக்குவம் உண்டாக்கிக் கொண்டிருப்பதே முறையாகும்.

அம்பல வாழ்வு சச்சிதானந்தமாய் உள்ளது, இதனையுண ராதும், இதனைப் பெற சுத்த சன்மார்க்கத்தை அறியாமலும், புறத்தலைந்தும், புலனடக்கியும் அகத்தொடுங்கியும், வீண்போ யினர் எண்ணிறந்த கோடி ஆன்மாக்கள். புறத்தே கண்ட புலன் இன்பம் பொய்த்துப் போயது; தூங்கிக்கண்ட சுழுத்திச் சுகமும் தொலைந்து போயிற்று; அகத்தே பதிபதத்தொடுங்கிப் பெற்றும் பெறாத ஆன்மானந்தமும் அகன்று போயது. அப்படி அப்படி அவையெல்லாம் ஒழிய இப்போது சச்சிதானந்த வாழ்வு நிலைக்கச் சுத்தநெறி அருட்பூரணத்தால் உதயமாகி யுள்ளதாம்.

தனிப்பரவெளியில்தான் சச்சிதானந்தபதி அருட்பெருஞ் ஜோதியாய்த் திகழ்கின்றார். அந்தப் பரவெளி நிலை நம் அச்சு என்னும் ஆன்மத் தனியில்தான் அருளால் தரிசிக்கவும், அதனோடு கூடிப் பிரிவற்று இருந்துகொண்டு ஆனந்தமாய் வாழவும் அருள்

பாலிக்கப்படுகின்றோம். மற்ற எவ்விடத்தும் எவ்வகையிலும் இந்த சச்சிதானந்த அனுபவ வாழ்வு ஒருவனுக்குக் கிடைக்கப் பெற்று நிலைப்பதாயில்லையாம்.

## 26. சாகாக்கலை வெளி

51. சாகாக் கலைநிலை தழைத்திடு வெளியெனும்
52. ஆகாயத்தொளிர் அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** சாகாக் கலையை வழங்குவது சாகாக் கல்வியாம். சாகாக் கல்வியைப் புகட்ட வந்ததுதான் சுத்த சன்மார்க்கம். மற்ற எந்த மார்க்கத்தாலும் இறப்பை நித்தியமாக நீக்கிவிட்டு எஞ்ஞான்றும் சுத்த சுகானந்தவாழ்வில் விளங்கிக்கொண் டிருப்பது கூடாதாம். ஆயைால் இச் சாகாக் கல்வியை நல்கும் சுத்த சன்மார்க்கத்தைப் பற்றி ஒவ்வொருவரும் நன்கு அறிந்து தெளிந்து ஏற்றுப் பயன்காண வேண்டும்.

உலகியற்கலை எதனையும் கலாசாலையிலோ ஆராய்ச்சிக் கூடங்களிலோ ஆசாரிய பீடங்களிலோ, பிற புறவிடங்களிலோ பிறர் மூலமாய்ப் போதிக்கப் பெற்று, ஆழ்ந்து பயின்று பயன் பெறலாம். அல்லது தனியிடத்திருந்து ஒருமையோடு கூடிய மந்திர உபாசனாமுறையில், தீவிரத் தியானாதிமுறையால் அரும் கலையோர்ந்து பெரும்பயன் அடைதல் கூடும். ஆனால், இந்தச் சாகாக்கலா அனுபவம், தயாவொழுக்கத்தோடு கூடிய சுத்த சத் விசாரத்தால் அருள்வெளியில் இருந்துதான் பெறவேண்டியிருக் கின்றதாம். இவ்வருட்பெரு வெளிதான் இங்கு சாகாக்கலை நிலை தழைத்திடுவெளி' என்று ஓதப்பட்டிருக்கின்றது. இந்த அருள்வெளியாம் ஆகாயத்தில் நித்திய பரிபூரணமாய்த் தோற் றமும் மறைவும் இன்றி என்றென்றும் ஒளிசெய்து கொண்டுள்ளது நம் அருட்பெருஞ் ஜோதியாம்.

மேற்படி அருள்வெளி நிறை ஆகாசநிலையை அருளாலேதான் கண்டடைய முடியும். அதற்குக் கீழ் உள்ள ஆகாசநிலையைத் தான் இதுவரை உலகம் அறிந்து ஒரளவு பயன்கொண்டுள்ள தாம். அந்நிலைகளையும், அவற்றால் கிடைக்கப்பெறும் பயன்களை யும் ஒருவாறு காண்போம். அவ்வாகாச நிலையாவன :

1. பூதாகாசம்—இது உடல்நிலையில் நிரம்பியுள்ள இந்திரிய ஆகாசம் எனப்படும்.

2. கரணாகாசம் — புறக் கரணமாகிய மனோவாக்கு காயத்தும், அகக்கரணமாகிய மனம், புத்தி, சித்தம், அகங்காரத்தும் விளங்கும் ஆகாச நிலையாம்.

3. ஜீவாகாசம் — தூல, சூக்கும, காரண தேகத்தில் விளங்கும் சாதாரண அசாதாரணஉயிர் ஆற்றல் நிலையாம்.

4. ஆன்மாகாசம் — கர்ம, பக்தி, ஞான, யோக சித்திகளுக் கெல்லாம் இடமாக உள்ள நிலையாம்.

இவ்வாகாச நிலைகளில் நின்று முயற்சி மேற்கொள்ளுபவர்கள் சாதாரண அசாதாரண சக்தி சித்திகளைப் பெற்று அதற்குக் குறிக்கப்பெற்ற காலம்வரை இவ்வுலகில் வாழ்ந்து மறைய நேரும். உலகநெறிகள் இதற்குமேல் மனிதனை வாழ்விக்காவாம். அதீதமா யுள்ள அருள்வெளி ஆகாசநிலையிலிருந்துதான் மனிதன் அருட் பெரும் பதிமயமாகி நித்தியமாய் வாழ முடியும்.

இவ்வருட்பெருவெளி, ஆன்மாகாசத்தில் அதீதநிலையில் அருகிக்கிடப்பது எனினும், அகண்டாண்ட கோடிகள் யாவும் இவ்வெளியில் கண்டுகொள்ளப்படுவதோடு ஆக்கலாதி ஐந்தொழி லால் ஆட்டிவைக்கப்படுவனவாயும் இருக்கின்றனவாம். இவ் விடத்திலிருந்தே நமது அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர்தம் தனிப் பெருங்கருணையால் பேருலகுயிர்ப் பொருள் யாவற்றையும் தோற்று வித்து ஆண்டுகொண்டுள்ளார். இந்தப் பரம்பொருள் ஆதியந்த மற்ற சச்சிதானந்த, ஒன்றான கடவுளாவார். இந்தக் கடவுளைத் தான் அருளாற்கண்டு, அதுவே நாமாயிருக்கின்ற உண்மையை உணர்ந்து, அங்கிருந்து அனகவாழ்வு மேற்கொள்ளுதலாலே இயல்பாகவே அவ்விறை வாழ்வு நம்மதாகி நித்தியானந்தமாய் அருட் பெருஞ்சித்தியோடு நிலவும் பெற்றி பெறுகின்றோம். இதுவே சாகாக்கல்வியின் முடிந்த பயனாம். இப் பயன் அருள் பதியைத்தான் நம் அருட்பிரகாசனார் ''சாகாக்கலை நிலை தழைத் திடுவெளியெனும் ஆகாயத்தொளிர் அருட்பெருஞ்ஜோதி'' என்று போற்றுகின்றார்.

## 27. ஆரண சிற்சபை

53. காரண காரியங் காட்டிடு வெளியெனும்
54. ஆரணச் சிற்சபை அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) நம் அருட்பெருஞ்ஜோதிபதியையே சுத்தசிவம் என முன்னர் கண்டிருந்தனர். அந்தச் சிவம் பேரருள் விளக்கத்தால்

யாவுமாய்த் தோன்றித் தன் அருட்பெருவெளியில் அனுபவப்பட லானதாம். அவ்வருளனுபவ நிலையே திரயோதச (13) வெளி நிலைகளாக முன் அடிகளில் மொழியப்பட்டனவாம். புறநிலை நின்று கண்ட இப்பதின்மூன்று நிலைகளைப்பற்றிய ஏகதேச விளக்கம் சுத்த சன்மார்க்கத்தால் அக அருள்நிலையில் மெய்யனு பவத்தில் பூரணமாகவே ஏற்படுவதாம். ஆம் புறத்திருந்து எவ் வகையிலும் தீண்டறிய அவ்வருட்பெரும் வெளிநிலையை ஆன்ம தற்போதம் நீங்கிய ஒருவனே அப்பதி வண்ணமாய் நின்று அனுபவிக்கக்கூடியவனாய் இருப்பது உண்மையாம். சான்று:

''ஐயமுற்றார் எல்லாரும் புறத்திருக்க நான்போய்
அம்பலத்தே திருநடங்கண் டகங்களிக்கும் போது
மையகத்தே பொருந்தாத வள்ளலரு கணைந்(து)என்
மடிபிடித்தார் நானுமவர் அடிபிடித்துக் கொண்டேன்.
மெய்யகத்தே நம்மைவைத்து விழித்திருக்கின் றாய்நீ
விளங்குக சன்மார்க்கநிலை விளக்குகஎன் றெனது
கையகத்தே ஒருபசும்பொற் கங்கணமும் புனைந்தார்
கருணையினால் தாயனையார் கண்டாய்என் தோழி.''

இதில் போத ஒழிவில், தானே அம்பலத்தரசோடுற்று அருள் அனுபவத்துடன் வாழ்கின்ற சுத்த சன்மார்க்க உண்மை இது வெனச் சான்று பகர்கின்றதைக் காண்கின்றாம்.

மேற்படி அருள்வெளியில் திகழ் பரம்பொருளைப்பற்றிப் புறத் திருந்து யூகித்தும் கற்பித்தும், அருள் ஏகதேசத்தால் உணர்த்தப் பெற்றும் ஆதியில் வழங்கப்பெற்றவைகளே தெய்வச்சாயை கொண்ட வேதாகம சாத்திரமெல்லாம். அவ்வருட்பெரு வெளியி லிருக்கும் அருட்பெருஞ்ஜோதிதான் அந்த வேதமறைக்கு முழு முதற் காரணமாயுள்ளதாம். அப்பதியின் திருச்சந்நிதியில் தூய மனத்தோடு நிற்கும் ஒரு பக்குவிக்கு உணர்த்தப்பெற்ற இறை ரகசியத்தை அவன் வேதவாக்காக விரித்து வெளியிடுகின்றான். அப்படித் தோன்றினதே வேதம் அல்லது ஆரணம் என்ப. வேத மெய்ப்பொருள் அகத்தொளிர் பதியுண்மையே அன்றி வேறல்ல. ஆதலின் அதனை எழுத்தால் எழுதிக்காட்ட முடியாதாம். செவி வழி உபதேசித்து உள்ளுணர்வில் விளங்கச்செய்யவே முடியும் என்ற கருத்தால் அவ்வேதம்—''எழுதாக் கிளவி'' எனவும் சுருதி எனவும் சொல்லப்படுகின்றதாம். சுரோத்திரம் என்றால் காது. இக் காதால் கிரகித்துக்கொள்ளப்படுவது, ஓதிப் பயின்று உள்ளத்திற் கொள்ளப்படுவது வேத போதனாமுறை என்பர்.

இம் முறையிலுள்ள குறைபாடு, சுத்த சன்மார்க்க அருள் அனுப வத்தில் தெளிந்து நிறைவுண்மை ஏற்கப்படும்.

புறத்தே பலரால் பலவாறு தோற்றுவிக்கப்பெற்றுள்ள வேதங்களுக்கும் அவ் வேதங்களின் காரணப் பொருளாயிருக் கின்ற உள்ளொளிர் உண்மைக்கும் நமது அருட்பெருஞ் ஜோதி திகழ் சிற்சபையே ஆதாரமாய் இருக்கின்றது. ஆகவே, வேதத் திற்கு அவ் இறையொளி காரணமாயும், புறவெளியீடுகள் காரிய மாயும் உள்ளனவாம். இதனால்தான் நம் அருளம்பலமாம் சிற்சபை ''காரண காரியங் காட்டிடு வெளியெனும் ஆரண சிற்சபை'' என அணிந்து கூறப்ப்ட்டுள்ளதாம். புறக்காரியப் பாடான வேதங்கள் அகமெய்ப்பொருளைத் தீண்டா. அவ் வேதங் கள் இன்னும் பரன் அடியைத் தேடிக்கொண்டிருக்கின்றனவாம். வேதம் ஓதியும் விழைவை(தேகபோக இச்சையை)விட்டிடாப்புற வேதியர் அருட்ஜோதியராகிய உண்மை வேதியனை எங்ஙனம் கண்டடைவர். திருவருட்பூரணத்தால் நம்மை வேதித்து தன் மயப் பொன்னுருவாக்குகின்ற பரிசவேதியனை அருட்பெருஞ் ஜோதியனாக ஆரண சிற்சபையிற் கண்டடையலாம்.

## 28. ஆகம சிற்சபை

**55. ஏக மனேகம் எனப்பகர் வெளியெனும்**
**56. ஆகமச் சிற்சபை அருட்பெருஞ் ஜோதி**

***(உ-வி)*** வேத மெய்ப்பொருளாகிய இறைநிலைப்பேறு எய்த அவ் விறைவனே யாவுமாய்த் தோற்றி விளங்குகின்றார். வேதம் முதல் நூல் என்றால், ஆகமம் அதற்கு வழிநூலாம். முன்னதை மூலம் என்றும், பின்னதை உரை என்றும் கூறுதல் முன்னோர் மரபு.

இறை ஒன்று. ஆன்மாவாம் உயிர் அனந்தம். இறையியல் கொண்டொளிர் ஒரு சொல் ஓம் ஆம். அந்த ஒரு சொல்லால் தோற்றுவிக்கப்பட்ட புறப்பொருள்களே பேருலகுயிர்களெல்லா மாம். இப்பொழுது ஏகம், அனேகம் என்பதன் உண்மை விளங் குவதாம். உள்ளீடாய் இருப்பதான ஒன்றே ஏகம். அதன் வெளிநிலைத் தோற்றம் அகர ஆகாச நிறைவுற்றிலங்கலின் (அன்+ஏகம்) அனேகம் என்றாகியுள்ளதாம். ஒப்பற்ற தனித் தலைமைப் பெரும்பகுதி ஆகிய கடவுள் ஒருவரே ஆவர். அவர் ஒருவரேயாக இருந்தும் அவரது எல்லாம் வல்ல அருட்பெருந்

தன்மையும், செயலும், தோற்றமும் வெளிப்பட்டு அனுபவத்தில் ஏற்கப்படுவதற்கு இந்த பேருலகக் காரியப்பாடுகள் யாவும் எவ்வளவோ காலமாகத் தோற்றி விளங்கிக்கொண்டிருக்கின் றனவாம். இந்த உண்மை வெளிப்பட்டு விளங்குநிலை பக்குவ மனிதனின் சிற்சபையாம்.

மெய்யறிவு வெளியினின்றுதான் அக்கடவுளரின், ஏகமான அக உண்மையும், அநேகமான புறநிலை விளக்கமும் கண்டு கொள்ளப்படுகின்றன. அந்தப் புறநிலை விளக்கத்தால் அக முணர்ந்து அடையவேண்டியிருக்கின்றது. அதாவது கடவுள்நிலை அனுபவம் பெறுவதற்கு வழிவகை காட்டுவது புறச்சூழலாகும். அகத்தைச் சுட்டுவது வேத மறை, ஆகையால் அதன் புறத்தை விளக்க வந்துள்ளது ஆகமம். வேதம்-கடவுளைக் குறிப்பது பதிநூலாகும். ஆகமம்-ஆன்ம இயல்பையுணர்த்தி சிற்ப ஆலய வழிபாட்டுமுறையால் பக்குவப்படுத்துவதால் இவ்வாகமம்-பசு நூல் எனப்படும். இதற்குமேல் மக்கள் உலகியலை அறவழியில் நலம்பெற நடத்த உதவுவது புராண இதிகாசமாம். இவை பாச நூல் எனப்படும். எனவே ஆகமம் ஆன்மானுபவத்திற்குரிய ஒன்றாய் இருக்கின்றதாம். இவ்வான்மாவின் ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மல விளக்கம் தர வந்த இந்த உரை நூலுக்கு அம் மும்மல முச்சொற்களின் முதலெழுத்துக்களையே கொண்டு ஆகமம் என்று பெயரிட்டிருக்கின்றனர்.

வேதமுடி பொருளாய கடவுளை அடைவதற்கு ஆகமவழியே படிக்கட்டுவழியாக உள்ளதாம். இதுவே சித்தாந்த நெறியாகவும் இருக்கின்றது. நமது சிற்சபையே இந்த வழிகளின் முடிவிடமாக உள்ளதாம். ஆகவே சிற்சபையைக் கண்டடைந்து அருள் விளக்கம்பெற்று நிற்கும்போது, ஆகம உண்மை எல்லாம் உள்ள வாறு தெளிவாம். இவ்வாகமமே சிற்சபை எனக்கொள்ளும் போது அவ்வாரணம் அச் சிற்சபையில் ஒளிர்கடவுள் வண்ணமாக வும் கொள்ளலாம். அது கற்பனைப் புனைவே. நம் சுத்த சன்மார்க் கத்தில் விளங்கும் அருட்பெருஞ்ஜோதி ஞான சிற்சபைதான் ஏகமாயுள்ள அருட்பதியியல்பும், அனேகமாயுள்ள அப்பதி ஒளி செய் சூழ்பெருஞ் ஜோதியுண்மையும் கொண்டு திகழ்கின்றதாம், முன் 5வது 6வது அடிகளில் ''ஆகம முடிமேல் ஆரண முடிமேல். ஆக நின்றோங்கிய அருட்பெருஞ்ஜோதி'' எனக் கூறப்பட்டதன் விளக்கத்தை மேலும் இங்கு சிற்சபையில் காட்டி விளக்குகின்றார்.

''ஆகமமாகி நின்று அண்ணிப்பான்தாள் வாழ்க, ஏகன் அனேகன் இறைவனடி வாழ்க'' என்பது திருவாசகம் குறிப்பது.

## 29. வேதாகம ஆதாரம்

57. வேதா கமங்களின் விளைவுகட் கெல்லாம்
58. ஆதார மாஞ்சபை அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) முன் அடிகளில் நம் ஆன்ம சிற்சபையே அனுபவ வெளியிடமாய், அதில் ஒளிரும் அருட்ஜோதியே ஆரணமும் ஆக முமாய் உள்ளதெனப் பொதுவாகக் குறிக்கப்பெற்றது. இங்கு அந்த அருட்பெருஞ்ஜோதியே பலப்பல வேதங்களுக்கும் ஆகமங் களுக்கும் அடிப்படை ஆதாரமாய் இருந்து யாவையும் தோற்று வித்துள்ளது என்பதை யுணர்கிறோம்.

கற்பனை கடந்த மெய்ப்பொருளாய்த் திகழ்கின்ற அருட் பெருஞ்சோதிக் கடவுளை உண்மையில் அறியாதுதான் இதுவரை எத்தனை பெரியோர்கள், எத்தனை கோணங்களிலிருந்து, எத்தனை வகையில் கண்டு கண்டு, வேறு வேறு வண்ணமும், வடிவும் பெயரும், இயலும், ஆற்றலும், செயலும் கொண்டதாய்க் குறித்திருக்கின்றனர். மேலும், அவர்கள் கண்டறிந்த அந்தக் கட வுளை அடைய, அவர்தம் அருளைப்பெற்று உய்ய எத்தனை எத்தனை வழி வகைமுறைகளை வகுத்துச் சாத்திரங்களாகவும், தோத்திரங் களாகவும், பிற கற்பனைக் கருவிகளாகவும் வழங்கிச் சென்றுள் ளனர். அப்படித் தோற்றுவிக்கப்பட்டவைகளிலே இந்த வேதங் கள் ஆகமங்கள்தாம் மிகமிகச் சிறந்தனவாய்க் கொண்டாடுகின் றனர் அவரவர்களின் வழித்தோன்றல்கள்.

மேற்குறித்த வேதாகமங்களின் அடிப்படை உண்மையை நமது அருட்பெருஞ்ஜோதி எனக் கண்டுகொண்டால்தான் மன்பதை (மக்களினம்) ஆன்மநேய ஒருமையை உரிமையோடு கொண்டு ஒத்து வாழ்ந்து பெருநலம் காணமுடியும். அடிப்படை யுண்மையை அறியாது மயங்கிச் சமயமத போதனைகளால் சிதறுண்டு கிடப்பதும், புலனிச்சைப் பெருக்கால் வெறிகொண் டலைவதும், அறிவியல் விளைவின் ஆடம்பரவாழ்வால் கேடுறுவதும் தான் இன்றைய மனித சமுதாயத்தில் எங்கணும் காண்கின் றோம். அன்பறிவுடைய ஒருசிலர்கூட அகஉண்மையை நேரடி யாகக் கண்டுகொள்ளாததால், சமரசம், சமத்துவம், அபேதம்

எனப்பேசியும், எல்லாம் ஒன்றின் விளைவே என்றும், ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்றும், எப்பெயரும் ஒரு கடவுளையே சுட்டுவதாயும் கூறிக்கொண்டும் பயன் ஒன்றும் காணாது ஒழிந்து போகின்றனர் பலரும். ஆகையால், உண்மையில் மக்கள் சமுதாயம் ஒன்றுபடவேண்டுமானால், ஆன்மநேயம் பூரணமாய் வெளிப்பட்டு வாழ்வுக்கு உதவவேண்டுமானால் ஒவ்வொருவரும் அடிப்படையான அருட்பெருஞ்ஜோதி என்னும் மூலப்பொருளை உள்ளவாறு கண்டுகொண்டிடவேண்டும்.

அருட்பெருஞ்ஜோதியே உள்ளிருந்து தன் ஏகதேசத்தை ஒவ்வொரு தெய்வத்தின் இயலாக, செயலாக வெளிப்படுத்தி வாழ்விக்கின்ற உண்மையை நன்கறிந்து பூரணப் பயன்பெற, பெருந்தயா வாழ்வு மேற்கொள்ள ஆணை செய்யப்படுகின்றோம் நாம் ஒவ்வொருவரும். இதுவரை காணாத வேதாகமங்களின் விளைவு இந்த அருட்பெருஞ்ஜோதி சமூகத்தில் இப்பொழுது தான் ஏற்படுகின்றது. இதுகொண்டு உலகெலாம் இன்பவாழ்வு பெற்றுய்யும்.

## 30. என்றாதிய சுடர்நிலை

59. என்றா தியசுடர்க் கியநிலை யாயது
60. அன்றாந் திருச்சபை அருட்பெருஞ் ஜோதி

*(உ-வி)* உலகில் தோற்றியுள்ள பேரொளி அண்டங்கள் தாம் முதற்படைப்பாக விளங்குகின்றன. அப்பேரொளி அண்டங்கள் பலகோடியுள்ளனவாம். இவ்வொளிக் கோளங்கள் மிக மிகத் தொலைவிலிருந்து ஒளிவீசுவதால் சிறுசிறு விண்மீன்களாகத் தோற்றுகின்றன. இந்த ஒளிக்கோளத்தில் ஒன்றே நம் நிலவுலகுக்கு அணித்தே இருப்பதால் பெரிய ஜோதி ஞாயிறாக விளங்குகின்றது. இந்தச் சூரியனே உலகுக்கு உயிராம். இதிலிருந்துதான் நம் பூவுலகுக்கும், செவ்வாய் முதலிய கோள்களுக்கும் எல்லாவிதமான ஒளியும் ஆற்றலும் கிடைக்கின்றனவாம். ஞாயிறும் மற்ற விண்மீன்களும் ஒளியுடையன ஆதலின் நாள் எனப்படும். ஞாயிற்றின் ஒளியும் ஆற்றலும் கொண்டு விளங்கும் ஒளியற்ற அண்டங்கள் கோள் எனப்படும். இக்கோள் இரவியிடத்திலிருந்து ஒளி ஆற்றலைக் கிரகித்துக்கொண்டு விளங்கலால் கிரகம் எனவும் கூறப்படும்.

என்று அல்லது என்றூழ் என்பது சூரியனைக் குறிக்கும். சூரியனில், ஒளியும், சூடும், இயக்க ஆற்றலாகிய கிரியாசக்தியும் உள்ளன. இதனால், ஒளி, சுடர், ஜோதி ஆக விரிந்துள்ளதாய்க் காண்கின்றோம், இந்த ஒளிநிலைக்கெல்லாம் முதலாக இருப்பது சூரியனே என்ற கருத்து என்றாதிய சுடர் என்றதால் விளங்கு வதாம். இந்த ஞாயிறுக்கும் இதுபோன்ற விண்மீன்களுக்கும் இயனிலை அல்லது தாயகம் எதுவென்றால் அதுதான் அகண்ட வெளியெல்லாம் நிரம்பியுள்ள இயற்கை நுண்ணொளியாம். இவ் வொளி நிலைநின்றே எல்லா ஜோதி கோளங்களும் தோன்றி விளங்குகின்றனவாம். இந்த ஒளி எங்கணும் நிரம்பியுள்ளதால், நம் தலை நடுவுள்ளும் இருக்கின்றதும் இயல்பே. இங்கு விளங்கும் அந்த ஜோதிநிலை, நிறையருள்மயமாய் அருட்பெருஞ்ஜோதி எனத் திகழ்கின்றதாம். இதுவே கடவுள் உண்மை வெளிப்பட்டி லங்கும் திருச்சபையாக அறியப்படுகின்றது.

நமது அருட்ஜோதிதான் எல்லாவற்றிற்கும் முழுமுதற் காரணமாய் இருக்கின்றது. உலகம் என்றாதிய சுடர்களைக் கண்டுள்ளது, இவ்வான் சுடர்களுக்குத் தாயகமான விண்ணொளி யையும் அறிந்திருக்கின்றது. ஆனால், இவைகளுக்கெல்லாம் ஆதாரமாயும், இவற்றில் எதுவும் அல்லாததாயும், இவற்றிற்கு அதீதமாயும் இருக்கின்றது நம் சத்தியஞானத் திருச்சபையில் விளங்குகின்ற அருட்பெருஞ்ஜோதி.

## 31. சமயங் கடந்த வெளி

61. சமயங் கடந்த தனிப்பொருள் வெளியாய்
62. அமையுந் திருச்சபை அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) அருட்பெருஞ்ஜோதி வளர் திருச்சபை சத்திய ஞானத்தால், மெய்அருள் அறிவால் கண்டு அனுபவிக்கப் படுவதாம். மற்றபடி புலன் உணர்வினாலும், மனோஅறிவினாலும் அருட்பெருஞ்ஜோதியின் உண்மையைத் தெரிந்திட முடியாதாம். இக் கடவுளுண்மை வெளிப்பட்டிலங்கும் இடம் அருள் அனுபவ வெளியாம். இங்கு வெளிஎன்றால் புறநிலையைக் குறிப்பதல்ல. அகஅனுபவநிலையேயாம். இவ் அகவெளியில்தான், அகண்ட பேருலக உண்மை எல்லாம், இறையருள் உணர்வினால் அறிந்து கொள்ளப்படுவதாம். இவ்வக வெளியில் தனிப் பரம்பொருளாய்

நமது அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் கோயில்கொண்டு விளங்கு கின்றார். இந்தத் தனித்தலைமைப் பெரும்பதி தனிப்பெருங் கருணையுடையவ ராவார். ஆகையால், இந்த ஆண்டவரைத் தொழுதால் அவர் தயவு பெறலாம். அத் த்யவினால்தான் அகப் புற உண்மையெல்லாம் உள்ளவாறு கண்டு இவ்வுலகில் அருள் வாழ்வு பெறலாம். ஆனந்தமாய் விளங்கலாம். அருட்பெருஞ் ஜோதியை உலகம் அறிந்துகொள்ளாததினால்தான் பலவாகிய சமயநெறிகளால், நல்லின்ப வாழ்வு இதுவெனவும், அதனை அடை வதற்கு வழிவகை இவையெனவும் மக்கள் தெரிந்துகொள்ளா திருக்கின்றனர்.

சமயநெறிகள் மக்களை வாழ்விக்கும் என்றுதான் முன்னோர் கருதி வலியுறுத்தினர். ஆனால், அந்நெறிகளால் இந்நாள்வரை, பெருநலவாழ்வுக்கு வழி உண்டாகவில்லை. ஏன்? அந்த மார்க்கங்க ளெல்லாம் புலன் அறிவு எல்லையிலும், மனோ அறிவு எல்லையிலும், முடிவாக ஆன்ம அறிவு எல்லையிலும் கண்டு உணர்ந்து துய்த்த விஷயங்களையே அடிப்படையாகக் கொண்டு ஆக்கப்பெற்றிருந்த தால் அவற்றிடை வேற்றுமையே மலிந்தன. ஒற்றுமை விளங்கா ததினால் மக்கள் சமுதாயத்திலும் வேற்றுமைகள் புகுந்துவிட்டன. மேலும் புலபோக வேட்கை வளர எல்லாவிதத் துன்பச் சூழல் களும் பெருகிவிட்டுள்ளனவாம். சமயம் என்றால் தெய்வ உணர்ச்சி அறிவாம். மனிதனுக்கு விசேட அறிவு விளக்கம் பகுத் தறிவாக உள்ளதால் அதுகொண்டு தெய்விகமான வாழ்வு பெற வேண்டியவனாக இருக்கின்றான். மற்ற உயிரினங்களுக்குச் சிறந்த அறிவு விளங்குகின்றதில்லை. ஆகவே மனிதன் மட்டும் அவசியம் இச் சமய வாழ்வு ஏற்க வேண்டியுள்ளதாம். ஆனால், அச் சமய உண்மை ஒன்றான அருட்பெரும்பதியிடத்திருந்து வெளிப்பட்டு விளங்காததினால் பல சமயக் கொள்கைகள் பரவிக் கேடு விளை வித்தனவாம். ஒன்றே கடவுள், அந்நிலையுறு நெறியாம் பேரருள் அனுபவ மார்க்கமும் ஒன்றே என இன்றே அறிகின்றோம். ஆன்ம எல்லையினுக்கப்பால், எல்லையற்ற பெரு வெளியாயிருக்கும் அருள் வெளியில், வடற் பெருவெளியில் திகழ்வது நம் அருட் பெருஞ் ஜோதித் திருச்சபை. இதனையே சமயங்கடந்த தனிப் பொருள் வெளியாய் அமையும் திருச்சபை அருட்பெருஞ்ஜோதி எனப்பட்டுள்ளதாம். சமயங்களில் அடங்காத நம் சமயாதீதப் பரம்பொருளை அதன் நிறை அருளால் அடைந்து வாழலே அமை வதாம்.

## 32. முச்சுடர்களுக்கு முதற் சுடர்

63. முச்சுடர் களுமொளி முயங்குற வளித்தருள்

64. அச்சுட ராஞ்சபை அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) முன் 59ஆம் அடியில் என்றாதிய சுடர் என்று வந்து, அண்டாதித்தனைக் குறித்ததுடன் மற்றப் புற ஜோதிகளையும் சுட்டினவாம். இங்கு முச்சுடர்கள் நம் பிண்ட தேக உயிர்நிலை விளக்க வந்துள்ளனவாம். சுடர் என்றாலே சுடுந்தன்மையை உணர்த்தி நிற்பதால் இங்கு உடல் உயிர்க்கு உரித்தாயதாகக் கொள்ளப்படுவதாம். இந்த உடலில் உயிர்ச் சக்தி சூடாய் உணரப்படுவது யாவரும் அறிந்ததே. இச் சுடுதற் குணத்தைக் காரணமாய்க்கொண்டே, உடல், தேகம், காயம் என்ற சொற்கள் ஆக்கிக்கொள்ளப்பட்டுள்ளனவாம். இச் சொற்களில், உடற்றுதல், தகித்தல், காய்தல் என்றவை எல்லாம் ஒரு பொருட்பன் மொழியேயாம்.

கடவுட்ஜோதியின் சிற்றணுதான் நம் உள் அருள் விளங்கு ஆன்ம சிற்சபையாயிருக்கின்றது. அதிலிருந்தே உயிர்ச் சக்தி விரிந்து .செயல்படுகின்றதாம். அந்த ஆன்ம சிற்சபையில் விளங்கும் கடவுள் ஒளியை விளக்கு எனவும்; அதன் விரிநிலை உடல் நிறைவில் சுடர் எனவும், அதன் புறத்தோங்கிய அகண்ட நிறை நிலையே ஜோதி எனவும் உள்ளனவாம். இதனையே அருள் விளக்கமாலையின் ஆரம்பத்தில் ''அருள் விளக்கே, அருட்சுடரே, அருட்ஜோதி சிவமே'' என்று குறிக்கப்பட்டுள்ளதாம். இந் நிலை முற்றும் அருளனுபவத்தில் விளங்குவது. அருள் விளங்காத அபக்குவநிலையில் இந்த விளக்கு, சுடர், ஜோதி மூன்றும், உயிர், உடல், உலகு எனத் திகழ்வனவாம். அருள் விளக்க மாலை அருள் விளக்க உரையில் காண்க. (பக். 2-6.)

இம் மனித வடிவில் காரியப்பட்டுள்ள உயிராற்றல், உயிர்ப்பாக, ஜீவசுவாசமாக, மூச்சாக உள்ளதாம். இம் மூச்சுக் காற்றில், சூரிய, சந்திர,அக்கினியாம் முச்சுடர் இயல்பும் காணப்படுகின்றன. இவற்றின் விளக்கம் பிங்கலை, இடகலை, சுழிமுனையின் காரியப்பாடாய் யோக நூல்கள் புகலும். மூச்சடக்கி உயிர் வாழ வழிகூறும் பிராணாயாமமுறை எல்லாம் திருவருள்நெறிக்கு முக்கியமல்ல. ஜீவதயவால் கடவுள் தயவைப் பெற்று சுத்த மாதி திரிதேக சித்தி பெறுதல்கள் நம் குறிக்கோளாகக் கொள்ளப்படும்.

நமது கடவுட் ஜோதி அருட்பெருஞ்ஜோதியாக, ஆன்மாவுக் குள்ளிருந்து திருவருளால் உயிர் இயக்கத்திற்கு உதவிக்கொண் டிருக்கின்றதாம். உயிரில் விளங்குகின்ற சோம, சூரிய, அக்கினி ஆகிய முச்சுடர்களும் கூடிய ஒளியோ நம் அருள் ஒளிக்கு நிக ராகாது. அவ்வருள் ஒளியே சுத்த சன்மார்க்க அனுபவத்தில், அருட்சுடராக விளங்குகின்றதாம். இதுதான் நம் திருவருட் பிரகாசரின் சுத்த சுகானந்த வடிவமாம். அருட்சுடர் வடிவில் திரிசுடர் உண்மையே சுத்த பிரணவ ஞான தேகமாக விளங்கு கின்றது. முச்சுடர்களுக்கு ஒளியளித்து அவற்றை விளங்கச் செய்துகொண்டு விளங்குகின்றதுதான் இந்த அருட்சுடராகிய அருட்பெருஞ்ஜோதியாம்.

அருட்சுடர்கொண்டு அருள் உடல் பெற்று அழியாது பேரின்ப சித்தியோடு வாழ்வதுதான் நம்பதி ஆணை. இதுவல்லாது யோக சித்தி மார்க்கத்தால் காயசித்தி பெற்று விளங்கினும் பயனில்லை, வாழ்வுமில்லையாம்.

''மூன்று மடக்குடை பாம்பிரண் டெட்டுள
வேன்ற னியந்திரம் பன்னிரண் டங்குலம்
நான்றவிழ் முட்டை யிரண்டையும் கட்டிட்(டு)
ஊன்றியிருக்க உடம்பழி யாதே.''

என்றும்,

''மூலத் துவாரத்து மூளும் ஒருவனை
மேலத் துவாரத்து மேலுற நோக்கிமுக்
காலுற்றக் காலனைக் காய்ந்தங்கி யோகமாய்
ஞாலக் கடவூர் நலமாய் இருந்ததே.''

என்னும் திருமந்திரக் கருத்தால் பெறப்படும் உடல் அழியாமை யால் வாழ்வு நிலைப்பதாயில்லை. ஆகையால் உடல் வாழ்வுக்கு அருள் ஒளியே துணையாய்க்கொள்ள வேண்டியிருக்கிறது. அருட் சிவபதியைத் திருப்பெருந்துறை எனும் அகப்பெரு வெளியில் கண்டொன்றி நின்று, உலகும் உயிரும் அவருடைய அருள் வடிவே எனக்கொண்டு வாழ்தலால், அருளின்பானுபவத்தோடு திகழ லாம் என்பது திருமூலரின் திருவுள்ளம், அவருடைய சான்று:

''நாடும் பெருந்துறை நான்கண்டு கொண்டபின்
கூடும் சிவனது கொய்மலர்ச் சேவடி
தேட லரியவன் சிறப்பிலி எம்மிறை
ஓடும் உலகுயிர் ஆகிநின் றானே.''

என்பதால், இறைவனே, உலகும் உயிர்களுமாகி யுள்ளதை யோர்ந்து, அவ்விறையோ டுறையும் அருட் பக்குவியும் இறை யனுபவம் நீங்காது வாழவேண்டியவனே எனத் தெளிவாக்கப் படுகிறது. திருமந்திரத்திலும் திருவாசகத்திலும் புதைந்து கிடக்கும் இக்குறிப்பே சுத்த சன்மார்க்கத்திற்கு வித்தாக இருந்து திருவருட்பாவில் விளைவு கொண்டுள்ளதாம். இதனால் தான் நம் வள்ளல்பெருமான் இச் சுத்த சன்மார்க்கத்தின் உண் மையை அறிய வேண்டின் திருமந்திரத்தையும் திருவாசகத்தையும் ஊன்றி நோக்கும்படி கூறியிருக்கின்றார். எல்லா உண்மையையும் வழங்க வந்துள்ளது நம் அருட்பெருஞ்ஜோதியே. அதனை இவ் அகவலில் கண்டு தெளிகின்றோம்.

## 33. துரியம் கடந்த சுகபூரணம்

65. துரியமும் கடந்த சுகபூ ரணந்தரும்
66. அரியசிற் றம்பலத்து அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** பொதுவாக மக்களுக்கு, விழிப்பு, கனவு, உறக்கம் ஆகிய மூன்று நிலைகள் தினமும் அனுபவத்தில் தெரிந்துள்ள னவேயாம். இந்நிலைகளே, சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி என்றும் கூறப்படும். இவைகளில் ஒன்றனுள்ளொன்றாகச் சிற் சில சமயங்களில் தோன்றுவதுமுண்டாம். மனோ உணர்வு, நினைப்பு மறப்பு நிலையை அடைவதால்தான் இந்த விழிப்பு, கனவு, உறக்கம் உண்டாகின்றன. சுழுத்தியில் சுருங்கிக் கிடக்கும் எண்ணங்கள் சொப்பனத்தில் கற்பனா தோற்ற நிலை யில் விளங்கும். அதற்குமேல் விழிப்புநிலை ஏற்படும்போது, கரணக்காட்சியாகிய மனோ கற்பனா நிலை கடந்து இந்திரியக் காட்சியாகிய இயற்கைச் சூழ்நிலை தோன்றி விளங்குகின்றதாம். ஒருவன் நல்ல உறக்கத்தில் கிடக்கும் தருணம், கரண இந்திரியங் கள் நல்ல ஓய்வு கொள்ளுவதால் உயிர் ஆக்கம் அடைந்து, மீண்டும் விழித்தெழும்போது சுகானுபவமும் தெளிவும் பெற்று விளங்குகின்றான். இச்சுகானுபவம் எல்லோருக்கும் புரிகின்ற தில்லை. எனினும், உறக்கத்தின் பின் சோர்வு நீங்கி புதுத்தெம் புடன் விளங்குவது அனுபவமே.

சுழுத்தி ஆகிய உறக்கத்தில் ஏற்படுகின்ற புத்துணர்ச்சியும் ஆற்றலும், அந்தச் சூனியநிலையில் அறியப்படுகின்றதில்லை. அந் நிலைவிட்ட சாக்கிரநிலைக்கண் வந்தபின்னர்தான் அச்சுழுத்தியிற்

பெற்ற சுகம் அனுபவமாகின்றதாம். இச்சுழுத்தி நிலைக்குமேல் அனுபவப்படும் ஒருநிலையை துரியநிலைஎன்று யோகியர் கூறுவர். இத்துரியானுபவம், ஒருமையுற்ற சலனமற்ற சுத்தமனம், உணர்வு கெடாது, பிற யாவையும் கடந்து தன்மயமாய் விளங்கும் நிலையாம். இந்நிலையிலிருக்கும்போது ஒருவித நிறைவுணர்வு ஏற்படுவதாம். அது சுகநிலை என்பர். இதனால், இந்நிலையைச் சுக நித்திரை, யோகநித்திரை, அறிதுயில், தூங்காமல் தூங்கும் நிலை என்றெல்லாம் கூறுவர். ஆனால், இந்தச் சுகானுபவம் எப்பொழுதும் நிலைப்பதாய் இல்லை. அந்நிலைவிட்டு இறங்கிவிட்டால் விரைவில் அவ்வனுபவமும் ஒழிந்துவிடுமாம், யோகசித்தர்கள் அத்துரியத்தில் பெற்ற ஆற்றலால் பல அற்புத சித்திகளும் புரிந்துகொண்டிருக்கின்றனர். முடிவில் அத்துரிய நிலையில் பொருந்தி, உடலைவிட்டு அத்துரிய சுகத்தில் மூழ்கி மறைந்து போகின்றார்கள். அந்நிலையைத் துரியாதீத நிறைநிலை என்று கூறுவர். அத்துரியாதீத நிலையைத்தான் சுகபூரணம்தரும் நிலை என்பதும், அது நமது அருட்பெருஞ்ஜோதிச் சிற்றம்பலமாக உள்ளதென்பதும் ஈண்டு அறிவிக்கப்படுகின்றதாம். யோகி புறத்திருந்து சென்று துரியாதீதத்தில் பதிக்கலப்பால் மறைந்துவிடுகின்றதால், அனுபவமும் வாழ்வும் அற்றுச் சூனியமாய்ப் போய்விடுகின்றான். ஆனால், நம் சுத்த சன்மார்க்கியோ அம் மேநிலையில் மனத்தால் ஒன்றி நின்றுகொண்டு அருள் அனுபவத்தைப் பெருக்கும் ஜீவகாருண்ய வாழ்வுவாழ, அந்த அகமிருக்கும் நிறையருட்சக்தியே இவனில் பரவிப் படர்ந்து நிரம்பி இன்பானுபவத்தில் நிலவச்செய்துவிடுவதாய் இருக்கின்றதாம். இதனால்தான் நம் வள்ளற்பெருமான் சுகபூரணம்தரும் சிற்றம்பலத்து அருட்பெரும் பதியைப் போற்றுகின்றார்.

## 34. சுகங்கள் யாவும் அருள்வது

67. எவ்வகைச் சுகங்களும் இனிதுற வளித்தருள்
68. அவ்வகைச் சிற்சபை அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** எது உண்மையானதும், நிறைவானதும், நிலைத்திருப்பதுமான சுகம் என்று அறிந்துகொள்ளாமல்தான், புலபோக இச்சையால் மனத்தெழும் அவாவால், எதை எதையோ சுகம் எனக் கருதி அடைய முயல்கின்றான் மனிதன். அம்முயற்சி கைகூடினால் மகிழ்ச்சி அடைகின்றான். அப்படிக் கிடைத்த சுகம்

சீக்கிரமே மறைந்துபோக வேறொன்றை நாடுகின்றான். அதனாலும் நிலைத்த இன்பம் உண்டாவதாயில்லை. ஆகையால், அவ்வின்பம் அடைய மேற்கொண்ட பாடுகள் யாவும் வீண் என்றுதான் கருது கின்றான். முடிவில் அப்படி வீண்என்று கொள்ளவேண்டிய தில்லை. ஏனெனில் அப்படி ஒரு அனுபவம் உண்டாகித்தான் அதனிடத்தில் விருப்பு .வெறுப்பற்று, மேனிலைக்குச்செல்ல பக்குவம் ஏற்படுகின்றதாம். எல்லாம்தர வல்லான் இறைவன். அன்றியும் அவன் நமக்கு மேலான பேரின்பவாழ்வை வழங்கவே திருவுளம் கொண்டுள்ளான். ஆனால் நாமோ ஆண்டவரின் திருவுள்ளத்தையும் அறியாது, அவர் அருளும் நிறையின்ப வாழ் வையும் அறியாது புலன் இன்ப நாட்டத்தோடு ஏதேதோ வேண்டிப்பெற்று அவத்தை யுறுகின்றோம்.

நமக்கு இன்ப வாழ்வுக்குத் தேவை இன்னதுதான் என்று நாம் அறியோம். புற நாட்டமும் இச்சையும் நம் மன அறிவை நன்கு மூடிக்கொண்டிருக்கின்றன. இப்புலன் ஆசையை நீக்கித் திருமுன் நின்று வேண்டும்போது நாம் எதையும் குறித்துக் கேட்க விரும்பாது, ஆண்டவர் திருவுள்ளம் யாதோ, யாதோ, அவரது திருவுள்ள விழைவின்படி அருளட்டும் என்று அகநெகிழ் வோடிருந்துவிடுவதே சரியானதாய் அறிகின்றோம். அப்படி இருந்துவிடுவதால் கடவுள் அருள் நம் உண்மைத் தேவைக்குத் தக யாவையும் முறையாகக் கொடுத்துப் பக்குவப்படுத்தி மேனிலைக்கு ஏற்றிவிடுகின்றதாம்.

''வேண்டத் தக்க தறிவோய் நீ
வேண்ட முழுதும் தருவோய் நீ
வேண்டும் அயன்மாற் கரியோய் நீ
வேண்டி என்னைப் பணி கொண்டாய்
வேண்டி நீயா தருள்செய்தாய்
யானும் அதுவே வேண்டினல்லால்
வேண்டும் பரிசொன் றுண்டெனில்
அதுவும் உன்றன் விருப்பன்றே''. — திருவாசகம்

என்று மணிவாசகர் தன் வேண்டுகையைத் திருவுள்ளத்தின் விருப்பிற்கே விடுகின்ற திறம் போற்றிக்கொள்ளத் தக்கதாம். ஆகவே நாம் ஆண்டவரிடம் அவரது நிறை அருளையே வேண்டி நின்றால், அவ்வருள் தானே நமக்கு வேண்டியாங்கு வழங்கி வாழ்விப்பதாம்.

நாமோ அருட்பெருஞ்ஜோதியின் தனிப்பெருங்கருணை வசத்தால், அவருடன் இரண்டற இருக்கின்ற இயல்பையே உணர்ந்து சிற்சபையில் நிற்கின்றோம். ஆனால், சூழுடம்பின் பற்றாலும், புறநிலை வாழ்வாலும், அகஅருளனுபவம் பெறாது இருக்கின்றோம். ஆகையால், நமக்கு ஆண்டவர் திருவருள் உண்ணின்றுநிறையின்ப வாழ்வில் தழைக்கச்செய்ய வேண்டுவதே நம் உண்மைத் தேவையாம். அதனையே வேண்டி அருளால் அருட்பேரின்ப நிலையுறுவது நம் கடமையாகும்.

முன்னோர் இச் சிற்சபையின் புறத்திருந்து வேண்டினது யாவும் கடவுள் வழங்கியும், அவை கொண்டு குறிப்பிட்ட காலம் வரையிருந்தும் மறைவுற்றனர் அவர்கள் எல்லாம். சிறப்பாக அவர்கள் அச்சிற்சபேசரின் நிறைநிலையைப் புறத்திருந்து கண்டு ஒன்ற முற்பட்டதால், அப்படியே இரண்டறக் கலந்து ஒழியத் தான்முடிந்ததாம். ஆகையால், திருவடியிற் கலந்து மறைந்த ஆன்மாக்கள், அந்நிலையில் தாம்கெட்டு அதுவாய் இருந்தும் இல்லாதவர்களாய் எவ்வளவு காலம் இருப்பினும் என்ன பயனோ! அந்த நிறையின்ப இறையனுபவம் மறையாது விளங்கச்செய்ய வேண்டியே இன்று நம்மையும் சிற்சபையில் அருட்பெருஞ்ஜோதியோடு அத்துவிதமாய் விளங்கவைத்துள்ளார் நம் பதி. ''திரு அம்பலவன் திருநோக்கம் பெற்றார்க்கு உரு அம்பலத்தே என்று உன்,'' என்பது அருட்ஜோதி வள்ளல் வாக்கு.

## 35. இயலுண்மை இன்ப சிற்சபை

**69. இயற்கையுண் மையதாய் இயற்கையின் பமுமாய்**
**70. அயர்ப்பிலாச் சிற்சபை அருட்பெருஞ் ஜோதி**

***(உ-வி)*** நமது அருட்பெருஞ்ஜோதிபதி இயற்கையுண்மை வடிவும், இயற்கை விளக்க நிறைவும், இயற்கை இன்ப இயல்பும் கொண்டவராவார். இதனையே மெய்யறிவின்ப வடிவினர் எனவும், சச்சிதானந்தமானவர் எனவும் கூறுவர். இங்கு முதல் அடியில் இயற்கையுண்மையாகிய சத்துநிலையும், இயற்கையின்பமாகிய ஆனந்தநிலையும் குறித்துவிட்டு, இயற்கை விளக்க் நிலையைச் சுட்டாமற் சுட்டியுள்ளார் இரண்டாவது அடியில். அது, சிற்சபை என்றதால் குறிக்கப்பட்டுள்ளதாகும். சிற்சபைதான் இயற்கைவிளக்க நிறைவாகியுள்ள இடமாம். இதனைச்

சத்தியஞானச் சிறு விண்ணப்பத்தில் கண்டு தெளியலாம். ''இயற்கை விளக்க நிறைவாகியுள்ள ஓர் சுத்த சிவானுபவ ஞான சபையில், இயற்கையுண்மை நிறைவாகிய திருவுருவைத்தரித்து, இயற்கை இன்ப நிறைவாகிய சிவானந்த ஒருமைத் திருநடச் செய்கையை எவ்வுயிரும் இன்பம் அடைதற்பொருட்டே செய் தருளுகின்ற எல்லாம்வல்ல தனித்தலைமைக் கடவுளாகிய அருட் பெருஞ்ஜோதி ஆண்டவரே,'' என்று குறித்துள்ளார்.

மேற்படி நம் கடவுள் வெளிப்பட்டிலங்கும் இடம் சிற்சபை என்பது குறிக்கப்பட்டதோடு, அது, ''அயர்ப்பிலா'' என்ற நித்திய விளக்கத் தன்மையுணர்த்தும் ஓர் அடைமொழியும் சேர்த்து வழங்கப்பட்டுள்ளதாம். இதன் உண்மை ஆழ்ந்து நோக்கின் விரிந்து விளங்கும், பெருமை தோன்றும். சிற்சபை என்பதைச் சித்சபை எனவும் கூறுவர். சிற்சபை என்றால் மிக நுண்ணிய சிறுநிலையைக் குறிக்கும். சித்தென்பது ஞானம். ஆகையால், சித்துவிளக்கம் கொண்ட ஆலயம் சித்சபை எனப் படுவதாம். சித்-அம்பரம் ஞானாகாச நிலையாம். சித்+அம்பரமே-சிதம்பரமாம். இங்கு நம் அருட் சிற்சபை அல்லது அருள் ஞான சபை அருட்பெருஞ்ஜோதி கோயில் கொண்டிலங்குமிடமாயிருக் கின்றதாம்.

சித்தென்பது, மேலே இயற்கை விளக்க நிறைவாகிய இடம் என்று அறியலானது. இந்த அகண்ட பிரபஞ்சத்தில் இறைவர் சத்துண்மைப் பொருளாய அகத்தில் நிலைத்துள்ளார். அச்சத்து நிலையிலிருந்து தன் அருளையே விரித்து அனந்த வண்ணவடிவங்க ளாக்கித் தன்னைச் சூழக்கொண்டுள்ளார். இந்தச் சூழ்வடிவங் களில் எதுவும் நிலைப்பதேயில்லை; மாற்றம் அடைந்துகொண்டே யிருக்கின்றதாம். இந்த மாற்றம் ஏனென்றால், புறநிலை பக்குவம் உண்டாகி அகத்திலுள்ள நிறையின்பம் வெளிப்படற்கேயாம். அந்தப் பக்குவம்தான் இன்றைய சுத்த சன்மார்க்கிக்கு ஏற்படு கின்றதாம். சுத்த சன்மார்க்கியின் உண்மை வடிவம் அகத்தில் சத்துநிலை நின்று விரிந்து அருள் ஒளிநிறைவால் அகண்டவடிவ மாய்த் திகழ்கின்றதாம். இவனுக்குப் பூரண இன்பம் நிலைத்த அனுபவமாகின்றதோடு தேகம் சுத்த நித்த வடிவமாகவும் விளங்குவதாம். இவனைப் புறத்திருப்போர் பழைய உருவிலேயே இருப்பதாகக் காண்பர். ஆனால், அது அருளுடம்பாய் அழியாமை பெற்றிலங்குகின்றதாம். இப்பொழுது சித்சபைதான் இந்த

அருள் உருவாகி நிலை கொண்டுவிட்டதாம். இதுதான் அயர்ப்பி லாச் சிற்சபை என்றதால் குறிக்கப்பட்டதாம். இந்தச் சித்து வடிவம் தளர்வும், சிதைவும், அயர்ச்சியும் இல்லாதது. ஆகை யால், இதில் அகத்தில் சத்துண்மையும், ஆனந்த நிறைவும் எப் பொழுதும் விளங்குவதாம். இச் சன்மார்க்கி, இச் சித்துருவில் (சத் +ஆனந்தம்) சதானந்த வண்ணமாய் விளங்குவான் என்பது சத்தியம்.

சத்தான இறையுண்மை அகமாய் இருந்து அதற்கும் உள்ளீடாய் இயற்கை இன்பத்தை, வித்தினுட் கனிபோல் அதி சூக்குமநிலையில் வைத்திருந்து, அந்தப் பேரின்பக் கனி நிலை வெளிப்பட, அச்சத்தானந்த விதையைச் சூழ சித்துச்செயலாய் ஐம்பூதத் திரட்சியால் முளைத்துச் செடியாய், மரமாய், பூவாய், காயாய் முடிவில் பழுத்துக் கனிந்து, சச்சிதானந்தக் கனிப்பயன் கொண்டு அழியாது விளங்குவதாம்.

இவ்வளவு உண்மையும் அயர்விலாச் சிற்சபை அருட்பெருஞ் ஜோதி என்றதில் அடங்கி வெளிப்பட்டுள்ளதாம்.

## 36. சாக்கிராதீத வெளிநிறை சிற்சபை

71. சாக்கிராதீதத் தனிவெளி யாய்நிறை
72. வாக்கிய சிற்சபை அருட்பெருஞ் ஜோதி

*(உ-வி)* முன்பு சாக்கிரம் என்னும் விழிப்புநிலை குறித்தும், துரியம், துரியாதீதம் குறித்தும் ஒருவாறு விளக்கப்பட்டன. இங்கு முதல் நிலையையும் ஈற்றுநிலையையும் இணைத்துக் கொண்டு விளங்குகின்ற ஓர் அனுபவ நிலையை யுணர்த்துகின்றார் அருள் அடிகளார். சாக்கிரநிலையை எல்லோரும் அறிந்துள் ளனர். ஆனால் துரியாதீத நிலையை எல்லோரும் அறிவது எளிதல்ல. யோகஞான சாதகர்கள் ஒருவாறு அத் துரியா தீதத்தை அறிவர். மற்ற உலகியல் உபாயஞானிகள் புத்தகப் படிப்பாலும், மனோ ஆராய்ச்சியாலும், உண்மையை அறிந்து கொள்ளாமலே, இத் துரியம், துரியாதீதம் குறித்து எவ்வளவோ பேசுவார்கள். ஆகையால், இவ்விருவகை அறிவுக்கும் அனுபவப் படாதது இத் துரியாதீதத் தனிவெளிநிலை என்று உணரப் படுவதாம்.

மேற்படி சாக்கிராதீத அனுபவம் சித்திக்கப்பெறுவது எப்படி என்றால், நம் வள்ளல்கண்ட சுத்த சன்மார்க்கம் ஒன்றினால் தான் இவ்வனுபவம் ஏற்று வாழமுடியும் என்று அறிகின்றோம். இச் சுத்தநெறியோ, சத்விசாரத்தால் உண்மையைக் கண்டு கொண்டு, பரோபகார வாழ்வால் அனுபவத்துடன் விளங்கவும் கூடியதாய் இருக்கின்றதாம். இச் சன்மார்க்க சாதகன் தயா வொழுக்கத்தோடு இருந்துகொண்டு, கடவுளான்ம உண்மைகாண சத்விசாரம் செய்கின்றான். அப்போது திருவருளால், எங்கும் பூரணமாய் நிரம்பியுள்ள அருட்பெருஞ்ஜோதிபதியே, தன்னில் முதல் அணுவாய் வெளிப்பட்டு, தனது அகம்புறம் யாவுமாய்த் திகழ்கின்றதாய் அறிகின்றான். ஆனால், அந்த அருட்பெரும் பதியே இவனாய், இவனது உயிரும் உடம்புமாய் இருக்கக்கண்டு, அம் முதலணு நிலையே கடவுளாகவும் தானாகவும் இரண்டற்ற ஒன்றாய் இருந்து விரிந்து வாழ்கின்றதாகவும் அறிகின்றான். இந் நிலையே சிரநடு சிற்றம்பல நிறைவெளியாக இருக்கின்றதாம். சாக்கிரத்தில்தான் இந்தச் சிற்றம்பலத்தைக் கண்டுகொண்டுள் ளான் இச் சன்மார்க்கி. இவன் புறத்திருந்துகொண்டுதான், விசாரத்தால் இச்சிற்சபையைக் கண்டான். கண்டு, அதுவே தன்னுண்மைநிலை என்று தெளிவுபெற்று நிற்பவனாகிவிட்டுள் ளான். புறநெறியாளரோ புறத்திருந்து, அகத்திலுள்ள கடவு ளான்மாவைக் கண்டும், ''தாம் அதுவெனப் பாவித்து நின்று, பாவனையின் முடிவில் உடலைவிட்டே உள்ளொன்றி மறைந்து போகின்றார்களாம்.

நம் சன்மார்க்கி சிற்சபையிலிருந்து சாக்கிரத்தும், சொப்ப னத்தும், சுழுத்தியினும் வாழ்ந்து, விசாரசாதனை முதிர முதிர துரியம், துரியாதீதம்வரை சென்றுவிடுகின்றான். இத் துரியா தீதத்தில் இவன் கடவுளோடு ஒன்றி இருந்தும்கூட, தான் கெட்டு ஒழிந்துபோகாது, நிறையருளால், தான் அதுவாகி விளங்குகின்றான். இந்தத் துரியாதீத அனுபவம் இவனுக்கு இப்பொழுது விழிப்புநிலையிலும் நழுவாது விளங்குதல் உண்மை யாம். இந்த சாக்கிரத்தில் துரியாதீத அனுபவநிலையையே சாக்கிராதீதம் ஆக மொழியப்படுகின்றது. இச்சாக்கிராதீத அனுபவத்தில் இவனது உள்ளுணர்வும் பிரபஞ்சவெளியெலாம் கடந்து ஒளிர்கின்றதாம். ஆகவே, நம் அருட்பெருஞ்ஜோதிச் சிற்சபை இந்தத் துரியாதீதத் தனிவெளியில் நிறைவாக்கிப் பெற்று என்றுந் திகழ்கின்றதாம். இதனால், சுத்த சன்மார்க்கி

சிற்றம்பலத்தே நிறை இன்பவாழ்வோடு என்றென்றும் விளங் குதல் சத்தியம்.

''எண்தகு சிற்றம்பலத்தே எந்தை அருள் அடைமின் இற வாத வரம்பெறலாம் இன்பமுறலாமே,'' என்று வாய்ப்பறை யார்க்கின்றார் வள்ளல் அருட்பிரகாசப் பெருமான்.

## 37. சுட்டுதற்கரிய சுகாதீத வெளி

73. சுட்டுதற் கரிதாஞ் சுகாதீத வெளியெனும்

74. அட்டமேற் சிற்சபை அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** முன், துரியாதீதநிலையே கடவுட்பெருநிலையாக விளம்பப்பட்டது. அந்நிலையில் உண்டாகின்ற சுகானுபவம் இப்படிப்பட்டது என்று சொல்லித் தெரிந்துகொள்ள முடியாதாம். இறையுறை பெருவெளிநிலை சுகாதீதவெளி எனப்பட்டுள்ளது. சுகத்திற்கு அதீதமானது சுகாதீதம். இது சுகத்திற்கு அப்பாற் பட்டதாம். சுகம் என்றால் இன்பமயமாகிய அனுபவநிலை. கடவுள் அனுபவமோ ஒருவனுக்கு ஏகதேசம் விளங்கி மின்னல் போலத் தோன்றி மறைகின்றதால் அதன் நிறைவிளக்கத்தைப் பிறர் அறியவொண்ணாது என்பர். ஆகவேதான் கடவுள் நிலையைச் சுகாதீதம் என்றனர். அது சுட்டுதற்கு அரியது என்பதும் உண்மையே. இனிமேல் சன்மார்க்கியின் அனுபவத்தைக் காண்போம்.

சுட்டுதற்கரிதாம் சுகாதீத வெளியில் இயல்பாகவே, உண் மையை அறியாமலே உறைகின்றவன் மனிதன். இவ்வுண் மையை அறிகின்றவன் சன்மார்க்க பரிபாகம் அடைந்தவன் ஆவான். இவன் அருட்பூரண அனுபவம் கொண்டு இறை வண்ண மாய் இலங்கவல்லவன், அல்லது இறைவனே இப்பூரணனின் அருள் ஒளிவடிவினின்று திகழ்கின்றவனாகின்றான் என்னலாம். இதனால் இறைவன் ஒருவனே எங்கும் பூரணமாய் இருந்து கொண்டும், சுத்த சன்மார்க்கியின் அனுபவத்தில் வெளிப்பட்டு அவனேயாகவும் விளங்குகின்றான் என்பதும் உண்மையாம். ஆகவே இம் மார்க்கநிறைமனிதன் தானே கடவுள்மயமாய் அக அனகநிறைவு கொண்டிருப்பதோடு, மற்ற ஒவ்வொருவரின் அக அனக நிறைவு கொண்டும் விள்ங்குகின்றானாம். இது அவனது

பேரின்ப அனுபவ நிலையாம். இதனால் இவனுடைய சுகானு பவம் சுகாதீதம் என்று சொல்லப்பட்டது. சுகாதீதம் என்றதை அதீதசுகம் என்று அனுவயப்படுத்திக் கொள்ளவேண்டும். அதீதசுகம் என்றால், மேலான, அப்பாலான சுகம் என்று பொருள் படும். இதனையும் சுட்டுதற்கரியதாய்க் கொள்ளுதல் பொருத் தமே.

மேற்படி அதீதசுகம்தான் இப்பொழுது நம் அருட்பெருஞ் ஜோதி சிற்சபையில் வெளியாகியுள்ளதாம். இச் சிற்சபையை எட்டிடவே முடியாது. புறத்திருந்து இச்சபையை அடைய உயர்நிலைக்கு ஏறிச் செல்லச்செல்ல மேலும்மேலும் எட்டாது உயரத்திலேயே தோன்றிக்கொண்டிருக்குமாம்; புற வான்வெளி யின் முடிவேகூட எட்டப்படுவதாயில்லையே! இப்படித்தான் நமது அருட்சிற்சபையும் தீண்டரிய வெளியில் திகழ்கின்றது உண்மை யாம். இப்படி உயர்வற உயர்ந்த மேனிலையிலுள்ளது இச் சிற் சபை என்ற குறிப்பை யுணர்த்தவே ''அட்டமேற் சிற்சபை,'' என்று அணிந்து கூறியுள்ளார் நமது அருள் அண்ணலார். அட்டம் என்றாலே, மேல் என்று பொருள்படும். மேல் என்பதற்குமுன் அதே பொருள் கொண்ட பிறிதொரு சொல்லையும் கூட்டி உரைக் கப்பட்டதால், மேனிலைக்கு மேனிலையாய், மிக மேலானநிலையாய் உணர்த்தப்படுகின்றோம். இவ்வகைச் சொல்லை மீமிசைச் சொல் என்பது இலக்கண வழக்கு.

இப்படி எவ்வகையிலும் எட்டரிய மேலான நிலையிலிருக்கும் அருட்பெருஞ்ஜோதி சிற்சபையை, நம் வள்ளல் அருட்பூரணத் தால் அடைந்து, பெருஞ்சுகத்தையும் அனுபவிக்கின்றார் என்றால் அது உண்மையே. இவருடைய அனுபவவழி, புறத்திருந்து அடையப்பட்டதல்ல. இயற்கையிலேயே அம் மேனிலையிலுள்ள சிற்றம்பலத்திலேயே, தான் பதியோடிருப்பதைக் கண்டு நிற்கின் றதுதான் உண்மை. எட்டாத மேனிலை அம்பலத்தே இருந்து கொண்டுதான் ஆனந்தநடனமாகிய ஐந்தொழிற் செயலால் உல கெலாம் விளங்கச்செய்து கொண்டுள்ளார் நம்பதி. நிறை அருளால் சன்மார்க்கியும் இறைமயமாகி வாழ்கின்றபோது நித்தியானந்தமாகவே விளங்குகின்றான். ஆண்டவரின் ஐந் தொழிற் செயல் எங்கும் நடந்துகொண்டே இருப்பதையும் கண்டு நிரதிசயானந்தமாய் வாழ்கின்றான் இம்மார்க்கி. எனவே இங்கு குறித்த மேலான நிறை இன்ப மேல்சபை வாழ்வுக்கு நிகர் உலகில் வேறு இல்லையாம்.

## 38. அவம் தவிர் சிற்சபை

75. நவந்தவிர் நிலைகளும் நண்ணுமோர் நிலையாய்
76. அவந்தவிர் சிற்சபை அருட்பெருஞ் ஜோதி

*(உ-வி)* விளங்குகின்ற பேருலகத்தில் யாவும் எப்படித் தோற்றித் திகழ்கின்றன என்பதைச் சுத்த சத் விசாரத்தால் நோக்கும்போது, ஒன்றான அருட்பெருஞ்ஜோதியின் உண்மை அறியப்படுகின்றதாம். அந்த அருட்ஜோதியே என்றும் எங் கணும் போக்குவரவற்ற பரிபூரணப் பரம்பொருளாய் இருந்து கொண்டுள்ள இயற்கையுண்மை என்னும் சத்துநிலை விளங்கு கின்றதாம். இச் சத்தொளியினின்றே, அண்டத்தே அக்கினி, சூரியன், சந்திரன், நட்சத்திரம் ஆகிய நான்கும், பிண்டத்தே- ஆன்மா, ஜீவன், கரணம், இந்திரியம் என்னும் நான்கும், இம்மனி தனின் பிண்டாண்ட நடுவான சிற்றம்பலத்தே அருள் ஒளி என்னும் ஒன்றும் ஆகக்கூடி நவஜோதி நிலைகளாய்க் காரியப்பட் டுள்ளதாம்.

சத்தாம் அருட்பெருஞ்ஜோதி நிறைநிலை நின்று, சித் விளக் கத்தின் பொருட்டு மேற்படி நவஜோதி நிலைகளும் தோற்றியுள் ளன. சித் விளக்கச் செயலால்தான், அருள் உண்மை வெளிப் படவும், பக்குவமனிதனில் அறிந்துகொள்ளப்படவும், முடிவில் நிறை அருளால் அனுபவிக்கப்படவும் உள்ளனவாம். மனிதன் புற ஆராய்ச்சியில், உடல்நிலையிலிருந்து தனக்கு உள்ளீடாய்க் கடவுள் ஆன்ம ஜோதியைக் காண்பது விசாரநிலையே ஆகும். இவ் விசாரமுடிவில் கண்ட கடவுட்ஜோதிநிலையையே முதலாய்க் கொண்டு, அது தானாய் நின்று அதன் அருள் அல்லது தயவே தன் உணர்வாய், உயிராய், உடலாய்க்கொண்டு அருளின்ப வாழ்வு ஏற்று விளங்குவதே சன்மார்க்கக் குறிக்கோள் வாழ்வு ஆகும்.

அருட்பெருஞ்ஜோதியொளிர் சிற்சபைதான் மேற்படி ஒன் றான ஜோதிநிலையைக் காட்டிக் கொடுக்க வந்துள்ளது. அங்கி ருந்து, ஒருமையுற்று, நிவாததீபம்போல் நின்று சூழ நோக்க, நவ நிலை ஜோதியும் ஏகபரன் ஜோதிமயமாய்த் தோற்றுகின்றதாம். அருளாலே இவ்வுண்மையை அறிந்து இன்பநிறை வாழ்வு ஏற்பட வாழவேண்டியது நம் கடமையாகும். இச் சிற்சபை வாழ்வுதான் அவம் தவிர்ப்பதாம். அவம் என்றால், தீமை, குற்றம், பயனின்மை, வீண் முதலியனவாம். இந்த அவமாகிய அவத்தையால் மேலும்

மேலும் இன்பதுன்பநிறை பவமாகிய பிறவி சூழ்ந்துகொண்டே யிருக்கும். இவ் அவநிலை தவிர்க்கவே மேற்படி சிற்சபை வாழ்வு மேற்கொள்ளப்பட வேண்டியுள்ளதாம். இச் சிற்சபையே அருட் பெருஞ்ஜோதியாக இருக்கின்றது. இதனால் நமக்கு நித்திய இன்பவாழ்வு சித்திக்கின்றது சத்தியம்.

மேற்படி அவந்தவிர் சிற்சபை என்பதற்கு இன்னுமொரு அருள்விளக்கம் கொள்ளலாம். சிற்சபையே நம் கடவுளான்ம சிற்றணுவாயிருக்கின்றது. இது அகண்ட பர வெளியின் ஒரு சிறு கூறாக உள்ளது. இதில் அந்த அகர வண்ண முழு உண் மையும் கண்டு, சச்சிதானந்த அனுபவமும் ஏற்பட உள்ளதாம். அகரமுதல்வனாகிய இறைவன்தானே ஓர் அணுநிலை நின்று தன்னைச் சூழ அருட்பேரொளி கொண்டு திகழ்கின்றார் என் றென்றும். இதனால் இச் சிற்சபையாம் ஒளிநிலை, அ-வந்து-அவிர் (அகரம் வந்து ஒளிர் அல்லது விளங்குகின்ற) சிற்சபை என்றும் கொள்வப்படும். இந்த அகர அணுவைச் சூழும் ஒளிநிலையே, சடபூத உருவாயும், உயிர் ஆற்றலாயும், புலன் அறிவு உணர் வாயும், மெய்ஞ்ஞான விளக்கமாயும், முடிவில் அருள் உண்மை அனுபவமாயும் விளைவுற்று இன்று அருட்பெருஞ்ஜோதி மயமாய் விளங்குகின்றதாம். இதுதான் அ வந்து அவர் சிற்சபையில் விளங்கும் அருட்பெருஞ்ஜோதி எனக் கண்டு கொள்வோமாக.

## 39. உபய பக்கக் காட்சி

**77. உபயபக் கங்களும் ஒன்றெனக் காட்டிய**
**78. அபயசிற் சபையில் அருட்பெருஞ் ஜோதி**

*(உ-வி)* பொதுவாகக் கண்ணாற் காண்பது காட்சி எனப்படும். மிக நுண் பொருளையும், அதி தொலைப்பொருளையும் காண, நுண் ணோக்கு ஆடி (Microscope) தொலைநோக்கு ஆடி (Telescope) உதவுகின்றன. உடலின் தசையுட் பொருளையும், உள் எலும்பின் வடிவங்களையும் காண மர்ம ஒளிக்கதிர் (X-Ray) பயன்படுகின் றது. இதுபோன்ற புறக் கருவிகளே அல்லாது, மனோ கற்பனை யாலும், ஆழ்ந்த ஓர்மை எண்ணத்தாலும் பலவாகிய காட்சிகள் காணப்படுகின்றனவாம், ஆனால், இந்தக் காட்சிகள் எல்லாம் முழுமையானவை அல்லவாம். இக் காட்சிகள் குறைவுடையன வாயும், சிற்றெல்லையினதாயும், நிலையற்ற மாயா இயல்பினதாயும்,

இயற்கையுண்மையை யுணர்த்தாதனவாயும் இருக்கின்றன. இதனால் இவைகளால் மனிதன் நிறை இன்பப்பயன் பெறக் கூடாதுபோம்.

மனிதனுக்கு மெய்யின்பானுபவம் வழங்குவது, ஜீவ, கரண, இந்திரியக் காட்சிகளுக்கு மேற்பட்ட ஆன்ம ஞான அருள் விளக் கத்தால் மட்டும் என்று அறியப்படும். அருள் ஞானமாகிய கண்ணைக்கொண்டு நோக்கும்போதுதான் ஒன்றன் அகம், புறம், முன், பின், ஆதி, அந்தம் முதலான இருநிலைத் தோற்றங்களும் உள்ளவாறு ஒரு படித்தாய் விளங்கும். அருளால் மறைப்பு நீங்கி விடுவதால் இரு பக்கத்து உண்மையும் மறைப்பற்றுக் காணலா கின்றது. மேலானநிலையுற்ற ஞானிக்கு முக்கால உண்மையும் விளங்குவது இதனால்தான்.

நமது அருட்பெருஞ்ஜோதி ஞான சபையில், திருவருளால் அடையப்பெற்று விளங்குகின்றவர்கள் எங்கும் என்றும் அருட்பே ரொளியையே கண்டுகொண்டிருக்கின்றனர். இந்த உபயம் ஆகிய இரு பக்கக் காட்சியால் உளநிறைவெய்தி நிற்கின்றவர்களுக்குப் பயம் பூஜ்யம்தானே! இந்நிலையுற்றிருந்து கொண்டுதான் நம் வள்ளற்பெருந்தகை இந்த ''உபய பக்கங்களும் ஒன்றெனக் காட்டிய அபய சிற்சபையில் அருட்பெருஞ்ஜோதி'' என்ற அகவல் அடிகளைப்பாடி மகிழ்கின்றார். இக் காட்சியனுபவத்தி னால் உண்டான மகிழ்ச்சியில்மட்டும் பரவசப்பட்டு நின்று விடாது, முடிவில் நிறை இன்பானுபவத்தோடு நித்தமும் வாழும்பேறு பெற்றுக்கொண்டதை 'சபை எனது உளமெனத்தான் அமர்ந் தெனக்கே அபயமளித்ததோர் அருட்பெருஞ் ஜோதி'' என்று மேலும் போற்றியுள்ளார்.

மேற்படி அருட்பெருஞ்ஜோதி ஒன்றே ஒருவனுக்கு எவ்வகை யிலும் மரணமில்லாப் பெருவாழ்வில் பேரன்பில் விளங்கவைப்ப தாய் இருக்கின்றதால் இவ்வாழ்வு நிலையே முழுமையாகப் பயமற்றதாயுள்ளதாம். இவ்வபயநிலை யுறாதவர்கள், அச்சம் இல்லை, அச்சம் இல்லை என்று சொல்லிக்கொண்டே வாழ்க்கைப் போரில் தோல்வியுற்று மடிந்து, அறிவனுபவம் இழந்து சூனிய மாய்ப் போய்விடுகின்றார்கள்! இதற்கு முற்றிலும் மாறானது நம் அருட்பெருஞ்ஜோதி அருள்கின்ற அபயநிலை.

## 40. சித்திநிலைக்கு ஆகரம்

79. சேகர மாம்பல சித்தி நிலைக்கெலாம்
80. ஆகர மாஞ்சபை அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** ஒன்றான பேரருட்பெருஞ் சக்தியிலிருந்துதான் இந்த மகாபிரபஞ்சத்து எவ்வுயிரும், எப்பொருளும், எச்செயலும், விளைவும் உண்டாகின்றனவாம். இப்பெருஞ் சக்தியின் விரிநிலை யாவும், பொருட்சக்தி, கிரியாசக்தி, ஞானசக்தி, யோகசக்தி, அருட்சக்தி என்பவற்றில் அடங்கும். விரிவுற்ற நிலையில் வெளிப்பட்டு விளங்கவல்ல இவையாவும் அதிசூக்குமமாய் நுணுகிக்குவிந்து அருகிக்கிடக்கும் நிலை தான் நமது அருட்பெருஞ்ஜோதிச் சிற்றம் பலமாம். ஆகையால், இந்தச் சிற்சபையைத்தான் இங்கு ஆகரம் என்கின்றார் நம் அருட்பிரகாச வள்ளற்பிரான். ஆகரம் என்றால், சுரங்கம், உறைவிடம், இரகசிய வைப்பிடம் (Secret Treasure House) எனப் பொருள்படும். முத்து, மணி முதலியன உடைய ஆழ்கடலை இரத்தினாகரம் என்பர். இதுபோல் நம் அருட்சிற்றம்பலம் இருக்கிறதே இது, அஷ்ட ஐஸ்வரியம் என்னும் அஷ்டமா சித்திகளுக்கும், அளவுகடந்த அருட்பெருஞ் ஜோதி சித்திக்கும் உறைவிடமாய் இருக்கின்றது உண்மையாம்.

சேகரம் என்ற சொல், சேகரித்து வைக்கப்பட்ட பொருள், ஆற்றல், சத்து இயல் முதலியனவாகும். பெரும்பொருளை எல்லாம் சம்பாதித்துத் திரட்டி ஓர் இரகசிய அறையில் மறைவாக வைத்துக் காத்து வருகின்றனர் உலகர். கடவுளோ இந்தப் பேருலகப் பேராற்றல்களை எல்லாம் தன் அருள் வல்லபத்தால் சிற்றணுவாகிய அம்பலத்திலே முழுமையாகவே வைத்து, நமக்கே வழங்க உள்ளார். நம்பதி தமக்கென எதுவும் வேண்டாத் தனிப் பெருந் தியாகேசரல்லவா? ஆகையால், நாமும் தயவுடையவர்களாகிச் சுத்த சன்மார்க்கத்தால் அந்த அருட்ஜோதி அம்பலத்தை உறைவிடமாகக் கொண்டுவிட்டால், அங்குள்ள சேகரப் பொருளெல்லாம் நம் கரங்கொடுத்து நலமே வாழச் செய்வார்.

இறையருளின் ஆற்றலை நிறையருள்நிலை நின்று காணாத யோக ஞான சித்தர்கள், அம்பலவாழ்வு கொண்டிலங்காது, இவ்வுலக வாழ்வில் பலரும் வியக்கச் சில காலம் சித்தாடி மகிழ்ந்து, மகா சமாதியுற்று கடவுட்ஜோதியில் மறைந்துவிட்டனர். ஆன்மாவாகிய ஆகரத்தில் சேகரமாய் வைக்கப்பட்டுள்ள நிறையருட்

செல்வத்தில் ஓரளவைப்பெற்றுப் புறத்தாடிய சித்தர் குழாம், அருள் இறையோடு பிரிவற இருந்து ஆனந்தவாழ்வில் நிலவாது போயினர். ஏனென்றால் அப்படி வாழவைக்கும் சுத்த சன்மார்க்கம் ஒன்று அன்று வெளிப்படவில்லை என்பதே காரணம். இன்றோ சுத்த நெறியால் நம்மை நாம் அருளிறையோடிருக்கக் கண்டு, அகங்காரபோதம் அற்று அருள்மயமாய் விளங்க உள்ளோம். இப்போது நமக்கு உலகியலில் சித்து செய்திருப்பது திருவருட் சம்மதமல்ல. எல்லோரும் சுத்த சன்மார்க்கிகளாய் ஆகி நிறையின்பில் வாழ வகைசெய்வதே நம் கடமையும் ஆண்டவர் ஆணையுமாகும். எல்லாம்வல்ல அருட்பெருஞ்ஜோதிபதியோடு ஒன்றி நின்று, அருள் அற்புதத்தால் ஆன்மநேய ஒருமைப் பாட்டு உரிமை வாழ்வை வெளிப்படுத்துவோம். நம்பதியும் அவர்தம் அருட்பேராற்றலும் நித்தியமே; ஆதலின் அவரோடுறையும் நாமும் நித்த மகிழ்ந்து வாழலாம்.

## 41. அனாதி சிற்சபை

81. மனாதிகட் கரிய மதாதீத வெளியாம்
82. அனாதிசிற் சபையில் அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) அருட்பெருஞ்ஜோதி மிளிர் அற்புதச் சிற்சபை ஆனது அனாதியாகவே இருக்கின்றதாம். எப்படி எனில், நமது இறைவர் நித்தியமானவர் என்றால், தோற்றமும் மறைவும், ஆதியும் அந்தமும் இல்லாதவர் என்பது உண்மையாம். ஆதி என்ற தொடக்க நிலை இல்லை என்றால் அந்தம் என்ற முடிவு நிலை தான் ஏது? இதனால், ஆதியே இல்லை என்பது குறித்தே அனாதி என்று மொழியப்படுகின்றது. நம்பதி அனாதியானவர் என்பதோடு அவர் நிலவுகின்ற சிற்சபையும் கூட அனாதியே என்பதும் உண்மையாம்.

மேற்படி அனாதி சிற்சபையையும், அருட்பெருஞ்ஜோதியையும் உள்ளவாறு கண்டு தெரிந்துகொள்ள வேண்டி திருமுன் நின்று வேண்டுவோம். அங்ஙனம் இருந்து தெளியப்பெறும் விளக்கம் இதுதான். அளவு கடந்த அகண்ட வெளி நிறைந்து அனாதியாக விளங்கிக்கொண்டிருக்கின்றவர் நம் அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர் என்பது முதலில் உணர்த்தப்பெறுகின்றோம். அடுத்து, அந்த அகண்டவெளி நிறை இறையுண்மை எல்லாம்

முழுமையாக அல்லது பூரணமாகவே, எங்கணும் அவ்வெளி நிறை ஒவ்வொரு சிற்றணுவிலும் இருக்கின்றதாம். இவ்விறை அனுபவம் வெளிப்பட்டிலங்க உள்ள சின்னஞ்சிறு ஒளி வெளி நிலையே கடவுளர் சிற்றம்பலமாக சிற்சபையாக உரைக்கப்படுகின்றதாம். எனவே அனாதியாயுள்ள அகண்ட பரம்பொருளே கண்டமாக விளங்கும் அனாதி சிற்சபையில் கண்டு கொள்ளப்படுவதாம்.

மேற்குறித்த அனாதி சிற்சபையையும் அருட்பெருஞ்ஜோதியையும் எப்படிக் கண்டு பயனுறக் கொண்டு இனிது வாழ்வது? நிறையருள் ஞானத்திற்கே யன்றி பிற எதனாலும், எக்காலத்தும் கண்டு கொள்ளப்படமாட்டார் நம் சத்திய ஞான சபேசர். கற்பனை மனக் கண்ணாற் காண்பவை நிறை யனுபவம் வழங்காவாம். முன்னோர் கண்ட சமய மத உண்மைகள் எல்லாம் பகுத்தறிவுக்கும், அதற்குமேற்பட்ட ஒருமை மனத் தியானாதி உணர்வுக்கும் புலனானவைகளேயாம். இதனைச் சுட்டவே மனாதிகட்கரிய மதாதீத வெளி என்று நம் இறைநிலையுண்மை குறிக்கப்பட்டுள்ளதாம். மனாதி என்றதால், மனம் முதலியனவாம். அதாவது, மனம், வாக்கு, காயம் என்னும் புறக்கரணம் மூன்றும், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் அகக்கரணம் நான்குமாம். இக் கரணானுபவத்திற்கு அப்பாலானது அருட்பெரும்பதியுண்மை.

தயவோடு கூடிய சுத்த சத் விசாரத்தில் இருந்துகொண்டு திருவருள் உண்மையை அறிந்து தெளிய முற்படும்போதுதான் மனத்தின் இறையியல் உண்மை விளங்குகின்றது. உண்மையில் மனம் என்பது, கடவுள் அருட்சக்தியின் கூறே, மனிதனின் மேலான அறிவுச்சக்தியாக விளங்குகின்றதாம். புலபோக இச்சையால் புறத்தே உழன்று கொண்டிருக்கும் மன உணர்வுக்கும், புறப்பற்றற்று உட்கூடி நிற்கும் மன உணர்வுக்கும் இயல் உண்மையாகிய அருள் விளக்கம் வெளிப்படுகின்றதில்லை. இதனால் அருள்உண்மையை உணராத மனிதன் மனத்தை அகத்தே அசைவற நிறுத்தி, ஏக தேச ஒளி கண்டு களித்துக் கிடந்து, மன உணர்வும் அனுபவமும் கெட்டொழியச் செய்துகொண்டு அழிந்தே போகின்றான். அது தவறு. மனம்மடிந்து இறந்து ஒழிந்து போகக்கூடாது. மனம் என்ற தத்துவ விளக்க்க் கருவி அழிந்துபோனால் மனிதன் மனிதனாகவே இருக்கமுடியாது. குறை

யறிவுடைய உயிரினத்தொன்றாகத்தான் ஆகிவிட நேரும். ஆகையால், மனம் நீங்கக்கூடாது. ஆனால் மனம் சுத்தமுற்று, மெய்யருள் வண்ணமாக மாறி விளங்குதல் வேண்டும். மறையாகம அறிவுக்கு எட்டாத கடவுளர் திருவடி என்னும் திருவருளின் திருவடிவே நம்மனம் என்பதற்குச் சான்றாக, அனுமனின் அவதார உண்மை அணிந்துரைக்கப்பட்டிருக்கின்றது கம்பன் வாயிலாக.

"நாட்படா மறைகளாலும் நவைபடா ஞானத்தாலும்
கோட்படா பதமே ஐய குரக்குரு கொண்டதென்றான்."

எனப்பட்டுள்ளது. மனத்தைக் குரங்காகப் புனைந்து கூறுவது நம்மனோர் மரபு. சுத்த மனத்தை அனுமக் குரங்காகக் கொள்ளும் போது அது கடவுளர் திருவடியாம் அருளே என்பது தெளிவாம்.

ஆகவே, மனம் அருள் ஒளிமயமாக மாறி சிற்சபையின் கண் அருட்பெருஞ்ஜோதிக் காட்சியில் அத்துவிதமாய விளங்கிக் கொண்டு இறையனுபவம் கெடாது இன்போடு என்றும் நிலவ, மனிதன் அருட்பிரகாசவடிவோடு வாழ்பவனாவான். இப்படித்தான் அனாதிசிற்சபையில் அருட்பெருஞ்ஜோதியைப் போற்றிப் போற்றி அருட்பிரகாச வாழ்வுபெற்றுத் திகழ்கின்றார் நம் வள்ளலார்.

## 42. ஆதி சிற்சபை

**83. ஓதிநின் றுணர்ந்துணர்ந் துணர்தற் கரிதாம்**
**84. ஆதிசிற் சபையில் அருட்பெருஞ் ஜோதி**

**(உ-வி)** அருட்பெருஞ்ஜோதிக் கடவுளும் அவரது சிற்சபையும் அனாதி என்று முன் அடிகளில் குறிக்கப்பெற்றன. அதுவே உண்மை என்றும் கண்டோம். ஆனால் அதே சிற்சபை ஆதி என்று குறிக்கப்படுகின்றது இங்கு. இது மாறுபாடுபோல் தோன்றலாம். உண்மையில் மாறுபாடல்ல என்பதும், வேறு பாட்டு அனுபவத் தோற்றமே என்பதும் சுத்தசத் விசாரத்தில் கண்டு தெளியப்படுகின்றதாம். ஆகவே அந்த உண்மை விளக்கத்தை ஓர்ந்துகொள்ளுவோம்.

ஆதியும் அந்தமும் இல்லா அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர். அனாதியாகவே என்றென்றும் எங்கும் நிரம்பியுள்ளவர் என்பது உண்மைதான். என்றாலும், அப்படியுள்ளது அவ்வனாதி பரம்

பொருள் என்ற உண்மை விளக்கம். பக்குவ மனிதனின் பகுத்தறிவுக்கு அப்பாலான மெய்யறிவில்தான் வெளியாகி விளங்குகின்றதாம். அதாவது, அவ்வனாதி வஸ்துவின் உண்மை கொண்ட ஒரு சிற்றணுவே இம்மனிதப் பிறப்பில் ஆதி முதலிடம் பெற்றுச் சிற்றம்பலம் எனத் திகழ்கின்றதாம். இச் சிற்சபையைத் திருவருள் வலத்தால் சார்ந்து நிற்கும் மனிதனே, அருட்பெருஞ் ஜோதியைக் காண வல்லவனாகின்றான்.

சுத்த சன்மார்க்க சாதகன் சத்விசாரத்தால், தான் இப்போது ஏற்றுள்ள தேகநிலை கடந்து, உள் நின்று, ஒளிர்கடவுளான்ம அணுவடிவினனாகத் திருவருளால் உணர்த்தப்பெற்றிருக்கின்றான். இச்சிற்றணுவுருவே இம்மனிதனின் இயல் வடிவமாகப் பண்டே தொட்டு இருந்து வருவதாயும், பல்வேறு உயிரினவடிவச் சூழலிலும், தன்னைத்தான் அறிந்துகொள்ளமுடியாது கிடந்து வந்து, இப்பொழுது இந்த மனிததேகச் சூழலில்தான் இச்சமயம் இத் தனது இயல் உண்மையைக் கண்டுகொண்டுள்ளான். ஆதலின், இவனது ஆதியான முதல்வடிவம் அந்தக் கடவுள் சிற்றணுவே என்பது தெளிவு. மேலும் அக்கடவுளணுவேதான் மனித கருப்பிண்ட சிருஷ்டியில் முதன் முதலில் தோற்றி ஒளிரச் சூழுருவேற்றுச் சுடர்விட்டிலங்கிக் கொண்டிருக்கின்ற சிரநடுச் சிற்றம்பலமாம். இதனால் இது ஆதி சிற்ச்பை எனப்படுகின்றது.

திருவருளால் தன்னை ஆதி சிற்சபையில் கண்டுகொண்ட மனிதன், அச்சிற்சபேசனை அடைந்து நித்திய வாழ்வு பெறுவதற்கு எவ்வளவு காலம் முயன்று ஓதியும், ஏகதேசம் உணர்ந்தும் பயனுறாது கிடந்துவந்தான். இதுவே இங்கு குறிக்கப்பட்ட அறிவரிய அருட்பெருஞ்ஜோதி வளர் சிற்சபையின் உண்மையாகும். மேல் சிற்சபையுற்று நிற்கும் சன்மார்க்கி அருள்நிறை வாழ்வு பெறும்போது, தன் ஆதிநிலையைக் கடவுளரின் அனாதி நிலையாக ஆக்கப்பெற்று அழிவற்ற அருளின்ப வடிவில் திகழ்கின்றவனாகின்றான். ஆதியான ஒன்றுக்கு அந்தம் உண்டு. ஆகவே, அனாதிக்கு அந்தமுமில்லையாம். இம் முடிவற்றிலங்கும் பேரின்ப வாழ்வைக் குறிக்கோளாய் ஏற்கச்செய்வது இவ் அகவல்.

## 43. அழியா வரம்தரு அமுதசபை

85. வாரமும் அழியா வரமுந் தருந்திரு
86. ஆரமுதாஞ்சபை அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) நமது அருட்பெருஞ்ஜோதி சபையே திருவாரமுத வண்ணமானதாம். உலகம் கண்டுள்ள எந்த ஒரு சபையும் அல்லது ஆலயமும் அமுதாலயமாக இல்லை. யோகஞானியர் தம் அகத்தே அறிவாற்கண்ட ஆன்மாலயமே, அதன் அழிவற்ற தன்மை கருதியும், அந்நிலையுறுவோர் பெறும் அவ் இயற்கை இயல்கருதியும் அதனை அமுதாலயமாக அணிந்து கூறியுள்ளனர். அகண்ட வெளிநிறை இறைஒளி நிலையே பாற்கடல் எனவும், அதில் செயல்பட்ட பிரபஞ்சக் காரியப்பாட்டில் மனிதவடிவம் தோன்றி, 'மிருத்து என்னும் மரணத்தைக் கடந்து அமிருத்து அல்லது அமிர்தம் என்ற அமுதத்தையே கண்ணுற்ற ஆன்றோர் அதனைப் பலவாறு கற்பனைசெய்து வெளியிட்டனர். திருவாரமுது என்பது, அகம் ஒளிர் ஆன்மஜோதி வடிவேயாம். இத்திருவா ரமுதே, பாற்கடலிற் பள்ளிகொண்ட திருமாலாகவும் கற்பித் தனர்.

''நிரவி யழுலுருவாய் நீண்ட வெளிகாணில்
அரவணையா னாகும் உடம்பு.'' — ஔவை குறள்

அறிவாற்கண்ட அகஜோதி, மனிதனுக்கு அற்புதச் சித்திவல்லபம் நல்கி, சிலகாலம் ஆடி மகிழச் செய்தது. பின்னர் அடங்கிக் கிடக்கச் செய்துவிட்டது. அவ்வமுத ஜோதி தேவப்பதவியை வழங்கிச் சிலரை நெடுங்காலம் விளங்கச்செய்தது. எனினும், அருட்பெருஞ்ஜோதியின் இயல் வெளிப்பட்டு மனிதனுக்கு என்றும் அழியாது ஆனந்தவாழ்வில் நிலவச்செய்யவில்லை முன்பு எக்காலமும்.

இத்தருணம் நமது அகப்பெரும்பதியே அருட்பெருஞ்ஜோதி அம்பலமாகித் திருவாரமுதமாய்த் திகழ்கின்றது. இதனை, நாம் அடைய, நிறையருள் வழங்கா முன்னெறி ஏதும் பயன்படாதெனக் கண்ட நம் வள்ளல் நிறையருட் சுத்தசன்மார்க்கத்தை வழங்கி யுள்ளார். இந்நெறி சுத்த அன்பு அடிப்படையில் கிடைக்கப் பெற்றதாம். இம்மார்க்கிக்கு முதலில் வேண்டுவது சுத்தம். சுத்த மாவது, சத்விசாரத்தால் அகவடிவமுற்று இலங்கிநிற்பது. இந் நிலை நின்று மெய்அன்பு பெருகப்பெருக உலகில் வாழ்வதால், உள்ளொளியின் அருட்சக்தி வெளிப்பட்டு, அழியாமையோடு நிறையின்ப வாழ்வும் ஆணை செய்கின்றதாம். இதனையே இங்கு வாரம் (அன்பு) அழியாவரம் ஆகியவை தந்து நித்தியானந்த அமுதவாழ்வில் விளங்கச்செய்வது என்றார்.

குறிப்பு: பழநெறிகளில், தீட்சை, குருஉபதேசம், உபநயனம், ஞானஸ்நானம் முத்திராதானம் முதலியன முதற்கண் பெற்றே அந்தந்த நெறிக்கு உரியவர்களாகி முழுப்பயன் அடையலாம் என்பது, அருள் உண்மை விளங்காத காலத்துக் கற்பிக்கப் பட்டவையாம். இப்பொழுது அருட்ஜோதி வெளிப்பட்டுள்ளதால், எவரும் சுத்தநிலையுற்று, அகம்பொருந்தி, அன்புநிறைவால் அனக வாழ்வு ஏற்பதே வேண்டப்படுவது. இந்தச் சுத்த சன்மார்க்கமே மனிதனை மரணமில்லாப் பெருவாழ்வில்நிறை இன்போடு விளங்கச் செய்வதாம்.

***சுத்த சன்மார்க்க உண்மை கொண்டுதான் திருவருட்பாவின் (முக்கிய்மாக ஆறாந்திருமுறையின்) பொருள்விளக்கம் காண வேண்டும். மற்று பழநெறிப்பற்றொடு பலகால் பயின்றாலும் உண்மை விளங்காது. சுத்த சன்மார்க்கியின் உண்மையும் அறிய முடியாது.***

## 44. இழியா நலம் அருள் சிற்சபை

**87. இழியாப் பெருநலம் எல்லாம் அளித்தருள்**
**88. அழியாச் சிற்சபை அருட்பெருஞ் ஜோதி**

(உ-வி) உலகில், இன்பதுன்பம், உயர்வு தாழ்வு, நன்மை தீமை முதலிய இருநிலைச் சூழல் மனிதனின் அறம்பாவச் செயலால் தொடர்ந்து வந்துகொண்டேயிருத்தல் கடவுளர் விதித்துள்ள நியதிமுறையாக இருக்கின்றது. இவ்விதிச் செயலால் தான் அகமும்புறமும் பண்பாடடைகின்றான் மனிதன். துன்பியல் வாழ்வைத் தவிர்த்து இன்பியல் வாழ்வில் ஓங்கக் கருதியவன், அதற்காகப் புறவொழுக்க நெறிகள் பல வகுத்தும் ஒழுகியும் அடைந்த இன்பம் மிகக் குறைவுடையதாயும், நிலையற்றதாயும் இருக்கக்கண்டான். பின்னர் அகநெறியாகிய யோகஞான மார்க்கத்தைக் கொண்டு முயன்று முடிவில் அடைந்த சித்தி இன்பங்களும், முதலில் வியந்துகொள்ளப்படினும் ஈற்றில் அழிந்து ஒழியக்கண்டு குறைபட்டுக் கொண்டான்.

இன்று திருவருளாலே சுத்தசன்மார்க்கத்தால் நிறை இன்ப வாழ்வு நிலையாகக் கொண்டு என்றும் விளங்கச்செய்யத் தோற்றுவிக்கப்படுகின்றது. இந்நெறி வாழ்வு அருட்பெருஞ்ஜோதி வளர்

அழியாச் சிற்சபையின் கண்ணின்று வெளியாகின்றதாம். மனிதன் உண்மைநெறி ஒழுக்கம்பூண்டு, சுத்த சத்விசாரத்தால் அருட் பெருஞ்ஜோதியை அகஞான சபையிலே கண்டு கலந்து, அருள் இன்பம் பெருக வாழவேண்டியவனாய் இருக்கின்றான்.

மனிதன் உண்மையில் வேண்டுவது துன்பக்கலப்பில்லாத நிறையின்ப வாழ்வேயாம். ஆனால் இந்த உலகில், விதிச் சட்டப் படி அறம்பாவச் செயலால் இன்ப துன்பம் இரண்டும் ஒவ்வொரு ஆன்மாவையும் சூழ்ந்துகொண்டே யிருக்கின்றன. இந்த விதி முறையை எவராலும், எக்காலத்தும் மாற்றமுடியாது. ஏன் அப்படி விதிக்கப்பட்டுள்ளது என்றால், உலகியல் வாழ்வில் இன்ப துன்ப அனுபவத்தால் விருப்பு வெறுப்பு அடைந்து அடைந்து பக்குவமுற்றபோது அவ்விரண்டும் நிலையற்றனவாய்க் காண் கின்றான். ஆதலின் அவற்றைக் கடந்து மேற்சென்று நிலையான சச்சிதானந்த வாழ்வுபெற வேண்டி, சுத்த விசாரத்தால் இப்போது அருட்பெருஞ்ஜோதி அம்பலத்தை அடைந்துள்ளான். இவ் அம்பல வாழ்வே மனிதனுக்கு இழியாப் பெரு நலம் எல்லாம் வழங்குவதாம். அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே இந்த அழி யாச் சிற்சபையில் இருந்துகொண்டுதான் உலகியலை அருட்பேரிய லால் விதிமுறைப்படி ஆண்டுவருகின்றார். மனிதன் அகநிலை அருள் வாழ்வு மேற்கொள்ளாதவரைதான் உலகியல் விதிச் சட்டத்தால் பாதிக்கப்பட்டு அவத்தைப்பட்டுக்கொண்டிருக்கின் றான். இவன் இறைமயமாகி அருள்வாழ்வு ஏற்றதும் விதி இவனைப் பாதிக்கின்றதில்லை. மாறாக, இவனே அந்த விதிமுறை யைக் கொண்டு ஆன்மாக்களைப் பக்குவப்படுத்தும் அருட்செயல் புரிகின்றான். அதனால் மிக விரைவில் இழியாப் பெருநல வாழ்வு உலகில் வெளிப்பட்டு விளங்க முடியும்.

ஜீவ தயவால் கடவுள் தயவு பெற்று அகமிருந்து அனக வாழ்வு வாழவேண்டிய மனிதன், மற்ற எந்த வகையிலும் (ஞானத் தால், பக்தியால், கர்மத்தால், யோகத்தால், தியானத்தால், பிற தந்திர தவமுயற்சிகளால் எல்லாம்) பெருநல வாழ்வுபெற முடியாது என்பது சத்தியமாம். ஆகையால், அருள் ஒழுக்கம் பூண்டு அருட்பெருஞ்ஜோதிபதிச் சார்புற்று அழியாப் பெருநலம் காண்போமாக.

## 45. கற்பாந்த அற்புதம்

89. கற்பம் பலபல கழியினு மழிவுறா

90. அற்புதந் தருஞ்சபை அருட்பெருஞ்ஜோதி

(உ-வி) பேருலகில் பெருஞ்செயல்கள் பலபல இயல்பாகவே நாளும் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. அவற்றை ஆழ்ந்து சிந்தித்துப் பார்க்கப் பார்க்க ஆண்டவரின் பேராற்றலும் பெருமையும் உணர்ந்துணர்ந்து பேராச்சரியம் அடைவோம். ஆனால், இவற்றையெல்லாம் அதிசயமாக, அற்புதமாக மக்கள் எண்ணுகின்றதேயில்லை. இவை யாவும் இயற்கை நிகழ்ச்சிகளே எனக் கருதி, வியப்படையாது இருக்கின்றனர். இவ்வியற்கை நியதித் தோற்றங்களுக்கு மாறாகச் சாதாரண மனித தரத்திற்குச் செய்ய முடியாத ஏதேனும் ஒரு செயலைப் புரிந்துவிட்டால், அதனை அற்புதம் என்றும், அதிசயமென்றும், சித்துச் செயல் என்றும் வியந்து வியந்து போற்றிக்கொள்கின்றார்கள் உலகியலார்.

மேற்படி அற்புத சித்திகள் பலப்பல கைவந்தவர்கள் அருஞ்சித்தர்களாகப் பேசப்படுகின்றனர். முன் ஞான சித்தர்கள் சித்தி வல்லபதிறம் கதைகதையாக வழங்கப்படுகின்றன. அவற்றை எல்லாம் இன்று நம்புவர் சிலர், நம்பார் பலர். இன்றைய அறிவியற் சாதனைகளால் இயற்றப்படுகின்ற விந்தைச்செயல்களை வியந்து கொள்ளுகின்றனர் பெரும்பாலோர். இந்த அற்புதங்கள் பலவற்றாலும் முடிவில் அடையப்பெறும் பெரு நலம் என்ன என்பதைச் சற்று ஊன்றி உன்னிப்பார்த்தல் வேண்டும். தடைபடாது இன்பவாழ்வில் நெடிது விளங்கிக்கொண்டிருப்பதே பெறலரும் பேரற்புதச் சித்தியாக அறியப்படும்.

மனிதன் பெற்றுள்ள உடல், புற்புதம், (நீர்க்குமிழி) போல் விரைவில் அழிந்து போய்விடக்கூடியதாயிருக்கின்றது. இவ்வுடலை அருட்பெருஞ் சக்தியால் சுத்த சுகானந்த வடிவம் ஆக்கிக் கொண்டு, என்றென்றும் அழிவில்லாது வாழ்ந்து கொண்டிருப்பதே பெறலரும் பேரற்புதம் என இன்று திருவருளால் உணர்த்தப்படுகின்றோம். இதனையே நம் வள்ளல் இங்கு கற்பம் பலபல கழியினும் அழிவுறா அற்புதம் தரும் சபை அருட்பெருஞ்ஜோதி என்றுள்ளார்.

மனிதனின் உண்மையும் கடவுளின் உண்மையும் வேறல்ல-ஒன்றேயாம். இது அனாதிகாலமாக இருந்து வருவதேயாம். அப்படி மனிதன் அகவடிவினனாய் என்றும் இருந்துவந்தபோதிலும்கூட, இந்தப் புறவுடலை ஏற்று, அகநிலை நின்று, நிறையருளால் அனகவாழ்வு மேற்கொள்ளாதவரை, நித்தியமாய் வாழ்கின்றவன் என்று கூறமுடியாது. அருள்நிறை இன்பவாழ்வு பெறாத ஆன்மாணுக்கள் எவ்வளவோ காலமாகப் பெருஞ்ஜோதிச் சூழலைத் தத்தம் உடலாகக் கருநிலையில் வளர்க்கப்பெற்றும், அருந்தவ நிலையில் தேய்ந்து தேய்ந்து அழிக்கப்பெற்றும் வருகின்றனவாம். இவ்வான்மாவின் தவநிலைத் தோற்றமே, கற்பங்கள் பலகோடி செல்லத் தீய கனலின் நடு ஊசியின்மேற் காலையூன்றி நிற்கும் நிலையைக் குறிப்பதாகக் கொள்ளப்படும். ஆன்மாவின் மிக நுண்ணிய இயல்பைக் குறிக்கவே, ஓர் ஊசி முனையில் ஓர் ஆயிரம் ஆன்மா தங்கலாம் என்பர். இப்படிப்பட்ட ஆன்மாவில் கற்பகோடிகால தவமுயற்சிக்குப் பின் திருவருள் வெளிப்பட்டு வாழ்வளிக்கின்றதாம். இனி, இந்த வாழ்வு கற்பகோடி காலம் சென்றாலும் கழிவுறாது விளங்கவல்லதாம். இதுதான் இன்று நம் அருட்பெருஞ்ஜோதி சபை நமக்கு அளிக்கின்ற பேரற்புதமாகும்.

## 46. எண்ணிய அனைத்தும் தரும் சபை

*91.* எனைத்துந் துன்பிலா இயலளித் தெண்ணிய
*92.* அனைத்துந் தருஞ்சபை அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** மனிதன் என்றும் அடைய விரும்புவது இன்பம். துன்பத்தை எக்காலத்தும் எவரும் விரும்புவதில்லை. எனினும் மனிதனுக்கு அவன் விரும்பும் இன்பம் எல்லாம் கிடைக்கின்றதுமில்லை, அவன் விரும்பாத துன்பம் வந்து சேராமல் இருக்கின்றதுமில்லை. நிறையருள்பெறாத மனிதன் எவ்விதத்தும் தன் மதியைக் கொண்டு நிறை இன்ப ஆக்கமும், முழுமையான துன்ப நீக்கமும் பெற்றுவிடமுடியாது. இதற்கு முடிவான ஒரே சான்று, மனிதன் இதுகாறும் துன்பியல் மரணத்தை அடியோடு விலக்கிவிட்டு, அழிவற்ற பேரின்ப வாழ்வு பெறாததேயாம். இத்தருணம்தான், மனிதன் நிறை பேரருளால் அப்படித் துன்பத்தின் நிழல்கூடச் சாராத நிலையான நிறை இன்ப வாழ்வு பெறுகின்றான் சுத்த சன்மார்க்கச் சேர்ப்பால்.

எனைத்தும் என்றால், எவ்வளவும், அதாவது, மிகச் சிறிய அளவும், இம்மியளவும்ஆம். ஆதலின் எனைத்தும் துன்பிலா இயல் என்பது, சிறிதளவும் துன்பமேயில்லாத தன்மையாம்; அது நிறையின்ப நிலையே. இவ்வின்ப நிலையை நம் விழைவின்படி நமக்கு அருள்வது நமது அருட்பெருஞ்ஜோதி ஆனந்த சபையே என்று ஈண்டு வலியுறுத்தப்பெறுகின்றது.

உலகில் மெய்யான நிறை இன்ப வாழ்வு பெறுதற்கு, ஜீவ தயாநெறி அடைந்து சத் விசாரத்தால், சத்துப்பொருளாகிய அருட்பெருஞ்ஜோதி சபையைச் சார்ந்து நின்று வாழவேண்டி யிருக்கின்றது. இவ்வம்பல வாழ்வு சேராமல், தயவில்லாத் தவ முயற்சி எதனாலும், பிற எவ்வகை மார்க்கத்தாலும் துன்பங் கல வாத இன்ப வாழ்வு பெறமுடியாதாம்.

கடவுள் இயல் இரு தன்மையாயுள்ளது. ஒன்று அகமாய், அழிவற்ற இன்பநிறைவாய் இருக்கிறது. மற்றது புறத்ததாய், தோற்றக்கேடும், சிற்றின்ப துன்பமும் கொண்டதாய் இருக்கின் றது. மனிதன் அகநிலை பெறாது புறவாழ்வில் உழன்றுகொண் டிருக்கும்வரை, உலகியல் இன்ப துன்பத்தைத் தவிர்த்துக்கொள் ளவும், மெய்யின்பத்தை அறிந்து அடையவும் இயலாது. இவன் உண்மைத் தயவின்மையால், சூழுயிர்க்கு இன்பு செய்யாது இருந்து, தானும் மெய்யின்ப நிலை அடையாது போகின்றான். விருப்பு வெறுப்பற்று பற்றறநின்று, நிஷ்காமியகர்மமாகத் தய வில்லாச் செயல்புரிகின்றவனும் அக இன்ப நிறைவாழ்வு பெற மாட்டான். ஆகவேதான், ஒருவன் தயவுச்செயல் புரிந்து அக மிருந்து எவர்க்கும் இன்பளித்தல் முறையாகும். சூழ்நர்க்கு உயிர் விளக்கத் தயவு செய்வதே இவன் கடமை. மற்றபடி உயிர் விளக் கத்தைப் போக்கும் தண்டனை அல்லது கொலைச்செயலை எவ்விதத் தும் புரியக்கூடாது. அழிக்கும் செயல் கடவுளரின் மறக் கருணை நியதிக்கே விட்டுவிடவேண்டும். அவர் தயவாலே அழிப்பார், ஆக்குவார், பக்குவப்படுத்தி வாழ்விப்பார். பிற எல்லா உயிர்களும் அருள் நியதிக்கு ஒப்ப வாழ்ந்து வர மக்களினமே நியதி முறைக்கு மேற்சென்று, புறநிலை கடந்து அகமிருந்து இன்பியல் விளைவிக்க வேண்டியவர்களாவர். ஆகையால், சுத்த தயவினால் ஒருவன் அனகவாழ்வு ஏற்று, இன்பமே நிறைந்த சுத்த சுகானந்தத்தில் என்றும் விளங்குவான்.

## 47. அருள்புரி ஆணிப் பொன்னம்பலம்

**93. பாணிப் பிலதாய்ப் பரவினோர்க் கருள்புரி**

**94. ஆணிப் பொன் அம்பலத் தருட்பெருஞ்ஜோதி**

(உ-வி) நமது அருட்பெருஞ்ஜோதிக் கடவுட்காட்சி வெளிப் பட்டு, அருள்பாலித்து ஆனந்தம் அளிக்கின்ற இடம் ஆணிப் பொன்னம்பலமாக அணிந்து கூறப்படுகின்றது. இந்த ஆணிப் பொன்னம்பலத்தின் உண்மை விளக்கம், சுத்த சன்மார்க்கத்தில் நன்கு விளங்குவதாம். அகம் ஒளிர் சுத்த சன்மார்க்கச் சத்திய ஞானசபையில் அருள் விசாரத்தால் ஒன்றி நிற்கும்போது, கடவுள் ஒளி, சிற்றொளி விளக்கென விளங்கி, விரிசுடர் எனத் திகழ்ந்து, நிறைஜோதியாய் நிரம்பிப் பிரகாசிக்கின்றதாம். இம்மூவொளி வண்ணமும் பொன்மயமானதே. எனினும், நடுவுள்ள சுடர்ப்பொன் நிலையில்தான், அதற்கு அப்பாலும் இப்பாலும் உள்ள பொன்னொ ளியின் இயல்பறியக் கூடியதாயிருக்கின்றது. ஆகவே இந்தச் சுடர்ப் பொன்னை முதலாக, அளவுகோலாக, "Unit" ஆக வைத் துக்கொண்டு மற்ற பொன்னின் மாற்றைக் குறிக்க நேருகின்றதாம். இந்த அனுபவத்திற்குரிய முதற் பொன்னையே ஆணிப்பொன் என்று கூறுவர். இந்த ஆணிப்பொன்னுக்கு மாற்று 1008 ஆம். இவ்வாயிரத்தெட்டு என்பதும் ஞான சிதாகாசம் அல்லது ஸஹஸ்ர ஆகாச தத்துவத்தை யுணர்த்த வந்ததாம். ஸஹஸ்ரம் என்றால் ஆயிரம். அகரமாகிய ஆகாசம் எட்டு, ஆதலின் இந்த நிலை 1008 ஆம்.

மேற்படி 1008 மாற்றுடைய ஆணிப்பொன்னம்பலத்தில் இருந்து, கீழ்நிலையிலுள்ள உலகறி பொன்னையும், மேல்நிலையி லுள்ள தத்துவாதீதப் பெருஞ்ஜோதிப் பொன்னையும் அளந்து பார்க்கின்றான் மனிதன். இவன் 96 தத்துவம் கொண்டவன். இதுகொண்டுதான் விசாரத்தாற் கண்டுள்ளான் ஆணிப்பொன் னம்பலத்தை. அந்த ஆணிப்பொன்னுக்கு மாற்று 1008 ஆக உள்ளதால், அதனை இந்த 96 ஆல் பிரித்து, வகுத்துப் பார்க்கும் போது $1008 \div 96 = 10\ ^1/_2$ (பத்தரையாம்). இதுதான் உலகறி பொன்னின் இயல் மாற்று கண்ட வகையாம். இந்தப் பத்தரை என்ற குறிப்புக்கும் அனுபவப் பொருள் உண்டு. அதாவது, உண்மைப் பத்தரை அல்லது பக்தரைத் தன் வண்ணமாக மாற்றக்கூடியது என்பதாம். பொன்மேருவைச் சேர்ந்த காகமும்

பொன்னாகும் என்பது சித்தர் பரிபாஷையில் விளங்குவது. இந்த ஆணிப்பொன்னம்பலத்தில் இருந்துகொண்டுதான் நம். வள்ளற் பெருந்தகை காட்சி அனுபவத்தைக் கண்ணிகளாகத் தொகுத் துள்ளார். அதுதான்,

"ஆணிப்பொன்னம்பலத்தே கண்ட காட்சிகள்
அற்புதக் காட்சியடி—அம்மா
அற்புதக் காட்சியடி."

என்றதாக விரிந்து விளங்குவது ஆம்— இதன் முழு விளக்கமும் 'காட்சிக்கண்ணி' என்ற உரை நூலில் கண்டு கொள்ளலாம்.

ஆயிரத்தெட்டு மாற்றுடைய ஆணிப்பொன் அம்பலத்தில் இருந்து, அகண்ட வெளி நிறை இறை ஜோதியின் இயல்பறிந்து கொள்ள முற்படும்போது, அது அளப்பரியதாய் மேலும்மேலும் பெருகிக்கொண்டே யிருக்கின்றதாம். நிறை இறைவண்ணம் இது வெனக் காண்பது மிக அரியதாய் உள்ளதாம். ஆகவே அந்தப் பெருஞ்ஜோதிப் பொன்னுக்கு உரிய மாற்று அளந்து கூறிவிட முடிகின்றதில்லையாம். இதனால், இறைவனை, மாற்றறியாத செழும் பசும் பொன்னே என்கின்றார் அருள் அடிகளார். அன் றியும், "மாற்றை அளந்து அறிந்திலம் என்று அருமறை ஆகமங் கள் வழுத்த மணிமன்றோங்கும்" அருட் பொன்னாகவும் குறிப்பிட் டுள்ளார்.

எனவே நம் அருட்பெருஞ்ஜோதி அம்பலம், ஆணிப்பொன்னம் பலமாக இருக்கின்றதாய் அறிந்து அடைகின்றோம். உண்மை யாக இந்த அம்பலத்தை அடைந்துவிட்டால் (மனோபாவனையி னாலோ, அறிவியற்பரிசோதனையினாலோ அல்ல, அருள் அனுப வத்தால்) நிறை இன்ப வாழ்வு உண்டாவது திண்ணமாம். இவ் அம்பலம் உற்று நின்றால், வேண்டுவன எல்லாம் தடையுறாமலும், உடனுக்குடனும் கிடைக்கப்பெறும் என்பது குறிக்கவே இங்கு பாணிப்பில்லாததாய்ப் பரவினோர்க்கு அருள்புரிவதாகச் சுட்டப் பெற்றுள்ளது. பாணித்தல் என்றால் தாமதித்தல் என்று அருத்தம். பாணிப்பில்லாதது என்றதால், தாமதமில்லாது எண்ணிய எண்ணியாங்கு உடனுக்குடன் வழங்கப்பெறும் என்பது குறிப்பாம். ஆகவே, இவ் ஆணிப்பொன்னம்பலத்துற்று அருட்பேரின்பத்தை ஏற்போமாக.

## 48. அம்பலமே எம்பலம்

95. எம்பல மெனத்தொழு தேத்தினோர்க் கருள்புரி
96. அம்பலத் தாடல்செய் அருட்பெருஞ்ஜோதி

(உ-வி) அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் உண்மை அளப்பரிய அகண்ட வெளி முற்றும் நிரம்பியே இருக்கின்றது. இந்த இறை யுண்மை அனுபவப்படும்போது, ஆன்ம சிற்றணுவில் பேரின்ப உணர்வுமயமாயும், அவ்வான்மாவைச் சூழ உள்ள வெளி நிறை ஒளிமயப் பிரபஞ்சத் தோற்றமாயும் விளங்குவதாம். இந்த ஆன்ம சிற்றணுநிலையே சிற்சபை எனவும், சிற்றம்பலம் எனவும், சிற்பொதுவெனவும் குறிக்கப்படுகின்றது மேல் சூழ உள்ள பெரு வெளி நிலையே பொன் வண்ண நிறையொளி காரணத்தால், பொன்னம்பலம் என்றும், பேரம்பலம் என்றும், பொற்சபை அல்லது பொற்பொதுவென்றும் புகலப்படுவதாம்.

சிற்றம்பலத்தேதான் கடவுளரின் நிறையருள் ஆற்றல் நிலைத் திருந்து கொண்டு அருளாணை புரிகின்றது. அவ்வாணையின்படியே புறத்தே ஐந்தொழில் செயல்பட்டுக்கொண்டேயிருக்கின்றது. நிலைத்த அக அருள் நிலையை ஊன்றிய திருவடியாகவும், புறத்தே செயல்படுகின்ற தோற்றம் ஆடும் திருவடியாகவும், அணிந்து கூறப்படும். பொன்னம்பலத்திலே ஆடல்டிக்காட்சியும், சிற்றம் பலத்தே அருளின்பானுபவமும் பெறப்படும் உண்மையை,

''கள்ளுண்டேன் எனப்புகன்றார் கனகசபை நடுவே
கண்டதுண்டு, சிற்சபையில் உண்டது முண்டு''

என அனுபவமாலையிற் குறிப்பிடுகின்றார். ஆகவே, நமது அக சிற்சபையிலிருந்துதான் மெய்யின்பானுபவம் பெற வேண்டு மென்பது தெளிவாம். இது குறித்தே இதுகாறும் இச் சிற்சபை அல்லது சிற்றம்பலத்தைப் பற்றியே எடுத்துரைத்து வந்தவர் இங்குதான் அம்பலத்தே .ஆடல்செய் புறத் திருவடியைச் சுட்டு கின்றார். இயல்பாகவே சிற்சபையின்கண் ஆண்டவரின் பேரருள் ஆற்றல் மறைந்து கிடக்கின்றது. ஆனால், அவ்வாற்றல் வெளி யாகி அனுபவத்தில் ஏற்கப்படத்தான் இந்தப் புறப் பிரபஞ்சச் செயற்பாடு நிகழ்ந்து கொண்டுள்ளதாம். இவ்வைந்தொழில் ஆடற்செயலால் இன்று மனித வடிவம் உண்டாகி, இதில் விளைந்

துள்ள அருள் ஞானத்திற்கு, அக உண்மை அனுபவப்பட இருக்கின்றதாம்.

அருட்பெரும்பதியின் பேரின்பானுபவம் பெறவேண்டியே அம்பலவாயிலாகிய புருவ நடுவிடத்திருந்து அக நோக்கித் திருமுன்நின்று விண்ணப்பிக்கின்றார்கள் சுத்த சன்மார்க்கச் சத்திய ஞானிகள். அகமுடைய அருட்பெரும்பதியே நமக்கு முழு ஆதரவாயும், உயிர்த்துணைப் பேராற்றலாயும், நித்தியானந்த வாழ்வு வழங்குபவராயும் இருக்கின்றார் என்பது உண்மை. இதனால்தான் மெய்ஞ்ஞானிகள் இந்தப் பதியை ''எம்பலம்'' எனப்போற்றித் தொழுது நிறை அருள்பெற்று உய்வு பெறுகின்றார்கள். இக்கருத்துதான் இங்கு,

''எம்பலமெனத் தொழு தேற்றினோர்க் கருள்புரி
அம்பலத் தாடல்செய் அருட்பெருஞ்ஜோதி''

என்று ஓதப்பெற்றுள்ளதாம்.

## 49. பரஞான சிதம்பரம்

97. தம்பர ஞான சிதம்பர மெனுமோர்
98. அம்பரத் தோங்கிய அருட்பெருஞ்ஜோதி

(உ-வி) இங்கு அம்பரம் என்ற சொல் ஆகாசம் என்ற பொருளைச் சுட்ட வந்ததோடு அகவுண்மை விளக்கவும் வந்துள்ளதாம். சித்து என்ற சொல் ஞானம் எனப் பொருளாம். ஆகவே, சித்து அம்பரம் சிதம்பரம், அதாவது ஞானாகாசம் ஆம். புறவெளி நிறைந்துள்ள ஆகாசம் பூதாகாசம் எனப்படும். அகமாகிய ஞான நிலையம்தான் சிதாகாசம் அல்லது சிதம்பரம் எனப்படுவது.

மேற்படி சிதம்பரம்தான் நம் சிற்றம்பல்மாகவும் கூறப்படுவதாம். சிற்றம்பலம், அணுத்துவமாயுள்ள சிறிய அளவு இயல்பைக் குறிப்பது. ஆனால் சிதம்பரம் அறிவாகாச உண்மையை விளக்குவது. அம்பரம், அம்பலம் என்ற இரண்டில் முன்னதிலுள்ள ரகரம் 12வது உயிர்மெய் வரிசையில் வந்து துவாதச அகவான் வெளியைக் குறிப்பதாயும், பின்னதிலுள்ள லகரம்-13 வது நிலை பெற்றுத் திரயோதச அருள் அனுபவ நிலையை

யுணர்த்துவதாயும் உள்ளனவாம். சிதம்பரம் அடைந்து திருவருள் வேண்டுவது நம் கடமை. ஆதலின் திருச்சந்நிதியில் நின்று ''திருச்சிற்றம்பலம்'' என்று போற்ற ஆணை செய்யப்பட்டுள் ளோம். அப்படிப் போற்றினால் அம்பலம் நம்பலமாகி அருள் பாலிக்கும் என்பது ஆன்றோர் கருத்து. இதனால்தான் சிவனருள் வேண்டும் சைவப்பெரு மக்கள் ''திருச் சிற்றம்பலம்'' என்று, எதையும் தொடங்குவதும் முடிப்பதும் காண்கின்றோம். இச்சைவ அடிப்படையின்மீது எழுப்பப்பட்டுள்ள சுத்த சன்மார்க்கம் எல் லோருக்கும் உரிய அருட் பெரு நெறியாக இருக்கின்றது. இதில் சிவம் அருட்பெருஞ்ஜோதி ஆகிய நம் அக ஞானாகாசத்தே கண்டு அருளாற் கலந்து நிற்கும் உண்மை விளங்குகின்றதாம். இது முன் னோர் கண்ட, கொண்ட ஞானாகாச சிதம்பரநிலை அல்ல. அதற்கு மேற்பட்ட அருள் உண்மை கொண்ட முடிவான உத்தரஞான சிதம்பர நிலையாம்.

மேற்குறித்த உத்தரஞான சிதம்பர நிலையே தம்பரஞான சிதம் பரமாகக் குறித்துள்ளார் நம் வள்ளற்பெருமான். தம் பரஞானம் என்பது, தற்பரஞானம் எனவும் படும். முன் ஞானத்தில் அவ் வாகாசநிலையைப் பரமாகாச சொரூபி ஆகிய கடவுள் வடிவாகக் கண்டிருந்தனர். அதுவே இன்றைய சுத்த சன்மார்க்க உத்தர ஞானத்தால் தன் உண்மை நிலையாகவே கண்டுகொண்டுள்ளான் சுத்த சன்மார்க்கி. இந்த, உத்தரஞான் சிதம்பரத்தில்தான் யாவரும் போற்றிப் பெரும் பயன்பெறும் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் விளங்குகின்றார். இந்த உத்தர ஞான சிதம்பரம் நமது வடலூர் சத்திய ஞானசபா நிலையமே ஆம்.

இன்று இந்தச் சத்திய ஞான சபையும் இதில் திகழும் அருட்பெருஞ்ஜோதியும் கற்பனை கடந்த அருட்பெருங்கடவுள் உண்மையை, மக்கள் சமுதாயம் முழுமைக்கும் அறிவித்து, அருள் நெறியில் ஒத்து வாழ்ந்து உய்ய உதவ வந்துள்ளனவாம். பழைய தாகிய பூர்வஞான சிதம்பரம், அதன் சிவநடனபதி மூலமாய் மக்களின் ஒரு பிரிவினராகிய சைவர்களுக்குத்தான் இன்பளிக்கத் தோற்றுவிக்கப்பட்டதாம். அன்றியும், அச் சிதம்பராலயமும் சிவ மூர்த்தியும் யோக ஞான சித்தர்களின் தந்திர மந்திர யந்திர சக்தியால் தோற்றுவிக்கப்பட்டு உலகியல் வாழ்வுக்கு ஓரளவே உதவினதாகும். ஆனால் இன்றைய நம் உத்தரஞான சிதம்பர மாம் வடலூர் ஞான சபையும் அருட்பெருஞ்ஜோதிபதியும் பழ

நெறி எதனாலும் அறிந்து அடையப்பெறாது சுத்த தயவோடு கூடிய சத் விசார பரோபகார வாழ்வால்தான் பெறக்கூடியதாய் இருக்கின்றதாம். இதனால் இப்பதியில் கற்பனா நெறிமுறை களுக்குச் சிறிதும் இடமில்லை. சன்மார்க்க உண்மையைப் புரிந்து கொள்ளாது பிற கோயில் பிரதிஷ்டை கும்பாபிஷேகம், விழா வைபவம் முதலியவைபோல் செய்தல் கூடாது. ஜீவதயா விளக் கச் செயலும், கடவுள் உண்மை விளக்கக் குறிப்புகளுமே என்றும் வழங்கப்படவேண்டும்.

தம்பரஞான சிதம்பரம் என்னுமோர் அம்பரம் எதுவெனில் நம் உத்தரஞான சிதம்பரமேயாம். இந்த அம்பரத்து ஓங்குகின் றதுதான் அருட்பெருஞ்ஜோதி என்பதைத் தெளிவாகக் காட்டி யுள்ளார் நம் அடிகளார். இத் தெளிவு நிலையைத்தான் ஒவ் வொருவரும் போற்றிப் பயன்கொள்ள வேண்டுமே யல்லாது சைவச் சார்புடன் போற்றிப் பெறும் சக்தி, சித்தி, அனுபவங்களில் இலட்சியம் வைக்கவேண்டாம் என்று அழுத்தம் திருத்தமாகக் கூறியுள்ளார் நம் பெருமானார். இந்த உண்மை வாசகத்தை ஏற்று ஒழுகிப் பயன்பெற வேண்டும் நாம். இதனையுணர்ந்து கொள்ளாமல், அலட்சியப்படுத்துவதும், பழைய வழிகளையே நம்பிப் பின்பற்றிச் சென்று பயனுறாது ஒழிவதும் திருவருட் சம்மத மல்லவாம்.

வள்ளலார், சிவம், சிவம் என்று குறித்துள்ளது பழைய குறுகிய கற்பனா சொற்பொருளைக் குறிப்பதாகக் கொள்ளக் கூடாது. உண்மையில் எல்லோரும் போற்றிக்கொள்ளும் அருட்பெருஞ் ஜோதியையே சிவமாக உளம் கொண்டிருந்தார் என்பதுதான் உண்மையாகும். இவ்வுண்மையைத் தெளிவு செய் விப்பது அருட்பெருஞ்ஜோதி அகவலின் ஆரம்ப அடிகளிலேயே காண்கின்றோம். ''அருட்சிவ நெறி சார் அருட்பெரு நிலை வாழ் அருட் சிவபதியாம் அருட்பெருஞ்ஜோதி'' என்பதில் அருட் பெருஞ்ஜோதியே அந்தச் சிவபதி என்பது அனுபவ விளக்கமாம். சிவமும் அருட்பெருஞ்ஜோதியும் ஒன்றையே குறிப்பதாயினும், இந்த அருட்பெருஞ்ஜோதியில் அனுபவகாரண சிறப்பு காணப் படுகின்றதாம். சிவம் என்பதில், சி-கடவுட் ஜோதி வடிவத்தை யும், வ-அருட்சக்தியையும் சுட்டுவதால் சிகரமுதற்கொண்டு ஓதி அவ்வொளியில் நிலைத்து நிற்பதால் அதில் மறையவே முடிகின்ற தாம். ஆனால், அருட்பெருஞ்ஜோதியில் அருளே முதலாய்க்

கொண்டு அவ்வருளோடு வாழ்வதால், முடிவில் அருட்ஜோதி வடிவோடு என்றும் விளங்கச் செய்வதைக் குறிக்கின்றதாம். ஆகையால், பழைய சிவானுபவ நிலை கடந்து அருள்நிலை வாழ்வு பெற அச் சிவத்திற்கும் அருள் என்னும் அடைமொழி கொடுத்து, அருட்சிவபதியாக்கி நம் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரையுணர்த்தியுள்ளார். எனவே, அவர் கொண்ட சிவமும் அம் மார்க்கமும், சுத்த சிவமாகவும், சுத்த சிவ சன்மார்க்கமாகவும் அறிந்து சுத்தசன்மார்க்கி சுத்த சுகானந்த வாழ்வு பெற உள்ளான். உத்தரஞான சிதம்பரமே சித்தியெலாம் தரும் அம்பரமாம். இதனால் உலகமெல்லாம் நல்வாழ்வு பெறும்.

## 50. சபை: பொது

99. எச்சபை பொதுவென இயம்பின ரறிஞர்கள்
100. அச்சபை யிடங்கொளும் அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) சபை, பொது, கோயில், மன்று, ஆலயம், அம்பலம், தளி முதலிய சொற்கள் ஒரு பொருளையே குறிக்கும். எனினும் ஒவ்வொன்றுக்கும் காரண விரிபொருள் விளக்கம் வேறுவேறாய்த் திகழும். இங்கு, சபை, பொது என்னும் இரண்டை மட்டும் விளக்கிடலாம். சபை என்றால், பலர் ஒன்றுகூடி உண்மையை வெளிப்படுத்திப் பயன்காணும் இடமாகும். நமது கடவுளான்மா இடத்து எல்லோருக்கும் பெருநன்மை ஏற்பட இருத்தலின் அக் கடவுளான்ம இடமே உண்மைச் சபையாக உள்ளதாம். இந்தச் சிற்சபையில் பெறப்படும் தத்துவ சித்திகளின் காரணமாகத்தான் இதனைப் பொற்சபை, ரஜிதசபை, தாமிர சபை, சித்திர சபை, இரத்தின சபை முதலியனவாகவும் முடிவில் சுத்தசன்மார்க்க நித்தியவாழ்வு அருளும் சத்தியஞான சபையாகவும் உள்ளதாம். சுத்த சன்மார்க்க அருட்பிரகாசருக்குச் சிற்சபையும் பொற்சபையும் உரிமையாய் விளங்கும்.

இனி, பொது என்பதன் விளக்கம் காண்போம். மேலே குறிக்கப்பட்ட சபையே எல்லோருக்கும் பொதுவுரிமையாகவும் பொதுவுடைமையாயும் இருக்கின்றதால் இச்சபையையே பொது வெனக் கொள்ளுதலும் பொருந்தும். இதுவன்றி ஒருவனுடைய அக அனுபவத்தில் கடவுளான்மா இரண்டற்ற ஒன்றேயாய் இருக்கக் காண்கின்றோம். ஆகையால், அக் கடவுளான்மாவே

கடவுளுக்கும் உண்மை மனிதனுக்கும் உரிய பொதுவிடமாகக் கொள்ளப்படும். என்றாலும், மனிதன் தன்னதாகிய அந்த மேலான இறைநிலையுண்மையைச் சுத்த சன்மார்க்க முடிவில்தான் கண்டடைந்து வாழ்வு பெறுகின்றான். அவ்வுண்மை விளங்கா முன், உடற்பற்று காரணமாக அப் பொதுச்சபைக்குப் புறத்தி லிருந்து அவத்தைபட்டுக் கொண்டிருக்கின்றான்.

மெய் அறிஞர்கள் இந்த ஆன்மாலயத்தையே அருட்பெருஞ் ஜோதி ஒளிர் பொதுவாக உரைப்பர். இது, கன்மமலமாகிய உடற்பற்று ஒன்றும், மாயாமலமாகிய உயிர் உணர்வுப் பற்று ஒன்றும் கடந்து மேல் ஆணவமலமாகிய ஆன்மபோதநிலையில் அருள்விளக்கம் உண்டாகும்போது அனுபவப்படுவது இப் பொதுச்சபையுண்மை. ஆன்மாவில் கடவுள் அருள் உண்மையும், மனிதனின் ''தான்'' என்ற தற்போத உணர்வும் செம்பாதியாக இருப்பதாய்த், தோற்றுகிறது. இந்த கன்மம், மாயை, ஆணவத் தின் ஒருபகுதி ஆகிய இரண்டரை நிலை கடந்தபோதுதான் அருளிறை அனுபவம் வெளிப்பட்டு அப்பொதுநிலை வாழ்வு வழங் கும். அப்படி வாழ்கின்றவனுக்கு மாயா கன்ம தேகம் சிற்சபை பொற்சபையாக மாறி விளங்கும். இவ்வுண்மை,

''என்சாமி எனதுதுரை என்னுயிர்நா யகமே
இன்றுவந்து நானிருக்கும் இடத்திலமர் கின்றார்
பின்சாரும் இரண்டரைநா ழிகைக்குள்ளே எனது
பேருடம்பிற் கலந்துளத்தே பிரியாமல் இருப்பார்
தன்சாதி யுடைப்பெரிய தவத்தாலே நான்தான்
சாற்றுகின்றேன் அறிந்ததிது சத்தியஞ்சத் தியமே
மின்சாரும் இடைமடவாய் என்மொழிநின் றனக்கே
வெளியாகும் இரண்டரைநா ழிகைகடந்த போதே''

என்பதால் நம் கடவுளான்மப் பொதுவுண்மையும் இரண்டரையின் மெய்விளக்கமும் புலனாகும்.

## 51. வாடுதல் நீக்கிய மணி மன்று

**101. வாடுதல் நீக்கிய மணிமன் றிடையே**
**102. ஆடுதல் வல்ல அருட்பெருஞ் ஜோதி**

(உ-வி) நமது அருட்பெருங்கடவுள், எப்பொருளுக்கும், எவ்வுயிருக்கும் உள்ளீடாய் இருந்துகொண்டு அருள் ஆடல்புரிகின்றார். ஆடல் என்றால் உலகில் மக்கள் இயற்றுகின்ற புறக்கூத்து போன்றதல்ல. ஆண்டவரது அருட்பெருநடனம் யாதெனில், அவருடைய அருள் உண்மை வெளிப்பட, இடையறாது புரியப்படுகின்ற அருள் ஐந்தொழிற் செயலே யாம். இந்த ஆடல் உண்மை, பக்குவ மனிதனில், உடற்படைப்பு ஆக்கலாகவும், வளர்ப்பு காத்தலாகவும், உடற்பற்று ஒழித்தலை அழித்தற் செயலாகவும், பக்குவம் வருவித்தலை அல்லது உட்கனிவித்தலை மறைத்தற் செயலாகவும், முடிவில் பேரின்பசித்தி வாழ்வு வழங்குதலை அருளற்செயலாகவும் அறியலாகும். பக்குவம் உண்டாகாத வரை, ஆக்கல், காத்தல், அழித்தல் மூன்றும் புற உடலிடத்தும், மறைத்தல், அருளல் ஆகிய இரண்டும் அக உயிராகிய ஆன்மா விடத்தும், சதா வெளிப்பட்டுக் கொண்டே யிருக்கும். இந்த ஐந்தொழில் நடனம் தோற்றரிய சிற்சபையின் கண்ணின்று என்றும் இயற்றப்படுகின்றது. அந்த சிற்சபை அகண்டவெளி நிறை பொற்சபையின் ஒரு சிற்றணுவே எனினும், அந்த ஒன்றான அருட்பெரும்பதியின் முழு விளக்க அனுபவமும் தன்னுட் கொண்டு விளங்குவதாம். எனவே இந்தக் கடவுட் சிற்சபை நித்தியமாய் உள்விளங்க, புறத்தே இந்தத் திருநடனச் செயலால் பக்குவம் ஏற்பட்டுக் கொண்டேயிருப்பது உண்மையாம்.

மேற்சொன்ன சிற்சபைதான் மணிமன்றம் எனப்படுவது. இது சுயம்பிரகாசமான, மாசில்லாத மணியொளி கொண்டதாயும், அருள் அற்புத நவமணி சித்தி சக்தியைத் தன்னுட்கொண்டதாயும், மனிதனைத் தன்நிலையிலிருத்தித் தன்மயமாய் விளங்கச் செய்யவல்ல அருட்பெருஞ்ஜோதிமணியாயும் இருக்கின்றதாம். இந்த மணிமன்றிடைதான் நம்பதி அருட்பெருஞ்ஜோதி நடராஜ பதியாக ஆடிக்கொண்டேயிருக்கின்றார். திருவருளால், மனிதன் இம்மணிமன்றை அடைந்து, அருள் வண்ணமாய்த் திகழும்போது வாடுதல் அற்று, அழியாமை பெற்று விளங்குகின்றவனாகி விடுகின்றான்.

மனிதன், மணி மன்றம் அடையாது, மண், பெண், பொன்னுக்காக மன்றாடிக்கொண்டிருக்கும்வரை வாட்டமே அடைவான். வாடியே போவான். ஆனால், மூவாசையைத் துறந்துவிட்டு மணிமன்றில் புகுந்தும் வாழ்வடைந்திட முடியாது.

திருவருள் அனுபவத்தால் மணிமன்றவாணருடன் இரண்டற இருந்துகொண்டு, உலகியலைத் துறவாது, சுத்த தயா இயற் செயல், சூழ்நர்க்குப் பக்குவம் வருவிக்கப் புரிந்து கொண்டி ருத்தலே அம்பலவாழ்வாகும். இப்படித்தான் நம்பதி மணி மன்றில் நித்தமும் இருந்து கொண்டு அருளாடல் புரிகின்றார். அவரே நம்மையும் அம்பலத்திற் கலந்து கொண்டு வாழ்விக் கின்றார். வாடாமலர் போல் விளங்கவும் செய்கின்றார். இவ்வுண்மை எல்லாம் இவ்விரண்டு .அடிகளில் ஒளி செய்து கொண்டிருக்கக் காண்கிறோம்.

## 52. ஆடகப்பொது

103. நாடகத் திருச்செயல் நவிற்றிடு மொருபேர்
104. ஆடகப் பொதுஒளிர் அருட்பெருஞ்ஜோதி

**(உ-வி)** ஆடகம் என்பது பொன்னில் ஒருவகையாம். ஆடகம் கிளிச்சிறை, சாதரூபம், சாம்புநதம் என நான்கு வகைப் பொன் உள என்பர். யாவும் அக அனுபவத்திற்காக வழங்கப் பட்டுள்ளன. இங்கு ஆடகப் பொது, ஆனந்தத்தாண்டவம் வெளிப்பட்டு விளங்கும் சுத்த ஆடரங்கு என்னும்· பொற்சபை யாகத் திகழ்கின்றதாம். ஆடகப் பொன்னம்பலம் நமது அகத்தே திகழ்கின்ற ஆடவல்லானின் பொன்மன்றேயாம். ஆடகம் என்பதை, அகம்-ஆடல் என உள்ளிருந்து காணலாம். இவ் ஆடகப் பொதுவுக்கு, ஒரு, பேர் என்ற இரு அடை கொடுக்கப் பட்டுள்ளன. இவற்றிற்குப் பொருள், ஒப்பற்ற, பெரிய என்றுள் ளதால், இந்த ஆடகப் பொற் பொது தனக்கு ஒப்பில்லாத, பெருமைமிக்க சிறப்பு வாய்ந்த ஒன்றாக உள்ளது என்பது குறிப்பு.

மேற்படி பொன்னம்பலத்திலே தான் நமது அருட்பெருஞ் ஜோதி நடனசபேசர் நடனம் ஆடுவது மட்டுமல்ல, நாடகமே ஆடுகின்றாராம். நாடகம் என்றால் தன்னியல் உண்மையை மறைத்து வெளிக்காட்டாது, பலர் உள்ளத்தையுங் கவர்ந்து ஆனந்தப் பயனை அடைவிக்கின்ற ஒருவனது நடிப்புச் செயலே நாடகமென்பர். இக்கலையின் உண்மையே நம் நாடகத் தமிழாகக் கற்பிக்கப்பட்டுள்ளதாம். இங்கு நம் அருட்பெரும்பதியே தனது சச்சிதானந்த உண்மையை மறைத்துக்கொண்டு, தன்னையே கூட

மறைத்துக் கொண்டு நமது உள்ளங்கவர் நாடகத்தை நம் ஆடகப் பொன்னரங்கில் நடித்துக் கொண்டுள்ளார். அவருடைய திரு வுள்ளம் நமக்கு மெய்யான பேரின்ப வாழ்வை அருளுவதேயாகும். மற்றபடி உலக நடிகர்களைப் போன்ற, கீழ்தர உள்ளக் கிளர்ச்சி களையும், புலனின்பத்தையும் தந்து தாழ்வுற்று அழியச்செய்வ தன்று. நமது அருள் நடிகர் உண்மையில் நித்தியானந்த அருட் பெருஞ்ஜோதியராகவுள்ளார். உலக நடிகக் கலைஞர்கள் அற்ப வால் நட்சத்திரம் போன்று விரைந்து மறைந்து ஒழிகின்றனர்.

இந்த உலகமே ஒரு நாடகமேடையாகவும், இதில் வாழ வந்துள்ள ஒவ்வொருவருமே ஒரு நடிக நட்சத்திரம் எனவும் கூறுவர் சிலர். இக்கூற்று புலன் அளவில் விளங்கி உண்மை யற்ற வெற்று நடிப்பாக இருந்து பொய்த்துப் போகுமானால் நன்மையில்லை. அது கடவுட் சித்தமுமல்ல. ஆனால் மனிதன் இங்கு இறையுண்மை கொண்டு, அகநின்று, தன்னைக் காட்டிக் கொள்ளாது, அனகவாழ்வு நடத்துவதே மெய்யான நாடகமாகும். இவனே திருவருளால் அருட்பிரகாச நட்சத்திரமாக அழிவற்று என்றென்றும் விளங்குவான்.

பக்குவமடையாத உடற்பற்று நீங்காதவர்களை, பெத்த ஆன் மாக்கள் என்பர். இவர்கள் மறைந்த நினைவு தினத்தைத் தேதி அல்லது திதியாகக் கொண்டாடுகின்றனர். பக்குவ முத்த ஆன் மாக்களின் மறைவு நாளை நட்சத்திரமாகக் கொண்டாடுகின்றனர். இவர்கள் நட்சத்திரப் பதவி அடைந்தவர்கள் என்பது கருத்து. சூழவுள்ள கோள் உடம்பைக் கழற்றி விட்டு உள்ளொடுங்கி, அக வானில் சிலகாலம் ஆன்ம மணியென விளங்கி, சில சித்துக்கள் புரிந்து விட்டு மறைந்து விடுகின்றனர் இந்த விதேகமுத்தி பெற்ற நட்சத்திரங்கள். ஆனால் சுத்த சன்மார்க்க அருட்பெருஞ்ஜோதி, மனிதனை அருள் ஒளி நட்சத்திரமாக ஆக்கி வாழச் செய்யவே இன்று ஒரு பேர் ஆடகப் பொதுவிலிருந்து நாடகத் திருச்செயல் புரிகின்றார் என்பது உண்மை.

## 53. கற்பனை கடந்த சிற்சபை

**105.** கற்பனை முழுவதுங் கடந்தொளி தருமோர்

**106.** அற்புதச் சிற்சபை அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** நமது எல்லாம்வல்ல இறைபரம்பொருள் நித்தியமாய் ஒளிவிட்டுப் பிரகாசித்துக்கொண்டு விளங்குகின்ற இடம், நமது அற்புதச் சிற்சபையாக இருக்கின்றது. இந்தச் சிற்சபையின் வளரொளியைத்தான் இன்று அருட்பெருஞ்ஜோதியாகக் காண் கின்றோம். இச் சிற்சபை, புறக் கற்சபைகளை (கற்கோயில் களை)ப் போன்று காண்பது அரிதாகும். இக் கடவுட் சிற்சபை யும் நித்தியம், இந்த இறையின் பேரருட் செயலால் விளங்கும் மகாபிரபஞ்சக் காரியப்பாடும் நித்தியமே, இவை சத்தியமே. இதனால்தான் இவை அற்புதச் சிற்சபை எனப்படுகின்றது. காண் பரிய இறைஜோதி, அகண்டவெளியில் இடையறாது எங்கும், அணு அணு தோறும் நிரம்பி இருப்பதால், சிற்சபை என்னும் எந்த ஓர் ஆன்மசிற்றணுவும் அந்த இறையின் நிறையுண்மை கொண்டுள்ளது என்பது நிச்சயம். மேற்படி ஆன்ம சிற்றணுவே மனிதனின் தலை நடுவுள்ளொளியாய்க் கருவுருத் தொடக்க முதல் விளங்கிக் கொண்டுள்ளதாம். இந்த இறையொளியையே மறைமுனிவர்கள் தம்தம் கற்பனைக்கு உகந்தவாறு புனைந்து புனைந்து வழங்கியுள்ளனர். புறநின்று ஆன்மக்கடவுளைப் போற்றிப் பணிந்து ஓரளவு அருள் ஆற்றலும் பெற்று, அற்புதம் பலபல இயற்றியுள்ளனர் அந்த ஆன்மஞானசித்தர்கள். இந்த இறையொளி அவர்களின் கற்பனைக்கெல்லாம் அடங்கிவிடவு மில்லை, அதன் முழு இயல்பையும் காட்டிக்கொடுத்துவிடவு மில்லை. எந்தக் கற்பனைக்கும் அடங்காததாய், மேலும் மேலும் விரிவுற்று விளங்குவதாய்த் திகழ்கின்றது அந்த அற்புதச் சிற் சபையுள் வளர் இறையொளி. அவ்வொளியையே இன்று நம் அடிகளார் அருட்பெருஞ்ஜோதியாகக் கண்டு காட்டுகின்றார். ஆனால் இந்த அருட்பெருஞ்ஜோதி என்பதும் ஒரு கற்பனைதானே என்றால், கற்பனைதான். எனினும், இது சாதாரண மனோ கற்பனை அல்ல; சமய மதக் கர்த்தர்களின் புறக் கற்பனைகள் போன்றதுமல்ல. மனவாக்கு கடந்த மேனிலையில், தான் என்ற தற்போத ஒழிவில் அருள் வணணமாய் இருந்து, அதுவாகி நின்று அதன் உண்மை உள்ளவாறு விளங்க, மெய்யனுபவத் திற்கு, என்றும் உடன் திகழும் இயல்பு உணர்த்தும் சொல்லாய் இருக்கின்றது இந்த அருட்பெருஞ்ஜோதி. இதனால் இக் கற்பனையின் மாண்பு மிக மிகச் சிறந்ததாகும். எந்தக் கற்பனைக் கும் அடங்காத கடவுள் உண்மை, இந்தக் கற்பனைச் சொல்லா கிய அருட்பெருஞ்ஜோதியில் எப்படி அடங்கும்? அடங்காதுதான்.

ஆம். இந்தச் சொல்லில் அடங்கிவிடவில்லை. ஆனால் இச்சொல் குறித்த பொருள்விளக்க வண்ணமாக விளங்கும் இறை அனுபவிக்கு இந்த அருட்பெருஞ்ஜோதிமய வாழ்வு ஏற் பட்டு அக் கற்பனை கடந்த இறைமய இயல்போடு திகழ்வது உண்மையாகும்.

ஆகவே, அருட்பெருஞ்ஜோதி என்பது, கடவுளைச் சுட்டும் ஒரு கற்பனைச் சொல்லாகக் கொள்ளக் கூடாது. இது கடவு ளின் இயற்கை விளக்க உண்மையையே அறிவிப்பதாய், அறிந்து அனுபவத்திற்கொண்டு வாழ்வதால் இறைமய இயற்கை இன்ப நிறை வாழ்வு பெறப்படுவதாம். ஒளிதரும் என்பது ஒளிரும் என்று மட்டும் அல்லது ஒளியைத் தருகின்ற எனப் பொரு ளாக்கிக் கொள்வதைவிட, அவ்வொளி என்ற சொல்லுக்குள்ள புகழ் சிறப்பு இறைவாழ்வையே வழங்குவதாய்க் கொள்ளுதலே மிகப் பொருத்தமானதாகும். இதனால் உலகவர் எல்லாம் இந்த அருட்பெருஞ்ஜோதியைப் போற்றிப் புகழ் பெறுவார்களாக.

## 54. தாயினும் தயவான்ற சபை

*107.* ஈன்ற நற்றாயினும் இனிய பெருந்தய

*108.* வான்றசிற் சபையில் அருட்பெருஞ்ஜோதி

**(உ-வி)** உலகில் நற்றாய் என்று பெற்ற அன்னையையும், செவிலித்தாய் என்று வளர்ப்பவளையும் குறிப்பர். இங்கு வந் துள்ள நற்றாய் பெற்றவளைச் சுட்ட வந்ததல்ல. ஏனெனில் ஈன்ற என்ற சொல்லே முன்வந்து, பெற்ற என்ற பொருளை வழங்கி நிற்கின்றதால், நற்றாய் என்பதில் நல் என்ற பகுதிக்கு நன்மை என்ற பண்பு குறிப்பதாய் இருக்கின்றது. ஈன்றவள் சிறப்புமிக்க நல்லவளாக இருக்கவேண்டுமென்பது உணர்த்தப் பெறுகின்றோம். இவ்வுலகில், ஈன்றவள் பொல்லாதவளாய் இருக்கவும் காண்கிறோம். அது போலல்லாது நற்குணசீல மிக்க அன்னையையே குறிக்க இங்கு இந்த நற்றாய் வந்துள்ள தாம். அந்த நல்ல பெற்றவளைவிட எவ்வளவோ அதிகமான தயவு நிரம்பியவர் நம் கடவுள் என்பதைக் கூற இக் குறிப்பு முன் வழங்கப்பட்டுள்ளதாம். அன்னையிலும் தயவுடையாய் என்று ஆண்டவரைத் துதிக்கின்றவர் அடியார்கள்.

கடவுள் தயவு எல்லை கடந்தது, பெருமை மிக்கது. பேரின்பமே பயப்பது. உடலீன்ற அன்னைக்குப் பாசம் அல்லது பற்று காரணமாகத் தன் குழந்தையிடத்து அன்பு ஏற்படும். இத்தாய் அன்பு அல்லது தயவு, கடவுள் தயவுக்கு எவ்வளவோ அற்பமானது. கடவுளோ ஆன்மாவுக்குத் தேவையான உயிரையும், உடலையும் போகப் பொருள்களையும் தடையறாது உதவிப் பக்குவப்படுத்தி மெய்யின்பவாழ்வையே வழங்கி விடுகின்றார். இதனால் அந்தக் கடவுள் செயலின் ஒரு கூறே ஒருவனுக்கு உடலின் அன்னையாய்த் தோன்றி, ஏகதேச அன்பைக் காட்டி ஒருவாறு சிலகாலம் வளர்த்துச் செல்கின்றதுமாம். ஆதலின் ஈன்ற தாயின் அந்தச் சிறிதளவு தயவுகூட நம் பதியின் ஏகதேச வெளியீடே என்று அறிகின்றோம்.

ஆகவே கடவுளர் தயவு ஒன்றே நிறைவுடையது எனவும், அது இனியதும், பெரியதும் உள்ளும் புறமும் நீங்காதிருந்து வாழ்விப்பதும் என்று உணரப்படும். ஆன்ற என்பது அகன்ற, விசாலமான எனவும், அட்ங்கிய தெனவும் பொருளாம். அதாவது கடவுள் தயவு உண்மை, அகண்டவெளி முழுவதும் நிரம்பியுள்ளது என்பதையும், அம்முழுத் தன்மையும் ஆன்ம சிற்றணு விடத்தே அடங்கியிருந்து, பக்குவத்தே அனுபவப்படுகின்றது என்பதையும் குறிக்கின்றதாம். நமது அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர், நம் சிற்சபையில் அனுபவப்பட உள்ளது உண்மையே, அவர் அச் சிற்சபையில் சுத்த தயவு வண்ணமாக வெளிப்பட்டிலங்க உள்ளதுதான் இன்று நாம் காணும் புதுமையாம்.

## அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரும் தயவும்

அகண்ட வெளிநிறை அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் எங்கும் பூரணமாயுள்ளவர். ஒவ்வொரு அணுவிலிருந்தும் பரிபூரண அனுபவம் வெளிப்படத் திகழ்கின்றவராவர். அந்த அருட்பெருஞ் ஜோதியையே நம் சிற்றம்பலத்தே இன்று கண்டு கொள்ளுகிறோம். இப்போது அவ்வாண்டவர் அனுபவம் தயவாக விளங்குவதை இங்கு காணலாகின்றது. நமது ஆன்ம சிற்சபையே யகர வண்ணமானதாம். இந்த யகரான்மாவின் அகத்தும் புறத்தும் தகராகாசக்கடவுள் விளக்கமும், வுகரத்தால் தோற்றுவிக்கப்பட்டுள்ள உயிர் உடல் வண்ணமுமாக உள்ள

தால் தயவு என்பதுதான் நமக்குக் கடவுள். இதுவே கடவுள் அனுபவத்தை உணர்த்தவந்ததாய்ச் சிற்சபையிலிருந்து தெளிவு பெறலாகின்றதாம்.

அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் உண்மை, சுத்த சன்மார்க் கியின் அனுபவத்தில் உள்ளும் புறமும் நிரம்பிய சுத்த தயவுமய மாகவே திகழ்கின்றதை இன்று காண்கிறோம். கடவுள் தய வின் பெருமை என்னே! இவ்விறை தயவு உண்மையை அறிந்து கொள்ளும்போது இறைபரம்பொருளே இச் சொல்லுக்குரிய அனுபவப் பொருளாகத் தெளியலாகின்றது. இத்தெளிவு பெறாத காலத்து, தயவு என்ற சொல்லுக்கு, அன்பு, கருணை, இரக்கம், கிருபை என்றெல்லாம் புனைப்பொருள்களைக் கற்பித்துக் கொண்டிருக்கின்றான் மனிதன். இது முதல் நாம் நமது அருட் பெருஞ்ஜோதி சிற்சபையிலிருந்து தயவு வண்ணமாகக் கடவுளை உணர்ந்தும், போற்றியும் அடைந்தும் பேரின்பமுறுவோமாக.

## 55. எண்ணியாங் கின்புறத் தருசபை

*109. இன்புறு நானுளத் தெண்ணியாங் கெண்ணியாங்*
*110. கன்புறத் தருசபை அருட்பெருஞ்ஜோதி*

**(உ-வி)** நமது அருட்பெருஞ்ஜோதி நமக்கு உண்மை யான தேவை இன்னதுதான் என்பதும், அத்தேவையை எல் லாம் எப்படி எப்பொழுது நமக்கு வழங்கி வழங்கிப் பயன்கொள் ளச் செய்யவேண்டும் என்பதும் அவருக்கு நன்கு தெரியும். நமக்கு அந்த உண்மைத் தேவைதான் சரியாகப் புரிகின்றதில்லை; புலனின்பவேட்கையில் எழுந்த விருப்பு வெறுப்புக் காரணமாய் நாம் எதை எதையோ வேண்டும் வேண்டும் என்று கேட்டுக் கொண்டேயும், வேண்டாம் வேண்டாம் என்று மறுத்துக் கொண் டேயும் இருக்கின்றோம். ஆனால், அவர் திருவுள்ளப்படிதான் எதுவும் அடையப் பெறுகின்றதே அனுபவம். அகமுடையா ளின் ஆணைப்படி வழங்கப் பெறுவன கொண்டு அன்புப்பணிக்கே உதவி வருதல்தான் திருவுளச்சம்மதமாம். அப்படி உதவிப் பிறர்க்குப் புற உயிர் விளக்கமும், அக ஆன்மவிளக்கமும் செய்து விட்டு, நம் உள்ளத்தே அருள் விளக்கமும், ஆனந்த அனுபவமும் அடைதல் வேண்டும். இவ்வானந்தம்தான் உண்மையான

இன்பம் எனப்படுவது. மற்றபடி கிடைக்கப்பெறும் சிறுசிறு புலனின்பம் எதுவும் உண்மையான இன்பமாகாது.

நம் வள்ளற்பெருமானின் உள்ளத்தளியில் சுடர் விட்டிலங்கு கிறது அருட்பெருஞ்ஜோதியே ஆம். அந்த ஜோதியோடு ஒன்றி நிற்கும் அவர் தான் என்ற அகங்காரபோதம் அழிந்து சுத்த அருள் வண்ணமாய் இருக்கின்றார். அந்நிலையில் அந்த உள் ளத்தில் எழுகின்ற எண்ணம், அவருடையதா ஆண்டவருடையதா என்று பிரித்தறிய முடியாதபடி சுத்த அன்புமயமாய்த்தான் இருக்கின்றதாகும். ஆகையால், அவ்வெண்ணம் தடை யுறாது செயல்பட்டு இன்பப் பயன் தருவதாகும். ''எண்ணிய எண்ணி யாங்கு எய்துவர் எண்ணியர் திண்ணியர் ஆகப் பெறின்'' என்கின்றனர். இங்கு அருள் இறை விளங்கும் உள் ளத்தின் திண்மை அளவிடலாகாதே! ஆதலின், எண்ணியாங்கு எய்துவதில் தடையும் உண்டாகாது, தாமதமும் நேராது.

அன்பு, இன்பு என்ற இரு சொல்லின் அனுபவப்பொருள் இங்கு ஆய்ந்து கொள்ளுதல் பொருந்தும். புறத்தே ஜீவகா ருண்ய அன்புச்செயல் புரியப் புரிய, அகத்தே கடவுட்கருணை யின் இன்பானுபவம் ஓங்குகின்றதாம். நமது அருள் வள்ளல் தயவோடு எண்ணியதெல்லாம் உடனுக்குடன், அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர் வழங்க வழங்க, அவற்றை அப்படியே அன் போடு பிறர்க்கு வழங்குகின்றார். அதே சமயம் அவரது உள் ளத்தில் இன்பம் பெருகுகின்றதாம். மெய்யன்பினாலே மெய் யின்பம் தழைக்கின்றது. ஜீவதயவும், பரோபகாரமும் விளங் காது, தனக்கே யாவும் படைக்கப்பெற்றும், கிடைக்கப்பெற்றும் உள்ளனவாக எண்ணுதல் மருள் மயக்கச் செயலேயாகும். அதனால் உண்டாகும் புலன் இன்பம் நிலவாது பொய்த்துப் போம்.

கடவுள் உண்மை வடிவம் அன்புதான் என்பர். அது வெற்று அன்பு மட்டுமல்ல, அன்பு, அருள், இன்பம் ஆகிய மூன்றும் சத்து, சித்து, ஆனந்தம் என்றன ஒன்றாய்க்கூடி சச்சிதானந்த வண்ணமாய் உள்ளது என்பது ஆன்றோர் அனுபவமாம். இந்த உண்மை கொண்டிலங்கும் நமது அருட்பெருஞ்ஜோதி ஆண்ட வரைப் பணிந்து போற்றி அன்பின்ப வாழ்வு பெற்றுள்ளார் நம் அருட் பிரகாச வள்ளலார். நாமும் அப்படிப் போற்றி நிறை யருளால் அன்பின்பில் நித்தம் நிலவ வேண்டும்.

## 56. எம்மையும் பிரியா அம்மையப்பன்

*111.* **எம்மையும் எனைவிட் டிறையும் பிரியா**
*112.* **தம்மையப் பனுமாம் அருட்பெருஞ்ஜோதி**

**(உ-வி)** அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் உண்மையில் ஒருவ ரேயாவார். அகத்தில் ஒன்றான அருட்பெருஞ்ஜோதியாக இருக்கின்றவர், புறத்தே எவ்வுயிரும், எப்பொருளும் ஆகி எவ்விடத்தும் எக்காலத்தும் விளங்கி மறைந்து கொண்டேயும் உள்ளார். இப்படிக் கடவுள் விளங்கும் பலவாகிய தோற்றங் களில் மிகச் சிறந்து திகழ்கின்றது இந்த மனிதப் பிறப்பு வாழ்வு நிலையாம். இந்தப் பிறவியில்தான் இக்கடவுள் தோற்ற உண் மையே அறிந்து கொள்ளப்பட்டிருக்கின்றது.

முதலில், மனிதன் தன்னை உடல் வடிவினனாகக் கொண்டு மனோ பகுத்தறிவால் உள்ளுயிர் நிலையை நித்திய ஆன்ம சொருப மாக யூகித்து நின்று, உண்மையைப் பலவாகக் கற்பனைசெய்து வெளியிட்டான். அந்த ஆன்ம வடிவம், ஆணியல் அறிவுமய மானதாகவும், அதனைச் சூழ்ந்து வளர்ந்துள்ளது பெண்ணியல் அநித்திய உடம்பாகவும் உணர்ந்திருந்தான். இதில் இச் சூழுரு மாயை எனவும், இது அகத்திலங்கும் நித்தியக் கடவுளான்ம சொரூபத்திற்கு மாறுபட்டதெனவும் கொண்டான். உள் ளொளிர் கடவுள் வடிவம் ஆணியல் கொண்ட காரணத்தால், அக் கடவுளை ஆண்பாற்பொருளில் குறிக்கும் மரபு உண்டா கிற்றாம். கடவுள் உண்மையை அகமும் புறமும் கொண்டுள்ள மனிதன், தன் அகத்தில் மட்டும் அல்லாது, எங்ஙணும் அக் கடவுள் அப்படியே இருக்கக்கண்டு போற்றுகின்றான். திரு வருளால் இந்தக் கடவுளரின் இருநிலைத் தோற்றம் அனாதி யாகவே இருந்துவருவதாக அறிந்துகொண்டுள்ளான் மனிதன்.

இன்று நிறையருளால் இறைநிலை நின்று நோக்கும் மனிதன், அந்த ஒன்றான இறையே தானாகித் தனது அகப்புற வண்ண மாகி விளங்குவதையும் காண்கின்றான். இதனால் தான் அந்த நித்திய பரம்பொருளைத் தவிர அதற்கு வேறாக ஒன்றும் இல்லை என்பதை உணர்ந்து நிற்கின்றான். இக்குறிப்பு, ''எம்மையும் எனைவிட்டு இறையும் பிரியா'', என்ற அடியால் விளக்கப் பெற்றுள்ளதாம். எம்மையும் என்றால் எக்காலத்தும், எவ் விடத்தும், எழுமையும் என்றாம். இம்மை,மறுமை,இகம் பரம்,

இவ்வுலக வாழ்வு மறு வுலக வாழ்வு இவற்றிற்கு முன் சென்ற அம்மை அகநிலை வாழ்வுகளில் எல்லாம் கூட நாம் அவ்விறையின் இருநிலை கொண்டே இருந்து வருகின்றோம் என்பதும், நம்மை அது இறைமையும், சிறிதும், கொஞ்சமும் பிரிகின்றதே யில்லை என்பதும் தெளிவாம். அப்படி என்றும் இறையோடிருந்தும் கூட இந்நாள்வரை நமது இந்த உண்மையைத் தெரிந்து கொள்ளாத வர்களாய், அப்படித் தெரிந்துகொள்ளத்தக்க ஒரு சூழ்நிலை வாழ்வு பெறாதவர்களாய் இருந்துள்ளோம் என்பது உண்மை யாம். இன்றே இவ்வுண்மையை அறிந்து தெளிந்து, இறை இன்பானுபவம் பெற சுத்த சன்மார்க்க நெறி நின்று போற்று கின்றோம்.

சத்தியஞான அம்பலத்திலே அருட்பெருஞ்ஜோதிச் சுட ராய்த் திகழ்ந்துதான் வருகின்றோம். எனினும், நிறை அருள் அனுபவத்தாலே உள்ளொளியின் அனக நிறைவு உண்டாகிச் சூழுருவமும் சுத்த சுகானந்த வடிவமாகி விளங்க வேண்டியிருக் கின்றதாம். இதற்காகவே துவிதமாய் நின்று துதித்துக் கொண்டும், அத்துவிதமாய் இருந்து அக அனுபவத்தைப் பெருக்கிக்கொண்டும் இருக்கின்றோம். இங்கு அம்மையும் அப் பனும் ஆம் அருட்பெருஞ்ஜோதி என்று துதிக்கின்றோம். அப்படி அம்மையும் அப்பனுமான உண்மை எவ்வாறெனில், நாம் நித்திய ஆன்ம அருட்ஜோதி அணுவடிவாய் என்றும் இருந்தும், இவ்வுண்மை அறிவனுபவத்திற்கு வெளியாக வேண்டிய இம் மனித தேகம் பெறவேண்டியிருந்தது. இத்தேகமோ ஒரு தாயின் கருவில் தோன்ற, ஒரு தந்தையின் கூட்டுறவு தேவைப்பட்டது. இக் காரணங்களால் நம் இறைவரே தம் ஆணையால்; இந்தச் சூழுரு உண்டாக அந்த அன்னையாய்ப் பிதாவாய்த் தோற்றிக் கூடி நம்மைத் தோற்றுவித்துள்ளதாம்.

ஒன்றாய் உள்ள அருட்பெருஞ்ஜோதியே அனுபவ வெளியீட் டின் பொருட்டு இப்படித் தாயாய், தந்தையாய், அவர்களின் வழித்தோன்றலான தனயனாய் வந்து தன்னை இறைவனாக அறிந்துகொள்ளச் செய்துள்ளதாம். ஆகையால், இவன் தனது பிரிவிலா அவ் இறை இயல் உண்மையுணர்ந்து ''எம்மையும் பிரியா அம்மை அப்பன்'' என்று போற்றி வாழ்வு பெறுகின்றான்.

## 57. பிறிவறியா அறிவுக்கறிவு

*113.* பிறிவுற் றறியாப் பெரும்பொரு ளாயென்

*114.* அறிவுக் கறிவாம் அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** முன் அடிகளில், அருட்பெருஞ்ஜோதியானது தன்னை எக்காலத்தும், சிறிதளவும் பிரியாதது என்று கூறினார். என்றேனும் பிரிவுற்றதெனில் அக்கடவுள் நிலைக்கு வேறாக, அயலாக, அன்னியமாகத் தான் இருக்க நேர்ந்துவிடுவதாம். அப்போது, அக் கடவுளின் நிறைநிலையாகிய பூர்ணத்துவம் பொய்த்துவிடும். அதாவது தானும் கடவுளும் பிரிந்து இருப்ப தாயின் கடவுள் எங்கும் நிரம்பியுள்ளவர் என்ற கருத்துக்கு ஒவ் வாதுபோம். அப்போது கடவுள் தன்னில் இல்லை என்றே கொள்ள நேரும். ஆனால், உண்மையில் அப்படிக் கடவுள் நிலையில் பிரிவென்பதே யில்லையாம்.

பிரிவு என்ற சொல், ஒன்றிலிருந்து வேறாதலைக் குறிப்பது ஒன்றை இரண்டாகவோ பலவாகவோ பிரித்துப் பகுத்துக் காண்பது பிரிவுநிலையாம். அதுபோல், ஒன்றிலிருந்து அதற்கு அயலாக மற்றொன்றோ பலவோ தோன்றி விளங்குதலும் பிரிவு நிலையாகவே கொள்ளப்படும். அப்படியெல்லாம் பிரிவுநிலை என்பது நம் அருட்பெருஞ்ஜோதி பதியிடத்து எப்போதும் ஏற்படுகின்றதேயில்லையாம். அவர் ஒன்றாகவே, ஏகமாக, தனித் தலைமைப் பெரும்பதியாக, எங்கணும் பரிபூரணமாய் இருக் கின்றார் என்பதுவே மெய்ஞ்ஞானியர் அனுபவம். இதனால் பிரிவுநிலை இல்லாது இருக்கின்ற கடவுள், தானே தான் யாவு மாய்த் தோற்றி விளங்குகின்றவர் என்பதும் உண்மையாம். இப்படி யாவும் தானேயாய் விளங்குவதால், அவரல்லாது பிற உயிரோ பொருளோ, பிறிதொன்றோ அக்கடவுளுக்கு வேறாய் இல்லை என்பது தெளிவு. இந்த வேறாந்தன்மை, பிறிதென விளங்கும் இயல்பு நம் பரம்பொருளிடத்தே என்றும் இல்லையாம். இதுவே அயலறியா, பிறிதொன்றாகாப் பிறிவு நிலையாகக் குறிக்கப்பட்டுள்ளது ஈண்டு. எனவே பிரிவு நிலை செயலால் ஏற் படுத்துவது, பிறிவுநிலை இயல்பாய்ப் பிறவாக விளங்கு நிலையை உணர்த்துவதாம்.

இரண்டு படாதிருக்கும் இறைபரம்பொருளை, உண்மையாக உள்ளவாறு அறியாமல் தான் மனிதனின் இறை ஞானத்தில் குறை

பட்டுக் கிடந்தான் இதுவரை. மனிதன் அறிவு மருள்நிலையில் புறத்தே புலன் வாழ்வில் சென்று கொண்டிருக்கும் வரை, அகத்தில் மெய்ப்பொருள் விளக்கம் உண்டாகவில்லை. அதனால் அவனது கடவுள் ஞானமும், தான் வேறு அக் கடவுள் வேறு என்ற பிறவாம் நிலையில் இருந்ததாம். உலகி, தாம் கடவுளைப் பிரிந்து அயலாய் இருப்பதாகக் கருதினான். ''அகம் பிரம்மம்'' என்று சொல்லிக்கொண்டிருந்த வேதாந்தியும்கூடத் தன் அனுபவ விளக்கக் காரண உடலைத் தன்னில் வேறாகவும், துறக்கப்படவேண்டிய ஒன்றாகவும், அகத்திலங்கும் அக் கடவுளான்மாவே பற்றப்படவேண்டிய ஒன்றாகவும் கருதினான். அவை எல்லாம் சரி அல்ல என்பதை இன்று சுத்த சன்மார்க்கத்தினின்று காண்கிறோம்.

நமது அருட்பெருஞ்ஜோதி இறைவர்தானே, எங்கும் நிறை பரம்பொருளாய் இருந்துகொண்டு, ஆன்மசிற்றணுவில் வெளிப்பட்டு, அருள்ஞான விளக்கத்தோடு நாமாய்த் திகழ்ந்து கொண்டிருக்கின்றார் எனத் திருவருளால் உணர்த்தப்படுகின்றோம். அதுவே, அருட்பெருஞ்ஜோதியே, இப்படி இந்த நம் வண்ணமாய் இருந்துகொண்டு, அறிவுக்கறிவாய் நின்று அறிவிக்கின்றதும், நாமாய் நின்று அறிகின்றதும் ஆகவுள்ளதாம். இவ்வுண்மையே இங்கு ''பிறிவுற்றறியாப் பெரும் பொருளாய் என் அறிவுக்கறிவாம் அருட்பெருஞ்ஜோதி,'' என்று போற்றிக் கொள்ளப்பட்டிருக்கின்றதாம். இதனை அகநின்று அருளால் அறியாது, புறத்திலிருந்து மருளால் புகன்ற அத்துவிதஞானம் குறைவுடைத்தாம்.

## 58. சாதி மதம் சமயம் காணாதது

**115. சாதியும் மதமுஞ் சமயமுங் காணா**
**116. ஆதிய நாதியாம் அருட்பெருஞ்ஜோதி**

(உ-வி) ஏகமாய்ப் பிறிதற்றுத் தானேயாய் என்றும் விளங்கிக்கொண்டிருக்கும் உண்மைப்பரம்பொருளே நம் அருட்பெருஞ்ஜோதியாகும். அந்த ஒன்றான இறை பேரொளியே இந்த அகண்ட பெரு வெளிமுற்றும் இயற்கையுண்மை நிறைவாகி விளங்கிக் கொண்டிருப்பதாம். இந் நிறையொளி நிலை இயல்பாகவே என்றும் உள்ளதாகையால், இது ஆதியும்

அந்தமும் இல்லா அருட்பெருஞ்ஜோதி எனப்படும். ஆனால் இந்த இயல் ஒளியையே முதலாய்க்கொண்டு இப் பிரபஞ்சம் முழுமையும் தோன்றியுள்ள காரணத்தால் நம் அருட்பெருஞ் ஜோதி இவற்றிற்கெல்லாம் ஆதியானதாய்க் கொள்ளப்படு கின்றது. இவையே நம் அருட்பெருஞ்ஜோதியின் அநாதியும், ஆதியுமான உண்மையாம்.

இப்படி ஆதியந்தமில்லா அருட்பெருஞ்ஜோதிக்கடவுளை உள்ளவாறு கண்டு, போற்றி உய்வது எப்படி? எப்படியென்றால், தயவு நிரம்பிய சுத்தசன்மார்க்க சத்விசாரத்தால் உள்ளவாறு காணவும், அந்நெறிநின்று தயவுச் செயலோடு வாழ்வு நடத்து வதால் அக் கடவுள் அனுபவம் பெற்று உய்வதும் சாத்தியமாம். இப்படித்தான் நாம் கடவுளைக் கண்டடையக்கூடுமே யல்லாது மற்ற எந்த வழியாலும் கூடாதாம். முன்னோர் வகுத்தளித்த, சாதி, மதம், சமயம் எல்லாம் மக்களுக்கு நல்லின்ப வாழ்வை வழங்கும் எனவே கருதி வந்தனர் பலரும். ஆனர்ல் அந்நெறிகள் எல்லாம் சத்து உண்மையாகிய அருள் இறையை அடிப்படை யாய் ஏற்று வழங்கப்படாததால் சுத்த சத்து நெறியாக, சுத்த சன்மார்க்கமர்க விளங்கவில்லை. அவர்களுடைய மார்க்கங்கள் பலவாகவும், சாதி மத சமயம் அவற்றிற்கான கொள்கை கோட் பாடு, விழா வைபவங்கள் வேறு வேறாகவும் வழங்கப்பட்டன. அன்றியும் அந்நெறிகள் புறத்தனவாக விளங்கி, மக்கள் சமுதாயத்தை உண்மை கொண்டொழுகி, ஒன்றுபட்டு வாழ வகை செய்யாது, பிரிவுபட்டு, குலைவுற்று, ஒழியவே செய்து வருகின்றனவாம். ஆனால் அவர்களும் தத்தம் நெறியே தெய்வீக வாழ்வு தரும் சன்மார்க்கம் என்று சொல்லிக் கொள்ளுகின்றார் கள். அநேகமாக அவர்கள் கடவுள்நிலையைவிட்டுப் பிரிந்துள்ள தாகவும், அந்நிலைக்குள் சென்று அடையப் போவதாகவும் கூறிக் கொள்ளுகின்றனர். அவைகளால் உலகுக்கு நல்வாழ்வு வராது என்பது தெளிவு.

சத்தாகிய அருட்பெருஞ்ஜோதியிடத்திலிருந்து நேரடியாகச் செயல்படும் நெறிமுறையே சுத்த சன்மார்க்கமாக இருக்கின்றது. இறை அருள் ஒளி ஒன்றே யாவற்றின் அகநிலையுமாம்; புற வண்ணம், வேறு வேறான பொருளாய், உயிராய், ஆற்றலாய், தோற்றமாய், அறிவாய், அனுபவமாய் விளங்குகின்றதாம். ஆதலின் அந்த ஒன்றான அகம் பொருந்தி நின்று, அருள்மயமாய்

யாவையும் கண்டு, அன்பாலே தயவாலே ஒத்துவாழ்ந்து நல் லின்பம் பெறவேண்டியதே நம் கடமையாம். அஃதே கடவுளர் திருவுள்ளமுமாகும். இவ்வாழ்வு முறையே சன்மார்க்கமாம். பிறப் புற நெறிகள், அக ஒருமையும், உரிமையும் உணர்ந்து ஒத்து வாழத் தடையாயிருக்கின்றனவாம். சாதி, மதம், சமயம் எல்லாம் இயற்கையல்ல, மக்கள் கற்பித்துக்கொண்டவையே. அகத்தில் ஒன்றான அருள் விளக்கமில்லாது, மருள் மனோ கற் பனையில், . அல்லது ஏகதேச விளக்கங்கொண்ட தற்போத உணர்வில் எழுந்த அச்சாதி சமயங்கள் தடையாய்த் தோற்றி யுள்ளது வியப்பல்ல. உள்ளொளி பெற்று ஒன்றிவாழும் வண்ணம், மக்கள் சமுதாயத்தை அமைத்துக்கொள்ளுதல் பொருத்தமாம். புற வண்ணத் தோற்றங்களில் புலன் இச்சையும் வெறுப்பும் கொள்ளாது,சுத்த தயா இன்பப் பெருக்குக்காக ஒத்து வாழ்தல் வேண்டும். சாதியும், மதமும், சமயமும் காணா ஆதியும் அநாதியும் ஆகிய அருட்பெருஞ்ஜோதியைக் கண்டு வாழும் முறை இந்த அகவல் விளக்கத்தால் அறியப்படுகின்றதாம். அநாதி, அனாதி-என்பன, வட தென்மொழி வழக்கு. அன்+ஆதி அனாதியாம்.

## 59. தநுகரணாதிகள் கடந்த அனுபவம்

*117.* தநுகரணாதிகள் தாங்கடந் தறியுமோர்
*118.* அனுபவமாகிய அருட்பெருஞ்ஜோதி

**(உ-வி)** தநு-என்பது உடல், கரணமாவது மனம். அம் மனத்தின் விளக்கத்துக்குத் துணையான புறக்காயமும், வாக்கும் அசி புத்தி சித்த அகங்காரமுமாம். இவையன்றிக் கருவிகளும் சடங்குகளும் கரணம் எனப்படும். இக்கரணமெல்லாம் காரணத் தின் விளைவேயாம். அடிப்படையாய் இருக்கின்ற இறையுண்மை வெளிப்பட்டு விளங்குவதற்குத் தான் அகண்ட பேருலகத்திற்குள் யாவும் தோற்றுவிக்கப்பட்டுள்ளனவாம். ஆதலின் அந்த இறை உண்மையே யாவும் வெளிப்பட்டிலங்கக் காரணமாயுள்ளது என்பது விளங்கும். மேலும், இறை காரணமாகத் தோற்ற செயல்பட்டு அல்லது காரியப்பட்டு விளங்குகின்றனவே கரணம் என்னலும் தகும். இங்கு தனு கரணாதிகள் எனப்பட்டுள்ளதால், தேக கரணத்தோடு அவற்றிற்குத் துணையான புவன போகங் களும் கொள்ளப்படும். புவனமாவது உலகங்கள், இவை

அண்ட பிண்டங்களில் பலப்பலவாக உள்ளனவாம். போகம் என்பது இன்பவிழைவைக் குறிப்பது. இது மனோ கரண எல்லை வரை தோற்றி மறையும்.

மேற்குறித்த தநுகரணாதிகளினால் துய்க்கப்படுகின்றது கடவுளின்பமாகாது. இதனால்தான் மனிதனுடைய பகுத்தறிவுக்குக் கடவுள் உண்மையும் விளங்குவதில்லை, மெய்யின்பமும் இன்னதென்று தெரிகின்றதே இல்லையாம். பகுத்தறிவுவாதிகள், உலகாயத, பொருளாயத அறிவியலார்கள், கடவுள் என்பது ஒன்றில்லை என்னும் நாத்திகர்கள், உண்மை அறியாமலே கடவுள் உண்டென்று நம்புகின்ற ஆத்திகர்கள் உலகில் நிறைந்திருக்கின்றனர். இவர்கள் எல்லாம் தநுகரணாதிகளைக் கடந்து நின்று, அருள் உணர்வு பெற்று உண்மையை உள்ளவாறு காணாதவர்களேயாவார்கள். எவ்வாற்றாலும் தநுகரணாதிகளுக்குச் சிறிதும் அறியப்படாததாய் உள்ளது நமது அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் உண்மை. அப்படி அறியப்படாததாயுள்ள கடவுளை மனிதன் காண்பதும் அடைவதும் எப்படி முடியும்? தநுகரணாதிகளுக்குப் புலனாகாதது என்பது உண்மைதான். ஆனால், அத் தநுகரணாதிகளைக் கடந்து சுத்த மனத்தோடு அருள்மயமாகித் தயவு வண்ணமாகி நிற்கும் சுத்த சன்மார்க்கத்திற்கு அருட்பெருஞ்ஜோதி உண்மை உணரப்படுகின்றதாம். அப்படித் திருவருள் நிறைவால் ஓதாதேயுணர்ந்து, அனுபவத்தில் பெற்று விளங்குகின்றவர், நம் வள்ளல் திருவருட்பிரகாசர் ஆவார். அவரன்றோ இப்படி அருட்பெருஞ்ஜோதிக்கடவுள் உண்மையை அனகமாக வழங்கியுள்ளார். அதனையே புறத்திருந்து உணராதே ஓதிக் கொண்டிருக்கும் நாம் தயாவொருமையுற்றால் அருளால் அறிந்து அனுபவிக்கலாம் என்பது சத்தியம்.

## 60. உன்னும் உணர்வு கடந்தது

*119.* உனுமுணர் வுணர்வா யுணர்வெலாங் கடந்த
*120.* அனுபவா தீத அருட்பெருஞ்ஜோதி

*(உ-வி)* ஜீவர்களுக்குப் பொதுவாக விளங்குகின்ற உணர்வு, உயிர் என அறிகின்றோம். இந்த உயிர் உணர்வு, அக உயிர் நிலையையும், புறத்தேகத்தையும் பொருத்தி நின்று விழிப்பில் புலன் உணர்வுக்குக் காரணமாயும், உறக்கத்தில் அல்லது

மயக்கத்தில் ஒடுங்கியும் கிடக்கின்றதாம். பொறி புலன் வளர்ச்சி யுறாத தாவரங்களில் உயிர்ச்சக்தி இருந்தும், பிற ஜீவர் களிடத்தில் போன்று உணர்ச்சி வெளிப்பட விளங்குகின்றதில்லை யாம். இதனால் தாவரஜீவர்கள் ஜீவஹிம்சையால் துன்பத்தை அடையா. மற்ற உயிர்கள் உயிர்வதையால் உபாதை அடை கின்றனவாம். இதனால் உயிர்க்கொலையும் புலைப்புசிப்பும் கூடாது என்பது சன் மார்க்கக் கொள்கையாம். பிற எல்லா உயிர்களையும்விட மக்களினத்தில், ஐம்புலன் அறிவுக்கு மேற்பட்ட ஆறாவதாகிய மனோ உணர்வு விளங்குகின்றதால், இன்பதுன் பானுபவம் அதிகம் உறுத்துகின்றதாம். மனிதனே துன்பத்தால் பலகாலம் நினைந்து நினைந்து வருந்திப் புலம்பிக்கொண்டிருப்பதும், இன்பத்தால் மகிழ்ந்து கொண்டாடிக் கொண்டிருப்பதும் காண் கின்றோம்.

மனிதனின் மன உணர்வுக்கு விஷயங்களைப் பகுத் தறியவும், நினைவில் தொகுத்தறியவும், யூகித்தறியவும்,ஓர்மை யினால் ஆய்ந்து உண்மைகளைக் கண்டு அறியவும் முடிகின்றதாம். இவ்வறிவாற்றலைத் தான் சிந்தனையாக மொழிவர். இச் சிந்தனையே இங்கு உ(ன்)னும் உணர்வாகக் குறிக்கப்பட்டுள்ள தாம். சிந்திக்கின்ற மன உணர்வே உன்னும் அல்லது நினைக்கும் எண்ணமாக உரைக்கப்படுவது. இம்மனம் ஒன்றை மேலெழுந்த வாரியாகக் கண்டு உணர்தல் புத்தியாம். அந்த ஒன்றைக் கூர்ந்து நோக்கி, அது இதுதான் வேறு அல்ல என்று தெளி வுறும் உணர்வுதான் சித்தமாகும். அப்படித் தெளிவுறத் தெரிந்துகொண்ட ஒன்றை உண்மையானது என உளத்தில் பதித்துக்கொண்டு (அதற்கு உள்ளீடான இறை இயலை அறிந்து கொள்ளாதிருத்தல்) நிச்சயித்திருப்பது அகங்காரபோதம் என்னும் உணர்வாம். இப்படி உன்னுகின்ற உணர்வுக்கு எல்லாம் முதலாய் இருப்பது மனமே. இந்த மனத்தில் அகங் காரபோதம் இருக்கும்வரை கடவுள் உண்மை வெளியாகாது. இவ்வுணர்வு நிலையும் கடந்து மேல் சென்றால்தான் இறையனு பவம் விளங்கும்.

ஒருவன, தானும் தன் நினைவும் கடவுளின் அருள்வண்ண மாக இருப்பதைத் தேக கரண உணர்வுக்கு அப்பால் நின்று அறியும் உணர்வே அருள் உணர்வாகும். இவ் வருள் உணர்வு இப்படிப்பட்டது என எடுத்துக்கூறக் கூடாததாய் இருப்பதால்,

அனுபவாதீதம் என்பர். இதனை அந்த அதீதநிலை நின்று ஒருவன் தானே அனுபவிக்கும்போது, அதுவே அதீதமான இறையனுபவ மாக விளங்குகின்றதாம். அப்படி அனுபவத்தில் பெற்ற இறை யுண்மையே இங்கு அருட்பெருஞ்ஜோதியாக உரைத்துள்ளார் நம் பெருமானார். உன்னும் உணர்வு அருளில் கரைந்துபோகும் போது, தான் என்பதும் பிற என்பதும் மறைந்து, அந்த அருள் ஒளிஒன்றே யாவுமாய் விளங்குகிறதென்றே அறியப்படும். இதுவே அந்த இறையனுபவநிலையாம். இவ்விறை இயல் விளங்காதவரை, அகங்கார போத உணர்வும், ஒன்றன் புற வண்ண எண்ணமும் மறைவதே இல்லையாம். உண்மையாக யாவையும் அருட்பெருஞ் ஜோதியாய்க் காண்பதுதான் அந்த அதீத அனுபவநிலை எனப்படுகின்றதாம்.

## 61. பொது உணர்வு

*121.* பொதுவுணர் வுணரும் போதலாற் பிரித்தே

*122.* அதுவெனிற் றோன்றா அருட்பெருஞ்ஜோதி

**(உ-வி)** கடவுள் உண்மையைக் காட்டிக் கொடுக்க முடியாது. அது பருப்பொருளாய் இருந்தால்மட்டும் கண்ணாலே கண்டுகொள்ளச்செய்தல் கூடும். கண்ணால் காணக்கூடாததாய், மனக்கண்ணாலும் உணரக்கூடாததாய், அதீதத்தில் விளங்கும் கடவுள் உண்மை அருட்பெருஞ்ஜோதியா யிருக்கின்றது. அப்படி யுள்ள கடவுளைச் சாதாரண அறிவுடைய மனிதன், தன் உணர் வால் காணவிழைந்து முயல்கின்றபோது காட்சியாவ தெல்லாம் என்ன? அந்தக் கடவுட்காட்சி ஒருவனுடைய மனோபக்குவ கற்பனா இயல்புக்குத் தகவே, தேவ, மனித, தோற்ற, ஆற்றல் மயமாய் வெளிப்பட்டு மறைந்து போகின்றதாம். அப்படிக் காணும் காட்சிதான் உண்மைக் கடவுட் காட்சியோ? இல்லை. கருதுவார் கருதும் வண்ணமெல்லாம் ஆகியும், அல்லவாயும், மாற்ற தோற்ற மறைவற்ற சுத்த பரிபூரணக் கடவுட்காட் சியைக் காணவல்லவன் எவன்?

எந்த மனிதன் நிறை அருள் ஞானத்தால், தேக இந்திரிய கரண நிலைக்கு அப்பால் சென்று, ஒன்றான அருட்பெருஞ் ஜோதியை யுணர்ந்து, அதுவே தானாய் இருக்கின்றதன்றி,

அதைத் தவிர அதற்கு அயலாய்த் தான் என்பதோ, பிற என் பதோ ஏதும் இல்லை என உணர்ந்துநின்று விளங்கு கின்றவனே கடவுட்காட்சி அனுபவத்தில் திகழ்கின்றான் என்று அறியலாகும். இதனால், கடவுள் என்றும், தான் என்றும் உள்ளது ஒன்றே என்பது உண்மையாம். இவ்விறையருள் உணர்வுநிலையைப் ''பொது உணர்வு'' என்று புகல்கின்றார். இந்நிலையே ஆண்டவர் விளங்குகின்ற பொதுவாம் ஆலயம்.

மேற்படி அருள் ஞான உணர்வாம் பொதுவிடத்தே வெளிப் பட்டு விளங்குவதல்லால் பிற யாண்டும், நாமாய், அத்துவிதமாய் விளங்கும் இறையுண்மை அறிய முடியாது. ''சத்திய ஞானப் பொதுவில் துவமார் துரியம் சொரூபமதாமே'' என்பது திரு மந்திரச் சான்று. அருள் மெய்யறிவுதான் சத்திய ஞானம் என்பது. அது சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி நிலைக்கு அப் பால் சென்ற சுத்த மன அருள் உணர்வாம் துரிய நிலை என்பர். அங்குதான் இறையும் தானும் இரண்டற உள்ள பொதுநிலை அனுபவம் ஏற்படுவதாம். இப்படியிருக்கும் கடவுளைத் தனித்து எடுத்துக்கூற எப்படி முடியும்? முடியாது. பிரிவற்றிலங்கும் ஒன்றை, பிரிவுற்றிலங்கும் ஒன்றாகப் பாவிப்பதும், கற்பனை செய்து கூற முயல்வதும் பொருந்தாது.

அருட்பெருஞ்ஜோதிப் பொதுவே ஆண்டவர் உண்மையும் நமது உண்மையுமாக இருக்கின்றது. இவ்வியற்கை யுண்மை இறைநிலை ஒன்றே பொதுவில் இருந்துகொண்டிருக்க, இதனைச் சூழ அவ்வுண்மையை விளக்கம் செய்ய வந்த, புறநிலைத் தோற் றங்கள் பலப் பலவாய்த் திகழ்கின்றனவாம். இப் புறத்தோற் றக் காட்சியால்தான் உண்மைக்காட்சி மறைபட்டுக் கிடக்க, இதுவென்றும் அதுவென்றும் கண்டு கொண்டுள்ளோம். இத் தோற்றங்கள் நிலையாது ஒழிந்துபோகின்றனவாம். இந்த இடத்தில்

''இதுவென்ற தெல்லாம்பொய் என்றான் எனக்கே
பொதுவன்றித் தங்குமிடம் போச்சு-அதுநான் காண்
என்றான் அதன்பேர் இரவைப் பகலாக்கும்
ஒன்றோ பரமசுக மோ.''

— ஒழிவிலொடுக்கம்

இதனால் பொதுநிலை ஒன்றே மெய்யாக இருக்கின்றது. அது, இது, எனச் சுட்டிக்காட்டக் கூடாததாயிருக்கின்றது. அது

பொதுவில் விளங்கும் ஒன்றாய், இரவைப் பகலாக்கும் (அருட் பெருஞ்) ஜோதியாய், பரம சுகம் என்னும் பேரின்ப இயல்பின தாய் உள்ளதாம். ஆகவேதான், அருட்பெருஞ்ஜோதியைப் பற்றி அப்படி இப்படி என்று விளக்கிக் கூறிவிட்டதால் மட்டும் மெய்யாக உணர்ந்து கொள்ளக் கூடுகின்றதில்லை. அந்த அருள் அனுபவ நிலையமாகிய பொதுவிலிருந்து காணும் சமயம், அருட்பெருஞ்ஜோதியும் நாமுமாய்ப் பிரிவற இருக்கும் ஒன்றே, எங்குமுள்ள எவருமாய், எப்பொருளுமாய் இருக்கும் உண்மை அறியப்படும். அப்படி ஒன்றான தாமே யாவுமாய் இருப்பதால் பிரித்தறிய அயற்காட்சி ஏதுமில்லாது போகின்றதாம். இந்தப் பொது உணர்வு வந்தால்தான் இறையருட் பேரின்ப வாழ்வு பெற முடியும்.

## 62. அளவினில் அளவாதது

**123. உளவினில் அறிந்தால் ஒழியமற் றளக்கின்**
**124. அளவினில் அளவா அருட்பெருஞ் ஜோதி**

**(உ-வி)** அருட்பெருங்ஜோதியை எவ்வகையிலும் அளந்து கூறிவிட முடியாதாம். உலகிலுள்ள எப்பொருளைப் பற்றியும் அதனத ன் இயல்புக்கொத்த ஏதோ ஓர் அளவையால் அளந் தும், க ருதியும் கூறிவிடக்கூடும். உலகிலுள்ள பொருளேயல் லாது, வான்வெளியில் பிரகாசித்துக் கொண்டுள்ள பெருஞ் ஜோதியான (ஆனால், மிகச் சிறியனவாய்த் தோற்றுகின்ற) விண்மீன்களையும்கூட அளந்துவிட முடிகின்றதாம். மற்றும் உள்ள பலவாகிய பொருள்களை வேறு வேறான, எண்ணல், எடுத்தல், முகத்தல், நீட்டல் முதலிய அளவைகளாலும், ஒலி, ஒளி, சுவை, ஊறு, மணம் முதலிய புலனுணர் அளவைகளாலும், அன்றியும், அனுமானம்,ஆப்தம்,ஐதிகம்,பிரத்தியட்சம் முதலிய அளவைகளாலும் அளப்பரியது நம் அருட்பெருஞ்ஜோதி.

மேலும், அளப்பது என்பது பொதுவாக ஒன்றன் தோற் றத்தை, வரலாற்றை, இயல்பை விளக்கிக் கூறுவது என்றும் கொள்ளப்படும். வருணனை விளக்கமும் அளப்பேயாம். இவற் றிற்கெல்லாம் உட்படாதது நம் அருட்பெருஞ்ஜோதி. ஒன்றைப் பற்றி உண்மை விளக்க ஞானமே அதன் அளவுஎன்னலாம். அருட்பெருஞ்ஜோதியின் உண்மை விளக்கத்தை எப்படி அறிந்து

கொள்ளுவது? அதனை அளவால் அளக்க முடியாததால், அதன் அருளர்ல்தான் அளக்கவேண்டியிருக்கின்றதாம். அதனையே ஈண்டு உளவால் அறிதல் என்று கூறப்பட்டுள்ளது. உளவு என்றால் என்ன? உண்மைத் தன்மையே உளவு என்பதற்குப் பொருளாம். உடனிருந்து உணர்தல், பிறர் காணாவண்ணம் ஒன்றிருந்து அறிதல் உளவாக வழங்கப்படுகின்றது. நம் அருட் பெரும்பதியை உளவினால் அறிவது என்பது, அவரது அருள் அல்லது தயவினால் உள்ளொன்றியிருந்து உணர உணரத்தான் அக்கடவுளை அனுபவத்தில் அறிந்து அடையப் பெறுவதாயுள்ள தாம்.

அருட்பெருஞ்ஜோதிக்கடவுள் எல்லோருக்கும் உரிய ஒன்றான பரம்பொருளாய் இருக்கின்றார். அவரை அடைவதற் கான வழி துறையும் ஒன்றேயான அருளன்றி வேறு இல்லை யாம். அருளைக்கொண்டே அருட்பெருஞ்ஜோதியை அடைய வேண்டியிருக்கின்றது. அந்த அருளே நல்ல ஒரு ஒற்றாக, உள வாகக் கிடைக்கப்பெற்றுள்ளேயாம். மற்றபடி உலகறிந்த நெறி முறைகள் எல்லாம், கடவுள் உண்மையைக் கண்டடைய உதவாத அளவைகளாக இருக்கின்றனவாம். உலகில் இதுகாறும் எத்தனை பெரியோர்கள், தத்தம் அருமறை யாகமங்களாலும் யோக ஞான சாத்திரங்களாலும் சக்தி சித்தி அனுபவங்களா லும் கடவுளர் உண்மையைக் காண முயன்று, அவர்களின் அள வைகளும் அனுபவங்களும் குறைவுடையனவாய்ப் பயன்படாதன வாய் உணர்ந்து உணர்ந்து, அவைகளும் அவர்களும் தேய்ந்து மறைந்து போனதே கண்கூடு. ஆகவே அவ்வளவைகளாற் காண்பதை விட்டு, நிறையருள் என்னும் உளவினாற் காண முற் படவேண்டியது நம் கடமையாகும். இதுதான் இன்று இந்த அருட்பெருஞ்ஜோதி அகவல் மூலமாகக் கிடைக்கப்பெற்றுள்ள அனுபவசாத்திய சுத்த சன்மார்க்க முறையாகும். உலகெலாம் ஏற்றுப் பயன்பெறுவதாக.

## 63. இறவா வரம் அளித்தது

**125. என்னையும் பணிகொண் டிறவா வரமளித்**
**126. தன்னையிலுவந்த அருட்பெருஞ்ஜோதி**

(உ-வி) நல்ல ஒரு தாய் தான் பெற்ற சேய் இடத்து அன்பு கொண்டிருப்பது இயற்கை. அந்த அன்பினால், தான் கரு உயிர்க்குமுன் பட்ட துன்பமெல்லாம் சிறிது நேரத்தில் மறந்து, இன்பம் அடைகின்றாள். அம் மகவினிடத்தில் காணும் புறப் பொலிவும் தோற்றமும், செயலும் கண்டு கண்டு களிக்கின்றாள் அந்தத் தாய். பின்னர் தன் புதல்வன் பெரியவனாகிப் பலராலும் புகழப்பட்டு விளங்கும்போது, பெருமகிழ்வடைகின்றவள் அவ் அன்னையே ஆவாள். இதுவெல்லாம் உலகில் யாவரும் அறிந் ததே. இதுபோல் கடவுள் தானே யாவர்க்கும் அருள் அன்னை யாகக் கொள்ளப்படலின் அவரது அன்பும் இன்பமும் எவ்வளவு மேலானதாக இருக்கும் என்று கற்பனை செய்து பார்க்கின்றனர் உளப்பண்பாடெய்திய மக்கள். அன்னை அன்பினும் கோடி கோடிப் பங்கு அதிகமானது கடவுள் அன்பு. ஆதலின், அதன் விளைவாம் இன்பம் மிகமிகப் பெரியதாம், மதித்தற்கரியதாம்.

உண்மையில் கடவுள் நித்தியானந்த நிறைபரம்பொருளாய் உள்ளவர் என்பது மெய்ஞ்ஞானியர் அனுபவம். அப்படியுள்ள ஆனந்தபூரணர், இந்த மக்கள் மூலம் மேலான இன்பத்தை அடை யக்கூடும் எனக் கருதுவது கற்பனையே. ஆனால் அவர் தானே ஓர் அன்னையில் தன் இயல்பான ஏகதேச விளக்கத்தை வெளிப் படுத்தி, அன்பும் இன்பமும் கொள்ளச் செய்கின்றார். ஆகையால், அவ் அன்னையின் இன்பமும் அக மிருக்கும் ஆண்டவர் இன்பத் தின் கூறேயாம். அது புலன் வாயில் ஏற்படுகின்ற அற்ப இன்ப மாக இருந்து மறைவதாம். அக இறை இன்பமோ, புறநிலை கடந்து அருள்மயமாகி நின்று அனுபவிக்க இருக்கின்றதாம். தன்பெருமை தானறியா அன்னை என விளங்கிய கடவுள், அவ் அன்னையில் உவந்தவராய் இருக்கின்றார். புறத்தில் காரியப்பட்ட அன்னை அன்பும் இன்பமும் காலத்தே மறைந்து போம். ஆனால் அவளில், நித்தியமாய் இருந்த, இருக்கும் ஆண்டவரின் அன்பும் இன்பமும் என்றும் அழிவதில்லை.

இப்பொழுது நமது அகம் வளர் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர்தாமே நமக்கு,அம்மையாய் அப்பனாய்க் கூடி, இந்த நம் அக வடிவத்தைக் கண்டுகொள்ளவும், செய்துவிட்டிருக்கின்றார். தயாவொழுக்கத்தோடு கூடிய சத் விசாரத்தாலே அருட்பெருஞ் ஜோதி கடவுளைக் கண்டு கலந்து நிற்கின்றோம். இதுவே, ஆண்டவர் நம்மை ஆட்கொண்டிருக்கும் இயல்பாகும்.

நாமென்றும் அவரென்றும் பிரித்தறிதற்கில்லா ஒரு வடிவாம் அருள் ஒளி உருவாய் உண்ணின்று ஒளிர்கின்றோம். இந்த அத்து விதமான நம்நிலை இயற்கையான ஒன்றே; இதற்கு இறப்பு மில்லை; பிறப்புமில்லை. ஆனால், இந்த இறைஇயல் அனுபவம் கெடாது நிலைத்து விளங்க வேண்டின், இப்பொழுதுள்ள பிறப் புருவம் அழியாது இருக்க வேண்டும். அவ் அழியாமை பெறவே அந்த அகநிலை நின்று தயவுடன் அனக வாழ்வு மேற் கொள்ளவேண்டும். இதற்கே நம்மை ஆட்கொண்ட ஆண்டவர், அனக அருட்பணிக்கே பணிக்கின்றார். இப்பணியே நமக்கு அழியா வரம் ஆகிவிடுகின்றதாம். இதனையே நம் வள்ளல் ''என்னையும் பணிகொண்டிறவா வரமளித்தன்னையில் உவந்த அருட்பெருஞ்ஜோதி'' என்றுள்ளார்.

இயற்கை இன்ப நிறைவாகிய ஆண்டவர் தமது அந்த இன்பத்தை, நிறைமனிதனில் தான் அனுபவத்தில் கொண் டிலங்கச் செய்து அவனாய் விளங்குகின்றார். இந்த நிறை மனிதனே அருட்பெருஞ்ஜோதியாய் அழியாவரம் பெற்று வாழ்வது உண்மையாகும். இதுகாறும் அந்த அருட்பெருஞ் ஜோதி, நம் உடன் ஒன்றியிருந்து வந்தது உண்மைதான் எனி னும், இப்பொழுது நமக்கு அழியா வாழ்வு ஏற்பட்டு விளங்கும் காரணத்தால்தான், அந்த அருட்பெருஞ்ஜோதி இறைக்கு நிறை இன்ப வாழ்வு வெளிப்பட்டதாக அறிகின்றோம். தன்னை இறவாநிலையில் வாழவைத்துள்ள அருட்பெருஞ்ஜோதியே, ஒரு ஒப்பற்ற அருள் அன்னை போல் நிறைஇன்பில் நிலவுகின்றதாய் உணர்த்துகின்றார் நமது அடிகளார்.

## 64. உறவளித்த அருட்பெருஞ்ஜோதி

*127.* ஒதியோ தாமல் உறவெனக் களித்த

*128.* ஆதியீ றில்லா அருட்பெருஞ்ஜோதி

*(உ-வி)* உறவு என்ற சொல், உறுதல் அடைதல், என்ற தொழிற் பெயராகும். சுற்றம், நட்பு, பொருத்தம் என்ற பொருள் உலக வழக்கில் காணப்படுகின்றன. இங்கு நாம் கடவுட்சம்பந்தத் தைக் கொண்டு பேரின்பில் வாழ வந்துள்ளோம். ஆதலின் நமக்கு அவருடைய உறவுதான் இன்றியமையாததாய் இருக்கின்றதாம்.

அவரே நமக்கு எல்லா உறவுமாய் இருப்பதோடு, அருளின்ப வாழ்வுக்குச் சூழ வந்து வந்து உதவிக்கொண்டேயிருக்கின்றார்.

நமது அருட்பெருஞ்ஜோதி இறைவர், என்றென்றும் இருக் கின்றவர். அவருக்குத் தொடக்கமும் முடிவும் இல்லை. ஆதி யீறில்லா அருட்பெருஞ்ஜோதியை நமது உண்மையான உற வாகப் பெற்றுள்ளோம். ஆனாலும், இவ்வளவு காலமாக இந்த இறை உறவு நமக்குப் புரியாமல், புரிந்துகொள்ள முடியாமல் இருந்துள்ளது. ஏனெனில் நமக்கும் கடவுளுக்கும் உள்ள உண்மைத் தொடர்பு, புலன் அறிவாலும், மனோ அறிவாலும், அறியக்கூடாததாய், அம்மனம் ஒடுங்கி, மோனநிலை நின்று உள் நோக்கிய போதுதான் அக்கடவுள், எதனாலும் தீண்டறிய அக வெளியில் திகழ்வதாய் உணரப்பெற்றதாம். அப்படி உணரப் பெற்ற பதியை யுறுவது அடையப்பெறுவது எப்படி என்று தெரியாமல்தான், வேண்டியும், அழுதும் தொழுதும், உபாசித்தும், தவங்கிடந்தும், முடிவில் பூரணப் புகல் அடைந்து, இரண்டறக் கலந்து ஒழிய நேர்ந்ததாம். இம்முறைகளால் தான் ஓதியுணர்ந்து, உறவெல்லாம் கூறித் துதித்துத் துதித்து மனிதன் அக் கடவுளில் ஒன்றி மறைந்துபோனதாகும். உறவு கொண்டாடிப் பெற்றது என்ன? மறைவுற்றதே!

இப்போது நம் பதி அருட்பெருஞ்ஜோதியாய் வெளிப் பட்டுத் தானே யாவுமாய் (உயிராய், பொருளாய், மனிதனாய்) உள்ளதை, மெய்யருள் அறிவால் உணர்ந்து, அதுவாகவே (புறத்திலிருந்து சென்று அடையாது இயல்பாகவே) விளங்கு கின்றோம். இந்நிலையே ஓதாதுணர்ந்து உறவுகொண்டு ஒழியாது திகழும் முறையாகும். இதுதான் நமக்கும் கடவுளுக்கும் இயல் பாகவே என்றும் விளங்கும் உறவுமுறையாகும். நமது கடவுளியல் உண்மையை அகமிருந்து அருளாலே ஓதாதே உணர்ந்துகொண்டு, அவ்வகநிலை பெயராது அனக அருள் வாழ்வு நடத்துவதே வள்ளல் வழங்கியுள்ள சுத்தசன்மார்க்கப் புது நெறியாம்.

## 65. தோற்றா அடிமுடி

*129.* படியடி வான்முடி பற்றினும் தோற்றா
*130.* அடிமுடி யெனுமோர் அருட்பெருஞ்ஜோதி

**(உ-வி)**அளப்பரிய அகண்டாகாரப் பெருவெளி முற்றும் நிரம்பியுள்ள கடவுளுக்குத் திருவடி எங்கே? திருமுடி எங்கே? எத்திசையில் எவ்வளவு காலம் தேடிச்சென்றாலும் கடவுளர் அடி முடி காண முடியாது. அவர் அனாதியானவர், அகண்டமானவர். ஆதலின், காலத்திற்கும், இடத்திற்கும் கட்டுப்படாதவர். மனிதன் இந்நிலவுலகிலிருந்து விரிந்து விளங்கும் வான்வெளியைப் பார்க்கின்றான். அவனுக்கு இம்மண்ணுலகம் அடியாகவும், விண் வெளி முடியாகவும் தோற்றுகின்றன. இவ்வுலகத்திலிருந்து மட்டுமல்ல, நிலா அல்லது பிற கோள்கள், விண் மீன்கள் ஆகிய எவ்விடத்திலிருந்து நோக்கினும்கூட இருப்பிடம் அடியாகவும், மேல் வானிடம் முடியாகவுமே தோற்றும். இதுபோல் வான வெளியில் மேலே மேலே செல்லச்செல்ல, அதற்கு மேலே முடி வற்ற வானம் தோற்றிக் கொண்டேதான் இருக்கும்! ஆகவே கடவுளின் அல்லது அண்டவெளியின் அடிநிலையிது, முடிநிலையிது என்று கண்டுரைக்க முடியாதாம்.

மேற்படி ஆண்டவரின் அடிமுடிநிலையைக் கண்டு கொள்ள முடியாது என்ற கருத்தையே, திருவடிகள் பாதாளம் கடந்து அறியவொண்ணாதிருப்பதாகவும், திருமுடி விண்வெளி கடந்து மேலிருப்பதாயும் கூறினர் முன்னோர். திருமால் வராகமாய் நிலத்தைக் குடைந்து கீழேகீழே சென்றும் காணாது மீண்ட தாகவும், பிரமன் அன்னப்பறவையாய், வான்வெளியிற் பறந்து பறந்து அலுத்து முடி காணமுடியாது திரும்பினதாகவும் கற்பனை செய்துள்ளனர். இவற்றால், அக்கடவுளர் திருவடியும் முடியும், மனிதராலும் தேவராலும் புறமுயற்சி எவ்வளவு செய்தும் காண முடியாது என்பது குறிப்பாம்.

இதுகாறும் காண்பரிதாய் இருந்த கடவுளர் அடிமுடி, இப் பொழுது தனிப்பெருங் கருணையோடு அருட்பெருஞ்ஜோதியாய் வெளியாகியுள்ளதாம். இந்த அருட்பெருஞ்ஜோதிதான் அந்தக் கடவுளுக்கு அடியும் முடியும் ஆகும். "அடிமுடி எனும் ஓர் அருட்பெருஞ்ஜோதி" என்ற இந்த அகவல் அடியில், ஆண்ட வரின் அடிமுடி உண்மையை விளக்கித் தந்து விட்டார் நம் அருட் பிரகாச அடிகளார். எங்கும் பரிபூரணமாய் நிரம்பியுள்ள கடவுள், இந்த அருள்விளக்க மனிதனில், ஆன்மசிற்றணுவில் வெளியாகி அருளனுபவத்தில் பூரணமாகவே திகழ்கின்றதாம். ஆகையால் அகமுற்று, அருள் உணர்வு பெற்று நிற்கும் மனிதன், அக்கடவுள்

நிலையில் இருக்கின்றவனாகவே அறிகின்றான். அப்போது அந்த அருள் உணர்வே, ஆண்டவரின் ஒரு திருவடியாகவும், சூழ உள்ள அகண்ட பெருஞ்ஜோதியே மற்றொரு திருவடியாகவும் காண் கின்றான். இவ்வுண்மையே அருட்பிரகாசமாலையில் முதற்கண் வழங்கப்பட்டுள்ளது. அது, ''உலகமெல்லாம் உதிக்கின்ற ஒளிநிலை, மெய்யின்பம் உறுகின்ற வெளிநிலை என்று உபயநிலை ஆகி இலக்கியநின் சேவடிகள்'' என்றதால் விளங்கும்.

மேற்படி உபயபதநிலை விளக்கம், சிற்றம்பலத்தில் அருள் உணர்வுடன் இருந்து அறியப்படுவதாம். இத்திருவடி ஞானம் மட்டும் மனிதனுக்கு நிலையான பேரின்பவாழ்வு வழங்கிவிடாது. மனிதனுக்கு கால் கால்பங்குதான்; மேலுள்ள உடலும் தலையும் சேர்ந்தால்தான் முழுமைபெற்றவனாவான். கடவுளரின் முடிநிலை என்பது முழுமையான சச்சிதானந்த நிறைவண்ணமே ஆகும். இந் நிலையனுபவம் சிற்சபையினின்றே ஏற்றுத் திகழ்பவன், முத்தேக சித்தி கொண்டு மூவா இன்பில் நிலவும் சுத்த சன் மார்க்கி ஆவான். ஆகவே நம் பதியின் திருவடியும் திருமுடியும் நமது அம்பலத்தில் அனுபவப்படுவனவே எனத் தெளியலாம். சைவ தெய்வக் கற்பனையில், சிவனது தாமரைத் திருவடியும், நிலவும், கங்கையும், பாம்பும் விளங்கும் திருமுடியும் மதாதீதத் தில், நம் அருட்பெருஞ்ஜோதியாய்த் திகழ்கின்றதாம். ''அடியும் முடியும் உனக்குள்ளே காண்'' என்பர்.

தேவராலும், பிற யாவராலும் எக்காலத்தும் கண்டுகொள்ள முடியாத கடவுளர் அடிமுடியை இந்தச் சிறுமாமனிதன் கண்டு கொண்டதோடு, அடையப்பெற்று அழியா வாழ்வில் கழியா இன்பில் விளங்கவும் முடிகின்றது என்னில், என்ன வியப்பு! இது ஒன்றும் வியப்பே யில்லை. இது இயல்பே என்பது உண்மை. எவ்வாறெனில், அருட்பெருஞ்ஜோதிக் கடவுள், உவமையில்லாராய், எங்கும் பரிபூரணராய் இருப்பதால், அவரையன்றி, வேற்று தேவரோ, மனிதரோ யாருமில்லை. மக்கள், தேவர், நரகர் பலராகத் தோற்றும் நிலை, நிலையற்ற புறத்தோற்றங்களேயாம். ஆனால், புறந்தோற்றாத அருட்பெருஞ் ஜோதி ஒன்றே, புறந்தோன்றும் யாவுமாய் விளங்கி நிற்கின்ற தாகும். இந்த அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் உண்மை மனித வடிவில் வெளியாகி நிலை கொள்ளுகின்றபோது, இதுவரை கடவுள் அருட்பெருஞ்ஜோதியாய் அகநிலையில் இருந்து வந்தார்

என்றும், உலக வாழ்வில் வெளிப்படாதிருந்தார் என்றும், இப் பொழுதே அகமிருந்து அனகமாய் மனித வடிவில் அழிவின்றி நிலைத்து வாழ வந்துவிட்டுள்ளார் என்றும் அறிகின்றோம். இந்த சுத்த நெறியில்தான் மனிதன் அழியா இன்பில் வாழ வந் துள்ளது உண்மை! உண்மை!

## 66. அவனுக்கவனாம் அருட்பெருஞ்ஜோதி

131. பவனத்தி னண்டப் பரப்பினெங் கெங்கும்
132. அவனுக் கவனாம் அருட்பெருஞ்ஜோதி

**(உ-வி)** உண்மை கண்டு உயிரின்பமடைந்து, அழியாது விளங்கும் வாழ்வுபெற ஆணைசெய்யப்பட்டுள்ளவன் மனிதன். இதனால் இம்மனிதப் பிறப்பின் உயர் சிறப்பு நன்கு விளங்கு வதாம். மற்ற மற்ற காரணங்களால் உண்டாகும் இம்மனிதப் பிறப் பின் சிறப்பெல்லாம் மிக அற்ப மானதாய்க் கண்டு கழிக்கப்படும். மனிதனே காண்பரிய கடவுளைக்கண்டு, அதுவேதான் என்பதை யும் உணர்ந்து, தேகபோகத்தில் பற்று கொள்ளாது, கடவுள் அனுபவத்தோடு அருள் வாழ்வு பெற வேண்டியவனாய் இருக் கின்றான்.

மனிதனுக்கு இறை இன்ப வாழ்வு ஏற்படவேண்டியது ஆண்டவரின் திருவுள்ளம். அப்படி வாழறகான பக்குவ மனித தேகம், தத்துவ நிறைவுடன் திகழ இந்த மண்ணுலகம் பொருத்த மாய்த் தோற்றுவிக்கப்பட்டுள்ளது இந்த உலகில்தான், ஐம்பூத இயலும், உயிரின் வாழ்வுக்கான சூழ்நிலையும், அறிவு விளக்கத்திற்கான அகப்புறக் கருவிகளின் வளர்ச்சியும், அன்பு உணர்வு ஏற்பட்டு தயவுச்செயல் புரிந்து இறை தயவால், நிறை நிலை பெறக்கூடியதாயும், இருக்கின்றதாம். பிற இடங்களில், பிற சூழ்நிலைகளில் மனிதனுக்கு நிறை இன்ப வாழ்வு ஏற் படாது. கடவுளே உண்மை மனிதனாய், ஆன்ம சிற்றணுவில் அணுத்துவமாய் இருந்துகொண்டு, அகண்டவெளி நிறைவான பெருவடிவாய், மாமகத்தாய்த் திகழ்கின்றார். இந்த மனிதனின் இறை இயல் உண்மை, ஆன்ம அணுவில் அருவாகியும், புறத்தே ஜோதிநிறை உருவாகியும் இருந்து, இந்த ஆன்மாவுக்கும் உடலுக்கும் இடை விளங்கும் உயிர் உணர்விலே அருள்மய அருவுருவாய்த் தோற்றி அனுபவப்படுவதாம். இந்நிலையில்

அந்த அருட்பெருங்ஜோதி இறைவனே இந்த உயிர் அனுபவங் கொண்ட மனிதனாய் விளங்குதல் உண்மையாம். இவ்வுயிர் வாழ்வுக்கென்றே உயிர் வளி (பிராண வாயு) பக்குவமாய்ச் சூழ்ந்திலங்கும் இந்நிலவுலகம் அமைக்கப்பட்டுள்ளதாம். இந்த அண்டப் பரப்பின் எங்கெங்கும் இவ்வுயிர்க் காற்றாகிய பவனம் நிரப்பப்பெற்றுள்ளதாம். இவ்வளவு பொருத்தமான இந்த உலகில் தோற்றுவிக்கப்பட்டுள்ள இம்மனிதனில்தான், அருட் பெருஞ்ஜோதி இறை அக அனுபவத்தில் வெளிப்பட்டு, தான் என்றும், அவன் என்றும் பிரிவற்ற ஒன்றாய்த் திகழ்கின்றதாம்.

நம் நிலவுலகமே இறையனுபவங் கொண்டு அழியாது அருளின்பங்கொண்டு வாழற்குரியதாய் இருக்கின்றது. இம் மாதிரியான நித்தியானந்த நிறைவுக்கு இவ்வுலகம் அல்லாது சந்திர மண்டலமோ, பிற கோள் மண்டலங்களோ அமைக்கப் படவில்லை என்று அறிந்து கொள்ளலாம். அந்தந்த அண்ட கோளங்களைச் சூழப் பவனத்தின் மண்டலம் உயிர் வாழ்வுக்கு உகந்ததாய் இல்லை என்றும், அதனால் அவ்வண்டங்களின் பரப்பில் மனிதனுக்கு, உயிரியல் வாழ்வு ஏற்றதாய் இல்லை என்றும் தெளிவாம். இன்றைய விஞ்ஞான அறிவியலார் வான் வெளியில், உடல் பொருள் ஆவியைப் பணயமாக வைத்து ஆய்வு நடத்திக்கொண்டிருக்கின்றனர். ஜீவ தயவோடுகூடிய சுத்த சத் விசாரம் செய்து, அருட்பெருஞ்ஜோதியைக் கண்டுகொண்டால், அறிவறியா உண்மை எல்லாம் நன்கு கண்டு தெளியவும், உலகில் பொதுநலப் பெருவாழ்வைத் தழைக்கச்செய்யவும் கூடும்.

## 67. அவளுக்கு அவளான உண்மை

*133.* திவளுற்ற வண்டத் திரளினெங் கெங்கும்
*134.* அவளுக் கவளாம் அருட்பெருஞ்ஜோதி

*(உ-வி)* இந்த நிலவுலகம் ஞாயிற்றுஜோதியினின்று பிரிந்து, பேர் அழல் வெள்ளமாய்ப் பாய்ந்து, திரண்டு, உருண்டு, பக்குவப்பட்டு சுழன்று விளங்கிக்கொண்டுள்ளதாம். உண்மையில் ஞாயிறேகூட நிறைஒளி நிலையான நிபுலத்தின் (NEBULA) கண்ணின்றே தோன்றியுள்ளதாம். இவ்வுண்மை எல்லாம் சுட்டும்படி அமைந்த சொற்றொடர், ''திவள் உற்ற அண்டத்

திரள்'' ஆக இருக்கின்றது. திவம், என்பது வானம், ஒளி, விளக்கம் என்ற பொருள் கொண்டது. திவாகரன் என்பது சூரியனைக் குறிப்பது. இதனால், திவளுற்ற அண்டத்திரள் என் பதற்கு அகண்டாண்ட வெளியில் பேரொளியால் உருவாகித் திகழும் பலவாகிய அண்டகோளங்கள் என்றாம். ''உலகமெலாம் உதிக்கின்ற ஒளிநிலை'' என அருட் பிரகாசமாலையில் குறிக்கப் பட்டுள்ளது. எனவே உலகமெல்லாம் உருவாகித் திகழ உதவி யுள்ளது நம் அருட்பெருஞ்ஜோதியே என்று அறிந்துகொள்ள லாம்.

பலவாகிய ஒளிசெய்யுலகில் பிறிது எதிலும் இல்லாத வசதி இந்தப் பூவுலகில்தான் அமைந்திருக்கிறதுபோலும்! அவ் வொளியே இவ்வுலகில், எப்பொருள் வடிவாயும், எவ்வுயிரின் உருவமாயும் தோற்றி விளங்குகின்றதாம். அப்படி உருவாகிய உயிரின் வடிவங்களிலே சிறந்தது இம்மனிதப்பிறப்பு உடலேயாம். இந்த உடல், பெண் சத்தாம் சுரோணிதத்தின் விளைவாம். இதற்குள்ளீடாய் இருந்து, உயிருக்குயிராய்த் திகழும் நித்திய ஆன்ம ஒளி ஆணின் சத்தம்சமாயிருக்கின்றதாம். உள்ளிருந் தொளிரும் அருட்பெருஞ்ஜோதி யுண்மையே, அகத்தே அருள் ஞானவிளக்கமாயும், புறத்தே ஜோதிசெய் யுடலாயும் இருக் கின்றதாம். இறைவனின் உண்மையை நாம் அருட்ஜோதியாக உணர்த்தப்பட்டுள்ளோம். இந்த அருட்ஜோதி என்பது, அருளும் ஜோதியுமான இரண்டல்ல, பிரிவற்ற ஒன்றேயாம். எதுபோல் எனில், சர்க்கரையும் அதன் சுவையும் போன்றாம். சர்க்கரையைவிட்டு அதன் சுவையைப் பிரிக்கமுடியாது. சுவைஇல் லாமல் சர்க்கரைமட்டும் தனித்திருக்கமுடியாது. இப்படித்தான் நம் அருட்ஜோதிக்கடவுளும். இக் கடவுள் உண்மையைத்தான் நாம் நம் அகத்தும் புறத்தும் ஆன்மாவாயும் தேகமாயும் கொண் டுள்ளோம். இந்த அருட்ஜோதி இறையனுபவத்துடன் விளங்க வேண்டுமானால், அகமும் புறமும் பிரிவற்ற ஒன்றாகவேண்டும். அப்படி ஆக, அக நின்று அருளோடு அனக நிறைவுற்று வாழ் வதே வழியாம். இது சுத்த சன்மார்க்க சாத்தியம்.

அருட்பெருஞ்ஜோதியே முன்னிரண்டு அடிகளில் அவனுக் கவனாய் இருக்கக் கண்டோம். இவ்விரண்டு அடிகளிலோ அந்த அருட்பெருஞ்ஜோதியே பெண்ணியல் கொண்ட உடல் வண்ண வடிவாய் இருத்தலின் அவளுக்கவளாய் இருப்பதாக மொழியப்

பட்டுள்ளதென அறிகின்றோம். அக ஆன்ம இயல் ஆண், புறத் தேக அம்சம் பெண். அகம் நித்தியம், புறம் மாற்றமும் மறைவும் கொண்டது. நித்திய வாழ்வுக்கு நித்தியமாகிய உள்ளொளி நிலை நின்று உடலின்பத்தில் பற்றில்லாது அன்பும் அருளும் பெருக வாழ்வது முறையாகும். இந்த உடற்பற்றாகிய பெண்ணாசையைத்தான் மறக்கவே வேண்டும் என்பது ஆண் பெண்ணாகிய இருபாலர்க்குமே ஆணை செய்யப்பட்டதாம். இந்த உண்மையைப் புரிந்துகொள்ளாமல்தான் ''மருவு பெண்ணாசை மறக்கவே வேண்டும்.'' என்ற அடியை மாற்றவும், தவிர்க்கவும் செய்கின்றனர் சில பாடகர்கள். இது முற்றும் அறியாமை. நமது அருட்ஜோதியே யாவுமாய் உள்ளவர் ஆதலின், அவனுக் கவனாயும், அவளுக்கவளாயும், பிற எதற்கும் அது அதுவாயும் இருக்கின்றது உண்மையாம்.

## 68. அதனுக்கு அதுவாம் விளக்கம்.

*135.* மதனுற்ற வண்ட வரைப்பினெங் கெங்கும்
*136.* அதனுக் கதுவாம் அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** முன் அருட்பெருஞ்ஜோதியின் விளக்கம், அவன், அவள், ஆகிய இரண்டு நிலைகளாய் நம் உயிர், உடல் இயல் வண்ணங்களாய்க் குறிக்கப்பட்டன. அடுத்து, இங்கு அவ் இறை அருள் ஒளியே இவ்வுலகிலுள்ள ஒவ்வொரு பொருள் வடிவாயும் ஆகி விளங்குவதாகக் கூறப்படுகின்றது.

உலகப்பொருள்கள், பலவும், திட, திரவ, வாயு, மின்காந்த ஆற்றல் இயல் உடையனவாய்க் காணப்படுகின்றன. இவற்றில் இவ்வண்டமாகிய நிலப்பரப்பில் எங்கெங்கும் காணப்படுவன மண்ணியற்பொருட்களும், நீரியற்பொருட்களுமேயாம். இதனால், கண்ணாற் காண்கின்ற முக்கியப் பொருள்களையே ஈண்டு எடுத்துரைக்கப்படுவதாய்க் கொள்ளலாம். மதன் உற்ற அண்டம் என்றால், கடினத்தன்மை, வலிமை, வனப்பு இயல்பு கொண்ட இப் பூமி கோளம் எனலாம். மதன் என்ற சொல் வலிமை அழகு என்ற பொருள் கொண்டதாம். திண்ணிய உலக மேற் பரப்பில் எத்தனை எத்தனை கைபுனைந்தியற்றாக் கவின்பெரும்பொருள்கள் காட்சியளிக்கின்றன. ஒவ்வொரு பொருளையும் ஆழ்ந்து

ஆய்ந்து நோக்கினால் அறியப்படுவது என்ன? அழகும ஆற்றலும் கொண்ட புறநிலைத் தோற்றத்திற்கு உள்ளீடாய் இருப்பது, அணுத்திரள்களின் அற்புத இணைப்பு அமைப்பேயாம். அந்த அற்புதத் தோற்ற அமைப்பைச் சிதைத்து விட்டால், கவின் தோற்றம் கலைந்து, அணுஅணுவாய்ச் சிதைந்து விளங்கக்கூடும். அகண்டவெளி நிறை ஒவ்வொரு அணுவிலும் இருப்பது, அணு சக்தி, மின்காந்த ஆற்றல் முதலியனவாக இன்றைய உலகம் அறிவியல் ஆய்வால் கண்டுள்ளது. இந்த ஆற்றல்களுக்கெல்லாம் அடிநிலையாய், தாயகமாய், முதற்பொருளாய் இருப்பது நம் அருட்பெருஞ்ஜோதியே என்பது நமது மெய்ஞ்ஞானமாகிய அருளறிவியல் கண்டுள்ளதாகும்.

ஒன்றான அருட்பெருஞ்ஜோதியேதான், தன்பொருட்சக்தி வெளியீட்டால் ஐம்பூத அணுக்களாய்த் தோன்றி, அணுத்திரள் பொருட்களாய் உருவாகி விளங்குகின்றதாம். முதற்ஜோதி அணுநிலையிலிருந்து ஐம்பூத அணுக்கள் வெளிப்பட்டிலங்குகின் றன. பிரபஞ்சப் பொருட்கள் யாவும் ஐம்பூத அணுக்களின் சேர்க்கையால் ஆகியுள்ளன. எனவே, பொருளுலகம், அணு நிலையில் இலயமாகியும் இருந்ததாக அறியப்படுவதாம். இக் கருத்துண்மை விளக்கவந்த சொற்களே, மகாலிங்கம், ஐம்பூத லிங்கம் என்பனவாம். இலயம்+கம்=இலிங்கம், லிங்கம் எனப் படுவது. இலயம் என்றால் ஒடுக்கநிலையாம். அகண்ட வெளி நிறை இறைஜோதி அணுநிலையே மகாலிங்கம். அதில் ஒடுங்கி யிருந்து வெளிப்பட்டு இலங்குவன பஞ்சபூத லிங்கம். இவற்றால் உருவாய ஒவ்வொரு பொருளும், அகமிருந்து விளங்கும் அருட் பெருஞ்ஜோதியின் விரிநிலையாகவே உள்ளதாம். இதுவே, அது அதுவாக விளங்கும் அருட்பெருஞ்ஜோதியாய்ப் போற்றப் படுகின்றது.

## 69. எப்பாலும், அப்பாலும் ஆயது

137. எப்பாலு மாய்வெளி யெல்லாம் கடந்துமேல்

138. அப்பாலு மாகிய அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** முன் அடிகளில், அவன், அவள், அது, என விளங்கு கின்றதெல்லாம், நம் அருட்பெருஞ்ஜோதியே என்று தெளிவு செய்யப்பட்டது. இந்த அருட்ஜோதியைத்தான் பால்

என்று கூறுவர். இனம், பாகுபாடு, இடம், தன்மை, ஊழ் முதலியனவும் பால் என்ற சொல்லால் சுட்டப்படுதல் உண்டு. இலக்கணம் தரும் இனவகைப்பால் ஐந்தாக உள்ளது. அவை: ஆண்பால், பெண்பால், ஒன்றன்பால், பலர்பால், பலவின்பால் என்ப. இப்பால், அப்பால் என்று இடத்தையும் காலத்தையும் காட்ட வழங்கப்படும். இவ்விரு சுட்டுநிலையோடு அகத்தை அல்லது அனுபவத்தால் காண்டலாகிய பின்னிலையைக் குறிக்க, உப்பால் அல்லது உப்பக்கம் என்றும் முன்னோர் உணர்த்தியுள்ளனர்.

இங்கு நமது பதி எப்பாலுமாய் விளங்குகின்றார் என்பதற்கு விளக்கம், எவ்வொளியாயும், அவ்வொளிநிறை அகண்டாண்ட பிண்டவெளியிடம் எல்லாமாயும், அவ்வொளியால் உருவாய எவ்வுயிர்ப்பொருளாயும், தோற்றங்களாயும், தத்துவங்களாயும் உள்ளதெனலாம். இவைகளுக்குமேல் இன்னும் அறியப்படாத யாவற்றிற்கும் ஆதாரகாரணமாய் இருப்பதும் நம் அருட்பெருஞ் ஜோதியே ஆம். இதுதான், எல்லாம் கடந்து மேல் அப்பாலுமாகிய அருட்பெருஞ்ஜோதி என ஓதப்பட்டுள்ளதாகும்.

அறிவுக்கு எட்டக்கூடியவரை, இப்பால், அப்பால் உப்பால் என்று சுட்டியுரைத்தல் கூடும். அந்த அறிவுக்கு விஷயமாகாத, அகத்திற்கு அகமாக உள்ள நிலையும், புறத்தே அகண்டமாய் அதீதமாய் விரிவுற்றிலங்கும் புறநிலையையும் அறியமுடியாதாம். அப்படி அறிவரிய நிலையை எப்படித் தெரிந்துகொள்ளுவது என்றால், அருள் நிறையுணர்வு பெற்று அதுதானே ஆகி நின்று உணர்கின்றபோதுதான், அந்த உணர்வுக்கே வெளியாவதாம். அந்த எப்பாலுமாய் நின்று அப்பாலுக்கப்பாலுமாய் நிரம்பியுள்ள அருட்பெருஞ்ஜோதியை இப்படித்தான் உணர்ந்து கொள்ளமுடியுமாம். இந்த அருட்பெருஞ்ஜோதிக்கும் முடிவில்லை; இதனையுணர்ந்து கொண்டிருக்கும் இவ்வருள் அனுபவ உணர்வு நிலைக்கும் முடிவேயில்லையாம். அருளால் இவ்வுண்மை கண்டு நின்று தான் ''எல்லாம் கடந்து மேல் அப்பாலுமாகிய அருட்பெருஞ்ஜோதி'' என்று ஓதுகின்றார் நம் பெருமானார்.

## 70. எல்லாமாகியும் அல்லதாம்

*139.* வல்லதா யெல்லா மாகியெல் லாமும்

*140.* அல்லதாய் விளங்கும் அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** நமது தனித்தலைமைப் பெரும்பதி ஆகிய அருட் பெருஞ்ஜோதி ஆண்டவரின் இயல் உண்மைநிலை விளக்கம் என்னே! என்னே! அவர் அல்லது அது (அருட்பெருஞ்ஜோதிக் கடவுள்) எல்லாம் வல்லவராயும், எல்லாம் ஆனவராயும், ஒன்றும் அல்லாதவராயும் உள்ளாராம். இங்கு மூன்று நிலையில் குறிப்பு தரப்பெற்றுள்ளது. ஒவ்வொன்றையும் ஆய்ந்து, விரிந்திலங்கக் காண்போம்.

எல்லாம் வல்லவர்: நம் இறை அருட்பெருஞ்ஜோதியை எல் லாம் வல்லவர் என்று உரைக்கின்றனர். சர்வவல்லமையுள்ளவர் என்றால், அவரால் ஆகாதது ஒன்றுமில்லை, எல்லாம் செயல்கூடும். இதனை ஒப்பற்ற இறைஆற்றல் தன்மை (Omnipotence) என்பர். இப்படி எல்லாம் வல்ல பேராற்றல் படைத்த இறைவரின் செய் கைதான் எங்கும் என்றும் நம்மைச் சூழ்ந்துகொண்டே யிருக் கின்றது. அந்தப் பெருஞ்செயலால்தான் இந்த அளப்பரும் பிரபஞ்சத்து அனைத்துக்காரியப்பாடுகளும் நிகழ்ந்துகொண்டுள் ளனவாம். இக் காரியப்பாட்டால், எப்பொருளும், எவ்வுயிரும், எவ்வாற்றலும், எத்தோற்றமும், எவ்விளைவும் ஆவதும் அழிவது மாய் இருக்கின்றனவாம். ஆனால், அந்த அருள் இறை உண்மை யைத்தான் உள்ளவாறு அறியமுடியாதிருக்கின்றதாம். இவ் வுலகில் காணப்படுகின்ற அல்லது அறியப்படுகின்ற எல்லாமும் அந்த அருட்பெருஞ்ஜோதியை அல்லாமல் இல்லை, எல்லாம் அதன் வெளியீடே. எனினும், தோற்றுகின்ற எதுவும் அதுவாய் இல்லை. இவ்வுலகில் எதனை அருட்பெருஞ்ஜோதி என்று சொல்வது? குறிப்பிட்ட எதனையும் அருட்பெருஞ்ஜோதியாகக் கூறிச் சுட்டிக் காட்டிட முடியாது. ஆகவேதான் அவரை, எல்லாம் ஆனவர் என்றும், அதே சமயம் ஒன்றும் அல்லாதவர் என்றும் கூறப்படுகின்றது.

அருட்ஜோதி எல்லாம் வல்லதுதான், எல்லார்க்கும் நல்லின் பமே என்றும் விளங்கச்செய்யும் ஆற்றல் கொண்டதுதான். அப்படியானால், ஏன் இந்த உலகில் கொடுஞ் செயல்களும், துன்பங்களுமே பெருகிக் கொண்டிருக்கின்றன? இவற்றையெல் லாம் ஏன் தடுக்கவோ, மாற்றவோ ஏற்படாமலே இருக்கச் செய் யவோ திருவருள் பாலிக்கின்றாரில்லை அந்தச் சர்வ வல்லமை படைத்த சர்வேஸ்வரர்! உண்மை இதுதான். அவர் சர்வ வல்லமையுடைய தயாபரர்தான். அவர் தமது உண்மையைத்

தான் வெளியிடப் பெருந்தயவோடு இந்த மகாபிரபஞ்சக்காரியப் பாட்டை மேற்கொண்டிருக்கின்றார். அந்த இறையருள் ஞானம் வெளிப்படும் இடம் மனிதனின் அக ஆன்மபீடமாயிருக்கின்றது. இங்குதான், எல்லாம்வல்ல அருள் ஒளி மிளிர்கின்றது. புறப் புல போக வாழ்வில் அறியாமையாம் இருளாலும், மருளாலும் தயவில்லாச் செயலால் இன்னலிலே உழன்று கொண்டிருக் கின்றான் மனிதன். அந்தப் புலனின்பத்தில் இச்சையொழித்து தயாவொருமை பூண்டு நல்வாழ்வு வாழத் தொடங்கினால், எங்கும் இன்பமே பெருகும். இவன் உடற்பற்று நீங்கி உள் ளொளிர் அருட்ஜோதி வண்ணமாய் இருந்து வாழவேண்டிய வனாய் இருக்க அதனையுணராது மருள்வாழ்வால் துன்பத்தைப் பிணித்துக்கொண்டிருப்பது அறியாமைதானே. கடவுள், கருணை யோடு அருட்ஜோதியுலகில் இவனை வாழ்விக்க எந்த வேளை யிலும் எதிர்பார்த்துத் தயாராகவேதான் இருக்கின்றார். ஆனால், இவனோ புலன் இன்பத்தை மிக விரும்பிப் புறத்தே யுழன்று கொண்டு, பிழைப்பதுவே வாழ்வென மயங்கிக்கிடக் கின்றான். இந்த மயக்கம் தெளியவும், அருள் ஒளியில் நாட்ட முண்டாகவும்தான் இவனுக்கு வன்மையான விதிச் சட்டமாகிய நியதிமுறை செய்திருக்கின்றார். அவ்விதிப்படி இயக்கிப் பக் குவப்படுத்தி நலம் காணச் செய்யும் செயலே உலகில் நடந்து கொண்டிருக்கின்றது. புலன் இன்ப அவாவொழிய அருளின்ப நாட்டமுண்டாக இந்த உலக இன்ப துன்பானுபவங்களிலிருந்து தேறுவதுதான் முறையாக இருக்கின்றது. அபக்குவத்தால் தயாவாழ்வு ஏற்காததால் மனிதன் தீமையில் குமைந்து கொண் டிருப்பது யார் குற்றம்? எவர் குற்றமுமில்லை! எல்லாம் வல்லா னின் அருட்பெருஞ்செயலேயாம். மனிதன் (மன் இதன்) நிலைத்த இன்ப வடிவினனாக அகத்திருந்து வாழவேண்டியவன், அறியா மையால் துன்பத்திலே பிழைத்துப் பிழைத்து மடிந்துகொண் டிருப்பது என்ன பரிதாபம்! அருட்பெருஞ்ஜோதி கொண்டு அனகவாழ்வு வாழ அழைக்கின்றார் அருட்பிரகாச வள்ளற் பெருமான்.

## 71. மெய்ப்பொருள் - அருட்பெருஞ்ஜோதி

*141.* எப்பொருள் மெய்ப்பொருள் என்பர் மெய்கண்டோர்
*142* அப்பொரு ளாகிய அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** பொருள்மயமானது இவ்வுலகு. அப்பொருள், மண், நீர், தீ, காற்று, வான் இயல்கொண்டு பலப்பலவாக விளங்குவதாம். இந்தப் பன்மைநிலைப் பொருள்களுக் கெல்லாம், முதலாய்த் தோற்றுவாயாய் உள்ளது. அகண்ட வெளிநிறை இறைநிலைப் பொருளேயாம். இவ் இறைப் பொருளே அருட் பெருஞ்ஜோதி. இதுவே மெய்ப்பொருளாம். இந்த அருட்பெருஞ் ஜோதியையே மெய்ப்பொருளாயுணர்ந்து போற்றிக்கொள்ளுவர் சுத்தசன்மார்க்கர். வேறு வேறாகக் கண்டு வழுத்துவர் மற்ற மற்ற நெறியாளர்கள். ஏன் அப்படி என்றால், நமது இறை பரம்பொருளாகிய அருட்பெருஞ்ஜோதி அகத்தும் புறத்தும், நிறையருளாகவும், பேரொளியாகவும் விளங்கக்கண்டு கொள்ளப் பட்டுள்ளதோடு, எங்கும் நீக்கமற (ஒவ்வொரு அணுவிடத்திலும்) இருந்து கொண்டு எப்பொருளாகவும், எவ்வுயிராகவும் தன் ஏக தேசவிளக்கத்தைக் காட்டியும் மறைத்தும் கொண்டிருப்பதாகக் காண்கின்றோம். ஆகையால் அந்த அருட்பெருஞ்ஜோதி ஒன்றே மெய்ப் பொருளாக, உண்மைப் பொருளாக உள்ளிருந்து விளங்க, புறத்தே பலவகைத் தோற்றம் கொண்டு திகழ்கின்றதாம். அகத்தே நாம் கண்டுள்ள அருட்பெருஞ்ஜோதியாம் மெய்ப் பொருள் தானே புறத்தெப் பொருளாயும், அருள் உணர்வாம் கண்ணாரக்கண்டு களித்திருக்கின்றோம்.

நிறையருட்பெருநிலை நின்று நோக்காத ஏனையோர், புற வண்ணங்களையே கண்டும், யூகித்தும், ஆய்ந்தும், கற்பனை செய்தும் பல்வேறு பொருள்களாகவே யாவையும் நினைக் கின்றனர். பக்குவவசத்தால் புறநிலைக் காட்சிகளில், இந்திரிய, கரண, ஜீவ, ஆன்ம எல்லைவரை சென்றும் தம் காட்சியனு பவத்தைப் பலவாகவே வெளியிடுகின்றனர். இவர்களின் கூற்று, மேற்படிக்குச் செல்லச் செல்லக் காட்சியனுபவம் சிறந்த தாகக் கொள்ளப்படுகின்றது. இவர்களின் முடிந்த மெய்ப்பொருள் அகத்திலங்கும் ஆன்மக்கடவுள் தானாம். அந்த அகமெய்ப் பொருளைத்தான், அவ் ஆன்ம ஞானிகள் ஒருமையிற்கண்டு கற்பனையால் விண்டனர். தனித்தனி ஒவ்வொரு ஞானியும் கற்பனை செய்து மெய்ப்பொருளைக் குறிக்க முயன்றதால், ஒன்றாகிய மெய்ப் பொருளுக்குப் பலவாகிய கற்பனைகள் மலிந்தன. பின்வந்தவர்கள், மெய்யறிவு விளக்கமும், கற்பனைத் திறமும் குன்றியவர்களாய் இருந்ததால், அவர்கள் கண்ட மெய்ப் பொருள் வேறு வேறாகவே கொள்ளப்பட்டனவாம். அப்படிப்

பலவாகக் குறிக்கப்பட்ட மெய்ப்பொருள், உண்மையில் ஒன்றாகத் தான் இருப்பதை இன்று நாம் அருணிலை நின்று காண்கின்றோம்.

உண்மை கண்டவர்கள் எதனை மெய்ப்பொருள் என்கின்றார்களோ, அது உண்மையில் நம் அருட்பெருஞ்ஜோதியாகவே இருக்கின்றது.

சொல்லுக்குப் பொருள், கல்வி கேள்விகளால் விளங்கும். ஆனால், இந்தப்பொருள் புறத்ததேயாம், உண்மைப் பொருளல்ல. புறப்பொருட்கள் எவைக்கும் உள்ளீடாயிருந்து அது அதுவாக விளங்கச் செய்து கொண்டிருக்கும் ஒன்றே மெய்ப்பொருளாகும். அதுவே உண்மைப்பொருள் ஆம். அறிவாராய்ச்சிக்கு வெளியாவன அனந்தவண்ணப்பொருட்களே. மெய்யருள் உணர்ச்சிக்கு அனுபவப்படுவதுதான் ஒன்றான மெய்ப்பொருள். இவ் ஒன்றாம் பரம்பொருளே சச்சிதானந்த வடிவமானது என்ப. எனவே, நமது அருட்பெருஞ்ஜோதியாம் மெய்ப்பொருள், ஆராய்ச்சியில் அனந்தமாயும், அருளாட்சியில் ஒன்றாயும் விளங்குகின்றது அனுபவமாம்.

## 72. அகிலாண்ட சராசரநிலை

*143.* தாங்ககி லாண்ட சராசர நிலைநின்
*144.* றாங்குற விளங்கும் அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** என்றுமுள்ள இறையருட் பெருஞ்ஜோதியின் பேர் ஆற்றல் என்னே! அனாதிகாலமாக, யாவற்றுக்கும் ஆதாரமாக எங்கும் இருந்து கொண்டிருப்பது நம் அருட்பெருஞ்ஜோதி. இவ் இயற்கையுண்மை ஒளியின் அருள்தன்மைதான் பிரபஞ்சக் காரியப்பாடாய், யாவுமாய்த் தோற்றி விளங்குகின்றதாம். முதலில் ஒவ்வொரு சிற்றணு நிலையிலிருந்து, பூத அணுத் திரள் பொருள்களாய், பௌதிக பிண்ட வடிவங்களாய்க் கூடிப் பெரிய பெரிய அண்டகோளங்களாய் விளங்கினவாம். அந்தப் பெருஞ்ஜோதி அண்டங்களிலிருந்து பூதாண்டங்களும், அவ் வண்டங்களில் பலவாகிய பொருள்களும், உயிரினங்களும் தோற்றியுள்ளன.

தோற்றியுள்ள அண்டகோளங்களிலே சிறந்து விளங்குவன நாம் வசித்துவருகின்ற பூமிபோன்ற நிலவுலகங்களேயாம்.

ஏனெனில், இதில்தான் இந்த மெய்யறிவின்பானு பவமுறும் மக்களினம் தோன்றிப் பண்பாடெய்திடும் காரணத் தாலாம். இங்கு வாழவந்த மனிதனில் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் உண்மை வெளியாகியுள்ளது. இவன் தன்னில் அருட்பெருஞ்ஜோதியைக் கண்டடைந்து சூழநோக்கி, எப்பொரு ளும், எவ்வுயிரும் அந்த அருட்ஜோதியால் தாங்கப்பெற்று விளங்குகின்றதை யுணர்கின்றான். உயிரினங்களில் இங்கு மங்கும் சஞ்சரித்துக்கொண்டிருப்பன, இயங்கிக்கொண்டிருப்பன எல்லாம் சரவுயிர்கள் எனப்படும். அப்படி இடம்பெயராது, நிலைநின்று வளர்ந்தோங்கும் தாவரம் முதலியன அசரவுயிர்கள் எனப்படும்.

நம் நிலவுலகில் மட்டும் எத்தனை எத்தனை சராசர உயிர்கள் இருக்கின்றன. இதுபோன்று எத்தனை கோடி நிலக் கோளங் களாகிய அண்டங்கள் உள்ளனவோ, அவைகளில் எல்லாம் எத்தனை எத்தனை கோடி சராசரங்கள் உள்ளனவோ யாரே அறிய வல்லார்! இவைகளில், தனித்தனி ஒவ்வொன்றின் அக நின்று தாங்கி ஆண்டருள்கின்ற அருட்பெரும்பதியின் பேரருள் ஆற்றல் என்னே! என்னே!!

நமது அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர், ஒன்றான தனித் தலைமைப் பெரும்பதியாய், ஒருவரேயாக, ஏகநாயகனென உள் ளவர். அவர்தானே எங்கும் பரிபூரணராய் இருந்து தனிக் கருணையாட்சி புரிந்து கொண்டிருத்தல் உண்மையே. ஆகையால் தான் நம் இறைவர் அணுஅணு தோறும், உயிருயிர் தோறும் இருந்துகொண்டு தனது ஏகதேச விளக்கத்தை அங்கங்கு சிறிது சிறிது காட்டிக்கொண்டிருக்கின்றார். இந்த உண்மைக்காட்சி யைத்தான் நமது வள்ளற்பெருமான் உண்ணின்றே கண்டு இப் படித் ''தாங்ககிலாண்ட சராசரநிலை நின்று ஆங்குற விளங்கும் அருட்பெருஞ் ஜோதி'' என்று போற்றுகின்றார்.

## 73. சத்தர்கள் தழைத்திட விளங்குவது

145. சத்தர்க ளெல்லாந் தழைத்திட அகம்புறத்
146. தத்திசை விளங்கும் அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** இந்தப் பிரபஞ்சம் பலவாகிய பொருள்களும், உயிர் களும், ஆற்றல்களும் கொண்டு விளங்குகின்றது. ஆற்றல் எல்லாம் பொருள்களின் வழியாய் அல்லது உயிர் உருவங்களின் மூலமாய் வெளியாகித் தோற்றுகின்றனவாம். இந்த ஆற்றலைத் தான் சத்தி அல்லது சக்தி என்கிறோம். எந்தச் சக்தியும் தனித்து, தன்னிச்சையாக விளங்காது. சக்தியின் தோற்றத் திற்கு அடிநிலைப் பொருள்,வடிவம்,இடம் தேவைப் படுகின்றன வாம். இவ் அடிநிலைதானே ''சத்து'' என்னும் இயற்கையுண்மை இறைபரம் பொருளாக இருக்கின்றதாகும். இந்தச் சத்தாகிய இறைநிலை நின்றே அவ் இறைவனின் அருட்பெருஞ்சக்தி வெளி யாகி, உலகுயிர்ப் பொருட்கள் யாவுமாய்த் திகழ்கின்றனவாம்.

எங்கும் நிறைந்த சத்துப் பொருளினின்று காரியப்பட்டுள்ள இவ் அகண்ட பிரபஞ்சத்து தனித்தனி ஒவ்வொரு உயிர் வடிவி லும், பொருள் வடிவிலும், பலப்பலவாகிய ஆற்றலை, சக்தியைக் காண்கின்றோம். இந்தத் தோற்ற வடிவங்கள் சக்திக்கு விளங்கிட மாக இருத்தல் கண்கூடு. இச்சக்திகள் விளங்கும் இடத்தைத்தான் சத்தர்கள் என்று கொள்ளப்படும். பொருள் வடிவம், உயிர் உருவம், தெய்வ கற்பனா தோற்றம், தத்துவரூபங்கள், அனுபவ நிலையங்கள் யாவுமே சக்திகளுக்கு இடமாகி விளங்கலின் இவற் றையெல்லாம் கூட சத்தர்கள் என்றே கூறுவர். சக்தியை ஆற்றலாகக் கொள்ளும் போது, சித் விளக்கமற்ற அஃறிணைக் காரியப்பாடாகக் கொள்ளப்படும். ஆனால் அதே சக்தி அருள் ஞான சித் விளக்கமுடைய மனிதனில், தெய்வமூர்த்தி வடிவங் களில் வெளிப்படும்போது உயர்திணைப் பெண்பால் காரியப் பாடாகவே கொள்ளப்படும். சன்மார்க்கியின் அனுபவத்தில், எங்கும்,யாவும் இறைஜோதி வடிவமாக விளங்கலின் யாவையும் சத்தர்களென்றே அறியலாகும்.

அருட்பெருஞ்ஜோதியில், அருள்-சக்தியாக இருக்கின்றது; பெருஞ்ஜோதியே சத்தராகவுள்ளது. ஜோதியில் தோற்றியுள்ள உலகப்பொருட்கள் எல்லாம் சத்தர்களாம். இந்தச் சத்தர்களாம் பொருள்களுக்கு எல்லாம், உள்ளும், புறமும் நிரம்பியுள்ளது இறைவன் அருளேயாகும். இப்படி அகம் புறம் எங்கும் எக் காலும் இடையறாது இருந்து கொண்டுள்ள திருவருட் சக்தியே, உயிர் பொருள் வடிவங்களை எல்லாம் ஐந்தொழிற்செயலால் விளங்கச்செய்து கொண்டிருக்கின்றதாம்.

ஒரு சிற்றணுவை எடுத்துக் கொள்ளுவோம். இவ் வணுவைச் சூழ, உள்ளும் புறமும் அருட்பெருஞ் ஜோதி இருந்து கொண்டு, அகத்திலே அருட்பெருஞ் சக்தி அனுபவப்படப் புறத்தேயுள்ள ஜோதியைப் பூத வடிவங்களாயும், பின்னர் உயிரின வடிவங் களாயும் முடிவில் மனித வடிவாகி, இதில் பக்குவ மனத்தின் கண் அருள்ஞான உணர்வாகித் தழைத்துள்ளது சூழ் ஒளியே ஆகும். புறத்தே சத்து வடிவம் தோன்றித் தோன்றி உலகிடை அனுபவம் ஏறஏற அந்த வடிவில் பக்குவம் விளைகின்றது. இப் படி ஒவ்வொரு ஆன்ம அணுவுக்கும் அகம் புறம் சூழ்ந்துள்ள அருட்பெருஞ்ஜோதியே ஆனந்தானுபவம் வருவித்தற்கு யாவை யும் தழைக்கச் செய்து வந்துள்ளதாம். இந்த ஆன்ம அணுக்கள், கடவுள் வண்ணமாய் நித்தியமாய் இருத்தலின், சத்துக்களே யாவர். இவ் ஆன்மாக்களையே சத்தர்கள் என்று கொள்ளுகின் றோம் ஈண்டு. அபக்குவத்தே மறங்குலவும் அணுக்களாக இருந்த ஆன்மாக்களாகிய சத்தர்களைப் பக்குவப்படுத்தி அறங்குலவும் அணுக்களாக ஆக்கிட உள்ளும் புறமும் நின்று உதவுகின்றார் நம் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர்.

## 74. சத்திகளெல்லாம் தழைக்க

*147.* சத்திக ளெல்லாந் தழைக்கவெங் கெங்கும்
*148.* அத்தகை விளங்கும் அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** முன் இரண்டு அடிகளில் சத்தர்கள் தழைக்க நம்பதி அகம்புறம் நின்று உதவும் உண்மை குறிக்கப்பட்டது. இங்கு சத்திகள் எல்லாம் அப்படித் தழைத்திட வேண்டி அவ் அருட்ஜோதியே உதவிக் கொண்டிருக்கின்றதாக மேலும் விளக்கம் செய்யப்படுகின்றது. முதலில், புறத்திலங்கும் வடிவமே தோற்றுவது இயல்பாய் இருத்தலின் அது குறிக்க வென்றே சத்தர்நிலை யுரைக்கப்பட்டது. அடுத்து உருவுள்ளிருக்கும் ஆற்றலை யுணர்தல் முறையாய் உள்ளதாம். இதனால், அவ்வக ஆற்றலை யுணர்த்த இந்தச் சக்தி வெளியீடு தரப்பெற்றுள்ளதாம்.

சக்திகளிலே அனாதியாகவுள்ளது பேரருளே. அந்தப் பெருஞ் சக்தியே இவ்வுலகிடை எல்லாவற்றிற்கும் ஆதியாய் இருந்து கொண்டு, தன்னையே முழுமையாக வெளிப்படுத்த இப் பிரபஞ்சக் காரியப்பாட்டை மேற்கொண்டுள்ளதாம். இந்த அருட்பெருஞ்

சக்தி, பொதுவாக எங்கணும் நிரம்பியிருந்தாலும் கூட, மனிதனில், நிறை பக்குவ நிலையிலன்றோ வெளிப்பட்டு அனுபவத்தே விளங்க வுள்ளதாம். இந்த முடிவான அருள் அனுபவநிலை அறிந்து அடையப் பெறுமுன், எத்தனைவித சக்திகளாக அந்த அருட் தோற்ற மளித்து, செயல் பட்டு, பலவாகிய புற அனுபவங்களை வழங்கிக் கொண்டிருக்கின்றது!

உலகில் வெளிப்பட்டுள்ள இயற்கைச் சக்திகள் பலவாம். இன்னும் வெளியாகாத சக்திகள் எத்தனையோ! இன்றைய அறிவியல் கண்டுள்ள புறச்சக்திகளும் அணுவகச் சக்திகளும், அவற்றின் அமைப்புகளும், செயல் விளைவுகளும் வியப்பளிக்கின்றன. ஆனால், இந்தச் சக்திகளுக்கெல்லாம் தாயகமாயுள்ள ஒன்றை உணராதிருக்கின்றது இந்த விஞ்ஞான உலகம். அணுவைப் பிளந்து அருஞ்சக்தியைக் கண்டு மருள்வாழ்வில் மடிந்து கொண்டிருக்கும் விஞ்ஞானிக்கு, அருள் உண்மைபுலனாக வில்லை. ஆன்மஅணுவைத் தயாநெகிழ்ச்சியால் மலரச்செய்தால், அருள் ஒளி வெளிப்படும்; அது கொண்டு வாழ்ந்தால் மெய்யின்பம் பெற்று விளங்கலாம்.

இறையருட் பெருஞ்ஜோதி யொன்றே எல்லாச் சக்திகளு மாய், புறத்தில் மாறுபட்டுத் தோன்றுகின்றது. உண்மையில் அந்த ஒரு சக்தியே நமது அனுபவத்தின் பொருட்டு, இப்படி அனந்தசக்தியாய் உள்ளது மெய்ஞ்ஞானியர் கண்டதே. இவர்கள் இந்தச் சக்திகளை எல்லாம் ஐந்து பிரிவில் அடக்கிக் கூறிவிட்டனர். அவை பொருட் சக்தி, கிரியா சக்தி, ஞான சக்தி, யோக சக்தி, அருட்சக்தி ஆம். இவற்றில் பொருட்சக்தியின் கூறு,அணு முதல், அண்ட பிண்ட சராசரங்கள் எல்லாம் அடங்கும். கிரியா சக்தி என்பது அணுவக மின் காந்த இயக்க முதல் விண்மீன்களின் சுழற்சி வேகம் வரையும், எல்லா ஜீவ உயிர்ப்பு இயக்கங்களுமாம். நமது அருட் சக்தியின் பிறிதொரு கூறுதான் ஞானசக்தியாக மனிதனில் மலர்ந்துள்ளது. இது கீழ்நிலை உயிரினங்களில் புலனறிவு அல்லது உணர்ச்சியாக இருந்துவருகின்றதாம். மனி தனில் மன அறிவாகத் தோற்றி உள்முக விசாரணையில் கடவு ளான்ம ஞானமாக விளைவு கொள்கின்றது. இந்த ஞான சக்தியின் விளைவே அனைத்துக் கலை வெளியீடுகளுமாம். இக் கலை ஞானத் தின் முடிவில் உட்கூடிப் பெறுகின்றது யோகசக்தியின் பயனாக இருக்கின்றதாம். இந்த யோக ஆற்றலே ஆன்ம சக்தியாகவும்

கூறுவர். இவ் ஆன்ம சக்தியாற் பெறும் யோகசித்திகளுக்கு மேல் விளங்குவது அருட்சக்தியால் அடைவுறும் மெய்யின்ப நிலையாக உள்ளதாம். இந்த அருள் ஏகதேசத்தால் மனிதன் எத்தனையோ காரியசித்திகள் பெற்றிருக்கின்றான். நிறையருளால் இறை இன்ப வாழ்வு பெறுவதே மனிதனின் குறிக்கோளும் கடவுளர் ஆணையுமாம்.

ஆகவே நிறை அருட்பெருஞ்சக்தி ஒன்றேதான் யாவற்றிற் கும் அடிநிலையிலிருந்து கொண்டு, தன் முழுமையான உண்மையை வெளிப்படுத்திப் பயன்காணச் செய்யவேண்டி இப்படிப் பலப்பல சக்திக் கூறுகளாய்த் தழைத்துப் .படர்ந்து விளங்கிக் கொண்டிருக் கின்றதாம். அத்தகை என்றால், அவ்வண்ணம் என்று பொரு ளாம். அதாவது அந்த அருட்பெருஞ்சக்தியே ஓர் ஒரு நிலையில் பொருள்களாகவும், இயக்கங்களாகவும், அறிவு உணர்வுகளாக வும், யோக சித்திகளாகவும், அருள் அனுபவமாகவும் தோற்றித் தோற்றி விளங்குகின்றதாம். இதனால், நாம் எதையும் அகம் நின்று ஒளிர் அருட்பெருஞ்ஜோதியின் புறத்தோற்றச் சிறு கூறுகளாகக் கண்டு கண்டு போற்றுதல் வேண்டுமென்பது தான் இவ்வீரடிகளின் கருத்தாம்.

## 75. ஐந்தொழில் ஐவர்க்கு அளிப்பது

**149.** முந்துறு மைந்தொழின் மூர்த்திகள் பலர்க்கும்
**150.** ஐந்தொழி லளிக்கும் அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) நம்முடைய அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் ஒரு வரே தனித்தலைமைப் பெரும்பதியாக இருக்கின்றார். இவரே தம் அருட்பெருஞ்சக்தியை ஐஞ்சக்தி வண்ணமாகத் தோற்றுவித் துள்ளதுதான் முன்னடிகளில் குறிக்கப்பட்டது. அவ்வைஞ்சக்தி யின் வெளியீடே இவ் அகண்ட பிரபஞ்சக் காரியப்பாடெல்லாம் என்பதும் நாமறிவோம். மேற்படி சக்திகளைக் கொண்டு விளங்கு பவை சத்தர்கள் என முன்பே குறிக்கப்பட்டது. அந்தச் சத்தர் கள், சத்தி விளங்குமிடங்கள், முதலில் சூக்கும அணுநிலையா யிருக்கின்றன. அச் சூக்குமநிலை நின்று தூல தோற்றங் கொண் டிலங்க வேண்டிப் பொருள்வடிவ ஆக்கலும், கிரியா செயலால் காத்தலும், உள் ஞானம் விளையப் புற அழிப்புச் செயலும், ஆன்ம சக்தி விளங்க யோகசித்தியும், இறையருள் விளங்க மெய்யின்

பானுபவமும் வெளியாகின்றனவாம். எனவே சாதாரண அணு நிலையில் ஐஞ்சக்தி காரியப்பாட்டால் யாவும் உண்டாகி மனிதப் பிறவியில் ஆன்மானுபவ ஆனந்தசித்தியாய்த் திகழ் கின்றதாம். இங்கு அச்சாதாரண அணுநிலையே ஆன்ம அணுவாக ஆகித் திகழ்கின்றதென அறிகின்றோம்.

## ஆன்ம உண்மை

கடவுள், ஒன்றான பரம்பொருளாக, அருட்பெருஞ்ஜோதியாக எங்கும் நிரம்பியுள்ளதாம். இந்தக் கடவுள் உண்மை எங்கணும் பூரணமாக இருந்து யாவுமாய்த் தோற்றங் கொண்டிலங்குதல் மெய்யறிவுக்கு நன்கு விளங்குவதே. எங்கும் முழுமையாக உள்ளது இறைநிலை என்றால், அது அணு அணுதோறும் தன் முழு இயல்போடு வெளிப்பட்டு அனுபவங் கொள்ளச் செய்வது சாத்தியமே. இதனால், நம்பதியே ஒவ்வொரு அணுவிலும் முழு மையாக விளங்கிக்கொண்டிருக்கின்றார் என அறிகின்றோம். இந்த உண்மையை வெளிப்படுத்திக் கொண்டும், நம்மில் அதுவாய் விளங்குகின்றதும் ஆன சிரநடுச் சிற்றணுவேதான் ஆன்ம அணு வாக இருக்கின்றதாம். ஆகவே, ஆன்மா என்பது நித்திய பரம் பொருளின் நிறையுண்மை கொண்ட ஒரு சிற்றணுவேயாம். இவ் இறை இயல் உண்மை அறியாதார், ஆன்மாவை எப்படி எப் படியோ கற்பனை செய்து கூறுகின்றனர்.

மேற்படி ஆன்ம அணுவில் இறையருட்சக்தி காரியப்படு கின்றதைக் கண்ட மனிதன் தன் உடலின் ஐம்பூத சுத்திக்கு உத வும் பஞ்சகவ்யம் வழங்கும் பசுவை அந்த அருட் சக்தியின் அம்ச மாகவே மிகைபடக் கற்பித்துக்கொண்டு விட்டான். இவனுக்கு ஆன்ம அணுவே பசுவண்ணமாக விளங்குகின்றதாம். இந்த ஆன் மப்பசுவில் நிலவும் அருட்பேரிறைவனே பசுபதியாகக் கொள்ளப் படுகின்றது. மேலும், இவ்வணுவே, தன் அக ஐஞ்சக்தியை வெளிப்படுத்த புறவெளி எங்கும் நாத (ஒலி) வண்ணமாய்க் காரி யப்பட்டுக் கொண்டிருப்பதை ஓம் ஒலியாக அறிகின்றோம். இது சூக்கும நிலையில் பஞ்சமி வாக்காய் இருந்து, மேல், சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி வாக்காய் வெளிப்பட்டிலங்குகின்ற தாம். இதனாலும் ஆன்மா ஓம்வண்ணமாய் அருள் என்னும் பொருள் கொண்டதாய்க் குறிக்கப்படும். இந்த ஓம் என்பதை ஒப்பற்ற ஒரு சொல் ஆகவும் மொழிவர். இச் சொல்லையே சோல் (Soul)

ஆகக் கொண்டனர் மேனாட்டர். இந்த ஆன்மச் சொல்லுக்குப் பொருள் கடவுள் உண்மையாம் அருள் கொண்டு விளங்குவது நம்மனோர் அனுபவம்.

முதலில், அருட்சக்திச் செயலால் ஓரான்மாவுக்கு மனிதப் பிறவியில் உண்மை வெளியாகி ஏகதேச அருள் அனுபவம் சித்திக் கின்றதாம். அந்த சித்தியில் ஆக்கும் செயல் புரியும் ஆற்றல் கொண்ட ஒருவனுக்குப் பிரமன் என்னும் தேவப் பதவி கிடைக்கப் பெற்றுத் தன் இச்சைபோல் ஒரு குறிப்பிட்ட காலம் வரை சிருஷ் டித் தொழில் செய்து கொண்டிருப்பான்; பின் அழிவுறுவான். இப்படி ஆக்கல், காத்தல் சித்தி பெற்றவனை விஷ்ணு வென்றும், அழித்தற் சக்தியும் கூடப்பெற்றவனை உருத்திரன் என்றும், மறைத்தலும் பெற்றவனை மகேசன் என்றும், அருளலும் பெற்ற வனை சதாசிவன் என்றும் கூறுவர். இவ் ஐந்தொழிற்சித்தி கொண்டிலங்கும் ஐவகையினரையே பஞ்சமூர்த்திகள் என்ப. எண்ணற்ற நிலவுலகங்களில் இப்படிப்பட்ட ஐந்தொழில் மூர்த்தி கள் பலர் உளர் என்பது உண்மையே. இம் மூர்த்திகள் பத முத்தி பெற்ற தேவர்களே யாவர். இவர்களெல்லாம் பன்னெ டுங்காலம் இருப்பவரே எனினும் நித்தியர் அல்லர். அவரவர் களுக்குரிய கால எல்லையில் அழிவுறுவர். இவ் ஐந்தொழிற்கர்த்தர் களைத் தோற்றுவித்து, முறைப்படி வாழ்வித்து, சித்திநிலை பெற்று விளங்கச்செய்து முடிவில் ஒழியச் செய்கின்றவர் நம் அருட்பெருஞ் ஜோதிபதியே ஆவர். இப்பொழுது விளங்குகின்ற நமது உலகம் மேற்படி ஐவர்களால் செயல்பட்டுக் கொண்டிருக்கின்றது. இவர் களும் இவர்களது செயற்பாடுகளும் மாயாகாரியமே யல்லாது அருள் உண்மை கொண்டு திகழ்கின்றன அல்லவாம். இதனால் உலகில் அருள் நலம் வெளிப்படாதுள்ளதாம்.

உலகுக்கு அருட்பெருஞ் ஜோதியால் பெருநல வாழ்வு வரப்போகின்றது உண்மை. அந் நல் வாழ்வு தழைக்கச் சுத்த சன்மார்க்கம் வெளியாகியுள்ளது. இந்நெறியால் எல்லாவற்றிற் கும் மேலான அருட்பெருஞ் ஜோதிபதியைக் கண்டடைந்து, அரு ளால், அனக வாழ்வு ஏற்கவேண்டியிருக்கின்றது. ஆகையால், இந்த ஐந்தொழில் செய் பஞ்சமூர்த்திகளை மதித்து வழிபட்டு, மாயாசித்தி பெற்று முடிவில் மடிந்துபோவது கூடாது. இம் மூர்த்திகளுக் கெல்லாம் மேலான, தனித்தலைமைப் பெரும்பதியான அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரை சுத்த மெய்ஞ்ஞானத்தாற்

கண்டு கலந்து வாழ வேண்டும் நாம். இதற்கென்றே இந்த அருட் பெருஞ் ஜோதி அகவல் வெளியாகியுள்ளது.

''முந்துறும் ஐந்தொழில் மூர்த்திகள் பலர்க்கும்
ஐந்தொழில் அளிக்கும் அருட்பெருஞ் ஜோதி''

என்று போற்றி செய்யும் வள்ளலொடு போற்றி செய்து உய்வோம் நாம்.

மேலும் இந்த ஆன்மாவைப்பற்றிய உண்மை ''ஒன்று மூன்றான உண்மை'' என்ற நூலில் 112-118 பக்கங்களிலும், ''இரண்டற்ற இன்ப வாழ்வு'' என்ற நூலின் 41-54 பக்கங்களிலும் காணலாம்.

## 76. பெரிதும், சிறிதும், அரிதும்

151. பெரிதினும் பெரிதாய்ச் சிறிதினுஞ் சிறிதாய்
152. அரிதினும் அரிதாம் அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)**அருட்பெருஞ் ஜோதியின் தோற்றமும்; தன்மையும், நிலையும், விளக்கமும் அனுபவமும் எப்படி எல்லாம் இருக்கின்றன என்பது குறித்து ஈண்டு சில புகலப்படுகின்றன. இந்த அருட் பெருஞ் ஜோதி பெரியது என்று சொல்லிவிடலாம். பெ்ரியது என்றால் எவ்வுளவு பெரியது? அதற்கு ஒப்பு உவமையாக எதைச் சுட்டிக் காட்ட முடியும்? எதையுமே உவமித்து அளவு படுத்திக் கூறமுடியாதாம். இந்தப் பிரபஞ்சத்தில் ஞாயிறும், அது போன்ற விண்மீன்களும் பெரிய ஜோதி கோளங்களாக உள்ளன. இவற்றில் ஒரு பெரிய ஜோதி கோளத்தை நம் அருட்பெருஞ் ஜோதிக்கு ஒப்பிடலாமா என்றால், அது கொஞ்சமும் பொருந் தாது. அப்படியுள்ள விண்மணிக்கூட்டம், பால வீதி அல்லது பால்வெளி (Milky way) எனப்படும். அந்த ஒளித்திரளையே ஒட்டுமொத்தமாகக் கொண்டு ஒப்பிட்டாலும் அது நம் அருட் பெருஞ்ஜோதிக்கு எந்த விதத்திலும் ஒவ்வாது. அதற்குமேல் நாம் காணும் பிரபஞ்சமும் பேரொளிமயமானது எனக் கொண் டாலும்கூட அதுவும் அகண்டபெரும் பிரபஞ்சத்தின் ஓர் அற்பக் கூருதானே! ஆதலின், இந்தப் பிரபஞ்சத்தின் அளவைவிட மிகப்பெரிது நம் அருட்பெருஞ்ஜோதி எனலாம். மகாபிரபஞ்சத் தின் எல்லை அளவைக் கணக்கிட்டுக் கூறமுடியாது; அப்பேரெல்லைக்கும் அதீதமாய் விளங்கி நின்று ஆள்கின்றது நம் இறைபெருஞ்ஜோதியாம்.

இனி, சிறிதினும் சிறிதாய் உள்ளதும் நம் ஜோதியே எனக் கூறப்படுகின்றது. சாதாரணமாகக் கண்ணுக்குப் புலனாகக் கூடிய சிறிய பொருள்கள், இல் நுழை கதிர் ஒளியில் மிதந்து கொண்டிருக்கும் நுண் துகள் சிறிது என்பர். அதனினும் கட்புலனாகாதது அணுவென்ப்படுகின்றது. அந்த அணுவையும் மிக்க ஆற்றல் கொண்ட (ஐம்பது லட்சம் பங்கு பெரிதாக்கிக் காட்டக்கூடிய) நுண்ணோக்காடி (Microscope) மூலம் காணப் படும் சிறு பொருளையும் இன்றைய உலகம் கண்டுகொண்டுள்ளது. ஆனால் இந்தச் சிற்றளவுப் பொருளையும், இதனினும் சிறியதையும் கூட விளங்கச் செய்துகொண்டும் ஆண்டு கொண்டும் உள்ளது நம் அருட்பெருஞ் ஜோதிச் சிற்பரம்பொருளேயாம். அவ்வளவு சின்னஞ்சிறு நிலையில் இருந்தாலும்கூட அகண்ட பிரபஞ்சம் முழுவதையும்தானே தனித்து நின்று ஆளவல்லதாய் இருக் கின்றதாம்.

அடுத்து நம் இறைஜோதி அரியது எனப்படுகின்றது. அரியது என்றால், அருமையானது, சிறந்தது என்றும், அடை தற்கு முடியாதது என்றும் பொருளாம். உலகம் அறிந்ததும், அறியாமலே கற்பனை பண்ணிக்கொண்டுள்ளதுமான சிறந்த பொருள் எதுவோ அதனினும் சிறப்புமிக்கது நம் அருட்பெருஞ் ஜோதியாம். இதனுடைய அருமை பெருமையை எவரே அறிவர்! அறிதற்கரிய சிறப்புண்மையை எப்படி எதற்கு ஒப்பிட்டுக் கூறக்கூடும்? அப்படி அறியமுடியாத அரிய பொருளை எப்படி அடையமுடியும்? ஆகையால், பிறரால் அறிந்து அடையமுடியாத அரிய பொருளாய் உள்ளது இந்த அருட் பெருஞ்ஜோதி என்றும், அப்படி அடைய முடியாத அரிய தன்மையுடையது இதுவெனில், இதனால் என்ன பயன் என்று வினவக்கூடும். உண்டு பெரும்பயன். சுத்த சத்விசாரத்தில் நிலவும் ஒருவன், அந்த அரிதில் அரிதாகிய அருட்பெருஞ் ஜோதியே இவனாய் மற்று யாவுமாய் இருப்பதாக அருள்ால் உணர்ந்து அதுவாகவே விளங்குகின்றான். இவன் தன்னை அயலானாக எண்ணிக்கொண்டிருக்கும்வரை, அந்த அருட்பெருஞ் ஜோதி நிலை அடைதற்கரிய ஒன்றாய் இருப்பதும், அதுவே இவனாய் அருள்நிலை நின்றுணரும்போது, மேலும் அடையக் கருதுவது அறியாமையே என்று அறிகின்றோம்.

## 77. காட்சியும் ஆட்சியும் ஆயது

**153. காட்சியும் காணாக் காட்சியும் அது தரும்**
**154. ஆட்சியு மாகிய அருட்பெருஞ்ஜோதி**

**(உ-வி)** ஆன்மா இயற்கையில் இறையுண்மை கொண்டிருந் தாலும் கூட, அது அனுபவப்படாதவரையும் பயனின்றிக் கிடக் கின்றதாம். அவ் ஆன்மானுபவ அடைவின்பொருட்டே ஆன் மாவுக்கு ஜீவகரணேந்திரிய தேகாதி பிரபஞ்சம் வழங்கப்பட் டுள்ளனவாம். மானிடப்பிறப்புத் தேகம்தான் தத்துவநிறைவு கொண்டதாய்ப் பக்குவ வசத்தால் அருளடைந்து, தத்துவ நிலை கடந்து, அதீதத்தே விளங்கும் இறையனுபவம் ஏற்று, முத்தேக சித்திநிலை கொண்டு விளங்குவதாயு மிருக்கின்றதாம். ஆன்மாவுக்கு ஏற்படும் அருள் அனுபவமே உண்மைக் காட்சியின் உயர் பயனாக உள்ளதாம். இவ்வருள் நிலை சுத்த மனத்தில் விளங்குவது. சுத்த மன அறிவோ புலன் அவா கடந்த மன உணர்வில்தான் தயாநெகிழ்ச்சி உண்டாகும்போது ஏற்படு வதாம். மனோ எண்ணத்தில் புதைந்து கிடக்கும் எண்ணங்கள், முன்னர் கண் முதலிய இந்திரிய வழியில் உட்சென்று பதிவுற் றனவேயாம்.

கண்ணால் காண்பது காட்சி எனப்படும். ஒரு சமயம், ஓரிடத்தில் கண்டகாட்சி மனத்தில் பதிவாகி, உணர்வில் வெளிப் பட்டு விளங்கும்போது அது மனக்கண் காட்சியாகும். புறக் காட்சியாகக் காணப்படுவதில்லை. புறக்காட்சி மறைந்து ஒழிந் தாலும் அகக்காட்சி யொழிகின்றதில்லை. அந்த அகக்காட்சி, கரணக் காட்சி, ஜீவக்காட்சி, ஆன்மக்காட்சி என விரிவற்றிலங் கும். தேகேந்திரியத்தில் உள்ள, கண்ணால் காண்பது இந்திரி யக்காட்சியாம். உடலிற்பொருந்தியுள்ள கண் (கட்பொறியாக இருக்கின்றது.) மனத்திற்குக் கண் கற்பனை எண்ணமாக, ஜீவனுக்குக் கண் உயிர் உணர்வாக, ஆன்மாவுக்குக் கண் அருள் ஞானமாக உள்ளதாம். இவற்றில், இந்திரியக்காட்சி, கரணக் காட்சி, ஜீவக்காட்சி எல்லாம் காணப்படும் காட்சிகளாக இருக் கின்றன. இக்காட்சிகளைக் கண்டு, உட்கொண்டுதான் கலைஞான சாத்திரங்களையும், நுண்கலைப் பொருட்களையும் ஆக்கித்தந்துள் ளனர் ஆன்றோர் பலர். இவைகளை எல்லாம் காணவும், பயின்று முயன்று பயன்பெறவும் முடியும். இவையே காணும்

காட்சிப் பயனாம். இவற்றிற்கு மேற்பட்டது அகஅருள் அனுபவத்தில் விளங்குவதாம். அது புறத்திலிருந்து பயனுறக் கொள்ள முடியாது. இதுவே காணாக் காட்சியாகக் குறிக்கப் படும். ஆன்ம இயற்கையாகிய தயவே, அருட்கண், ஞானக் கண், உண்மை உபநயனம் எனப்படுவது.

மேற்குறித்த ஆன்மக்கண்ணால், மெய்யருள் உணர்வால் தான் மெய்ப்பொருளை உண்மையாகக் காணவும், பயன்கொள் ளவும் முடியும். மற்ற கண்கண்ட காட்சியாலும் ஜீவகரணேந் திரியக் கலையறிவுக் காட்சியாலும், உண்மை விளங்காது. தடு மாற்றமே ஏற்படும். சான்று:

"சாத்திரங்கள் எல்லாம் தடுமாற்றஞ் சொல்வதன்றி
நேத்திரங்கள் போல்காட்ட நேராவே—நேத்திரங்கள்
சிற்றம் பலவன் திருவருள்சீர் வண்ணமென்றே
உற்றிங் கறிந்தேன் உவந்து."

என்ற அருட்பாவால், அருளே கண்ணாகக் கொண்டு வாழ்வு பெற வேண்டுவது முக்கியம். அகத்தில் அருள் ஒளியாம் கண்ணைப் பெற்று, உலக வாழ்வில் விளங்கும்போது தான், காட்சியும் காணாக்காட்சியும் அதுதரும் ஆட்சியும் (அனுபவமும்) உடன் விள்ங்கும். அருளோடுகூடிய சத் விசாரப் பயனால் அருட்பெருஞ் ஜோதிக்காட்சியாம்; அந்நிலையுற்றிருந்துகொண்டு அருட்செய லொடு வாழ்வதே அருளாட்சியாம்.

## 78. சித்திகளெல்லாம் அன்புடன் அருள்வது

155. இன்புறு சித்திகள் எல்லாம் புரிகவென்
156. றன்புட னெனக்கருள் அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) முயன்று செய்துமுடிக்கும் அற்புதச்செயல் சித்து எனப்படுவது. இந்தச் சித்துச் செயலே சித்தியாகவும் கூறப் படும். இச்செயலின் சித்தியால் வியப்பும் அகங்காரமும் உண்டாகிவிடக்கூடாது; அடக்கமும் அன்பும் பெருக வேண்டும். மெய்யன்பு இல்லாத அகங்கார சித்தர்கள் அதி முயற்சியால் சித்திகள் பல பெற்றும், அருளின்ப வாழ்வு பெறாது போய்விடுகின்றனர். அருள் அடைவது ஒன்றே உண்மை வெற்றி சித்தித்ததாகும்.

கடின சித்தர்கள் ஒருமை மனத்தோடு தவ முயற்சி மேற்கொண்டு வேண்டும்போது, வேண்டுவதை வேண்டியாங்கு வழங்கும் ஈசன் அவர்களின் வேண்டுதலைத் தந்து விடுகின்றார். ஆனால், அன்போடோ, உவகையோடோ தருகின்றாரில்லை அந்த ஆண்டவர். ஆகையால், அப்படிப் பெறப்படும் சித்தியால் பெரு நன்மையும் பேரின்பமும் விளைவதற்குப் பதிலாக, அகங்கார போதையில் ஆழ்ந்து நசித்தே போய்விடுகின்றனர். அந்தச் சித்தை இச்சித்து அடைந்த சித்தர்கள்.

அருட்பெருஞ்ஜோதியின் ஆற்றல் அளவிடற்கரியது, என்றும் செயலோடு விளங்கிக்கொண்டேயிருப்பது, அந்தப் பதியை வேண்டியடைகின்ற சித்தித்திறன் ஒருவனது அன்பின் அளவுக்குத் தகப் பெருகுகின்றது. அன்பற்ற கடினமனமுடையார்க்குச் சிறிதளவு சித்தித்திறன் தான் கிடைக்கின்றது. அது கால எல்லையில் கடுகி ஒழிய அந்தச் சித்தனும் அப்போது மடிந்து ஒழிகின்றானாம். அகங்காரமற்ற அருளாளனோ, தன்னை முற்றும் பதிபால் அடைக்கலமாகத் தந்துவிடுவதால், அவரும் அவனைத் தழுவி ஏற்றுக்கொண்டு தன்னையே முழுமையாக அவனுக்கு வழங்கிவிடுகின்றார். தன்னையே முற்றும் வழங்கும் தியாகேசன் அல்லவா நம் பதி! அப்படிப் பதியின் அரவணைப்பில் ஒன்றி நிலவும் அருளாளன் நற்சித்திகளை நாளும் புரிவதில் என்ன தடை! குறைவற்ற நிலையுற்று இன்பசித்தி புரிந்துகொண்டு வாழ்கின்றவனுக்குத் தடையேது! முடிவேது!!

நமது அருள் அடிகளார் அருட்பெருஞ்ஜோதியைப் போற்றிச் சார்ந்து கொள்வதால் முடிவிலாத இன்பசித்தியோடு வாழ அன்போடு ஆணை பெற்றுவிட்டார். அருளம்பலத்தில் ஆனந்தத்திருநடனம் கண்டு கலந்து களித்திருக்கும் அடிகளார், அன்பின்பம் விளைவிக்கும் திருச்செயலாம் சித்தே புரிந்து கொண்டிருக்கின்றார். மெய்யன்பிலார், புலனின்பவேட்கையில் புக்கு அழுந்தி அழிந்து கொண்டிருப்போரைப் பண்படுத்தற்கென்றே அம்பலத்திலிருந்து வெளிப்படாதிருக்கின்றார் நம் அருள் அண்ணலார். மக்கள் புல போக இச்சையை யொழித்து, அம்பல சகோதரர்களாய் வாழத் தொடங்க வேண்டும். அப்போது அருட்சித்தோடு அருட்பிரகாசரும் எழுந்தருளி உதவுவார்.

உலகத்தினரை, அன்பு அருள், இன்பநிலைக்கு ஏற்றுவதற்கான சுத்த சன்மார்க்க சித்திகளைப் புரியவே ஆணையிடப் பெற்றுள்ளார் நம் பெருமான். ஆகையால் மெய்யறிவின்ப நாட்டம் இல்லாத மக்கள் சமுதாய நடுவில் தோன்றிப் பலவாகிய அற்புத சித்திகள் புரிந்து, வியக்கவும், மயக்கவும் உளம் கொள்ளாதிருக்கின்றார் என்பது உண்மை.

## 79. இறவா வரமளித்த அறவாழி

**157.** இறவா வரமளித் தென்னைமே லேற்றிய

**158.** அறவாழி யாந்தனி அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** தனி அருட்பெருஞ்ஜோதியாவது, ஒப்பற்ற, சிறப்புமிக்க அருட்பேரொளிப் பெருக்காக இருக்கின்றதைச் சுட்டுகின்றது. இந்தத் தனி அருட்பெருஞ்ஜோதிக்குமுன் நிறுத்தப்பெற்றுள்ள அறவாழி என்ற தொடர்மொழி இறை இயல் உண்மையைக் குறிக்கின்றது. அறவாழியாம், அறவாழியாகும் அல்லது அறவாழியாகிய தனியருட்பெருஞ்ஜோதி எனக் கொள்ளலாம். அறம் என்றால், தன்மை, குணம், தருமம், அருள் ஆம்: ஆதலின் கடவுள் அறம் அருளேயாகக் கொள்ளப்படும். ஆழி என்ற சொல் ஆழ்ந்து விளங்கும் பெருங்கடலை யுணர்த்தும் காரணப்பெயராம். அருட்பெருங்கடல் எனப் புனைந்து கொள்ளப்படுகின்றது நம் அருட்பெருஞ்ஜோதி.

அருட்பெருஞ்ஜோதி ஆனந்த சாகரத்தின் உண்மையை விளக்குவாம். சாதாரணமாகக் கடல், நீரின்பெருக்காய் இருக்கின்றது. இதன் ஆழமும் பரப்பும் அதிகமாய் இருக்கலாம். ஆனால், நமது அருட்பெருஞ்ஜோதியோ அளப்பரிய அகண்ட வெளிமுழுவதும் நிரம்பியுள்ளது. இதன் ஆழமும் பரப்பும் அறிய முடியுமா? முடியாது. இதனால் இந்த அறக்கடல் விசேடத்தன்மை கொண்டதாக அறியப்படும். அவ்விசேடத் தன்மையாம் சிறப்பியல்பை யுணர்த்தத் தனி என்ற சொல்லையே ஏற்றுத் தனி அறவாழி எனக் கொள்ளவேண்டியிருக்கின்றதாம். அருட்பெருஞ்ஜோதிக்கு அந்தத் தனி அடை இல்லாமலே உண்மை குறிக்கும் பெருமை கொண்டதாய்க் கொள்ளலாம்.

அகத்தே அழியாதிருந்து வரும் கடவுளான்ம வடிவுக்குப் புறத்தேகங்கள் தோன்றி வளர்ந்து மடிந்து மறைந்துபோய்க்

கொண்டிருப்பதே பிறப்பு இறப்பு ஆம். இந்தப் பிறப்பும் இறப்பும் இல்லாது, ஆனால் என்றும் நிலைத்து வாழ்வோடு விளங்க வேண்டின், அகநிலையிலிருக்கும் கடவுளான்மா திருவருளால் மனித வடிவோடு, அனக நிறையுறு அனுபவமும் கொண்டு நிலவவேண்டியுள்ளதாம். இந்நிலை அனுபவம்தான் தான் பெற்ற இறவா வரமாகக் குறிக்கின்றார் வள்ளலார். தீண்டரிய அக அம்பல நிலையே இங்கு மேல்நிலையாக விளம்பப்படுகின்றது. இம்மேனிலை நின்று அருளொளி மேனியராய் வாழ்வாரே மரணமிலாப் பெருவாழ்வு எய்தியவராவார், அங்கு விளங்குவது அல்லலிலா ஆனந்த வாழ்வே. இது குறித்தே முன்பு ''எல்லையில் பிறப்பெனும் இருங்கடல் கடத்தியென், அல்லலை நீக்கிய அருட்பெருஞ்ஜோதி'' என்று கூறினார். இந்த இறையருட் பெருங்கடல் எங்கும் நிரம்பியுள்ளது. இதற்குக் கங்கு கரையில்லை. இதனையே பேரின்பப் பெருங்கடலாய்க் கொண்டு, சுத்த சன்மார்க்கச் சித்தியோடு வாழ்கின்றவரே இறைவாழ்வு பெற்றவர் என்பது உண்மை.

அல்லல் பிறவியைக் கடலெனக்கொண்டு, பிறவா நிலையை அக்கடலின் கரையாகக் கருதி, அதனை அடைந்துவிட்டால் இறைமயமாகிவிட்டதாக முடிவு செய்திருந்தனர் முன்னோர். அருள் கொண்டு அழியா வாழ்வில் நிலவாத வரை, ஒருவன் புறப் பிறவி ( டுத்துக்கொண்டிருந்தாலும் சரி பெரும்பயன் இல்லை என்பது தெளிவு.

''இறவா வரம்தரு நற்சபையே
என மறை புகழ்வது சிற்சபையே''

என்றதால், மறைபுகழ் சிற்சபை வாழ்வே இறவாவரம் தருவது என்பது உண்மையாம். இந்த சிற்சபையைப் புறத்திலிருந்து சிந்திப்பார்க்கு அதிற் கலந்து மறைந்து கிடக்கும் அழியாநிலை கிடைப்பதேயன்றி வாழ்வில்லையாம். அவ் வழியா ஆன்ம இயல் நிலையை இறவா வர நிலையாகக் கொள்ளுவது முன்னோர் கொள்கையே. ''இறவா திருக்க மருந்துண்டு காண்-அது-அம்பல வாணன் அடிக் கமலம் மறவா திருப்பதே'', எனவும், ''சிவாய நம என்று சிந்தித்திருப்பார்க்கு அபாயம் ஒருநாளும் இல்லை'' எனவும், ''தில்லை வெளியிற் கலந்துகொண்டார் திரும்பவும் வருவாரோ?'' எனவும் கூறினர் ஆன்றோர். இவையெல்லாம்

புறநெறியின் முடிவேயாம். அக அருட்பெருநெறியால் மட்டும் இறவாமையோடு இறையின்ப நிறைவாழ்வும் கொண்டு நிலவுதல் சாத்தியம்,சத்தியம்.

## 80. நானந்த மில்லா ஆனந்தம்

*159.* நானந்த மில்லா நலம்பெற வெனக்கே

*160.* ஆனந்த நல்கிய அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** ஆனந்தம் என்றால் பொதுவாக இன்பம் என்று பொருளாக்குகின்றனர். இச்சொல்லினை ஆய்ந்து ஆழ்ந்து பார்க்கும் போது விளங்குவது இது: யாதெனில், ஆன்+அந்தம் எனப் பிரித்து நோக்கும்போதும் ஆன் என்னும் ஆன்மப்பசுவுக்குரிய முடிவு நிலையே ஆனந்தமாக உள்ளதை யுணர்த்தும். ஆன்மாவின் அந்தமாகிய முடிவுநிலைதான் என்ன? அம் முடிவுநிலையைப் புரிந்துகொள்ள, முதலாகிய தொடக்கநிலையையும் தெரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது. முன்னர் ஆன்ம உண்மை குறித்த போது, அவ்வான்மா என்பது, நமது உண்மையும், கடவுளர் நிறையுண்மையும் இரண்டற்ற ஒரு வடிவாய்த் திகழும் சிற்றணு வண்ணமாய்த்தான் கண்டோம். ஆகையால், கடவுள் இயல்பும், ஆன்ம இயல்பும் வேறல்லவாம். கடவுளுக்கோ ஆதியும் அந்தமும் இல்லை. அதுவே ஆன்மாவுக்குமாம். எனினும் ஆன்ம உண்மை ப்க்குவ மனிதனில்தான் வெளியாகின்றது. பக்குவிதான் தன் இயல் வடிவம் நித்திய ஆன்மாவே, அல்லாது அநித்திய உடல் வடிவம் தன் இயல் உருவல்ல என்று அறிகின் றான். இந்த நித்திய் ஆன்மாவுக்கு உயிருடம்பு சேர்ந்து பரிபாக முண்டானால்தான் அதன் உண்மை வெளியாகின்றது. அது வெளியாகாதவரை உடற்சூழல் ஆவதும் அழிவதுமாயிருக்கும். இப்படி ஆன்மாவுக்குப் பிறவித்தொடரக் காரணம், உண்மை யைத் திருவருளால் வெளிப்படுத்துதற்கேயாம். இதுவே, ஓர் ஆன்மாவில், கடவுள் அருளிருந்து செயல்படுத்துவதை, அவ் வான்மாவின் மூலமாகிய ஆணவத்தின் செயற்பாடாகக் காண் கின்றான் அபக்குவி. இவன் அருட்பக்குவமுறும் தருணம், அவ் ஆணவம் ஒழிந்து பதி ஐக்கியம் அடைகின்றான். இதுதான் ஆன்மாவின் முடிவு என்று கொள்ளப்பட்டது. எனவே, மலபாச பந்தநிலையே ஓர் ஆன்மாவின் முதல் தொடக்கநிலை என்றும்

அப்பந்தமற்று பதிக்கலப்புறு நிலையே முடிவுநிலை என்றும் கொண்டனர். அதுவே, ஆன் அந்தநிலை என்றனர்.

மேற்படி ஆனந்த நிலைதான் ஓர் ஆன்மாவுக்கு முடிவானால் அங்கு நித்திய இன்ப வாழ்வுக்கு இடமெங்கே? ஆனந்தம் என் பதற்கு இன்பமென்ற பொருளே பொருந்தாமல் போய்விடும். ஆகையால், அப்படி ஆன்மாவுக்கு வாழ்வற்றுப்போய்விடக் கூடாது. எனவேதான், நமது அருட்பெருஞ்ஜோதி ''நானந்த மில்லா நலம் என்னும் ஆனந்த வாழ்வு'' நல்கியுள்ளதாக நவில் கின்றார் நம் வள்ளலார். நான் அந்தமில்லா நிலையாவது: நான் என்னும் உடற்பற்று நீங்கா, அகங்காரபோத ஆணவநிலை அல்ல; அருள் உண்மை கொண்டு ஆன்ம இயற்கை நிலை நின்று குறித்த தாகும். உண்மையில் ஆன்மாவே இறை இயல்பாய் அருள் தன்மையாய் ''நான்'' என இருக்கின்றதாம். இதனால்தான், நான்-நாம் தன்மை யொருமை, தன்மை பன்மை என இலக்கணஞ் செய்யப்பட்டுள்ளது. மேலும் கடவுள்மயமாய் உள்ள நம் உண்மையை யுணர்த்தவே ''ஐ என்னும் எழுத்தைத் தலைவன், கடவுள் என்ற பொருள்தர வழங்கினர் நம் ஆன்றோர். அது ''நான்'' என உள்ளதுமாம். இக்கருத்தையே அகநிலை யறி யாது கொண்டுள்ளனர் ஆங்கிலேயர். அவர்களின் ஐ (I) யும் நான் என்ற பொருள் கொண்டதே. இந்த ''ஐ'' நிலையை நவநிலை கொண்ட பதிநிலையாக அகமுணர்ந்த பெரியோர் அகர வரிசையில் ஒன்பதாவதாக வைத்தனர். ஆங்கிலத்தும்கூடி (I) ஒன்பதாவது எழுத்தாகவே அமைக்கப்பட்டுள்ளது.

எங்கும் நிரம்பிய கடவுளைப் பரமான்மபதி என்பர். அவர் இயல்பு சச்சிதானந்தமேயாம். அவரே தனியொரு ஆன்மாவி லும் இயல்பாய்ச் சச்சிதானந்தமாகவே இருக்கின்றார். ஆனால், அந்தச் சச்சிதானந்த அனுபவம் 'வெளிப்பட்டு விளங்கக் குறிப் பிட்ட ஓர் ஆன்மாவுக்கு இந்தப் பக்குவ மனித ஜீவதேக வாழ்வு நிலைபெற வேண்டியிருக்கின்றதாம். இந்தத் தேக ஆன்மா வையே ஜீவான்மா என்கின்றனர். தேகப்பற்றொடு வாழ்ந்து வரும் ஜீவான்மாவுக் குள்ளீடாய்ப் பரமான்ம சச்சிதானந்தம், விதையும், விருட்சமும், கனியும்போல், மிகமிக நுண்ணிலையில் மறைந்துகிடக்கின்றதாம். அப்படி மறைந்து கிடப்பதை வெளியாக் கவே புற விளைவெல்லாம் தோற்றுவிக்கப்பட்டுள்ளதாம். மனிதன் சுத்த சத் விசாரத்தால் சச்சிதானந்தக் கனியுண்மையைக் கண்டு

அடைய முயல்கின்றான். புற எம்முயற்சியாலும் எட்டாப்பழமாய் இருந்த ஒன்று நிறையருட்சேர்க்கையால் தன் உட்பொருந்தியுள்ள அருட்பெரும் ஆனந்தக்கனியாகக் கண்டு கொள்ளுகின்றான். கண்டுகொண்டதோடு உட்பொருந்தி, அருள்வாழ்வு நடத்துவதாலே ஆனந்தானுபவம் ஏற்பட்டு ஒழிவற விளங்கலாகின்றதாம். இந்த ஆனந்தவாழ்வுதான் நானந்தமில்லா நலம் ஓங்கு வாழ்வாகும்.

## 81. எண்ணிய எண்ணியாங் கியற்ற

*161.* எண்ணிய வெண்ணியாங் கியற்றுக வென்றெனை
*162.* அண்ணியுள் ளோங்கும் அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** அந்தமிலா ஆனந்த வாழ்வோடு என்றும் விளங்கு அருளாணை பெற்ற நம் வள்ளற் பிரானுக்குக் குறையொன்றும் இருத்தற்கில்லை. அவர் தன்னை முற்றும் அடைக்கலமாய் அருட்பெருஞ்ஜோதிக்கே தந்துவிட்டார். அந்த அருட்பெருஞ் ஜோதியும் அவரை ஏற்று, உட்கூடி நின்று, வேண்டுவனவெல்லாம் வழங்கிக்கொண்டிருக்கின்றதாம்.

எல்லாம்வல்ல அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் அருட்குரு வடிவாய் நம் வள்ளற்பெருமான் முன் எழுந்தருளி விளங்கினார் ஒரு சமயம். அப்போது பணிவன்போடு உட்கசிந்துருகி நின்ற நம் அடிகளாரைத் திருநோக்கு புரிந்து, ஆசி கூறி, ''எண்ணிய எண்ணியாங்கு இயற்றுக,'' என்று அருள்வாக்கும் அளிக்கின்றார். நினைத்ததை நினைத்தபடி செய்து, குறையும் குற்றமுமின்றி முடித்திடல் வேண்டுமானால், அப்படிச் செய்கின்றவர்க்கு எவ்வளவு அகப்புற வலிமை இருக்கவேண்டும். ''எண்ணிய எண்ணியாங்கு எய்துவர் எண்ணியர் திண்ணியர் ஆகப் பெறின்'' என்பது வள்ளுவம். இதிற் குறிக்கப்பட்ட திண்மை, உடற்திண்மையும் உள்ளத்திண்மையுமாகக் கொள்ளலாம். ஆனால், மனித முயற்சியால் பெறப்படும் இத் திண்மை எல்லாம் உண்மையாகாது. அருளாளன் வழங்கும் ஆற்றலே திண்மை மிக்கது. வள்ளல் கொண்ட திண்மை, அப்படி அருளாளன் வழி வந்ததாகும். ''எண்ணிய எண்ணியாங் கியற்றுக'' என்று வாக்களித்த அருட்குரு, அப்படி வாக்களித்துவிட்டு வந்த வழியே சென்று விடவில்லை! முன்நின்று வாக்களித்த அக்குருநாதர் நம்

வள்ளலுட் புகுந்து, உள்ளத்தில் தங்கி அருட்பெருஞ்ஜோதியாய் ஒளிர்கின்றவர் ஆகிவிட்டது அவ்வருளாள்ன் அருட்பெருஞ் செயலேயாகும். இப்படி அகம் இருந்துகொண்டும், உள்ளுணர் வில் உணர்த்திக் கொண்டும், செயல்புரியச் செய்துகொண்டும் உள்ளது அந்த அருட்பெருஞ்ஜோதி இறைகுருவாம். அண்ணி என்றது அண்ணித்து, மிக நெருங்கி வந்து கூடி யுட்குலவும் குறிப்பை யுணர்த்துவதாம்.

அருட்குருவானவர் அண்மி வந்து உட்புகுந்து ஒழிந்துபோய் விட வில்லையாம். உட்பொருந்தி அருட்பெருஞ்ஜோதியாய் நின்று, வளரொளியாய் விளங்கிக்கொண்டு உதவுகின்றாராம். இதனால், அந்தக் குரு ஜோதியே, எண்ணத்தகுவன எண்ணச் செய்தும், அடையச் செய்தும், நிறைவேற்றச் செய்தும் கொண் டிருப்பது உண்மையாம்.

ஏகதேச அருள்பெற்ற மக்களிற் சிலர், ஓரளவு உள்ளத் திண்மை பெற்றிருக்கின்றனர். அத் திண்ணிய மன உணர்வை உள்ளுணர்வு என்றும், மனச்சாட்சி என்றும், மௌனவாக்கு என்றும் அந்தரான்ம உரை என்றும் கொண்டு அதன் குறிப்பு வழி தாம் நடப்பதாகக் கூறிக்கொள்ளுகின்றனர். இவர்கள், எண்ணிய எண்ணியாங்கு எந்த அளவுக்கு எய்துகின்றனர் என்பதும், இவர்களின் திண்மை எவ்வளவு காலம் நிலைப்பது என்பதும் நாம் அறிவோம். மருணிலை மாந்தரின் திண்மை எல் லாம் காலக்கிரமத்தில் மங்கி மறையும் என்பதும் அறிந்ததே. ஆகையால், அகம் வளர் அருள் ஒளியின் துணைகொண்டு அருளே நினைந்து, அருளே புரிந்து, அருளின்பில் தழைக்க வேண்டியது நம் கடமையாம்.

## 82. நீ அது ஆயினை

**163.** மேயினை மெய்ப்பொருள் விளங்கினை நீயது

**164.** ஆயினை என்றருள் அருட்பெருஞ்ஜோதி

(உ-வி) கடவுள் அனுபவசித்தி அடையும் வழிமுறை இதிற் கூறப்படுகின்றது. முதலில் சத் விசாரத்தால் கடவுள் உண்மையை உள்ளபடி அறிய வேண்டும். அதாவது அக் கடவுள் உண்மை, எப்படி எங்கு விளங்குகின்றது என்பதை

விசாரித்து, அது நம் உள் விளங்குதலை அறிந்துகொள்ளல் முதற் படியாம். அடுத்து, அம்மெய்ப்பொருளை இடையறாது நினைந்து நினைந்து, முடிவில் நம்மை மறந்து அதில் கலந்து நிற்றல் இரண்டாம் நிலையாம். பின்பு அதுவே நாமாகி விளங்குநிலையே மூன்றாவதாகிய முடிந்தநிலையாம். முடிந்த குறிக்கோள் கடவுள் நிலைபெற்றுத் திகழ்வதேயாம். ஆதலின் இங்கு அந்நிலை பேற்றைக் குறிக்கவந்த ''நீ அது ஆயினை'' என்றதையே தலைப் பாகக் கொடுக்கப்பட்டது.

இவ்விரண்டடிகளை இப்படி முறைப்படுத்திக் கொள்ளலாம். "மெய்ப் பொருள், மேயினை, விளங்கினை (நீயது) ஆயினை" என்று அருட்பெருஞ்ஜோதி உரைத்தது எனக் கொண்டு நோக்கலாம். மேயினை மேவினை என்பது விசாரித்துச் சென்று அடைதலாகும். இவ்விசாரணையால், நாமும் கடவுளுமான ஆன்மாவைச் சிரநடு சிற்றம்பலத்தில் விளங்குவதாக அறிந்து, சிற்சபாத்துவாரமாகிய புருவநடு அடைந்து, நெற்றிக்கண் திறக்கப்பெற்று, அருள்ஒளி கண்டுநிற்றலாம். இவ்வளவும் மேவுதல் என்பதற்குப் பொருளாம். இப்படிப் புருவத்திடை நின்று, உள்ளொளியை நினைந்து நினைந்து நினைந்த நினைப்பற்று அந்த உள்ளொளியோடு நாமும் கலந்து நிற்கும் நிலையே உண்மையில் நாம் விளங்கும் நிலையாம். இப்போது சிற்சபையில் விளங்கிக்கொண்டிருக்கின்றது, கடவு ளாகவும் உள்ளது, அதுவே நாமாகவும் இருக்கின்றோம். அகத்தில் நாம் அதுவாக விளங்கிக்கொண்டிருக்கின்றோம். எனினும், புறத்தில் உடற்பற்று காரணமாக இன்ப துன்பத்தில் உழன்று கொண்டு உலகில் பிழைத்துக்கொண்டும் இருக் கின்றோம். இந்நிலை கடந்து அந்நிலை வாழ்வு சேர்தல் வேண்டும். ''இக்கரை கடந்திடில் அக்கரையே, இருப்பது சிதம்பரச் சர்க் கரையே'' என்பது வள்ளலார் அனுபவம். அகங்கண்ட கடவுட் ஜோதியே நாமாகி அங்ஙனமிருந்து அருள்வாழ்வு வாழ வேண்டும். அப்போதுதான் நாம் அது ஆனதாகக் கொள்ள முடியும்.

நம் அடிகளார் இப்படித்தான் அம் மெய்ப்பொருளை, மேவி விளங்கிநின்று, அதுவே தானானார். இப்படி ஆயினதாக யார் சொல்கிறார்கள் என்றால், வேறு யாருமில்லை, அந்த அருட்பெருஞ் ஜோதியே தான் அருள்கின்றது. ஆம் அந்த அருட்பெருஞ்

ஜோதியே, இப்படி மேயினை, மெய்ப்பொருள் விளங்கினை, நீயது ஆயினை என்று அருள்கின்றதே இங்குக் குறிக்கப்பட்டுள்ளதாம்.

''நீயது ஆயினை'' என்பது அக அருள் அனுபவத்தில்தான் விளங்கும் உண்மையாம். அது சுத்த சத் விசார சாதனை முற்றி சாத்திய முற்ற நிலையாகும். இம்முறையல்லாது, வேதநெறி பயில் வோர், ''தத்துவமசி'' அது நீயாய் இருக்கிறாய் என்று பிறர்க்கு உபதேசிக்கின்றனர். அது நாமாய் இருப்பது இயற்கையுண் மையே, எனினும் அனுபவம் அல்ல. நாம் அதுவாக ஆகி விளங்கு தல் வேண்டும். இம்முறை ''துவம்தத்தசி'' என்பர். நீ அதுவாம் அனுபவம் உணர்த்த வந்தது இது. இது தேகப்பற்று கடந்து, அம்பலமுற்று, அருள்நிலை நின்று அனுபவத்தில் பெறும்போது தான் ''நீயது ஆக'' இருக்கின்ற உண்மை வாழ்வில் விளங்கும். இதனால் அருட்பெருஞ்ஜோதியின் அருள் பெற்று அதுவாகி வாழ வழிகாட்டுவது இவ்வடிகள் என்பது உண்மையாம்.

## 83. செழுந்தேனும் தெள்ளமுதும்

***165.*** எண்ணிற் செழுந்தேன் இனியதெள் ளமுதென

***166.*** அண்ணித் தினிக்கும் அருட்பெருஞ்ஜோதி

**(உ-வி)** உலகில் இன்சுவைப்பொருள்களில் சிறந்த ஒன்று தேன் என்பர். சுத்தமான மலைத்தேன், கொம்புத்தேன், குறிஞ்சித் தேன் செழுமையாயிருக்கும். செழுமை என்றால், நீர்போல் இல் லாது, கெட்டியாக, நெகிழ்ச்சி உடையதாக இருப்பதாம். இத் தேன் சுத்த சத்துவ உணவுப்பொருளாகவும், பல பிணி தீர்க்கும் மருந்துப்பொருளாகவும் இருக்கின்றது. என்றாலும் இதிற் குறை பாடும் உண்டு. ஏனெனில், இத்தேன் தேனீக்களின் பேருழைப் பால் சேகரிக்கப்படுவதைக் கவர்ந்து கொள்ள, அவ் ஈக்களை விலக்கவோ, விரட்டவோ வேண்டியிருக்கிறது. மேலும் அத் தேனைச் சேகரிப்பதற்கு மக்களும், ஆபத்திற்கும், கஷ்டத்திற்கும் உள்ளாகவேண்டியுள்ளதாம். அப்படியெல்லாம் பெற்று, முறைப் படி அளவோடு உட்கொண்டால்தான் நலம் உண்டாகலாம். இதுபோன்றே அமுதென விளங்கும் அருஞ்சுவைப்பொருட்களும் பிணிதீர்க்கும் அவிழ்தங்களும் உளவாம். இவைகளையே உலகி யலார் மதித்துக்கொள்ளுவர்.

ஆனால், உலகறியாத உயர்சிறப்புடைய தேனும் அமுதும் உண்டு. உண்மையில் அது தேனுமல்ல, அமுதமுமல்லவாம். அது நம் அருட்பெருஞ்ஜோதியே ஆம். இதுவே நல்ல தேன் போலும், அமுதம்போலும் இருக்கின்றது. எங்கே, எப்படி யிருக்கின்றது என்றால், அண்ணித்து உட்பொருந்தியும், தெவிட்டாது இன்சுவை கொண்டதாயும் இருக்கின்றதாம். இது புறத்திருந்து உட்கொள்ளப்படும் ஒன்றல்ல. இயல்பாகவே உள் அமைந்து உவகை செய்ய உள்ளதாம். ஆகையால், இந்த அருட்பெருஞ்ஜோதிப் பொருளை, உள்ளூற உணர்ந்து எண்ணினாலே பயனளிக்கும் அற்புதம் கொண்டதாம்.

இங்கு புறத்தேன் பற்றியும், தேவ அமிர்தாதி பற்றியும் பெரிதாய் விளம்பி, விளம்பரப்படுத்த வரவில்லை நம் அடிகளார். உலகறிந்த இவற்றைக் கூறி, ஏகதேச உவமைப்பொருளாகக் காட்டிவிட்டு, இது போன்றவைகளைவிட மிகமிகச்சிறப்புடையது நம் அருட்பெருஞ்ஜோதி என்பதை யுணர்த்தவே வந்தார் நம் பெருமானார். தேனும் அமுதமும் பலர் விரும்பி ஏற்பர், எல் லோரும் விரும்பார். பலர் விரும்பினும் அடைதற்கான இடம் பொருள் ஏவல் இன்மையால், கிடைக்கப்பெறார் என்பது தெளிவு. ஆனால், இவற்றிற்கெல்லாம் மேலான நம் அருட்பெருஞ் ஜோதியோ, அறிந்தோர் எல்லோராலும் மிக விரும்பி எக் காலத்தும் ஏற்கப்படுவது. இதனை அடையப் பொருளாளர் களைவிட, இடம் பொருள் ஏவல் அற்ற ஏழையர்களுக்கும் எளி தாய் இருக்கின்றதாம். பொருள் மிக்குடையோர் புறச் சுக வாழ்வில் அமிழ்ந்து அருட்பணி ஏற்காதிருத்தலின், அருள் கிடைப்பதும் அதுகொண்டு அருட்ஜோதியை அடைவதும் அருமையாகின்றதாம். அன்புடைய ஏழையரோ கடவுள் அருளையே வேண்டி வேண்டி அருளடைந்து உய்வர்.

புலன் ஆவற்பெருக்கால் இன்றைய மக்கள், மேலும் மேலும் சுகபோகப் பொருட்களை அதிகம் விரும்பி, வருந்தி முயன்று, பேரளவில் பெற்றும் வீணில் அழிந்து ஒழிந்துகொண்டேயிருக் கின்றனர். இவர்களால், உலகில் அவத்தைகளும் துன்பங்களும் சிதைவும் தான் எங்கெங்கும் பெருகிக்கொண்டிருக்கக் காண் கின்றோம். இவர்கள் புலபோகத்தில் இச்சையற்றவர்களாய், அருளில் நாட்டமுடையவர்களாய், உண்மையான அழியா இன்பில் விருப்பமுடையவர்களாய் இருந்து தயா நன்முயற்சியை

வேண்டிய அளவு மேற்கொண்டால் போதும். அப்போது புறத்தேவை குறையும், அகத்தில் அன்பு பெருகும், அன்புச் செயலால் இன்பமே ஓங்கும். நம் அருட்பெருஞ்ஜோதியே உண்ணின்று நிறையின்ப வெளியீட்டால் சதா இனிக்கச்செய்து கொண்டிருப்பார்.

## 84. சிவம்பெறு, சிந்தையில் துன்பொழி

**167. சிந்தையிற் றுன்பொழி சிவம்பெறு கெனத்தொழில்**
**168. ஐந்தையு மெனக்கருள் அருட்பெருஞ் ஜோதி**

**(உ-வி)** சிவம் என்ற சொல்லைக் கேட்ட மாத்திரத்தில் உலகம் கற்பித்துக்கொண்டுள்ள சைவசமயத் தெய்வ வடிவ மாகப் பலரும் கருதுகின்றனர். அகநின்று உண்மை காண்பார் களே, அன்பு, அருள், இன்பம், அல்லது சத்து, சித்து, ஆனந்தமே தன் இயற்கைப் பெருங்குணமாய்ச் செயலாய் எங்கும் நிரம்பி யுள்ள இறைஜோதியே என உள்ளவாறு உணர்ந்துகொண்டிருக் கின்றனர். அகவுண்மையோர்ந்து, அதனை வெளியிடற்கென்றே ஆக்கப்பட்டது தமிழ். இத்தமிழின் உண்மையே சிவானுபவ நிலை யாக இருக்கின்றது. எனவே, சமயாதீத, மதாதீத அன்பரு ளின்ப அருட்பெருஞ் ஜோதியே முன்னர் சிவம் என்ற சொல் லால் சுட்டப்பட்டது என்று தெரிந்து யாவரும் ஏற்றுக்கொள்ளல் வேண்டும். இத்தமிழ் சிவகற்பனா விளக்கமே அக உண்மை நிரம்பியதாய், அனுபவசித்திக்கு எளியதாய், அருள் உணர்வே யன்றி பிறதுணை ஏதும் வேண்டாததாய் இருக்கின்றதால் நம் அருட்பிரகாசர் அச்சிவானுபவ அடிப்படையில் சுத்த சிவ சன் மார்க்கத்தை வழங்கியுள்ளார். ஆகையால், சுத்த சன் மார்க்கத்தை அருட்பெரு நோக்கோடு ஆழ்ந்து பயின்று எவரும் பெரும்பயன் அடைதலே திருவருட்சம்மதமாம்.

மனத்தில் கவலையொழிய வேண்டுமானால், அம்மனத்தில், தனக்குவமையிலாதான் தாளுக்கு இடம் அளிக்க வேண்டும். இக் கருத்தே இந்தச் சிந்தையில் துன்பொழிய அச் சிந்தையில் சிவம் திகழல் வேண்டும் எனக் குறிக்கப்படுகின்றது. அகம் வளர் அருட்பெருஞ்ஜோதியே இப்படி ''(நீ) சிந்தையில் துன் பொழி'' என்றது. எப்படி துன்பொழிப்பது என்றால், அதற்கு

உபாயம் ''சிவம் பெறுக'' என்று அருள்கின்றதாம். சித்தம் சிவமாக்கிக் கொள்ளுதல் வெற்றுச்சிந்தனையால் ஆகக்கூடியதா யில்லை. புலன் இச்சை தவிர்த்து, ஜீவ தயவால் உள்ளிருந்து பரோபகாரச் செயல் புரியும்போதுதான் சித்த மகிழ நித்த அருட்பெருஞ் ஜோதி உதவுகின்றதாம்.

அருட்பெருஞ்ஜோதிபதி ஆனந்த நடனம் புரிகின்றவராய்க் கொள்ளப்படும். ஆனந்தநடனமாவது, ஆன்மாவுக்கு மெய்யின் பானுபவம் சித்தித்தற்பொருட்டு இடையறாது என்றும் நிகழ்த் தப்படுகின்ற ஆக்கலாதி ஐந்தொழிற் காரியப்பாடாம். இதனால், தன்பால் முற்றும் புகலடைந்த புண்ணியனுக்குத் தன்னையே தந் தருளும் அருட்பெருஞ்ஜோதி, தன் ஐந்தொழிற் செயலையும்கூட அப் புண்ணியன் மூலமாக வெளிப்படச் செய்துவிடுகின்றதாம். இதனால் இந்தப் புண்ணிய சுத்த சன்மார்க்கிக்கு ஐந்தொழிற் செயல் சித்தித்ததாக விளங்குகின்றது. உண்மையில் அந்த ஒன்றான அருட்பெருஞ்ஜோதிபதியே இவனில் இவனாக அரு ளால் விளங்கிக்கொண்டு ஐந்தொழில் இயற்றுகின்றார் என்பது சத்தியமாம். ஒன்றான கடவுளே ஒவ்வொருவரின் உள்ளிருந்தும் விளங்கலால், சன்மார்க்க சித்தி பெற்றோர் எண்ணில் பல வாய்த் தோற்றினும், அக அனுபவத்தில் ஒருவராகவே இருந்து அருள் இன்பம் விளைவிக்கின்றார் ஆம்.

ஆனந்த அருட்பெருஞ்ஜோதியே நம் பெருமானுக்குச் சிந்தையில் துன்பொழிய ஆசித்து அருள்பாலித்து, ஐந் தொழிலையும் செய்ய வைத்துவிட்டிருக்கின்றதாம். இதனால், இவரது உள்ளத்தில் சுத்த ஆனந்தம் என்றும் நிலவக்கூடிய தாய் இருக்கின்றதாம். இந்த ஆனந்தபூர்த்தியான உள்ளத்தில் எக்காலத்தும் சிற்றளவுத் துன்பத்திற்கும் கொஞ்சமும் இட மில்லையாம். இப்படித்தான் சிந்தையில் துன்பொழித்தல் சரி யான முறையாகும். மற்றெந்த வகையாலும் துன்பத்தை அடி யோடு ஒழித்துக்கட்ட முடியாதாம். ஆதலின், அருட்பெருஞ் ஜோதியைப் பெற்று ஆனந்த வாழ்வில் ஓங்குவோமாக.

## 85. அங்கங்கிருந்து அருள்வது

169. எங்கெங் கிருந்துயிர் ஏதேது வேண்டினும்
170. அங்கங் கிருந்தருள் அருட்பெருஞ்ஜோதி

**(உ-வி)** நமது அருட்பெருஞ்ஜோதி எங்கும், என்றும் பரிபூரணமாகவே இருந்துகொண்டிருக்கின்றது. இப்படி இருக்கின்றது என்று எவர் சொன்னாலும், தீர்க்க விசாரித்துத் தெளியுமுன், நம்பி (மெய்யுணராது மூடமாக) ஏற்றுக்கொள்ளக்கூடாது. கடவுட்ஜோதி இருப்பை, மெய்யறிவாற் காண, அருள்ஞானத்தால் உணரவேண்டும். அந்த மெய்யறிவு அல்லது அருள் ஞானமே கடவுள் விளக்கம் கொண்டு திகழ்கின்றதாம். இம் மெய்யறிவுப் பீடம் சிரநடுச் சிற்ஜோதி நிலையமாக இருக்கின்றது அறிஞர் எவர்க்கும் அனுபவமேயாம். இந்தச் சிற்ஜோதியணுவே முதல் முதலில், கருச்சிருஷ்டித் தொடக்கத்தில் நுண்ணிய வடிவிலிருந்து பெருகிக் கருப்பிண்டமாய்ச் சிசுவாய்ப் பின் உலகிடை பிறந்து வளர்ந்து அறிவனுபவங்களோடு வாழ்ந்து கொண்டிருக்கின்றதாம். அந்த முதல் ஒளி அணுவே இத் தேகத்தில், எல்லா அறிவுக்கும், உயிருக்கும், வாழ்வுக்கும், அனுபவத்திற்கும் ஆதாரமாய் இருக்கின்றதாம். இவ்வளவு ஆற்றல்கொண்ட அந்த ஒளி அணுநிலையில் மனம் ஒன்றிச் சலனமின்றி, முழு உண்மையைத் தெரிந்துகொளள முயலும் ஒருவனுக்குப் பக்குவ காலத்தே அருள் அறிவாக வெளியாகிக் கண்டு கொள்ளச் செய்கின்றதாம். அந்த அருள் ஞானத்தால் உணர்த்தப்பெறுவது. அவ்அணு நித்தியமானது, எல்லா உண்மையும் கொண்டது, எல்லா ஆற்றலுக்கும் அனுபவத்திற்கும் உரியது, அதற்கு ஒப்பும் உயர்வும் வேறு இல்லாதது என்பனவாம். இப்படித் தனிச் சிறப்போடு திகழும் இயல்பு இந்த ஓர் அணுவில் வெளியாகின்றது உண்மை அனுபவமேயாம்.

மேற்படித் தனிச்சிறப்போடு திகழும் அற்புத ஜோதி அணுவை ஒவ்வொரு மனிதனுமே தனித்தனி கண்டு கொள்ளக் கூடியதாயிருக்கின்றது. இதனால் ஒருவனில் உள்ளது போன்ற அவ்வொளி அணு யாவருள்ளும் வேறு வேறாக இருப்பதாய்த் தோற்றுகின்றது. உண்மை அப்புடி அல்ல.. அந்த ஒளியணுவில் விளங்கும் சிறப்புப் பொருள் தன்னேரில்லாத ஒன்றாகவே இருந்துகொண்டு, ஒவ்வொரு அணுவிலும் தானே பூரணமாய் விளங்குதல் உண்மை என அருளறிவால் உணர்கின்றோம். இந்த மெய்யறியுணர்வே தன்னுண்மை அருள்ஞானமாகத் தனி ஒருவன் அறிகின்றான் என்னலாம். இதுதான் ''நான்'' என்பதன் அனுபவப்பொருள் விளக்கமாக இருக்கின்றது. கடவுளே இந்த ஆன்ம சிற்றணு வடிவில், அருள்விளக்கத்தோடு

வெளிப்பட்டுத் தானே இவனாய், அல்லது நானாய், எங்கும் தானாய் இருப்பதாக அறியப்படுகின்றது.

நமது அகம்கண்ட அருட்பெருஞ்ஜோதி ஒன்றே ஏக தனிப் பரம்பொருளாய் இருந்துகொண்டு, எங்கெங்கும் தானாய் விளங்கு வதை யுணர்த்துகின்றது. இது அருள் அறிவாற் காணும் உண்மை. இப்படி அருள் ஒளிப் பரம்பொருள் எங்கணும் விளங்குதல் உண்மை என்னும்போது, அப் பரம்பொருள்தானே ஒவ்வொரு உயிரிலும் அகம் பொருந்தியிருந்து கொண்டும், புறஞ்சூழ்ந்து ஏந்திக்கொண்டும் இருப்பதும் உண்மையே ஆம். இதனால் எங் கெங்கும் உள்ள தனித்தனி ஒவ்வொரு உயிருக்கும் எது எது எந்த அளவுக்குத் தேவையோ, அதையதை அந்த அளவுக்கு உரு வாக்கி வழங்கி வழங்கி வாழ்வித்து வாழ்வித்து மேனிலைக்கு ஏற்றிக் கொண்டே இருக்கின்றார் நம்பதி என்பது மெய்யாம். இவ்வுண்மையை உள்ளபடி தெளிகின்றபோதுதான் இந்த, ''எங் கெங்கிருந்துயிர் ஏதேது வேண்டினும், அங்கங்கிருந்தருள் அருட்பெருஞ்ஜோதி'' என்பதன் மெய்ப்பொருள் விளங்கும்.

## 86. சகமுதல் முற்றுமாம்

*171. சகமுதற் புறப்புறந் தங்கிய வகப்புறம்*
*172. அகம்புற முற்றுமாம் அருட்பெருஞ் ஜோதி*

**(உ-வி)** இங்கு சகமுதல் என்பது, மகாபிரபஞ்ச காரண மான எங்கும் நிறைந்த கடவுட் பேரொளிநிலையைக் குறிக்கின்ற தாம். சாதாரணமாக அகம் என்பதை ஆன்மா வெனக்கொண்டு குறிக்கின்றது வழக்கம். ஆனால் இந்த ஆன்மாவின் பெரு நிலையே, எங்கும் நிறை கடவுட்பெருஞ்ஜோதியின் மெய் கொண்ட தனியொரு கூறாக இருத்தலின், அவ் இறைபெரு நிலையைப் பரமான்ம நிலையாகக் கொள்ள வேண்டியிருக்கின்ற தாம். எனவே இந்தப் பரமான்ம பதியைச் சத்துண்மை கொண்ட, சகரமெய்கூடிய அக வடிவமாக, அதாவது (ச்+அகம்=) சகம் ஆகக் கொள்ளப்படுகின்றது. ஆகவே இங்கு சகம் என்பது எங்கும் நிறை அருட்பேரொளிக் கடவுணிலை யையே சுட்டுவதாய்க் கொள்ள வேண்டியுள்ளதாம்.

இப்போது, சகம் என்பதற்குப் புதிய பொருள்: எங்கும் நிறை இறை ஜோதியே ஆம். இந்த ஒளிநிறை முழுப் பிரபஞ்

சமே சகம் என்ற சொல்லுக்கு அமைகின்றதாம். முன்னோர் சகம் என்பதற்கு, உலகம், பிரபஞ்சம் என்று மட்டும் பொருள் கொண்டிருந்தனராம். இங்கு வழங்கப்பட்டுள்ள இச் சொற் பொருள் சுத்த சன்மார்க்க நிலையினின்று காண்பது.

இந்த சகமாகிய கடவுட் ஜோதியே புறப்புறம் தங்கி, புறத்தையும் அகப்புறத்தையும், அகத்தையும் விளங்கச் செய்து கொண்டுள்ளதாம். இங்கு அகண்டாகார வெளி யொளி நிலையே புறப் புறம் என்றாம். இது வெற்று அக்கினி நிலையைக் குறிப்பதல்ல. அக்கினி, சூரியன், சந்திரன், நட்சத் திரம் தான் முன்னர், அகம், அகப்புறம், புறம், புறப்புறம் என்று கொண்டது அக அனுபவ முறைக்காகவாம். ஆதலின், இது வேறு நிலையுண்மையாம். எனவே, சகமுதலாகிய புறவெளி நிலை நின்று நம் அக நிலை ஆகிய ஆன்ம நிலைவரையும் நிரம்பி யுள்ள அருட்பெருஞ்ஜோதி முற்றும் ஆன உண்மை இங்கு குறிக் கப்பட்டதாகக் கொள்ளப்படுகின்றதாம்.

## 87. சிகர வகர உகர அகர மாயது

173. சிகரமும் வகரமும் சேர்தனி யுகரமும்
174. அகரமு மாகிய அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) கடவுள் உண்மை வெளிப்பட்டு அனுபவத்தில் விளங்குவதற்காகவே இந்தப் பிரபஞ்சம் முற்றும் தோற்றுவிக்கப் பட்டுள்ளது ஆகும். அக்கடவுள் அனுபவம் முழுமையாக வெளிப்பட்டு நிலவற்கான ஒரு பக்குவ வடிவம், இந்தத் தத்துவ நிறை மனிதப்பிறவியாக இருக்கின்றதாம். இந்த இயல் உண்மையை உள்ளுணர்ந்து வெளியிட்டவன் தமிழன். அவ் வுண்மைக் கருத்தை வெளியிடற்கே, தமிழ் மொழியையே, அகப் புற நிலைக்குத் தக உருவாக்கி வழங்கிவிட்டுள்ளான். ஆகையால், தமிழின் ஒவ்வொரு எழுத்தும், சொல்லும், கருத் தும், பொருளும் இறையனுபவத்திற்கு உதவக்கூடியதாய் அமைந்துள்ளனவாம்.

மனிதனுடைய கருத்து அல்லது எண்ணம் உள்ளிருந்து உணர்த்த, அதுகொண்டு பொருத்தமாக எழுத்துக்களை உரு வாக்கி, இணைத்து, மொழிந்து வருகின்றான். அந்த அக எண்ணமே

''எண்'' குறியீடாகவும், அவ்வெண்ணத்தை வெளியிடவந்த குறியீடே எழுத்தாகவும் கொண்டு மெய்யனுபவம் பெறக்கூடிய தாயிருக்கின்றதாம். இம் மனிதனுக்கு உலகும் உடலும் புற மாக விளங்க, உயிரும் உணர்வும் அகமாக இருந்து உதவுகின்றன. இந்தப் புற உடல் தோற்றம், புற வான்வெளியினின்று உருவாக் கப்பட்டுள்ளது. ஆகையால், அந்த அகண்ட வான்வெளி நிலையே முதலாக உள்ளதாம். அந்த ஆகாசவெளியிற் பிரிவற இருந்து செயல்படுத்தும் வாயு சத்தியால் பிற பூத நிலைகளும், பூதப் பொருள்களும் உண்டாகிப் பின்னர், அக ஆற்றல் உயிராகிடப் புறப் பூதப்பொருட்களால் தேகம் உருவாகி வளர் கின்றதாம். இதனால், புற ஆகாச வண்ணமே அகரமாம் முதல் எழுத்தாய் விளங்க, உயிர் உணர்வு உகரமாய் இருந்து, மகர மெய்யொளியால் முடிவில் அனுபவமுறுகின்றதாம். இதுதான், அகர உகர மகரம் கூடிய ஓமாகி இம் மனித வண்ணமாய்த் திகழ்கின்றதாம். அகரமே புறவடிவமாக விளங்க, உகரமகரம் இரண்டும் அக எண்ணமாக உள்ளதாம். இவ்வுண்மைக் குறிப்பே, எழுத்துக்களை, ஆனா ஆவன்னா, ஈனா முதலியனவாய் அகர ஈற்றொலியோடு இசைப்பதும், எண்களை, ஒன்று, இரண்டு மூன்று முதலியனவாய் உகர ஈற்றொடு ஒலித்து வந்து ஆயிரம் என்ற நிலை மகர மெய்யொடு கூட்டிக்கொள்ளப்படுகின்றது. எனவே ஓம் என்பது நம் உரு உண்மை கொண்டதாய் அறி விக்க வந்ததாகும். இவ்வளவும் புற ஆய்வில் கண்டு கொள்ளப் படுவது.

மேல், அகமெய் இறையனுபவம் பெற வேண்டியிருக்கின்றது. அகநிலை, ஞானாகாசக் கடவுள் இயல்போடுள்ளதாம். இந்த ஞானாகாசமே, சிதாகாசமாய், சிகர எழுத்தாய்க்கொண்டு அங் கிருந்து எழுந்து செயல்படுத்தும் ஜீவசுவாசம் அல்லது வாசியே வகர எழுத்தாகவும் கொள்ளப்படும். இந்த வாசியின் முடிவில் சித்திப்பது சிவம்—என அக மெய்யொளி நிலை அனுபவமாகக் குறிக்கப்படுகின்றதுமாம்.

புறநிலையில் (அ—உ—ம்) ஓம் என்பதும், அக நிலையில் சிவம் என்பதும் விளங்குதல் உண்மையாம். இவ்விரு நிலைகளையும் சேர்த்துப் பிரிவற்ற ஒப்பற்ற தனியொரு நிலையாகக் கொண்டு விளங்குவதுதான் நம் அருட்பெருஞ்ஜோதியாகும். இக்குறிப்பு,

சிகரமும் 'வகரமும், உகரமும் அகரமும் சேர்தனி அருட்பெருஞ் ஜோதியாகி விளங்குவதாய்க் காட்டப்பெற்றுள்ளதாம்.

## 88. உபரச வேதியின் பரம் அபரம்

**175.** உபரச வேதியின் உபயமும் பரமும்
**176.** அபரமு மாகிய அருட்பெருஞ்ஜோதி

**(உ-வி)** இரசவாதம், கீழான உலோகத்தைப் பொன்னாக ஆக்குவது என்ப. இது சித்த மார்க்கத்தில் உள்ளதாம். பரிசவேதி, பரிசன வேதி என்பது தீண்டுவதால் அல்லது தொடு வதால் பொன்னாக மாற்றுவது எனப்படும். இவைகளைப்பற்றி நம் வள்ளல் குறித்துள்ள விளக்கம் அருட்பாவில் காணலாம். அது இரு பிரிவு கொண்டு இரசவாதம், உப ரசவாதமாம். இவை ஒவ்வொன்றிலும் ஏழுவகை யுண்டெனவும் அறியலாகின்றன. இவ்வாத சித்தியின் பொருட்டு, எத்தனையோ மக்கள் எவ் வளவோ பாடுபட்டும் ஏதோ ஓர் அளவு சித்திக்கப்பெற்றும் பெறாமலும், காலமும் பொருளும் வீணாக்கிவிட்டு ஒழிகின்றார்கள். இதனால், இம்முயற்சி செய்வது அறியாமையா பயனற்றதா என்றால், அப்படி அல்ல. தயவோடுகூடிய சுத்த சத் விசாரத் தால் அகப்பதியோடு பொருந்தி நிற்போர்க்குத் திருவருட் சேர்ப்பால் இச்சுவர்ண சித்தி இயல்பாகவே ஏற்படுவதாய் இருக்கின்றதாம். இவர்களுக்கே இந்த இரசவாதம் உப்ரச வாதம் முழுமையாய்ச் சித்திப்பது. இவர்கள் இதனை எளிதில் செய்யமுடியும். ஆனால் இதில் அவர்களுக்குச் சிறிதும் இச் சையுமில்லை, இலட்சியமுமில்லையாம். பற்றற்றார் இட்ட மலம் பட்ட இடமெல்லாம் பொன்னாம் என்பர். இது உண்மையே.

நமது அருட்பெருஞ்ஜோதியே உண்மையில் மாற்றறியாத பசும்பொன்னாய் இருப்பதோடு, அதனைத் தீண்டாமல் தீண்டி (அருளால் அதுவாக) நிற்போரையும் வேதித்துத் தன்மயமாக ஆக்கிவிடுகின்றதாம்.

> "ஆதியு மாய் அரனாய் உடல்உள் நின்ற
> வேதியு மாய்விரிந் தார்ந்திருந் தான் அருட்
> ஜோதியு மாய்ச்சுருங் காததோர் தன்மையுள்
> நீதியு மாய்நித்த மாகிநின் றானே." — திருமந்திரம்

இதில் குறிக்கப்பட்ட, உடல்உள் நின்ற வேதி என்பது அருட் ஜோதியே. அது நம் அருட்பெருஞ்ஜோதியே என்பது தெளிவு. இந்த உடல் உள் நிற்கும் வேதியின் செயலால், அசுத்த அநித் திய உடலே பொன்மேனியாய்ச் சுத்த நித்திய நிலைபெற்று நிலவு தல் ஒன்றே உயர்சிறப்பு கொண்டதாம். இதுவே பரநிலையாகப் பகரப்படுவது. மற்று அவ் அகமிருந்து வெளியுலகில் பொன் செய்து காட்டுதல் தாழ்வான அபரநிலையாகும்.

இங்கு உபரசவேதி எனக் குறிக்கப்படுவது, உப என் பதன், உ+ப்+அ (அதாவது) அகரவுகரத்தால் சூழப்பட்டு சிரநடு நின்றொளிர் பகரமெய்க் கடவுட் ஜோதி நிலையைச் சுட்டுவ்தாம். இதனையே உபநயனம், உபதேசம், உபவாசம் ஏற்கும் பொரு ளாய்க் கொள்ளலாம். இதுவன்றி உப என்பதற்கு, வேறான, துணையான, பகுதிப் பொருளாகக் கொள்ளுதல் சிறக்காது. எனவே உபரசவேதி நம் அகமுறு ஜோதியேயாம். இச் ஜோதி யின் இருநிலை யுண்மை சுட்டவந்ததே உபயம் என்ற சொல். உபயம் என்றால் இரண்டு என்று பொருள். உபரச வேதியின் உபயம்—பரம், அபரமாக வெளிப்பட்டு விளங்குவது நம் அருட் பெருஞ்ஜோதியே எனத் தெளிவுறக் காட்டுவன இவ்வடிகள். இதுவன்றி மருத்துவ முறையில் குறிக்கப்படும் ''உபரசம்'' 128 சரக்குகளால் பெறப்படும் என மருத்துவர் கூறுவர்.

## 89. அந்தணர் வழுத்தும் மந்தணம்

**177. மந்தண மிதுவென மறுவிலா மதியால்**
**178. அந்தணர் வழுத்தும் அருட்பெருஞ்ஜோதி**

(உ-வி) அந்தணர் உண்மையில் எவ்வுயிர்க்கும் செந் தண்மையாம் தயா அன்பு பூண்டொழுகுவாரேயாவர். அப்படி யார் எவ்வுயிர்க்கும் உண்மை அன்புடன் உதவி உயரின்பம் உண்டுபண்ணுகின்றவர்களாய் இருக்கின்றனர்? அப்படி எவரை யும் இந்த உலக வரலாற்றில் காண்டற்கில்லை. வரலாற்றுக்கு முன்பேனும் இருந்திருப்பதற்கு எந்த அறிகுறியும் காணப்பட வில்லை. கற்பனைக் கதையிலும், கனவிலும் கூட எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகிய அந்தணாளனை அறிதற்கில்லையாம், மெய்ஞ்ஞான அனுபவத்திற்கே வெளியாகும் மெய்ப்பொரு ளாகிய கடவுள் ஒருவரே எக்காலத்தும், எவ்விடத்தும் உள்ள எவ்வுயிர்க்கும் மெய்யன்பால் தேவையானவற்றை எல்லாம்

உதவி உதவி உயர்நிலைக் கேற்றி, உயரின்பம் கொள்ளச் செய்து கொண்டிருக்கின்றார் என்பதுதான் உண்மை.

அப்படியுள்ள தனிப்பெருங் கருணாகரனை, அருள்ஒளி பெறாத மருள்மன மாந்தர்கள் எவ்விதத்தும் அறியார்கள். உண்மை இப்படி இருக்க, மருளாளர் சிலர் மன அறிவு கொண்டு, கடவுளான்ம இயல்பை ஏகதேசம் அறிந்து, ஏகதேச ஆற்றலும் பெற்றுக்கொண்டனர். இவர்களே வேத வேதாந்தங்களை எல்லாம் படைத்துக் குவித்துவிட்டனர். அந்த வேதநாயகன் தான் பரப்பிரம்மம் அல்லது கருணாகரக் கடவுள் எனக் கூறிவைத் துள்ளனர். இந்தக் கற்பனைக் கடவுளையே எவ்வுயிர்க்கும் செந் தண்மை பூண்ட அந்தணனாகப் புனைந்துரை செய்துவிட்டனர். இவர்களே தங்களைப் புறத்தேக நிலை கடந்து, அகப் பிரம்ம சொருபிகளாய் இருப்பதாக விளம்பரப்படுத்திக்கொண்டு தாங்களே பிராமணர்கள் என்றும், அந்தணர்கள் என்றும் சொல்லிக்கொண்டார்கள். இவர்கள்தாம் எவ்வுயிர்க்கும் செந் தண்மை பூண்டொழுகுகின்றவர்களா?

மெய்யருள் அறிவால் நம் அருட்பெருஞ்ஜோதி தனிப்பெருங் கருணைக்கடவுள் உண்மையை உள்ளவாறு காண முடியும். இந்த ஒன்றான பேரருட்பெரும்பதியே எவ்வுயிர்க்கும் கருணை பாலித்துக்கொண்டும் கடைத்தேற்றிக்கொண்டும் இருக்கும் உண்மை அந்தணன் எனலாம். இந்த அந்தணன் என்ற சொல்லையேகூட அம், தணன் என்று பிரித்துக்கொண்டு பார்த் தால் உண்மை விளங்கும். ஆம், அம் என்பதை, அ-உ-ம்=ஓம் என விரித்துக் கொள்ளலாம். இதற்குப் பொருள் அருளே. அடுத்துள்ள தணன் என்பது, தணல் அல்லது தழல் (அனல் அல்லது அழல்) நெருப்பொளி எரியேயாம். ஆதலால் இத் தணன் ஜோதி சொருபியாம் ஒளிவடிவினனே. எனவே, அந் தணன் என்பதற்கு இன்று காணும் பொருள் நம் அருட்பெருஞ் ஜோதியே எனக் கொள்ளலாம்.

மேற்படி அருட்பெருஞ்ஜோதியாம் பதியையே உண்மை அந்தணனாகக் கண்டு, வாழ்த்தி, வணங்கி வாழ்கின்ற சுத்த சன் மார்க்கிகளே உண்மை அந்தணராக இருக்கின்றனர். இத் தூயர் கள்தாம் மறுவிலா மதியால், மருளிலா அருள் அறிவால் உண்மைப் பொருளைக் கண்டவர்களாவர். அந்த உண்மைப் பொருளே அக

மாகிய உள்ளிருக்கும் மறைபொருள். இந்த மறைபொருளே மந்தணம் எனப்படுவது. மந்தணமென்றால், இரகசியம் என்று பொருள் படுத்துவர். கடவுள்தான், மறைபொருளாய், வேத மந்திர வடிவினனாய் இருத்தல் உண்மையாம். இதுவே மந்தண மாகக் கூறப்படுவது. இதனை இரகசியம், சிதம்பர ரகசியம் என்றெல்லாம் சொல்லிக்கொள்ளுவர். அருள்ஞான சுத்த சன் மார்க்கரே இந்த உண்மையை, மந்தணத்தை மறுவிலா மதியால் காண்கின்றார்கள், கண்டு வழுத்துகின்றார்கள். அத்தோடு அத்துவிதமாய் இருந்துகொண்டு, சூழ்நரை வாழ்வித்துக் கொண்டும், தாமே வாழ்ந்து கொண்டும் விளங்குபவராவர்.

இனியும் ஒருமுறை இந்த இரண்டடிகளைப் பொருளுணர்ந்து ஓதிப் பாருங்கள்.

"மந்தண மிதுவென மறுவிலா மதியால்
அந்தணர் வழுத்தும் அருட்பெருஞ்ஜோதி"

திருவருள் சேர்க்கையால் அனுபவமுண்டாகும்.

## 90. இதய அம்புயத்து அருட்பெருஞ்ஜோதி

179. எம்புயக் கனியென எண்ணுவா ரிதய
180. அம்புயத் தமர்ந்த அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** பூவிற் சிறந்தது தாமரை என்ப. இதில் தெய்வீக நலம்பல அமைந்துள்ளதை யோர்ந்து யோக ஞானியர் அப்படிப் போற்றிக்கொண்டனர். அத் தெய்வ உண்மை விளக்கத்திற்குத் தக அதற்குக் கற்பனைப்பெயர் பல ஆக்கிக் கொடுத்துள்ளனர். அம்பு என்றால் தண்ணீர், ஜம் என்றால் தோன்றுதல். தாமரை தண்ணீரில் தோற்றலின் அம்புஜம் என்பாராயினர். தண்ணீரைக் குறிக்கும் பிற சொற்களோடு கூட்டியும், ஜலஜம், சரோஜம், வாரிஜம், வனஜம் முதலியனவாய்க் கொள்ளக்கூடும். இவையெல்லாம் தாமரையையே சுட்டும். இதற்குமேல், அம்பு என்பதை அ,உ,ம்,=ஓம் என்னும் கடவுட்சார்பு கொண்டதாய் அதிலிருந்து தோன்றியுள்ள ஒளிநிலை யுலகுயிர்ப் பொருள்கள் எல்லாம் அம்புஜமாக, அகநிலைப் பகரவடிவ அருள்ஞான சக்தி பீடத்திலிருந்து காணலாகின்றதாம். அந்த அருட்பேரொளி நிலையயே, அருட் ஜோதியாய், அருள்விந்தமாய், அல்லது அர

விந்தமாய் ஆக்கிக்கொண்டு தாமரையாகப் பொருள்படுத்து கின்றனர்.

எங்கும் நிறைந்துள்ள அருட்பெருஞ்ஜோதியினின்று, ஓர் அணுவே ஆன்மாவாகி அது ஆயிரமிதழ் கமலமாகத் தலைநடுவுள் ஒளிர்கின்றதாம். இத் தாமரையில்தான் அருட்பெருஞ்ஜோதி வீற்றிருந்து, அருள் வழங்கத் தருணம் எதிர்நோக்கி இருக்கின்ற தாம். இந்த இறை ஜோதியினின்றே உயிர்ச்சக்தி எழுந்து இதயத்தில் தங்கி ஜீவனையும் தேகத்தையும் விளங்கச் செய்து வாழ்விக்கின்றதாம். இந்த இதயமும், மற்ற இறையொளிச் சக்தி தங்கும் ஆதாரபீடங்கள் எல்லாமுமே தாமரைகளாகவே கூறுவர் யோகியர். நெஞ்சினிடத்துத்தான் உயிரியக்க, இரத்த ஓட்டச் செயல் காணப்பட்டு உடல் வலிமை அல்லது ஆற்றல் விளங்குகின்றதாம். ஒருவனது இந்த உடல் ஆற்றலே தோள் வலிமை, புஜபலம் என்பர். இப் புஜபலம் என்பதே புஜக்கனி அல்லது புயக்கனியாம். இது குறித்தே இங்கு,

"எம்புயக் கனியென எண்ணுவார் இதய
அம்புயத் தமர்ந்த அருட்பெருஞ்ஜோதி"

எனப்பட்டுள்ளதாம். யார், எவர் இந்த நம் அருட்பெருஞ் ஜோதியைத் தம் இதயத் தாமரையில் அல்லது நெஞ்சக் கமலத் தில் எழுந்தருளி விளங்குவதாகக் கண்டு துதிக்கின்றார்களோ, அவர்களின் புயக்கனியாக மெய்யாற்றலாக இருக்கின்றதாம் இது.

உடற்பற்று நீங்காதார் இதயத்து எழுகின்ற தெய்வ ஆற்றல் அருட்பெருந்தன்மை கொண்டதல்ல. ஆதலின் அது அவ்வளவு சிறப்புடையதாகாதாம். சுத்த சன்மார்க்கியோ ஆன்ம அணுவடிவினனாய், அனக அருட்சுடர் பரப்பிக்கொண்டு திகழ்கின்றான். அந்த ஆன்ம ரூபிக்கு இதயம் அவ்வணுவின் நடுவிடமேயாம். (ஒன்றன் நடுவிடத்தை இதயம் என்று கூறுவது சகஜமே.) இந்த சுத்த சன்மார்க்கியின் அக நடு விருந்து, அனகமுற விரிந்து பிரபஞ்சவெளியெலாம் நிறைந்து பேரருட் பெருஞ்செயல் புரிந்துகொண்டிருப்பது அருட்பெருஞ் ஜோதியே என்பது உண்மை. இவ் அருட்பெருஞ்ஜோதியின் ஆற்றலால் இவன், விதியை வென்று, இறப்பையே ஒழித்து

விட்டு மரணமில்லாப் பெருவாழ்வில் விளங்கிக்கொண்டிருப்பான். இதுதான் எவர்க்கும் உரிய பெறலரும்பேறு ஆகும்.

## 91. அடியருக்கே தருவது

*181.* செடியறுத் தேதிட தேகமும் போகமும்

*182.* அடியருக் கேதரும் அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** எல்லோருக்கும் தன் அருள் நியதிப்படி, விதி முறைப்படி, வேண்டுவனவெல்லாம் காலத்தே வழங்கி வழங்கி வாழ்வித்து இன்ப நிலைக்கு ஏற்றுவதுதான்' கடவுளர் திருவுள் ளம். இதுதான் பொது விதி. இவ்வுண்மையை மெய்யறிவு கொண்டு பகுத்தறிகின்ற அருளாளனே தெரிந்துகொள்ளுகின் றான். இவனே, இந்த இறை ஜோதித் தன்னுள்ளிருந்து ஆள்வதேபோல், பிற எவருள்ளும், எவ்வுயிருள்ளும், எப்பொரு ளுள்ளும் இருந்துகொண்டு ஆண்டருளுகின்றார் என்பதையும் அறிகின்றான்.

ஒவ்வொரு மனிதனுக்கும் அகமாகிய சிற்றம்பலத்திருந்து, அருளாணையால் ஜீவ தேக போகப் பொருள்களை எல்லாம் வருவித்துக்கொடுக்கிறார் நம் பதி. இவ்வுண்மையை யுணராதாரே, தம் உண்மைத் தேவையையும், எது கொண்டு எப்படி வாழ்ந்து உய்யவேண்டுமென்பதையும் சற்றும் அறியாது, விருப்பு வெறுப் பால் பலபல வேண்டியும், மறுத்தும் அவத்தைப்பட்டுக்கொண் டுள்ளனர். சிலரோ நல்வினைப்பயனால், நோய்நொடி யில்லாம லும், வறுமையும் வாட்டமும் நேராமலும், இடம், பொருள், ஏவல் வசதியோடு வாழ விதிக்கப்பட்டுள்ளனர் என்றாலுங்கூட இவர்களின் அந்த வாழ்வும் ஒரு குறிப்பிட்ட காலம் வரையிருந்து ஒழிய, முடிவில் எப்படியோ அழிந்து ஒழிந்து போகின்றார்கள்.

ஆகையால் நிறை இன்ப வாழ்வுடன் என்றும் நிலவ வேண்டுவோர், அருட்பெரும்பதியோடு ஒன்றி இருந்துகொண்டு வாழ்க்கையை நடத்த வேண்டும். கடவுள் உண்மையைத் தன்னுள், சத் விசாரத்தால் காணும்போது, அது அவரது திரு வடியாக விளங்குகின்றது. அத்திருவடியை மறவாது, அதன் ஆணைக்கு இணங்க வாழ்கின்றபோது அந்த அடியானுக்கு விசேடநலம் செய்பவைக்ளையே வழங்குகின்றார் ஆண்டவர்.

இந்த அடியானுடைய பழவினைப்பயனால் வரும் கேட்டை யொழித்து, விதியை விலக்கிவிட்டு, அருள் ஆற்றல் மிக்க, சுத்த தேகத்தையும், சுக போகத்தையும் வழங்குகின்றார் என்பதுதான் இவ்வடிகளின் சாரம். செடி என்பதற்குக் கேடு, தீமை, துன்பம் என்ற பொருள் உண்டு. ''க்ஷேடி'' என்ற திரிசொல்லின் வழி தோன்றியது இச் செடி என்பர். க்ஷ-க எனத் தமிழில் வழங்கப் படுதல் மரபு.

## 92. அன்பருக்குச் சுகம் தருவது

*183.* துன்பறுத் தொருசிவ துரிய சுகந்தனை

*184.* அன்பருக் கேதரும் அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் அன்பர்களுக்குச் சுகமே தருகின்றாராம். ஆனால் இந்நாள் உலகில் அன்பர்களே அதிகம் துன்பச் சோதனையில் வாட்டப்படுவதாகத் தோற்று கிறது. இது ஏன் என்றால், அன்பர்கள் உண்மையில் தேக போகத்தில் பற்றற்று நிராசையோடு இருந்துகொண்டு, சூழ் நருக்கு உயிர் விளக்க ஆன்ம விளக்கப் பணிபுரிவதே தம் கடமை யாகக் கொண்டு வாழ்ந்தால் எந்த வித சோதனையும் வாராது; புறத்திருந்து பார்ப்போருக்குச் சோதனைபோல் தோன்றினும் கூட மெய்யன்பர்களுக்கு நன்மையாகவே விளங்கும். உண்மை இப்படி இருக்க உலகில் அன்பர்களே மெய்யாகவே துன்புறு கின்றார்கள் என்றால், அதிலுள்ள குறைபாடு அந்த அன்பர்களின் முரணான நிலையே காரணம் என்று அறியலாகும். மெய்யன்பு நிறையுள்ளம் கொண்டு, அதனைச் செயல்படுத்தும் வாழ்வில் முனைந்தவர்களுக்கு எந்த விதத் தடையும், கேடும், துன்பமும் உண்டாகாது. இதுவே கடவுள் மெய்யாணையாகும்.

மெய்யன்பர் புலபோக வாழ்வைப் பெரிய சுகமாகக் கருத வும் கொள்ளவும் மாட்டார்கள். அருட்பக்குவநிமித்தம் ஏற்படும் சிறு சிறு சோதனைச் செயல்களைத் துன்பமாக எண்ணி வீணில் கவலையும், சஞ்சலமும் அடையமாட்டார்கள். அச்சோதனைகளை மறுக்காது பணிந்தேற்று அன்புச் செயலில் இணைத்துவிடு வார்கள். இதனால் ஆண்டவர் அன்பருக்குத் தரும் சுகம் வெறுஞ் சுகமல்ல; துரிய சுகம் என்றும் அதுவும் சிவதுரிய சுகம் என்றும் குறிக்கப்படுகின்றது.

சுகம் என்பது பொதுவாக இன்பமேயாம். அந்த இன்பம் விழிப்புநிலையில் அனுபவப்படுவது. சாக்கிரநிலையில், ஜீவ உணர்வில், கரணேந்திரிய வழியாக ஏற்படுவது இந்த இன்பம். உயிரின் இன்ப உணர்வுக்கு ஆதாரம் ஆன்மாவேயாம். ஒருவன் உடற்பற்றோடு கூடி வாழ்கின்றபோது அனுபவிக்கின்ற சுகமெல் லாம் சுத்தமானதல்ல. மேலும் சாக்கிரத்தில் புற அனுபவமாய் விளங்கியும், சொப்பனத்தில் அக அனுபவத்தில் தோற்றியும், சுழுத்தியில் அருகி மறைந்தும் கிடக்கின்றதாம். உடற் பற்றொ ழிந்து, தன்னை ஆன்ம வடிவினனாக அறிந்து அந்நிலையிற் பிற ழாது வாழும் ஒருவனுக்குக் கிடைக்கப்பெறுவது ஆன்ம சுகமாம். இதற்குமேலேதான் குருநிலை என்னும் அருள் அனுபவத்தானம் தோற்றுவது. ஓர் ஆன்மாவுக்குச் சுழுத்திநிலை முடிவல்ல. தேகேந்திரியத்திற்குச் சுழுத்தி முடிவாம். ஆகையால், ஆன்மா னுபவ நிலைக்கேறியவன் சுழுத்தியில் ஒடுங்கியொழியாது, மேல் சுத்த ஆன்ம உணர்வோடு நிலவுகின்றான். இதுவே துரியநிலை யாம். துரியம் என்றாலே சுத்தமான, தூய்மையான என்றே பொருள்படும். இந்நிலையில் இருக்கும்போது ஏற்படுகின்ற, சலனமற்ற நினைப்பு மறப்பில்லாத அமைதியான உணர்வுதான் துரியானந்தமாக உள்ளதாம். இத்துரிய சுகத்தில் இருப்பவ னுக்கு, இடமும் காலமும், சூழ்நிலையின் இருப்பும் தோற்றா. ஆனால், இச் சுகானுபவமோ உடலில் உயிர் விளங்கும் வரை இருந்து மறைந்து சூனியமாகிவிடுவதாம். ஆகையால், இத் துரிய சுகம் பெரிய சுகமல்ல. உண்மையில் ஆன்மா கடவுட் சிற்சொரூபமாய் இருக்கின்றதால், அதுவாம் மனிதனும் கடவுள் வண்ணனேயாவான். அப்போது அருள் உணர்வால் அல்லது குரு துரிய ஞானத்தால், தான் ஆன்மா என்பது போய், தான் சிவன் அல்லது அருட்பெருஞ்ஜோதி வடிவினனே என உணர்கின்றான். இந்த நிலையே சிவ துரிய நிலையாக மொழியப் படுகின்றது. இதில் விளைகின்ற இன்பமே சிவ துரிய இன்ப மாக இங்கு குறிக்கப்படுகின்றதாம்.

மெய்யன்பருக்கே இந்த மேலான துரிய சுகந்தனை வழங்கு கின்றார் நம் அருட் பெருஞ்ஜோதிபதி. மேலும் இவன், இத் துரியானுபவத்தை சுத்தசன்மார்க்க நிலை நின்று அனுபவிக் கின்றதால் அதற்கு அழிவுமில்லை, முடிவுமில்லையாம். இந்தச் சுகநிலை பெற்றோன் அதிலே அமிழ்ந்து மூழ்கிப்போவதில்லை. சாக்கிர, சொப்பனநிலை கடந்து சுழுத்தியும் தாண்டி மேல் துரி

யத்தில் தோய்ந்தும், மெய்யின்பானுபவம் கெடாது நித்திய விழிப்போடு விளங்குகின்றான். இந்நிலையையே சுத்த துரியாதீத அல்லது சாக்கிராதீத நிலை என்பர். இந்நிலையில் விளங்கும் இன்பம்தான் அழியாப் பேரின்பம் ஆகும். இவ்வின்பநிலை யுற்றவர்களே எக்காலத்தும் எதனாலும் துன்பத்திற்கு ஆளா கார்கள். இது நம் அருட்பெருஞ்ஜோதி, அன்பருக்கே தரும், துன்பமில்லா சிவ துரிய சுகப்பெரு வாழ்வாகும்.

## 93. பொதுவும் சிறப்பும், புதியதும் பழையதும்

**185.** பொதுவது சிறப்பது புதியது பழையதென்
**186.** றதுவது வாய்த்திகழ் அருட்பெருஞ்ஜோதி

**(உ-வி)** எல்லாமானவர் என்றும், ஒன்றுமல்லாதவர் என்றும், என்றுமுள்ளவர் என்றும், என்றும் வெளிப்படாதவர் என்றும், அனாதியானவர் என்றும், ஆதி அந்தமில்லாதவர் என்றும், எல்லாம் வல்ல தனித்தலைமை ஒப்பரும் பதியா யுள்ளவர் நம் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே என்பது உண்மையாகும். இங்கு அந்தப் பதியை முதலில் பொதுவும் சிறப்பும் ஆனது என்கின்றார் நம் அருளடிகளார். பொதுவாவது எங்கும் நிரம்பிய கடவுள்தானே, பேருலகத்து எப்பொருள் வடி வாயும், எவ்வுயிர் வடிவாயும் தோற்றி விளங்குகின்ற நிலையாம். உள் அழியாதிருக்கும் பதியே, புறத்தோற்றம் யாவும் உடைய வராய் இருக்கின்றார். இதனால் எதுவும் அவருடைய வடி வாய்க் கொள்ளலாம். எல்லாம் ஆண்டவருக்குப் பொது வடிவமே என்பது ஆன்றோர் உட்கோள். ''பொது வன்றித் தங்கும் இடம் போச்சு'' என்றும், சிறப்பிலி எம் இறை என்றும் கூறியுள்ளனர் முன்னோர். எந்த ஒரு வடிவமும் கடவுளுக்குப் பொதுவாய் இருக்கிறதே யல்லாது, ஏதோ ஒரு குறிப்பிட்ட வடிவம்தான் அவருக்கு உரியதாக இருப்பதாகக் காணப்பட வில்லை. ஆகவே கடவுளுக்குத் த்னிச்சிறப்பு வாய்ந்த ஒரு வடிவம் இதுவெனக் கொள்ளற்கில்லை என்பது அக முணர்ந் தோர் உறுதிமொழி.

இப்பொழுது, அந்தப் பொதுவான ஆண்டவருக்கு ஒரு சிறப் புருவமும் உண்டு என்பதை வெளியாக்கிவிட்டது நமது அருட் பெருஞ்ஜோதி. நித்திய பரம்பொருளாய் நிலவும் ஆண்டவருக்கு

இந்தப் பேருலகில் அழிந்துபடும் உருவங்களே, யாவுமாய்த் தோன்றித் தோன்றி யொழிந்து கொண்டுள்ளது இயற்கையாம். இப்படி அழிவுறும் வடிவங்களில், ஏதேனும் ஒன்று, என்றும் அழியாது விளங்கிக்கொண்டிருக்குமானால், அந்த ஒன்றினை ஆண்டவர்தம் சிறப்புவடிவமாகக் கொள்ளலாமன்றோ! ஆம், கொள்ளலாம். அகநின்று ஆளும் அருட்பெரும்பதி, மனிதப் பிறப்பு வடிவுகொண்டு விளங்குகின்றதும் பொதுநிலைத் தோற் றமே. இந்த வடிவம் பிற எந்த வடிவையும் போல் தோற்றி மறைவதாகவே இருந்தால், ஆண்டவருக்குச் சிறப்பு வடிவ மென்று கொள்ளமுடியாது. ஆனால், அருட்பக்குவவசத்தால், ஆண்டவரே இந்த மனித வண்ணமாய் ஆகியுள்ளதை வெளிப் படுத்தி, நிறைமனிதனில் நித்திய இன்பானுபவம் திகழ வந்து விட்டுள்ளார். இதனால், எங்கும் நிரம்பிய கடவுள், இந்த அருள் மனிதனின் ஆன்ம சிற்றணுவிலிருந்து தன் அருட்பெருஞ்செய லால் எல்லாம் விளங்க விளங்குகின்றார் என்பது சத்தியம். இக்காரணத்தால் இக்கடவுள் மனித வடிவம், ஆண்டவர் கொண் டுள்ள நித்தியானந்த வடிவமே என்பது தெளிவு. இது ஒன்றே ஆண்டவர்க்குச் சிறப்பு வடிவம் ஆம். உண்மையில் கடவுள் ஒரு வராகவே இருக்கின்றார். இருந்தும், அவர் ஒருவரே எங்கெங்கும் தானே பூரணமாய் அகநிலை நின்று, புறத்தே அனந்த வண்ண பேத உருவொடு திகழ்கின்றார் என்பதும் உண்மையே. இதனால், நம் அருட்பெருஞ்ஜோதிபதி, ஒரு சிறப்புருவம் ஏற்றுத் திகழும்போது, தனக்கு வேறாக இல்லாது, தானே பிற எவ் விடத்து எவ்வடிவும் கொண்டுள்ளதாய் இருக்கின்றார். எனவே இந்த அனுபவம் விளங்கும் ஒருவடிவே அச் சிறப்பு உருவ மாகவும், மற்ற அது போன்ற தோற்றங்கள் யாவும் அந்த ஒன்றன் வண்ணமேயல்லாது அது பல்வேறாகாது என்றும் தெளியலாகும். ஆகவே கடவுளுக்குப் பொதுவடிவம் பலப்பல. சிறப்பு வடிவம் ஒன்றே ஒன்று. சுத்தசன்மார்க்கம் தோன்றாத காலத்தில், இந்தச் சுத்த சுகானந்த வடிவம் அனுபவத்தில் ஏற்கப்படாததினால், கடவுளுக்குச் சிறப்பு வடிவம் ஒன்றும் இல்லை என்று முடிவுகட்டி விட்டிருந்தனர்.

இனி, நம் அருட்பெருஞ்ஜோதியே, புதியதும் பழையதும் ஆக இருக்கின்றதையும் அறிந்து கொள்ளலாம். அனாதியே இருக்கும் இதற்கு, எது பழையது, எது புதுமையானது என்று கூறுவது? எல்லாப் பழையதற்கும் முந்திய பழையதாய்

எல்லாப் புதியதற்கும் மேல்வரும் புதியதாய் இருப்பதும் இந்த நம் பதியே ஆம். காலமும், வடிவமும், மாற்றமும், தோற்றமும் கடந்து ஒருபடித்தாய் திகழும் ஒன்றே, புறத்தே காலமும், வடிவமும் மாற்றமும் தோற்றமும் கொண்டு விளங்கக் கண்டு பழையதென்றும் புதியதென்றும் கொள்ளப்படுகின்றதாம்.

அருட்பெருஞ்ஜோதியைக் கண்டு அதுவே இங்ஙனம், பொதுவென்றும், சிறப்பென்றும் புதிதென்றும் பழசென்றும் விளங்கும் இயல்பறிந்து போற்றுகின்றார் நமது திருவருட்ஜோதி வள்ளலார், என்பது இவ்வடிகளின் கருத்தாம்.

## 94. பரை ஆதனத்துச் சேதனப் பெருநிலை

187. சேதனப் பெருநிலை திகழ்தரு மொருபரை
188. ஆதனத் தோங்கிய அருட்பெருஞ்ஜோதி

(உ-வி) ஒருபரை ஆதனத்து ஓங்கிய அருட்பெருஞ்ஜோதி, சேதனப் பெருநிலை திகழ்தருகின்றதாய் அன்வயப்படுத்திக் கொள்ளலாம். நமது அருட்பெருஞ்ஜோதி வீற்றிருந்து திகழ்கின்ற இடம், ஒரு பரை ஆதனம் எனப்படுகின்றது. பரையாவது சக்தி என்பர். பரன் பரை இரண்டும் கடவுள் விளக்க உண்மைத்தத்துவமாய் ஆண்பெண் இயல்கொண்டு விளங்குவனவாம்; இவை இந்த பிண்டத்தில் விந்து நாத விளைவாகவும், புற அண்டத்தில் (உலகில்) ஒளி ஒலியாகவும் திகழ்கின்றனவாம்.

பரம் மேலானது; அபரம் தாழ்வானது. பரநிலை ஆணியல் அகப்பொருளாய் அபரநிலை பெண்ணியல் புறவுடல் வடிவாய் இருக்கின்றது. அகத்தேயுள்ளது சேதனப் பெருநிலை எனப் படுகின்றது. சேதனம்: அறிவு. இந்த அறிவுக்குப் பீடமாக இருப்பது இந்தப் பொறியுடம்புதான். இவ்வுடலில் சிரநடு ஓங்கார பீட மீது தான், மெய்யறிவு கடவுட்சுடராய் ஒளிவிட்டிலங்குகின்றது. இவ்வறிவிருக்கையே இங்கு பரை ஆதனமாகப் பகரப்பட்டுள்ளது. மனித உடலில் இந்தப் பீடத்தில் அல்லாது, இவ்வொளி விளங்காது. இவ்வுடல் ஒரு கண்ணாடி (Bulb) ''பல்பு'' என்றால், இந்த ஜோதி ஆதனம், மின்னொளி இழைதிகழ் இடமாம். ஒருவனில் அருட்பெருஞ்ஜோதி பிரகாசிக்கின்ற நிலை, மின்னொளி பொருத்தப்பட்டு மிளிரும் நிலை

யாகக் கொள்ளலாம். இம் மின்விளக்குப் போன்றுதான் நம் அருள் விளக்கு அருள்ஞான பீடத்தின் ஒளிர்கின்றதாம். ''பல்பு'' இல்லாது விளக்கு விளங்காது. இதுபோல்தான் இம்மானிட உடல் இல்லாது அருள் விளக்கு திகழாது.

அருட்பெருஞ்ஜோதி மிகப் பெரிது என்றாலும் அவ்வளவு பெரிய ஜோதியின் சொரூப, ரூப, சுபாவம் எல்லாம் முழுமை யாகவே இந்த மனிதச் சிரநடு சிற்றணுவிற்றானே இன்று வெளிப்பட்டு விளங்கக் காண்கின்றோம். பெரியதிற் பெரிய தாகிய அந்தப் பரம்பொருள், சிறியதிற் சிறியதாகிய இந்த ஆன்ம சிற்றணுவில் பூரண அனுபவம் தர வெளியாகின்றது என்றால், இந்த ஞானான்மாவின் சிறப்புதான் என்னே! இத னைக் கூறவே, அதனைச் சேதனப் பெருநிலை என்றார். இந்த ஞான அணுவின் பெரும் பெருமையை யுணர்த்த வந்தது இந்தப் பெருநிலை என்ற சொல்.

பழநெறியிற் சென்று புறத்திருந்து உள்ளொளியை ஒரு வாறு உணர்ந்துணர்ந்து பாவித்து நின்றும், சிறிதளவு திருவரு ளின் ஆற்றல் பெற்றே அற்புதச் சித்தாடிச் சென்றனர் ஆனந்த சித்தர்கள் பலர். இப்பொழுதோ சுத்த சன்மார்க்கத்தால் நம் வள்ளல் அகநிலையில் கூடாது கூடி இயல்பாகவே யிருந்து கொண்டு, அருட்பூரணத்தால் அழியாப் பெரும் ஞானசித்தராகத் திகழ்கின்றார். நம் அருட்பெருஞ்ஜோதிபதிக்கு இது முதல் பரை இருக்கை ஆகிய இம் மனித வடிவம் சுத்த சுகானந்தமய மாகி நித்தமும் பிரியாது நிலவற்காகி விட்டதாம்.

## 95. ஆமயத் தடைதவிர் ஓமயத் திருவுரு

*189.* ஓமயத் திருவுரு வுவப்புட னளித்தெனக்
*190.* காமயத் தடைதவிர் அருட்பெருஞ்ஜோதி

**(உ-வி)** ஆ-என்பது பசுவாம் ஆன்மாவாக மொழியப்படும். இந்த ஆன்மாவோ எங்கும் நிறை பரம்பொருளாம் பரமான் மாவின் பூரண இயல் கொண்ட சிற்றணுவாக இருக்கின்றது. அதாவது, கடவுளே பூரணானந்த அனுபவம் வெளிப்பட இந்த ஆன்மாவில் உட்பொதிந்து நிலவுகின்றதாம். ஆனந்தானுபவம் கிடைக்கப் பெறாதவரையும் அவ்வான்மாவுக்குத் திருவருள்

நியதிப்படி முறையாக ஒவ்வொரு உயிரின வடிவங்கள் வந்து வந்து சென்று கொண்டே யிருக்கும். இந்த வடிவ ஆக்கமும் நீக்கமும்தான் பிறப்பும் இறப்புமாக ஒருவனுக்கு விளங்குகின்றதாம். இவ் அல்லல் பிறவித் தொடர்பால், வாழ்வும் மரணமும் உண்டாவதால், பலவாகிய சுக துக்கங்கள் ஒவ்வொரு பிறவியிலும் சூழ்ந்து வருத்துகின்றனவாம். இத் தொல்லைப் பிறவித் தளை நீங்க வேண்டி மனிதன் திருவருளை வேண்டி நிற்கின்றான். இதுவே ஆமயத் தடையாகக் கருதப்படுகின்றதாம். ஆமயம் என்பது ஆன்ம இயல்பாம் இயற்கைநிலை என்பர். இது ஆன்மாவுக்கு அல்லல் செய்வதாய்த் தோற்றலின் இவ்வியல்நிலை, ஆன்மாவின் சுபாவமாகிய இயற்கை மல பாசத்தளையாக, மூலமலமாக மொழிகின்றனர்.

மேற்படி ஆன்மாவின் பிறவிக்குக் காரணம் ஆன இயல்பை அல்லது ஆமயத்தை மாற்றத், தடையைத் தவிர்க்க நம் அருட்பெருஞ்ஜோதி உதவுகின்றதாம். எப்படி என்பதைக் காண்போம். இந்த அருட்பெருஞ்ஜோதியே ஒவ்வொரு ஆன்மாவின் கண்ணும் இயல்பாகப் பொருந்தி நின்று சூழ்உரு எதுவும் தோன்றவும் மறையவும் ஆணை செய்கின்றதெனத் திருவருளால் இன்று அறிகின்றோம். இதனால் ஆன்மாக்களுக்குத் தேகம் வருவதும் போவதும் ஆண்டவரின் அருளியற்செயலே என்பது தான் உண்மையாம். எனவே, அருட்பெருங்கடவுள்தானே, ஆன்ம அணுமயமாய் இருந்துகொண்டு, தன் அருளையேதான் ஐஞ்சக்திச் சூழ் வண்ணங்களாய்க் கொண்டு அனாதி காலமாகத் திகழ்கின்றார் என்றறிகின்றோம். இந்த உண்மை அறிந்து கொள்ளப்படுவதற்கு அடுத்த நிலையாய் இருப்பதுதான், மனிதன் தன் உள், தன்னினும் வேறாய்ச் சிறந்திலங்கும் (கடவுள்) மெய்ப்பொருள் விளங்கக் காண்கின்ற நிலையாம். இந்த நிலையில்தான், இந்த ஆன்மா வேறு, பதிவேறு, பாசம் வேறு எனவும், திருவருளால் ஆன்மப்பசுவானது பாசத்தை யொழித்துவிட்டுப் பதியோடு கலந்து ஒன்றி மறைதல் முடிவு என்றும் கருதினான்.

இன்றோ சுத்த அருள் அடைவால், ஒன்றான அருட்பெரும் பதியே யாவுமாய்ப் பசு பாசம் எல்லாமாய் விளங்கக் கண்டு, 'தான்' ஆகிய பசு வேறாக இல்லை, தன்னைச் சூழ்ந்த பாசம்கூட அருளேயன்றிப் பிறிதல்ல் எனக் காண்கின்றான். இதனால் எல்லாம் சிவமயமே என்பதும் அருட்பெருஞ்ஜோதிமயமே

என்பதும் தெளிவாகின்றதாம். இத் தெளிவோடுதான் நம் வள்ளலார், அக நின்று அனக அருள்வாழ்வு மேற் கொள்ளுகின்றார். இதனால் அவர் அருட்பிரகாசராகிப் பிரணவ தேக நிலையிலிருந்து கொண்டு, சுத்த ஞான தேக சித்தியும் உடன்கொண்டு விளங்குகின்றார். இந்தப் பிரணவ தேக நிலையே ஓமயத் திருவுரு எனப்படுகின்றதாம். ''என் உடல் உயிர் ஆதியவெல்லாம் நீ எடுத்துக்கொண்டு, உன் உடல் உயிர் ஆதியவெல்லாம் உவந்தெனக்கே அளிப்பாய்'' என்று வேண்டியாங்கு, இவ் ஓமயத் திருவுருவை உவப்புடன் வழங்கி, அவ் ஆமயத் தடையெல்லாம் தவிர்த்து விட்டாராம். ஆதலின், அருட்பெருஞ்ஜோதித் திருமுன் வம்மின், ஆமயம் தீர்ந்து ஓமய மந்திர வடிவொடு வாழலாம்.

## 96. என் கருத்துப்படி அருளியது

*191.* எப்படி எண்ணிய தென்கருத் திங்கெனக்
*192.* கப்படி அளித்தருள் அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** எண்ணியது எல்லாம் எல்லாருக்கும் கிடைத்து விடுகின்றதில்லை. ஓர் ஒரு சமயம் அப்படி எண்ணியது கிடைக்கின்றதுமுண்டு. பல சமயங்களில் கிடைக்காமல் போவதுமுண்டு. சில சமயம் எண்ணாதது வந்து சேர்வதுமுண்டு. இவையெல்லாம் ஆண்டவன் செயலே என்பர், திருவருட்செயலின் உண்மையை உணர்ந்தவர்கள். எண்ணிய எண்ணியாங்கு எய்துவர், எண்ணியர் திண்ணியராகப் பெறின், என்று கூறுவர். உண்மையில் அருள் ஆற்றல் பெற்றவரே எண்ணியதுபெறும் திண்ணியர் ஆவர். நம் அடிகளார், நிறையருள் பெற்று, அருளொளியோடு இரண்டற இருக்கும் இயல்பினராக உள்ளார். அருட்பெருஞ்ஜோதியே வள்ளலாரின் உள்ளமாக இருக்கின்றது. ஆகையால் இவருடைய கருத்து வேறு, இறைவர் திருவுள்ளம் வேறாக இல்லையாம்.

இந்த உலகில் திருவருட்பிரகாசனார் திருவருட்பா இசைத்து துதி செய்திருந்தது எந்தச் சந்நிதியில் என்றால், அக சத்திய ஞான சபையில் வளர் அருட்பெருஞ்ஜோதியின் திருமுன் என்பதே உண்மையாகும். ''நினைத்தபோதெல்லாம் நின்னையே நினைத்தேன், நினைப்பற நின்றபோதெல்லாம் எனைத் தனியாக்கி

நின்கணே நின்றேன்''. என்றதைப் புரிந்துகொண்டால் இவரது மெய்ந்நிலை நன்கு விளங்கும். சாதனை முற்றிச் சாத்தியமுற்று நின்ற அகநிலையில் அருட்பெருஞ்ஜோதியே, இவராகவும், இறைவரர்கவும் இருக்கின்றதாம். இரண்டுபட நின்று நினைக் கின்றார், வேண்டுகின்றார், அதுவே இறைவரின் திருவுள்ச் செயலாய் இருக்கின்றதால் உடனே நன்கு நிறைவேறிவிடுகின்ற தாம். தற்போதம் அற்று எண்ணும் யாவும் ஆண்டவர் எண்ணமே ஆகையால் இ்வரது உள்ளத்தில், தேவையில் லாததோ, தவறானதோ, திருவுளச்சம்மதமல்லாததோ ஒருகாலும் தோன்றவே தோன்றாது. நல்ல எண்ணமே தோன்றும், அதற்குரிய வேண்டுகையும் உடனுக்குடன் நிறைவேறும் என்பது உண்மை. தயவோடு, உளநெகிழ்வோடு இருக்கின்ற இவருக்கு, அருட்செயல் வெளிப்பட ஆண்டவரே தக்க சூழ்நிலையை ஏற்படுத்திக் கொடுக் கின்றார். அப்போது இவர் தான் செய்யவேண்டியது கடமை எனக் கொண்டு, அருள்துணையால் செய்து நிறைவேற்றிவிடுகின்றார். கடும் பிணியாளன் ஒருவன், இவர்முன் வந்து, மெய்யாக வருந்தி வேண்டுகின்றான் என வைத்துக்கொள்ளுவோம். அப்போது இவரது நெகிழ்ந்த உள்ளம், அப்பிணியொழிய வேண்டும் என்று எண்ணுகின்றது; அதுசமயம் திருவருள் இவருக்கு அப்பிணி யொழிக்கும் ஆற்றலைத் தந்து, உடன் சௌக்கியத்தையும் வழங்கிவிடுகின்றது. இச்செயலைத் தன்செயலாகக் கருதிப் பெருமையிற் கர்வங் கொள்ளாது, ஆண்டவன் செயலெனக் கொண்டு அமைதியாக இருக்கின்றது இவரியல்பாம். இதனால் இவர் எண்ணம் அவருள்ளம் இரண்டுபடாதிருந்து, எது, எது, எப்போதெப்போது செய்யவேண்டுமோ, அப்போதப்போது செய்து முடிப்பதாய் இருக்கின்றதாம்.

## 97. விழைவின் வண்ணம் அருளல்

193. எத்தகை விழைந்தன என்மன மிங்கெனக்

194. கத்தகை யருளிய அருட்பெருஞ்ஜோதி

(உ-வி) இவ்விரு அடிகளின் கருத்தும், முன்னிரு அடி களின் கருத்தும் அதிகம் வேற்றுமையில்லை: சிலவகை விளக்கம் இங்கு விரித்துரைக்கப்பட்டுள்ளதைக் காணலாம். முன், கருத்து எண்ணினதாகக் குறிக்கப்பட்டது; இங்கு மனம் விழை

வதைக் கூறுகின்றார். மனோ விருப்பம் நிறைவேற்றப்படுவதாக உரைக்கின்றார். கருத்து ஒன்றாகக் கண்டு தெளியப்படுவது. எண்ணம் பலப்பலவாக எண்ணப்படுவது. இக்கருத்தும் எண்ணமும் அக நிலைநின்று செயல்படுவது. கருத்து உள் மனத்தின் கூறாக இருக்க அதினின்று புறமனத்தின் செயலாக வாக்கும் சொல்லும் வெளிப்பட்டு விருப்பு வெறுப்பை யுணர்த்து கின்றதாம்.

நம் வள்ளலின் மனம், மாசற்ற ஜோதிமயமானது; அவா, வெகுளி, மயக்கம் என்னும் குற்றம் ஒன்றும் இல்லாதது; மேலும் அது சுத்தமானதாம். சுத்தம் என்றால் தூய்மை என்பது மட்டு மல்ல; நினைப்பு, மறப்பு அல்லது சகல கேவலம் இல்லாத சுத்த அருள் ஒளி மயமான நிலையைக் குறிப்பதாம். அதாவது, அருள் ஒளியே அவரது மனமாயிருக்கின்றது. இதனால் அவருடைய மனத்தின் செயல் அருட்செயலேயாம். அசுத்தமனத்தினர் அவாமயமாய் இருந்துகொண்டு விருப்பு வெறுப்புச்செயலால் அவத்தைப்படுகின்றனர். இவரோ அன்புமயமாய் இருந்து கொண்டு, அன்புச் செயலே புரிந்து கொண்டு இன்போடு நிலவு கின்றார். இச் சுத்த மனம், விழைகின்றது விரும்புகின்றது புறப் பற்று காரணமாக அல்ல; அக நின்று அருட்பணி புரிய வேண் டியே புறப்பற்று அறுக்கத் தொடங்காது அன்பு செய்தற் பொருட்டே விழைந்து கொள்ளப் படுவதாம். இதனால் இவ ருடைய மனம் விழைந்தனவெல்லாம் வழங்கிப் பிறர்க்கு இன்பு செய்ய உதவிக் கொண்டிருப்பது அருட்பெருஞ்ஜோதியின் செயலே ஆகும்.

## 98. உளம்திரியா அங்கைக்கனி

195. இங்குறத் திரிந்துளம் இளையா வகையெனக்
196. கங்கையிற் கனியாம் அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) அகமனநிலையே உள்ளமாக இயம்பப்படுவது. அருள் உணர்வு பெற்று நோக்கும்போது, அகமனம் என்பது ஆன்மாவாகவே அறியப்படும். அந்த அகமனத்தின் அற்பக்கூறே புறமனமாய்ப் புலன்வழி சென்று உலகச் சுக துக்கங்களில் சதா உழன்று கொண்டிருக்கின்றது. இப்படித் திரியும் மனமே மாசடைந்தும், திடமற்றும், இளைத்தும் போவதாம். உடல்

வலிமையைவிட மனவலிமை ஆற்றல் வாய்ந்தது. உடல் தோற்றத்தில் சிறியராய் இருந்தும், பெரியவர்களாலும் செயற்கரிய காரியத்தைச் செய்து முடிக்கும் திறம் உள்ள வலிமையின்பாற் படும். ஆகையால் உள்ளம் திடமாய் இருப்பது இன்றியமையாதது. உள்ளத்தில் அருள் ஒளி குடிகொண்டு வாழத் தொடங்கி விட்டால் அதற்கு அழிவேயுண்டாகாது. அப்போது அவ்வுள்ளொளியின் சேர்ப்பால் உயிருடம்பும் அழியாமை பெற்று விளங்கும்.

மனம் சலியாது உள்ளொளிமயமாகி நிவாததீபம் போல் நிற்க வேண்டுமானால் திருவருள் சேரவேண்டும்.

''மெய்யகத்தி னுள்ளே விளங்கும் ஒளி காணில்
கையகத்தின் நெல்லிக்கனி''. — ஔவை குறள்

உள்ளொளியைக் கண்டுவிட்டால் மட்டும் போதாது; அதனை அருளால் அனுபவத்திற்கொண்டு வாழவேண்டுவது அவசியம். இதனால்தான், உள்ளங்கை நெல்லிக்கனி, அல்லது அங்கைக்கனி என்னும் பழமொழி ஏற்பட்டுள்ளதாம். நெல்லிக்கனியைக் கையில் வைத்துக்கொண்டு விட்டால் என்ன நன்மை? சித்த மார்க்கத்தில் வழங்கும் கருநெல்லியைக் கொண்டு சில சித்தி புரியக்கூடும். அதுவும் சிறப்பதன்று. உள்ளம் என்பது நம் கடவுளான்மாவே. இது, நெல்லிக்கனி, கருநெல்லிக்கனி, கன்னற்கனி, அக்காரக் கனி, சிற்றம்பலக்கனி, முதலியனவாகக் கற்பனை செய்தல் மரபே. இப்பொழுது அதுவே நம் அருட்பெருஞ்ஜோதிக் கனியாகக் கண்டு கொள்ளப்படுகின்றது.

நம் வள்ளற்பிரானுக்கு, உள்ளத்தளியிற் கண்ட, அருட் பெருஞ்ஜோதிக் கனி, பேரின்ப சித்தியை வழங்கி உள்ளும் புறமும் நிறைவொடு விளங்கச் செய்கின்றதை இங்கு இவ்வடிகளில் காண்கின்றோம்.

## 99. பார் உயப் புரி எனும் உள்ளொளி

197. பாருயப் புரிகெனப் பணித்தெனக் கருளியென்
198. ஆருயிர்க் குள்ளொளிர் அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) அகண்டவெளி எங்கும் நிரம்பி, எங்கணும் பரிபூரணமாய் விளங்கிக் கொண்டிருக்கின்றவர் நமது அருட்பெருஞ்ஜோதி

ஆண்டவர். அப்படியுள்ள ஆண்டவர் மெய்யருள் ஞான அனுபவங்கொண்ட மனிதனின் உள் அகத்தேதான் முதலில் வெளிப்பட்டு விளங்குவதாக அறியப்படுவதாம். ஏனெனில் மனிதனில் அவனது ஆன்மாவாகிய ஆருயிர் அணுதான் கடவுள் உண்மையெலாம் வெளிப்பட உள்ள கடவுட் சிற்றம்பலமாக இருக்கின்றதாம். அகண்டபரிபூரணானந்த பரம்பொருள், அந்த அகண்ட வடிவின், எந்த் ஒரு சிற்றணுவிடத்தும் தன் பரிபூரண இயல்போடு, முழுமையான தன்மையோடுதான் இருந்து கொண்டிருப்பினும், எந்த ஒரு குறிப்பிட்ட சிற்றணுத்துவ ஆன்மாவுக்கு மெய்ஞ்ஞான பக்குவ மனித தேகம் ஏற்பட்டு அனுபவம் விளங்குகின்றதோ அங்குதான் வெளிப்பட்டிலங்குவதாகக் கொள்ளப்படும்.

நமது வள்ளற்பெருமான், தமது ஆருயிரின்கண் நிரம்பிப் பிரிவறவுள்ள அருட்பெருஞ்ஜோதிபதியை ஓதாதே திருவருளால் உணர்ந்து கொண்டுள்ளார். ஓதியுணர்வதற்கு அரியவன் ஒப்புயர்வில்லாப் பரம்பொருள். இவ்வுண்மைதான், ''உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவன்'' என்ற, வான் நிழல் மெய்ம் மொழியாக, அசரீரி வாக்காக, சேக்கிழாருக்கு, அகமும் புறமும் திருச்சிற்றம்பலத்தின்கண் வழங்கப்பட்டது. அவ்வருள் அடியே முதலாய்க் கொண்டு திருத்தொண்டர் புராணம் என்னும் பெரிய புராணத்தை ஆக்கி அளித்துள்ளார். உலகம் எத்தனை? எண்ணில் அடங்கா உலகம் உள்ளனவாம். அத்தனையும் எப்படிக் கலையறிவால் ஓதிப் படித்துத் தெரிந்து கொள்ள முடியும்? முடியாதே! அவ்வுலகங்களையே தெரிந்துகொள்ளமுடியாதபோது, அவற்றையெல்லாம் அளவில் காலம் விளக்கம் செய்துகொண்டு விளங்குகின்ற ஒரு பரம்பொருளை எப்படியும் அறிந்துகொள்ளல் கூடாதன்றோ! அப்படி 'அறிவரிய பரம்பொருளைத்தான் நம் ஆன்ம சிற்சபையில் அருள் ஞான உணர்வால் கண்டுகொள்ளக் கூடியதாயிருக்கின்றதாம். அருள் என்பது மெய்ஞ்ஞானமும், மெய்யன்பும் நிரம்பிய உணர்வாம். இவ்விரண்டால் விளைகின்றதுதான் நிறை இன்ப ஒளி அனுபவமாம். இந்த ஞானமும், அன்பும், நிறை ஒளியுமே நிலவுலாவிய நீர்மலி வேணி அலகில் ஜோதியனாக அருண்மொழித்தேவராம் சேக்கிழாருக்கு அன்று உணர்த்தப் பெற்றது. அது நம் அருட்பிரகாசர்க்கு அருட்பெருஞ்ஜோதியாக உணர்த்தப்பெற்றுள்ளது. அன்று தோற்றிய சிவ ஜோதிபதியைச் சைவசமய மதச்சார்பு கொண்ட சிறுபான்மையரே உவந்தேற்கக்கூடும். ஆதலின், சமய மதாதீத, கற்பனாதீத உண்மை

வெளிப்பட இன்று அப் பரஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதியாக வெளிப்பட்டுள்ளதாம்.

சிவ ஜோதியை வாழ்த்தி வணங்கி நின்ற சேக்கிழார் பெற்றது சிவபத ஐக்கியானுபவமாம். நம் வள்ளற்பிரானின் உள்ளத்தளியில் அன்று வெளியான அருட்பெருஞ்ஜோதி இவருக்குப் ''பார் உயப்புரிக'', எனப் பணித்து அருள் செய்து கொண்டுள்ளதாம். அவரோ, ''உலகெலாம் உணர்ந்து ஓதற் கரியவன்'', என்ற அருள் வாக்கு பெற்றதோடு சரி. அதனால், அருண்மலரடி வணங்கி, அவ்வடியில் ஒன்றி மறைந்த தீவிரபக்தத் தொண்டர் புரர்ணம் பாடிப் பரவிச் சென்றார். இவரோ, உல கெலாம் மரணமில்லாப் பேரின்ப வாழ்வு பெற்று உய்ந்திடற்கு அருள் ஆணையால் திருவருட்பாவை வழங்கியுள்ளார். அருட் பெருஞ்ஜோதிபதியே, பாருயப் புரி என ஆணை செய்ததோடு, இவரது ஆருயிர்க்குள்ளிருந்து விரிந்து இவராகவே விளங்கி நின்று உலகமெலாம் உய்ய அருள் செய்துகொண்டே யுள்ளதாம்.

## 100. ஆவியிற் கலந்து திருவுரு தருவது

199. தேவியுற் றொளிர்தரு திருவுரு வுடனென

2(0. தாவியிற் கலந்தொளிர் அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) ஆவி என்பது, தூல தேகம் அல்லது பருவுடற்கு உள் விளங்கும் உயிர் வடிவமாம். ஆன்ம அணுவினின்று உயிர் ஆற்றல் தோற்றிப் புறத் தேகத்தை ஆக்கிக் கொள்ளும்போது இடையிலுறும் அனுபவ ஊடகப்பொருளாக (Medium) இருக் கின்றது. இந்த ஆவி வடிவம் சுருங்கவும், விரியவும், அருஞ் செயல் சில புரியவும், தூல உடலுக்குட் பெருகி நின்று, புறவுடல் நீக்கமாகிய இறப்புக்குப் பின், அவ்வடிவு போன்ற ஆவியுருவ மாகவே வெளியாகி உலவிக் கொண்டிருப்பதாம். இந்த ஆவி வடிவம் ஒரு சிலருக்குப் புலனாவதும், ஒரு சிலரில் உட்புகுந்து அன்னோரைத் தன் வண்ணமாய்ச் சிலகாலம் விளங்கச் செய்து பின்னர் நீங்கிவிடுவதும் உண்டாம். இவ்வாவி வடிவங்களை (Ghost) தெய்விகத் தன்மை கொண்டனவாகவும், தெய்வமாக வும் கருதிப் போற்றி வழிபட்டுச் சிற்சில பயன் அடைந்துவிட்டு, அருளியற் கடவுளுண்மையை உள்ளபடி அறிந்து அடையாது வீண் போய்விடக் கூடாது.

அருட்பெருஞ்ஜோதிக் கடவுள் உண்மை கொண்ட ஆன்ம சிற்றணுவை அருளாற் கண்டுகொள்ளாது, புறக்கண்களுக்குத் தோற்றியும் தோற்றாத ஆவி வடிவத்தையும், தோற்ற முடியாத ஆன்ம ஜோதிக் கடவுள் உண்மை வடிவத்தையும் பலரும் பலப் பலவாகக் கற்பனை செய்து கொண்டும், பாவித்துக் கொண்டும் பயனுறாதுபோய்க் கொண்டுள்ளனர். தேக வடிவத்தையே பெரிதும் மதித்து, மனிதனெனக் கொண்டு, பிறப்பையும், இறப் பையும், வாழ்வையும், வரலாற்றையும் ஆய்ந்து ஏற்கின்றவர் பலர், முன் பின் பிறப்புகள் இல்லை எனக் கூறிக்கொண்டு இருக் கின்றவர் பலர், வினைவழி வந்து வந்து சூழ்கின்ற பிறவிகளை எல்லாம் திருவருளால் நீக்கிக்கொண்டு, கடவுட் கலப்பில் மேற் பிறவி ஒன்றும் எடாதிருத்தலே திருவுள்ளம் என எண்ணுகின் றவர் பலர், சித்த மார்க்கத்தால் உள்ளுடம்பின் ஆற்றலைப் பெருக்கிக்கொண்டு, அற்புத சித்திகள் பல புரிந்து அகமகிழ்ந்து இருக்கின்ற அற்புத சித்தர் பலராவர். இவர்களெல்லாம் தமது ஒன்றான உண்மையாம் அருட்பெருஞ் ஜோதிக் கடவுள் விளக்கத்தை உள்ளது உள்ளபடி அறியாதவர்களேயாவர்.

அருட்பெருஞ்ஜோதிக் கடவுள் ஒருவரே உண்மையில் உள்ள வர். அந்தக் கடவுளின் சக்தி அல்லது தேவி என்பது, எல்லாம் வல்ல தயவு அல்லது அருள் ஆகும். அந்த அருள் ஒளிக் கடவுள் எங்கும் இருந்தாலும்கூடப் பக்குவ மனிதனின் ஆன்ம அகமிருந்து, அனகமுற விரிந்து ஆவி. வடிவிலும், புற மேனியிலும் நிறைந்து, பிரிவறக் கலந்து நின்று விளங்கும்போதுதான் பேரின்ப வாழ் வுப் பெரும்பயன் உண்டாகின்றதாம். ஒருவரே ஆன கடவுள் எங்கும் பூரணராய் இருப்பதால், எந்த ஒரு ஆன்மாவில் வெளிப் பட்டு விளங்குகின்றாரோ அவ் ஆன்ம மனிதன் ஒருவனே, அந்த ஒன்றான கடவுளாய், தானே அந்த ஒன்றாய் எங்கெங்கும் இருந்து கொண்டு பலராய்த் திகழ்கின்றதாகவும் அறிகின்றான். அருள் ஒளியாம் தேவி உள்நின்று விரியும்போது அதனைச் சூழ்ந்துள்ள உயிருடம்பில் நிறைந்து அச் சூழ்வடிவைச் சுத்த சுகானந்த வடிவ மாக விளங்கச் செய்து விடுகின்றதாம். இங்கு, திருவுரு என்றது, புற வடிவம்; இது சுத்த பொன்மயமாய்த் திகழ்வது. இப்படி இந்த அசுத்த அநித்திய வடிவம், சுத்த நித்திய வடிவமாக மாறிடும் தருணம் இடைநின்ற ஆவி வடிவிலும் அருள் ஒளி நிரம் பியதால், அதுவே அருட்ஜோதி வடிவமாக, பிரணவ தேகமாக விளங்குவதாம். நம் இராமலிங்க அடிகளாரின் ஆன்ம அணுவில்

விளங்கி நின்ற அருட்பெருஞ்ஜோதிக் கடவுட் சக்தி, ஆவி வடிவிற் கலந்த சமயம் அது (அந்த ஆவியுருவம்) தான் அருவுருவ சித்தி அருட்பிரகாசவடிவமாய் ஆகிவிட்டதாம். இந்த அருட்பிரகாச நிலை நின்றுதான் அகமிருக்கும் சிற்சபையையும், புறஞ்சூழ்ந் துள்ள பொற்சபையையும் தமக்குச் சொந்தமாய்க் கொண்டு விளங்குகின்றது உண்மையாம்.

## 101. வேதாகம மெய் வழி

**201. எவ்வழி மெய்வழி யென்பவே தாகமம்**

**202. அவ்வழி எனக்கருள் அருட்பெருஞ் ஜோதி**

**(உ-வி)** மனவாக்குக்கும் கருவிகரணங்களுக்கும் காண்பரி தாகிய மெய்ப் பொருளை முன்னோர், மனமுற்றும் ஒடுங்கிய மோனநிலை ஞானவரம்பாய் அகண்ட பேரொளியாய் உணர்ந் திருந்தனர். அவ்வொளி நிலையை எய்துவதற்குப் புற அக ஒழுக்க முறைகளைப் பற்றிப் பலவாக வகுத்து வழங்கியுள்ளனர். வேதம் - அறிவு கொண்டு மெய்யுணர்வுகொண்டு ஒருவாறு தெரிந்து கொள்ளும் கடவுளான்ம விளக்கத்தை விரித்துக் கூறுவ.து. உண்மையில் பிரம்மம் ஒன்றே நித்தியமாய் இருந்து கொண் டு, யாவுமாய்த் தோற்றியுள்ளதால், நாமும் அதுவேயன்றி வேறாட ில்லையாம். ஆகையால், நாமே அப் பரப்பிரம்மம் என்ற கருத்தை யுட்கொண்டு, புறநிலை யாவையும் விடுத்து உள்ளொடுங்கி விடுவதே வழியெனக் கூறுகின்றது வேதம். அவ்வேத முடிபொருளைப் பொய்ப் பாவனையால் மட்டும் அடைந்துவிடமுடியாது. பதிநிலையை எய்தப் பக்தி வழிபாட்டு ஆகமநெறியிற் சென்று திருவருளைப்பெற்று மல பாசங்களை எல்லாம் அற ஒழித்துத்தான் கடவுணிலையைப் பெறமுடியும் என் கின்றனர் சிலர். வேதாகம மார்க்கம், மனிதனைக் கடவுள்நிலைக் குக் கொண்டுபோய்ச் சேர்க்க துணையாய் வழங்கப்பட்டது உண் மையே. ஆதலால், அந்நெறியே மெய்நெறி எனக் கொள்ளப்பட் டது. அவ் வேதாகம வழியால் கடவுளை அடைவதும் சாத்தியமே. ஆகையால், அதுவே மெய்வழி என்பதும் தவறல்ல. அந்த வழி இப்போது அருட்பெருஞ்ஜோதிவழியாய்த் திகழ்கின்றதாம். இந்த அருட்பெருஞ்ஜோதி வழியில் மனிதன் கடவுளோடு (கூடாதே அதுவாகவே) இருக்கும் உண்மை யுணரப் படுவதால்

அப்படிக் கடவுள்மயமாய் இருந்துகொண்டு, உலகுக்கு இன்பு செய்துகொண்டு, என்றும் வாழும் வழியாய் இருக்கின்றதாம் இம் மெய்வழி. இங்குக் குறிக்கப்படுகின்ற மெய்வழி ஒன்றே ஒன்றுதான்; வேறுபாடில்லை. ஆனால், அவ்வழி வேதாகம முறையில் மனிதனைப் பதிக்கலப்பில் மறைவுறச் செய்கின்றது. அருட்பெருஞ்ஜோதி முறையால் பதிமயமாய் இருந்துகொண்டு ஆனந்தமாய் வாழச் செய்கின்றதுதான் சிறப்பாகும்.

சத்திய ஜோதியாயுள்ள மெய்ப்பொருள், மனிதனுக்கு எக்காலத்தும் உண்மையே உரைக்கின்றது, மெய்வழியே காட்டுகின்றது. மனிதனோ அபக்குவத்தால் காணும் பொருளும் பயனும் குறைவுடையதாயிருக்க, பக்குவகாலத்தில் நிறை பொருள் கண்டடைவது, இன்றைய சுத்தசன்மார்க்க அனுபவமாம். உலகெல்லாம் வாழ்க அருட்ஜோதி வழியில்.

## 102. அருள் ஐயறி வளித்தது

**203. வையமும் வானமும் வாழ்த்திட வெனக்கருள்**
**204. ஐயறி வளித்த அருட்பெருஞ் ஜோதி**

**(உ-வி)** இங்கு ஐயறிவு என்பது ஐந்தாகிய பொறி புலன் உணர்வு அல்ல. அந்த ஐயறிவு இயல்பாகவே விலங்கினங்களுக்கு வழங்கப்பட்டிருக்கிறது யாவரும் அறிந்ததே. அவ்வையறிவு மாக்களினும் சிறந்த உயிரினம் இந்த மக்களினமாம். இவர்களுக்கு ஐயறிவோடு ஆறாவதாகிய மனோபகுத்தறிவும் நியதிப்படி வழங்கப்பட்டுள்ளதும் இயல்பே. ஆகையால், அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் நம் வள்ளலார்க்கு அளித்துள்ள ஐயறிவு ஐம்புலன் உணர்வு அல்ல என்பது திண்ணம். எனவே, ஐயறிவு என்பதற்குரிய மெய்ப்பொருள் சிறந்த ஒன்றாக இருக்கவேண்டும் என அறியலாகும். ஐ என்ற ஒரெழுத்து ஒரு மொழி ஒப்பற்ற தனித்தலைமைக் கடவுளையே சுட்டவந்ததாய்க் கொள்ளலாகின்றது. ஆகவே, உண்மைக் கடவுள் ஞானம்தான் இங்கு ஐயறிவாம். அக் கடவுள் ஞானம் சாதாரணமான ஒன்றல்ல, சுத்த அருள் வண்ணமானது என்பதைக் குறிக்கவே, அருள் ஐயறிவு என்று குறிக்கப்பட்டுள்ளதாம்.

அருட்பெருஞ்ஜோதி வழங்கியுள்ள அருள் ஐயறிவு எவ்வளவு சிறப்புடையது தெரியுமா? வையமும் வானமும் வாழ்த்து

கின்ற பெருஞ்சிறப்புடையதாம். மண்ணும் விண்ணும் நம் வள்ளலை வாழ்த்துகின்றனவாகக் கூறுவது வெற்று உபசார வாய்ச் சொல்லன்று, சத்திய வாசகமேயாகும். அப்படி இல்லாமலா திருவருட்பாவில், சித்தர்களும் முத்தர்களும், தேவர் களும் மூவர்களும் தன்னைப்பற்றிப் பேசுவதாகவும், ''இன்ன முதம் அருத்தி ஏனை ஏழுலகம் போற்ற'' எனவும், உலகமெலாம் தான் பெற்ற அருட் பேற்றினைக் கண்டு அதிசயிப்பதாகவும் கூறி யுள்ளார். இவை யாவும் உண்மை! உண்மை! அருளறிவால் ஆய்ந்து காணில் இந்த உண்மை நன்கு தெளிவாகும். அருட் பெருஞ்ஜோதி மெய்ஞ்ஞானத்தால், தன்னை அதுவாகவே கண்டு அகநின்ற அனகமாக ஒளிர்கின்றார் நம் வள்ளற்பெருமான். இந்த ஒன்றாகிய அருட்பெருஞ்ஜோதிபதிமயமாய்த் தானே எங் கணும் எவருமாய் இருக்கின்றதால், எந்தக் கடவுளையோ, தெய் வத்தையோ, மற்று எவரையோ எங்கெங்கிருந்து யார் யார் வாழ்த்தினும்கூட இவரையே வாழ்த்துவதாகக் கொள்ளு வதில் உண்மை இருக்கின்றதாய் அறிகின்றோம். நம் பெருமான் ஆணவ அகங்காரம் முற்றும் நீத்த, தன்னைக் காட்டிக் கொள்ளாத, தற்பெருமை பேசித் தன்னைத் தானே புகழ்ந்து கொள்ளாத பெருங்குணம் படைத்தவர் இவர். அப்படியிருக்க, இவர் இங்கு, வையமும் வானமும் தன்னை வாழ்த்திட வைத் துள்ள அருட்பெருஞ்ஜோதியை அல்லவா வாழ்த்துகின்றார் இந்த ஈரடிகளில். இவர் தன்னை வாழ்த்தும்படியோ, வணங்கும் படியோ, போற்றும்படியோ எவரையும் எக்காலத்தும் கேட்டுக்கொள்ளவேயில்லை. மாறாக, இவர் தன்னைத் தெய்வ மாகக் கருதி சுற்றிக்கொண்டிருக்கும் உலகியல் அன்பர் களைக் கண்டு, ''இவர்கள் உண்மையை யுள்ளபடி தெரிந்து கொள்ளாததால் அல்லவா, இப்படிப் போற்றிச் சுற்றிக் கொண்டி ருக்கின்றனர்,'' என்று பரிதாபப்படுகின்றார்.

''சன்மார்க்க சங்கத்தீர் சிற்றடியேன் நுமது
தாள் வணங்கிச் சாற்றுகின்றேன் தயவினொடுங்கேட்பீர்
என்மார்க்கத் தெனைநுமக்குள் ஒருவனெனக் கொள்வீர்
எல்லாஞ்செய் வல்லநம திறைவனையே தொழுவீர்
புன்மார்க்கத் தவர்போலே வேறுசில புகன்றே
புந்திமயக் கடையாதீர் பூரணமெய்ச் சுகமாய்த்
தன்மார்க்க மாய்விளங்கும் சுத்தசிவம் ஒன்றே
தன்னாணை என்னாணை சார்ந்தறிமின் ஈண்டே.''

என்றதால், அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரைத் துதித்தலே யாவருக்கும் உரியதாம். கடவுளை வாழ்த்துகின்றதாலே அவருக்கு அனன்னியமாய் இருக்கும் நாமே அவ்வாழ்த்தும் வாழ்வும் பெறுகின்றோம் என்பது சத்தியம்.

## 103. சாமாறு அனைத்தும் தவிர்த்தது

205. சாமா றனைத்துந் தவிர்த்திங் கெனக்கே
206. ஆமா றருளிய அருட்பெருஞ்ஜோதி

**(உ-வி)** உலகில் எதுவும் ஆவதும் அழிவதும் இயல்பாய் இருக்கின்றது. மனிதப் பிறப்பு வடிவமும் அப்படித்தான் தோற்றக்கேடு அடைகின்றதாம். ஆனால் மனிதன் இன்போடு வாழத்தான் விரும்பகின்றானே யல்லாது சுகமாய் வாழ்கின்றவன் ஒருபோதும் சாக விரும்புவதே இல்லை. அறியாமையாலும், துன்பமிகுதியாலும், வேறுபல வாழ்க்கைத் தடைகளாலும்தான் வாழ்வை வெறுத்து இறக்க விரும்புவதும், தற்கொலை புரிந்து கொள்ளுவதும் காணப்படுகின்றனவாம்.

எல்லாம்வல்ல நம் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் யாவையும் மேலும் மேலும் புதிது புதிதாக வெளிப்படுத்தித் தழைக்கச் செய்துகொண்டேதான் இருக்கின்றார். மக்களினம், புதியோர் வருகையாலும், முதியோர் செல்கையாலும் மாற்றம் அடைந்து கொண்டே இருக்கின்றது. ஒவ்வொரு மனிதனும், ஆவதும் அழிவதும், அல்லது பிறப்பதும் இறப்பதும் உலகில் இயல்பெனத் தோன்றுகின்றது. மனிதப் பிறப்பும் வேற்று உயிரினப் பிறவிகளைப்போல் தோற்றக்கேடு அடைந்துகொண்டே இருப்பதுதான் முடிவா? இதற்கான விடையைத்தான் சரியாகப் புரிந்து கொள்ள முடியாதிருந்தது இதுகாறும். இன்றைய சுத்தசன் மார்க்கச் சார்பினால், அருட்பெருஞ்ஜோதியின் சேர்ப்பால், மனிதன், மன்னி நிதமும் வாழப் பிறந்தவனே எனக்கண்டு அடைந்து மரணமில்லாப் பெருவாழ்வில் விளங்க வாழ்கின்றான். இதுவரை இறந்திறந்து போனவர்கள் எல்லாம் (நித்திய வாழ்வு பெறத்) தவறியவர்களே யாவர். திருவருட்பூரணத்தாலே ஒவ்வொருவரும் இறவாமை பெற்று வாழத்தான் மேலும் மேலும் இங்கு தோற்றுவிக்கப்பட்டுக்கொண்டே யிருக்கின்றனர். அருட் பக்குவம் உண்டாக்கவே இவ்வுலக வாழ்வில் எல்லாவிதமான

நன்மை தீமைகளும், சுக துக்கச் சோதனைகளும் உண்டாகின்றன வாம். இவ்வுண்மையை அறியாது பலரும் சுகபோக வாழ்வையே பெருக்கிக்கொள்ளவும், அதற்குத் தடையானவற்றைத் தடுத்து விலக்கவும்தான் எத்தனை எத்தனையோ தந்திர உபாயங்களைக் கையாள்கின்றார்கள். இந்த உபாய நெறிகளை விடுத்து பரோபகார ஜீவதயாநெறியை மேற்கொண்டு வாழ்ந்துவந்தால் நமக்கு வேண்டத் தக்கனவெல்லாம் அப்போதப்போது, கிடைக்கப் பெற்று முடிவில் திருவருட்பூரணத்தால் அழியா இன்ப வாழ்வும் அடைவது சத்தியம்.

அருட்பெருநெறி ஒன்றே இவ்வுலகில் ஒருவர்க்கு, ஆக்கம் அளிக்கும், சுத்த சன்மார்க்கம் என்னும் ஆம் ஆறாக இருக்கின்றது. மற்ற எந்த மார்க்கமும் ஆமாறாக இல்லாது சாமாறாகத்தான் இருக்கின்றதாம். எவ்வளவோ தவஞ்செய்து அமரப்பதி பெற்ற தேவர்களும்கூடக் குறிப்பிட்ட நெடுங்காலத்திற்குப் பின், இவ்வுலகிடை வந்து மனிதப்பிறவி பெற, இறந்துபோக வேண் டியவர்களாகவே இருக்கின்றார்களாம். இறந்து பிறவாமையுற்ற ஆன்மாக்கள் எத்தனை கோடி காலம் அப்படியே இருந்தாலும், அருளின்ப நிறை வாழ்வு பெறற்காக மறுபடியும் இம் மண்ணுலகில் வந்து பிறக்கத்தான் வேண்டியுள்ளதாம். ஆகவே அருள்நிறை வாழ்வு பெற்று விளங்குகின்றவனே, எந்த வகையி லும், எந்தக் காலத்தும் அழியாது கடவுளின்ப வாழ்வில் விளங் கிக் கொண்டே இருப்பது உண்மையாம்.

அருட்பெருஞ்ஜோதி வழங்கியுள்ள அருள் ஒன்றே எந்த வகையிலும், என்றும் இறவாநிலையில் வைத்து வாழ்விப்பதாம். இதுவே சாமாறு ( இறப்புக்கான வழிதுறை ) அனைத்தை யிம் தவிர்த்து வாழச் செய்கின்றதாம். இதனால்தான் இந்த அருட் சுத்த சன்மார்க்கத்தையே யாவரும் அறிந்து அடையும் வண்ணம் வடலூர்ப்பதியில், தர்மச்சாலையும், சன்மார்க்க சங்கமும், சத்தியஞான சபையும் தோற்றுவிக்கப்பட்டுள்ளனவாம். சுத்த தயா நாட்டத்தோடு சென்று, சாலையாலும், சங்கத்தாலும், சபை யாலும் ஒழுக்கமும், விசாரமும், வாழ்வும் பெற வேண்டும் என்பது அருள் வள்ளல் திருவுள்ளமாம். அவர் இம் மூன்றையும் வெற்றுக் குறிக்கோளாய் வைத்து ஆக்கினவை யன்று; தானே அனுபவத்தில் பெற்றுக்கொண்டு, பிறரும் பெறவேண்டும் என் பதற்காக வெளியிடப்பெற்றனவேயாம்.

## 104. சிவ சத்தியே சத்தியம்

207. சத்திய மாஞ்சிவ சத்தியை யீந்தெனக்

208. சுத்திறல் வளர்க்கும் அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) சத்தியம் என்பது சத்தாம் பரம்பொருளின் இயல் விளக்கமே. அச் சத்துப் பொருள்தான் இன்று அருட்பெருஞ் ஜோதியாகக் கண்டு கொள்ளப்பட்டுள்ளதாம். இச் ஜோதியையே சிவமாகக் கண்டிருந்தனர் ஆன்றோர். சி-என்பது ஜோதியாகவும், வ-என்பது அருளாகவும் இருக்கின்றன. இதனால் சிகர ஜோதிநிலை நின்று வகர அருள் உண்மை காண முயன்றபோது,' அவ்வருள் ஏகதேச அனுபவமே ஏற்பட்டதாம். ஆனால் இப்போது அருள்நிலை நின்று பெருஞ்ஜோதியின் நிறை யனுபவம் பெறக்கூடியதாயுள்ளதாம். நமது அடிகளார் முதலில் சத் விசார மேற்கொண்டது சிவநெறியினின்றேயாம். அந்த விசாரத்தால் கண்ட சிவ பரம்பொருள் ஒன்றே இவ் அகண்ட பேருலகுயிர்ப் பொருள்கள் யாவுக்கும் தனித்தலைமைப் பெரும்பதி என்பதை யுணர்த்தப் பெற்றார். அந்தப் பெரும்பதியினுடைய அருளாற்றலால் கண்டதுதான் சத்தியமெய்ப்பொருள். வேறு வித மாகக் கூறினால், அந்தப் பேரருளே சிவ சக்தியாகவும், சத்திய மாகவும் உள்ளதாம். சிவம் ஈந்த சத்தியப்பொருள், அகமிருந்து பெருகி அருட்பெருக்கால் அருட்பெருஞ் ஜோதியாக விசார முடிவில் விளங்குகின்றதாம்.

உலகமெல்லாம் நிறைந்துள்ள பரம்பொருள் ஒன்றே சத்திய மாம். அதுவே சிவமாம். அச்சிவம் இரண்டற்ற ஒன்றாக அத்து விதமாக உள்ளதாம். சிவமும் சக்தியும், ஜோதியும் அருளும், சர்க்கரையும் அதன் இன்சுவையும்போல் பிரித்துக் காண்டற் கில்லாததாம். இந்தக் கடவுளர் அத்துவித நிலை சத்தியமாக இருக்கின்றது அனுபவம். இதுதான் ''அத்துவிதம் சத்தியம்''. என மொழியப்படுகின்றது. இது நம் அருட்பெருஞ்ஜோதியாம். இந்த அத்துவிதமான அருட்பெருஞ்ஜோதியின் உண்மையை அறியாதார், உலகை அனந்த வண்ண பேதத் தோற்றமாகத்தான் காண்பார்கள். அத்துவித உண்மையை உணர்ந்தவர்களோ ஒன்றான அருட்பெருஞ்ஜோதியே யாவுமாய் விளங்குகின்றதாய்க் கண்டு, அருளால் அன்புசெய்து இன்புற்று இருப்பார்கள். அருட்பெருஞ்ஜோதியின் பேராற்றல்தான் அதனை எங்கும் கண்டு கொள்ளச்செய்ததோடு அழியா இன்பில் வாழவும் செய்துள்ளது

நம் வள்ளலை. அவர் சிவசக்தியால் கண்டது அருட்பெருஞ் ஜோதி. அந்த அருட்பெருஞ்ஜோதியால் பெற்றது அருட்பிர காச ஆனந்த நித்திய வாழ்வு. ஆகையால், இனி உலகம் எல்லாம் அருட்பெருஞ்ஜோதியால் நித்தியானந்தவாழ்வு பெற வேண்டியதே அருள் ஆணையாகும். மாறாக அவர் சென்ற சிவ நெறியையே பின்பற்றிச் சென்று உய்யக் கருதுவது எவர்க்கும் இயலாத ஒன்றாகும். ஏனெனில், கருவிலே சிவச்சார்பு கொண்ட அவர் எவ்வளவு வருந்தி முயன்று அருட்பெரு நிலைக்கு ஏறியுள்ளார்? அப்படிச் சாதாரண மக்களால் முடியாது என்பது உண்மையாகும். ஆகவே, அவர் வழங்கினது கொண்டு வாழ்வு பெறுவதுதான் யாவருக்கும் எளிதில் பயன்தருவதாம்.

## 105. சாவாநிலை தந்தது

*209.* சாவா நிலையிது தந்தன முனக்கே
*210.* ஆவா வெனவருள் அருட்பெருஞ்ஜோதி

**(உ-வி)** முன் 205-வது அடியில், சாமாறு தவிர்த்தது பற்றி விளக்கப்பட்டது. இங்கு அச்சாவா நிலையில் இருக்க வியந்து வரவேற்றுக்கொண்டதாகக் குறிக்கப்படுகின்றதாம்.

கடவுள் இயற்கை, அழிவற்ற அல்லது நீக்கமில்லாத செய லொடு கூடிய விளக்க நிலையாகும். மனிதப் பிறவி ஏற்றுள்ள ஓர் ஆன்மா உலகியல் அனுபவத்தோடு வாழ்ந்து கொண்டிருத்தல் விளக்க நிலையாகும். உயிர் ஒடுங்க உடலைப் பிரிந்த ஆன்மா வாழ்வற்று விளக்கமற்றுப் போகின்றதாம். இவ்விளக்கமற்ற நிலையே செத்த நிலையாம். எனவே ஆன்மாவுக்குச் சாவா நிலையில்தான் வாழ்வு உண்டே தவிர இறந்தநிலையில் வாழ்வு என்பதில்லையாம். ஆன்மா உடலைவிட்டு எங்கே எப்படியிருந் தாலும், அவ்விருப்பை அதன் வாழ்வாகக் கொள்ளமுடியாது. ஆகையால் பிறவாவரம் பெறுவதால், பிறவாமையுறுவதால் ஒரு பெருமையுமில்லையாம். இறவாமையுற்று வாழ்கின்ற நிலையே பெருமையுடைத்தாம்.

ஆன்மாவுக்கு அழிவில்லை என்பது உண்மைதான். ஆனால், உடல்கொண்டு மனிதனாய் வாழ்கின்றபோதுதான் ஆன்மா சுக துக்க அனுபவம் கொண்டு விளங்கக்கூடியதாயிருக்கின்றதாம்.

ஆகையால் இறந்தவன் இறையடி சார்ந்து இன்பநிலையில் விளங்குவதாகக் கொள்வது மயக்கே. இறைநினைப்போடிருந்து உயிரை விட்டவன் அவ்விறைநிலை யுறுவர்ன் என்பது எந்த அளவுக்கு பெருமைப்படக்கூடியதாயிருக்கின்றது என்பதைச் சிந்தித்துப் பார்த்துத் தெளியவேண்டும்.

இனி சாவாநிலை எய்த முன்னோர் மேற்கொண்ட முறை யெல்லாம் சரியானதல்ல என்பது இன்றைய சுத்தசன்மார்க்கத் தால் விளங்குவதாம். தோன்றிய உடல் மறைந்து ஒழிவதுதான் நியதி என்றும், ஆகையால் உடல் வாழ்வு நிலையற்றதே என்றும் கருதிவிட்டு, நிலையான ஆன்ம இயற்கையுற்று இருப்பதுவே பொருத்தமானது, அந்நிலையே பிறவா இயல்பினது எனவும் கொண்டு தேகத்தை விட்டுவிடுதல் சரியன்று.

ஆன்ம இயற்கை அழியாமை கொண்டதே. உண்மையில் அவ் ஆன்மா கடவுட் சிற்றுருவேயாம். அணுத்துவமாகிய இந்த ஆன்மாவுக்குள்ளிருந்து இறையருட்பெருஞ்செயலால் பேராற்றல் வெளிப்பட்டு, அவ் ஆன்மாவைச் சூழப் பொருட்சக்தி உருவங் களாயும், கிரியா சக்தி இயக்கங்களாயும், ஞானசக்தி உணர்வு களாயும், யோகசக்தி சித்திகளாயும் அருட்சக்தித் திறலாயும் படிப்படியாய்த்தோற்றி விளைவுறுகின்றனவாம். அருட்சக்தித் திறலால் அருள் உண்மை விளங்கும்போது அவ் ஆன்மா அருள் ஞான பக்குவ வடிவங்கொண்டு திகழ்கின்றதாம். அபக்குவத்தில் இவ்வுண்மை சிறிதும் விளங்குவதில்லை. இச் சூழ் மனிதப்பிறப் புருவம் போய்விட்டால், மற்றெந்த உருவம் ஏற்பட்டாலும் இறை யனுபவம் விளங்காது. கடவுள் நித்தியமாய் விளங்கிக் கொண் டிருப்பவர். இந்தப் பக்குவ மனிதனில் கண்டுகொள்ளப்படுகின் றார். அப்படிக் கண்டுகொண்டவன், தேகப்பற்றொழித்து, அக மிருந்து அருளியல் வாழ்வில் தழைத்தால், அவன் உள்ளிருந்த அருளின் ஆற்றல் வெளியாகிச் சூழ்வடிவையும், நித்தியானு பவத்தின் பொருட்டு நித்திய ஜோதி வடிவாய் ஆக்கிகொள் கின்றதாம். இந்நிலையே ஒருவன் ஏற்கும் சாவா நிலையாகும். இந்நிலையை அறிந்து அடையாதவரை சூழுரு ஆவதும் அழிவதும் தவிர்க்க முடியாதாம்.

அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் தன் நிலையை வள்ளலாருக்கு உணர்த்தி, அப்பெருமையுடைய வியன்நிலைக்கே வரவேற்று வாழ்த்துகின்றார். அடிகளார் தம் மெய்யருள் வியப்பில்,

"அண்டப் பரப்பின் திறங்கள் அனைத்தும்
அறிய வேண்டியே
ஆசைப்பட்டேற் கறிந்து தெரித்தாய்
அறிவைத் தூண்டியே
பிண்டத் துயிர்கள் பொருந்தும் வகையும்
பிண்டந் தன்னையே
பிரியும் வகையும் பிரியாவகையும்
தெரித்தாய் பின்னையே."

என்ற பாவில், பிண்ட தேகத்தில் உயிர்சக்தி விளங்க வருவதும், நீங்கிப் போவதும், நீங்காது நிலைத்திருப்பதும் ஆகிய உண்மை யைக் காட்டிக்கொடுத்துள்ளார். இங்கு 'சாவாநிலையிது தந்தனம் உனக்கே'' என்று கூறிப் பெருமை அடைகின்றதாம் . அருட் பெருஞ்ஜோதி. அழியாத கடவுளான்ம அகநிலையே, அருளாலே அனகமுற விரிந்து சூழுருவையும் சுத்த சுகானந்தவடிவமாக்கிக் கொண்டு திகழலாகின்றதாம். நித்தியமாய் என்றுமுள்ள கடவுள், புறவுலகில் வெளிப்பட்டிலங்காது, யாவற்றினும் அக நின்று ஆண்டுவந்த ஆண்டவர் இப்பொழுது முதல் அகநின்றே அனகமுற்று மனிதவடிவை மன்னி நிதமும் வாழும் உருவாகக் கொண்டு விளங்குகின்றவராகி விட்டுள்ளார். இவ்வனுபவம் வழங்கப்பெற்ற முதல் மனிதர் நம் வள்ளலேயாவர். ஒன்றான கடவுள்தானே தனித்தனி ஒவ்வொரு மனிதனாய் விளங்கலின், அவரேதான் இந்த அருட்சித்தியுறு ஒவ்வொருவருமாய்த் திகழ் கின்றவராவார். எனவே இச் சாவாநிலை நம் வள்ளல் மூலம் எவ்வுலகத் தெம்மனிதர்க்கும் பெறற்குரியதாகி விட்டுள்ளதாம்.

## 106. சாதியும் மதமும் சமயமும் பொய்

211. சாதியும் மதமுஞ் சமயமும் பொய்யென
212. ஆதியு லுணர்த்திய அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) ஒன்றான மக்கள் சமுதாயம் ஆன்மநேய ஒருமைப் பாட்டால் ஒத்துவாழவேண்டியதுதான் திருவருளாணையாம். சுத்த ஆன்ம உண்மை மனிதனின் பொறிபுலன் உணர்வுக்கும், மனோகரண அறிவுக்கும், உயிர் விளக்கத் தன்மைக்கும், வெளி யாகாதிருப்பதால் உண்மைகொண்டு வாழ முனையாது, புறத்தோற்றம், குணம், செயல், இடம் முதலியன கொண்டும்,

இயல்பாய் இல்லாது கற்பித்துக்கொள்ளப்பட்ட சாதி, மதம், சமயம் முதலியன கொண்டும் மக்கள் பிணக்குறுகின்றனர். சாதியும், மதமும், சமயமும் மக்களினத்தை வேற்றுமைப்படுத்தியும், பிரித்துவைத்தும், முக்கியமாக வாழ்வில் சமநோக்கோடு பழக முடியாது செய்து விடுவதால் இவையெல்லாம் வெறுக்கப்படுகின்றன மெய்யறிவுடையோர்களால். பரந்த மெய்யறிவும், விரிந்த அன்புள்ளமும் கொண்டு மக்கள் சமுதாயம் முழுமையும் ஒருமையிற் கண்டு யாவரும் நல்லின்பம் பெற உதவவேண்டியதே ஒவ்வொருவரின் கடமையாக உள்ளதாம். இப் பொய்யான சேர்க்கை வேற்றுமைகளைக் களைந்துவிட்டால், பின்னர் தட்பவெப்பச் சூழ்நிலையாலும், உண்டி உடை பழக்க வழக்க இயல்புகளாலும், தோற்றியுள்ள வேற்றுமைகளை எளிதில் உளத்திருந்து களைந்துவிட முடியும். எதற்கும் உள்ளத்தில் அன்பு ஒளி உண்டாக்கிவிட்டால், அக உரிமையோடு எல்லோரும் ஒத்து வாழமுடியும்.

நம் அடிகளாரின் உள்ளத்தில் அதிகம் இடம்கொண்டது தயவு. அதனால் ஏற்பட்டது பொதுமக்கள் சமுதாயத்தின்மீது பரந்த அன்புள்ளம். ஆதியிலே இந்தப் பேரன்பு உள்ளத்தில் குடிகொண்டிருந்ததால், மக்களினத்தைப் பிரிக்கும் எல்லாத் தடைகளையும் அடியோடு சாடுகின்றார். பொய்யான சாதி, சமய, மதக் கொள்கை கோட்பாடுகளையும், பொய்க்கற்பனா சாத்தியங்களையும் மூடப் பழக்க வழக்கங்களையும் வெறுத்து ஒதுக்குகின்றார். அருட்பெருஞ்ஜோதிதான் உண்ணின்று உண்மையை யுணர்த்திப் பொய்யானவற்றில் சிறிதும் பற்றுண்டாகாது செய்துவிட்டதாகும். அவருடைய உள்ளத்தில் ஆதியில் உணர்த்தப்பெற்றிருந்தது, ஒன்றே கடவுள், ஒன்றே மக்களினம், தயவு ஒன்றே நெறி என்பனவாம். அந்த ஒன்று முதலில் சிவ விளக்கமாக இருந்ததால் அவரது பக்திப் பாடல்களும், காட்சி அனுபவங்களும் சிவ பரமாக வெளியாயினவாம். நாளடைவில் அச் சிவானுபவம், சமய மதாதீத அருட்பெருஞ்ஜோதியாக ஆகிவிட்டதாம். உண்மையில் ஆதியில் இவர்க்கு உள்ளொளியாயிருந்து உணர்த்தியது அருட்பெருஞ்ஜோதியேதான். ஆனால் அப்போது அது அருட்பெருஞ்ஜோதியாக விளங்காமல் தணிகை முருகனாக விளங்கித் தோற்றியது பக்குவக்குறைவேயன்றி வேறல்லவாம். பின்னர் எத்தேவரையும், சமயக் குரவர்களையும் அருட்பெருஞ்ஜோதியிற் கண்டுதான் போற்றுகின்றார்.

"அன்றே என்னை அடியனாக்கி
ஆண்ட ஜோதியே
அதன்பின் பிள்ளையாக்கி அருளிங்
களித்த ஜோதியே
நன்றே மீட்டு நேயனாக்கி
நயந்த ஜோதியே
நானும் நீயு மொன்றென் றுரைத்து
நல்கு ஜோதியே."

இதிற் கண்டாங்கு அருட்பெருஞ்ஜோதியைத்தான் இவர் நால்வ ராகக் கண்டு போற்றுகின்றார் என்பது உண்மை. ஈதறியாச் சைவ நெறியாளர், சமயக் குரவர்கள், வள்ளலார் பணிந்து போற்றும் பெருந்தகையாளர் என்று உளங்கொண்டு, அவர்கள் பெரிதும் மயங்கி நிற்கின்றனர். இவர்கள் எல்லாம் . தம் சிவபரஞ்ஜோதியை எவரும் போற்றும் அருட்பெருஞ்ஜோதி யாகக் கண்டுகொள்ள வேண்டும். அந்த ஒன்றான அருட்பெரும் பதியே தன் அருள் ஏகதேசத்தை விரித்து எவருமாய்த் திகழ் வதை அருள்அறிவால் உணரவேண்டும். மற்றபடி மருள் உணர் வால் புறத்தோற்றநிலைகளைக் கண்டு மயங்குதல் பொய்மைக் காட்சியாம். சமய மதங்களைப் பொய் எனத் தவிர்க்கும்போது அவற்றில் மிகு பற்று உடையவர்கள் அதிகம் எதிர்க்கின்றனர். சமயமின்றேல், மக்களினம், மாக்களினம் (விலங்கினம்) ஆகிவிடும் என்று அச்சுறுத்துகின்றனர். அது தவறு. ஏனென்றால், நம் அருட்ஜோதி சமய மதக் கவசத்தைப் போக்கி விட்டு சுத்த தயவு கொண்டு ஒத்து வாழ வகை செய்வதாய் இருத்தலின் 'மக்கள் மாக்களாகாது அருட்ஜோதி கொண்ட ஆன்மாக்களாவது சத் தியமாம். உண்மையை அறியாது, ஜீவ தயாவொழுக்கமில் லாது புலனெறிவாழ்வில் பொங்கி வழிகின்றவர்கள் சமய மதங் களைக் காத்தாலும், அழித்தாலும் தீமையே வளரும் என்பது நிச்சயம். ,ஆகவே, பொய்மையிலா அருட்பெருஞ்ஜோதி கொண்டு வாழ்வதாக மக்கள் சமுதாயம் முழுவதும்.

## 107. மனத்தெளிவும் திடமும்

213. மயர்ந்திடேல் சிறிது மனந்தளர்ந் தஞ்சேல்
214. அயர்ந்திடேல் என்றருள் அருட்பெருஞ்ஜோதி

**(உ-வி)** இங்கு, மயர்ந்திடல் என்பது, மனத்தெளிவறல், அல்லது மயங்கி நிற்றல் என்றும், அயர்ந்திடல் என்பது நினைவுச் சோர்வுற்று மறத்தல் என்றும் பொருள்படுவனவாம். அறியாமையாலும், கவலையாலும், துன்பத்தாலும், ஏலாமை யாலும் மனத்தின்கண் இருள் சூழ்ந்திட, தெளிவின்மையும் மயங்கி நிற்றலும் ஏற்படுகின்றன. மனம் தளர்ச்சியுறுகின்றது. அச்சம் நேருகின்றது. இந்நிலையில் நினைவு ஒரு நிலையில் நிற் காது தடுமாறுகின்றதாம். இத்தடுமாற்றத்தால் மறதி யுண் டாகின்றது. இவ்வளவையும் மாற்றி அசைவிலா அருட்ஜோதி தீபம்போல் விளங்கச் செய்யவல்லது நம் அருட்பெருஞ்ஜோதி சக்தி.

மனம் சலியாது மணியொளியாய் நிற்கும் இடம், புருவ மத்திய லலாடமாம். அம் மனோன்மணி பீடத்து நிலவாது, கீழ் நிலை· இதயத்தானத்தில் இருந்து மயர்ச்சியும், அயர்ச்சியும் அடைகின்றதாம். இவற்றாலேதான் உயிரும் உடம்பும் மிகுதி யாகப் பாதிக்கப்படுகின்றன. இந்த இதயத்தில் இரத்த ஓட்டமும், உயிர்த்துடிப்பும், கரண இந்திரிய உணர்ச்சியும் பாதிக் கப்படுவதால்தான் எல்லாக்கேடும் விளைகின்றனவாம். ''தனக் குவமை யில்லாதான்தாள் சேர்ந்தார்க்கு அல்லால் மனக்கவலை மாற்றல் அரிது,'' என்பதும் உண்மையே. திருவருட்சக்தித் துணையால் மனம் கவலையற்றுச் சலியா திருத்தல் கூடும். ஆனால் இந்த இதய பீடத்தில் மனம் ஒன்றிச் சலியாநிலை யுறும்போது பொறியுடம்பின் செயலும், புலன் உணர்வும் ஒடுங்கி நிற்கநேரும். ஆகையால், புறச்செயலில் ஈடுபட முடியாதுபோம். ஆகையால், மனம் செயலற்றுப் போகாது, எப்போதும் செயலோடு விளங் கவும், அதே நேரத்தில் மயர்வும், அயர்வும் அடையாது வாழ்வில் உயர்வு பெற்று விளங்கவும் வேண்டி மேலிடத்துச் சேர்க்கை பெறுதல் திருவருளாணையாம். புருவத்திடை நிற்கும் ஒருமை மனம், தலைநடு ஒளியில் ஒன்றி அதுவாகும் போது அருள் ஒளி யாய் விளங்குகின்றதாம். இந்த இடத்தில் அருட்ஜோதியே மனத்தைத் தன்மயமாக்கிக் கொண்டு அத்துவிதமாய் விளங்கு வதாம்.

மேற்படி மேனிலையில்தான் தன் உணர்வு அருள் ஒளியாகி, அருட்ஜோதியில் அத்துவிதமாய் விளங்கிக்கொண்டு இருக் கின்றார் நம்பெருமான். இந்நிலையில்தான் அந்த அருட்ஜோதிபதி இவர்க்கு, அயர்ந்திடேல் சிறிதும், மனந்தளர்ந்தஞ்சேல், மயர்ந்

திடேல் என்றெல்லாம் கூறி அருள்பாலிக்கின்றதாம். இப்படி அருட்ஜோதிமயமாய் இருந்து கொண்டு வாழும் வள்ளலின் கரணேந்திரிய உயிருடம்பு முழுவதும் அருள் ஒளியால் விளங்க நேர்ந்து விடுவதால், எவ்வகையிலும் சிறிதும் பாதிக்கப்படாது, பயம், கவலை, துன்பம், சோர்வு, மரணம்கூட இல்லாது வாழக் கூடியவராகி விடுதல் சாத்தியமாகின்றதாம். எல்லார்க்கும் பொதுவில் விளங்குகின்ற இந்த அருட்பெருஞ்ஜோதிபதி தம் பால் உறுவோர்க்கு இப்படி மனத்தெளிவும் திடமும் வழங்கி வாழ்விக்க உள்ளார் என்பது உண்மையாம். ஆதலின் உறுவோம் அருட்பெருஞ்ஜோதி யுள்ள அம்பலத்திற்கு.

## 108. திருநெறிப் பொருளியல்

215. தேசுறத் திகழ்தரு திருநெறிப் பொருளியல்
216. ஆசறத் தெரித்த அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** திருநெறி யெனத் தமிழில், தமிழ் மரபில் வழங்கப் படுவது கடவுள் உண்மை விளக்கச் சன்மார்க்க முறையாகும். திருநெறிப் பொருளியல் என்பது கடவுள் அனுபவ விளக்கமாம். இதனால் இத் திருநெறிப் பொருளியல் என்பதற்கு முன், தேசுறத் திகழ்திரு என்ற இயல் அனுபவக் குறிப்புச் சொற்களை தொடர் அடைமொழியாக நிறுத்தப் பெற்றுள்ளதாம். இனி இவ்வடியின் விரிபொருள் விளக்கத்தைக் காண்போம்.

திரு-என்பதைத் தனியொரு சொல்லாகவும், அடையாகவும் கொள்ளுகின்றனர். இதற்குப் பொருள் இலக்குமி, செல்வம், பொன், அழகு, நல்வினை, கண்டாரால் விரும்பப்படும் தன்மை முதலியனவாம். இப் பொருள் விளக்கமெல்லாம் புற ஆய்விற் கண்டனவாம். அகமாகிய உண்மை விளக்கம் காண்பாம். இவ் ஈரெழுத்தொருமொழியை உயிரும் மெய்யுமாய்ப் பகுத்துப் பார்க்கும்போது (திரு=) த் + இ, ர் + உ என விளங்கும். இதில் த் - ஆகிய தகரமெய், ஏழாவது மெய்ந்நிலை எழுத்துரு சிவரூப, தகராகாச வடிவமாகும்: இத்துடன்கூடிய இகரம் அருட்பிரணவமாம் சிவசக்தியாய் முத்தன்மையால் மூன்றாம் உயிராய் நின்று திகழ்வதாம். இப்படியுள்ள அருட்சிவமாம் கடவுள்உண்மை அக அனுபவத்தில் துவாதசாந்தமாம் பன்னிரண்டாவது நிலையில் ஒளிமயமாய் நிலவுகின்றதாம். இது

குறிக்கவே, ர்-என்னும் 12-வது மெய்ந்நிலை எழுத்து உருத்திர பீஜமாகக் கூறப்படுவதாம். இக் கடவுட்ஜோதியின் இயலும் செயலும் ஐமை ஐந்தியல் விளக்கத்தோடு, அருள் ஐந்தொழிற் செயலோடு திகழ்வதைச் சுட்ட இந்த உகரம் ஐந்தாம் உயிரெழுத் தாய்க் கூட்டப்பெற்றுள்ளதாம். ஆகவே, இத் திருவால் பெறப் படுகின்ற உண்மை விளக்கம் யாதெனில், பரமாகாசப் பரம் பொருளான கடவுள், நம் ஆறாதாரங்கடந்த ஏழாவதாகிய நிரா தாரமாம் ஆயிரம் இதழ் கமல மலர் மிசை அருள் முத்தன்மை யொடு எழுந்தருளி, துவாத சாந்த அனுபவத்தில் வெளிப்பட்டு, ஐவண்ணசக்தி சித்தி விளங்கும் அருளின்பப் பெருவாழ்வை வழங்குவதாயிருக்கின்றதாம். இவ்வகப்பொருள் முன்னெறி களால் பெறப்படவில்லையாம். சுத்த சன்மார்க்கத்தில் விளங்கும் இத்திருவின் அனுபவப்பொருளே ஈண்டு திருநெறிப்பொருளியல் ஆகப் புகலப்படுகின்றது. இதனால் அடையப்பெறுகின்றது எதுவோ அதனை ஒருவாறு சுட்டிட நிறுத்தப்பெற்ற அடைமொழித் தொடரே தேசுறத்திகழ்தரு என்பதாம். தேசு-என்றால் தெய்வ ஜோதியாம்: திருநெறிப் பொருளியல் மூலம் பெறப்படுவது தெய்வஜோதி இன்பவடிவமாகும்.

அருட்பெருஞ்ஜோதியின் தனிப்பெருங்கருணையால் நம் வள்ளற்பெருமான், தேசுறத் திகழ்தரு திருநெறிப் பொருளியலை முற்றும் ஆசற, குற்றம் குறையின்றி அருள் உணர்வில் நன்கு தெரிவிக்கப்பெற்றார். தெரித்தல் என்றால், தெளிவுபட அறிவித்து விளங்கச்செய்தலாம்.

சைவ தெய்வத் தோத்திரமாகப் பெறப்பட்டுள்ள மூவர் அடங்கன்முறையாம் தேவாரத்தைத் திருநெறியத் தமிழ் என் கின்றனர். அத் தேவாரத் தெய்வ தயா விளக்கத் தோத்திர முறையால் பெறப்படும் சிவானந்த அனுபவம், தேஜோன்மயமான சிவஜோதியில் இன்பலாகிரியில் மூழ்கி ஒழியச்செய்வதாயிருக் கின்றதாம். தெய்வநெறியத் தமிழ்-அந்த அளவு விளக்கத்தையும் அனுபவத்தையும்தான் அன்று வழங்கிநின்றது. காரணம் மனித உள்ளம் அந்த அளவு பக்குவநிலைதான் அன்று அடைந்திருந்த தாம். சிவபரத்துண்மையை உள்ளத்தளியிற் கண்ட சித்தர்கள், அப் பரநிலையைப் பிறரும் கண்டடைய உருவாக்கித் தந்த மொழியே சொற்பொருள் அவ்வளவில் விளங்கியது திருவருட் செயலே. இன்றோ அதே திருநெறி (யத் தமிழின்) பொருளியல்

திருவருளின் பெருஞ்செயலால் நிறையுண்மை விளக்கம் ஆசற வழங்கிடப் பெற்றுப் பேரின்பமுறுகின்றோம்.

## 109. உலகம் கருணைச் சித்திச் செயல்

**217. காட்டிய வுலகெலாங் கருணையாற் சித்தியின்**
**218. ஆட்டியல் புரியும் அருட்பெருஞ் ஜோதி**

**(உ-வி)** கண்ணுக்குத் தோற்றி விளங்குகின்ற உலகம் முழுமையானதல்ல; ஒரு சிறு பகுதியே. இப்பகுதி உலகையே மிகப்பெரிதாக முதலில் நினைக்கின்றோம். உலகைச் சுற்றிச் சென்று பார்க்கும்போது, முன்னர் கண்டிருந்தது, அற்பமென உணர்கின்றோம். இம்மாதிரியான உலகம் பல இருப்பதை மனத்தறிவால் காணும் தருணம் உலகங்களின் விரிவுநிலை ஒருவாறு கற்பனை செய்துகொள்ள முடிகின்றது. இதற்குமேலாகத் திருவருளை அல்லது கடவுட்கருணையையே கண்ணாகக்கொண்டு காண்கின்ற சமயம் எண்ணடங்கா உலகங்கள் உள்ளனவாக அறிகின்றோம்.

''நாதா சிறியேன் நாய்க்கும் கடையேன்
முற்றும் கண்டதே
நானோ கண்டேன் எந்தாய் கருணை
நாட்டங் கண்டதே.''

என்ற அருள்வியப்பு மொழியால் தெளிவாம். மேலும், அண்டகோடி முழுதும் காணும் கண்கள் எய்தியதாகவும் கூறப்படுகின்றது. எத்தனைகோடி உலகங்கள் உண்டோ அத்தனையும் நம் பதியின்பெருங்கருணையால் ஆளப்படுகின்றன என்பது உண்மையாம்.

அண்ட கோள உலகங்களிலே, விண்மணியாம் ஞாயிற்
றிலும், அது போன்ற விண்மீன்களாம் பெருஞ்ஜோதி கோளங்
களிலும், மக்களினம் வாழற்காகா: கிரக கோளங்களிலும்
பிற நீங்கலாக, இந் நிலவுலகத்தும், இது போன்ற மண்ணுலகங்கள்
பலவற்றிலும் மனிதஇனம் தோன்றித் தோன்றிப் பண்
பாடடைந்துகொண்டே இருக்கின்றதாம். இம் மக்கள்வாழ்
நிலவுலகங்களையே உலகங்களாகக் கொள்ளுவோம். இவ்வுல

கங்களில்தான் மக்கள்வழி கடவுட்கருணையின் சித்திச் செயல் வெளியாகின்றதாம். கருணையாற் செய்யும் சித்திச்செயல் ஆக்கலாதி ஐந்தொழில் ஆகும். இதுவே அருட்பெரும்பதியின் திருநடனத் திருச்செயல் என்ப. இக் கருணைச்சக்தியால் பெற வேண்டியது பேரின்ப சித்திப் பெரு வாழ்வேயாகும். அது வல்லால், இஷ்டகாமியார்த்தமாகத் தந்திரமந்திர வகையால் பெறப்படும் கருணை எச்சணி, அற்பசித்திகளை வழங்கி அழியத் தான் செய்யும்.

நமது அருட்பெருஞ்ஜோதி ஆனந்தநடனபதி, சத்திய ஞானம் விளங்கும் மக்கள் உள்ளச் சபையில் எழுந்தருளி, தனிப் பெருங்கருணைச்செயல் விளங்க விளங்குகின்றது உண்மையாம். இப்படி எத்தனையோ கோடி காலமாக, எத்தனையோ கோடி அக அம்பலத்தில் இருந்துகொண்டு, அருள் ஐந்தொழில் நடனம் புரிந்து வருகின்றாரோ நமது அம்பலத்தரசர்! அருள் ஞான ஏக தேசக் காட்சியால் எத்தனையோபேர் இதுவரை இப்பதியைக் கண்டும், பலவாகிய அற்புதசித்திகளைப் பெற்றும் பெருங் களிப்பில் ஆழ்ந்துபோய் இருக்கக்கூடும். ஆனால், இவ்வுலகில் நம் வள்ளல் உள்ளத்தில் கண்டுகொள்ளப் பெற்ற அருட்பெருஞ் ஜோதிக்காட்சி, தனிப்பெருங்கருணையால், இவரைத் தன்மயமாய் உள்விளங்கச்செய்ததோடு, இந்த அனுபவம் கெடாதிருந்து கொண்டு வாழவும், பெருங் கருணைச் சித்தாடல் புரிந்து உலகினரை எல்லாம் பக்குவம் வருவித்து வாழ்விக்கவும் செய்து விட்டுள்ளதாம். கருணைச்சித்தியின் பெருஞ்செயல் இதுவாகும்.

தனிப்பெருங்கருணையால் கடவுள்மயமாகி வாழுகின்ற பேரின்ப சித்தியைப் பெற்ற முதல்வர் நமது திருவருட்பிரகாசரே எனத் திருவருளால் உணர்த்தப்பெறுகின்றோம். இச் சுத்த நெறிக்கு, இதனால் பெற்ற மரணமில்லாப் பெருவாழ்வுக்கு இவரே முதல்வர் என்பதற்கு அகச்சான்று அருட்பாவில் பல உள. இதற்கு முன், வேறு யாராவது, எவ்வுலகத்திலாவது இச்சித்தி நிலை எய்திருக்கக்கூடுமா என்றால், எய்தியிருக்கவே முடியாது என்று திட்டமாகக் கூறலாம். ஏனெனில், ஒன்றான கடவுளே எவ்வுலகத் தெய்வெவருள்ளும் இருந்து தன் அருள் ஏகதேசத் தால் அவரவர்களாகத் தோன்றி மறைந்து கொண்டிருக்கின் றதை இன்று தெளிவாகக் காண்கின்றோம். இக்காட்சி யனு பவம் புதியதல்ல, முன்பே பலருக்கும் ஏற்பட்ட ஒன்றாகும்.

இக்காட்சியோடு அதிற்கலந்து மறைவதுவே முடிவாகவும் இருந்தது இதுவரை. இதனால்தான் இதுகாறும் மனிதனுக்கு மரணமில்லா வாழ்வு ஏற்படாமல் போயிற்றாம். பூரண அருள் முன்பு வெளியாகி ஒருவனை வாழ்த்தி வாழ்வித்திருந்தால் அப்போது முதல் அருட் சந்நிதியுறுவோர்க்கு உண்மை விளங்கியும், அடைந்தும் அனுபவம் ஏற்பட்டும் இருக்கத் தடையில்லை. அப்படி முன் அனுபவம் ஒன்றும் இல்லாததால், இவர்க்கே இந்நிலை கிடைக்கப்பெற்றுள்ளதால், இவரே இப் புதுநெறியில் அருட்பெரும்பதியின் முதற்பிள்ளை என்பது தெளிவு. ''எப்பாரும் எப்பதமும் எங்கணும் நான் சென்றே எந்தை நினது அருட்புகழை இயம்பியிடல் வேண்டும்'' என்றும், எவ்வுலகத் தெவ்வெவர்க்கும் இவர் பெற்ற பேரின்ப வாழ்வைப் பெறுவித்தல் வேண்டும் என்றும் வேண்டிக்கொள்கின்றதால் உண்மை தெளிவாம். இதனால், அருளாளன் பெருஞ்செயல், கருணைச்சித்தியின் செயலாக வள்ளல்மூலம் வெளியாகி விளங்குவதை உலகமெல்லாம் கண்டுகொள்ளும் இனி.

## 110. குலமும் இனமும் உருவின் தோற்றம்

219. எங்குல மெம்மினம் என்பதொண் ணூற்றா(று)
220. அங்குலம் என்றருள் அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) பொதுவாக மக்கள் சமுதாயம் முழுமையும் ஒரே இனமாகும். கற்பனையால், சாதியும், சமயமும், மதமும் ஒன்றான மக்களினத்தைப் பலவாகப் பிரித்து விட்டன. இவை பெரும் பிரிவுகளாம். இவற்றுள் சிறு பிரிவுகளாகப் பல குழுக்கள் கூடிய இனப்பிரிவுகள் தோன்றியுள்ளன. இன்னும் கீழ்நிலையில் மக்கள் பிறப்பினால் உண்டான உறவின் முறையால் பலவேறு குலப் பிரிவின்ராய் விளங்குகின்றனர். புற உடலை வைத்துத்தான் ஒருவன் இன்ன குலத்தான், இன்ன இனத்தான் என்றுசொல்லப் படுவான். ஆனால் மனிதனின் உண்மை வடிவம் (சொரூபம்) ஒன்றான கடவுளான்மாவாய் இருக்கின்றது. சொரூபம் அல்லது சுவரூபம், சுயரூபம் கடவுள் வடிவமாகவும் அதன் தன்மையான சுபாவம் ஆன்ம வடிவமாகவும் கொள்ளப்படும். இந்தச் சொரூபமும் சுபாவமும்தான் அகமிருந்து புறவடிவமாகிய தேக உருவம் அல்லது ரூபத்தைத் தாங்கி விளக்கச்செய்து கொண்டுள்ளதாம்.

அகநிலையில் இருந்து பார்த்தால்தான் ஒருமையும் ஆன்மநேய உரிமையும் விளங்கும். புறத்தை வைத்து நோக்கும்போது பலவாகிய வேற்றுமையே தோற்றிப் பிரிவுக்குக் காரணமாகின்ற தாம். இந்தப் புறத்தோற்ற வேற்றுமையிலும் ஒரு ஒற்றுமை இருக்கின்றது. அந்த ஒற்றுமை யாதெனில், எவருக்கும் அவர வர் தேகம், அவரவர்களின் எண்சாண் அல்லது 96 விரற்கடைப் பிரமாணமே இருப்பதாம். விரற்கடை என்பதே அங்குலி என்ற திரிசொல்லின் அடியாக வந்த அங்குலமாக விளங்குவதாம். இம் மனிதப் பிறப்பு, கடவுள் அருள் அனுபவம் பெற்று அழியா வாழ்வு அடையக்கூடியதாயிருக்கின்றது. இதில் 96 தத்துவங்கள் நிரம்பியும், தத்துவாதீதத்தில் கடவுள் உண்மை விளங்கிக் கொண்டும், எண் சாண் உடலோடு திகழ்ந்து கொண்டும் இருக்கின்றனவாம்.

கடவுள் உண்மை ஓம் என உள்ளதாம். இது மனிதனில், அகரம் எண் சாண் உடம்பாயும், உகரம் இரு மூச்சுக்காற்றாயும், மகரமெய் மெய்யறிவு அல்லது ஆறறிவின் விளக்கமான உள்ளொளியாகியும் கூடி, அ-உ-ம்= 8x2x6=96 ஆக உள்ளது ஓமே ஆகும். உள்ளொளி விளங்கி நிற்கவும், அருளனுபவம் கெடாது விளங்கவும் இந்தத் தொண்ணூற்றாறு அங்குலப் புற வுடல் சிதையாதிருக்க வேண்டியுள்ளதாம். மின்சார விளக்கு பிரகாசத்தோடு விளங்கக் குமிழ் (Bulb) எவ்வளவு இன்றியமை யாததோ அவ்வளவு இன்றியமையாதது மனிதவாழ்வுக்கு இப் புறவுடம்பு; உடம்பு கெடின், உயிர் கெடும். ''உடம்பார் அழியில் உயிரார் அழிவார்'' என்பது திருமந்திர விளக்கம்.

ஆகவே புறத்தேகம் இன்றியமையாததே. ஆனால், அதனிடத் தில் புலபோக இச்சைக்கு இடம் கொடாது, அது கொண்டு ஜீவ காருண்ய ஒழுக்க வாழ்வுக்கு உதவவேண்டும். அன்புச்செயலுக் குத் துணையாகக் கொள்ளவேண்டும் இவ் உடம்பை. அவ் அன்பு செயலுக்குத் தடையாகப் புற வடிவினால் விளங்கும், குல, இன, முதலான வேற்றுமையுணர்ச்சியை யொழித்துவிட்டு, அக ஆன்ம நேய ஒருமைப்பாட்டு உரிமையோடு சூழ்நர் எவர்க்கும் நல்லன்பு செய்திருத்தல் வேண்டும். இவ் அன்புச் செயலால் அருளின்ப வாழ்வு பெறற்காம். ஆகவேதான் நம் அருட்பெருஞ்ஜோதிபதி அகநின்று இந்த உடலின் உண்மையை உணர்த்துகின்றார்.

உண்மை அறிந்து உள்ளிருந்து உடலைச் சுத்த சுகானந்தவடி வாக்கிக்கொண்டு வாழாது, உடலை வெறுத்துத் துறந்து இழந்து விடுவதும், புற வடிவிற் பற்று கொண்டும் தம் குலம், பிறர் குலம் என்றும், தம் இனம், பிறர் இனமென்றும் கண்டு கண்டு மெய் யன்பு செய்து உய்யாது கெடுவது தீதாம். ஆகவே, புலையகப் பற்றாகிய தேகம் நான் என்ற பற்றை ஒழித்துவிட்டு, அகவுண்மை வடிவில், தயா இயல் வண்ணமாய் இருந்துகொண்டு, புறவுலகில் தயவுசெய்து கொண்டிருத்தல் வேண்டும். உலகையும் உடலையும் வெறுப்பதும்., தயவுச்செயல் புரியாதிருப்பதும் திருவுளச்சம்மத மாகாது: அருள் ஆணைக்கு மாறானதாம். அருட்பெருஞ்ஜோதி உணர்த்துகின்ற உண்மை கொண்டு வாழ்ந்து உயர் இன்பில் ஓங்குவோம்.

## 111. இறைவனும் மதமும்

*221.* எம்மத மெம்மிறை என்ப வுயிர்த்திரள்
*222.* அம்மத மென்றருள் அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) இங்கு உயிர்த்திரள் என்றது, உலக மக்க ளினத்தையே குறிப்பதாம். மக்கள் இறையுண்மையை அறியாத போதே வாழ்வில் நேரும் தீமைகளைப் போக்கவும் நன்மைகளைப் பெறவும் தமக்கு மேற்பட்ட ஒருவனின் துணையை நாடினர். அந்த ஒருவன் கூட நிலைத்து விளங்காது போனபின், அழியாத ஒன்றை, எல்லாம் வல்ல ஆற்றல் கொண்ட ஒன்றைத் துணை வனாகக் கொள்ளக் கருதினர். அப்படிப்பட்ட ஒன்றே இறை (எங்கும் நிலைத்து இருப்பது) எனக் கொண்டனர் அறிவிற் சிறந் தோர். அவ் அறிஞன் கண்ட இறைவனை எவ்வடிவிலும் இருப்ப தாக எண்ணிச் சிலபல வடிவப்பொருள்களை, அடையாளச் சின்னங்களை, விக்கிரக வடிவங்களை ஆக்கிக்கொண்டு அவற்றின் முன் வேண்டியும், தொழுதும், துதித்தும் ஓரளவு பயன் அடைந்து வந்தனர் பலர். ஒன்றான இறையுண்மை விளங்காத காரணத் தால் பல தெய்வக் கருத்தும், பன்மதக் கொள்கையும் எங்கும் பரவினவாம்.

உண்மையில் இறைபரம்பொருள் ஒன்றே. அதனைத் தொல் காப்பிய காலத்திற்கு முன்பே கந்தழியாம் பெருஞ்ஜோதியாகக்

கண்டிருந்தனர். அவ்விறை யனுபவம் பெறுவதற்குக் கொடி நிலை, வள்ளி என்னும் இருவகை வழிபாட்டைக் கொண்டனர். பிற்காலத்தில் அந்த இறைஜோதி உண்மையும், வழிபாட்டு உண்மையும் அறியப்படாதுபோய், கற்பனா கடவுட் கொள்கை பரவினதாம். இதனால் உண்மை முற்றும் ஆழ்ந்து புதைந்து போய் விட்டதாம். இத்தருணம் அருட்பெருஞ்ஜோதி ஞானம் வெளிப்பட்டுள்ளதால், அருட்பெருஞ்ஜோதியையே ஒன்றான கடவுளாக அறியப்படுகின்றது. மேலும் மதம் என்பது, அருளே என அறிந்து வழிபட்டு அடைவதற்கான வழிவகை செய்தலே என்வும் அறியலாகின்றது. அருட்பெருஞ்ஜோதியாம் கடவுளை அறிந்தபோதே, அதன் அருளே அதனை அறிந்து வழிபட்டு அடையும் நெறியாகவும் அறிகின்றோம். ஆக, இன்று நம் இறைவன், அருட்பெருஞ்ஜோதியாகவும், அவ் இறைவனின் உண்மை மதம் அருளேயாகவும் தெளிவுறக் கண்டு கொள்ளு கின்றோம்.

ஒவ்வொருவரும் எம் தெய்வம் எம் தெய்வம் என்று கூறிக் கொள்கின்ற எத்தெய்வத்திற்கும் அகமிருந்து அதுஅதுவாய் விரிந்து விளங்குகின்றது நம் அருட்பெருஞ்ஜோதியே என்பது உண்மையாம். இதுபோலவே ஒவ்வொருவரும் எம் மதம், எம் மார்க்கம் என்று போற்றிக்கொள்வதற்கு அடிப்படையாயுள்ளது சுத்த அருளே எனவும் தெரிந்து கொள்கின்றோம். ''அம் மதம் என்ற அருள் அருட்பெருஞ்ஜோதி'' என்ற இரண்டாம் அடியை ஆழ்ந்துநோக்கின் உண்மை அறிந்து கொள்ளலாம். அம்மதம் என்ற அருள், அதாவது, அருளாவது அம்மதமேயாம். மேலும் விரிக்கிற் காண்பது; அம் என்பது அ — உ — ம் என்ற ஓமின் அடிமுடி அல்லது தலைகடைப் பூட்டுண்மை கொண்டதாய் அறிவோம். ஓமின் பொருளே அருளாதலின், அதுவே இந்த அம் முக்கும் கொள்ளலாகின்றது. ஆகவே, அம் மதம் அருளே என்பது உண்மை. இதனை யுணர்ந்திடுவண்ணம் அம்மதம் என்ற அருள் என ஓதியுள்ளார் நம் பெருமாள். ஆதலின் அருளால் அருட்பெருஞ்ஜோதியைச் சூழ்வோம்.

## 112. கருநிலை ஈரியல்

223. கூறிய கருநிலை குலவிய கீழ்மேல்
224. அறிய லெனவுரை அருட்பெருஞ்ஜோதி

**(உ-வி)** அருளால் காணும் கருவின் விளக்கம் ஈண்டு கூறி அக் கருநிலையின் புற விளைவும், அக அனுபவமும் இவை இவை யெனத் திருவருளால் கண்டு அடையவும் செய்கின்றார். கருநிலை என்பது முதல் நிலையாக அடிப்படை வடிவமாக இருப்பதாம். ஓர் அணுவுக்கு அதன் நடுவிருந்து ஆள்கின்ற ''புரோடான்'' (Proton) கருநிலையாக இருப்பதும், ஒரு விதையில் முளை கருநிலை யாய் இருப்பதும், ஓர் உயிர் வடிவில் ஆன்மாவே கருநிலையாயிருப் பதும் அறிவோம். இவைபோல் அணுமுதல் அண்டகோளங்கள் வரை ஒவ்வொன்றுக்கும் கருநிலை யுண்டு. நாம் இப்பொழுது, கடவுளனுபவம் அறிந்து அடைவதற்கான வகையில் தோற்றுவிக் கப்பட்டுள்ளோம். ஆதலின், நம் கருநிலையின் உண்மையையும் அதன் அகப்புற விளக்கங்களையும் நன்கு தெளிவுறக் காண வேண்டியிருக்கின்றன.

நம் மக்கள் பிறவி மானிடம் கருப்பிண்ட நிலை நின்று வளர்ந்து வந்து வெளிப்பட்டு உலகிடை வாழ்ந்து வருகின்றதாம். இக் கருப்பிண்டத் தோற்றமும் கருப்பையில் வளர்ச்சியும், சிசு வாகி வெளிப்பட்டு வளர்ந்து வருதலும் பற்றி எத்தனையோ விபரங்களை அறிந்துகொண்டிருக்கின்றது இன்றைய உலகம். அருளியல் அனுபவத்திற்குப் புற ஞானம் மட்டும் போதாது. ஆதலின் ஒருமையோடு அகநின்று, அருளறிவாலே,. கருநிலை விளக்கங்களை ஆய்ந்து கொள்ளுவோம்.

மனித வடிவின் அடிநிலைக் கருவை ஆன்மாவாக அறிந்துள் ளோம். இவ் ஆன்மா, கடவுள் சிற்றுருவாய்ப் பூரண உண்மை கொண்டுள்ளதாம். கடவுள் ஒருவராய் ஐவண்ண ஐந்தியல் தன்மையுராய் உள்ளார். இதனால் இக்கடவுள் சிற்றுருவம் ஒன்றும் ஐந்தும் கொண்டதாயிருக்கின்றதாம். இதுவே நம் ஆன்ம வடிவம். இவ்வுண்மையால் இதனைக் கருவாகக் கற்பித் துக் கூறியுள்ளனர். தமிழ் எண் குறிப்பில் க-ஒன்று, ரு-ஐந்து, ஆகையால் 'கரு என்பது பதினைந்தாய்க் குறிப்பதும், ஒன்றும் ஐந்துமாய் இருப்பதும், ஆறாய்க் கூட்டிக் காண்பதும் ஒருவகை விளக்கமாம். மற்றொருவகையில், ஆன்ம சிற்றணுவினின்று உயிரும் உடம்பும் விளைவு கொண்டிருத்தலின், உகர உயிர் குறிக் கும் இரண்டும், அகர-எண்சாண் உடல் குறிக்கும் எட்டும் கூட்டிப் பத்தாகிய யகரமாய்க் கொள்ளக்கூடும். இதனால் ஆன் மாவை யகரவடிவாய்க் குறித்தல் பிறிதொருவகையாம். அன்றி

யும், ஆன்மா, உயிருடம்பாய்ப் புறத்தே விரிந்து விளங்குகின்ற தோடு, மெய்யறிவு ஒளியை மகரமெய்யாகக் கொண்டுள்ளதால், அ-உ-ம் கொண்ட ஓம் ஆகக் குறிப்பதும் வழக்கமாம். இந்த ஓம் என்னும் ஒரு சொல்லாய்ச் சுட்டப்படும் ஆன்மாவை ''சோல்'' (Soul) என்று மேனாட்டார் கொண்டதும் பொருத்தமே.

ஓம் என்னும் பிரணவத்தால் தொண்ணூற்றாறு தத்துவநிறை கொண்டுள்ள இந்த மனித வடிவில், (கட)வுள் ளொளியின் அனு பவம் ஏற்படற்காக மகர மெய் ஜோதியின் ஆறியல் விளக்கம் கீழ் ஆதாரங்களில் வெளியாக்கப்படுகின்றதாம். இவ்விளக்க மெல் லாம் ஒருவாறு யோகானுபவத்தில் வெளியாகி சிலபல சித்தி களை வழங்குகின்றதாம். இவ்வனுபவ சித்தியில் மயங்கிநின்றால், மேனிலை ஏறிப் பேரின்பசித்திப் பெருவாழ்வு பெற முடியாது போம். ஆதலின் திருவருளால் மேனிலை நிராதாரத்தில் பொருந்தி அருள் விளக்கம் பெற வேண்டும். அங்கு பெறப்படும் விளக்கம் இதுவாம்: கீழாதாரங்களுக்குக் காரணப்பொருள் நிலையாய் இம் மேலான நிராதாரத்தும் ஆறியல் உண்மை விளங்குகின்றதாம். அவையாவன: 1. படிகமேடை, 2. ஆயிரத் தெட்டுக் கமல இதழ், 3, ஓங்கார பீடம், 4. குண்டலி வட்டம், 5. ஜோதி ஸ்தம்பம், 6. சுத்த நடனம் ஆம். இவ் ஆறியல் அனுபவம் உபதேசமாய் வழங்கப்பட்டுள்ளது. இதன் உண்மை சிரநடுப் பகரவடிவ ஆன்மக் கடவுட்ஜோதி நிலையில் திகழ்வது தான் உபதேசமாம். அங்கு அதுவாகி வாசம் பண்ணுதலே உண்மை உபவாசம் ஆகும். இந்த மேலிடத்தில் அருள் வண்ண மாய் நிலவும் ஒருவன், பசித்தும், தனித்தும், விழித்தும் இருந்து கொண்டு கீழ் ஆதார அனுபவங்களுக்கும் மேலான அருட்பேரனு பவம் எல்லாம் பெற்றுத் திகழ்வான் என்பது நம் வள்ளல் கண்டு பெற்று வழங்கிய உண்மையாம்.

இவ்வுண்மைகளையெல்லாம் திரட்டி இங்கு இவ்விரண்டு அகவல் அடிகளில் உணர்த்தியுள்ளார் நம் அடிகளார். கருநிலை ஆன்ம உண்மையும் அதன்புறத்தும் அகத்தும் ஏற்படும் ஆறியல் உண்மையும் உளவாறு அருட்பெருஞ்ஜோதியால் கண்டு கொள்ளவும், அனுபவத்தில் ஏற்று வாழ்வு பெறவும் செய்ய வந்தது இதுவெனத் திருவருளால் உண்ர்கின்றோம்.

## 113. எண்ணிலா அண்ட நிறை ஒளி

225. எண்டர முடியா திலங்கிய பற்பல

226. அண்டமு நிறைந்தொளிர் அருட்பெருஞ்ஜோதி

(உ-வி) அருட்பெருஞ்ஜோதியின் நிறை விளக்கம் இங்கு குறிக்கப்படுகின்றதாம். உலகம் அறிந்துள்ள எந்த ஒளியும் நம் அருட்பெருஞ்ஜோதி அல்ல என்று அறியவேண்டும். சிறியதும் பெரியதும், தோற்றியும் தோற்றாமலும், உள்ள ஒளி எதற்கும் மேம்பட்டதாய் அளப்பரிய அகண்ட பெருவெளி முற்றும் இடையீடின்றி நிறைந்ததாய், எல்லாம் செய்ய வல்லதாய், சத்துசித்து. ஆனந்தவண்ணமாய், சகல பொருள்களையும், உயிர்களையும், ஆற்றல்களையும் தோற்றுவித்து ஆண்டுகொண்டுள்ளதாய், நிறையருளுக்கே அனுபவப்படுவதாய் இருக்கும் ஒன்றே அருட்பெருஞ்ஜோதியாக அறியப்படும்.

அகண்டவெளியின் விரிநிலையளவு இவ்வளவு பெரியது என்று மனத்தால் எண்ணிப்பார்க்கவே முடியாதபோது வாக்கால் சொல்லுவதும், எழுத்தால் எழுதிக்காட்டுவதும் எப்படி முடியும்? முடியாது, முடியவே முடியாது. இப்படியுள்ள பெருவெளியில் எத்தனை கோடி அண்டங்க்ள் உள்ளனவென்பதும் தெரியாது. வெகுவெகு தொலைவிலிருந்து ஒளிவிடுகின்ற நட்சத்திரஜோதி அண்டங்களின் இருப்பை இந்நிலவுலகிலிருந்து ஒருவன் மிகச் சக்திவாய்ந்த தொலைநோக்காடி (Telescope) கொண்டு காணக்கூடும். அவ் ஒளி அண்டம் இரண்டாயிரம் ஒளி வருட தூரத்தில் இருப்பதாக வைத்துக்கொள்வோம். அதாவது அந்த அண்ட கோளம் வீசும் ஒளி இங்கு வந்து புலனாவதற்கு இரண்டாயிரம் ஆண்டுகள் ஆகும். இதனால் அக் கோளம் அவ்விடத்தில் இல்லாது அழிந்துபோய் விட்டாலும், பின்னும் இரண்டாயிரம் ஆண்டுகள்வரை கூட அது அங்கிருந்து ஒளிர்வதாகவே தெரிந்துகொண்டிருக்கும். இதுபோல், அவ்வளவு தொலைவில் ஏதேனும் ஓர் ஒளி அண்டம் புதிதாக இன்று தோன்றி விளங்கினாலும் நமக்குப் புலனாக இன்னும் ஈராயிரம் ஆண்டுகள் பிடிக்கும். ஆகவே, உண்மையில் அகண்டவெளியில் ஒளிர்கின்ற அண்டகோடிகள் இத்தனை என்று உள்ளபடி கணித்துக்கூற முடியாதாம். இதனால்தான் அப்படி "எண் தரமுடியாது இலங்கிய பற்பல அண்டம்", என்று குறித்துள்ளார். இவ்வளவு

அண்டகோடிகளின் அகத்தும் புறத்தும் நிறைந்து விளங்கிக் கொண்டிருப்பது நமது அருட்பெருஞ்ஜோதியாகும். அகண்ட பெருவெளிமுற்றும் பரிபூரணநிறைவாய் என்றென்றும் நிறைந்து விளங்கிக்கொண்டிருக்கின்ற அருட்பெருஞ்ஜோதியே அவ் எண்ணரிய ஜோதி கோளங்களை எல்லாம் தோற்றுவித்தும், விளக்கம் செய்துகொண்டும், பழையனவற்றை அழித்துப் புதியனவற்றை ஆக்கி விளங்கச்செய்துகொண்டும் உள்ளதாம். இப்படியாக என்றுமுள்ள அருட்பெருஞ்ஜோதியின் பெருமையையே ஈண்டு சுட்டிக் காட்டியுள்ளார் நம் வள்ளலார்.

## 114. தாரகமும் உயிர்க்குயிரும் ஆனது

227. சாருயிர்க் கெல்லாந் தாரக மாம்பரை

228. ஆருயிர்க் குயிராம் அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) தாரகம் என்பது தாங்கும் ஆதாரம் என்றும், அது ஓம் என்னும் பிரணவம் என்றும் கூறப்படும். தாரகமாம் பரை எனக் குறித்துள்ளார். பரன் என்றால் உயர்ந்த, சிறந்த கடவுளைக் குறிக்கும். அக் கடவுளின் சக்தியே பரை ஆம். அருட்பெருஞ்ஜோதியால் கடவுளை யுணர்த்தும்போது, அருள்-பெரும்-ஜோதி என்பதில், பெரும் என்பது நடுநின்று, அருளுடன் சேர்ந்து பேரருளாகவும், ஜோதியுடன்கூடி பெருஞ்ஜோதி யாகவும் விளங்கும். பெருஞ்ஜோதி கடவுள் உண்மையுருவெனின் பேரருளே அக்கடவுளின் சக்தியாம். ஓங்காரவடிவம் கடவுளாகக் கொள்ளப்படும்போது அருளே அதன் உட்பொருளாய் உணர்த் தப்பெறுகின்றோம். இராம நாமம், தாரகமந்திரமாகச் சொல்லப் படுகின்றது. இதனால் சுட்டப்படுவது ஓங்காரத்து உட்பொரு ளாகிய அருளே என்று அறியலாகும். எப்படியெனில் ''ராமா'' என்ற சொல்லுக்கு அகர உகரம் சேர்த்தால், அரா-உமா என்றாம். இதில் அவும் உவும் நமது ஒவண்ண உயிருடம்பாய் விளங்க, இத்தேகத்திற்கு நடுவுள் திகழ் கடவுளான்ம அருட் ஜோதியே ராமா என விளங்குதல் காண்போம். ஆகவே இந்தத் தாரகமந்திர அருட்ஜோதியே மக்கள் முதலான எல்லா உயிர்களை யும் தாங்கிக்கொண்டிருப்பதாக அறிவோம். உயிர்மேல் உடல் வந்து ஒன்றுவதியல்பே என்ற இலக்கணப்படி தாரக ஆன்மா வைச் சூழ எவ்வுயிர் வடிவும் தோற்றி விளைவுகொண்டு விளங்கு

தல் உண்மையாம். இது இங்கு சாருயிர்க்கெல்லாம் தாரகமாய் உள்ளது இப்பரை அருள் ஒளி என்பது தெளிவு.

ஆருயிர்க்குயிர் என்பதற்கு விளக்கம்: தமிழில் உயிர் என்ற சொல் உயிர்ப்பாகிய மூச்சுக்காற்றினால், சுவாசம், மூச்சு. பிராணன், ஜீவன் எனவும், உடலில் காரியப்படும் உயிர் விளக்கச் சூக்குமப்பொருளாய்த் .திகழலின் ஆவி எனவும் இவ்வுடலுக்கு ஆதாரமாகிய கடவுளின் ஐந்தியல் விளக்கச் சிற்றணுப் பொருளாய், ஆவாகிய பசுவின் வண்ணமாய் இருத்தலின் ஆன்மா என்றும் கூறப்படும். இவ்வளவுமாய் விளங்குகின்ற உயிரைக்கொண்டு ஒவ்வொரு பிராணியும் வாழ்ந்து வருகின்றது இவ்வுலகில். இதனால், ஒவ்வொரு பிராணியையும் தனித்தனி ஒவ்வோர் உயிராகவே கொள்ளும் வழக்கமும் ஏற்பட்டுள்ளதாம். ஓரறிவு முதலாய் ஆறறிவு ஈறாய்க் கொண்டு விளங்கும் உயிர்களை இனம் பிரித்தறியும் வழக்கமும் கொண்டுள்ளோம். இப்படி வாழ்ந்து வருகின்ற உயிரினங்களையே பொதுவாக ஆருயிர் என் கின்றோம். ஆகையால் ஆருயிர் என்பது உலகில் உடலோடு வாழ்ந்து கொண்டிருக்கும் ஜீவர்களையே குறிப்பதாம். இந்த எண்ணற்ற உயிர்களுக்கெல்லாம் உட்பொருளாய், உள்ளுயிராய் இருந்துகொண்டு வேண்டிய வேண்டியாங்கு உதவி வாழ்விக் கின்றது, நம் அருட்பெருஞ்ஜோதியாம். இதனால் ஆருயிர்க் குயிராம் அருட்பெருஞ்ஜோதி என்கின்றார்.

''ஆருயிர்கட் கெல்லாம் நான் அன்பு செயல் வேண்டும்'' என்று விழைந்து வேண்டுகின்றார். ஆருயிர்கள் எண்ணடங் காதனவாய் உள்ளனவே, அப்படியிருக்க, இவரால் எப்படி எல்லாவற்றிற்கும் அன்பு செய்ய முடியும்? ஆம் முடியும்! எப்படி என்றால் இவர் அருட்பெருஞ்ஜோதியின் சேர்ப்பால் அதுவே ஆகி உயிர்க்குயிராய், ஆருயிர்கட்குள் எல்லாம் ஒருயி ராய் இருத்தலின் அவைகட்கெல்லாம் அன்பு செய்தல் சாத் தியமே. ஒன்றான கடவுளே இப்படித்தான் எவ்வுலகத்தெவ் வுயிர்க்கும் உயிராய் இருந்துகொண்டு இனிது நலம் செய்துவரு கின்றார் என்பது உண்மையாம்.

## 115. நீடுழி வாழ ஓர் ஆழி

229. வாழிநீ டூழி வாழியென் றோங்குபேர்
230. ஆழியை யளித்த அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** இங்கு ஒரு பேரற்புத மோதிரம் வழங்கப்பெறு கிறோம். அந்த மோதிரம் நீடூழி காலம் சுகமாக நிறைவாழ்வில் தழைக்கச்செய்ய வல்லதாம். ஓர் ஆழி அல்லது பேர் ஆழி என்பது, ஒப்பற்ற பெருஞ்சிறப்புடைய ஒரு மோதிரமாகும்.

ஒருவன் அணிகின்ற மோதிரத்திற்கும், உயிர் வாழ்வுக்கும் என்ன சம்பந்தம் என்றால், ஒருசில விளக்கம் தருவர் உலகியலார். ஜீவாதார உயிர்ச்சத்து மூளைநடுநின்று உடலெங்கும் பரவி விளக்கம் செய்கின்றது பொதுவாக. ஆனால் சிறப்புவகையில் இவ்வுயிர் விளக்கம், இதயத்தின் இரத்த ஓட்டத்துடன் சேர்ந்து உடலிற் பரவுகின்றதாம். அதன் ஆற்றல் முக்கியம் நமது உள்ளங்கையின் அனாமிகை என்னும் மோதிர விரலில் வெளிட் பட்டிலங்குவதாம். அது யோகியரின் அனுபவத்தில் விளங்குவது. இதுகாரணமாக உயிர்ச்சக்தி வளர குறை நீங்கி நீடு வாழ அவ் விரலில் மோதிரம் அணிதல் வேண்டுமென்பது தந்திரமுறையாம். மந்திர ஜெப வேள்விக் காலங்களில் பவித்திரம் என்னும் தர்ப் பைப்புல் மோதிரத்தை அணிவித்து ஆற்றலைப் பெருக்குவதாக மொழிகின்றார்கள். தீக் கோட்களின் பாதிப்பால் ஏற்படும் தோஷநிவர்த்திக்காக, குறிப்பிட்ட கிரகத்திற்குரிய இரத்தினக் கல்லைப் பதித்து மோதிரமாக்கி அணிதல் நல்லது என்கின்றனர். மொத்தத்தில் நவக்கிரகங்களின் அனுக்கிரகத்தால் நலம் பெறக் கருதி நவரத்தினங்களையும் முறைப்படி பதித்து அமைத்த மோதி ரத்தை அணிந்து கொள்ளுகின்றனர் சிலர். இவ்வகைமுறை களில் நம்பிக்கையும் பற்றுதலும் கொள்ளார் சுத்தசன்மார்க்கப் பெருநெறி பிடித்து ஒழுகுபவர்கள்.

சிவன் அருளால் நீடுவாழ்வு பெற்ற நெடியோனாம் திருமால் ஏற்ற சக்கரமும் ஆழியே, திருப்பாற்கடலும் ஆழியே. இவற் றிற்கெல்லாம் மேலாய் நம் வள்ளல் பெற்ற அருட்பெருஞ் ஜோதியே அவரை என்றும் அருளின்ப வாழ்வில் விளங்கச் செய்து விட்ட பேர் ஆழியாக, அருட்பிரகாச வடிவமாகச் சூழ்ந்து திகழ்கின்றதாம்.

**"வாழியென் தோழியென் வார்த்தைகேள் என்றும்**
**மரணமில் லாவரம் நான்பெற்றுக் கொண்டேன்**
**சூழியற் செஞ்சுடர் தோற்றுரு சீழ்பாற்**
**றூய்திசை நோக்கினேன் சீர்திகழ் சித்தி**

ஊழிதோ றூழிநின் றாடுவன் நீயும்
உன்னுதி யேலிங்கே மன்னரு ளாணை
ஆழி கரத்தணிந் தாடேடி பந்து
அருட்பெருஞ் ஜோதிகண் டாடேடி பந்து''

இதில், ஜீவான்ம உணர்வாகிய மனத் தோழிக்குத் தான் பெற்ற மரணமில்லாப் பேரின்ப சித்திநிலையை யுணர்த்தித் தன்னோடு கூடவே என்றும் இருந்து அருட்சித்தாடி மகிழக் கேட்டுக்கொள் கின்றார். அருட்பெருஞ்ஜோதிகண்டு பந்தாடல் என்பது அகத் தில் அருட்ஜோதி இறையை ஒன்றி இருந்துகொண்டு, உலகில் அருட்சித்துச்செயல் புரிந்து கொண்டிருத்தலாம். ஆழி கரத் தணிந்து ஆடேடி என்றது, அருட்ஜோதி சூழ்வடிவ அனுபவம் கைவரப்பெற்று வாழ்ந்துகொண்டிருப்பது என்பதாம். அருட் ஜோதி இன்ப வடிவத்து அனுபவத்துடன் வாழ்வதே இங்கு குறிக்கப்படுகின்றதல்லாமல், எந்தவிதமான மோதிரமோ, சக் கரமோ, ஆழாழி குறிக்கும் அடையாளப் பொருள்களையோ கையிற்கொண்டு ஆடிடும்படி சொன்னதல்லவாம்.

## 116. மாய்ந்தவர் மீட்டும் வருநெறி

*231.* மாய்ந்தவர் மீட்டும் வருநெறி தந்திதை
*232.* ஆய்ந்திடென் றுரைத்த அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** இறந்துபோனவர்கள், புறவுடலை நீத்துவிட்டவர்கள் மறுபடியும் இவ்வுலகில் வருவார்களா என்பது பெரிய கேள்வி யாம். இறந்தவர்களின் உடல் புதையுற்றுச் சிதைந்து மண்ணாகி யும், அல்லது எரிந்து சாம்பலாகியும் ஒழிந்துபோன பின்னர், எப்படி முன்போல் உருப்பெற்று வர முடியும்? முடியாதென்பதே பலரும் தரும் பதில். ஆனால், ஒருவகையில் மக்களின் கனவில் மடிந்தொழிந்தவர்களைப் பழைய உருவோடு காண முடிகின்றது. அதுபோல் மனோவசியமுறையில், இறந்தவர்களை, அவர்களின் ஆவி வடிவில் காணவும், அளவளாவவும் செய்ய முடிகின்றதாம். இதில் எல்லாம் இறந்தவர்கள் மீண்டும் வருவதில்லை என்பது உண்மை. இதற்கு மேல், திருவருள் விசேடம்பெற்ற மகான் களால் இறந்தவர்களை எழுப்புதலும், இறந்து எரிக்கப்பட்டுச் சாம்பலாய்ப் போனவர்களை மீண்டும் உருப்பெற்று வரச் செய் தலும் கூடுமென்பர். இது எங்கோ, எப்போதோ சிறப்புவகை

யான் நடைபெற்றதாக அறியப்படுவதேயன்றி, எல்லார்க்கும் ஏற்றதாகக் கொள்ளமுடியாது. இந்நாள் மருத்துவத்துறையில் கூட உயிர் நீத்தவர்களை மறுபடியும் உயிர்பெற்று, சிலகாலம் இருக்கச்செய்ய முடியும் என்ற அளவுக்கு நம்பிக்கையுண்டாக்கி யுள்ளனர். முடிவில் இறந்தவர்கள் எல்லாம் எழுப்பப்பட்டு நியாயத் தீர்ப்பு வழங்கப் பெறுவார்கள் என்பது சிலமத வாதி களின் நம்பிக்கை. இப்படி இறந்தவர்கள் எழுப்பப்படுவதாலோ, எழுந்து முன்போல் வாழ்வில் உழல்வதாலோ பெரும்பயன் ஏதும் உண்டாகாது! மக்கட் பெருக்கமும், வாழ்க்கைப் பிரச் சினையும் ஏற்படும். குழப்பமும் கேடுந்தான் மிகுவது திண்ணம்.

நமது வள்ளல் பெற்ற சுத்த சன்மார்க்கம், இறப்பை யொழிப்பதும், நீடுவாழ்விப்பதுமாம். மக்கள் உலகில் தினமும் எத் தனையோ பேர் மாண்டு ஒழிந்துகொண்டேயிருக்கின்றனர், எத் தனையோ பேர் சிசு வடிவில் பிறந்து தோன்றிக்கொண்டே இருக் கின்றனர். மனிதனின் அக ஆன்மவடிவம் நித்தியமானது. அப்படியிருந்தும் அந்த நித்திய ஆன்மாவைச் சூழ உருவாகியுள்ள தேகம் நிலைக்காமல், அழிந்து அழிந்து போய்க்கொண்டேயுள்ளது. இப்படி அழிவது ஏன் என்றால் ஒருவன் ஆன்ம இயற்கையாகிய அருள் வாழ்வு அகமிருந்து வாழாததினால்தான் ஆம். அப்படி அகமிருந்து அனக வாழ்வு நடத்துகின்றவனே மேற்கொண்டு இறவாமல் பிறவாமல் நீடு விளங்கக்கூடியவனாகின்றான்.

கடவுள் நியதி, ஆன்மாக்கள் மீண்டும் மீண்டும் பிறந்து பிறந்துதான் அருள்வாழ்வு நிலை சேர வேண்டும் என்பது. இப்பிறப்பு எடுத்தலின் இரகசியத்தை அறியாது, மேலும் மேலும் தோன்றித் தோன்றி உழன்றுகொண்டே யிருத்தலும், மேற்கொண்டு பிறவி எடுக்காமல் இருக்கத் தவஞ் செய்து உடல் நீத்துப் பிறவா நிலையிற் கிடப்பதும் திருவருளாணை அல்லவாம். ஆகையால், மாய்ந்தவர் மீண்டும் பிறத்தலே திருவுளச் சம்மதம். இதுதான் மாய்ந்தவர் மீட்டும் வருநெறியாக இருக்கிறது. இதனை அருளால் ஆய்ந்து கண்ட உண்மை; மனிதன் மீட்டும் இங்கு பிறப்பிக்கப்படுகின்றது, இறவாமை பெற்று வாழ்வுடன் என்றென்றும் விளங்கற்காகத் தானாம்.

ஆகவே நம் வள்ளல் குறித்த இறந்தவர்களை எழுப்புதல், செத்தவர்களை உயிர் பெற்று எழச்செய்தல், இறந்தார் மீட்டும்

வருநெறி என்றதல்லவாம்: அகத்தே அருள் ஒளியை எழுப்பிச் செயல்படுத்தி, மேல் அருட்ஜோதி வடிவொடு மக்களைச் சுத்த சன்மார்க்கிகளாக அழியாது வாழச் செய்யற்கேயாம். இப்படி எழும் இறவா நிலை பெற்ற சுத்த சுகானந்த வடிவினர்களால் உலகிற்குப் பெருநன்மையே உண்டாம். கீழான, தீர்க்கமுடியாத பிரச்சினைக்கு இடம் ஏற்படாது. அஞ்ச வேண்டியதே யில்லை.

## 117. எச்சம் நினக்கிலை

*233. எச்சம் நினக்கிலை யெல்லாம் பெறுகவென்*
*234. றச்சம் தவிர்த்தவென் அருட்பெருஞ்ஜோதி*

(உ-வி) மக்கள் இவ்வுலகில் அடிக்கடி பலவகையான துன்பங்களுக்கு ஆளாகி மடிந்து ஒழிந்து கொண்டுள்ளனர். துன்பங்களை யொழித்து இன்பமாக வாழவேண்டும் என்பதே ஒவ்வொருவரின் விருப்பமாம். ஆனால், துன்பங்கள் ஒழிக்கப் பட்டு நல்ல இன்பத்தோடு வாழ வழிவகையை உள்ளபடி உணர்ந்து பெற்றுக்கொள்ள முடிகின்றதில்லையே, ,ஏன்? ஏனென்றால், உண்மைநெறி ஒழுக்கம் இதுவெனத் தெரிந்து அடைந்து அதன்படி வாழாததினால்தான் ஆம். துன்பங்கள் தோன்றக் காரணமாயுள்ள விடயங்கள் யாவை யெனில்; 1. ஆகாரம், 2. தூக்கம், 3. மைதுனம், 4. பயம். இந் நான்கினும் மக்கள் முறையோடு நடந்துகொண்டு, சத் விசார வழியிற் பயின்றுவந்தால் உள்ளொளி பெருகும். மேல், அக நின்று உலகியலைத் தயா இயலாக ஏற்று வாழ்ந்தால் நலமெல் லாம் பெருகும், இன்பமே தழைக்கும்.

ஆகாராதிகளின் பழக்க வழக்கம் ஒருவனுக்கு உள்ளொளி யைப் பெருக்கி, உலவா இன்ப நிலைக்கு ஏற்றுவதாயிருக்க வேண்டும். இது விபரம் பற்றி நம் வள்ளலார் குறிப்பது: ஆகாரம்—அரை, நித்திரை—அரைக்கால், மைதுனம்—வீசம், பயம்—பூஜ்யம் ஆக இருத்தல் வேண்டும் என்றுள்ளார். இங்கு குறிக்கப்பட்டுள்ள, 1/2, 1/8, 1/16,0, எல்லாம் வெற்றுக் கணக்கு அளவு மட்டுமல்ல, அக உண்மையோடிணைந்து விளங்குவதாம். யாதெனில்: சன்மார்க்க சாதகன் உணவு விஷயத்தில் விருப்பு வெறுப்பு கொள்ளாமல் சுத்த சத்துவகுண விருத்தியும் விளக்க

மும் செய்யும் ஆகாரத்தை மன ஒருமையோடு அகமிருந்து ஏற்றுப்பழகல் வேண்டும். அகமாகிய ஆன்மக்கடவுள் நிலை நின்று உலகில் வாழ்கின்றவன், தான் என்றும் கடவுள் என்றும் இரண்டுபடாத ஒரு வடிவிலிருந்து அனுபவிக்கின்றான். சுத்த உணவைத் தன் இச்சையன்றி, கடவுட் சம்மதமாக, குறைந்த அளவே ஏற்கும்போது, இவன் பாதி ஆகாரமே ஏற்கின்றவ னாகின்றான். அப்போது கடவுளின் அருளாகிய அமுதம் பாதி இவனுக்குக் கிடைத்து, நாளடைவில் புற உண்டி சுருங்கி யொழிய, அக அமுதமே நிறையிடம் பெற்று வாழ்விப்பதாம். இதுபோல் நித்திரை விஷயத்தில், இவன் அகத்தே அரை நிலையில் இருப்பதோடு, அங்கு கடவுள் அருள் ஒளியாம் திரு வடியை மறவாது துயின்று விழித்து வாழல் வேண்டும் என்பதாம். இது அரைக்காலாம். அடுத்து, மைதுனம் வீசம் என்பது, அகப்புணர்ச்சி அனுபவமாகப் பக்குவிக்கு விளங்குவது. ஞான பூரண உள் உள்ளொளி பதினாறு கலை நிறை முழு நிலவு ஒளி போல் விளங்கல், பதினாறில் ஒன்று (1/16 வீச நிலையாம்) இதுவே மாகாணி என்பர். மா-என்பது ஆன்ம ஜோதி மணியாம். இதனால் இந் நிலையை மாவாகக்காண் நீ என்றும், மாகாண்நீ அல்லது மாகாணி என்றும் கூறப்படுவது. இதற்குமேல் பயம் பூஜ்யம் ஆவது: அகநிலை நின்று அருள் ஒளியே தன்னைச் சூழ்ந்து காத்து வருதலை உண்மையிற்கண்டுள்ள ஒருவனுக்கு எந்த பய மும், மரணபயம் கூட ஏற்படாதென்பது உண்மை. இவ்வளவும் பக்குவியின் உயர் அனுபவ சித்தியில் விளங்குவன. சாதாரண உலகியலில் உள்ளவர்கள் விஷயத்தில், உணவு அரை வயிற் றுக்கும் நீர் கால் வயிற்றுக்கும் இருக்கவேண்டும் என்பர். தூக் கம் முழு உணர்வற்ற முரட்டு நித்திரையாய் இல்லாது அரை அல்லது கால், அல்லது அரைக்கால் விநாடியில் விழிப்படைவதாக இருக்க வேண்டும் என்பதாம். மைதுனம் அல்லது உடலுறவு விஷயத்தில் தாதுவிருத்தி மிகாமலும் குறையாமலும் கட்டுப் பாட்டுடன் இருந்துவரின் பதினாறு நாட்களுக்கு ஒரு முறை திருத்தமடைந்து ஒளி பெறும். நேர்மையும் ஒழுக்கமும் நிரம்பி வாழும் ஒருவன் எதற்கும் பயப்படவேண்டியதில்லை. திருவருள் காக்கும் என்ற அக நம்பிக்கையே பயத்தைச் சூனியமாக்கி வாழ்வருளும்.

நமது அருள் வள்ளலார்க்கு அபயம் அளித்த அருட்பெருஞ் ஜோதி, பயத்தை முற்றும் போக்கி வாழ்விக்கின்றதாம். ''இப்

பிறப்பில் உனக்குக் குறைவு ஒன்று மில்லை, வேண்டுவன எல்லாம் நிறையவே பெறுவாயாக, ஆதலின் எதற்கும் பயப்படவேண் டாம்'' என்று உறுதியான அருள் வாக்கு வழங்கியுள்ளது அருட் பெருஞ் ஜோதி. எச்சம் என்பதற்குக் குறைவு என்று பொருளாம். குறைவு இல்லை என்றதால், அருள் நிறைவு உண்டென்பது குறிப்பு. எச்சம் என்பதற்கு மிச்சம் என்ற பொருளும் கொள்ளு வர். இப் பிறப்பின் அருள்நிறைவால் முன்வினை முடிவுறும்; மேலைப் பிறவிக்காம் சஞ்சிதமும் எஞ்சா அல்லது மிஞ்சா வண்ணம் அவ்வெச்சம் முற்றும் ஒழிக்கப்பெறுகின்றதாம். இதனால் இறப்பச்சம் ஒழிவதோடு, மேற் பிறப்பச்சத்திற்கே இட மில்லாது செய்து விடுகின்றதாம். ஒருவனுக்கு இறப்பு என்பதேயில்லை என்றானபோது, அதனால் ஏற்படும் அச்சத்திற் கிடமேது? இறப்பச்சம் இல்லை என்றானால் வேறு அச்சத்திற்கும் சிறிதும் இடம் இல்லையாம். இவ்வாழ்வு நிலைபெறாது உண்மையும் உணராது அச்சமில்லை அச்சமில்லை என்று வீணிற் சொல்லிக்கொண்டு மாய்ந்து ஒழிவது எவ்வளவு அறியாமை! மூடத்தால் அஞ்சாதிருந்து மடிதல் வீரமா? அருளால் அழியாது வாழ்தல் அன்றோ பெருமையாம்.

## 118. நீயே நீடுநின் றாடுக

235. நீடுக நீயே நீளுல கனைத்துநின்
236. றாடுக வென்றவென் அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** வள்ளலார் பெற்ற பெரு வாழ்வும், பெருஞ் சித்தியும் அவர் அருட் பெருஞ்ஜோதியிடமிருந்து பெற்றபெரும் பேறும் இதில் காண்கின்றோம். சத்தியஞானசபையிலே காட்சி தரும் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் நமது அடிகளார்க்கு மேற்படி வரமும் வாழ்வும் அருள்கின்ற போது, அவர் வேறு, இவர் வேறு என இரண்டாகவுள்ளது போல் தோற்றுகிறது. பின்னர், அவர் என்பதும் இவர் என்பதும் ஒன்றாகி, அருட்பிரகாசமாகி நின்று, அவரே இவராய் இருந்துகொண்டு உலகெல்லாம் விளங்க ஆடுகின்றனராம்.

திருச்சந்நிதியினின்று வாழ்த்தும்போது அருட்பெருஞ் ஜோதிபதி வேறு, அருள் பிரகாச வள்ளல் வேறாகத் தோற்று கின்றது. வாழ்த்தியபின், இரண்டற்ற ஒன்றாய் நிலவுகின்றது. நீடுக நீயே - அளவுகடந்த நெடுங்காலம் அழியாது நீயே வாழ்

வாயாக என்று கூறியும், அளவுகடந்த பேரண்ட கோடி உலகங்கள் அனைத்திலும் விளங்கி, அருட்பெரும் செயலாம் ஆடல்புரிவாயாக என்று வாழ்த்தியும் உள்ளதாம். அப்படி வரம் அளித்த அருட்பெருஞ்ஜோதி, பின்னர் எங்கும் வள்ளலாரைவிட்டுப் போய்விடாது, அவருள் அவரேயாக ஒன்றிநின்று, தம் வரம் நிறைவேற, செயலோடு விளங்குகின்றார். இந்த அருட்பெருஞ் ஜோதிபதி தனக்கு ஒப்புயர்வில்லாத, தானே தனிப்பெருந்தலைவராக இருப்பவர். அப்படி யுள்ள இவர் தன்னைப்போல வள்ளலையும் அருளாடல் புரிந்து கொண்டு என்றும் விளங்கச் செய்துவிட்டால், இருவராக விளங்க நேரும்; ஒன்றான தனித் தலைமை இயல் கெடுவதாகும். ஆகையால். அப்படி இரண்டாக, இருவராக விளங்காது, தானே அவராய், அத்துவிதமாய் உள் நின்று ஆள்கின்றவராகிவிட்டுள்ளாராம். இப்படியாக வள்ளலை வாழ்வித்துவிட்டது இங்கு வியப்பானதாய் விளங்கக் காண்கின்றோம். அதனினும் பெருவியப்பு யாதெனின், அருள் ஒளி ஆண்டவரே நம் ஒவ்வொருவரின் உட்கலந்து நின்றும், வாழ்த்துவதும், வரம்தந்து வாழ்விப்பதுமாய் உணர்கின்றோம். இதனால் அவரது அருட்பெருஞ் சித்துச் செயல் விளங்க நாமும் உடன் விளங்கலாகின்றதுதான் பெரு வியப்பாம்.

அனாதிகாலமாக உலகங்கள் அனைத்தையும் ஆண்டுவருகின்ற ஆண்டவர் பெருமையைவிட நம் அடிகளார் பெருமை ஒருவகையில் மேம்பட்டதாக இருக்கின்றதாம். ஏனெனில், பொதுவாகத் தன் உண்மையை உலகறியாது, உள்நின்று இதுகாறும் ஆண்டுவந்த ஆண்டவர், இப்பொழுதுமுதல், அடிகளார் உடலையே அருட் ஜோதி உருவாக்கிக்கொண்டு, உலகறிய விளங்குபவராகி யுள்ளார். அப்படி விளங்குகின்றவர் உண்மையில் அந்த ஆண்டவரே எனினும் அவரை இப்போது யார் காண்கின்றார்கள். அவரது புறவண்ணம் நம் அடிகளின் வடிவாக அல்லவா இருக்கின்றதை உலகம் காண்கின்றது. அறிவரிய அருவ நிலையில் இருந்துவந்த ஆண்டவர்க்கு, உலகறியும் அருட்பிரகாச வள்ளல் வடிவம் உண்டானதால் பெருமை எல்லாம் இவர்க்கே ஆகிவிட்டுள்ளதாம். அடியார் உள்ளத்திருந்து தன் பெருமையைக் காட்டிக்கொள்ளாத ஆண்டவர் பெருமை என்னே! கடவுளை விடக் கடவுள் அடியார் பெருமையும், தொண்டர் பெருமையும், அருட்குருவின் பெருமையும் சிறப்புடைத்தெனக் கொள்ளுகின்றது உலகம்.

## 119. முத்திறல் வடிவமும் முன்னியாங் கெய்தல்

**237.** முத்திறல் வடிவமும் முன்னியாங் கெய்துறும்
**238.** அத்திறல் எனக்கருள் அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** மக்கள் பெற்றுள்ள உடல், நல் வளர்ச்சியாலும், பயிற்சியாலும், யோகசாதனைகளாலும் வலிமைமிக்கதாய், பிணி யற்றதாய், நீண்டகாலம் வாழ்வதாய்ச் செய்துகொள்ளக்கூடும். ஆனால், இம்மாதிரிப் பிற முயற்சிகளால் மேலான சுத்த சுகா னந்த வாழ்வு பெற்று நீடு வாழமுடியாது. அது திருவருளால்தான் பெறமுடியும். அத்திருவருளால் கிடைக்கப்பெறும் ஆற்றல்மிக்க வடிவம் மூன்றுவிதமானதாம். அதுதான் முத்திறல் வடிவு என் கிறார். சுத்த, பிரணவ, ஞான தேகம் முத்தன்மை கொண்டதுவாம். சாதாரண மனிதனில், தூல, சூக்கும, காரண தேகங்களாக உள்ளனவே அருட்பக்குவத்தில் மேற்படி சுத்த, பிரணவ, ஞான தேகமாய் விளங்கும். இத்திரிதேகம், முத்தனி வடிவம்கொண்டு மூன்றாய் விளங்குவ தல்ல. ஒன்றுக்குள் கூடி ஒரே வடிவாய்த் திகழ்வதாகும். இவை ஒன்றுகூடியே முழுமையாய் விளங்கும் போதுதான் வாழ்வும், அருளனுபவமும் பெறமுடியும்.

இங்கு குறிக்கப்படும் முத்திறல் வடிவம் பற்றிச் சற்று விரிக் கலாம். முத்தேகம், சுத்த தேகம், பிரணவ தேகம், ஞானதேக மாம். தி நவருளின் சேர்க்கையால் புறவுடம்பு அழிபடும் தன்மை மாறிச் சுத்த பொன்போல் திகழும். இது புறத்தே உருவாய் விளங்குவது. இதனுடைய ஆற்றல், அழியாததும், அற்புதச் செயல் புரிவதுமாம். அடுத்து, உள்விளங்கும் சூக்கும உடம்பே அதிக ஆற்றல் கொண்டதாய் எங்கும் சென்று வருவதாயுள்ள தாம். இது அருவுருவமாகும். ஈற்றிலுள்ள ஞானதேகம் மெய்ப் பொருளை யுணரும் ஆற்றலும் கொண்டதாய்க் கட்புலனாகா அருவ வடிவாயும் உள்ளதாம். இது அகமிருந்து யாவையும் அறிவது. இம் முத்தேக சித்தியைப் பெறுவதே முத்தியாம். இம் முத்தேக சித்தியுடன் வாழ்வதே மூவா முத்தியின்ப வாழ்வாகும். ஈதல்லாது, புறவுடலை மண்ணிற் கிடத்திவிட்டுச் சென்ற ஆன்மா வுக்கு வாழ்வில்லை. அது முத்தி அடைந்ததாகக் கூறிக்கொள்ளு வது உண்மையல்ல. அருள் ஆற்றல் கொண்ட திரிதேக சித்தி பெற்று அழியாது விளங்கும் சுத்த சன்மார்க்கி மேற்கொண்டு தன் அற்புதச் சித்தித் திறனால், உலகில் மக்களைப் பக்குவப் படுத்தி இன்பநிலைக்கு ஏற்றுவான்.

வள்ளல் பெற்ற அருளின் ஆற்றல் சொல்லுந் தரமன்று. எண்ணிய எண்ணியாங் கெய்துவர், எண்ணியர் திண்ணியர் ஆகப்பெறின் என்பதில், திண்ணியர், அருட்பேராற்றல், படைத் தவரேயன்றி, தேக மனோகரண, அறிவுத்திண்மை கொண்டவர் அல்லராம். எண்ணியது எண்ணியபடி நினைத்தது நினைத்த வண் ணம் செய்துமுடிக்கும் அருள் ஆற்றலைத்தான் இங்கு வேண்டுகின் றார். வேண்டியது வேண்டியாங்கு, உடனுக்குடன் அவ்வாற்றலை யும் வழங்கப்பெறுகின்றார். அத்திறல் எனக்கு அருள் அருட் பெருஞ்ஜோதி என்கின்றதில், அருளும்படி வேண்டுகையும், அவ் வேண்டுகை நிறைவேற்றப்பட்டதை, தான் அதனை அருளப்பெறு கின்றதையும் குறிப்பதாய் உணர்கின்றோம்.

## 120. மூவகைச் சித்தியின் முடிவு

*239.* மூவகைச் சித்தியின் முடிபுகண் முழுவதும்
*240.* ஆவகை எனக்கருள் அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** சித்திகள் மூன்று வகை என ஈண்டு மொழியப்படு கின்றன. அருந்திறலால் செய்து முடிக்கும் செயல் சித்து எனப் படும். சித்தின் அனுபவமே சித்தி எனலாகும். இவண் அருளின் திறலால் அடையப்பெறும் சித்திகளையே குறிக்கின்றார். அரு ளியல் உண்மையை அறிந்துகொள்ளார் முயன்று அடையும் சித்திகள் அற்பமானதாய் முடிவில் அழிவுறச்செய்வதாய் இருக் கும். அச் சித்தியை இச்சித்து அடையார் சுத்த நெறியினர்.

இனி சித்திகள் மூன்றுவகை யாவை எனப் பார்ப்போம்: 1. கர்ம சித்தி, 2. யோக சித்தி, 3. ஞான சித்தியாம். கர்ம சித்தியாவது, காயகற்ப முறையால் தந்திர உபாயச்செயல் களால் அடையப்பெறும் ஆற்றலும் சித்தியும் கடைமுறையானது, பொதுமக்களால் பெரிதும் ஏற்கப்படக்கூடியதாம். யோக சித்தி, சாதாரண மக்கள் எல்லோராலும் பயின்று பெறமுடியாத பல சிக்கலும், இரகசியமும் உடையதாம். இதற்குமேல் ஞான சித்தி, கலையறிவு, ஆன்மவிசாரம், உண்மையிடத்துப் பற்றுதலும், பொய்யினிடத்தில் பற்றற்றிருத்தலும், அகமுக பாவனையில் அழுந்திநின்று விடுதலும் பிரம்மானுபவம் பெறச் செய்வதாம். இம்மூவகைச் சித்திகளில் நாட்டம் கொண்டு முயல்வதை விட்டு, அருள் நாட்டத்தோடு உளமுருகி வேண்டித் திருவருளை அடை வதால் முத்திறல் வடிவாம், தூல, சூக்கும, காரண தேகத்தில்

அருளாற்றல் வெளிப்பட்டு, கர்மமாதி மூவகைச் சித்திகளையும் முழுமையாகப் பெறுதலும் கூடும். அகங்கார சித்தர்களின் சித்தி வகையால் வரவர ஆற்றல் குன்றி அழிவு உண்டாம். அருட் சித்தர்களுக்குத் திருவருள் துணையால் ஆற்றல் குன்றாது வளர்ந்து பெருகி வாழ்வருளும்.

ஆவகையாவது; ஆகும்வகை, உண்டாகும்படி எனலாம். ஆகையால், அருள்நெறியே ஆகுநெறி என்றும், கர்ம, யோக, ஞான, மார்க்கமெல்லாம் போகுநெறி என்றும் கொள்ளப்படும். நம் அடிகளார் திருவருட்பூரணத்தால், மூவகைச் சித்திகளின் முடிபுகள் முழுவதும் வழங்கப்பெற்று பெருவாழ்வு உண்டாகும் படி கருணைபாலிக்கப்படுகின்றார். அடுத்து வரும் அடிகளில் சித்தி விளக்கம் அதிகம் பெறுவோம்.

## 121. கரும சித்திகளை ஆள

241. கருமசித் திகளின் கலைபல கோடியும்
242. அரசுற வென்னக்கருள் அருட்பெருஞ்ஜோதி

(உ-வி) உலகில் அதிகம் பரவியுள்ள கலைகள் அனைத்தும் கரும சித்தியின் விளைவேயாம். இக் கலைஞான விஞ்ஞான அறி வியற் சித்திகள் கோடி பல கோடியாக விரிந்து படர்ந்து கொண் டுள்ளனவாகும். இவைகளையே மக்கள் தம் மருள் மயக்க விழை வால் திளைத்துக்கொண்டுள்ளனர். இக் கரும சித்தர்கள் மெய் யன்பாகிய தயவை அடிப்படையாகக் கொள்ளாது, பொய்ப் போக இச்சை வழியில் முனைந்து சென்று அடையப்பெறுகின்ற விந்தைச் சாதனங்களால் எல்லாம் பல வகையிலும் கேடே அடைந்து அழிவுறுகின்றார்கள் தயாநெறியில் முன்னேறினால், அறிவியற் சாதனங்களால் உலகைப் புத்தியல் இன்ப வாழ்வில் தழைக்கச்செய்வது சாத்தியமாம்.

நம் வள்ளற்பெருமான் வேண்டும் சித்தி, அருளால் வருவது. பல பிறவிகளில் பல காலம் விடாது பயின்றறிய முடியாத பல கோடி கலா ஞானத்தையும், திருவருள் துணையால் ஒரு கணத்தில் முழுமையாகத் தெரிந்து கொள்வதோடு, அவ்வளவையும் நன்கு ஆளவும் கூடியவராகி விடுகின்றார். இதனைத்தான் இங்கு அருட்பெருஞ்ஜோதியிடத்து வேண்டுகின்றார். கரும சித்தி

களின் கலை பல கோடியும் அரசுற எனக்கு அருள், அருட்பெரும் ஜோதி என்கின்றார்.

## 122. யோகசித்திகள் அருள்வது

243. யோகசித் திகள்வகை யுறுபல கோடியும்

244. ஆகவென் றெனக்கருள் அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) முன், கரும தேகப் புற உடலின் பெரு முயற்சியால் பெறப்பட்ட சித்திகளினும் சிறந்தது இந்த யோக சித்தி வகை. இது சூக்குமமாகிய பிரணவதேக நிலையினின்று வெளிப்படுவ தாம். இந்த யோகசித்தி விளக்கமும் அறிவும் இன்றைய மக் களுக்குப் புரிந்துகொள்ளக் கூடாதனவா யுள்ளன. தத்துவ விளக்கக் கலைகளும், வேதாகமக் கலைகளும், யோக சாதனாமுறை களும் அறிந்து ஏற்கக் கூடாதனவாய் உள்ளனவாம். ஆதலின் அந்த யோகானுபவ சித்திகளை எல்லாம் நம்பவும், அறியவும், அடையவும் முடிகின்றதில்லையாம்.

கர்மசித்தியில் உலகம் மயங்கிக் கிடக்கின்றது. அதனைப் பெற்றுச் சிறு இன்பத்தில் திளைக்கவும் முடிகின்றது. இதுபோல் யோகசித்தியில் பெரும் பற்று உண்டாகவில்லை. இப்பொழுது ஓரளவு கல்விப் பாடத் திட்டத்தில் யோகமுறை புகுத்தப்பட்டு வருகின்றது. கலையறிவு வளர்வதோடு குறிப்பிட்ட யோகசாதனா முறையால், உடல், உயிர், மனஉணர்வு திடமுற்று நலம்பெற உதவக்கூடும் என்று கருதுகின்றனர். ஆனால், அடிப்படையில் தயாவொழுக்கமும் சத்விசாரமும், பரோபகாரச் செயலும் ஏற் படவில்லையானால் இந்த யோகப் பயிற்சிகளால் பெருநல வாழ்வு சித்திக்காது.

திருவருளாலே யோகசித்தி வகைகளையும், அவற்றின் பயன் களையும் தெரிந்துகொள்ள விழைந்தபோது, அவ்வருளே யாவை யும் அவர்க்கு வழங்கி வாழ்வித்ததாம். இவ்வருளாலே யுண்டான யோகானுபவச் சித்திச் செயல்களை உள்ளபடி உணர்ந்து கொள்ளாத, ஓரளவு யோகசாதனா பயிற்சியுடைய அன்பர்கள், நம் வள்ளலாரின், பிரமதண்டிகா யோக சித்திநிலை குறித்தும், நவகண்ட யோகநிலை குறித்தும், வாத சித்தி குறித்தும், அஷ்டமா சித்திச்செயல்கள் குறித்தும் பெரிதும் போற்றி, அவ்வழியிற்

சென்று சித்தி பெற விரும்புகின்றார்கள். வள்ளல் உள்ளம் யோக சித்தியை உலகுக்கு ஆணைசெய்ய வில்லை. அருட்பெருங் கடவுள் இவர்க்கு யோகசித்திகளை எல்லாம் ஏவல்புரியச் செய் தார். அருளுக்கு எல்லாம் செயல்கூடும் என்ற உண்மையை வெளிப்படுத்தவே ஓர் ஒரு யோக சித்திச் செயல்கள் இவர் மூலம்-அங்கங்கு வெளியாக்கப்பட்டனவாம்.

யோகசித்திகள் பலவும் நம் அடிகளார்க்கு அனுபவப்படும் படி அருள் செய்து விட்டிருந்ததுதான் ''யோகசித்தி வகைகள் உறுபல கோடியும் ஆக என்று எனக்கு அருள் அருட்பெருஞ் ஜோதி, என ஓதப்பெற்றுள்ளதாம். ஆதலின், அருள்நிலை பெறு வோர்க்கு எல்லா யோகசித்தி வகைகளும் தாமே வந்துசேர்ந்து வாழ்வில் விளங்கும் என்பதை மெய்யாக உணர்ந்து அருள்வழி யில் முன்னேற வேண்டும்.

## 123. ஞானசித்தி யருளல்

245. ஞானசித் தியின்வகை நல்விரி வனைத்தும்
246. ஆனியின் றெனக்கருள் அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** முன்னிரு சித்திகளினும் மிக்கதாய் விளங்குவது இந்த ஞானசித்தி. சரியாதி நான்கு நிலை கடந்து மேற்போந்த ஞானாசிரி யர்கள் அகத்தில் உண்மை கண்டு, அதிற் பற்று கொண்டு விளங்கி நிற்பர். இச்சையும் வெறுப்புமில்லாது பொதுநோக்கோடு சூழ்நர்க்குப் பக்குவநிலைக்கொப்ப ஞானோபதேசம் செய்து உள் ளொளியின் சித்திச் செயல் வெளிப்பட விளங்குவர். கரும சித்தன் புறத்துணைப் பொருள்களால் இறந்தவனை எழுப்புதல் கூடும். யோகியோ உள்வளர் ஆன்மசக்தி கொண்டு இறந்து சிதைந்து போய் எலும்பாயும், சாம்பலாயும் கிடக்கும் ஒருவனை யும் உயிருடம்போடு எழுப்பிடச் செய்தல் கூடும். இந்த ஞான சித்தியால், இறந்து மறைந்து பலகால மானவர்களையும் வரு வித்து உயிர்த்து எழச்செய்தல் கூடுமாம். இந்த ஞானசித்தி நிலை பெற்றோர் சித்திவகைகள் 688 கோடி யுண்டென நவில்வர் என்பது வள்ளல் வாசகம்.

மேற்படி ஞானசித்தியின் வகையும், தொகையும் விரிவும் எவ்வளவு உண்டோ அவ்வளவையும் சிறிதும் குறைவும் கேடு

மின்றி, வழங்குவது நம் அருட்பெருஞ் ஜோதியாம். இந்த ஞான சித்திகளை எல்லாம் உலகம் இன்று அறிகின்றதில்லை. கற்பனையாகவும், கதைகளாகவும், பெரியோர்கள் கூறியிருப் பதைக்கொண்டு ஒரு அளவுக்குத் தெரியவரும். ஆனால் அவற்றை அடையப் பெருமுயற்சி செய்துகொண்டு காலத்தை வீணாக்கிவிடக்கூடாது. எல்லாம் செயல்கூடும் அருட்பெருஞ் ஜோதியைக் கண்டு அடைந்து வாழ முனைவதுதான் நம் கடமை யாகக் கொள்வது திருவருட்சம்மதம். அருட்பெருஞ்ஜோதியைச் சார்ந்து கொள்ளுவோமானால் நமக்கு எக் குறைவும் நேராது, வேண்டியதெல்லாம் திருவுளப்படி நமக்கு வழங்கி வாழ்விப்பார். எச்சித்தியும் அவரது உள்ளப்படி உலகுக்கு உதவ நம்மூலம் வருவதாயின் வரட்டும். அதன் பெருமை அவர்க்கேயாம். அவரது அருட்பெருஞ்சித்தியால் உலகெல்லாம் சுத்த நெறிக்கு வருவிக்கப்படட்டும். அருட்பெருஞ்செயலுக்கு நம்மைக் கருவி யாக்கிக்கொண்டு அவருடனிருந்து வாழ்வோமாக.

## 124. முத்தி அடைவது சித்தியின் பொருட்டே

247. புடையுறு சித்தியின் பொருட்டே முத்தியை
248. அடைவதென் றருளிய அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** உலக வாழ்வில் பலவகைச் சித்திகளை முயன்று அடைந்து இன்புறும் மனிதன், முடிவில் உடலை நீத்து, இறந்து மறைந்துபோய் விடுகின்றான். அந்த இறப்பை உடற்கூட்டி னின்று விடுதலைப்பட்டுவிட்டதைக்கூட ஒரு பெருஞ்சித்தி யாகவே போற்றிக் கொள்கின்றனர் உலகியலார். இப்படித் தெய்விகத் தன்மையோடு, அற்புதச் சித்தியுடன் வாழ்ந்து விட்டுச் செல்கின்றவன், வீடுபேறு அடைகின்றவனாகவும், முத்தி அடைந்தவனாகவும் பந்தநீக்கம் பெற்றவனாகவும் கருதப்படுவது உலக வழக்கு. இதனால், சித்திகளின் முடிந்த முடிவே தேக பந்தம் நீக்கப்பெறுதலாகவும், விடுதலையாம் வீடுபேறாகவும் கொண்டனர். அதாவது, புறத்தான தூலதேகம் பிரிந்து ஒழிவுற, உள்ளிருந்த சூக்கும உடல் கழன்று விட, அதற்குள்ளிருந்து, பந்த முற்றுக் கிடந்த ஆன்மாவாகிய காரணதேகம் அக்கட்டொழிந்து விடுதலை பெற்று விளங்குவதாய்க் கொள்ளப்படுவதாம். இம் மூன்றாம் தேக வாழ்வு பெறுவதே முத்தி என்று கொண்டனர்.

அந்தமுத்தி சித்தி பெற்றுவிட்டால் மேற்கொண்டு பந்தப் பிறவிச் சூழல் வருவதில்லையாம். அது சரி. ஆனால், அப்படி முத்தி பெற்ற ஆன்மாவுக்கு சூழ் தேகம், உயிர் உணர்வு, புலன் விளக்கம் ஒன்றும் இல்லாது போவதால் எந்த ஓர் அனுபவத்திற்கும் இடமில்லையாம். அதனால் வாழ்வும் இல்லை என்பது தெளிவு. ஆதலின் இத்தேக நீக்கத்தை முத்தி என்று கொண்டாடுவது பெருமையன்றே. இதனை விதேகமுத்தி என விளம்பும் மக்கள், இந்நிலை எய்துமுன், தேக பந்தபாசப் பற்றற்று, ஆன்மாவைப் பற்றி நின்று வாழ்ந்து வருகின்றவனை ஜீவன்முத்தன் என்று கூறுகின்றார்கள். இந்த ஜீவன்முத்தன் உடலைவிட்டபின் விதேக (தேகம் இல்லாத) முத்தனாகி விடுகின்றானாம். இவ்விதக் கூற்றும் கொள்கையும் பயனற்றனவேயாம்.

ஆகவே, ஒருவன் முத்தி முடிவில் உலகைவிட்டு மறைந்து ஒழிந்துபோவதால் என்ன பெருமை? என்ன நன்மை? ஒன்றுமில்லையாம். அந்நிலையைக் கடவுள் வாழ்வாகவும் கொள்ள முடியாதே! கடவுள் உலகமெல்லாம் விளங்கச் செயல்படுத்திக் கொண்டுள்ளாரே, உள்ளிருந்து ஆளும் அவர், கடமாகிய தன் புறநிலையை விட்டுவிடாது விளங்கச் செய்துகொண்டல்லவா வாழ்கின்றார். இதனால், கடவுணிலை பெறும் ஒருவன் அகமிருந்து புறத் தேகத்தையும் உடன்கொண்டு வாழ்வதே முறையாம். உடற்பற்றற்று அகநிலை நின்று அனகமாக வாழ்வதுதான் உண்மை விடுதலைக்கு அடையாளம். அதுவே, வீடு, முத்தியாகும். இம்மாதிரியான முத்தி பெற்று உலகில் கடவுள் அருள் விளக்கச் செயலாம் சித்திகள் புரிந்துகொண்டு வாழ்தலே இங்கு முத்தியின் குறிக்கோளாகக் குறிக்கப்பட்டுள்ளதாம்.

"புடையுறு சித்தியின் பொருட்டே முத்தியை,
அடைவதென் றருளிய அருட்பெருஞ் ஜோதி"

என்றதால், முத்தி அடைவது எதற்காக என்றால், புடையுறு சித்தியின் பொருட்டுதானாம். புடையுறு சித்தி என்பது, புறத்தே வெளியில் விளங்கும் கடவுள் ஆற்றல் விளக்கத் திருச்செயலாம். இதனையே நம் பெருமான் பேரின்ப சித்தியோடு கூடிய பெரு வாழ்வாக வழங்கப்பெற்றுள்ளார். இவர் பெற்றுள்ள திரிதேக சித்தி வடிவே மூவா முத்தியுருவாகும். இத் திரிதேக சித்தியுடன் இருந்து கொண்டுதான் இப்பொழுது உலக மக்களை எல்லாம்

அவரவர் பரிபாகத்திற்குத் தக, உள்ளும் புறமும் சூழ்ந்து பக்குவம் வருவித்துக்கொண்டுள்ளார்.

"சுத்த வடிவும் சுகவடிவாம் ஓங்கார
நித்த வடிவும் நிறைந்தோங்கும்-சித்தெனுமோர்
ஞானவடிவு மிங்கே, நான்பெற்றேன் எங்கெங்கும்
தானவிளை யாட்டியற்றத் தான்"

என்ற இதனால், அவர் சுத்த பிரணவ ஞானமாம், முத்தேக சித்தி பெற்றிருந்து கொண்டு, உலகெங்கணும், தான விளையாட்டு என்னும் முத்தியின்ப வாழ்வு விளைசித்திச் செயல் புரிந்து வருகின்றார் என்பது குறிப்பு.

## 125. முத்தி என்பது சாதனை நிலை

249. முத்தியென் பதுநிலை முன்னுறு சாதனம்
250. அத்தக வென்றவென் அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) முத்தி என்பது இன்னது என இங்கு தெளிவாக்கப் படுகின்றது. சுத்த சன்மார்க்கத்தில் முத்திநிலை முடிவில் பெறுவதல்ல. முதலில் சுத்த சத் விசாரத்தால் கண்டு கொள்ளப் படுவதாம். கண்டு, தான் அந்நிலையிற்றானே இருப்பதாகவும் அறிந்து கொள்ளப்படுகின்றதுமாம். தான் அதுவாம் அனுபவம் பெற்றுக்கொண்டு விளங்கற்கே பயிலப்படுவது சாதனையாம். ஏதும் சாதனையின்றிச் சாத்தியமாகிய அனுபவம் பெறுவது முடியாதாம். மேலும் மனிதன், எத்தனையோ பிறவியில், எவ்வளவோ காலமாகத் தன்னை உடல் வடிவினனாகவே கருதி அவ்வுணர்வோடு உலகில் வாழ்ந்து வந்திருப்பவன் இப்பொழுது தன்னை அக்கடவுளான்ம வடிவிலிருந்து வாழ்கின்றவனாக அறிந்து கொண்டு உலகிடை விளங்கச் செய்வதற்கு எவ்வளவு தீவிர முயற்சியும், பயிற்சியும் வேண்டியிருக்கின்றன! இதற்கே, உள்ளொளிநிலை நிற்றற்குச் சாதனை இடையறாது செய்து பழக வேண்டும். சாதனையின் முடிவில் உறும் நிலையே விசாரமுடிவாம். வி-ஆகிய அருள் ஒளியைச் சார்ந்து ஒன்றியதே விசாரம் என்பதின் மெய்ப்பொருளாக இன்று அறிகிறோம்.

மேற்படி விசாரநிலையில் அழுந்திப்போய்விடக்கூடாது. முன்னோர் அங்ஙனம் உள்ளாழ்ந்து மூழ்கிப்போய்விட்டதால்

அந்நிலையில் ஒடுங்கி யொழியத்தான் முடிந்தது. அது, மூவா (அழியாத) நிலையாக இருந்தும், வாழா, அனுபவம் விளங்காக் குறைபட்ட நிலையாக உள்ளதாம். ஆகையால், அப்படி ஒடுங்கிப் போகாது, அதுவாகிச் சார்ந்து கலந்து விளங்குவதுவே சாத்தி யானுபவ முத்திநிலையாக வுள்ளதாம். ஆகவே, பழையதான முன்னெறி முடிவுக்கும், புதுமையான சுத்த சன்மார்க்கமாகிய இந்நெறி முடிவுக்கும் பெரிய நிலை வேறுபாடுள்ளதாம். முன் னெறிப்படி, தூல, சூக்கும, காரண, அல்லது கன்ம, மாயா, ஆணவமாம் திரிநிலை கடந்து மறையுறுவது வாழ்வற்ற நிலையாம். முத்தி முடிவு இன்று குறைவுடைத்தாய் அறியலாகின்றது. இன்றைய சுத்த நெறிப்படி, இருநிலை கடந்து மூன்றாம் நிலை யில் நாமும் கடவுளும், கடவுளான்ம வடிவாயிருப்பதை யோர்ந்து நிற்கின்றோம். அம்மேனிலையிலுள்ள கடவுளான்ம சொரூபம், ஆண்பாதி பெண்பாதியான உமையொருபாகன் போன்றுள்ளதாய்க் கொண்டு, ஆன்மாவின் ஆணவம், கட்வுளின் அருள் ஒளியால், நீக்கமும் ஆக்கமும் அடைவதாயுள்ளதாம். இந்த விசாரநிலையில், கன்மம், மாயை, ஆணவம் 1/2 ஆக இரண் டரையளவில் விளங்குகின்ற சன்மார்க்கி முத்திநிலை நிற்கின்ற வனாயுள்ளான். இவனுக்கு ஆணவமாகிய, தான் அவ் ஆன்மா என்ற உணர்வு அறிவு இருக்கிறவரை, அது உண்மை அறியா அறிவாயிருப்பதாம். அவ் ஆன்ம அணு, அருட்பெருஞ்ஜோதிக் கடவுட் சிற்றுருவே என்று அருளால் அறிகின்றபோது, அது தான் என்ற தற்போத உணர்வு நீங்கி, அது அருட்பதி என்ற அருள்ஞான அறிவு விளங்குகின்றதாம். ஆகவே விசார முடிவில் நிற்கும் பக்குவி அருள்ஒளி வடிவினனாய்த் திகழ்கின் றான். அப்போது, அவனது சூக்கும, தூல தேகநிலை அருட் ஜோதி சுத்த வடிவாய்த் திகழ்வதாய் அறியப்படுவதாம். எனவே இச் சுத்த சாதகன் தன்னை அருட்ஜோதி முத்தி நிலையில் திகழ்கின்றவனாய் உணர்கின்றான். இது குறித்தே இங்கு முத்தி என்பது முன்னுறு சாதனை நிலை என்று தெளிவு படுத்தப்பட்டுள்ளதாம். சாதனை நிறைவேறி சாத்தியநிலையில் வாழ உள்ளவனே இந்த முத்தன். இவன் வெற்றுச் சம்பிர தாயத்தையொட்டிக் கூறப்படும் ஜீவன்முத்தன் அல்லன். அருள்ஞான அனுபவத்துடன் விளங்கும் ஞானசித்தனே யாவான்.

பழைய ஜீவன்முத்தன் பொய்ப் பாவனையால் தன்னை அகக் கடவுட் சொரூபியாகக் கருதிக்கொண்டும், புறப்புலன் வாழ்வில் ஒட்டியும் ஒட்டாதவன்போல் வாழ்ந்து கொண்டும் இருந்து ஆயுள் முடிவில் உடலை விட்டு, விதேக முத்தன் என்ற பெயர்பெற்று விடுகின்றான். அப்படியல்ல நம் ஞான சித்த சுத்த சன்மார்க்க உண்மை முத்தன். இவன் அகநிலை யில் அருள் ஒளி உணர்வினனாய் இருந்து, அருள் அனுபவம் ஓங்க, உலகில் அன்புச் செயலோடு வாழ்ந்து வருகின்றான். காலத்தே அக ஜோதி பெருகி அனக நிறைவு பெற்றுப் புறவுட லையும் அருட்ஜோதி வடிவாக ஆக்கிக்கொண்டு அழியாது விளங்கவல்லவனாகி விடுகின்றான். இந்த அழியா அருட்ஜோதி வடிவையே உண்மையில் விதேகமாகக் கொள்ளலாம். யாதெனில், வி-என்ற எழுத்து, வ்-என்னும் அருள் வடிவ மெய்யுருவாயும், இ-என்றது அருட்பிரணவ உயிர்ச்சக்தி எழுத் தாயும் கூடிய ஒன்றாய் இருத்தலின் (வ்+இ)=வி-என்பது அருள் விளக்கச் செயலோடு கூடிய அழியா அருள் உருவாய்க் கொள்ளலாகின்றதாம்.

இம் முத்திநிலை பெற்று வாழும் சுத்த சன்மார்க்கி, அருட் பெருஞ்சித்தியுடன் திகழுதல் சாத்தியமாகின்றதாம். இதனையே மேல்வரு ஈரடிகளில் குறிக்கப்படுகின்றதாம்.

## 126. சித்தி என்பது நிலை சேர்ந்த அனுபவம்

251. சித்தியென் பதுநிலை சேர்ந்த வநுபவம்
252. அத்திற லென்றவென் அருட்பெருஞ்ஜோதி

(உ-வி) முன்பு ஓரிடத்தில் சித்தி என்பதற்கு, அருந்திற லால் செய்துமுடிக்கும் செயலெனக் குறிக்கப்பட்டது. இந்தச் சித்திச் செயல், கர்ம, யோக, ஞான, சாதனைகளால் பெற்ற போது ஏற்பட்ட அனுபவம் மனிதனைப் புறநிலையிலிருந்து வாழத்தான் வகை செய்திருந்ததாம். ஆகவே அவ்வனுபவம் உலகில் வெளிப்பட விளங்கியும், பலரால் மதித்தும் கொண் டாடப் பெற்றிருந்ததில் வியப்பில்லை. ஆனால், அச் சித்தி அனுபவத்தால் மனிதன் திருவருளைப் பூரணமாகப் பெற்று அருளியற்செயலொடு என்றும் திகழ வைப்பதாய் இல்லாதது பெருங்குறையாம்.

இங்கு பேசப்படுகின்ற சித்தியனுபவம் அகமாகிய அருட் ஜோதி நிலையினின்று வெளிப்படுவதாய் இருப்பதால் மிகச் சிறப்புடையதாய் உள்ளதென அறியப்படும். அவ்வனுபவத்தின் ஆற்றல் அருட்பெருஞ்ஜோதியின் சார்புடையதாய் இருக்கின்ற தாம். ஆதலின், அதன் ஆற்றலை அளவிட்டுக் கூறுதல் அசாத் தியம். முத்திநிலையால், அருள்உண்மை இதுவென அறிந்து கொள்ளப்பட்டது. அறிந்து அந்நிலையிற் பொருந்தி நிற்கவும் முடிகின்றது. அப்படி நின்றதோடு முடிகின்றதில்லை மனிதனின் குறிக்கோளும் கடவுளின் ஆணையும். ''கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக'' என்றபடி அந்நிலையில் நின்று விடாது மேற்கொண்டு, அக அருள் ஆற்றல் வெளிப்பட செயல்புரிந்து கொண்டிருத்தல் வேண்டும் என்பது திருவுள்ளமாம். ஆகவே முத்திநிலை பெற்றவன், அருட்சித்தியுடன், அருட்சித்தி யனு பவத்துடன் இங்கு வாழ்ந்துவரல் வேண்டும் என்பதாம்.

முன்பு சத் விசாரத்தால் ஏறிநின்ற இரண்டரையாம் நிலை யில், தன், தூல, சூக்கும தேகங்களையும் காரண ஆன்ம வடிவை யும் திருவருளின் சேர்ப்பால் சுத்த பிரணவ ஞான தேகநிலையாகக் கண்டிருக்கின்றான் சன்மார்க்கி. ஆன்மக் கடவுள் நிலையில், முன் இரண்டரை விசார சாதனையில் விளங்கி நிற்பதாம்: பின் இரண்டரை, பரோபகார தயா சித்திச் செயல் அனுபவத்தில் வாழ்வதாம். அருட்பெருஞ்சித்தியொடு வாழ்கின்றதே இந்தச் சுத்த முத்தனின் நித்திய இயல்பாகும். இந்த அருட்சித்தியின் திறல் இதுவெனக் காண்கின்றோம்.

பிறவிடங்களில், முன்னிரண்டரை நாழிகை, பின் இரண்டரை நாழிகை எனவும், இரண்டரைக் கடிகை எனவும், முன்பாட்டுக் காலை, பின் பாட்டுக்காலை எனவும் குறிப்பிட்டதெல்லாம் விசார சாதனாநிலையும், மேல்சாத்தியனுபவ வாழ்வு நிலையும் குறிப்பன வாகவே உணர்த்தப்படுகின்றோம். ஆகவே பேரின்பசித்திப் பெருவாழ்வு கொண்டு உலகில் வாழ்கின்ற அருட்பிரகாசர் இன்று முத்தி வடிவில், முத்தேக சித்தியுருவில், இச் சித் தியையே திருவிளையாட்டுச் செயலாகப் புரிந்து கொண்டுள்ளார் என அறியலாகும்.

முத்தியின் மற்றொரு அரிய விளக்கம் இதுவாம்: ஒருத்தி, இருத்தி, முத்தி என விளங்கும் ஆன்மாவின் முடியா முடிவாகிய

ஆனந்தவாழ்க்கை நிலையைத் திருவருளால் கண்டு அடைய உள்ளோம். தனித் தலைமைப்பதியை, ஒருவனாம் பரமான்மா வாய்க் கொள்ளும்போது, அப்பதிக்குரிய சதியாகிய ஜீவான் மாவை ஒருத்தியாகக் கொள்கின்றோம். இந்த ஆன்மா மனித வடிவேற்று தன்னை அறிந்து, அவ் ஆன்ம அருஞ்சக்தியால் அற்புதச் செயல் பல புரிந்து நிற்கும் நிலை இரண்டாவதாக இருக்கின்றது. அடுத்து திருவருள் நிறைவால் ஆன்மாவானது அருள்ஒளியால் சூழுடலையே சுத்த வடிவமாக ஆக்கிக்கொண்டு பேரின்பசித்திச் செயலோடு விளங்கலாகின்றதாம். இதுதான் ஓர் ஆன்மாவின் நித்திய இன்பமாம், ஆனந்த வடிவமாகும். காரண வடிவாய் உள்ள ஆன்ம நிலையே ஒருத்திநிலையாம். சூக்கும சக்திச்செயலாம் சித்து நிலையே இருத்திநிலை. (இதனால் இருத்தி என்ற சொல் சித்தி என்ற பொருளில் விளங்குவதாம்.) மேல், ஆன்மாவின் கடவுள் அருளியல் உண்மை விரிந்து பரு வுடலையும் சுத்த வடிவாக்கிக்கொண்டு விளங்கும்போது, அது அவ் வான்மாவுக்கு முத்திநிலையாக இருக்கின்றதாம். ஆகவே, முத்தி என்பது ஓர் ஆன்மாவின் பேரின்பானுபவ சித்திச் செயலோடு விளங்கும் நித்தியானந்த வாழ்வுநிலையே என்பதுதான் உண்மை.

முன்னோர் அறிவால் அறிந்துகொண்டது, முத்திநிலையே மூடிவென்பது. ஆனால் இப்போது அருளால் அனுபவத்திற் கொள்ளப்படுகின்ற முத்திநிலை நின்று அருள் ஆற்றலால் ஆனந்த சித்தியோடு வாழ்கின்றதே மனிதப் பிறப்பின் முடிந்த குறிக் கோளாய் இருக்கின்றதாம். இந்த அழியா இன்பம் அருளி வாழ் விக்கின்ற அருட்பெருஞ்ஜோதியின் பேராற்றல் பெருந்திறல்தான் என்னே! என்னே!!

### 127. சிற்சித்தியே ஏகம் அனேகம்

253. ஏகசிற் சித்தியே இயலுற வனேகம்
254. ஆகிய தென்றவென் அருட்பெருஞ்ஜோதி

(உ-வி) சித்தி என்பது, அக மெய்ப்பதியின் நிலையிற் பொருந்தி, அவ்விடத்தேற்ற அருள் ஆற்றலால், புறத்தே வெளிப் படும் அற்புதச் செயலாகக் கண்டோம். கடவுள் உண்மை ஆற்றலை வெளியிடும், அருள் அனுபவச் செயலே அரிய சித்தியாக அறியப்

படுவதாம். அந்த ஒன்றான கடவுட் பேரின்ப சித்தியைத்தான் ஒவ்வொருவரும் அடையவேண்டும் என்பது கடவுட் சித்தமாக இருக்கின்றதாம்.

இங்கு, ஏக சிற்சித்தி என மொழியப்படுவது, ஒன்றான, ஒப்புயர்வற்ற, மெய்ஞ்ஞானக் கடவுட்சித்தியே ஆகும். ஏகசிற் சித்தி என்பதை விரித்துப் பார்க்கில் விளங்கும் விளக்கம் இதுவாம்: ஏகம்-சித்து-சித்தி- என மூன்றாக விரிவுபடுத்திப் பொருளாக்கும்போது, ஏகம்-ஒன்றான கடவுள் எனவும், சித்து மெய்யறிவாகிய அனுபவஞானம் எனவும், சித்தி-அனுபவ அடைவு எனவும் காணலாகின்றதால் பரம்பொருளாம் கடவுள் சித்தி அனுபவமே இதுவென அறிவோம். இந்த ஒன்றான கடவுட் பேரின்ப சித்தியே அனுபவப்பட அல்லது இயல் உற வேண்டும் என்பது ஆண்டவர் திருவுள்ளமாம். இப்படி ஒன்றான பேரின்பானுபவம் உண்டாகவேண்டும் என்ற உளம் கொண்ட இறைவன் செயல், எப்படி இந்த அகண்டவெளிப் பெரும்பிரபஞ் சத்தில் காரியப்பட்டுள்ளது என்பதை ஒருமையோடு ஆய்ந்து நோக்குவோம். அந்த ஏகபரஞ்சோதிக் கடவுளே தன் உண்மையை. வெளியாக்கத் தானே தன் அருட்சக்தித்திறனால், இந்த பெரும் பிரபஞ்சத்தில் எல்லாப் பொருள்களும் எல்லா உயிர் களும், எல்லாத் தோற்றங்களும், மற்றெல்லாமும் ஆக வெளிப் பட்டு விளங்குகின்றார் என்பதைத் திருவருளால் இன்று உணர் கின்றோம். இதனால், ஏகமாக இருக்கும் அவரே, அனேகமாக அல்லது பலவாகத் தோன்றி விளங்குகின்றார் எனவும் அறி கின்றோம். ஏகமாகிய கடவுள் நிலை, உள்நிலையாகவே, அக மறைந்துள்ள ஒன்றாகவே இருக்க, புறநிலை, அநேகமாக அனந்த வண்ண பேதத்தோற்றமாகக் காணக்கூடியதாயிருக்கின்றதாம். ஒன்றான கடவுளே இப்படி பலவாகத் தோன்றிக்கொண்டுள்ளார் என்பதைத்தான் இன்று அருட்பெருஞ்ஜோதியால் உணர்த்தப் படுகின்றோம். முன்னோர் கண்டதும் உண்டு இந்த ஏகன், அனேகன் என்ற இரண்டாகிய கடவுள் விளக்க நிலையை. ஆனால் இப்படி விளங்கிக்கொண்டிருப்பது ஏன் என்பதுபற்றிய உண்மை இன்றே உள்ளவாறு அறியப்படுகின்றதாம். யாதெனில், அந்த மேலான இறையனுபவ சித்தியை இயலுறச் செய்யத் தான் இப்படி ஒன்று பலவாம் நிலை ஏற்பட்டுள்ளதாம்.

ஒன்றாகிய கடவுள் ஞானானுபவம் உலகில் ஏற்பட்டு விளங் கச் செய்தற்பொருட்டு, அக்கடவுள்தானே அகமிருந்துகொண்டு,

தன் பேரருட் பெருஞ் சக்தியை ஐஞ்சக்தி வண்ணத்தோற்ற மாக வெளிப்படுத்தியுள்ளார். அவ்வைஞ்சக்தியின் விளைவால், எல்லாப் பொருள்களும், எல்லா இயக்க ஆற்றல்களும், எல்லா அறிவு விளக்கங்களும், எல்லா யோகானுபவங்களும் மேல் அருள் உண்மை விளக்கமும் தோன்றியுள்ளனவாம். ஈற்றி லுள்ள அருள் விளக்கத்தால்தான் அந்த ஒன்றான அருட்ஜோதிக் கடவுள், தானே இம்மனிதனின் உண்மையாய் இருப்பதை யுணர்த்தியும், இவனால் உணர்ந்துகொள்ளச் செய்தும் உள் ளார். இப்படித் 'தான்' அதுவான உண்மை கண்டுகொண்டு அகமிருந்து அருளாலே அனக வாழ்வு மேற்கொள்ளுகின்ற மனிதன்தான் கடவுட் பேரின்ப சித்தி ஏற்று அருட்பெருஞ் சித்திச்செயலோடு வாழும் பேரனுபவம் அடைகின்றான். இது தான், ஏகன் அனேகன் ஆகியதன் காரணகாரிய விளக்கமாகும்.

## 128. அன்பருக்காம் இவ்வின்ப சித்தி

*255.* இன்பசித் தியினியல் ஏக மனேகம்

*256.* அன்பருக் கென்றவென் அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** கடவுள் இன்பசித்தி ஒன்றே ஒன்றுதான், உண்மை யான, அழிவில்லாத, இயற்கை இறை இன்பமாக இருக்கின்ற தாம். இதுவே நித்தியானந்தம், சச்சிதானந்தம் ஆகும். இந்த இன்பம், மெய்யன்பருக்கே அனுபவப்படுவதாயிருக்கின்றதாம். அன்பில்லாத வன்பருக்கு அல்லது கடினசித்தி வன்நெஞ்சருக்கு, உண்மை இன்பம் விளங்காது; மெய்யின்பம் இன்னதென்றே புரியாது. ஐம்பொறிவாயில் துய்க்கின்ற விடயசுகமாம் புலன் மயக்க உணர்ச்சியையே இன்பமாகக் கருதி விரும்பிக்கொள்ளு கின்றனர். இந்தப் புற இன்பம், பலப்பலவாகத் தோற்றி, மக்கள் மனத்தை மயக்கிக் கவர்ந்து, தம்வசம் கெட்டு அழிவுறச் செய்து விடுகின்றதாம். உலகம், கடவுளின் புறவண்ணம் என்பதை மெய்யாகவே யுணர்ந்தால் எங்கும் எதிலும் இறை இன்பக் காட்சியே விளங்கும். ''பொறியுறு ஆன்ம தற்போத மும் போயிட பின்னர்தான், அறிவுரு அனைத்தும் ஆனந்தமா யிடும்'' என்பது அருளனுபவம்.

கடவுள் அகமிருந்து அருளால் விரிந்து பலவாகத் தோற்ற வின். எங்கும் அவர் காட்சியைக் காணலாகும். அக்கடவுள்

சச்சிதானந்தமாய் இருத்தலின், அந்த ஆனந்தத்தின் சிறு சிறு கூறுகளே புறத்தில் இறை அழகிடைத் தோன்றி மிளிர்கின்ற தாம். புறந்தோன்றும் இன்ப எழில் எல்லாம் பொங்கி எழுந்து மங்கியழிவதாய் இருப்பதை உள்ளபடி அறிந்து கொண்டால், அதனிடத்து அதிகப்பற்றுதல் உண்டாகாது. அந்த பொங் கெழிலுக்குக் காரணமாய் கடவுள் ஒளியே மன்னெழிலாய் உளங்கொண்டு, தயாவாழ்வு வாழ்ந்து வந்தால், அவ்வக இன்பம் பெருகி நிறைவுற்றிலங்கும். புலன்களும், புறக்காட்சிகளும் இல்லை யானால் அகப்புற நிறை உண்மை காணமுடியாது. அகத்தில் இன்பானுபவமே பெற முடியாது.

இயல் இன்பம் அக நிறைவில் அனுபவப்படுவது: அயல் இன்பம் பொறி புலனில் தோற்றிக் கெடுவது. புற இன்பம் பெற எவ்வளவோ முயற்சி மேற்கொண்டு அடைந்தும், அது நிலைக்காது அழிந்து போகின்றது. அப்போது இன்பம் துன்ப மாகத்தோற்றி வெறுப்பை யுண்டாக்கி விடுகின்றதாம். அப்படிப் பலகால் அனுபவித்தபின், உண்மை இன்பம் பற்றியும், அதனைப் பெறும் வழிபற்றியும் அடைய விரும்பி முயலும்போது, உலக வாழ்வில் வேண்டுதல் வேண்டாமை அற்று, ஆருயிர்க்கு அன்பு செய்வதால் ஏற்படும் அக நிறைவில் மெய்யின்பம் தோற்றிச் சிறிது சிறிதாக விளைவு கொள்ளுகின்றதாம். அன்பினால், பிறர்க்கு அன்பு செய்து உயிர் விளக்கம் உண்டு பண்ணுவதால் ஏற்படுகின்ற இன்ப உணர்ச்சியே மெய்யானதாக இருக்கின் றதாம். அந்த அன்பன் சத்விசாரத்தால் உள்ளொளியைக் கண்ட டைந்து, அந்நிலை நின்று இன்பானுபவத்தைப் பெருக்கிக் கொண்டுவர அருட்பூரணத்தால் பேரின்ப சித்திப் பெருவாழ்வும் அடைய முடிகின்றதாம்.

ஒன்றான கடவுள் நிறை இன்ப ஜோதியாய் எங்கணும் நிரம்பி யுள்ளீடாய் இருந்துகொண்டு, யாவையும் பலவாகிய இயற்கை இன்பத் தோற்றங்களாய், உலகம் எங்கும் வெளிப்படுத்திக்கொண்டே யிருக்கின்றார். மெய்யன்பு உடை யார்க்குக் கடவுளின் அகப்புற இன்ப நிலையே விளங்குவதாய் இருக்கின்றன. இவ்வன்பர்களுக்குத்தான் மெய்யின்பானுபவம் சித்திக்கின்றது. அது ஏகமாக உள்விளைவு கொள்ளுவது. மெய்யன்பில்லா அபக்குவர்கள் புறவுலகிற் புலனின்ப வேட்கை யால் பலவாகிய இன்பத்தையே நாடி அடைந்தும் முடிவில்

துன்புற்று அழிகின்றனர். அப்படிப் புற அனுபவம் திருவருளால் தான் ஏற்படுகின்றதாம். ஏனெனில், ஒருவனைப் பரிபாகப் பக்குவநிலை அடையச் செய்ய, பலவாகிய பொய் இன்பத்தில் பற்று நீங்கி, ஒன்றாகிய மெய்யின்பத்தில் திட நம்பிக்கையும் பற்றும் ஏற்படவே அந்த இன்பநிலையும் வழங்கப்பட்டுக் கொண்டிருக்கிறதாம்.

எனவே உண்மையான இன்ப சித்தியின் இயல் ஏகமாயும் அனேகமாயும் இருப்பதை அன்பு நிரம்பியவர்கள் கண்டு கொள்ளவே வெளிப்படுத்துகின்றதாய் அறியப்படுகின்றதாம். இவ்வுண்மையே அருட்பெருஞ்ஜோதிபதி அருட்பிரகாசர்க்கு அருளியுள்ளதாய் இங்கு அறிவிக்கப்படுகின்றோம்.

## 129. எட்டு இரண்டு—முதற்படி

**257. எட்டிரண் டென்பன இயலுமுற் படியென**

**258. அட்டநின் றருளிய அருட்பெருஞ்ஜோதி**

**(உ-வி)** எட்டும் இரண்டும் எண்ணிக்கையாக அல்லது எண்ணாக இருப்பது எவரும் அறிந்ததே. ஆனால், மெய்ஞ்ஞான அனுபவத்தில் இவற்றின் உண்மையும் விளக்கமும் பற்றி ஒரு சிலரே அறிவர்: அதுவும் ஒருவர் எந்த அளவுக்கு அருள் உணர்வு பெற்றுள்ளாரோ அந்த அளவுக்கு உண்மை விளங்குவதாயிருக் கிறதாம். இங்கு, எட்டும் இரண்டும் இயலு முற்படியாயுள்ள தெனக் குறிக்கப்படுகின்றது. இயலு முற்படி என்றால், (அருளியல்) அக அனுபவத்திற்கு ஆதாரமாய், முதல் நிலையாய் உள்ளதென்பதாம். இவ்வுண்மையை நம் வள்ளலார்க்கு அருட் பெருஞ்ஜோதியே அருளியதாம். அதுவும் அட்டநின்று அருளியது எனப்படுகின்றது. அட்டம் என்பது மேலான, மனோவாக்குக்கு எட்டாத சுத்த அருட்ஜோதி நிலையினின்று திருவருளால் உணர்த்தப்பட்டது என்பதாம். அருளால் உணர்த்தப்பட்ட, எட்டும் இரண்டும் என்பதன் உண்மையை நாமும் அறிய வேண்டியுள்ளது. அதற்குத் திருவருள் துணையை வேண்டுவோம். அதுவே உணர்த்துகின்ற உண்மை இதுவாம்: எட்டு—அகரமாய், ஆகாச நிலையாய், பரமாகாச சொரூபியாகிய கடவுள் வடிவாய் எங்கும் நிறைந்ததாய் உள்ளதாம். இரண்டு உகரமாய், வான்வெளி நிரம்பிய காற்றின் கூறாய் கடவுளின்

சத்தியாகிய அருள் ஆற்றலாய் இருந்து யாவுமாய் விளங்கு கின்றதாம். எட்டு புறப்பொருள் எல்லாமாய் உருவாகித் தோன்ற; இரண்டு, அகநின்ற ஆற்றலாய் இருந்து செயல் படுத்துகின்றதாம். இது அணுமுதல், அண்ட வடிவுகளிலும், சிறிய உயிரி. (அணுஜீவன்) முதல் பரமஞானியின் அக உணர்வு வரையிலும், அகர உகர உண்மை கொண்டே விளங்குகின்றன வாம். உண்மையுணர் நிறைமனிதனில், அகரம் எண் சாண் உடலாயிருக்க, உகரம் ஈருயிர்ச் செயலாய் விளங்குகின்ற தாம். அக அனுபவத்தில், ''எட்டும் இரண்டும் இலிங்கமதாமே'' என்பதுகொண்டு, இந்த எட்டும் இரண்டும் சேர்ந்த பத்து ஆகி நம் கடவுள் ஆன்மவடிவாய்த்திகழ்வதாம். கடவுள், எட்டாகிய அகரவடிவமாய் இருக்க, மனிதனின் ஆன்மத்தன்மையாம் உணர்வு இரண்டாகிய உயிர் உணர்வாய், அவ்வகரத்தோடு கூடிப் பிரிவற வுள்ளதாம். இதனால் இரண்டே கடவுளின் அருட்சக்தியாகிய, நம் உணர்வாய் இருந்து, அக்கடவுளையே உணர்கின்றதாம். இந்த ஆன்மா கடவுளோடு இரண்டற இருந்தாலும், தான் அருள்ஞான உணர்வு பெறாதவரை, பொறி யுடம்புணர்வுகொண்டு இருக்கும் வரை, தன்னை கடவுளுக்கு அன்னியமாகவே கண்டு உழன்று கொண்டிருப்பதாம். தேகப் பற்றற்று உள்ளொளி மயமாகி நிற்கும்போதுதான் உண்மை அனுபவம் பெறுகின்றான் மனிதன். இந்த அபக்குவிகளைக் குறித்தே, 'எட்டோடு இரண்டு சேர்த்து எண்ணவும் அறியீர், எத்துணை கொள்கின்றீர் பித்துலகீரே,' என்று கேட்கின்றார் நமது ஞானசித்தர் அருட்பிரகாசர்.

மேற்படி எட்டும் இரண்டும் தான், உலகமெல்லாம், உயி ரெல்லாம் தோற்றுவிக்கப்படவும், விளக்கம் செய்யப்படவும், முடிவில் அருளனுபவ அற்புதச் சித்திகொண்டு வாழவும், அடிப் படையான காரண காரியமாய் இருக்கின்றனவாம். இந்த ஆதாரத்தின் பேரில் பிரபஞ்ச காரியப்பாடு நடந்துகொண்டுள் ளது, அகரமாகிய அணு, உகர அகச் சிற்றசைவினால் (மின் காந்த விசையால்) விளங்கி நின்று, எவ்வளவோ காலத்திற்குப் பின் அவ்வகச் சக்தி உயிர்சக்தியாகி வெளியுறும் தருணம், சூழ்நிலையை ஒரு புல்லாதி உயிரின வடிவாய் ஆக்கிக்கொண்டு விளங்குவதாம். அவ்வுயிர் வடிவில் அகச்சக்தியே புலன் உணர் வாய் இருந்து பெருகி, மனிதப் பிறப்பில் ஐம்புலன் உணர்வுக்கு மேல் ஆறாவதான மனோ அறிவாய்த் திகழ்கின்றதாம். மேலும்,

பக்குவ மனிதனில் மனமும், சகல கேவலமற்ற சுத்தநிலையில் அருள்ஞானமாக விளங்குகின்றதாம். இந்த அருள் ஞானத் தாலேதான் அகமெய்ப்பொருளாம் கடவுள் உண்மையை அறிந்து அனுபவத்திற் கொள்ள முடிவதாம். இந்த அருள் அனுபவம் தான் அருட்பெருஞ்ஜோதியாய் பெறப்படுவது; மற்று கீழான அனுபவம் பெறுவிக்கச் செய்யும் விளக்கமும், பொருளும் கொள் ளற்பாலன அல்லவாம்.

## 130. இப்படியே அப்படியும்

*259.* இப்படி கண்டனை இனியுறு படியெலாம்
*260.* அப்படி யேயெனும் அருட்பெருஞ்ஜோதி

**(உ-வி)** உலகம் பலவாயது. பல வேறு பொருள்களால், பலவேறு ஆற்றல்களால் பலவேறு உயிரினங்களால், பலவேறு தோற்றங்களால், பலவேறு செயல்களால், பலவேறு இயல்களால் பலவேறு அனுபவங்களால் விளங்குகின்றது, இந்தப் பேருலகு. இவ்வளவுமாய் விளங்கும் இவ்வுலகில் மனிதன் தோன்றி யாவையும் சூழ்ந்து நோக்கி, ஆழ்ந்து அறிந்து அக உண்மையை அருட்பெருஞ் ஜோதியின் வெளியீடாக உணர்கின்றான். தனது ஒருவடிவின் உண்மையை இப்படி இருக்கின்றது, எனத் தெளி வாக அறிந்து கொள்ளுகின்றவன் பிறருடைய உண்மையும் இது போன்றதே என்பதையும் தெரிந்து கொள்ளுகின்றான். தன் போன்ற மக்களின் உண்மை எல்லாம் ஒரு தன்மையதே என்பது மட்டுமல்லாது, மற்ற பலவாகிய உயிரினங்களின் உண்மையும், உயிரற்ற பொருள்களின் உண்மையும், அண்ட பிண்ட அணுக் களின் உண்மையும்கூட ஒன்றாகவேயுள்ளது என்பது அறியத் தக்கதாம்.

படி என்பது முதலில் இந்நிலவுலகத்தைக் குறிப்பதாம். இந்த மண்ணுலகத்தின் மாண்புமிகப் பெருமையுடைத்தாம். இதில் போன்று பிற நிலவுலகங்களில் மக்களினம் தோற்றி வளர்ந்து அன்பும், அறிவும் நிரம்பிடப் பெற்றுச் செயல்புரியவும், அச்செயலால் அருள் உண்மையுணர்ந்து, அனுபவ வாழ்விற் கொண்டு இறைமயமாகி விளங்கவும், நிறை அருளால் மரண மில்லாப் பேரின்போடு அருட்சித்திச் செயலோடு என்றும் வாழ்ந்து கொண்டிருக்கவும் கூடியதாயுள்ளதாம். இதனால்தான்

இவ்வுலகின் சிறப்பும், இதில் மனிதனின் மாண்பும் போற்றிக் கொள்ளப்படுகின்றனவாம். இவ்வுலகில் இருந்துகொண்டு தான், மண்ணையும், விண்ணையும் ஆய்ந்து ஆய்ந்து பிண்டத்தை யும் அண்டத்தையும் ஓர்ந்து ஓர்ந்து, ஒவ்வொன்றிலும் நடுநிலைப் பொருள் ஒன்று இருக்கவும் காண்கின்றான் மனிதன். அந் நடுநிலைப் பொருளையே பரம்பொருளாம் கடவுளாகவும், அரு ளாகவும் உணர்கின்ற மனிதன், அந்நடுவணைச்சூழும் ஆற்றல் செயலைப் பிரணவச் சுழலாக உணர்கின்றான். இக்காரணத் தால்தான், பிரபஞ்சவெளி முழுவதும், அண்டபிண்ட பொருட்கள் எவற்றிலும், சிற்றணுவிடத்தும் மிக மிக நுண்ணிய நிலையிலும், மிகப்பெரிய நிலையிலும் பிரணவத்தின் இயக்க விளக்கத்தையே காண முடிகின்றதாம்.

இப்படியான கடவுளின் அகப்புற உண்மையைத் திருவரு ளாலே ஒருவன் கண்டுகொண்டுவிட்டால் போதும்; இவ் வுண்மை விளக்கமே இவ்வுலகெங்கும் அல்லாது அகண்ட பிர பஞ்சத்து எவ்வுலகத்தில் எங்கும் இதுபோன்றதாகவே யுள்ள தாய் உணர்த்தப்படுகின்றது. நம் பகுதிப். பிரபஞ்சத்தில் இந்த ஒரு பூமியில் இருந்து இவ்வனுபவம் பெறுகின்றோம் நாம். இதுபோல எத்தனையோ கோடிப் பகுதிப் பிரபஞ்சங்களில் ஓர் ஒரு நிலவுலகிலும் நம் போன்ற அருள்ஞான மக்களினம் இருந்து கடவுள் உண்மையை அனுபவத்தில் கொள்ளுகின்றதும் திருவரு ளால் அறிகின்றோம். நம் பதி ஒருவரே ஆக உள்ளவர்; நம்மில் பூரணமாகவே வெளிப்பட்டு ஆட்கொண்டு, நம்மைத் தன்மய மாய் விளங்கச்செய்து கொண்டு திகழ்கின்றவர், எங்கெங்கும் தானாய் இருந்துகொண்டு விளங்குகின்றார் என்பது முற்றும் உண்மையாம். இதனால் இவ்வுலகில் இங்கு பெற்றுக்கொண் டுள்ள உண்மை அனுபவம் மற்ற எவ்வுலகில் எங்கும் இது போன்றே விளங்குவதை அறிவாயாக என்று உணர்த்துகின்றது நம் அகமுடைய அருட்பெருஞ்ஜோதி. இவ்வுலக இந்த அருள் அனுபவத்தால்தான் இங்கிருந்துகொண்டே, மற்றெவ்வுலகத்து யாவையும் கண்டு கொள்ளவும், அனுபவம் செய்யவும் கூடியதா யிருக்கின்றதாம்.

## 131. பாரிது அடிமுடி

**261.** படிமுடி கடந்தனை பாரிது பாரென
**262.** அடிமுடி காட்டிய அருட்பெருஞ்ஜோதி

(உ-வி) புராண கற்பனையில், பரஞ்ஜோதியின் அடிமுடி காணமுடியாது வருந்தி நின்ற அரி அயன் கதையை அறிந்தோரும், அறியாதாரும், திருவருளாலே கற்பனாதீத உண்மையைக் கண்டு கொள்ளும் சுத்த சன்மார்க்க காலம் இதுவாகும். இங்கு அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர், நம் அருட் பிரகாச வள்ளற்பெருமானுக்கு, அந்த அடிமுடியைக் காட்டிக் கொடுத்துள்ளாராம். தனக்கு அவ்வடிமுடியைக் காட்டிக் கொடுத்த அருட்பெருஞ் ஜோதியைப் போற்றுகின்றார் ஈண்டு.

வள்ளலாருக்கு மட்டும், ஏன் எங்கு எப்படி அந்த அடி முடியைக் காட்டிக்கொடுத்தார் ஆண்டவர்? முன்பு மட்டும் இந்த ஆண்டவர் ஏன் அந்த அடிமுடியைக் காண எவ்வளவு பாடுபட்டும் வருந்திநின்ற . அரிபிரமாதியர்க்குக் காட்டிக்கொடுக்க வில்லையாம்! விளக்கம் இவைதான்: அரிபிரமாதி தேவர்கள், அதிகார மலமாம் ஆணவத்தோடு கூடியமறங்குலவும் ஆன்மாணுக்களேயாவர். அவர் கள் பன்னெடுங்காலம் பெரிதும் முயன்று செய்த தவத்தால் அந்த தேவப்பதவியைப் பெற்றிருந்தார்கள். அவர்கள் தம் மூல மல காரணத்தால் தம்மை அகண்ட பரம்பொருளினின்று வேறான வர்களாகவும், தாம் தம் முயற்சியால்தான் அத்தெய்வப்பதவி அடைந்துள்ளதாகக் கருதியுள்ளனர். ஆகையால்தான் எல்லா மான, எல்லாம் வல்ல ஒன்றான கடவுளே தன் பேரருளால் விளங்குவதை யுணரமுடியாது நின்றனராம். அந்தப் பேரரு ளாளனைப்பற்றி உணர்வதுதான் திருவடிநிலை காண்பது; அதற்குமேல் அவ்வாண்டவர் அனுபவம் கொண்டு வாழ்வது தான் முடிநிலை காண்பதாம். அருளுண்மை அறிந்தடையாத் தேவர்கட்கு, அடிமுடி தோன்றவில்லை என்பது உண்மைதானே!

நம் அருட்பெருஞ்ஜோதி வள்ளலாரோ திருவருளாலே தம்மை அருட்பெருஞ்ஜோதி பதியோடு இரண்டற இருப்பதை உணர்ந்தும் அருள்நிறை அனுபவத்திற் பெற்றும் விளங்கினார் என்பதால், அடியையும் முடியையும் காணும் பாக்கியம் பெற்றார் என்பதில் தவறில்லையன்றோ! இவர் படிமுடி கடந்து நின்றார். படி என்றால் இம்மண்ணுலகம். இங்கு இம்மண் கூறான தேகமே படி எனக் குறிக்கப்பெறுகின்றதாம். இதனால் படிமுடி என்பது,

தேகத்தின் உணர்வு, உடல் 'தான்' என்ற உணர்வு கடந்து, அருள் உணர்வோடு ஆன்ம நிலை நின்று தன்னை அக்கடவுள் ஆன்மரூபியாகவே உணர்ந்து கொண்டுள்ளார். அவ்வான் மாவோ உண்மையில் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் சிற்றுருவே யன்றி வேறல்ல என்பதும் உணர்ந்து, அதனால் அக்கடவுள் ஒருவரைத் தவிரத் தான் என்பது, அக்கடவுளுக்கு அயலாய் வேறாய் இல்லை என்பதையும் சத்தியமாக உணர்ந்து அது வாகவே நிற்கின்றார். இப்படி இருந்து காணும்போதுதான் அந்த அருள் உண்மைக்கடவுள் விளக்கம், உணரவும், அனு பவத்தில் ஏற்கவும் முடிகின்றதாம். படிமுடி கடந்தனை, ஆகை யால் பார் இது பார் என்று காட்டுகின்றார் ஆண்டவர். பார் என்னும் சொல், முதலில் பார்ப்பாய் அல்லது காண்பாயாக எனக் கூறுவதாம். மேலே, இது பார் எனச் சுட்டப்படும் இடத்து, 'பார்' என்பது கடவுளான்ம உண்மையையே குறிப்ப தாம். எப்படி எனில், பா-கடவுளரின் உண்மை கொண்டதாய் அதுவும் ர்-என்னும் துவாதசாந்த பன்னிரண்டாவது ஒளி நிலை அனுபவத்தைக்கொண்டு விளங்குவதாய் உணர்த்தப் படுவதாம். ஆகவே இந்தப் பார், கடவுள் உண்மை கொண்ட அகவுலகாம் சத்தியஞான பூமியாம். இந்த அருள் ஞான பதியில்தான் அடியும் முடியும் கண்டடையக் கூடியதா யுள்ளதாம். அகண்டமாய் நிறைந்திலங்கும் அருட்பெருஞ் ஜோதிப்பதியேதான், இந்த ஆன்ம சிற்றுருவில், தன் உண்மை எல்லாம் வெளிப்படுத்தியும், அனுபவத்திற்கொண்டு விளங்கச் செய்யவும் உள்ளாராம். எனவே கடவுள் அடிமுடியுங்கொண்டு அருள் அனுபவத்தில் விளங்கும் நிலையே இந்த ஆன்ம உண்மை யாய் உள்ளதாம். இந்த ஆன்ம உண்மை விளங்கற்கு, இந்தப் பக்குவ மனிதப் பிறப்பு வடிவம் கூடித் திகழ வேண்டியுள்ளது.

தன் உண்மையை அருளாலே காணாத மனிதன், உடலையே தானெனக் கொண்டு பிழைத்துத் தவறிப்போகிறான். இவன் ஓரளவு பக்குவம் ஏற்பட்டுத் தன்னைப் புறவடிவினன் அல்ல, அக ஆன்ம சொரூபியே என உணர்ந்து அகத்தைப் பற்றிக் கொண்டு, உலகவாழ்வைத் துறந்து உள்ளொடுங்கி வீண் போகின்றான். அகத்திலங்கும் ஆன்மாவின்கண் பொதிந்துள்ள கடவுட் பேராற்றலிற் சிறிது தவமுயற்சியாற்பெற்று வாழ்ந்தும், நிறையருள் அனுபவம் அடையாததால், குறைபட்டு அழிவுற்றுப் போய்விடுகின்றான். பூரண அருள் வெளிப்பட்ட ஆன்மாவில், விசாரஞானத்தால் கடவுளர் திருவடியுண்மை கண்டு கொள்ளப்

படுகின்றது. அந்நிலைநின்று நிறையருள் வாழ்வால் திருமுடி அனுபவமாம், திரிதேக சித்திகொண்டு என்றும் நிலவவும் உள்ள தாம். அருளொளிச் சிற்றணுவாகிய ஆன்மாவாய் உள்ள, கடவுள்ர்தன்மையாக, அவரது திருவடிக் (கால் + முளை) கான் முளையாக உணர்ந்து நிறையனுபவ வாழ்வும் பெறக்கூடியவர் களாயும் இருக்கின்றோம்.

## 132. ஜோதியுட் ஜோதியே அந்தமும் ஆதியும்

263. ஜோதியுட் ஜோதியின் சொரூபமே யந்தம்
264. ஆதியென் றருளிய அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** ஜோதியுட் ஜோதி எனக் குறிக்கப்படுவது, கடவுள் உண்மையை, புறம் அகம் என இரண்டாகக் கொண்டு விளக்கற் கேயாம். புறஜோதி அகண்டமானது, அகண்டவெளி முற்றும் நீக்கமற நிறைந்து என்றென்றும் ஒருபடித்தாய்த் திகழ்ந்து கொண்டேயிருப்பது. அப்படியுள்ள பெருஞ் ஜோதியின் அகம் பூரண அருள்மயமானது. இந்த அருள், ஜோதியின் இயற்கைத் தன்மையாம் இயல்பே. இரண்டும் பிரித்துக் காணற்கில்லாததே யாம். கற்கண்டும் அதன் இன்சுவையும் போல் பிரிக்கக் கூடாத தாய் உள்ளது இந்த அருட்ஜோதி. ஜோதியைத்தான் புறத் தில் கண்ணாற்காண முடியும். ஆனால், அருள்தன்மை, அருள் அனுபவ ஞானமாகிய அக உணர்வால்தான் அறியப்படுவதாம். இதனால்தான் ஜோதி நிலையைப் புறம் என்றும், அருள் நிலையை அகம் என்றும் கொள்கின்றோம். மேலும், எந்தப் பொருளும், கட்புலனாகா மிக நுண்ணிய அணுவும் கூட புற ஜோதியின் கூறே; ஆனால் இச்ஜோதிப்பொருளின் எதன் அகத்திலும் அருள் தோற்றுவதாயில்லை. அவ்வருள், மனிதனின் அருள் அறிவுக்குத்தான் அறியப்படுகின்றதாம். இதனால், அவ்வருள் அறிவு என்பதும்கூட, அறிவு ஜோதியின் கூறாகவும், அருள் அதன் தன்மையாகவும் விளங்குதல் அனுபவம். ஆகவே, புறத் துள்ளது பெருஞ்ஜோதி என்றால், அக அருள் அறிவும், ஒரு ஜோதியே ஆம். அக அனுபவத்தில் விளங்கும் கடவுள் உண்மை ஜோதியுட் ஜோதியாய்க் காணும் ஒருவனே, அக் கடவுள் எங்கணும், ஜோதியுட் ஜோதியாகவே உள்ளதைக் காண்பான்.

'ஜோதியுட் ஜோதியின் சொரூபமே அந்தம்,' என்று குறித் ததன் உண்மை, ஈண்டு சற்று ஊன்றி நோக்கி உணரப்பட வேண்டியுள்ளதாம். ஜோதியுட்ஜோதியாக இருக்கின்றது நமது அருள் அறிவேயாம். இவ்வறிவு நிலையே நமது ஆன்ம சொரூபம். இந்த அருட்ஜோதிமயமான ஆன்மா, எங்கும் நிறை அருட் பெருஞ்ஜோதியின் பூரண இயல்புடைய சின்னஞ்சிறு கூறேயாம். இதனால், ஆன்மா அருட்ஜோதியின் முடிந்த நிலை யாத, சுவரூபமாக உள்ளதாம். எனவே இவ்வான்ம நிலையே முடிந்த உருவாக அந்த வடிவாக இருத்தலின், ஆன்மா—அருட் ஜோதிநிலையின் அந்தம் எனப்படுகின்றது. இந்த உட்ஜோதி சொரூபத்தை, ஆன்மாவை அந்தம் என்னும்போது, இதற்கு முதலாய் அடிநிலையாயுள்ள புறம் நிரம்பிய பெருஞ்ஜோதி நிலையே ஆதி என்று கொள்ளப்படுவதாம். இதனால் புற ஜோதி ஆதியாயும், அக அருட்ஜோதி அந்தமாயும் உள்ளதை யுணர்கின்கிறோம்.

ஜோதியீன் பொருள்களில், பொருளாலான வடிவங்களில் நிறைவிளைவு கொண்ட, சிறந்தது எதுவென்றால், இந்த மனிதப் பிறப்புத்தேகமேயாம். உலகமெலாம் உதிக்கின்ற ஒளிநிலை, ஜோதி, தீயின் கூறாம். இக்காரணத்தாலே நம் புறவடிவம் தேகம் (தகிக்கும் தண்மையுடையது) உடல் (உடற்றுதல் சுடுதல் காரணமாயுள்ளது) காயம் (காய்தல். என்பதாலானது) இந்தப் புறத்தேக நிலையை வைத்து, அக ஆன்ம உண்மை அறியப்படுவதாம். இதனால் தேகம் ஆதியாகவும், ஆன்மா அந்தமாகவும் கொள்ளப்படும். எனவே, ஆதியும் அந்தமும், அடியும் முடியும் நம்முள் இருப்பதைத் திருவருளால் காண் கின்றோம் இன்று. இவ்வருள் ஞானத்தோடு மெய் என்பதன் பொருளை ஆயின், அரிய விளக்கம் வெளியாகும். மெய் என்ப தனைப் பிரித்தால், ம்+எ+ய் ஆகும். மகரமெய் ஜோதி சூழ் ஒளியைக் குறிப்பது. அது நிராதாரமாகிய ஏழாம் நிலையில் வெளிப்படுவதைச்சுட்டுவது, எகரமாகிய ஏழாவது உயிரெழுத்து, அங்கு எப்படி விளங்குகின்றதென்றால், யகரமெய்யினால் சுட்டப் படுகின்ற ஆன்மஜோதியாயுள்ளதாம். ஆகவே, இந்த மெய், ஏழ்நிலைமீதிருந்து ஆன்மஜோதி கொண்டு திகழும் மனிதப் பிறப்புத் தேகம். என்பகு அனுபவமாம். இந்த மெய்யில், ஆதியும் அந்தமும் ஆன ஜோதியுட் ஜோதியையே காண் கின்றோம். அருட்பெருஞ்ஜோதியின் அருள் இதுவாகும்.

## 133. சிற் ஜோதியின் இயலுரு

265. இந்தசிற் ஜோதியின் இயலுரு வாதி
266. அந்தமென் றருளிய அருட்பெருஞ்ஜோதி

(உ-வி) முன், புறத்திலிருந்து காணும்போது, புறநிலையே ஆதியாகவும், அகநிலை அந்தமாகவும் கொள்ளப்பட்டன. ஆதி யான புறஜோதியின் முடிந்தநிலை, அந்தமான ஆன்ம சிற்ஜோதி யாக அறிந்தோம். இப்பொழுது இந்தச் சிற்ஜோதி ஆன்மவடி வமே, நம் இயல்வடிவமாக, என்றுமுள்ள சிற்சொரூபமாகவும், இதன்மீது ஒவ்வொன்றாக எத்தனையோ தேக வடிவம், ஆவதும் பெருகுவதும், சுருங்குவதும், அழிவதுமாக இருக்கக் காண்கின் றோம். இதனால் இந்த ஆன்ம சிற்றுரு, ஆதியான ஒன்றாய், இயற் கையாய் இருந்து வருவதாய் அறிவோம். உள் ஆன்மவடிவம், ஆதி என்றால், புறத்தேக வடிவம் அந்தமாகக் கொள்ளப்படுவதாம். ஆதி அகவடிவைப் பூர்வம் என்றால், அந்தமாகிய புறவடிவை உத் தரம் (விளைவுநிலை) எனல் ஆம். இந்த உத்தரத்தை வடதிசை யாகப் பொருளாக்கிக் கொள்ளும்போது பூர்வத்தைத் தென் திசை எனக்கொள்ள நேருகின்றதாம். இதுகொண்டு, ''தென் னாடுடைய சிவனே எந்நாட்டவர்க்கும் இறைவன்'' என்பதன் உண்மை அறியலாகும். யாதெனில் நம் பூர்வ வடிவமாகிய ஆன்ம சிற்சபையில் உள்ள கடவுள்தானே எவ்வுலகத் தெவ் வெவர்க்கும், எவ்வுயிர்க்கும் உரிய கடவுள் என்பது உண்மை யாம்.

ஆன்ம ஆலயமே, ஆண்டவர் எழுந்தருளி ஆட்கொண்டு அருள்பாலிக்கின்ற இடமாகும். கடவுளின் இயல் உண்மை முற்றும் கொண்டு அனுபவப்பட உள்ள இடம் நம் ஆன்ம சிற் சபை என்பது உண்மை. இது ஆதியாக இருந்து, பக்குவம் உண்டாகும் வரை, புறவாழ்வில் சுகதுக்காதிகளால் உழன்று கொண்டிருக்கச்செய்து வருவதும் பக்குவ காலத்தே வெளிப் பட்டு அருள் பாலித்துப் பேரின்பமர்கிய வாழ்வில் ஆனந்தமாய் நிலவச் செய்வதுமாம்.

## 134. நீயே ஆதி

267. ஆதியும் அந்தமும் அறிந்தனை நீயே
268. ஆதியென் றருளிய அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) நித்தியமாக, அனாதியாக இருக்கின்றவர் கடவுள். அவருக்கு ஒரு முதலும், முடிவும் இல்லையாம். ஆதியும் அந்தமும் இல்லா அருட்பெருஞ்ஜோதியர் நம் பரம்பொருள். இப்படியுள்ள ஆண்டவர் பரிபூரணராகவே எங்கும் நிரம்பியே இருக்கின்றாராம். இதனால்தான் ஆண்டவர் உண்மை அகண்ட வெளி நிறை அணு ஒவ்வொன்றிலும் கூட என்றென்றும் இருந்துவருகின்றது முழு உண்மையே. அந்த அனாதியான கடவுள் அணுக்கள், சதா அருளின் ஐஞ்சக்திச் செயல்களால் சூழப்பட்டுப் பலப்பலவாகிய பொருள்களாய் விளங்குவதும், பலவாகிய கிரியா சக்தி இயக்கங்களாய் செயல்பட்டுக் கொண்டேயிருப்பதுவும், பலவாகிய புலன் உணர்வும், மனவறிவும், ஆன்ம ஞானமுமாய் விளங்குகின்றதும், ஆன்மஞான அனுபவ சக்தியால் பெறப்படும் பலவாகிய யோக சித்திகளாய் வெளிப்பட்டுக்கொண்டிருப்பதும் பலவான அருள் அற்புத அனுபவங்களாய் வெளியாகிக் கொண்டிருப்பதுவும் உலகில் நாம் காண்கின்றோம். இவற்றில் முடிவான அருள் அனுபவத்தோடு விளங்குகின்ற ஆன்மாதான், தனது அருள் இயல் உண்மையை உள்ளபடி அறிந்துகொண்டுள்ளதாம். அதாவது, அந்த அருள்வண்ண ஆன்ம அணு கடவுளின் சிற்றுருவே என்பதாம்.

அருள் ஞானத்தால் தன்னை அறிகின்ற ஓரான்மாதான், திருவருட் சூழலால் ஐவண்ணம் கொண்டு விளங்குவதை யுணர்ந்து கொள்ளுகின்றது. என்று கடவுள் அருள் விளக்கம் இந்தப் பிரபஞ்ச வெளியில் செயல்படத்தொடங்கியதோ, அன்று முதலே அவ் ஆன்மாவின் இருப்பு நிலை கொண்டதாம். ஆன்மாவை முதலாய் வைத்துத்தான் கடவுட்சக்தி பலவாகிய தோற்றங் கொள்ளத் தொடங்கியுள்ளதாகும். அனாதியான கடவுள்தானே இந்த ஆதியான ஆன்மாக்களாய் எங்கும் வெளிப்பட்டு, ஐந்தியல் வண்ணம் கொள்ளுகின்றார். ஆதியும் அந்தமும் இல்லாதவர் கடவுள். ஆனால் அவரே, ஆன்மாவாய் விளங்கிடத் தொடங்கியது முதல், ஆன்மா, ஆதியாய் இருக்கச் சூழ்நிலை ஐவண்ண சக்தியாய் மாறி மாறி முடிவில் ஆன்மாவுக்கு அருள் அனுபவ இன்ப வாழ்வு சேர்கிறதாம். ஆதியான ஆன்மாவுக்கு இந்த இன்ப வாழ்வு நிலையே ஆனந்தமாம்.

அருள் ஞான நிலைக்கேறிய பக்குவியே தனது ஆதியான ஆன்மநிலையை உள்ளபடி கண்டு கொள்ளுகின்றான். தான்

அந்த ஆன்ம வடிவினனாய் ஆதிமுதலே இருந்துவருவதாக அறி கின்றான். இதனால், மனிதன் ஆன்ம ரூபியாய் ஆதிமுதலே இருந்துகொண்டு, திருவருளின் செயலால் பலப்பலவாகிய உயிர் உடம்புகளைப் படிப்படியாக ஏற்று வாழ்ந்து வாழ்ந்து வந்து இன்றே அருள்ஞான ரூபியாய்த் தன்னைத்தானே அறிந்து கொண்டுள்ளான். இதனால், மனிதன், மன்னி நிதமும் உள்ள வனே என்பது தெளிவாகின்றதாம்.

மனிதனின் ஆதிநிலை ஆன்மாவே என்பது தெளிவு. அருட் பெருஞ்ஜோதி இத்தெளிவை நம் வள்ளலுக்கு உணர்த்தியது. நம் வள்ளலும் தம்மை ஆதியாகக் கண்டதோடு, தமது அந்தம் எதுவெனவும் அறிந்து கொண்டிருந்தார். ஆன்மாவின் அந்தம் ஆனந்தமே! அது சிவானந்தம் என்பர் சைவர்; சச்சிதானந்தம் என்பர் சுத்தவேதாந்திகள். அருட்பெருஞ்ஜோதி வாழ்வே ஆனந்தம் என்பது அடிகளார் கண்டதும் அடைந்ததும்.

## 135. அமுதால் அல்லலை நீக்கியது

269. நல்லமு தென்னொரு நாவுளங் காட்டியென்
270. அல்லலை நீக்கிய அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) ஆன்மாவுக்கு மேலும் மேலும் உடல் உருவருவதும் போவதுமாய் இருக்கின்றது. அப்படி ஓர் உடல் பெற்று இவ் வுலகிடை வாழும்போது பலப்பலவாகிய அவத்தைகள் ஏற்பட்டு அல்லலுற்று அழியவே நேருகின்றதாம். இத்துன்பமும் அழி வுமே ஆன்மாவை நன்னிலைக்கு ஏற்ற உதவுகின்றனவாம். இப் படி அனுபவப்பட்டு மேனிலையுறாது சுகாணந்த வாழ்வு நிலைக்கு ஏறிவிடமுடியாது; பேரின்பானுபவமும் உண்டாகாது. ஆகவே, கடவுள் தயவுதான் ஆன்மாவுக்கு இந்தப் பிறவிகளை நியதிப்படிச் சூழச்செய்துகொண்டே யிருக்கின்றதாம்.

பிணிகளைப் போக்குவதும், சுக வாழ்வைக் கொடுப்பதும் மருந்து என்ப. இம்மருந்தை, அமுதம், அமிர்தம், அமிழ்து என் றெல்லாம் கூறுவர். இச் சொற்பொருளின் உண்மையை இங்கு சற்றுஆழ்ந்து ஆய்ந்து பார்ப்போம். மருந்து—பொதுவாக மரம் செடி கொடி முதலிய தாவரத்திலிருந்து செய்து கொடுக்கப் படுவது ஆம். இதனால், மூலிகை மருந்து பிணி நீக்குவதில் முத

லிடம் பெறுவதாம். அருள் அனுபவத்தில் அகத்தே பொருந்தி யுள்ள கடவுள் அருட்சக்தியே எப்பிணியும் போக்குவதாக உள்ள தாம். ஆதலால், ஆன்மாவுடன் பிரிவற மருவியிருந்து, அரு ளனுபவத்தில் அருந்தாமலே அருந்திய பலனை வழங்குவதுதான் அருட்சக்தியாம் மருந்தாய் இருப்பது உண்மையாம். இக்கட வுள் அருட்பெருந்திறலை உணர்த்த ஆக்கப் பட்டது தமிழ் என்பர். இத்தமிழே இடையறாது பயில, தமிழ்—தமிழ்—தமிழ்—தமிழ்— அமிழ்தென இசைவதாம். எனவே இத் தமிழமிழ்தால் இறை இன்ப வாழ்வு பெறலாம் என்பது தமிழ்ச் சித்தர் கண்ட உண்மை, மிருத்து அல்லது மிர்த்து என்பது, பிணி, மரணமாம்: இதற்கு எதிரான அமிர்த்து அப்பிணி, மரணம் இன்மையைக் குறிப்பது. ஆகையால் அமிர்த்து என்பது சொல்லளவில், மரணம் நீக்கும் பொருளாகக் குறிக்கப்படும். மேல், அமுதம் என்பதையும் அமிர்தத்தின் சரியான தமிழாக்கச் சொல்லே எனக்கொள்ளுதல் சிறப்பாகாது. ஆகையால் இதற்கு அருளனு பவப் பொருள்கண்டு கொள்ளப்படவேண்டியள்ளது. அகரத்தைக் கடவுள் எனவும், முதம் அல்லது முதல் என்பது ஆன்மாவாகவும், எனவே அமுதல் அல்லது அமுதம் நமது கடவுள் ஆன்மா வின் அழிவற்று விளங்கும் முறையியல் உண்மை எனக் கொள்ள லாம். எனவே, அமுதம் அகத்தே இறையருள் அனுபவத்தைக் கூட்டி வாழ்விக்கும் ஒன்றாக அறிவோம். இந்த இறையருள் ஆகிய ஒன்றே நல்ல அமுத மாகக் கொள்ளலாம். பிற, மழை முதலான நீரும், அமுதமருந்துகளும், பஞ்சாமிர்தம் போன்ற செயற்கைப் பொருள்களும், கற்பனா தேவாமிர்தமும் யோகஞான சித்தி செய் அற்புத சக்தியாய்ப் பெறப்படும் அமுதங்களும், அருள் ஒளியமுதுக்கு எவ்வகையிலும் ஒப்பாகாது. ஆகையால் இந்த அருள் அமுதமே நல்லமுது என்று சிறப்பிக்கப்பட்டுள் ளதாம்.

மேற்படி அருள் அமுதம், அருள் ஒளிமயமாய், அழியாச் சத்துப் பொருளாய், அகவெளியில் புதையுண்டு கிடக்கிறதாம். அதனைப் பொய்ப்பாவனையாலோ, தந்திர உபாய முறையாலோ, அறுவை சிகிச்சையாலோ, பிற கருவிப் பொருட்களாலோ அனுப வத்தில் பெற்றுக் கொள்ளமுடியாதாம். இம்முறைகளால் சிர நடு ஒங்கார அமுத கலசத்தைத் திறப்பித்து அவ் வமுதரசங் கொண்டு உடலைக் காயகல்பம் செய்து வைத்தால்கூட என்றும் நிலைக்காது, சிறிது காலத்திற்குப்பின் அழிந்து போவது உண்

மையே. யோகியர் அனுபவிக்கும் ஐநிலை அமுதில், உள் நாவின் அடியில் உண்டாகும் அதிசுவையமுதால் நோயின்றி நெடுங்காலம் வாழும்படி ஆற்றல் பெறுவர். இதுவும் அருள் அனுபவத்தைக் கூட்டி வைக்காததால் முடிவில் தேகத்தை விட்டுச் செல்லவே செய்து விடுவதாம்.

உண்ணாவுக்கு மேலே, உச்சிக்குக் கீழே விளங்குகின்ற அருட் ஜோதி அமுதை, அருள்நிறை அனுபவத்தால் கண்டும், பெற்றும் கொள்ளும்போது, நாவினிடத்தே அதன் சுவை பெருகுகின்றதாம். உள்ளத்தில் பெருகும் அவ்வமுதச்சுவை உயிரிலும், உடம்பிலும் நிரம்பி அனுபவப்படுவதாம். திருவருளால் பெறப்படும் இவ் வருள் அமுதால், உடம்புயிரோடு உளமும் ஒளிமயமே ஆகி, குன்றாத் அருட்சுவை அனுபத்தோடு என்றும் விளங்கச் செய்வ தாம். நாவினால்தான் சுவையை உணரமுடியும், மற்ற உடற் கருவி கரணங்களிலும், ஜீவ உயிர்ப்பு ஆற்றலிலும் சொல்லரிய ஆன்ம அனுபவத்திலும் இந்த அருள் அமுதால் அழியாநிறை இன்பம் பொங்கி, அருட்சித்தியோடு வாழச்செய்வதாம். இங்ஙன மாக, தனது ஒருநாவுளம் அதாவது ஒப்பற்ற அருட்சுவையுணர்வு விளங்குமிடத்தே நல்லமுதை வெளிப்படுத்தி, அனுபவத்தில் கொள்ளச் செய்ததால், இதுகாறும் இடையறாது சூழ்ந்து கொண்டிருந்த அல்லல் பிறவி எல்லாம் நீங்கி, இறப்பும் ஒழிந்து என்றும் ஆனந்தமாய் வாழவும் செய்துவிட்டுள்ளதாம் அருட் பெருஞ்ஜோதிபதி.

## 136. அற்புதம் இயற்றக் கற்பகம் கொடுத்தது

**271.** கற்பக மென்னுளங் கைதனிற் கொடுத்தே
**272.** அற்புத மியற்றெனும் அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) அக உண்மையை வெளிப்படுத்தி, உலகுக்கு, மெய்ப் பொருள் அனுபவம் உண்டாக்குவதற்கு அக ஞானியர் செய்த அற்புத கற்பனை பற்பலவாகும். அவற்றில் கற்பகமரம் என்பது ஒன்று. இக்கற்பக மரம் தேவருலகத்தில் பொன்மயமாய் விளங் குவதென்பர். இதன் அடிசார்ந்து எவர் எதுவேண்டினும் வழங்க வல்லதென்பர். சன்மார்க்க நிலைநின்று இதன் உண்மையை ஆய்ந்து கொள்ளுவாம். நமது தலைநடுவுள்ளொளிர் கடவுட் சுடரே இக்கற்பக மரம் முதலியனவாம். இது விளங்கிடம் சுத்த

அருள் ஒளிமயமானது என்பதே தேவருலகு ஆம். அந்த ஒளி, மாசில்லா மாற்றறியாப் பொன்மயமானது என்பதால், அம்மரம் பொன்வண்ணம் எனப்படுவதாம். நம் பகரவடிவ மெய்யறிவுப் பீடத்தே, அகமாகிய ஆன்மமணியாய் விளங்கச்செய்ய, விசாரம் என்னும் உண்மை கற்கப்படுவதாம். இதனால் இது கற்கப்படும் (ப்+அகம்) பகம், கற்பகம் ஆக உள்ளதாம். மரம் என்பதும் (ம்+அ+ர்+அ+ம்) ஆக விளங்கி துவாதசாந்த பிரணவஜோதி வடிவைக் குறிப்புதாம். எனவே நம் கடவுட்ஜோதியே உண்மையில் கற்பகமரம் என்றாம். அருள்ஞான விசாரத்தால், இவ் அக நிலையிற் பொருந்தி, அருள்மயமாய் நின்று எவர் எதுவேண்டினும் எய்துவர் என்பது வள்ளல் அனுபவம்.

உள்ளங்கையிற் கற்பகத்தைக் கொடுக்கப்பெற்றதாகக் கூறுகின்றார். கற்பக மரத்தையா உள்ளங்கையிற் கொடுக்கப் பெற்றார்? அல்லர். கற்பகக் கனியைக் கொடுக்கப்பெற்றார் என்ப. உண்மையில் இக்கற்பகம் மரமும் அல்ல கனியுமல்ல. அருட் பெருஞ்ஜோதியேயாம். இதனையே அனுபவமாம் கையிற்பெற்றுக்கொண்டதையே ஈண்டு குறிக்கின்றார். இதுபோல், உள்ளங்கை நெல்லிக்கனி, கன்னற்கனி, அக்காரக்கனி, சிற்றம்பலக் கனி என்றும் கையினிற் பெற்ற பொற்கிண்ணம் என்றும், அட்சய பாத்திரம் என்றும், கரத்திற் கட்டப்பெற்ற பொற் கங்கணமென்றும் கூறப்படுவனவெல்லாம் அருள் ஒளியின் அக அனுபவ நிலையே என அறியவேண்டும்.

மேற்படி அருட்ஜோதி அனுபவம் கைவரப்பெற்று, அதனால் அருள் அற்புதம் பலவும் செய்ய ஆணைபெற்றுள்ளார் நம் பெருமான். இதனால் இவ்வுலகில் அற்புதம் செய்யும்படி ஆஞ்ஞை பெற்றது ஏன்? ஏனெனில், இவ்வுலக் மக்கள் பெரிதும் புலன் மயக்கச் சிறு நெறிகளால் இச்சை வயப்பட்டு வீண் முயற்சிகளால் உழன்று கெடுகின்றார்கள். இவர்களை அருட்பெரு நெறியின் அனுபவத்தால் உண்மை இன்பவாழ்வுக்குத் திருப்பவேண்டியிருக்கின்றது. இதனால், அருட்சக்தியின் ஆற்றல் வெளிப்பட அற்புதச்செயல் புரிய நேருகின்றதாம். மற்ற வகையில் அடைந்த பயன் எல்லாம் அற்பமெனக் கண்டு, அவற்றை விடுத்து அருள் வழியை மேற்கொள்ளச் செய்ய இந்த அற்புத சித்தி உதவுவதாம். இச்சித்திச் செயல் நேரடியாக அருட்பெருஞ்ஜோதியால் காரியப்படுவதால், உலகத்தையே பக்குவப்படுத்தும் ஆற்றல்

கொண்டதோடு, என்றும் குன்றாது மறையாது செயல்பட்டுக் கொண்டே விளங்குவதாம், பிறர் செய் சித்திச்செயலால், தம்மைக் காட்டிக் கொள்ளும்போது, நித்திய பரத்தின் தொடர் பின்மையால் அற்ப காலத்தில் மறைந்துபோகவே நேருமாம். நம் பெருமான் அருளாலே பேரின்பச் சித்திச்செயலோடு விளங் கவே திருவருளாணை இப்படி வழங்கப் பெற்றதாம். கடவுளர் அருட்பெருஞ்செயல் இயல்பாக எங்கெங்கும் நடைபெற்றுக் கொண்டிருப்பதை நாம் அற்புதமெனக் கொள்ளாது இயற்கை யென எண்ணி வியப்புறாதிருக்கின்றோம். மனிதனின் மூலம் ஓரளவு அருள் விசேட சக்தி வெளிப்பட்டு, நியதிக்கும் மாறாக சில புதுமைச் செயல் புரியும்போதுதான், அவைகள் அற்புதச் செயல்களாக வியந்து கொண்டாடப்படுகின்றனவாம். பேரரு ளால் மனிதன் இறவாது சுத்த சுகானந்த வாழ்வில் விளங்கிக் கொண்டிருப்பதே பேரற்புதமாக உலகம் கண்டு கொள்ள இருக் கின்றதாம்.

## 137. கண்களிற் கதிர்நல அதிசயம்

273. கதிர்நல மென்னிரு கண்களிற் கொடுத்தே
274. அதிசய மியற்றெனும் அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) புற உலகில் பகலிரவு, இரவிமதியின் ஒளியோடு வந்து போய்க் கொண்டிருக்கின்றன. இவ்விரு ஒளியினால் பல வாகிய ஆற்றல்களும், பொருள்களும், உயிர்களும் தோன்றியும், வளர்ந்தும், அழிந்தும், மறைந்தும் கொண்டேயுள்ளன. ஞாயி றுக்குத்தான் இயற்கையில் ஒளியுண்டு; அதுவே சந்திரமண்ட லத்திற் பட்டு நிலவு ஒளியாகத் தண் கதிர் விளக்கமாக விளங்கு கின்றதாம். சூரியஜோதியின் பிற கூறுகள் செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, ஆகியவற்றின்மீது பட்டுப் பிரதிபலித்து ஒளிர்கின்றன. மற்றும் வான், மீன்கணங்களின் ஒளியும் நம் நில உலகத்தைச் சூழ்ந்து ஒளிர்ந்துகொண்டுள்ளனவாம். முக்கிய மாக மனிதனின் புற உடல் விளக்கத்திற்கும் அக உயிர். விளக்கத் திற்கும், கருவி கரண விளக்கத்திற்கும் வளர்ச்சிக்கும் இரவி மதியின் ஒளியே கொள்ளப்படுகின்றனவாம்.

மனிதப் பிறப்புருவின் அக அனுபவத்தில் சூரிய சந்திர சக்தி யின் விளக்கம் நன்கு உதவிக்கொண்டுள்ளனவாம். புறவுடல்,

சூரியனின் பொருட் சக்தியின் விளைவு என இருக்கின்றதும், உள்ளில் மனோகரண அறிவு, சந்திரனின் அம்சமாய் இருப்பதும் ஒருவகை அனுபவமே. அக ஆன்மக் கூறில், அவ்வான்மாவே சூரியனாகவும், அதன் ஆற்றல்கொண்டு விளங்குகின்ற உடல் சந்திரன் அம்சமாகவும் கொள்ளப்படும். ஆன்மதத்துவம் பன்னிரு கலைச் சூரியனாய் சூரிய நாராயணனாய் இருக்க, உடற்கூறு பதி னாறுகலை, சந்திர சேகரனாய் கற்பிக்கப்பட்டுள்ளன. உடலில் ஆண் கூறுவலமாகவும், பெண்கூறு இடமாகவும் கொள்ளப்படுகின்றன. வலத்தில் ஓடும் மூச்சுக் சாற்று, சூரியகலை அல்லது பிங்கலை எனப்படும். இடதுபக்கம் இயங்குகின்ற சந்திரகலா சுவாசம் இடகலை எனப்படும். சூரியகலையின் தோற்றம், இடற்காற் பெருவிரலிற் றோன்றி, வலது கண்ணில் முடிந்து நிற்பதாம். இது போல், சந்திரகலை வலக்காற் பெருவிரலி லுதித்து, இடக்கண் ணிடத்தே முடிவதாம்.

மனம் வாயுவின் கூறாக இருப்பதாம். இதனால் வாசி எவ்வழி இயங்குகின்றதோ, அவ்வழியே மனோகரணமும் செல்லுமாம். சரப்பழக்கம் அல்லது பிராணாயாம சித்தியுடையோர் மனத்தை யும், சுவாசத்தையும் அடக்கி ஆளும் ஆற்றலை ஒருவாறு பெற்றி ருப்பர். இதனால் ஒருசில சித்திச் செயல் புரிவர். தயாவொழுக் கம் பூண்டு, அருள் விசாரம் கொண்டு, பரோபகாரச்செயலில் ஈடுபட்டு வாழார்க்கு இந்த சூரிய, சந்திர சக்தியால் அற்பசித் தியே கிடைக்கும். நம் வள்ளல்போன்றார்க்கு சூரியசந்திர சக்தி அருட்பெருஞ் சக்தியை வழங்கும் என்பது உண்மை.

நம் அருள் ஒளி அண்ணலார் தம் இருகண்ணொளியில், சூரிய சந்திர சக்தியைப் பெற்றிருந்ததோடு, திருவருளால் மக்கள் நிலையை அருள் ஒளி வாழ்வுக்குப் பக்குவப்படுத்தவும் கூடியவ ராய் விளங்கினார். இந்தப் பக்குவப்படுத்துஞ் செயலே பேரதி சயப் பெருஞ்சித்தியாகும். அக்காலத்தில் சுவாமிகளைச் சூழ்ந் திருந்த சிலர், சுவாமிகள் இரு கண்களால் நேராக எவரையும் பார்ப்பதில்லை எனவும், ஒரு கண்ணைச் சற்று மூடியவண்ணம் இருந்தார் எனவும் கூறியுள்ளனர். உண்மை யாதெனில், நம் பெரு மான் உலகியலில் அருளியலைக் கொண்டுவர விழைந்தார். ஆகை யால் சதா சத்விசாரமும், பரோபகாரமும் உடையவராய் விளங் கினார். இடக்கண்ணின் தண்கதிர் ஒளியால் அகமுகத்திலிருந்து அருள் அமுதுகொண்டு வருவனவற்றை முன் கூட்டிக் கண்டுரைத்

தார். வலதுகண்ணின் ஜோதி சக்தியால், சிறிதளவு ஆற்றலா லேயே மக்களை அருளொடு நோக்கி, தூய்மைப்படுத்தி மேனி லைக்கு ஏற்றிக்கொண்டு வந்தார். அருட்பெருஞ்ஜோதி ஆண்ட வர், இவருக்குத்தன் ஐந்தொழில் செயற்குரிய அருட்பேராற்ற லையே தந்தருளினார் என அறியும்போது சூரியசந்திரர்களின் ஆற்றலால் சிலபல அற்புதம் செய்வது என்ன பேரதிசயம்!

## 138. அருளறிவில் விரிந்த அருள் நெறி

275. அருளொளி யென்றனி அறிவினில் விரித்தே
276. அருணெறி விளக்கெனும் அருட்பெருஞ் ஜோதி.

**(உ-வி)** ஒளியால் இருள் நீங்குகின்றது; சூழ் உலகம் நன்கு துலங்குகின்றது. புலன் அறிவு புற விஷயாதிகளைக் கண்டுகொள்ளச் செய்வதால், அந்தப் புலனுணர்வும் ஒளிமயமே. மேல் ஆன்ம ஞானத்தால் அக உண்மை அறியப்படுகின்றதால், அந்த ஞானமும் ஒளி வண்ணமாகவே கூறப்படுகின்றது. யாவற்றிற்கும் மேலாகத் திருவருளாலே, மற்றபடி எதனாலும் அறிதற்கரிய கடவுள் உண்மையை உள்ளவாறு காணவும், அது கொண்டு அக்கடவுள் அனுபவத்தையே பெற்றுக்கொள்ளவும் முடிகின்றதாம். இது அருள் ஒளியின் பெருமையாகும். கடவுள் அருட்பெருஞ் ஜோதியர் என்பதும், அந்தக் கடவுளின் பெருமை பேரருளேயாம் தனிப்பெருங்கருணை என்றும், அருளாலே அறிகின் றோம். இதனால் அருள் என்பது பெரும் ஒளி அல்லது பெருஞ் ஜோதியேயாம். இதுகாறும் உலகர் இந்த அருளை, எல்லாம் வல்ல கடவுளின் தனிப்பெருங் கருணைத் தன்மையாக அறிந்து கொள்ளாது, குறுகிய கருத்தில் இரக்கம், ஈகை, அன்பு அல்லது தயவுச் செயல், கருணை பாலித்தல் என்றுதான் கொண்டிருந் தனர். தனது உண்மையும், உண்மைத்தேவையும் அறிந்து கொள்ளாத மனிதன், கடவுளின் உண்மையும் தன்மையும் எப்படி அறிந்துகொள்ள முடியும்? அறிந்திட முடியாதது இயற்கையே. ஆகையினால்தான், கற்பனைக்கடவுட் சந்நிதியில் நின்று வேண்டு கையில் தன் புலன் இன்ப, தேகபோக வாழ்வுக்குரியவற்றையே விரும்பிக் கேட்கின்றான். அவற்றையே அருள் செய்யவேண்டும் என முறையிடுகின்றான். பிரார்த்தித்துக்கொள்ளுகின்றான். அவனது கோரிக்கை ஒருவாறு கிட்டிடின் அது நிறைவேறி

விட்டதாகவும், தெய்வம் அருள்செய்துவிட்டது, கருணைபாலித்து விட்டது என்றும் களிப்படைந்து விடுகின்றான்; இவையெல்லாம் அருளின் உண்மையை அறிந்து கொள்ளாததின் அறிகுறியே ஆம்.

வள்ளல் அடிகள் தம்மெய்யறிவில் திருவருள் நிறைவால் கண்டதுதான் அருள் உண்மை விளக்கம். அந்த அருளறிவாற் கண்ட கடவுளைப் பேரருட் பெருஞ்ஜோதியாகவே வெளியிட்டார். எல்லையில்லாப் பெருவெளிமுற்றும் நிரம்பிய பெருஞ்ஜோதியே கடவுளர் புறவண்ணமாக உணர்ந்தவர், அந்தப் பேரொளி இறையின் பெற்றி அல்லது பேரியல்பு, எல்லாம்வல்ல பேரருளாகவே மெய்யறிவால் உணர்ந்தார். ஆகவே, அவர்தம் தனி அறிவில்தான் விரிந்திலங்கும் அருட்பெருஞ்ஜோதிக் கடவுளைக் கண்டு கொண்டுள்ளார். இந்தக் கடவுள் உண்மை விளக்கம் வெளியாகி விளங்கும் இடம்தான் தலைநடு ஆன்ம அணுநிலையாகும். இந்தச் சிற்றணுவே அருட்பெருஞ்ஜோதிக் கடவுள் உண்மையை உணர்த்துகின்றதும், உணர்கின்றதுமாயுள்ளதாம். எவ்வாறெனில் அகண்ட நிறைவான அருட்பெருஞ்ஜோதியின் உண்மை எவ்விடத்தும் இருப்பதாயினும், அதன் ஓர் (அருட்பெருஞ்ஜோதி அணுவுக்கு) அணுவுக்கு அருள்ஞான பக்குவ மனித வடிவம் உண்டாகி விளங்குகின்றபோதுதான், அக்கடவுள் அணுவே, மனிதனின் உண்மையான அக ஆன்ம வடிவமாய் இருந்துகொண்டு விளங்குகின்றதாம். இதனால், அவ்வணுவே கடவுளாய் இருந்து உணர்த்துகின்றதும், மனித ஆன்மாவாய் இருந்து உணர்த்துகின்றதும் எனப்பட்டதாம்.

இப்படி அகத்தே கடவுளும் மனிதனும், இரண்டற்ற ஒன்றாய் இருக்கும் உண்மையை அருள் அறிவால் கண்டு நிற்கும் மனிதன்; மேற்கொண்டு இவ்வுலகில் எப்படி வாழ வேண்டும் என்பதுதான் தெளிவாக்கப்படவேண்டியுள்ளது. இதுவரை பொறிபுலன் வாழ்வில், உண்மை சிறிதும் அறியாது உழன்றுகொண்டிருந்தான்; மனோகரண சக்தியால் பகுத்தறிவு கொண்டு மருளியல்வாழ்வில் தொல்லைப் பட்டுக்கொண்டிருந்தான்; மேலே உயிரியல் உண்மையை யோர்ந்து பொதுநோக்கு அடைந்தும் சமூகவாழ்வில் தடுமாறிக் கொண்டிருந்தான்; அதற்கும் மேலாக அகமாகிய ஆன்ம நிலையை யோகசித்தியாற் கண்டடைந்து அரியபல் சித்திச் செயலால் அகமகிழ்ந்து கிடந்தான். இப்படி இந்திரிய, கரண ஜீவ, ஆன்ம அடிப்படையில்தான் பலவாகிய சமய, மதநெறிகள்

வகுக்கப்பட்டன. அந்நெறிகொண்டு வாழ்ந்து பெற்ற சுகம் அனைத்தும் மக்கள் சமூகத்தையோ தனிமனிதனையோகூட நல் லின்ப வாழ்வில் அழியாது விளங்கவைக்க்வில்லை. அவை எல் லாம் போக இப்பொழுது திருவருளே ஒரு பெரு நெறியாக, அருள் ஒளியை உள்விரித்துள்ளதாம். அருள்ஒளி அகநிலையே, கடவுளும், மனிதனும் ஆகிய உண்மையாய் இருக்கக் காண்கின் றோம். ஆகவே, இதுவரை கடவுளை அடைய மேற்கொண்டு அழி வடைந்த புறநெறிகள் யாவையும் விடுத்து, அக நின்று அருள் நிறை வாழ்வு வெளிப்படவேண்டியதே உண்மைநெறியாகக் காண்கின்றோம்.

அகநின்று அருட்பிரகாசராய் விளங்குகின்ற நம் வள்ளலார், இந்த அக அனக அருள்ஒளி நெறியைத்தான் உலகுக்கு வழங்கு கின்றார். மெய் அகத்தே நம்மை வைத்து, விழித்திருக்கின்றாய் நீ விளங்குக! சன்மார்க்க நிலை விளக்குக என்று அருளாணை செய் யப்படுகின்றார். அவரே அன்றுமுதல் ஒவ்வொருவர் ஆன்மாவின் கண்ணும், அருட்பிரகாச அருள்ஒளியாக நிலவி நின்றுகொண்டு, அவண் உறுவோர்களுக்கு எல்லாம் அருட்பெருஞ்ஜோதி நெறி யைக் காட்டிக்கொடுக்கின்றார். காட்டிக்கொடுத்து அவரைப் போன்று வாழ்விக்கவும் உதவுகின்றார். ஆகவே அவரை உண்மை யாகக் கண்டு அடைந்து உய்வுபெற அருட்ஜோதி அகஞான சபைக்கே வாரீர். இப்படி அருள் ஒளிநெறி ஏற்று வாழாது இன்னமும் புறநெறியிற் சென்று எவ்வளவு முயன்றாலும் வள்ள லையும் அவர் அருள் இயலையும் காணாது வீண்போகத்தான் நேரும். ஊர்தோறும் சன்மார்க்க சங்கங்கள் தோன்றினால் போதுமா? ஒவ்வொரு உள்ளந்தோறும் அருள் ஒளியன்றோ தோன்றி வாழ்விக்க வேண்டும்!

## 139. மனப்பதியில் பரையொளி அரசு

277. பரையொளி யென்மனப் பதியினில் விரித்தே
278. அரசது வியற்றெனும் அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) சுத்த அறிவு அருள் ஒளியாக உள்ளது. இதனால் ஆன்ம அணுவைத் 'தான்' எனப் பாவித்து வந்த தற்போத ஞானம், அவ்வான்ம அணு, அருட்பெருங் கடவுளின் சிற்றுருவே என உணர்ந்து அதுவாக அடங்கிநிற்க நேருகின்றதாம். எனவே

அவ்வான்ம வெளியில் விரிந்தது அருள் ஒளிநெறி என முன் அடிகளில் கண்டோம். அந்த அகநிலையினின்று விரிந்த அருள் ஒளி இப்போது, மன வெளியிற் கலந்து, வாக்கிலும் காயத்திலும் செயல்படலாகின்றதாம். ஆன்மாவில் அருவநிலையில் இருந்த அருள் ஒளி, மனத்தில் வெளியானபோது அருவுருவாய் உணரப் பெறுகின்றது. மேல் வாக்கில் உருவருவாயும், காயச் செயலில் உருவாயும் விளங்குவதெல்லாம் அருள் ஒளியின் செயலேயாம்.

இங்கு, பரை ஒளியாகப் பகரப்படுவது, கடவுட் சக்தியாகிய அருளேயாம். மனத்தில் இந்த அருள் சக்தி விளங்கும்போது, உள்ளத்தின் வலிமை உலகத்தையே ஆட்டிப்படைக்கும் ஆற்றல் கொண்டதாய் இருப்பதாம். இதனால் ஒரளவு ஆன்ம சோதி சக்தியைக் கொண்ட சித்தர்கள் உலகத்தைத் தம் மனம்போல் ஆள முனைகின்றனர். அவர்கள்தாம் மக்கள் சமுதாயத்தை மறைமுகமாய் நின்று ஆண்டு வருகின்றனர் என்பது அவர்களின் தொடர்புடைய சிலரே அறிவர். உலகத்தையே மாற்றவல்ல திறம் இவர்களுக்குண்டு எனப் புகல்வர். ஆனால் இவர்களுக் கெல்லாம் மேம்பட்டுத் திகழும் சித்தர்நாதனாய் சுத்த ஞான சித்தராய் விளங்குபவர் அருட்பெருஞ்ஜோதிபதி ஒருவரேயாவர். அவருடைய திருவுளப்படியே எவரும், எதுவும் செய்யமுடியும் என்பது அருள் அனுபவம். அந்த அருள் ஒளிப்பதியே நம் வள்ளல் மனத்தில் வெளியாகி நிரம்பி நின்று, உலகை ஆள விதிக்கின்றபோது, இவரது அருளாட்சியே ,உலகில் பரவத் தொடங்குகின்றதாம். சித்தராட்சியில் எழுந்த ஆணவ அகங் காரத்தில் அழிவுச்செயல் படருகின்றதை மாற்ற, அருளாட்சியின் ஆற்றல் வெளியாக உலகம் இன்று பெருந்திருப்பத்தில் இருக் கின்றதாம்.

தனித் தலைமைப் பெரும்பதி அருட்பெருஞ்ஜோதி அம்பலத் தரசர் இதுகாறும் அகநிலையில் அருவமாய் இருந்துகொண்டே ஒரு குறிப்பிட்ட நியதிமுறைப்படி எவ்வுலகத்து யாவையும் ஆண்டு வந்தார். அந்தப் பதியையும், அவரது விதிச் சட்டத்தை யும், அச்சட்டத்தைச் செயல்படுத்தும் காரணத்தையும் முடிவை யும் உள்ளவாறு அறிந்துகொள்ளப்படாதிருந்தன இவ்வளவு காலம். இதுமுதல், அவ் அம்பலத்தரசர் தன் அருவ நிலையி லிருந்து, வள்ளலின் மனப்பதியில் நிறைந்து அருவுருவாய் விளங்கிக்கொண்டு, தன் அருள் ஆட்சியை உலகம் எல்லாம்

காணப் புரியத் தொடங்கியுள்ளார். இதனை, வள்ளற்பெருமானின் சுத்த சன்மார்க்க அருள் அரசாட்சியாய் அறியப்படும். உண்மையில் இது அருளம்பலவாணனின் செங்கோலாட்சியே வள்ளல்வழி எங்கும் பரவுகின்றதாகத் திருநிறை அருளாளர் காண்பர். மக்களினத்தைப் பெரிதும் வாட்டி மயக்கி அழிவுறச் செய்கின்ற மருளாட்சி விரைந்து ஒழிந்துபோகவும், அமைதியையும் ஆனந்தத்தையும் தோற்றுவித்துத் தழைத்து ஓங்கச் செய்யும் அருள் ஆட்சியே எங்கும் பரவி விளங்க வைக்கவும் திருவருள் இப்பொழுது வெளியாகியுள்ளதாம். அருளாணைப்படி அருளாட்சியை எங்கும் பரப்ப நம் பெருமான் செயல் புரிந்து வருகின்றார்.

## 140. சக்திகளின் வல்லபம்

**279.** வல்லப சக்திகள் வகையெலா மளித்தென
**280.** தல்லலை நீக்கிய அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** சத்தி அல்லது சக்தி என்பது, ஆற்றல் எனப் பொருளாம். இது சத்தாக எங்கும் நிரம்பியுள்ள இறை ஒளியின் இயல்பாகும். இந்தச் சத்தான கடவுட்ஜோதியின் ஆற்றல், எல்லாம் வல்லதாம். அருட்பேராற்றலாகிய சத்தி ஒன்று பலவாகி இந்த மாபிரபஞ்சத்தில் செயலோடு விளங்கிக் கொண்டுள்ளதுவாம்.

அபக்குவ, பக்குவ நிலைகளில் சக்திகளின் வகை பலவாய்க் குறிக்கப்படும். அபக்குவத்தில் விளங்கும் சக்திகள், மொத்தத்தில் ஆறுகோடி மாயா சக்திகள் என்பர். அதில் அசுத்தமாயை, சுத்த மாயை சுத்தாசுத்தமாயை, மகாமாயை, சர்வமகாமாயை என்றும், திரோதான சக்தி, இச்சை, ஞானம், கிரியை எனும் சக்திகளாகவும்; பக்குவத்தில் அருட்சக்தி, சிற்சக்தி, பரை, விந்து, மோகினி, மான் முதலான சக்திகளும், இன்னும் சரியையாதி ஞான பாதம்வரை யுள்ளோர் அடையும் சக்திகள் பலவாம். இவை எல்லாம் சுத்த சன்மார்க்க அனுபவத்தில் ஒன்றான அருட்பெருஞ் சக்தியில் அடங்கும். இந்த அருட்பெருஞ்சக்தியே உலகியல் அனுபவம் உண்டாக்க, பொருட்சக்தி, கிரியாசக்தி, ஞானசக்தி, யோக சக்தி, அருட்சக்திகளாக விரிந்து வாழ்வளிப்பதாய் இருக்கின்றதாம்.

அருட்பெருஞ்ஜோதியால் நம் வள்ளற்பெருமான் அருட் பெருஞ் "சக்தியைப் பெற்றுள்ளதால், அது எல்லாவகை வல்லப சக்திகளையும் இவர்க்கு வழங்கியுள்ளதாம். சாதாரணமாக ஒருவன், ஏதோ ஓர் வகையில் சிறிது விசேட சக்தி அல்லது ஆற்றலைப் பெற்றுவிட்டால், அதற்காக பெரிதும் தற்பெருமையை யும், கர்வமும், பிறரை மதியாமையும் அடைந்து விடுகின்றான்; இவற்றால் அவன், தன்னையறியாமலேயே தன்னைச்சூழ, சிக்கல் வலையை ஆக்கிக்கொண்டு, அதிலேயே சிக்கிக்கொள்ளுகின்றான்; தப்பிக்கொள்ளும் வகையறியாது பேரவத்தையுறுகின்றான்; முடிவில் இன்னலுற்று மடிகின்றான். இதற்கு மாறாக நம் அருட் ஜோதி வள்ளலார் பெறற்கரிய அருட்பெரும் வல்லப சக்தியை முழுவதும் பெற்றுக்கொண்டும், தன்னைக் காட்டிக் கொள்ளாது, தலைவனின் புகழ்சேர் செயல்புரிந்து வருகின்றார். இதனால் இவருக்கு எந்த விதமான துன்பமும் தொல்லையும் ஏற்படுவதாயில்லையாம். இவ்வல்லப சக்தியால் எல்லை யில்லா இன்ப வாழ்வில் தழைத்துக்கொண்டிருப்பது உண்மை. இதுவே இங்கு, 'வல்லப சக்திகள் வகையெல்லாம் அளித் தெனது அல்லலை நீக்கிய அருட்பெருஞ் ஜோதி' என்று இசைத் துள்ளார்.

### 141. நான்கிடத் தமர்ந்து நல்லமு தருளல்

281. ஆரிய லகம்புறம் அகப்புறம் புறப்புறம்
282. ஆரமு தெனக்கருள் அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** இயற்கையில் கடவுள் சக்தி எவ்விடத்தும் நிரம்பி யுள்ளதாம். அப்படியுள்ள அக்கடவுளை ஏன் உள்ளபடி காண வும், கூடி வாழவும் முடிகின்றதில்லை! ஏனென்றால், கடவுள் இருவகை நிலையில், ஒன்றுக்கொன்று மாறான முறையில் அறிவதற்கு அரிதாய் இருப்பதால், புறத்தோற்றத்தில் உள்ள எதுவும், தோற்றமாற்ற அழிவுறுவதால், நிலையாக விளங்காத தால், கடவுளாகக் கொள்ளமுடிகின்றதில்லை. அதனை (புறத் தோற்ற நிலையை) இயற்கை என்றே கொள்ளுகின்றோம். இப் புறநிலைக்கு மாறாக அகத்தில் இருந்தும், அறிவரிதாய் மறை பொருளாய் இருந்தும், தோற்றக்கேடில்லாத அவ்வுட்சக்தி நிலையையே, நம்பிக்கையுடையோர், கடவுள் எனக் கொள்ளு

கின்றார்கள். அந்த அகமெய்ப்பொருள் சாதாரண மக்களுக்கு விளங்குவதாய் இல்லாததால், வெற்றுக்கற்பனை என்று ஏற்க மறுக்கின்றனர். அன்றி, அந்தக் கடவுட் பொருளைப் பெருங் குண பேராற்றல் கொண்டதாகக் கூறியும், அதனை மனிதன் போன்ற விக்கிரக வடிவில் அமைத்தும், அடையாளக் குறிப் பொருளாய் ஆக்கியும், மந்திரக் கட்டங்களில் எழுத்துருவாய்த் தீட்டியும், அவற்றையே கடவுள் இயல்பினதாய்க் கொண்டு வழிபட்டுவரச் சொல்லுகின்றார்கள் பலர். அப்படி நம்பிக்கை யோடு செய்வோர்க்கு நன்மையும் ஓரளவு ஏற்படுகின்றது. நம்பாதவர்கள் எந்த நன்மையும் பெற முடியாததால் அக் கடவுட் கொள்கை ஏற்றதல்ல, மூடமானது என்று கூறி மறுக் கின்றனர்; கடவுளே இல்லை என்றும் வாதாடுகின்றனர் சிலர் இவர்களையே நாத்திகர் என்கின்றனர், கடவுளை, உண்மை அறியாமலே நம்பியும் அற்ப நலன்கண்டும் வீண்போய்க்கொண் டிருக்கும் ஆத்திகப் பரம்பரையினர்.

இனி, கடவுளைப்பற்றிய விளக்கத்தைத் தெரிந்து தெளி வோம். உண்மையான, கடவுளை, அருட்பெருஞ்ஜோதி எனக் கண்டு காட்டியுள்ளார் நம் அடிகளார். இக்கடவுள் நிலையைப் பிரித்துக் காண்டல் கூடாதாம். சின்னஞ்சிறு துகள் வடிவிலும், நுண்ணுயிரிலும் அது அதுவாய் இருந்தும், உள்ளும் புறமும் நிறைந்தும் உள்ளது இந்த அருட்பெருஞ்ஜோதியாம். எதிலும், புறநிலை ஜோதியின் கூறாக இருக்க, அகநிலை அருளின் கூறாக உள்ளதாம். புறநிலையை அனந்த வண்ண பேதத்தோற்றமாய்க் காண்பதும், அகநிலையை இயற்கை ஆற்றல்களாய், உயிர் இயக் கமாய், புலன் உணர்வுகளாய், மனோ அறிவின் விளக்கங்களாய், ஆன்மசக்தி யோகசித்திகளாய் முடிவில் அருள் உண்மையாய் விளங்குகின்றதுமாம். இவ்விரு நிலைக்கடவுள் விளக்கங்களை நான்கு நான்காய்த் தொகுத்து முடிவில் அருள் அனுபவத்தில் பெற வழிவகை செய்துள்ளனர்.

கடவுளின் புறஜோதி நிலையை, அக்கினி, சூரியன், சந்திரன், நட்சத்திரம் என்னும் நான்காய் விளங்கக் காண்கின்றனர். அக நிலையைப் புறமிருந்து ஆய்கின்றபோது, இந்திரியம், கரணம், ஜீவன், ஆன்மா ஆகிய நான்கிடமாய் உணர்த்தப்படுகின்றன. இதற்குமேல் அருள்விளக்க நிலைதான் இன்பானுபவ ஆனந்தமாய் திகழ்வதாம். இந்த ஆனந்தானுபவம் அகத்திலிருந்து பெறப்படு

வதாம். ஆகவே, இவ்வகநிலையையே முதலாக வைத்து, அகம், அகப்புறம், புறம், புறப்புறம் ஆகிய நான்கில், ஆன்மா, ஜீவன், கரணம், இந்திரியம் கலந்த உணர்வைக் குறித்துள்ளார். இந் நா னிலையிலும் நிரம்பியுள்ளது கடவுளின் இயற்கை அருள்விளக்கம். இந்நிறைவு நிலையைக் குறிக்கவே, ஆர் இயல் என்ற சொற் றொடர் முன்வைக்கப்பட்டுள்ளதாம். ஆரியல் என்றால் நிறைந்த தன்மை என்று பொருளாம்.

மேற்படி கடவுளின் அகவிளக்கம் நான்கிடத்தும் நிரம்பி இருக்கின்றது இயல்பே; இயற்கைத் தன்மையே. இயற்கை யாய் இப்படி இருந்தும் யார் கடவுள் அனுபவத்தைப் பெற்றுக் கொள்ள முடிகிறது? ஆன்மநிலைக்கேறிய பக்குவமனிதன், அருள் வண்ணமாய்த்திகழும் அனுபவம் பெறும்போதுதான் கடவுணி லையை அறிந்து அடைந்தவனாகின்றான். இந்த அருள் நிலையையே அழியாத் தன்மைகொண்ட அமுத நிலையாகப் போற்றிக்கொள்ளு கின்றான். இதுவே புறநிலை நான்கும், அகநிலை நான்கும், கடந்த இடைநிலையும் ஒன்றாய்க் கூடிய நவ நிலையும் கடவுள் நிறை நிலையாகும். இத்தெய்விக நவ நிலையையே பிரணவநிலை என்ப. இவ் ஓங்கார பிரணவத்தின் உட்பொருள் அருளே என் பது உண்மை. இந்த அருணிலை கொண்டே இந்த ஜீவதேகேந் திரியம் முற்றும் அமுதமயமாகி அழியாமையுற்று ஆனந்தமாய் நிலவுவதாம். ஆரமுது என்பதும் அதன் நிறைநிலையைக் குறிப்ப தாம். அருட்பெருஞ்ஜோதிக்கடவுள் இயல்பாகவே எங்கும் நிரம்பி இருந்து வந்தாலும், நிறை அருள் நிலைபெறும் ஒரு வனுக்கே அனுபவத்தில் விளங்குவதாயுள்ளதாம்.

## 142. சூரிய சந்திர ஜோதியுட் ஜோதி

283. சூரிய சந்திர ஜோதியுட் ஜோதியென்

284. றாரியர் புகழ்தரும் அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) வான்கண்ட ஜோதியில், ஞாயிறும் திங்களும் மிக முக்கியமானவையாகப் போற்றிக்கொள்ளுகின்றனர் உலக மக்கள். அப்படி அண்டத்திற்காணப்படும் ஜோதிக்கு நிகராக நம் பிண்டத்தில், உயிரும், உடம்பும் கொள்ளப்படுகின்றனவாம்.

ஆரியர் என்ற சொல் அறிவுடையோர் என்று பொருள் படுவது * சில ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர், வடக்கிருந்து இத்தென்னகம் புகுந்த மக்கள் இனம், இங்கு பல சிறப்பு நிலை களைக் கண்டு மிக விரும்பி ஏற்றுத் தமதாக்கிக்கொள்ள முயன்றனர். ஒருவாறு அப்படியே ஆக்கியும் கொண்டனர். ஆனால் அக உண்மை, அருள் உணர்வால் மட்டும் அறிந்து கொள்ளக்கூடியதாய் இருப்பதால், புறநிலை நின்று கண்டு கற் பனை செய்துகொண்டனவெல்லாம் புறவாழ்வில் அலையுறச் செய் தனவேயாம். அமிழ்தத்தமிழ் அகவுண்மை கொண்டு பேரின் பில் வாழச்செய்வதாயும், அகஜோதி விளக்கத்தைக் கூறுவதாயு மிருக்கின்றதாம்; ஆரியமோ புறவாழ்விற்கே அதிகம் விளக்கம் தரும் வேத சாத்திரத்தைப் புகழ்கின்றது. நால் வேதம், மனிதனை அருளுக்குப் புறம்பிலே இருத்தி உழலச் செய்வதாம். அருளனுபவ வாழ்வை வழங்குவது நம் திருநான்மறை என்ப. திருவருளால், 'தான்' என்ற தற்போதம் போனவிடத்துப் பெறப்படும் கடவுள் அனுபவமே, நான்மறைப்பொருளாம். அருட்ஜோதி ஆன்ம உண்மை தலை நடு ஒளிர்வது; ஜீவ ஒளி செயல்படுவது இதய பீடத்திலாம். இதிலேயே கடவுள் ஜோதியுண்டென்றும் கொண்டனர் புற அறிவாளர்கள். இங் கிருந்துதான் சூரிய, சந்திர கலாசக்தி தேகேந்திரியத்தை விளக்கம் செய்கின்றதாகவும் கொண்டனர். இதயமே கடவுட் பீடம் என்பதும், பிரம்ம ஜோதியே, சூரிய ஜோதியுட் ஜோதியாய், காயத்திரி விளக்கமாய்க் கொண்டு போற்றியும், ஓமத்தீயில் வேட்டு நின்று ஒடுங்குவதும் புறஞானானுபவிகளின் முடிவாம். இப்படி, அருள் விளக்கமில்லாப் புறநெறிபற்றி நின்று, வாழ்ந்து முடிந்தவர்களே தம்மை, அறிவுடையோர், ஆரியர், அந்தணர், ஐயர், பூசுரர், பார்ப்பார் என்றெல்லாம் கூறிக் கொண்டனர். அருளாளர்கள் இப்படி யெல்லாம் தம்மைப் புகழ்ந்து கொள்ளார்கள். மாறாக இவர்கள் கடவுளையே தான் இவ்வுயர் விளக்கப் பெயர்களால் சுட்டினார்கள் என்பது உண்மை. இங்கு, வடவர், தென்னவர்களைப்பற்றியோ அவர் களின் இயல் செயல்பற்றியோ விளக்க நேர்ந்ததல்ல. அகம், புறம் விளக்கும் கடவுட்ஜோதியின் உண்மையும் அவற்றால் அடைவுறும் பேறும் குறித்து விளக்கவேயாம்.

---

* அகமெய்யறிவுடையவர்களே உண்மையில் ஆரியர்கள் ஆவர்.

'சூரிய சந்திர ஜோதியுட் ஜோதி என்று ஆரியர் புகழ்தரும் அருட்பெருஞ் ஜோதி' எனக் கூறியதன் உண்மையை அறிந்து கொள்ளுவதே முக்கியமாம். இந்த அருட்பெருஞ் ஜோதியை ஆரியர் புகழ்கின்றனராம். அருட்பெருஞ் ஜோதியை அறியும் சுத்த சன்மார்க்கிதான் உண்மை ஆரியன். இவன்தானே இந்த ஜோதியைப் புகழ முடியும். ஆகையால் மெய்யான அருள் அறிவுடையோரே இங்கு ஆரியராகக்கொண்டு அமைவாம். இந்த அறிவாளர்கள் அருட்பெருஞ்ஜோதியின் சிறு சிறு கூறு களையே, சூரியனாகவும், சந்திரனாகவும், பிற ஜோதிக்கோளங்க ளாகவும், தேவராகவும், மக்களாகவும், மற்ற உயிர்களாகவும் பொருள்களாகவும் கண்டு கண்டு இயன்ற அளவு புகழ் தருகின்றார்களாம். புகழ்தருதல், புகழ்புரிதல், வாழ்த்துதல் என்பனவெல்லாம் உளநெகிழ் தயவால் உள்ளும் புறமும் தாமே சூழ்ந்துநின்று, அகப்புற விளக்கங்களைத் தந்து வாழ்வித்தலாம். இது செய்யாமற் செய்யும் பெருஞ்செயலாகும். இதற்குச் சூழுயிர்க்குரிய அன்பு செய்திருத்தலே உபாயமாம்.

## 143. பிறிவிலா அறிவே வடிவம்

285. பிறிவே தினியுனைப் பிடித்தன முனக்குநம்

286. அறிவே வடிவெனும் அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) இங்கு, பிறிவு என்ற சொல்லின் பொருள் விளக்கம், அகநின்று காண வேண்டும். அப்படி அல்லாது, இந்தப் பிறிவு, பிரிவு என்பதன் திரிபே என்று மேலெழுந்தவாரியாக நோக்கி விடக்கூடாது. மனிதன், கடவுள் உண்மையையும், தன் உண்மை யையும் கண்டு, கடவுணிலை வாழ்வுபெற வேண்டியுள்ளான் இப் பிறப்பில். அருள் ஞானம் அடையாதவரையும், தான் கடவுளுக்கு அயலாக, வேறாக இருப்பதாய்த்தான் எண்ணி, அக்கடவுளைக் கண்டு ஒன்ற விழைகின்றான். இந்த வகையில்தான் சமய மத மார்க்கங்கள் பலவாகிய நெறிமுறைகளை வகுத்து வழங்கியுள்ளன வாம். அவைகளிற் பற்றொடு சென்றும் முடிவில் கண்டது, கட வுளை யொன்றிவாழும் நிலை அல்ல, எதிலோ கலந்து மறைந்து போன நிலையேயாம். இம்முடிவையே வேதாந்தம், வேறுவகை யில் ஐக்கியானுபவமாக விளம்புகின்றது. யாதெனில், மனிதன் உண்மையில் கடவுள் அம்சமாக ஆன்மநிலையில் இருக்கின்றனன்

எனவும் அவ்வான்மாவும் உண்மையில் பரமான்ம அம்சமாய் உள்ளதெனவும் கூறி, இவன் தேகப்பற்றற்று ஆன்ம பரமான்ம ஐக்கியபாவனையில் நின்று புற உடலை கழற்றிவிட வேண்டும் என் கிறது. தேகம் நீங்கிவிட்டபின், ஜீவான்ம பரமான்ம ஐக்கி யானுபவம் ஏற்பட்டு நிலைப்பதாகவும் சொல்லுகின்றனர். இதுவும் உண்மை அல்ல. உடலில்லா ஆன்மாவுக்குப் பரஞானமும், வாழ்வும் இல்லாது ஒழிந்துபோவதே உண்மை.

இன்று அருள் மெய்ஞ்ஞானத்தால் உண்மையை உள்ளபடி அறிகின்றோம். கடவுள் ஒருவரே உண்மையில் அகமிருந்து யாவு மாய்த் தோற்றியும், விளங்கி நின்றும், நீங்கி மறைந்தும் கொண் டுள்ளார் எனத் திருவருளால் உணர்த்தப்படுகின்றோம். இதனால் நாம் யார் என்ற வினாவிற்கு, அக்கடவுளே நமது அக ஆன்மவடி வாயும், பிற உடல் உருவாயும் இருப்பதாக அறிகின்றோம். எனவே, கடவுள்தானே நாமாய் உண்ணின்று விளங்கிக்கொண் டிருக்கின்றதுதான் உண்மையாம். கடவுளுக்கு அயலாக பிறிது ஒன்றோ நாமோ இல்லையாம். இந்த ஒன்றான, நாம் வேறாய் இல்லாத கடவுள்ஞானம் இப்பொழுது அருட் பெருஞ்ஜோதி யாய் வழங்கப்பெற்றுள்ளோம். இதுதான் நாமும் கடவுளும் இயல்பிலே இரண்டு படாது, பிறவாகிய பிறிவு நிலை அறியா துள்ளதாம். இப்படியுள்ள கடவுள், நம்மைவிட்டு எப்படி நீங்க முடியும்? அப்படியுள்ள அவரே, 'உனக்கு, நம் அறிவே வடிவம்', என்கின்றார். கடவள் அருள் ஞான்மாகிய, ஒன்றுதான் நாமாய் விளங்குகின்றதாம்.

இரண்டு தனிப்பொருளாய் இருந்து பின்னர் ஒன்று பட் டிருந்தால்தான் மறுபடியும் பிரிக்க முடியும்: அப்படியில்லை, கடவுள் என்னும் ஒரு பரம்பொருள். இதனால்தான் அத்துவித மான கடவுள் உண்மையை நாமாக அறிந்து பற்றி நிற்கும்போது பிறிவு என்னும் பிறவாகிய நிலை இல்லை என்பதைத் தெளிவாக்கு கின்றதாம். மற்றபடி, பிரிவு இல்லை என்பதாக கொள்ளுவதில் சிறப்பிலை. ஏனெனில் இனிமேல்தான் பிரிவு இல்லை என்றால், முன்பு பிரிந்து இருந்ததாக இடம் ஏற்படும், கொள்ளநேரும். அப்படி எல்லாம் பிரிவு நிலை குறிக்காமல், அத்துவித உண்மை குறிக்கவே இந்தப் பிறிவு என்ற சொல்லை வழங்கியுள்ளார்.

இங்கு, 'உனக்கு, நம் அறிவே வடிவு' என்றதன் கருத்தைச் சற்று ஆழ்ந்து பார்க்கவேண்டும். கடவுளுடைய அருள் ஞானம்

தான் நமது உண்மையான நிறைவடிவமாம். இது வேதமகா வாக்கியமான 'பிரஞ்ஞானம் பிரம்மம்' என்பதற்கு முற்றிலும் மாறுபட்டதாம். இதன் பொருள் நம் அறிவே கடவுள் என்ப பதாம். நம் அறிவு, என்ன அறிவு! மன அறிவு, பகுத்தறிவுக்கு மேற்பட்ட் ஆன்ம அறிவு, எதுவுமே எல்லாம் வல்ல கடவுள் அறிவாகாதே! அருள் உண்மை கொண்டு விளங்கும் ஞானம், மெய்ப்பொருள் அனுபவ ஞானமே நம் வடிவென்பது குறிப்பு. இந்நிலையிலிருந்து அருளொடு ஒன்றி வாழ, உடல் விடாது, சுத்த அருள், ஒரு வுருவாகி விளங்கல் அனுபவமாம்.

## 144. எஞ்சேல் உலகில் அஞ்சேல்

287. எஞ்சேல் உலகினில் யாதொன்று பற்றியும்
288. அஞ்சேல் என்றருள் அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** எஞ்சேல், என்று முதலில் கூறியுள்ளது, வாழ்க என வாழ்த்தாக அமைவதாம். ஆசி கூறி, நலமே வாழ்ந்து கொண்டிருப்பாயாக என்று சொல்லுகின்றதாம் அருட்பெருஞ் ஜோதி. எஞ்சேல் என்பதன் விளக்கம்: சுத்த தயவுச் செயல் புரிந்துகொண்டு, என்றும், எவ்விடத்தும், ஒழிவற நின்று கூடுதலும், குறைதலும் இல்லா நித்த நிறைவோடு விளங்கிக் கொண்டே யிருப்பாயாக என்று விரிந்த பொருள்தந்து நிற்கின்ற தாம். இப்படி நிறை ஆசியொடு நிலவும் இவர்க்கு இவ்வுலகில் என்றும் நன்மையே சேரும் என்பது திண்ணம். ஆகையால் இவர் எது குறித்தும் எவ்வளவும் அஞ்ச வேண்டியதில்லை. இதனால்தான், வாழ்க என்று வாக்களித்துவிட்டு, மேலே ஒன்றும் கூறாது இருந்திருப்பதாயின், வருங்கால நீண்ட வாழ்வில் ஏதேனும் தொல்லையும் துன்பமும் சூழ்ந்து, அவ் வாழ்வையே கூட வெறுத்துவிட நேர்ந்துவிடுமோ என்ற ஐயமும் அச்சமும் ஏற்படாது உறுதியோடு கூடிய அமைதியும், ஆனந் தமும் விளங்கவே அஞ்சேல் என அபயமும் வழங்கப்பட்டது இரண்டாம் அடியில்.

அருட்பெருஞ்ஜோதியின் ஆதரவால் பெற்ற அபயம் நிறை யின்ப வாழ்வு தருவதாம். ஈதல்லாது, உடல்வலிமையாலும், மனோதிடத்தாலும் பிறர்வாக்காலும், தெய்வ வரத்தாலும் மற்ற பல சகாயங்களாலும் ஒருவன் எதற்கும், என்றும் அஞ்சாது

இருக்கவும், இன்பமாக வாழவும் முடியாது! அறியாமையோடு கூடிய மூடநெஞ்சுறுதியால், கொடுஞ் செயல்புரிவதில் அஞ்சாமை கொண்டிருப்பதும், • ஆபத்தும், அழிவும் வருவது தெரிந்தும் அஞ்சாது எதிர்த்து நின்று அழிந்து ஒழிவதும் அறிவுடைய செயலாகாது. தன்னேரில்லாப் பேராற்றல் படைத்த எல்லாம் வல்ல நம் அருட்பெருஞ் ஜோதியின் அடைவால், நம் வள்ளற் பெருமான் அஞ்சாமையோடு, என்றென்றும் எஞ்சாது பேரின்ப சித்தியுடன் வாழ்ந்து கொண்டிருக்கும் பேறு பெற்றுள்ளார் என்பது சத்தியம்.

## 145. மாண்டுழலாது ஆண்டுகொண்டது

*289.* மாண்டுழ லாவகை வந்திளங் காலையே

*290.* ஆண்டுகொண் டருளிய அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) உலகம் இதுவரை கண்டறியாத ஒரு திருநிறை மனிதனை, நம் வள்ளற்பெருமான் வடிவில் காண நேர்ந்தது. அப்படி கண்டிருந்ததும் முழுமையர்ன நிறை நிலையன்று, ஏகதேச புறநிலை வடிவேயாகும். கருவிலே திருவுடையார் எனச் சிலரைப் போற்றிக் கொள்ளுகின்றனர் சில மக்கள். உண்மையிலேயே இவரைத்தான் அப்படிப் போற்றிக் கொள்ள லாம். எப்படி எனில்: இவரது பிறவி இரகசியமே திருவருளின் வெளியீடாகக் கண்டு கொள்ளப்படுவதால் எல்லா உண்மையும் ஓரளவு கண்டு கொள்ள முடிகின்றதாம்.

தமிழன் கண்ட கடவுள் உண்மை, தமிழ் மொழியின் அமைப்பிலேயே வெளியாக்கிவிட்டான். அந்தத் தமிழ்க்கடவுள் சிவமாக விளக்கப்பட்டுள்ளது. அந்தச் சிவம், அன்பருளின்ப வடிவினன் என்பது யோகஞான சித்தர்களின் அனுபவம். அப்படியான ஒரு சிவானுபவப் பெரியாரின் சம்பு பட்சத் திரு வாக்கால், ஓர் அன்னை யுதரத்துக் கருவுரு வானவர் நம்பெரு மானார். பிறர்போன்று ஆண்பெண் கூட்டுறவில் உருவானவர் அன்று இவர்! உண்மைச் சிவானுபவம் பெற்ற சிவயோகியர், உளத்தே சிவநிலை நின்று அருளால் பெருகிய திருவாக்கு அளித்த நொடியிலே கருவுருவாவதுதான் சம்புபட்ச சிருஷ்டி என்று கூறுவர். அக்கருத்தோற்றம் நிகழ்ந்த நாள், சிவ பெருமானுக்குரிய மார்கழி மாதத் திருவாதிரையாம். அது

சித்திரபானு ஆண்டு ஆகும். அன்று அளிக்கப்பெற்ற திரு வாக்கு, 'உலகெல்லாம் போற்றும் சுத்த சன்மார்க்க உத்தம புத்திரனை நீ பெறுவாயாக' என்பதாம். அன்று உருவாகத் தொடங்கிய கரு நிறைவெய்திப் பொலிவோடு இவ்வுலகில் வெளிப்பட்ட நாள், சுபானு வருடம், புரட்டாசி மாதம், வளர் பிறைத் துதியையும், சித்திரை நட்சத்திரமும், நவராத்திரியின் இரண்டாம் நாளும் கூடிய தினமாகும். அந்நாள் மாலை பிறை தோற்றிய அந்தி வேளையில் பிறந்தார் வள்ளற் குழந்தை. அறி வறிவாய்ச் சிறுபோதே தில்லையிற் ஜோதிகண்டு சிரித்ததும், பாலப்பருவத்தே கண்ணாடியில் தணிகை முருகனைக் கண்டு துதித் ததும், திருவொற்றியூரில் அருள் உண்மை கண்டு பெரு நெறி பிடித்தொழுக முனைந்ததும் உலகம் ஓரளவு அறிந்தனவேயாம். அருள் அனுபவம்தான் இவர்க்கு, அருட்பெருஞ் ஜோதியின் உயர்நிலைக்கு தூக்கிவிட்டதாகும். சிறுபோது தானே உள்ளொளி யாயிருந்து ஆட்கொண்ட அருட்பெருஞ் ஜோதி இவரை அழியாத்திருவுருவில், திருவருட்பிரகாச வடிவில் என்றும் விளங்க வைத்துவிட்டதாகும்.

சிறுகாலை ஆட்கொண்ட தேவதேவே, அறியாப் பருவத்தே எனை மணந்தான், பிறநெறியிற் செல்லாவண்ணம் எனைத் தடுத் தாண்டான், எம்மையினும் உனைவிட்டுப் பிரியேன், உன்னைக்கை விடேன் கைவிடேன் என்பனபோன்ற எத்தனையோ உறுதிமொழி பெற்றுத் தம் அழியாவாழ்வை நிச்சயித்துக் கொண்டார். முடிவில் அந்த முத்தேக சித்தியோடு அழிவின்றி வாழும் நிலையும் எய்தி விட்டார். இவ்வளவும் அனுபவம் வருமுன்னே வந்ததாகக் கூறி விட்டுப்போய் விடவில்லை. அனுபவத்தில் அந்த அழியாநிலை எய்தி விட்டதையும் திருவருட்பா பாடல்கள் பலவற்றிலும் காண் கின்றோம். அன்றே அந்த ஓர் (இராமலிங்க) ஆன்மாவுக்கு அருட் ஜோதி வழங்கி, அவ்வருள் வடிவில் நிலவச்செய்து விட்டாராம் அருட்பெருஞ்ஜோதிபதி. ஆதலின், மேற்கொண்டு இறக்க வேண்டிய நிலை இல்லையாகிவிட்டதாம். இதே மாண்டுழலாவகை மற்ற ஒவ்வொரு பக்குவ ஆன்மாவுக்கும் நிச்சயமாகி விட்டது அன்றே முதல். ஏனென்றால் ஒன்றான கடவுளே திருவருளால் அனைத்து ஆன்மாக்களுமாய் இருப்பதாலும், எல்லா ஆன்மாக் களுக்கும் ஆனந்தம் அனுபவப்படவே திருநடனம் அல்லது ஐந் தொழில் அருட்பெருஞ்செயல் புரிந்து கொண்டிருப்பதாலும், ஒரு ஆன்மாவில் ஏற்பட்ட அழியாநிலை வாழ்வு அனுபவம், மற்றெல்

லாவற்றிற்கும் உண்மை ஆகிவிட்டுள்ளதாம். அந்த உண்மைதான் பக்குவகாலத்தே எவரும் பெற்றுக்கொள்ளக்கூடியதாய் இருக்கிறது சத்தியமாம்.

## 146. பற்றொடு அற்றமும் நீங்கியது

*291.* பற்றுக ளனைத்தையும் பற்றறத் தவிர்த்தென

*292.* தற்றமு நீக்கிய அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** உலகில் எந்தப் பொருளும், எந்த உயிரும் தனித்து, ஒன்றையும் பற்றாது இருக்க முடியாது. அண்டங்களும் பிண்டங்களும், அணுக்களும், உயிரினங்களும், ஆற்றல்களும் பலவகையில் பற்றிக்கொண்டு விளங்குகின்றனவாம். இவைகள் எல்லாவற்றையும், ஆக்கியும், காத்தும், அழித்தும், பக்குவம் வருவித்தும் அருள்பாலித்தும் கொண்டுள்ள மேலான பரம்பொருள் ஒன்றே எந்தவித பற்றுதலுமில்லாமல், எதனாலும் தீண்டப்படாத நிலையில் அந்தரத்தே தனித்து இலங்கிக் கொண்டிருக்கின்றதாம். அப்படித் தீண்டரிய வெளியிலே திருநடனம் புரிந்து கொண்டிருத்தலினால், அந்த ஆண்டவரை வேறு யாராலும் அடைய முடிகின்றதில்லையாம். ஆகையால்தான் கடவுளைப் பற்றற்றான் என்று சொல்கின்றனர். அவர் தீண்டாத வெளியில் வளர் தீண்டாத தெய்வம் எனப்படுகின்றார்.

"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு."

உலகியல் உடற்பற்று காரணமாக, புலபோக்பற்றும் அதனால், மற்றெல்லாப் பற்றுகளும் தழைக்கின்றனவாம். இந்தப் பற்றுகளை எல்லாம் விட்டு விடுவது எப்படி? எப்படி என்றால், பற்றற்றானின் பற்றைமட்டும் பற்றிக்கொள்ளுவதாலாம். இங்கு குறிக்கப்படுகின்றானே பற்றற்றான் அவன் யார்? இந்த பற்றற்றான் கடவுள் அல்ல என்பது நிச்சயம். கடவுள்தான் பிறஎவராலும் பற்றமுடியாதவன் ஆச்சே. ஆகையால் அந்த பற்றற்ற பரனைப் பற்றச் சொல்லவில்லையாம். பின்னர் இங்கு சுட்டப்படும் பற்றற்றான் யார் என்றால், உண்மைத் துறவுடையோர் என்பர். இத்துறவியினுடைய உறவால், சாது சங்கப் பழக்கத்தால் உலகியற் பற்றுகளை நீக்கிக் கொள்ளலாம்

என்கின்றனர். இப்பற்று நீக்கம் பெறுவதால் என்ன பெரிய நன்மை அடைவான் ஒருவன்? தேகாதி பிரபஞ்சப் பற்றை உதறித்தள்ளிவிட்டவன், பரமனின் பதத்தைப் பற்றி நின்று, அதிற் கலந்து விடலாம் என்பது முன்னோர் கருத்து. இவனுடைய கடவுட் பற்று, அக்கடவுளை அடைவித்து வாழ்விப்ப தாயில்லை. அந்தப் பற்று கடமையை மறக்கச் செய்து, அடைய முடியாததை (எண்ணி எண்ணி) இறுதியில் இறந்துபடத்தான் செய்வதாம்! ஒருவன் இங்கிருந்து சூரியனை அடையக் கருதி வீண்போவது போன்றாம். ஆகவே, பற்றற்ற கடவுளைப்பற்றக் கருதுவதும், துறவியைப் பற்றச்சார்வதும் பயனின்றாம். மேலும், கடவுள் ஒருவரை அல்லாது எந்தத் துறவியைப் பற்றற்றான் என்று சொல்லமுடியும்.

அக உண்மைக் கடவுள் நிலையைத் தெரிந்து கொள்ளுவதற்கு உதவியாக, தயாவொழுக்கமும் சத்விசாரமும் உண்டாகத்தான், சாதுசங்கமும், துறவோர் உறவும் மேற்கொள்ளலாம். உண்மை யில் பற்றற்ற பரம்பொருள், தீண்டரிய அகவெளியில் இருந்து கொண்டு, தன் அருட்பெருஞ்சக்தியையே, உலகில் யாவுமாய்த் தோன்றச் செய்து ஆண்டு வருவதாக அறியலாகின்றதாம். ஆகையால், பற்றற்ற பரமனின் பிரிவற்ற அருளே யாவுமாய்த் தோன்றியும், அவ்வருளாலே ஆளவும் படுகின்றதாம். ஒருவன் அருட்பெருஞ் ஜோதி ஞானம் அடைகின்றபோது, தான் வேறா யில்லாது, அதுவே தானாய் அருளால் விளங்குவதாய் உணர்ந்து அந்தப் பற்றற்றானோடு அத்துவிதமாய் இருக்கக் காண்கின்றான். இது இவனது பற்றற்றானோடு பற்றாமே பற்றியுள்ள நிலையாகும். இந்நிலை நின்றே, கடவுள் பேருலகுயிர்ப் பொருள்கள் யாவையும் ஆண்டு அருள்பாலித்துக்கொண்டேயுள்ளார். இப்படியுள்ள பரமனோடு இரண்டற்றிலங்கும் ஒருவனே, பற்றற்றானைப் பற்றி யுள்ளவனாகவும் கொள்ளப்படலாம். இவன் இறையுட்கலந்து, இல்லையாம்படி மறைந்து போவதில்லை; பதிலாக இவன் இறைவனோ டிறைவனாகவே இருந்துகொண்டு நிறை இன்ப சித்தி வாழ்வில் நீடு விளங்குகின்றான் என்பது உண்மை. இதனையே இவ்வடிகள் குறிக்கின்றனவாம். 'பற்றுகள் அனைத் தையும் பற்றறத் தவிர்த்து எனது அற்றமும் நீக்கிய அருட் பெருஞ்ஜோதி' என்கின்றார். பற்றுகளை எல்லாம் முழுமையாக (பற்று முற்றும் அற்று)ப் போகும்படி தவிர்க்கப்பட்டுவிட்டதாம். அந்தப் பற்றுகளை எல்லாம் தீர்த்துவிட்டதோடு, அற்றமும்

நீக்கிவிட்டதாம். அற்றம் என்றால் குற்றம், குறைவு, மறைவு. அழிவு, சோர்வு, துன்பம் என்றெல்லாம் பொருள்படுவதால், அற்றம் நீக்கியதாகச் சொல்லும்போது இவ்வளவும் அடியோடு ஒழித்து விடப்பட்டன என்று ஆம். இதனால்தான் இவர் அருளம்பலத்திலிருந்து நிறை இன்ப அருளாட்சி புரிந்துகொண் டுள்ளார் என்பது போதரும்.

## 147. சார்பு விடுத்த அமயம் தோன்றுவது

293. சமயம் குலமுதற் சார்பெல்லாம் விடுத்த
294. அமயந் தோன்றிய அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) சமயம், மதம், இரண்டும், கடவுள் அறிவு, கடவுட் கொள்கை என்ற பொதுவான கருத்தில் கொண்டுள்ளனர் மக்கள். அருள் உண்மை விளங்காத போது கற்பனையிற் பெற்ற கடவுள் அறிவும், அதனைச் சார்வதற்கான கொள்கை கோட்பாடுகளும் தவறானவைகளேயாம். இவ்விரு சொற்களின் உட் பொருளை ஆய்ந்து பார்த்தால் விளங்கும் கருத்து சற்று தெளிவு தரும். ஆனால் அருட் ஜோதியில்தான் உண்மைமுற்றும் உள்ளபடி அறிய வும் அடையவும் கூடும், அகப்பொருள் விளக்கம்: சமயம்= ச-மயம்,=எங்கும் நிறைந்து யாவும் இறைமயமாய் விளங்கும் அறி வாம் உணர்வுதான் சமயமாம். இதுபோல், மதம்=மதியாகிய அறிவு காட்டும் வழிமுறை. அருள் நிறைவில் தான் உண்மை ஞானமும், வழிவகையும் இன்னவை என விளங்குதல் அனுபவம்.

ஆகையால் கற்பனையிற் கிளைத்துள்ள சமயச்சார்புகளையும், குல கோத்திர, ஜாதி, இனம் என்ற பற்றுகளையும் கடந்து, ஒன்றாம் அருட்பெருங் கடவுள்தானே யாவுமாய் விளங்கும் உண்மை கண்டு, அன்பொடு கூடி வாழ வேண்டுவது மக்கள் கடமையாகும். மேற்படிப் புறச்சார்புகளை எல்லாம்விட்டு, அருள் வேட்கையோடு அகநின்று வேண்டும்போதுதான், அந்த அருட் பெருஞ்ஜோதிக் கடவுள் ஞானமும், அதனை அடைந்து வாழும் சுத்த சன்மார்க்கமும் நன்கு விளங்கும். நம் வள்ளலார் இப்படி யிருந்த அமயம்தான் இந்த அருட்பெருஞ்ஜோதி யுண்மையைக் கண்டு அடைந்ததாக ஈண்டு குறிக்கின்றார். இங்கு அமயம் என்பது பொழுது, தருணம் அல்லது சமயம் ஆம். ஆகையால் இந்த அமயமாகிய சமயம் காலத்தை யுணர்த்துவது முன் குறித்த

சமயம் கடவுள் உணர்வைச் சுட்டுவதாம். புறச்சார்புகளில் பற்று கொண்டிருக்கும்வரை, கடவுட் சார்பு கிடைக்காது. ஆனால், கடவுட் சார்பை அடைய புறச் சார்பை நீக்கிக்கொண்டு, பற்றாது இருந்துகொண்டு புறத்தே தயவுச்செயல் புரிந்துவரல் வேண் டுமே அல்லாது, புறத்தை முற்றும் வெறுத்துத் துறந்து விட்டு அகம் அடைய விரும்பினால், உள்ளொடுங்கி மறைந்து வாழ்வற்றுப் போகநேரும். உண்மையில் கடவுள் ஒருவரே நாம் ஒவ்வொருவருமாய்க் கூடாதே கூடி உள்ளிருந்து விளங்க லின், நாம் அவராய் அத்து விதமாய்ச் சாராதே சார்ந்து இருந்து கொண்டு, அருட்செயலோடு அவர் வாழ வாழ்கின்றோம் நாமும்.

சகல பற்றுக்களையும் நீக்கிக்கொண்டு, அக நெகிழ் அன்புடன் இருக்கும் அமயம், அந்தரத்திருந்தாடும் அருட் பெருஞ்ஜோதி பதியின் கூட்டுறவு ஆகிய சார்பு கிடைக்கின்றதாம். இதனால் அருளின்பப் பெரு வாழ்வு சித்திக்கின்றதாம்.

## 148. மறை ஆகமங்களால் ஆய்தற்கு அரியது

**295. வாய்தற் குரித்தெனும் மறையா கமங்களால்**

**296. ஆய்தற் கரிய அருட்பெருஞ் ஜோதி**

**(உ-வி)** வேதங்களும் ஆகமங்களும் எதற்காக ஆன்றோர் களால் படைக்கப்பட்டன? சிறந்த பிறப்பு எய்தியுள்ள மக்களினம், இப்பிறப்பில்தானே மேலான கடவுள் உண்மையை உணர்ந்து கொள்ளவும், அக்கடவுள் அருளால் பெறலரும் பெரிய இன்ப வாழ்வு அடையவும் வேண்டுமென்றுதான், அம்முன்னோர்த் தலைவர்கள், அவ்வேதாகமங்களை ஆக்கி வழங்கியுள்ளனர். இக் குறிப்பை உணர்த்தவே இங்கு மறையாகமங்களுக்கு முன்னால் 'வாய்தற் குரித்தெனும்', என்ற சொற்றொடர் நிறுவப்பட்டுள்ளது. வாய்தல் என்றால் சித்தித்தல் அல்லது அடையப்பெறுதல் என்பது பொருளாம். அம்மறையாகமங்களாற்றான் சித்தி பெறற்கு உரிமையுண்டு என்பது அவர்களின் கருத்து.

வேதங்கள் கடவுள் உண்மையை விளக்கியும், விரித்தும், கற்பனைகளாற் குறிக்க முயன்றும் ஓர் எல்லைக்குமேல் ஒன்றும் கூறமுடியாமல் மௌனமாகி விடுகின்றனவாம். ஆகமங்கள் கடவுளை அடையும் மார்க்கத்தையும் முறையையும் பற்றி சாதனா

சாத்திய இயல்களைக்கூறி படிப்படியாக மேலே சென்று பதி ஐக்கியமுறும் அல்லது பதியோடு ஐக்கிய முற்ற முடிவைப் புறத் திருந்து புகழ்ந்து நின்று விடுகின்றன. ஆகையால் அவற்றைக் கொண்டு மக்கள் கடவுளை உள்ளபடி தெரிந்து கொள்ளவும் முடிய வில்லை; அக்கடவுள் அனுபவத்தோடு உலகில் வாழவும் முடிய வில்லையாம். வாய்தற்குரியதெனக் கருதியது அனுபவத்தில் வாய்க்க வில்லை என்பது தெளிவு. மனிதன், வேதாகம நெறிபற்றிச் சென்று, அறிதற்கரிய கடவுட் கலப்பில் மறைவதேயன்றி மறை யாது கடவுட்சித்தி பெற்று வாழமுடியாது என்பது அருட் பெருஞ் ஜோதியால் நன்கு விளங்குகின்றது.

## 149. எல்லாம் வல்ல உனையல்லா தில்லை

297. எல்லாம் வல்லசித் தெனக்களித் தெனக்குனை
298. அல்லா திலையெனும் அருட்பெருஞ் ஜோதி.

**(உ-வி)** தனித் தலைமைப் பெரும் பதியாகிய இறைவன் தான் எல்லாம் வல்லான். மற்றவர்கள் எவரும், எக்காலத்தும் அந்த ஒப்பற்ற இறைவனுக்கு ஒப்பாகார். ஆகையால், பிற எந்தத் தேவர்களையும் மூவர்களையும் சித்தர்களையும் முத்தர் களையும் மற்ற எவரையும் துணையாகக் கொண்டு பெரும் பேறு அடைந்துவிட முடியாது என்று அறியப்படுகின்றது. உண்மையை அறியாதாரே ஏனையோரைப் பெரிதாக மதித்து அவர்களின் துணையை நாடிப்பெற்று, ஏதோ ஓரளவு சித்திகள் பெற்றாலும் கூட, அழியா இன்ப அருட்பெருஞ் சித்தியை அடையக்கூடாது வீண்போகின்றார்கள். இன்றளவும் மக்கள் எவர் எவரையோதான் மதித்துக்கொண்டாடுகிறார்கள் என்றால், அதற்குக்காரணம் அந்த எல்லாம் வல்லானாகிய ஒருவனை அறி யாததேயாம். அந்த ஒருவனே தன் ஏகதேசத்தை மற்ற மற்ற எவருமாய்த் தோற்றமாற்றம் செய்து கொண்டுள்ளான் என்பது உண்மையாம். ஆகையால், புறநிலையில் மயங்கி நின்று வேண்டும்போது அற்பசித்தியே பெறக்கூடியதாயும், அந்தப்புற நிலையை மதியாது உள் விளங்கும் பரநிலையை மதித்து உள் நெகிழ வேண்டினால், அகமுடையானின் பெருந்துணையும் அதனால் பேரின்ப சித்தியும் பெறமுடியும் என்பது நிச்சயம்.

அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர்தான் எல்லாம் வல்ல இறைவர். அவரே நமக்கு எல்லாம் வல்ல சித்தியை வழங்கு

கின்றவர் ஆவர். நம் வள்ளலார், தமக்கு அந்த எல்லாம் வல்ல சித்தியை அளித்தது அருட்பெருஞ்ஜோதி இறைவரே என ஈண்டு குறிக்கின்றார். அந்த அருட்பெருஞ்ஜோதியே இவர்க்கு எல்லாமாய் இருக்கின்றது. ஆகையால், இவர் காண்கின்றது, உள்ளிருந்து விளங்குகின்ற அவ் அருட்பெருஞ்ஜோதியே வேறு வேறு வண்ணங் கொண்டு திகழ்வதாய் உணர்கின்றார். இதனால் தான் இவர் மற்றவர் யாரையும் போற்றிக் கொள்ளவுமில்லை, தூற்றித்தள்ளவுமில்லை; அதற்குப்பதிலாக இரக்கத்தோடும் தயவோடும் எவரையும் தேற்றிக்கொண்டும் மேனிலைக்கு ஏற்றிக் கொண்டும் இருந்தார்; இருக்கின்றார்; என்றும் இருப்பார், இதுவே அவரது உண்மையாம்.

பிறரையும், பிறபொருள்களையும். பெரிதெென நம்பிப் பின்னர் அவர்களும் அவைகளும் பிரிந்து மறைந்துபோக வீணிற் கலங்க நேரும். ஆகையால் உண்மை அல்லவற்றை நம்பி வீண்போதல் கூடாது. 'நம்பினோர் கெடுவதில்லை, நான் குமறைத்தீர்ப்பு', என்ற பழமொழி வேதநெறியாளர் கூற்று. அழிவற்று அருளொடு விளங்குகின்ற ஒன்றைத் துணைகொண்டால் தான் உண்மையில் அழியாதிருக்கக்கூடும்; அப்படி இல்லாது, மற்ற எதையாவது நம்பினால் எப்படிக் கேடுறாது இருக்க முடியும்? ஆகவே அடிகளார் கண்டு, துணை எனக்கொண்டு விளங்கும் அருட்பெருஞ்ஜோதி ஒன்றையல்லால் வேறு இல்லை என்பது சத்தியம்.

### 150. நவை யிலா வுளத்தில் நாடிய அளிக்கும்

***299. நவையிலா வுளத்தில் நாடிய நாடிய***
***300. அவையெலா மளிக்கும் அருட்பெருஞ் ஜோதி***

**(உ-வி)** 'வேண்டுவோர் வேண்டுவதை ஈவான்' இறைவன் என்று பக்தர்கள் போற்றுகின்றார்கள். எல்லோரும் வேண்டுவன எல்லாம் பெறுகின்றார்களில்லை. ஏனெனில், ஒருவனது உண்மைத் தேவை எதுவோ அதனை வேண்டினால்தான் உடனே கிடைக்கப் பெறும். அவா, வெகுளி, மயக்கம் நிரம்பிய மனத்தினர் தமக்கு உண்மைத் தேவையை இன்னதென்று அறியாமல், தேவை இல்லாத எதையும் வேண்டினால் எப்படி வழங்கப் பெறுவர்? பெறமாட்டார்கள். இதனால்தான் இங்கு, நவையிலா,

(அதாவது, அவா, வெகுளி, மயக்கம் முதலான) குற்றம் இல்லா உள்ளத்தில் நாடிய நாடிய அவை எலாம் அளிக்கும் அருட்பெருஞ் ஜோதி என்று குறிக்கப் பெற்றுள்ளதாம்.

குற்றமற்ற உள்ளத்தில் திருவருளின் உண்மை ஒளிரு கின்றது. அப்படி அல்லாத, குற்றங்கள் நிறைந்த உள்ளத்தில் இருளே செறிந்துள்ளதாம்; இதனால், அங்கு மெய்யறிவும் மெய் யன்பும் விளங்கா. அப்படி அறிவும் அன்பும் விளங்காத உள்ளத் தில் உண்டாகின்ற, விருப்பம், இச்சை, குற்றமற்றதாய் இருக்க முடியாது. ஆகையால்தான் இருள் உளத்தார் இச்சித்தவை பெறமுடியாது போகின்றதாம்.

வள்ளல் உள்ளம் இரக்கமும் தயவும் நிரம்பியதாகும். அன்பு ஒளி நிரம்பிய உள்ளத்தில் நவை இருளுக்குச் சிறிதும் இட மில்லையாம். இவர் எதையும், தயவினால் பிறர் நலம் கருதியே வேண்டுகின்றார்: ஆகையால் அவரது வேண்டுகை எவ்விதத் தும் புறக்கணிக்கப்படுகின்றதே யில்லை; உடனுக்குடன், வேண்டின எதனையும் வழங்கப்பெறுகின்றார் என்பது உண்மை.

## 151. கூற்றுதைத்து ஆற்றல் அளித்தது

301. கூற்றுதைத் தென்பாற் குற்றமுங் குணங்கொண்
302. டாற்றன்மிக் களித்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) கூற்றை உதைத்தல் என்பது, மரணத்தை யொழித்தல், இறப்பை நீக்குதல் என்று பொருளாம். கூறு+உ=கூற்று, அதாவது உயிரையும் உடலையும் இருகூறாய்ப் பிரிப்பது; மரணம்தான் இப்படிப் பிரித்து விடுகின்றதால் கூற்று வனாகக் கற்பனை செய்துள்ளனர். மரணத்தை முற்றும் நீக்கி விடுவது, இறப்பற்று இறவாமல் இருப்பது பற்றி இதுகாறும் எவ்வளவோ முயற்சிகள் செய்யப்பட்டுள்ளனவாம். அருட் பேராற்றல் பெற்றாரே, அதுகொண்டு இறப்பையொழித்தலும், மேற்கொண்டு, அற்புதச் சித்திச்செயல் புரிந்துகொண்டு அளவு கடந்த நெடுங்காலம் வாழ்ந்து கொண்டிருக்கவும் முடியும் என் பதற்கு நம் வள்ளலாரே சான்றாக உள்ளார். பிறசிலர், சமாதி நிலையில், உயிர் ஒடுங்கிச் செயலற்றுக்கிடக்கின்றவர்கள், இற வாமல் இறந்துகிடக்கின்றவர்களேயாவர். சிலர், இறந்தபின் புக ழ்பில் வாழ்வதாகக் கொள்ளப்படுகின்றனர், அவர்களும்

உண்மையில் இறவாதவர்கள் அல்லர். மற்றுஞ் சிலரோ, உடற் பற்றற்று உள்ளுணர்வுடன் இருந்து அப்படியே மடிந்துபோகின் றனர். அவர்களை ஆண்டவர் திருவடியில் ஐக்கியமாகிவிட்ட தாகவும், மேற்பிறவாநிலை எய்தி விட்டதாகவும், அந்நிலையே அவர்தம் அழியாநிலை என்றும் புகழப்படுகின்றனர்; அதுவும் மரணமில்லா நித்யானந்த வாழ்வு நிலை ஆகாது.

இங்கு மரணத்தை வென்று, இறப்பாகிய கண்டத்தையே மாற்றிவிட்டதாகக் கூறப்படும் மார்க்கண்டனைப்பற்றிய உண்மையைச் சற்று ஆய்ந்து பார்ப்போம்.

"மூலத்துவாரத்தே மூளும் ஒருவனை
மேலத்துவாரத்தே மேலுற நோக்கிமுற்
காலுற்ற காலனைக் காய்ந்தங்கி யோகமாய்
ஞாலக்கடவூர் நலமாய் இருந்ததே".—என்றும்,

"மூலத்துவாரத்தே முக்கார மிட்டிரு
மேலத்துவாரத்தே மேன்மனம் வைத்திரு
வேலொத்த விழியை வெளியில் விழித்திரு
காலத்தை வெல்லும் கணக்கிது வாமே'.

என்னும் திருமந்திரச் செய்யுட்களால், ஒருவன் யோக ஞான சக்தியால், பக்தியால் சிரநடு சிவலிங்க நிலையில் நிலைத்திருந் தால், சிவானந்தத்தில் மூழ்கிக்கிடக்கலாகும்; அப்போது முழு மதியின் பதினாறு கலைநிறை அமுதம் பொங்கிவழிந்து, மண்ணான உடலின் மயிற்கால்தோறும் நிரம்பிடுந்தருணம், அவ் வமுத சக்தியால் தேகம் அழியாநிலைபெற்று விடுகின்றதாம். இதுதான் உடல் அழியா இறவாநிலையாம். இது பதினாறுகலைச் சந்திர சக்தியால் விளங்கலின் மாரகத்தை ஒழித்துவிட்ட மார்க்கண்டன் என்றும் பதினாறாண்டு கொண்டு விளங்கலானான் எனக் கூறப்பட்டுள்ளதாம். மேலும், அந்த சந்திரசக்தி, சிவனது இடப்பால் விளங்கும் சத்தி அம்சமாய் உள்ளதால், சிவன்தன் இடது காலால் எமனை உதைத்துத் துரத்திவிட்டார் என்றுள்ள னர். இதனால் யோக ஆற்றலால் உடல் அழியாத நிலையுறுதல் கூடும் என்பது குறிப்பாம். இதுவா உண்மையில் மனிதன் பெற வேண்டிய மரணமில்லா வாழ்வுநிலை? அல்லவாம்.

சுத்த சன்மார்க்கத்தால் ஒருவன் தயவுமயமாகி, அக நின்று வாழத்தொடங்கினால் யோகமாதி சக்திகளால் எவ்விதத்தும்

பெறற்கரிய, இறவாநிலையைப் பெற்றுக்கொள்வதோடு, அவனது குற்றம் குறை யாவையும், அருட்குண ஆற்றலாக மாற்றப் பெற்று அதனால் அருட்சித்தியுடன் கூடிய பெருவாழ்வு அடைகின்றான் என்பது வள்ளல் மூலம் வெளியாக்கப்பட்டுள்ளதாம்.

## 152. அறிவறியா நாயினை யாண்டது

303. நன்றறி வறியா நாயினேன் றனையும்
304. அன்றுவந் தாண்ட அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) அறியாப்பருவம் என்பது, உயிர் வடிவில் புலன் உணர்வு ஏற்பட்டும், மன அறிவு பெறாத நிலை கீழ்ப்பிறவி இனங்களாம். மனிதப்பிறவியில் அம் மனஅறிவு தோன்றியும், ஆன்ம ஞானமும் அருள்மெய்ஞ்ஞானமும் விளைவுகொள்ளா நிலைகளும் உண்மை அறியாப்பருவங்களேயாம். இங்கே குறிக்கப்படுகின்ற அறியாப்பருவம் கடவுள் உண்மையை உணர்ந்து கொள்ளாத காலத்தையே சுட்டுவதாம். இது, நன்றறிவறியா என்றதால் உய்த்துணரச் செய்யப்பட்டுள்ளதாம். எல்லோருக்கும் தான் அறிவு இருக்கின்றது. ஆனால், நன்றாக நிறை அறிவாக விளங்கும்போதுதான் ஒருவனை அவ்வறிவுடையோனாகக் கொள்ள முடியும். அந் நல்லறிவாகிய கடவுள் ஞானம் ஏற்படாதவரை, ஒருவனுக்குத் தான் உடல்வடிவினனென்றே விளங்குகின்றதாம். இத் தேகத்தின் பற்றோடு கூடிய நிலைவிளக்கம் தூல பஞ்சாட்சர வடிவில் (நமசிவய) நாயாக இருக்கின்றது. இதனால் ஒருவன் தேகப்பற்றோடு கூடிய அபக்குவ நிலையில், திருச்சந்நிதி முன் குறையிரந்து வேண்டும்போது, தன்னை நாயேன், நாயினும் கடையேன் என்று தன் தாழ்மையான சிறுமை நிலையைக் கூறிக்கொள்ளுகின்றான். நாய்க்குக்கூட தன் தலைவனிடத்தில் நன்றி அறிதற்குணம் இருக்கின்றது, ஆனால் இந்த நாய் வண்ண மனிதனிடத்தில் அந் நன்றிக்குணம் கூட தோன்றவில்லையால், அவன் தன்னை நாயினும் கடையேன் என்று கூறிக்கொள்ளுவதில் பொய் இல்லையே!

மனிதப்பிறவி ஏற்ற ஆன்மாவுக்கு அருள்ஞானம் விளைவு பெறாமுன்னேயே சிற்றிளம் பருவத்திலேயே, உள்ளொளியின் செயல் சிறிது சிறிது வெளிப்படும் அடையாளமும், அற்புத நிகழ்ச்சிகளும் தோன்ற ஆரம்பிக்கின்றனவாம். ஆனால் அச்சிறு பிராயத்தில், அந்நிகழ்ச்சிகளின் கருத்தை உணர்ந்துகொள்ள

முடிகின்றதில்லை; பிற்காலத்தில் அந்த ஞானம் விளங்கும்போது, பழையனவற்றை மீண்டும் நினைவு கூர்ந்து பார்க்கும் தருணம் தான், அது இதன் முன்னோடி என்றே தெரியவரும். அப்படித் தான், அடிகளாரின் பிள்ளைப்பருவ நிகழ்ச்சிகளில் ஏற்பட்ட தெய்வீக சம்பவங்களும், காட்சி அனுபவங்களும், பிற்காலத்தில் அருள் ஞான விளக்கத்தால் நன்கு தெளிவாகியுள்ளனவாம். இதுதான் தனது அறியாப் பருவத்தே, நன்றறியாப் பருவத்தே வந்து அன்றே ஆண்டு கொண்டதாக இப்போது அறியப்படு கின்றது என்று குறித்துள்ளார். இவ்வுண்மை - அறியவேண்டில் திருவருட்பாவை ஊன்றிப் படித்துணரும்போது அங்கங்கு நிறை விளக்கம் பெறலாம். பொதுவாக, எல்லா ஆன்மாக்களும் இயற்கையிலே கடவுட் கலப்புடையதாய் இருக்கின்றன; வேறு விதமாய்க் கூறின், கடவுளேதான் ஒவ்வொரு ஆன்மாவாய்த் திகழ்கின்றார் அகநிலைநின்றே. இந்த ஆன்மக் கடவுள் இயல் உண்மை எத்தனையோ கோடி காலத்திற்குப் பின்னர் தான், மனித நிலையில் வெளியாகின்றது. என்று கடவுள் விளங்கத் தொடங்கினாரோ அன்றே முதல் அவர் மயமான மனிதனும், அக்கடவுள் நிலையில் இருந்து வருகின்றது உண்மையே. இதனையே, 'அன்றே என்னை ஆட் கொண்டுள் ளாய்' எனக் கண்டுரைக்கின்றார்.

## 153. நாயினும் ஈயினும் தாழினும் அருள்வது

**305. நாயினுங் கடையேன் ஈயினும் இழிந்தேன்**
**306. ஆயினும் அருளிய அருட்பெருஞ் ஜோதி**

**(உ-வி)** மற்றெல்லாப் பிறவிகளிலும் சிறந்தது இம் மனிதப் பிறப்பு என்பர். ஒவ்வொரு பிறப்பிலும் கொள்ளத்தக்க சில விஷயங்களும், தள்ளற்கான சில விஷயங்களும் உள்ளனவாம். உண்மையைப் பகுத்தறிந்து நன்னெறியைக் கடைப் பிடித்தல் வேண்டும். ஆனால், கீழ்ப்பிறவிகளிலிருந்து வந்த மனிதன் முற் பிறவிகளின் நெடுநாளைய பழக்கத்தாலும், நல்லனவற்றில் முயற்சி மேற்கொள்ளாமையாலும், கேடுடைய சூழலால், அந்தக் கீழ்ப் பிறவிகளைவிட ஒரொரு சமயம் தாழ்ந்துபோய் விடுகின்றான். பின்னர்தான் தன் தவற்றை யுணர்ந்து நேர்வழியிற் திரும்பித் திருவருளை வேண்டினால், கருணைக் கடவுள் கைகொடுத்துதவு

கின்றார். ஒருவன் செய்கின்ற சிறிய பெரிய குற்றங்களை எல்லாம், பொறுத்துக் கொள்ளுவதோடல்லாமல், அக்குற்றங்களைக் குணமாகக் கொண்டுவிடுகின்றாராம் ஆண்டவர். ஏன், எப்படிக் குற்றங்களைக் குணமாகக் கொள்ளுகின்றார் அந்தக் கடவுள்? உண்மை இதுதான்: அகமிருந்து எவருமாய் விளங்குகின்றவரும், செயல்புரியச் செய்கின்றவரும், செயல்புரிகின்றவரும், அதன் பயனை அனுபவிக்கின்றவரும், அவரேதான் வேறு வேறு நிலைகளில், பக்குவத்தின் பொருட்டுத் தோற்றி நின்று விளங்குகின்றார் எனக் காண்கின்றோம். எல்லாம் அருட்பேரின்பானுபவம் உண்டாதற் பொருட்டே இவ்வுலகில் யாவும் கடவுள் திருவுளம் போல், அருள் நியதிப்படியே செயல்படுகின்றனவாம். ஒருவன் குற்றஞ்செய்துவிட்டுப், பின்னர்தான் குற்றஞ்செய்தது தவறு என்பதை நன்கு உணர்ந்து, திருந்தி மேல் வரவேண்டும் என்ற உண்மையான உள்ளத்தோடு மன்னிப்புக் கோரி வேண்டினால், அவன் மன்னிக்கப்படுகின்றான். கடவுள் மன்னிக்கின்றார். மன்னிக்கப்பட்ட பின்னர் மேலான திருவருள் நலனும் வழங்குகின்றார். எவ்வளவு பெரிய குற்றமானாலும், அதனைப் புரியச்செய்கின்றதும், அதற்காக தண்டிக்கின்றதும், மன்னிக்கின்றதும் அருள் அனுபவப் பக்குவம் உண்டாக்கவேயாம். ஒருவன், குற்றத்திற்காக மன்னிக்கப்பட்ட பின்னும், அதுமாதிரி குற்றத்தையோ, வேறுவிதக் குற்றத்தையோ மீண்டும் மீண்டும் செய்துகொண்டு போனாலும், ஆண்டவர் அப்போதப்போது அவனைத் தண்டித்துக் கொண்டும், மன்னித்துக்கொண்டும் தன் கண்காணிப்பில் வைத்துக் கொண்டேதான் இருக்கின்றார். எப்படியும், எப்போதாவது அவனைப் பக்குவப்படுத்தி நிறை அருள் இன்ப நிலைக்கு ஏற்றி வைக்கவேண்டுவதே அவரது திருவுள்ளமாம்.

'செய்தாலும், தீமையெல்லாம் பொறுத்தருள்வான் பொதுவில், திருநடஞ்செய் பெருங்கருணைத் திறத்தான்'—எனக் குறிக்கின்றார் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரை. எங்கும் எவரும் அவரேயாக இருத்தலாலும், அவரது எச்செயலும் அடிப்படையில் பெருங்கருணையால் நிகழ்த்தப்படுகின்றதாலும் திருச்சந்நிதியில், திருவருள் முன்னிலையில் குற்றம் என்பது ஏது? எல்லாம் பெருங்குணச் செயலேயாம்! மனிதன் மாசுடைய மனக் கண்ணால் காணும்போதுதான் குற்றமும் குறையும் சூழக் காண்கின்றான். இவனே சுத்தமனம் அடைந்து திருவருளையே கண்ணாகக் கொண்டு சூழ நோக்கும்போது எங்கும் கடவுட்

காட்சியையும், கடவுட் கருணைச் செயலையுமே காண்பான். 'கருணையுஞ் சிவமும் பொருளெனக் காணும் காட்சியும் பெறுக' என்கின்றார் ஓரிடத்தில்.

ஒருவன் இவ்வுலகில், கடைபட்ட நாயினும் கடையனாக இருந்தாலும் சரி, இழிவான ஈயினும் இழிந்தவனாக இருந்தாலும் சரி, எப்படிப்பட்டவனானாலும் சரி திருவருள் பெறற்கு உரிமை யுடையவனே ஆவான். ஏனென்றால், கடையனாயும், இழிய னாயும் மற்றெவனாயினும், புறத்தோற்றத்தில், குணத்தில் செய லில் வாழ்வில் எப்படி இருந்த போதிலும், அகத்தில் ஆன்ம சொருபத்தில் உண்மை நிலையில் அருளின்ப வடிவினனாகவே இருந்துகொண்டும், அறியாது உழலுகின்றான், குற்றம் புரிகின் றான், முடிவில் திருந்தித் திருவருள் பெற்று உய்கின்றான்.

இங்கு குறிக்கப்பட்ட இவ்வடிகள், நம் அடிகளின் நிலை யையா சுட்டுகின்றன? இல்லை என்றும், ஆம் என்றும் பதில் சொல்லலாம்! எப்படியெனில், இவர் அன்பும், அறிவும், ஒழுக்க மும், மற்ற பெருங்குண பெருங்செயலும் உடையவர் ஆதலின் தன்னை 'நாயினும் கடையேன், ஈயினும் இழிந்தேன் என்று,' வேண்டுமென்றே தாழ்மைப்படுத்திக் கூறிக் கொள்ளார் என அறியலாகும். பின்னர் ஏன் அப்படித் தன்னையே தாழ்த்திக் கொள்ளும் விதத்தில் சொல்லியிருக்கின்றார் என்றால் இவர் அகவடிவிலிருக்கும் தன் ஆன்ம உண்மையையும், பிற எவரது ஆன்ம உண்மையையும் ஒன்றாய் இருப்பதாயும், தானே எங் கெங்கும் உள்ளீடாய் இருந்து, எவருமாய்ப் புறத்தில் தோற்றி உலகிடை எங்கும், அருட்பக்குவம் உண்டுபண்ணுதற்காக விளங்குகின்றதாயும் அறிகின்றார். அப்படி அறிந்ததாலும், உல கினரைத் திருத்திப் பக்குவமுண்டாக்க வேண்டியுமே தான் அப் படி அங்கங்கு இழிநிலையிருப்பதாய்த் தெரிவித்துள்ளார். ஆதலின் இக்கூற்று பொய்யுமல்லவாம். உண்மையையுள்ளபடி அறியும் அருளாளர்க்கேயன்றி பிறர்க்கு விளங்காது இக் கூற்றின் இரகசியம். உண்மையையுணராதவர் 'இவர், பிறர் குற்றத் தையும், குறையையும் தம்மேலேற்றிக் கொண்டு சொன்னதாகச் சொல்லிவிடுவார்கள்.' அகமுணராரே, பிறரைப்பற்றித் தான் சொல்லுவதுபோலும், தம்மைப்பற்றிப் பிறர் சொல்லுவது போலும் பொய்ப்பாவனையும் கற்பனையும் செய்து உண்மையை மறைத்து விடுகின்றார்கள். இவர்களின் இச் கூற்றுகளால்

மக்கள் மேலும் மேலும் குழப்பமே அடைந்து உழன்று கெடுவதே யல்லால் பெருநலம் பெற்றுய்யார்கள்.

## 154. ஆத்திரம் அளித்தது

307. தோத்திரம் புகலேன் பாத்திர மல்லேன்
308. ஆத்திர மளித்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) மக்கள் திருவருள் பெற்று உய்ய, பக்தி நெறியை எல்லோருக்கும் எளிய முறையாக வகுத்து வழங்கியுள்ளனர் ஆன்றோர். அந்தப் பக்தி மார்க்கத்திற்கு மிக்க உதவியாகவே துதிப்பாடல்கள் பலவற்றைப் பலரும் ஆக்கி அளித்துள்ளார்கள். மக்களும் அவற்றை விருப்பொடு பயின்று, பலகாலும் பாடிப் பாடிப் பணிந்தேத்திப் பக்தி செய்துகொண்டுள்ளனர். இப் பக்திச் செயலாலே, தெய்வத்தைத் தோத்திரஞ் செய்வதாலேயே தெய்வப்பேறு எய்திவிடலாம் என்பது ஆன்றோர் கருத்து. அப்படித் துதிப்பதுவே திருவருளுக்குப் பாத்திரமாகும் வழி என எண்ணுகின்றனர் பக்த கோடிகள். இம்மார்க்கத்தில் நம்பிக்கை அதிகம் கொண்டவர்கள், ஆனால், தம்மால் அப்படிப் பாடிப் பணிந்து பரவசப்படமுடியாமைக்கு வருந்தி கழிவிரக்கப்படுகின் றார்கள். பகவானின் புகழ் பாடிக்கொண்டிருத்தலே பெரிய பகவத் கைங்கரியம் எனக்கருதும் பாகவதப் பரம்பரையினர், அந்த பகவத் கிருபைக்கு உரியவர்கள் ஆகின்றார்கள் என்பது அன்னோர் திட நம்பிக்கை. ஆனால், இங்கு, தோத்திரம் புரியாத, துதிசெய்தறி யாத, சற்பாத்திரமாக விளங்காத ஒருவனுக்கும்கூட ஆத்திரம் அளிப்பது நம் அருட்பெருஞ்ஜோதி என்பதை ஈண்டு அறி கின்றோம். ஆத்திரம் என்ற சொல், ஆன்ம இயற்கையாகிய அழியாத நிலைத்த ஆனந்த வாழ்வைக் குறிப்பதாம்.

துதி செய்திலேன் என்று கூறிய இவரோ ஆயிரம் ஆயிரம் திருவருட்பாடல்களைப் பாடியுள்ளதை உலகமறியுமே! ஆகை யால், தோத்திரம் செய்தறியா நிலையிலுள்ள ஒருவனின் விளக்க மாக இது கூறப்படுகின்றதாம். இப்படியுள்ள ஒரு சாதாரண மனிதனுக்கும், ஆனந்தவாழ்வு அளிப்பது, அளித்துள்ளது அருட் பெருஞ்ஜோதியே என்பதைத் தெளிவு படுத்துகின்றார். துதி பாடா ஒருவனுக்கும் உய்வு உண்டு என்று உறுதிப் படுத்துவன இவ்வடிகள். இந்த உண்மையைத் தெரிந்துகொண்டபின், ஒரு

ஐயம் ஏற்படலாம். இதுவரை தோத்திரச் செயலால், துதி முறை யால் உண்மையில் எத்தனை பேர் உய்வைப்பெற்றார்களோ என்ப தாம். துதிவழி சென்று உய்வு பெற்றவர் யாராவது தெய்விக இன்ப வாழ்வில் விளங்கிக்கொண்டிருக்கின்றார்களா என்றால், உலகில் அப்படிப்பட்ட எவரும் இருப்பதாகக் காணோம். அப்படி யெனில் இத் துதிமுறையால் திருவருளுக்குப் பாத்திரமாகி இறை யின்ப வாழ்வுபெறுவது என்பது தவறான கருத்தா, கற்பனையா, முடியாத ஒன்றா என்ற பேரையம் தோன்றுவது இயல்பே. ஐயப் பட வேண்டியதில்லை, அத் துதிமுறையும் தவறானதல்ல: ஆனால் அம்முறையைக் கையாளும் முறைதான் ஏற்றதாக அமை யாத காரணத்தால் குறைவுற நேர்ந்ததாம். சுத்த சன்மார்க் கத்தில் படரும் ஒருவன், உள்வளர் உண்மைக்கடவுட் சந்நிதியின் முன் நின்று துதித்துத் துதித்து முடிவில் துதியின் அந்தத்தில், உள்வளர் அக்கடவுட் ஜோதியோடு இரண்டறக் கலந்து அதுவாகி நிலவுகின்றான். இதுவே சாதனை முற்றிய சாத்திய நிலை. இந் நிலையினின்று மேலும் அந்த ஆண்டவரின் அருள் அனுபவம் இடையறாது விளங்கற்கு மனோவாக்குக் காயங்களால் தயவுச் செயல் புரிந்து வருகின்றான். இச்செயலே இறைநிலை பிறழாத் துதிமுறை வாழ்வாகின்றது. அருட்பெருஞ்ஜோதியின் தனிப் பெருங் கருணையால் இந்தச் சன்மார்க்கி அழியா இன்ப வாழ் வோடு உலகில் நிலவுகின்றவனாகி விடுகின்றான்.

எனவே, சத்விசாரத்திற்கும் பரோபகார வாழ்விற்கும் இத் தோத்திரமுறை ஏற்றதாகக் கொள்ளப்படவேண்டியிருக்கின்றது. இடையறாக் கடவுள்நிலைத் தொடர்புக்கு இத் தோத்திரம் வழி செய்வதாய் இருக்க வேண்டும் என்பது முக்கியம். அதற்காகத் துதிபாடுவதில் மட்டும் அதிகப்பற்று கொண்டு, அகத்தொடர்பு ஏற்படுத்திக் கொள்ளாது போனால் பயன் பெற முடியாது. விசார மார்க்கத்தில், கடவுளை நேரடியாக நினைப்பதாலும், தோத்திரஞ் செய்வதாலும், அடயோக முதலியவற்றால் பெற லரும் அதிசூட்டு நிலையை உண்டுபண்ணிக் கொள்ளலாம். இச் சூட்டால் கடவுளுக்கும் மனிதனுக்கும் இடையில் உண்மையில் இல்லாதே இருக்கும் மாயாதிரைகள் அனைத்தும் ஒழிக்கப் பட்டு, இறையோடு கூடிய இன்பவாழ்வு ஏற்படுவது திண்ணம், ஆகவே, பாடிப் பரவசப்பட்டு அடைதற்கரிய நிறை இன்ப வாழ்வை சுத்த சத்விசார வழியாற் கூடிக் குலவுதலாம் என்பது உண்மை.

## 155. சோதனை யில்லா சுகம் அருள்வது

309. எச்சோ தனைகளும் இயற்றா தெனக்கே

310. அச்சோ வென்றருள் அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) மனிதன் இவ்வுலக வாழ்வில் தயவு நிரம்பியவனாகி வாழ்வு மேற்கொண்டு விளங்கவேண்டும் என்பது கடவுட் சித்தம். அதற்காகவே மனிதனுக்குப் பலவித சுகபோகச் சூழலும், சோதனை நிகழ்ச்சிகளும் விதித்துக்கொண்டுள்ளார் அருட்பெரும் பதி. இன்பச் சூழலில் இறைவன் எண்ணம் மறந்துவிடுவதும், துன்பச் சோதனையில் கடவுள் நினைவு அதிகம் உண்டாகி, அச் சோதனையினின்று விடுபட வேண்டிக்கொள்வதும் உலகியல் மக்கள் செயலாம். கடுமையான சோதனை ஏற்படும்போது, கடவுளை வேண்டுவதாலும், விதிக்கப்படும் தான தர்ம, சாந்தி பரிகாரங்களைச் செய்வதாலும் அச்சோதனையின் பிடியினின்று சற்று விலகவும், ஒரளவு நன்மைகள் பெறவும் முடிகின்றது எனின் அதற்குக் காரணம் கடவுளின் கருணையுள்ளமேயாம். சிறிதளவு அன்புள்ளம் படைத்த மனிதனே பிறரின் தாழ்மை யான வேண்டுகைக்கு இரங்கி நலம் பெற உதவுகின்றபோது, அன்பே வடிவான அருட்பெருங்கடவுள் எவ்வளவு உதவி செய்ய மாட்டார் வருந்திப் பிரார்த்தித்துக் கொள்ளுகின்றவர்களுக்கு! நல்லார்க்கு ஒரு தீங்கும் வாராது வாராது, வந்தாலும் அவர் தம் மைச் சாராது! சாராது!!நல்லவர்கள் எப்பொழுதும் கடுஞ் சோத னைக்குள்ளாகார். அப்படியே ஏதேனும் ஒரு சில சோதனை ஏற் பட்டாலும், அவற்றால் எப்பொழுதும். கேடுண்டாகாது. அந்தச் சோதனையும் அருட்செயலாகக் கண்டு தெளிந்து கொள்ளவே உண்டாக்கப்படுகின்றனவாம். இந்தக் காலத்தில் எண்ணரிய சோதனைகள் உலகெங்கும் சூழ்ந்து வருத்துவனவாய்க் காண் கின்றோம். காரணம், இன்றைய மக்கள் ஜீவதயவில்லாச் செய லோடு கூடிய புலனின்ப வாழ்வில் மிகுதியாக உழன்று கொண் டுள்ளனர். தயவின்மையால், சூழ்நரை வஞ்சித்தும், துன்புறுத் தியும் மோசம் செய்தும் வருகின்றனர் பலர். இதனால் கடவுள் நியதிப்படியும் இயற்கைச் சோதனைகளும் அழிவுகளும் மிகுந்துள்ளனவாம். மன்பதை தயவுடையதானால், அன்புச் செயலே எங்கும் நிகழும், இறை நியதியும் ஒத்து இயங்கும், நலமே எங்கும் நிரம்பும்.

நம் பெருமானுக்கு எந்தவகைச் சோதனையும் ஏற்படுத்த வில்லையாம் ஆண்டவர். ஏனென்றால், இவர் இரக்கமே உயிராய், அன்பே வடிவாய் இருக்கின்றவர், பிறர்க்கு எவ்வகையிலும் துன்பஞ்செய்யக் கனவிலும் நினையாதவர். ஓர் ஒருக்கால் பிறர் தம் அறியாமைச் செயல்கண்டு கடிந்துகொண்டாலும்கூட, அது வும் தயவுக்காரணமாகவே செய்வதாகும். 'மக்கள், அறியாமை யாலும் அவாவாலும், பழக்கவசத்தாலும் தீயவழிகளிற் சென்று சென்று துன்புற்று அழிவுறுகின்றார்களே', என்று அனுதாபப்பட்டு, நல் வார்த்தை கூறியும், கடிந்துகொண்டும் அச் சுறுத்தியும் இசையாதபோது இறைவனிடம் வேண்டியும் எந்த விதத்தும் பிறரை நல்வழிப்படுத்தவே முயன்றுள்ளார் என்பது உண்மையாம்.

உலகியலில் ஒரு தந்தை தன் தனயன் ஏதேனும் தீங்கு செய்தாலும் பொறுத்து அவனுக்கு நல்லனவே செய்வது புதிதன்று. அப்படியிருக்க, அருட்பெருந் தந்தையாகிய ஆண்டவர் தன் நல்ல ஓர் அன்புச் செல்வனுக்கு எவ்வளவு நல்லுதவி புரிவார்! ஆகவேதான் இவரை எவ்வகைச் சோதனைக் கும் உட்படுத்தவில்லை அந்தக் கடவுள். இரங்குகின்றார்க்கு மிகவே இரங்குகின்றவர் நம் ஆண்டவர். இதனால் வள்ளலார்க்கு அவ்வளவு இரக்கம் காட்டி, அச்சோ என்று அருள்பாலிக் கின்றாராம். அச்சோ என்பது இரக்கக் குறிப்பு ஆச்சரியச்சொல் ஆம். 'அடடா! நம் அருட்செல்வனுக்கு எந்த வகையிலும், சிறிதும் சோதனை ஏற்படக்கூடாதே! இயல்பாகவே இரக்க வடிவான அந்த உள்ளம் கொஞ்சமும் கலங்கலாகாதே! நெஞ்சம் பதறினால் நம்மால் அதுகண்டு சகிக்க முடியாதே!' என்றெல்லாம் பேரிரக்கப்பட்டு அருட்பெருங்கடவுள், அருட்பிரகாசப்பிள்ளைக்கு எந்தவித சோதனையும் வைக்கவில்லையாம்.

## 156. ஏறாநிலை நடு ஏற்றி ஆறாறு கடத்தியது

*311.* ஏறா நிலைநடு ஏற்றியென் றனையீண்
*312.* டாறாறு கடத்திய அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) முன் 17, 18-ஆம் அடிகளில் 'ஏறாநிலை மிசை ஏற்றி யென்றனக்கே, ஆறாறு காட்டிய அருட்பெருஞ்ஜோதி', என்று கூறப்பட்டுள்ளது. இங்கு 'ஏறா நிலை நடு ஏற்றியென் றனையீண்டு

ஆறாறு கடத்திய அருட்பெருஞ்ஜோதி', எனப்பட்டுள்ளதாம். முன்னர் குறித்த உரை விளக்கத்தையும் ஒரு முறை திருப்பிப் பார்த்துக்கொள்வது நன்மையாம். அக்கருத்தோடு ஒட்டியே ஈண்டும் விளக்கம் தரப்பெறுகின்றது. இந்த அடிகளில் வேறு முக்கியக்குறிப்பு அடங்கியுள்ளதைக் குறிக்கலாகின்றது.

இங்கு, 'ஏறா நிலை நடு ஏற்றி' என்கின்றார்; முன்பு, 'ஏறா நிலை மிசை ஏற்றி' என்றுள்ளார். மிசை என்றால், மேலே எனப் பட்டது; பொதுவாக ஒன்றன் மேலிடம், சிறியதாகவோ, பெரிய தாகவோ, நிலைத்தற்கான வசதி குறைவுடையதாகவோ, சிறிது காலத்தில் அம்மேநிலை நின்று நழுவி விடக்கூடிய இடமாகவோ இருந்தால் பெரும் பயன் பெறமுடியாது போம். அப்படிப்பட்ட ஒரு நிலைமேல் ஏற்றிய ஆண்டவர், அங்குள்ள உண்மையை ஓரளவு கண்டு கொள்ளச் செய்யமுடியும். ஆகையால் அங் கிருந்து பன்னெடுங்காலமும் வாழ்ந்து கொண்டிருக்கமுடியாதாம். ஆகவேதான், அந்நிலைமிசை காட்டியதாக மட்டும் குறிப்பிட் டிருந்தார். மேலும் அந்த ஏறாநிலை மிசையே, தான் இயல்பாகக் கடவுளோடிரண்டற்றிருப்பதைச் சுத்த சத் விசாரத்தால்தான் அன்று கண்டு கொள்ளச் செய்திருந்ததாம். புறத்தே இருந்து எந்த முயற்சியாலும் எவரும் அந்த ஏறாநிலை மிசை ஏறவே முடி யாது என்று முன்னமே கண்டுள்ளனம். அருள் விசார நிலையால் முதலில் கண்டு கொள்ளப்பட்ட அம்மேனிலையில், தானும் கடவுளும் இரண்டுபடா ஒன்றாய் இருக்கக் காண்கின்றார். இப் படித்தான் அந்த ஏறா நிலைமிசை, இயல்பாகவே இருப்பதைக் கண்டதுதான் முன்பு விளங்கிக்கொண்டோம். அவ்விசாரநிலை ஒருவர்க்கு நித்தியமல்ல; நிறையருள் சேராதபோது, ஒன்று அந் நிலை நின்று நழுவிவிட நேரும் அல்லது அதிலே மூழ்கியொழிந் திடத்தான் முடியும். ஆகவே அந்நிலை நின்று அருளின்ப வாழ்வு பெற்றாக வேண்டும். அங்கிருந்தபோது கண்ட ஆறு ஆறு, பழமையான ஷடாந்த, ஷண்மத, ஷடாட்சர, ஆறு அவத்தை நெறிகளைக் குறியாவெனவும் ஆறெழுத்து அருட்பெருஞ்ஜோதி யையே குறிக்கும் எனவும் அன்றே கண்டுகொண்டோம்.

இன்றைய நிலை, வெற்று விசாரத்தோடு நின்று இருந்து ஒழிவது அல்ல. அந்நிலை நடுநின்று செல்லாது விளங்கிக் கொண்டு இருக்கவேண்டியதாம். இந்நிலை நடுநின்றால், பிறழ்ந் தும் நழுவியும் போய்விடாது, பரோப்கார அருட்செயலோடு

நித்தமும் வாழக்கூடும் என்பது உண்மை. இப்போது அம் மேனிலை வாழ்வால், ஆறாறு கடந்தாகிவிட்டதாம். அருட்பெருஞ் ஜோதி இன்று நம் வள்ளலாரை ஆறாறு கடத்தி விட்டுள்ளதாம். அந்தப் பழைய ஆறந்த, ஆறுஅவத்தை, ஆறு ஆதாரமார்க்கங் களை எல்லாம் கடத்திவிட்டுள்ளது ஆம். ஈண்டு, இவ்வுலகில் அந்த ஆறாறு (ஆறிப்போன, உயிரே அற்றுப்போன பழநெறி) களைக் கடத்திவிட்டுள்ளதாம் இந்த அருட்பெருஞ்ஜோதி. ஆகவே, முன்பு விசாரத்தால் ஏறாநிலை மிசையுறு பொருளைக் கண்டு கொள்ளச் செய்திருந்ததும், இப்போது ஆண்டே நடு நாயகமாய் நாட்டப்பெற்று நிலைத்து வாழவும் செய்துவிட்டதாம் அருட்பெருஞ்ஜோதி. இதனால் இவருக்கு இங்கு நித்திய வாழ்வு வந்துவிட்டது. இவ்வுலகில் இவருக்கு என்ன இனி ஏச்சு! எவ்வுலகத்தும் இனி கேட்கும் இவருடைய பேச்சு!

## 157. துயரம் தவிர்த்து ஆபத்து நீக்கியது

313. தாபத் துயரந் தவிர்த்துல குறுமெலா

314. ஆபத்தும் நீக்கிய அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** இவ்வுலகில் மக்கள் பல வழிகளில், பல காரணங் களால் துயரடைந்து சோர்வுற்று நைந்து அழிந்து போகின் றார்கள். இந்தத் துயரத்திற்கு தாபம் என்ற ஒரு சொல்லை அடைமொழியாய் முன் வைத்துக் கூறியதில் எவ்வளவோ உண்டை யும் குறிப்பும் அடங்கியிருக்கக் காண்கின்றோம். தாபம் என்றால் கொடிய வெப்பம் அல்லது எரிச்சூடு ஆம். இந்தத் துயரம் இருக்கிறதே இதன் தாபம் எப்படிப்பட்டது தெரியுமா? மலைபோலும், இரும்புபோலும் உடல் வலிமை பெற்றுள்ள மனிதன் இச் சுடுந்துயரால் நொந்தும், உருகியும், குலைந்தும் அழிந்தே போய்விடுகிறானாம். இத் தாபத்துயரத்தால் தினமும் மடியுறும் மக்களை எண்ணிப்பார்த்தால் பரிதாபமாயிருக்கின்றது! இப்படி வேகச்செய்யும் துயரத்தை யொழிக்கவும் தாபத்தைத் தணித்துத் தண்மையுறச் செய்யவும், மேலும் உலகெங்கும் சூழ்ந்து வருகின்ற ஆபத்துக்களைத் தடுத்து ஒழிக்கவும் என்னவழி? சுத்த சன்மார்க்க அருட்பெருஞ்ஜோதி ஒன்றுதான் வழியாக இருக் கின்றதாம்.

தயவுடைய வள்ளல் உள்ளம் உலகைக் கண்டு மிக உருகிய துண்டு. துயர் அடைந்ததுண்டு. ஆனால் இவரது துயரம்

தாபத்துயரமல்ல; தயவினால் உண்டான, அன்பின் வழி வந்த, பரிதாபத்துயரமே இவர் அடைந்திருந்து முகத்திற்கொண்டிருந்த விசனக் குறியாக இருந்ததாம். இவருடைய அன்பு வதனத்தில் எப்போதும் இந்த விசனக் குறியே குடிகொண்டிருந்ததாகச் சொல்லுவர் சூழ இருந்த பக்தர்கள் பலர். இந்த விசனமும் துயரமும் தயவுமேலீட்டால் உண்டாகியிருந்த காரணத்தால், தண்மையுடையனவாய் இருந்தன. அதனால், அவருக்கு, அவற் றால் நன்மையே விளைந்தது கண்கூடு. இவர் இந்த ஜீவதய வினால் கடவுள் தயவையே பெற்றுக்கொண்டார். இதனால் இவருக்கு எவ்விதமான ஆபத்தும், விபத்தும் இவ்வுலகிலுண் டாகவில்லை. கடவுட்பெருந்தயவாலேதான் பேராபத்தாகிய மரணத்தையே அடியோடு நீக்கிவிட்டு நித்திய இன்ப வாழ்வும் அடைந்துவிட்டார். இந்த அருட்பெரு நெறியொன்றே மரணத் தைக்கூட ஒழித்து வாழ்விப்பதாயிருக்க, 'சிவாய நம' என்று சிந்தித்திருப்பார்க்கு அபாயம் ஒரு நாளுமில்லை' என்ற முன்னோர் கூற்று பொருத்தமாகத் தோன்றவில்லையே! ஆம். அதனையும் சுத்த நெறியால் நிறைவுபடுத்திக் கொண்டுவிட்டால் பொருந்தக் காணலாம். வெற்றுச் சிந்தனை அளவில், சிவாய நம என்று நினைந்து, உட்கூடி, உடலையும் உலகையும் மறந்திருந் தால், அபாயம் உண்டாகாமலோ, உண்டானாலும் அவனைச் சாராமலோ இருக்கலாம். அப்படியே காயமே போனாலும், அபாயமே யுணராது அகத்தே ஆழ்ந்து ஒழியத்தான் நேரும். ஆகையால், அன்னார்க்கு அபாயம் இல்லை என்று சொல்லிக் கொள்ளுவதில் என்ன பெருமை! ஆகவே, அப்படிச் சிவச்சார்பில் ஆழ்ந்து கிடப்பதை விட்டு, 'சிவாய நம' என்றதன் அனுபவப் பொருள் வாழ்வில் விளங்க, அகநின்றே சொல்லும் செயலும் அனகமுறக்கொண்டு வாழ்தலே உண்மையில் சிவாய நம என்று சிந்தித்து இருக்கும் முறையாக இன்றைய சுத்த சன்மார்க்கத் தால் ஏற்று இன்ப வாழ்வெய்திப் பெருமை கொள்ளலாம்.

தாபத்துயரமும், பலவாகிய ஆபத்துக்களும் நிறைந்த இன்றைய உலகம், அருட்பெருஞ் ஜோதியையே அடைக்கல மாய் அடைந்து வாழ்ந்தால்தான் தயாநெறியாற்றண்மையுற்று, சிறிய பெரிய ஆபத்துக்கள் ஏதும் தோற்றாது தவிர்க்கப்படும். அப்போது இயற்கையின் விளைவுகளாலும் நன்மையேயன்றி பெருங்கேடுகள் தோன்றாவாம். இந்த உண்மையையே, வரு

முன் கண்டு உரைத்ததாக இவ்வடிகளில், ''உலகுறும் எல்லா ஆபத்தும் நீக்கிய அருட்பெருஞ்ஜோதி'' என்று குறித்துள்ளார்.

## 158. அருட் குரு ஆகியது

315. மருட்பகை தவிர்த்தெனை வாழ்வித் தெனக்கே
316. அருட்குரு வாகிய அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** நம் வள்ளலாருக்குக் குரு, யார் என்ற வினா, பலரால் எழுப்பப்படுகின்றது: ஆனால், சரியான விடையைத் தான் யாரும் காணக்கூடாததாய் இருக்கின்றது. இங்கு அதற்கு உரிய சரியான விடையை, உள்ளாழ்ந்து நோக்கின் உணர்ந்து கொள்ளலாம். 'எனக்கே அருட்குருவாகிய அருட்பெருஞ்ஜோதி' என்றுள்ளார். ஆம் அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரே இவருக்கு அருட் குருவாகத்தோன்றி ஆட்கொண்டு, மருட்பகை தவிர்த்து வாழ்வித்தது முற்றும் உண்மையேயாம்.

குருவின் அருளால் அன்றி ஒருவன் கடவுளை உள்ளபடி அறியவும், அக்கடவுளின் திருவருளை அடையவும், அதனால் அக் கடவுள்மய வாழ்வு பெறவும் முடியாது என்பது உலகியல் கண்ட உண்மை. ஆகையால், குருவின் இன்றியமையாமை நன்கு அறியலாகும். ஆனால், உண்மையான, ஒருவனுக்குக் கடவுள் வாழ்வைக் கூட்டிவைக்க வல்ல குரு யார், எங்கே கண்டு அடையமுடியும் என்பனவெல்லாம் புதிராக உள்ளன. மக்களின் உளப்பண்பாடு ஒருவகையில் இல்லை, அறிவுத் திறனும், முயற்சிச்செயலும் ஒரேமாதிரி அமைகின்றதில்லை, ஆங்கயால் அவர் அவர்களுக்கு ஏற்றபடி உபதேசித்து உயர்நிலைக்கு ஏற்றவேண்டியது குருவின் கடமையாம். மேலும் கடவுள் நம்பிக்கையும், திருவருளை அடைந்து உய்யவேண்டுமென்ற விழைவும் பல அளவில் பலருக்கும் இருக்கலாம். அவர்களுக்குத் துணைசெய்ய வரும் குருக்களும் பலராக இருக்கக்கூடும். முன்னோர் பரிபாக முற்ற ஆன்மாக்களை மூவகையாகப் பிரித்துள்ளனர். அவர்களில், ஒன்று சகல ஆன்மாக்களாம் மும்மல முடையோர். இவர்களுக்குக் குரு மனிதவடிவில் வந்து, உடன் சில நாட்கள் தங்கியிருந்து, பக்குவப்படுத்தி உபதேசம் செய்துவிட்டுப்போவர். அடுத்த வகையினர், கன்மமல நீக்கம் பெற்ற பிரளயாகலர் எனப்

படுவர். இவர்கள், யாவும் கடவுட் செயல் என்பதை ஓரளவு புரிந்துகொண்டிருப்பர். இவர்களுக்கு உதவும் குரு, தெய்வ மனித வடிவமாக கனவிலும் நனவிலும் தோன்றி உபதே சித்துச் சென்று விடுவர். மூன்றாவது ஆன்ம பக்குவ இனம் விஞ்ஞானகலர் எனப்படுவார்கள். இவர்கள் கன்மமும், மாயை யும் நீங்கியவர்கள், எங்கும் கடவுளையும் அவர்தம் செயலையுமே காண்பர். கருணையும் சிவமும் பொருளெனக் கொள்ளுகின்றவர் கள் இவர்கள். இவர்களுக்குக் குரு, புறத்தில் தோன்றி மறைந்து விடுகின்றவர் அல்ல: இவரது உள்ளத்திலே சதா இருந்து கொண்டு தெரிவிக்கவேண்டியவற்றை எல்லாம் அப்போதப்போது தெரிவித்தும் மேலேற்றியும் முடிவில் இரண்டற்ற அனுபவநிலை நிற்கச் செய்கின்றவராவர். இந்த அகக்குருவைப்பற்றிப் புற உலகம் உள்ளபடி அறியமுடியாதிருக்கிறது.

நமது அடிகளார் விஞ்ஞானகலர் நிலையில் இருந்தவர்; அந் நிலையே உள்ள ஒருமையினாலும், சுத்த தயாவிசாரத்தாலும் ஏற்பட்டிருந்த ஒன்றாம். இதனால் இவருடைய உள்ளத்தளியில் விளங்கிய சுத்த சிவ, அருட்பெருஞ்ஜோதியாம் நடராஜபதியே உண்மைக்குருவாய் இருந்து உதவினார். இவர் பெற்றிருந்த நிறையருட் பக்குவத்தால், அகமிருந்து சதா உதவிவந்த அருட் பெருஞ்ஜோதியே பலவேறு சமயங்களில், பலவேறு சூழ்ச்சிகளில் கனவிலும், நனவிலும்கூட தெய்விகக் குருவடிவாய்த் தோன்றித் தோன்றி தனது உள்ளும் புறமும் உதவி புரிந்து கொண்டிருப் பதை அருளாலே கண்டிருந்தார் என்பது உண்மை! உண்மை!! இதற்கு அகச்சான்றுகள் நிறைய இருக்கின்றன திருவருட்பாவில் யாவரும் கண்டு தெளியலாம்.

மேற்படி அருட்குருவை உலகம் அறியாததினால்தான், மக்களுக்கு, நம் வள்ளலாருக்கு யார் குரு என்பது புரியாதிருக் கின்றது. உலகில் பலரைக் குருவாகக் கொண்டுதான் பலரும், வாழ்ந்து இறை இன்ப அனுபவம் ஏற்காது மறைந்து ஒழிகின்ற தையே காண்கின்றனர். குருவில்லாத ஞானம் பாழ் என்பது உலகர் கருத்து. குரு அருள் இல்லாமல் கடவுளை அறியவும், திரு வருளைப் பெறவும் முடியாது என்பது இவர்களின் திடநம் பிக்கையே. ஆனால் உலகம் கண்ட குருக்கள் எல்லாம், கடவுள் மய அனுபவத்தோடு இருந்திருந்தால்தானே அவர்கள் அருளால் பிறரை வாழ்வித்தல் கூடும். ஆகையால் அருட்பேரனுபவம்

பெறாதஉலகியற் குருக்களை அடைகின்றவர்கள் எப்படி உய்வு பெற முடியும்? இவர்கள், உண்மைக் குருவின் சார்புறாதவர் களாய் இருந்து வீண் போகின்றனர். எனவே இவர்களும் உண்மைக் குருவில்லாதவர்களாய்ப் பெற்ற ஞானோபதேசத்தால் வாழ்வு பெறமுடியாது பாழ் ஆகின்றார்களே!

அறிவனுபவம் பெறற்கில்லாத இருள் நிலையிற் பலகாலம் கிடந்த ஆன்மாக்களுக்குக் கீழ்ப்பிறவி நிலைகளையெல்லாம் படிப்படி யாய்க் கடத்திவந்து, மனிதப்பிறப்பு வடிவங்களை வழங்கி யுள்ளார் இறைவர். இப் பிறப்பிற்றானே மன அறிவு கொண்டு எவ்வளவோ விஷயங்களைத் தெரிந்தும் உலகியல் வாழ்வில், கலைஞான சாதனைகளால் விந்தைச்செயல்கள் பல புரிந்தும், நாகரீகத்தின் உச்ச கட்டத்தில் இருக்கின்றதாகச் சொல்லிக் கொள்ளுகின்றனர் இன்றைய மக்களினத்தார். இந்நிலை அறி யாமை என்னும் இருள் நிலை கடந்ததுதான். ஆனாலும், இன் றைய அறிவனுபவநிலை சிறந்த ஒன்றாக, பெருநல இன்பமயமான தாக இல்லை என்பது உண்மை. ஆகையால் இவ்வறிவு நிறை மருள் நிலை என்றே கொள்ளப்படும். இந்த மருளறிவால்தான் உலகம் இன்று பகை வளர்த்து மடிவுறச் செய்யும் அழிவுப்பாதையிலே விரைந்து சென்றுகொண்டுள்ளதாம். இம்மருட்பகையொழிக்கும் அருள்ஞானம் மக்கள் உள்ளத்தில் உதயமாக வேண்டும்; புறத்தில் தயவு நிரம்பிய அருட் செயலே பெருகவேண்டும். அப் போதுதான் உலகிற் பெருநலம் ஓங்கும்.

நம் வள்ளலாருக்கு, அருட்பெருஞ்ஜோதியே அருட்குருவாக வந்து மருட்பகையை முற்றும் தவிர்த்து, அருட்பிரகாசத் திருவுருவோடு என்றும் வாழச் செய்துள்ளதாம். இப்போது அந்த அருட்பிரகாசரே அருட்குருவாகி எவ்வுலகத்திலுள்ள எவ்வெவர்க்கும் மருட்பகை தவிர்த்து அருட்சுகானந்த வாழ்வு வழங்குபவராய் இருக்கின்றார். ஆகையால் அருட்பிரகாச அருட்குருவையே ஒவ்வொருவரும், ஒழுக்கம் நிரம்பிய சத்வி சாரக் கண்ணாற் கண்டு அடைந்து அருளின்ப வாழ்வில் தழைத் திடல் வேண்டும்.

## 159. உருவமும் அருவமும் உபயமும் ஆகியது

317. உருவமு மருவமும் உபயமு மாகிய
318. அருணிலை தெரித்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி)அருள்நிலை, இன்னது என்பது பற்றிய தெளிந்த விளக்கம் இவ்வடிகளால் அறிவிக்கப்படுகின்றது. அருள் என்ன என்பதை, உலகம், புறஇயல் ஆய்வால் ஓரளவுதான் தெரிந்துகொண்டிருக்கின்றது. கடவுள் அருளால், இவ்வுலகும் இதன் எல்லா உயிர்களும், பொருள்களும் செயல்களும் விளங்கு கின்றன் என்று மட்டும் தெரிந்து கொண்டிருக்கின்றனர் கடவுள் நம்பிக்கையுள்ளவர்கள். ஏனையோர், எல்லாம் இயற் கையே எனக் கொள்ளுகின்றனர். எல்லாம் கடவுள் அருளால் விளங்குகின்றன என்பது உண்மைதான். ஆனால் அந்தக் கடவுள் எப்படி, எங்கே இருந்து கொண்டு அளப்பரிய இவ்வகண்ட பிரபஞ்சத்து எல்லா உலகங்களையும், உயிர்களையும், பொருள் களையும், ஆற்றல்களையும், எவ்வளவோ கோடி காலமாக விளங் கச்செய்து கொண்டுள்ளார் என்பதுபற்றிய உண்மை விளக்கம் தெரிந்துகொள்ள முடியாதிருக்கின்றது. இவ்வளவுக்கும் காரண மாகிய அந்தப் பெருங்கடவுளின் இயல்வண்ணமும் பேராற்ற லும் எப்படிப்பட்டவை என்று புரிந்துகொள்ள முடிகின்றதில்லை யாம். அந்தப் பெரும்பதியின் இயல்பு, எல்லாம் வல்ல தன்மை தான் அவருடைய சக்தி அல்லது அருள் ஆகும். அவ் அருளின் விளக்கமே அருள்நிலையாம்.

மேற்படி கடவுளின் இயல் உண்மை விளக்கம் அகண்ட பிரபஞ்ச வெளி முற்றும் சிறிதும் நீக்கமற நிறைந்து உள்ள தாகும். அப்படியெனில் உருவத்தோற்றமுடையவை யாவும் கடவுளின் புறவடிவம் என்றேயாம். மேலும் இந்த உருவத் தோற்றங்களுக்கு ஆதாரமாய் இருக்கும் அருவ ஆற்றல் சக்தியும் கடவுளுடையதேயாம். இப்படி உருவ உலகத்தோற்றமும், அத் தோற்றக் காரணமான தோற்றரிய அருவ ஆற்றலும் கடவுள் இயலாகவே எங்கும் நிரம்பியுள்ளனவாய் அறியப்படும். இவ் விரு நிலைகளும் என்றும் இருந்து கொண்டுள்ளனவே ஆயினும், இவற்றின் இருப்பைக் கண்டுணர்ந்து கொண்டுள்ளது எது? மனிதனின். அறிவனுபவமே இவ்விருநிலைக் கடவுள் உண்மையைக் காண்கின்றதாம். ஆகவே, மனிதனின் அறிவு நிலையில்தான் கடவுளின் இருப்பு உண்மை அறிய முடிகின்றதாம். இவ்வறி வில், கடவுளின் புறநிலைப்பொருளுலகும், அகநிலை அருவ ஆற்றல் உணர்வும் கூடித்தான் அனுபவத்தில் வெளியாகியுள்ளதாம். எனவே, இவ்வறிவு அனுபவ நிலையை உருவும் அருவும் கலந்த

ஒன்றாய்க் கொள்ளப்படுகின்றது. இதுவே, அருள்நிலை என்றும் உணரலாகும்.

இப்பொழுது பக்குவ மனிதன், அருள் அறிவு நிலையில் இருந்துதான் எங்கும் நிறைந்துள்ள கடவுளின் உருவ நிறை நிலையையும், அதற்குள்ளீடாய் இருந்து தோற்றுவித்துக்கொண் டுள்ள அருவ ஆற்றல்நிலையையும் அறிகின்றான். இந்த அருணிலை, உபயமும் ஆகிய ஒன்று என்பது குறிப்பு. உபயம் என்றால் இரண்டு; அதாவது உருவமும் அருவமும் ஆம். இந்த அருவமும் உருவமும் கூடிய ஒன்றான அருள் நிலையை, அருவுருநிலை என்று அறியலாகும். அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர், இப்பொழுது இந்த அருவுருவ அருள்நிலையில் வெளியாகித்தான் இக் கடவுளின் நிறை நிலை அனுபவத்தைக் கண்டு கொள்ளச் செய் துள்ளதாம்.

மேற்படி அருணிலையனுபவம் மனிதனுக்கு, ஞானக்கண் திறக்கப்பெற்ற போது புருவநடு நின்று ஒளிர்கின்றதாகும். இவ் விடத்திருந்தே அருள் உணர்வாம் ஞானக்கண்ணால், கடவுளின் நவவடிவக் காட்சியையும் காண்கின்றான். அதாவது, கடவுள்-ஒளி வடிவமாய் புறத்தே நான்கிடத்தும் (அக்கினி, சூரியன், சந்திரன், நட்சத்திரம்) அகத்தே அறிவு உணர்வாய் நான் கிடத்து (ஆன்மா, ஜீவன், கரணம், இந்திரியம்) அருள் நிலையாகி ஞானக்கண்ணிடம் ஒன்றும் ஆக ஒன்பது இடங்களில் உருவாய், அருவாய் அருவுருவாய்த் திகழ்கின்றதைக்கண்டு தெளிகின்றோம். இந்த அருணிலையுற்றிருந்து விளங்குகின்றவரே நம் அருள் ஒளி வள்ளலாராவார். இந்நிலை நின்றுதான் அகம் புறம் நிறைந்த கடவுள் அனுபவத்தையும் பெற்றுக்கொண்டுள்ளார். சிற்சபையும், பொற்சபையும் சொந்தம் எனது ஆச்சு என்றது இந்த அருணிலை யிலிருந்துதான் என்று உணர்த்தப் பெறுகின்றோம். இவ் வருணிலையையே, பிரணவதேகம், சுகவடிவம், மந்திர உருவம், கிளிவடிவம் என்றெல்லாம் குறிக்கப்படும். ஓங்காரத்தின் புற நிலை உருவாயும், அக ஆற்றல்நிலை அருவாயும் இருக்கின்றதால், அது அருவுருவம் என அக அனுபவத்தில் கொள்ளலாகின்றது. அருட்பெருஞ்ஜோதி நம் வள்ளலாருக்குத் தெரித்தது. அதாவது, விளக்கி நன்கு அறிவித்து, அனுபவத்திற் கொள்ளச்செய்தது இது ஆம்.

## 160. அருளமுதம் இருளறுப்பது

**319. இருளறுத் தென்னுளத் தெண்ணியாங் கருளி**

**320. அருளமு தளித்த அருட்பெருஞ் ஜோதி**

(உ-வி)புற உலகத்து, ஒளியும் இருளும் எல்லோரும் அறிவர். ஞாயிற்றின் முன் உலகம் ஒளியில் விளங்குகின்றது. ஒளியில்லாது பின்புறம் இருள் கவிந்துள்ளதாம். இந்த நில வுலகம் உருண்டையாயிருந்து சுழன்றுகொண்டே யிருத்தலின், ஒளியும் இருளும், பகலும் இரவும் தொடர்ந்து வந்துகொண்டே இருக்கின்றனவாம். இந்தப் புறஜோதியால் புற இருளே போக்க முடியும். மனித உள்ளத்தின் அறியாமை ஆகிய இருளைப் போக்கப் புறச் சூரியனால் சிறிதும் முடியாது. அக ஆகாசமாகிய உள்ள அம்பரத்தில் ஞான சூரியன் உதயமானால்தான் அக இருள் அகலும். அறிவு விளக்கம் படிப்படியாக, இந்திரிய உணர்வு, கரண உணர்வு, ஜீவ உணர்வு, ஆன்ம உணர்வு என்ற அளவில், நட்சத்திர ஒளி, சந்திர ஒளி, சூரிய ஒளி, அக்கினி ஒளி போல் ஏற்பட்டு, விளக்கம் செய்கின்றதாம். ஆன்ம ஜோதிக் காட்சியில், எங்கும் நிறைந்த கடவுள் உண்மை கண்டு கொள்ளப்படுகின்றது. கண்டும் அதுகொண்டு, கடவுள் மய வாழ்வு வாழத் திருவருள் சேரவேண்டியுள்ளதாம். ஆகையால், அகவானில் அருட்ஜோதி தோன்றினால் உண்மை விளக்கம் அறியப்படுவதோடு, அதன் அனுபவம் கைகூடுவது சாத்திய மாம். இதனால், அருட்பெருஞ் ஜோதி அருள் அமுதம் வழங்கி வாழ்விப்பதாக அறியப்படும்.

அருட்பெருஞ்ஜோதி, எங்கும், என்றும் ஒருபடித்தாய், உதயாத்தமனமின்றி விளங்கிக்கொண்டுள்ளதுதான். மேலும் அது மூவா இன்ப வாழ்வருளும் அருள் அமுதமாக உள்ளதாம். இப்படி அருட்பெருஞ் ஜோதி, எங்கும் சதா விளங்கிக்கொண் டிருப்பது உண்மை எனில்; ஏன் மனித உள்ளத்தில் அந்த ஒளி வீசாது இருள் மண்டிக் கிடக்கின்றது? கடவுட் ஜோதி, நிறை அருள்மயமாய் எங்கும் நிகழ்ந்து கொண்டிருப்பது உண்மைதான். என்றாலும் மனிதன் அருள்ஞானக் கண் பெறாதவரை அவனுக்கு அவ்வொளி தோற்றுகின்றதும் அனுபவப்படுகின்றது மில்லை. அருட்பக்குவத்தால் அறிவு விளக்கம் உண்டாகின்றபோது, அருள்ஞானம் அடைகின்றபோது, அருட்பெருஞ் ஜோதியை

அது இயல்பாகவே உள்ளும் புறமும் நிரம்பி ஒளிர்கின்றதை மனிதன் அறிகின்றான். அதுவரை, அறியாமல் இருந்தவரை அருட்ஜோதி உள் இல்லாததுபோல், தேக நிலையிலிருந்து கருதி வருகின்றான் மனிதன். புறவானில் கூட சூரியன் சதா ஒளிவீசிக்கொண்டேயிருந்தாலும், பூமியின் சுழற்சிகாரணத்தால் சூரியன் உதயமாவதும், மறைவதும்போல் காணப்படுகின்றது இயல்புதானே.

முதலில் ஒருவன் அறிவு பெற்றிருந்தால்தான் உண்மையை அறியமுடியும்; அவன் தனக்குத் தேவை இன்னது என்று அறிந்து அதனைப் பெற முயலுவான். அறியாமை இருள் செறிந்த மனத்தால் எண்ணுவது கூடாதுபோம். ஆகையால்தான் கடவுள், மனிதனுக்கு அறிவைக் கொடுத்து, இருளைக் களைந்துவிட்டு உண்மையைக் காணச் செய்கின்றார். உண்மை கண்ட வள்ளல் எண்ணம் பலிக்க அருள் அமுதம் வழங்கி வாழ்விக்கின்றதாம் அருட்பெருஞ்ஜோதி.

## 161. உளத்திருந்து தெருட்டிய அருணிலை

321. தெருணிலை யிதுவெனத் தெருட்டியென் னுளத்திருந்
322. தருணிலை காட்டிய அருட்பெருஞ் ஜோதி

(உ-வி)முன் அருள் நிலை இதுவெனத் தெரிவிக்கப்பட்டது; தெளிவாக விளக்கியுணர்த்தப் பெற்றது. அப்படி நன்கு அறிந்துகொண்ட பின்னர், அதைக் காணும் போது மேலான அனுபவம் உண்டாகும். அதுதான் இங்கு அருள்நிலைகாட்டின தாகக் கூறப்படுகின்றது. மனிதன் இந்த அருணிலைக்கு வருமுன், இருணிலை முற்றும் கடந்தேறி, மருணிலையும் நீங்கி இம்மேனிலைக்கு வந்துள்ளான்.

ஒருவன் இம்மனிதப்பிறவி அடையுமுன், வேறு வேறு பிறவி களில், அகத்தே ஆன்ம வடிவினனாய் இருந்தான்; புறவாழ்வால் அறிவனுபவம் ஏற ஏற உள்ளிருந்து திருவருளின் ஆணைக் கொப்ப மேற்பிறவித் தேகங்கள் உருவாகிவந்துள்ளனவாம். திருவருளின் பெருஞ்செயல் இதுவாகும். தெருள்நிலை என்பது ஞானத்தெளிவு நிலையாம். அருட்பெருங் கடவுளே ஒவ்வொரு ஆன்மாவின் அகத்தில் இருந்துகொண்டு, அதற்கதற்கு ஞானா

னுபவ வளர்ச்சிக்கு வேண்டியபடி உயிருடம்பும், சூழ்நிலையும் ஆக்கிக்கொடுக்கின்றார். உளத்திருந்து இப்படித் தெருளச் செய்யும், ஞானநிலைக்கேற்றும் நியதி முறைதான் உலகியல் காரியமாக உள்ளதாம். இந்தப் பிரபஞ்ச காரியம் சித்து விளை யாட்டாக மொழியப்படுகின்றது. சித்தென்றாலே ஞானமாம். ஞானம் விளைவிக்கும் கடவுட் செயலே சித்து விளையாடலாக அறியலாகும்.

பண்பட்ட உள்ளத்தில் தயாவொளி பெருகப்பெருகத்தான் கடவுளின் பேரருட் பெருநிலை இதுவென உணர்த்தப் பெறுவதும், பக்குவத்தே நேரடியாகப் காட்டப் பெறுவதும் முடிவில் அருளின்ப வாழ்வில் விளங்கச்செய்வதும் நம் அகமுடை யானின் திருவுள்ளமாகும். உள்ளிருந்து அருளால் வாழ்வு பெற்றுப் புறத்தையும் நிறைத்துக்கொண்டு வாழ்வது அழியா இன்பப் பெருவாழ்வாகும்.

## 162. பொருட்பதமும் அருட்பதமும்

323. பொருட்பத மெல்லாம் புரிந்துமே லோங்கிய
324. அருட்பத மளித்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி)கடவுள், சொல்லும் பொருளுமாய் உள்ளார் என்பர். அந்தச் சொல் எது, அதற்குரிய பொருள் எது எனப் பார்ப்போம். ஓம் என்பதே ஒப்பற்ற ஒரு சொல்லாகக் கொண்டு கடவுளைக் குறிக்கின்றனர் உண்மை கண்டோர். இந்த அகண்ட பேருலகமும் இதிலுள்ள அணுமுதல் அண்ட பிண்டங்கள் எல்லாமும் இந்த ஓங்கார பிரணவத்திலிருந்து தோன்றி விளங்கு கின்றனவாம். இவ் ஓங்காரத்தின் உள் கடவுள் அருட் பேராற்றல் இருந்துகொண்டு, அதற்குப் புறத்தே எப்பொருள் வடிவையும், உருவாக்கிப் பெரிதாக்கியும், சிறிதாக்கி யொழியச் செய்தும் கொண்டுள்ளதாம். எனவே கடவுளாகிய ஓமெனும் சொல்லுக்கு, அகத்தும் புறத்தும் உள்ள அருளும் பொருளும், அகப்புறப்பொருளேயாம். ''உலகமெல்லாம் உதிக்கின்ற ஒளி நிலை, மெய்யின்பம் உறுகின்ற வெளிநிலையென்று உபயநிலை யாகி இலகிய நின்சேவடிகள்'' என்ற அருட்பிரகாச மாலையின் ஆரம்ப வாசகத்தால், புற உலகம் எல்லாமாகிய ஒளி நிலையும், மெய்யின்பானுபவத்திற்குரிய அக வெளிநிலையும் கடவுளுக்கு

உபயபதமாக, சேவடிகளாக உள்ளனவாம். இதுவே, கடவுள், சொல்லும் பொருளுமாய்த் திகழும் உண்மை. இந்தச் சொற் பொருளை, ஒருவாறு பதம்+அர்த்தம்=பதார்த்தம் என்கின்றனர் வடவர். அவர்கள் குறிக்கும் பதார்த்தம் என்ற சொல்லுக்கு அர்த்தம் புறநிலைப்பொருளைத்தான் குறிக்கின்றதே அல்லாமல் அகப்பொருளாகிய அருளைச் சுட்டுவதாயில்லையாம். ஆகவே, தமிழ்தரும் சொற்பொருள் விளக்கம் வடமொழிப் பதார்த்தத்தில் விளங்காது. ஆனால், அந்தப் பத—அர்த்தத்தையும் தமிழ்வழி நோக்கின் மெய்ப்பொருள் காண்பது எளிதே. பதம் என்றதைப் பாதம் எனக்கொள்வோம். பாதம் என்பது திருவடியே. அது நமது கடவுள் ஆன்ம ஒளியாய்ச் சிர நடு நின்று மிளிருகின்ற நிலை பகர வடிவ பீடத்துள்ளதாம். பகரமே, ப்+அகர அகநிலை யுணர்த்த அதனுடன் இணைந்துள்ள துணைக்கால் ா பகரத்தின் தலைகீழான மாறுபட்டதாய்ப் புற நிலையை யுணர்த்துவதாய் உள்ளதாம். எனவே,'பா' என்ற எழுத்தே அக,புற இணையடி களைக் குறிப்பதாய்க் கொள்ளலாம். அதற்கு மேல் உள்ள 'தம்' சிவஜோதி உண்மைக் கடவுள் வடிவமாக உள்ளதையும் உணர்த் துவதாம். ஆகவே அந்தப் பதம் தரும் அர்த்தமும் நமக்கு உண்மையைக் காட்டிக்கொடுக்கின்றது என அறிவோம்.

இங்கு, பொருட்பதம், புறத்திருவடியான ஜோதி நிலையாம். இது ஓர் ஆன்ம அணுவுக்குச் சூழ்வடிவாக உள்ளதாம். ஆன்மா என்று, சொல்லற்கரிய மாயாபூதநிலையில் உள்ள ஓர் அணுவில், அகம் ஆற்றலாயும் புறம் அவ்வணு வடிவாயும் உள்ளதை அறி வோம். திருவருளால், அக பூத ஆற்றலிலிருந்து உயிர்ச்சக்தி வெளியாகும்போது, அப்பூத அணு, பூதப் பொருள் உருவாய்த் தோற்றி விளைவு கொள்ளுகின்றதாம்.பின்னர் அவ் அக உயிர்ச் சக்தியில் புலன் உணர்வுநிலை உயர உயர, குழுருவம் ஓரறிவுரு வாய், ஈரறிவுருவாய், மூவறிவுருவாய்த் தோன்றித் தோன்றித் தழைத்து வருகின்றதாம். உயிரில் ஆறறிவு விளக்கம் வெளி யாகின்றபோதுதான் ஆன்மாவைச் சூழ மனித தேகம் விளைவு கொள்ளுகின்றது. இம் மனித தேகச் சூழலில் எவ்வளவோ காலமாக விளைவுபெற்ற பக்குவ ஆன்மாவுக்குத் திருவருள் ஞானம் வெளியாகின்றதாம். இந்த அருள் ஞானத்தால்தான் கடவுளின் அருள் திருவடிநிலை, அருளின்பானுபவமாக அடையப் பெறுவதாம். இவ்வருட் பெரும் உண்மைகளை எல்லாம்தான்

இந்த இரு அடிகளால் குறிக்கப்பட்டுள்ளதை இன்று அறிகின் றோம்.

பொருட்பதம் எல்லாம் புரிந்து என்று குறித்தபோது, புறத்தேக வடிவங்களை எல்லாம் வழங்கி எனக்கொள்ளப்படுவ தோடு, புரிதல் என்ற சொல்லுக்குச் சுற்றிடுதல் என்ற பொருள் பட, ஆன்மாவைச் சூழ ஒவ்வொரு பிறவியிலும், ஓர் ஒரு தேகம் சுற்றிச் சுற்றி வளர்ந்து பெருகியதையும் குறிப்பதாகக் கொள்ளலாம். மேலும், புரி என்றாலே உடம்பாகப் பொருட் படலால், அந்தப் பொருட்பதமே இந்த உடம்புகளானதாகவும் தெளியலாகும். இத்தேகச் சூழலால், அகமிருந்து, ஓங்கிய, உயர்வற உயர்ந்த நிலையே அருட்பத அனுபவ நிலையாகக் காண்கின்றோம்.

## 163. உளம் சலியாது அருள்வழி நிறுத்தல்

*325.* உருள்சக டாகிய உளம்சலி யாவகை
*326.* அருள்வழி நிறுத்திய அருட்பெருஞ் ஜோதி

*(உ-வி)* ஐம்புலன் உணர்வுக்கு மேற்பட்டது ஆறாவதாகிய மனஉணர்வாகும். இம்மன உணர்வை, மன அறிவு என்று சிறப்பித்துக் கூறப்படும். இந்த மனம் உடைமையால் மனிதன் என்ற காரணப் பெயர் இவனுக்கு விளங்குவதாய் விளம்புவர் சிலர். வேறு உயிரினங்களில், புலன் உணர்ச்சியும், அதற்கதற்குரிய குண ஆற்றலும், செயல்திறனுமாகிய இயற்கைச் சுபாவமும் வெளியாகின்றனவாம். மனிதனில், அந்தக் குண ஆற்றலும் செயல்திறனுமே இணைந்து விசேடமனமாக விளங்குகின்றதாம். இதனால் பிற உயிர்களிடத்து மனம் என்ற பகுத்தறியும் ஆற்றல் இல்லை என்றறியலாகும்.

இந்த மனத்தின் ஆற்றலும், திறனும், பயனும் முழுமையாக அறிந்துகொள்ள முடியாதாம். ஏனெனில், மனம் உண்மையில், ஆன்மாவின் அக இயல் அம்சமாய் இருக்கின்றதாம். அவ் ஆன்ம அகவியல், கடவுளின் அகத் திருவடியாகவே யுள்ளது. இதனால் சுத்த மனம், திருவருள் உண்மையே என்பது தெளிவு. ஆனால் இவ்வுண்மை முதலில் மனத்தின்கண் சிறிதும் விளங்குகின்ற தில்லை. ஏன் என்றால், இந்த மனிதப்பிறப்பில் தோன்றிய

மனம், ஐம்புலச் சூழலில்தான் பண்டேதொட்டுப் பழக்கப்பட்டு, வளர்ந்து வந்துள்ளதாலும், சதா பொறி வாயில் புகுந்து புகுந்து புறத்தோடி ஓடி உழன்று கொண்டேயிருப்பதாலும் தன் உண்மையை அறிந்துகொள்ளாது கெட்டு அழிந்துகொண்டுள்ளதாம். இப்படிப்பட்ட உழல் மனத்தைச் சுழல் சக்கரத்திற்கு ஒப்பிடுவர் இயல்பறி புலவோர். காற்றைப்போல் சலித்துக்கொண்டிருப்பதும் மனத்தின் குணம் என்பர். இம் மனத்தின் அக உண்மை இயற்கை நிலையை உள்ளம் என்பர். இந்த உள்ளத்திலிருந்தே மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் நிலை தோன்றுகின்றன. இவ்வளவும் மனத்தின் கூறுகளே. இம் மனமே சில சமயம், உள்ளம் என்றும், நெஞ்சம் என்றும், அகம் என்றும் கூறப்படும்.

இங்கு, 'உருள் சகடாகிய உளம்' என்னும்போது, மனத்தின் தோற்றம் உருண்டுகொண்டிருக்கும் ஓடுகின்ற சக்கரத்திற்கு ஒப்பிடப்பட்டுள்ளதாய்க் காண்கின்றோம். அப்படி ஓடிக்கொண்டுள்ள மனத்தைச் சற்றும் அசைவற நிறுத்தல் வேண்டுமாம். இந்த மன ஓட்டத்தைத் தடுத்து நிறுத்துவதற்காகவே பலரும் பல வகையில் எவ்வளவோ பாடுபடுகின்றனர். ஒரு வகையில் வெற்றியும் கண்டுள்ளனர் ஒரு சிலர். மூச்சுக்காற்றாகிய வாசியையாவது ஒரு வழியாக அடக்கிவிடலாம், ஆனால் இந்த மனத்தை அடக்குவதுதான் மிகக் கடினம் என்கின்றனர் பயின்றவர்கள். மனம் காற்றின் கூறாக இருத்தலின், மனம் அடங்குமிடத்துத்தானே வாசியும் அடங்கிவிடும் என்பர் ஒரு சாரார். மனதை ஒருமைப்படுத்தி ஒன்றில் செலுத்தி ஆழ்ந்து நோக்கும்போது எவ்வளவோ ஆற்றலும் உண்மை விளக்கமும் பெறப்படுகின்றன. அது கொண்டு அற்புதச் செயல்புரிவதும், வருங்காலச் செய்திகள் உரைப்பதும் எளிதாம். புறத்தோடு மனத்தை திருப்பி அகத்துற்று நிலை நிறுத்த அக ஆற்றலும், ஆன்மக் கடவுள் விளக்கமும் அடையமுடியுமாம். அப்படி எல்லாம் முயன்று முயன்று அடக்கினாலும்கூட அந்த மனம் அவ்வடங்கிய நிலையில் எவ்வளவுகாலம் நிற்கும்! சிறிதுகாலமே நிற்கக்கூடும்: பின்னர் அந்நிலை விட்டுக் கிளம்பி அதிவேகமாகப் பழைய விரிநிலையிற் படரத் தொடங்கிவிடும். கடுமையான நிர்விகற்பச் சமாதிப் பழக்கத்தால் மனம் உள்ளடங்கிவிட்டாலும், அந்நிலை நீங்கியபின் விவகாரவிருத்தியில் விரிந்துவிடுவது மனத்தின் இயல்பே. ஈதல்லாமல், அச்சமாதிநிலை

நின்ற யோகி உள்ளொடுங்கியவாறு உயிரையே விடுப்பானா யினும், அந்த மனம் கட்டுண்ட நிலையில் குறிப்பிட்ட காலங்கிடந்து, மறுபடியும் அவ்வான்மாவுக்கு வேறொரு மனிதப்பிறப்பு வடிவம் சூழ்ந்துருவாகும்போது, அம்மனம் முன்போல் ஓட ஆரம்பித்து விடுவதாம். ஆகவே ஒருவன் சினமிறக்கக் கற்றாலும், சித்தி யெல்லாம் பெற்றாலும், முடிவில் முத்திநிலை பெற்றாலும் கூட பெரும்பயன் இல்லை என்பது தெளிவு. மனத்தின் அனுபவம் பெறாத கீழின உயிரிற் கிடக்கும் ஆன்மாவுக்கும் சரி, மனத்தின் செயலற்று ஒடுங்கி முத்திநிலையிற் கிடக்கும் சுத்த ஆன்மாவுக்கும் சரி மெய் இன்பத்தோடு கூடிய இறைமய வாழ்வு இல்லையாம். இறைவன் திருவுள்ளம், உயிர்க்கு உலவா இன்பம் அருளுவதே, ஆன்மாவுக்கு நித்தியானந்தம் வழங்குவதே ஆம். அப்படி யிருக்க அந்தப் பிறவாமையை வேண்டிப் பெற்றும், எவ்வளவு கோடி காலம் அப்பிறவா நிலையிலிருந்தும் என்ன பயன்! ஆகை யால், திருவருள் எந்த ஆன்மாவையும் மேலும் மேலும் பிறப் பிக்கத்தான் செய்துகொண்டேயிருக்கும். எதுவரை என்றால், நிறையருளாலே இறவாமை பெற்று இன்ப வாழ்வில் நிலை கொள்ளும் வரையுமாம்!

சுத்த சன்மார்க்கமாகிய அருள்வழியில் நிற்கும்போது தான் மனம் சலியாதிருக்கும். இந்நிலையில் மனத்தின் இயல்பாகிய சகல கேவலம் என்னும் நினைப்பு மறப்பு ஆகிய சலித்துக்கொண் டிருக்கும் தன்மை முற்றும் மாறிவிடுகின்றதாம். அப்போது, மன உணர்வு மன்னிய அருள் உணர்வாக விளங்குவது; மனமே அருள் ஒளியாக மாறிநின்று விளங்குவதாகக் கூறலாம். அருளால் மனம் சலியாவகை யிதுவாகும். இந்நிலையிலிருந்து அருட்பேரின்ப வாழ்வு சேரும்போதும், அந்த அருள் மனம் சற்றும் சலிப்பதில்லை. சலித்தல் என்பதற்கு இவ்விடத்தில் அசைதல் என்ற பொருள் கொள்ளுவதைவிட வெறுப்படைதல், கோபங்கொள்ளுதல் என்ற பொருளிற்கொண்டு, எக்காலத்தும் அருள் ஒளிவளர் இன்பத் தில் தழைத்தவாறு வாழ்ந்து பிறர்க்கும் வாழ்வளித்துக் கொண் டிருத்தல் எனக் கொள்ளலாம்.

## 164. அருள் விளக்கால் திரிமல நீக்கம்

327. வெருண்மன மாயை வினையிருள் நீக்கியுள்
328. அருள்விளக் கேற்றிய அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** ஆதியில், எங்கும் நிறைந்திலங்கும் அருட்பெருஞ் ஜோதியிலிருந்தே ஆன்மாக்கள் வெளியாயினவாம். அந்த அருட்பெருஞ்ஜோதியோ, அனாதிகாலமாக, என்றுமே மன்னி யுள்ள இறைஒளி ஆகும். அந்த மன்னும் (நிலைத்த) பெருஞ் ஜோதியின் சிற்றணுக்கூறுகளே ஆன்மாக்களாக, பல்வேறு தேகச் சூழல்கொண்டு விளங்குகின்றனவாய் அறியப்படுகின்றன. தனித்தலைமைப் பெரும்பதி ஆகிய அருட்பெருஞ்ஜோதி ஆண் டவர், எங்கும், என்றும் பூர்ணமாக நிரம்பியுள்ளவர், ஆதலின் எப்பொருளிலும் எவ்வுயிரின் கண்ணும், அது அதுவாகியும் அவற்றிற்கு அகத்தும் புறத்தும் அனந்த வண்ண பேதத் தோற்றத்தோடு விளங்கிக் கொண்டிருக்கின்றதும், அந்த அருட் பெருஞ் ஜோதியின் வேறு வேறான கூறுகளே என்பது உண்மை யாம்.

''எப்பொருட்கும் எவ்வுயிர்க்கும் உள்ளகத்தும் புறத்தும்
இயல் உண்மை அறிவின்ப வடிவாகி நடிக்கும்
மெய்ப்பொருளாம் சிவம் ஒன்றே என்றறிந்தேன் உனக்கு
விளம்புகின்றேன் மடவாய்நீ கிளத்துகின்றாய் மீட்டும்
இப்பொருள்அப் பொருளென்றே இசைப்பதென்னே பொதுவில்
இறைவர் செய்யும் நிரதிசய இன்பநடம் தனைநீ
பப்பறவே காணுதியேல் அத்தருணத் தெல்லாம்
பட்ட நடுப் பகல்போல வெட்டவெளியாமே''

என்ற திருவருட்பாடலால், ஒன்றாகிய அருட்பெருஞ் ஜோதியாம் சிவநடனபதியே, தன் தனிப்பெருங் கருணைச் செயலாம் திருநட னத்தால் யாவுமாய் விளங்குவதை, வெள்ளிடைமலைபோல், தெள்ளத் தெளியக் கண்டு கொள்ளச் செய்துள்ளார். 'இந்த உண்மையை நன்கு தெரிந்துகொள்ளு; அப்படித் தெரிந்து கொள்ளாது மயக்கறிவால், ஒன்றான இறைஜோதியைக் காணாது, கண்டனவற்றை இதுவென்றும் அதுவென்றும் வீணிற் சொல்லிக் கொண்டு திரியாதே' எனத் தனது மனதுக்கு அறிவு கொளுத்து கின்றார்.

உண்மையைப் புரிந்து கொள்ளாத மனம் சூழுலகிற் சூழு வனவற்றைக் கண்டு பலகாலும் மயங்கிக் கலங்குகின்றது; இத னையேவெருள் மனம் என்கின்றார். இம்மயக்க நிலையால் பாதிக்கப்

படுவன, உடல், உணர்வு, உயிராம். உடலிற் செயலும், உணர்வில் அறிவும், உயிரிற் 'நான்' என்ற அனுபவமும் வெளியாகின்றன. முதலில் உடலையும் மற்ற பொருள்களையும் கண்டு விருப்பு வெறுப்பால் பலகால், பல செயல்களால் அவத்தைப் படவும் துன்புறவும் நேரும். இதுபோல் பொறி புலன் உணர்வில் மருண்மயக்கால், விருப்பு வெறுப்பு காரணமாகக் கலக்கமுறலாகும். இறுதியில் ஆன்மா என்பது என்னவெனத் தெரிந்து கொள்ளாமலே, நமக்கும் அதற்கும் எந்தவிதத் தொடர்பும் இல்லாததுபோல் கருதிக்கொண்டும், ஆன்மநிலைபெற்று வாழாது அழிவதும் கண்டுதான் பெரிதும் வெருள நேருகின்றதாம். இம் மூன்று நிலைகளையே, கன்மம், மாயை, ஆணவம் என்னும் மும் மலங்கள் என்கின்றனர். இந்த மும்மலச் சூழலால் மக்கள் மருள்வதும், பிறப்பிறப்புக்களில் உழல்வதும் உலகில் எங்கும் காண்கின்றோம். இந்த மும்மலங்களையே இங்கு, மாயை, வினை, இருள் என்றுள்ளார். திரிமலப் பிணிப்பால் மக்களும்தேவரும் அதிக தொல்லை பட்டுக்கொண்டு அவத்தையுறுவதையே திரிபுராதிகளால் தேவமாந்தர்கள் எல்லாம் துன்புறுத்தப்படுவதாகப் புராண கற்பனையிற் குறித்துள்ளனர்.

அருட் பக்குவமுற்ற மனிதன், அருட் பெருஞ்ஜோதியின் சிறு வடிவாகிய ஆன்ம அணுவையே, உள்ளபடி தானாக, தானாய் அகமிருந்து விளங்குவதாக அறிகின்றான். இந்த ஆன்மக்கடவுள் நிலைதான், ஒருவனின் உச்சிக்குக்கீழ், உண்ணாவுக்குமேல் ஒரு சிற்றொளி விளக்காகக் காண்கின்றான். இவ்விளக்கு, இவ்வுடம்பில் உயிர் உணர்வு இருக்கும் வரை விளங்கிக்கொண்டுதான் இருக்கின்றதாம். ஆனால் அத்தீபம், சத்விசாரத்தால் ஞானக் கண் திறந்து காண்கின்றபோதுதான் விளங்குவதும், காணாத போது மறைந்துவிடுவதுமாய் இருக்கின்றதாம். மனத்தின் நினைப்பு, மறப்பால் தோன்றியும் மறைந்தும் விடுவது இத்தீபத்தின் இயல்போ! கடவுளின் அருட்பெருஞ் செயலோ எனத் தோன்றுகின்றது. அந்த விளக்கு நித்தியமானதுதான், ஆனால் மனம், மருளியலால் நினைப்பு மறப்பு அடையும்கால், தோன்றுவதும் மறைவதுமாய் விளங்குகின்றதாம். மனம் சுத்தமுற்று அருள்மயமாய் ஆகி புலன் மயக்க மடையாது ஒளிசெய்து நிற்கும்போது, உள்ளொளி விளக்கு அருள் விளக்காய் மங்காது மறையாது பிரகாசித்துக் கொண்டிருப்பதாம்.

"மனத்து விளக்கினை மாண்பட ஏற்றி
சினத்து விளக்கைச் செல்ல நெருக்கி
அனைத்து விளக்கும் திரியொக்கத் தூண்ட
மனத்து விளக்குஅது மாயா விளக்கே"

என்ற திருமந்திரச் செய்யுளால் சுத்த அருளாம் மனத்தால் மாயாத அருள் விளக்காக உள்ளொளியைக் கண்டு கொள்ள லாகும். ஒவ்வொரு ஆன்மாவும் விண்மீன், விளக்கென உள் ளிருந்து ஒளி வீசிக்கொண்டிருக்கின்றது. அருள்விசாரத்தால் அவ் விளக்கினைக் கண்டு அடைந்து கலந்து ஒன்றி, அதுவாகி நிற்போர் திரிமலமற்று திருவருள் நிறைவால், திரிதேக சித்திபெற்று விளங்குவர். இந்த அகம் கண்ட அருள் ஒளியால்தான் ஆணவ இருள் நீங்குகின்றது. அழியாத அந்த ஆன்மாவே 'நாம், நாம்' என்று கருதியும், பாவித்தும், சொல்லியும் கொண்டிருந்த நிலை முற்றும் ஆணவமேயாம்.அந்த ஆன்மா உண்மையில் கடவுளே யாகும் என்றும், அது நாமோ, பிறரோ ஆகாது என்றும் தெளி வாக உணர்த்தப்படுகின்றோம். இந்த அருள் ஒளியுணர்வு நிலையே, ஆணவ மல இருள் நீக்க நிலையாகும். இப்பொழுது அந்த அருள் விளக்கைத் தவிர, அது ஒன்றேயல்லாமல், அதற்கு அன்னியமாக நாம் என்ற ஒன்று, ஆன்மா என்ற மற்ற ஒரு பொருள் இல்லையாம்.

அருள் விளக்கு ஒன்றே பிரகாசித்துக்கொண்டிருக்கிறது. அவ்விளக்கின் செயலாக, அவ்வொளிதானே, சூழ் உயிராய், உணர்வாய், உடலாய், மேலும் உலகெல்லாமாயும் விளங்கிக் கொண்டிருப்பதாக உணர்த்தப் பெறுகின்றோம். இப்போது அந்த அருள் விளக்கு மட்டும் இருக்கின்றது. அதுவே நாமா யுணர்கின்றோம். இத்தோடு மாயையாய் விளங்கிய உணர்வும், கன்மமாய் விளங்கிய உடலும் அருள் ஒளிமயமாய் இருக்கக் காண்கின்றோம். இக்காட்சி நிறை அருளால் அனுபவ நிலைக்கு வரும்போது, கன்ம உடல் சுத்த தேகமாயும், மாயா சூக்கும உடல் பிரணவ தேகமாயும், ஆன்மக் காரண உடம்பு ஞான தேகமாயும் கொண்டு விளங்குவோம்.

## 165. மனச் சுருள் விரிவு அறுத்த அருள் ஒளி

329. சுருள்விரி வுடைமனச் சுழலெலா மறுத்தே
330. அருள்ஒளி நிரப்பிய அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) மனமானது சுருங்குவதும், விரிவதுமாய் உள்ள தாம். அந்தச் சுருக்கமும் விரிவும் ஒவ்வொரு நிலையிலும் இடை யறாது உண்டாகிக்கொண்டே யிருக்கின்றன. விழிப்பு நிலையில் சிந்தித்துக்கொண்டே போகப்போக ஒருபக்கம் விரிந்து கொண்டே செல்லுகின்றது, மற்றொருபுறம் சுருங்கிக்கொண்டே வருகின்றது. அந்த விரிவிலும், சுருக்கம், சுருக்கத்திலும் விரிவு எத்தனையோ உண்டாகின்றன. கனவு நிலையிலோ மனத்தின் விரிவும் சுருக்கமும் மாயா தோற்றமாய் விளங்கிக்கெடுகின்றது. சுழுத்தி நிலையில் மனம் முற்றுஞ் சுருங்கிக்கிடக்கின்றது; பின் விழிப்பில் விரிவுறுகின்றது. அகமனத்தின் நிலைவேறு; முன்பல பிறவிகளில், கண்டும், எண்ணியும் அனுபவித்தும் வந்த விஷயாதிகள் முற்றும் சுருங்கிக்கிடந்து சமய சந்தர்ப்பத்திற்கு ஏற்றாற்போல் விரிந்து வெளிப்பட்டுத் தோன்றுவதும் மறைவது மாயிருக்கிறதாம். இதனைப் பூர்வ ஜென்ம வாசனை என்பர். மேலும், மனம் சுற்றிக்கொண்டே இருக்கின்றபோதும் சுருங்கு வதும் விரிவதுமாயுள்ளது. இதனால்தான் இம்மனத்தைச் சலி யாது இருக்கச்செய்வது அல்லது அசையா விளக்குபோல், சித்திர தீபம் போல் நிற்கச் செய்வது கடினமா யுள்ளதாம். அப்படியே மனத்தை ஒருநிலைப்படுத்தினாலும் கூட, அதில் உள் மடங்கியும் ஒடுங்கியும் கிடக்கும் எண்ணப்பெருக்குகள், மறுபடி யும் ஓர் ஒரு சந்தர்ப்பத்தில் எழுந்து விரிந்து படரத்தான் செய்யும்.

சகல கேவலமற்ற சுத்த நிலை பெற்றமனம், அருள்ஒளி மய மாய் நிலவுவது உண்மையே; அதிலும் செயல்படாதிருக்கும் போது சுருங்கியும்,அனுபவத்தில் விளங்காமலும், இருப்பதால் பயன் இன்றாம். ஆகையால் அத்துரியானுபவத்தில் தூங்கா மல் தூங்கியிருந்தும், சமாதி நிலையில் மனமுற்றும் செயலற்றுக் கிடந்தும் பயனற்றுத்தான் போகின்றதாம். அவ்வக நிலையிலிருந்து தேகப்பிறப்பு ஏற்படாது இருந்து விட்டால் அது இறையனுபவநிலை என எண்ணினதும் சரி யன்றாம். ஏனெனில் அப்பிறவி அற்ற நிலையில் கிடக்கும் கால மெல்லாம் மனம் செயலற்றுச் சுருங்கிக் கிடக்கின்றது உண்மை யாம்; பின் மறுபடியும் ஒரு மனிதப் பிறவி எய்திடும் போது அம்மனம் விரிவுற்றுச் செயல் படுவதாம்.

இப்படிச் சுருக்கமும், விரிவும் அடைகின்ற சுழலு மனத்தை முற்றும் மாற்றி நின்று விளங்கிக்கொண்டே யிருக்கச் செய்தல்,

எந்தவிதத் தந்திர உபாய முயற்சியாலும் மனிதனால் முடியாது என்பது உலகம் கண்ட உண்மையாகும். ஆனால் இத்தருணம், அருட்பெருஞ்ஜோதிக் கடவுளே, அகமிருந்து அனகமுற விரிந்து மனிதனில் அகமும் புறமும் நீக்கமற நிறைந்து இருக்கின்றதைத் திருவருளால் உணர்ந்துகொள்ளச் செய்துள்ளார். இந்தக் கடவுட் ஜோதியின் நிறைநிலை எப்பொழுதும் ஒருபடித்தாயுள்ள தாம்: அதாவது, சுருங்குதலும் விரிதலும் இல்லையாம். ''அருட் ஜோதியுமாய்ச் சுருங்காதோர் தன்மையுள், நீதியுமாய் நித்தமாகி நின்றானே,'' என்ற திருமந்திரக் குறிப்பாலும் அருட் பெருஞ்ஜோதியின் நிறை நித்திய நிலை விளங்குவதாம். அந்தத் திருவருளால் முற்றும் ஆட்கொள்ளப்பட்ட மனிதன், தானே அந்த நிறைவொளிமயமாய் இருக்கக் காண்கின்றான். அந்நிலை யிலிருக்கும் அவன் எங்கும் பூரணமாய் உள்ளதாயும் உணர்கின்ற தால் இருந்த இடத்திலிருந்தே எவ்விடத்து யாவையும் அருளால் விளங்கச் செய்துகொண்டு எப்போதும் வாழ்கின்றான். மனம் அருட்ஜோதி நிறைவான நிலையில்தான் எப்பொழுதும் சுருங்குவதுமில்லை, விரிவதுமில்லையாம். இவ்வுண்மையைத்தான் இங்கு கண்டு தெளிவுறுகின்றோம்.

## 166. விருப்பு வெறுப்பில்லா அருட்பேறு

331. விருப்போ டிகலுறு வெறுப்புந் தவிர்த்தே
332. அருட்பே றளித்த அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** மனிதன் இவ்வுலக வாழ்வில், விருப்பு, வெறுப்புக் காரணத்தால்தான், எல்லாவிதமான அவத்தையும் அடைந்து அழிந்துபட்டு ஒழிந்துகொண்டிருக்கின்றான். ஒருவனுக்கு ஒன்றில் அவா ஏற்பட்டு, அதனை அடைய முயல்கின்றான்; அதனை அடையப் பெறானாகில், அத்தோடு அடையவேண்டுமென்ற அவாவும் பெருகுமானால், அதனை அடைந்தே தீர பெருமுயற்சி செய்கின்றான். அம்முயற்சிக்கு எதிரான தடைகளை நீக்கவும் பாடுபட்டு மேலும் முயற்சியைத் தொடங்குகின்றான். பின்னும் அது கைகூடாதபோது மற்ற யாவையும் வெறுக்கின்றான். அப்படி தனது முயற்சிக்கெல்லாம் கிட்டாத அதனை வேறு ஒருவன் எப்படியோ அடைந்து விடுகின்றானெனில், இவனுடைய வெறுப்பு, கோபம், கடுகடுப்பு எல்லாம் அவன் மீது திரும்பிவிடு கின்றனவாம். இதனால் இருவருக்குமே அமைதியும், இன்பமும்

பெறமுடியாது அவத்தையுறுகின்றார்கள். ஆகவே, விருப்பு நிறைவேறாதபோது, அதற்கு(இகல்) எதிரான் வெறுப்பாக மாறி விடுகின்றதாம். இதுபோலத்தான், அவா, ஆசையாகி, . மோக மாகியும் நிறைவேறாத சமயம் இகலும் பகைமையான வெறியுங் கோபமுமாக மாறி அழிவுறச் செய்வதாம்.

ஆகையால், ஒருவன் எதிலும், எவர்மீதும் விருப்பும், வெறுப்பும், வளரவிடக்கூடாது. விருப்பும், வெறுப்பும், வேண்டு தல் வேண்டாமை எனவும் கொள்ளலாகும். விருப்பால் வெறுப் பும், வெறுப்பால் அழிவும் உண்டாகின்றதெனக் கருதி, அந்த விருப்பே வேண்டாம் என்று விலகி நின்றுவிடுவது நல்லதா என்றால் அதுவும் நல்லதல்லவாம். விருப்பையே வெறுப்பது, விருப்பற்று இருப்பதையே விரும்புவது, வேண்டாமையே சிறந்த தெனக்கொள்ளுவது எல்லாங்கூட சரியல்லவாம். ''வேண்டாமை யன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை, யாண்டும் அஃதொப்ப தில்.'' என்பதை நினைந்து, வேண்டாமையையே, மிக மதித்து அதனைப் பெரிதும் விரும்பிக் கொண்டவனுக்கும், அவ்வேண்டாமை நிலை கிடைக்காதபோது வெறுப்புண்டாகின்றதாம். இந்த வேண் டாமை துறவு நிலைக்கே அடிகோலுவதாம். யாவையும் வெறுத்துத் துறந்து இறையடியில் அடங்கிப்போவதற்கே இந்த வேண்டாமை வழி செய்கின்றது. அப்படி இறையடியிற் கரந்துறையும் நிலை யையே பெரும் பேறெனக் கொண்ட பெரியோர்களே தாம் இந்த வேண்டாமையையும், துறவையும் அதிகம் போற்றிக் கொண் டிருந்தனர் என்று அறியலாகும்.

நம் சுத்த சன்மார்க்கத்திற்கு இறவா இன்ப வாழ்வே முடிந்த குறிக்கோளாம். ஆகையால் வேண்டாமையும் துறவும், அவற்றால் உள்ளொடுங்கிப் போதலும் இலட்சியமல்லவாம். ஆகவேதான், ஒருவன் சுத்த அன்பு அல்லது தயவுடையவனாகி, உலகில் அத்தயவுச் செயல் தடைபடாது விளங்க வாழவேண்டி யுள்ளதாம். இந்த வாழ்வுப்பேறே, அருட்பேறு என்று இங்கு குறிக்கப்படுகின்றதாம். அதுவே, 'விருப்போடு இகலுறு வெறுப்பும் தவிர்த்தே, அருட்பேறு அளித்த அருட்பெருஞ் ஜோதி' எனப் பட்டுள்ளது.

*''புறப்பற் றகற்றத் தொடங்காத பெண்ணே*
*புலையகப் பற்றை அறுத்தாய் நினக்கே*
*இறப்பற்ற தென்கின்றார் என்னடி அம்மா*
*என்கை பிடிக்கின்றார் என்னடி அம்மா.''*

என்றதால், புறப்பற்றை அகற்றத் தொடங்காது, புலை அகப் பற்றான தேகப்பற்றை மட்டும் நீக்கிவிட்டு, அகத்தே அருள் ஒளி வடிவாய் இருந்து அருட்செயல் புரிந்துகொண்டு வாழவேண்டும் ஆம். அப்படி வாழ்வதால்தான் இறவாமையுற்று என்றென்றும் வாழ்ந்து கொண்டிருக்கலாம் எனத் தெளிவாக்கப்படுகின்றதாம். ஒருவன், விருப்பும் அதற்கு எதிரான வெறுப்பும் கொள்ளா திருப்பது நல்லதுதான். அதற்கு மேல் அவ்விருப்பு வெறுப்பற்ற நிலையிலிருந்து கொண்டு உலகிடை அருளியல் வாழ்வுடன் விளங்க வேண்டும் என்பது குறிப்பு.

## 167. அருட்பேரும் அருட்சீரும்

333. அருட்பேர் தரித்துல கனைத்து மலர்ந்திட
334. அருட்சீ ரளித்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) மருள்மயக்கில் ஆழ்ந்திருந்த உலகத்தும், கடவுளின் அருட்செயல்தான் வெளியாகிக்கொண்டிருந்தது. மனிதன் பகுத்தறிவால் கண்டிருந்த அரிய பெரிய விஷயங்கள் உலகுக்கு எவ்வளவோ நன்மைகளை விளைவித்துள்ளன, என்றா லும், தீமையும் அதிகம் விளைந்துள்ளதாம். புற ஆய்வால் கண்ட உண்மையை விட, அக ஆன்ம விசாரத்தால், பகுத்தறிவுக்கு மேற் சென்று கண்ட உண்மையும், அறிவரிய கடவுள் விளக்கங்களும் விசேடமானவைகளாகும். எனினும், நாட்டமெல்லாம் அகத்தில் நாட்டினால் உலகியல் வாழ்வு தடைப்பட்டு அழிவுற நேர்ந்ததால் அந்த அகவுண்மையை உலகம் நன்கு அறிந்து ஏற்க முடியாது போயிற்றாம். அகவுண்மையிலிருந்து உலக வாழ்விற்குப் பெரு நன்மை வரவேண்டியிருந்தது. திருவருளும் உதவினதால் (கட) வுள் உண்மை உலகில் அறிந்தும் அறியாமலும் பரவத் தொடங்கிவிட்டதாம். அந்தக் கடவுள் உண்மை வெளியாக்கப் படவே நம் தமிழும் உருவாக்கப்பட்டதாம்.

கடவுள் எல்லாம்வல்ல அருள்ஒளி மயமாய் அறிய வந்து, ''சிவம்'' எனக் குறிக்கப்பட்டபோது, சி-பேரொளியாகவும், வ-பேரருட் சக்தியாகவும், ம்-அச் சிவத்தால் விளைந்துள்ள உலகுயிர்த் தோற்ற மெல்லாமாகவும் அறியப்பெற்றதாம். ஒளி கடவுள் வடிவம் என்னில், அதன் தன்மையாகிய அருள் கடவுட்சக்தியாக விளங்குகின்றதாம். அந்த அருட்பெருஞ் சக்தியே யாவற்றிற்கும்

அகமிருந்து விரிந்து பலப்பலவாகிய உயிர்களாயும் பொருள்களாயும் விளங்குகின்றனவாம். இதனால்தான், அந்தக் கடவுள் அருள் உண்மையை மனிதனில் அறிந்து அடையக்கூடியதாயுள்ளது என்பர். இக் காரணத்தால், மனிதன் உண்மையில் அருட்பெருங் கடவுள் அம்சம் ஆனவன் என உணர்ந்து, மக்களுக்கு இட்ட பெயர் அருள்விளக்கம் கொண்டதாய் அமைத்துக்கொண்டனர் ஆம். தெய்வங்களின் பெயரும், மக்கள் பெயரும் வேறு உயிரினங் களின் பெயர்களும், பொருள்களின் பெயரும் கூட கடவுள் உண்மை விளக்க வந்தனவாக அறியப்படுகின்றனவாம்.

''பெருகியபே ரருளுடையார் அம்பலத்தே நடிக்கும்
பெருந்தகையென் கணவர்திருப் பெயர்புகலென் கின்றாய்
அருகர்புத்தர் ஆதியென்பேன் அயனென்பேன் நாரா
யணனென்பேன் அரனென்பேன் ஆதிசிவ னென்பேன்
பருகுசதா சிவமென்பேன் சத்திசிவ மென்பேன்
பரமமென்பேன் பிரமமென்பேன் பரப்பிரம மென்பேன்
துருவுசுத்த பிரமமென்பேன் துரியநிறை வென்பேன்
சுத்தசிவ மென்பனிவை சித்துவிளை யாட்டே.''

என்றதாலும்,

''சிற்சபையில் நடம்புரியு நாயகனார் தமக்குச்
சேர்ந்தபுறச் சமயப்பேர் பொருந்துவதோ என்றாய்
பிற்சமயத் தார்பெயரும் அவர்பெயரே கண்டாய்
பித்தரென்ற பெயர்படைத்தார்க் கெப்பெயரொவ் வாதோ
அச்சமயத் தேவர்மட்டோ என்பெயர்நின் பெயரும்
அவர்பெயரே எவ்வுயிரின் பெயருமவர் பெயரே
சிற்சபையில் என்கணவர் செய்யுமொரு ஞானத்
திருக்கூத்து கண்டளவே தெளியுமிது தோழி.''

என்றதாலும், எத்தேவர் பெயரும், மனிதர் பெயரும், உயிர் களின் பெயரும், அகத்துறைத் தலைவன், தலைவி, தோழி முதலி யோரின் பெயரும் அருட்பெரும்பதி யுண்மையை வெளிப்படுத் தற்கே ஆக்கப்பட்டனவாய் அறியலாகின்றன.

இப்போது நம் நெறியில் குறிக்கப்படும் கடவுளுக்கு அருட் பெருஞ்ஜோதி என்ற பெயர் வழங்கப்பட்டுள்ளதாகக் கருது கின்றோம். இது கடவுளுக்குரிய பெயராக மட்டுமல்ல, இந்த அருட்பெருஞ்ஜோதியே, கடவுள் எனவும் தெரியலாகின்றதாம். அருட்பெருஞ்ஜோதியே, இயற்கையுண்மை விளக்கமாயும்,

இயற்கையுண்மை வடிவாயும், இயற்கையின்ப நிறைவாயும் உள்ள கடவுளின் நிறைநிலையனுபவம் இதனால் விளங்கு கின்றதாம். இந்த அருட்பெருஞ்ஜோதி இறைவரே இன்று நம் வள்ளலாருக்கு ஓர் அருட்பேர் வழங்குவித்துள்ளாராம். அதுதான் திருவருட்பிரகாச வள்ளல் என்பது. இப்பெயர் தற்பெருமைச் சுட்டாகிவிடுமோ என்ற ஐயமும் அச்சமும் கொள்வோர், இவரது முற்பெயராகிய ''இராமலிங்கம்'' என்பதையேகூட அருள்விளக்கம் தருவதாய் ஆய்ந்து கொள்ள லாம். இதிலும், இராம என்ற தாரக மந்திரப்பேர், உள்வளர் அருள் ஒளியையும், இலிங்கம் அவ்வுள்ளொளி கொண்டிலங்கும் புற வடிவத்தையும் குறிப்பதாய்க் கொண்டு தெளியலாம். இதனைவிட முன்னதே திருவருட்சம்மதமாம். அந்த அருட்பிரகாச அருட்பேரால்தான் அனைத்துலகும் மலர்ந் திடுவதாய் உள்ளது. வான் ஜோதி கண்டு தாமரை மலர்கள் யாவும் மலர்ந்து விகசிப்பதே போன்று, இந்த அருட்பிரகாச வள்ளற் ஜோதியைக் கண்டு அனைத்துலகங்களும் மலர்கின்றன வாம். எவ்வெவரும், உள்ளமாகிய அகவானில் பிரகாசித்துக் கொண்டிருக்கின்ற இந்த அருட்பிரகாச வள்ளற் ஜோதியை அருளாற்கண்டு பூர்ண மலர்ச்சி பெற்று ஆனந்தமாக விளங்குவார் களாக. இதுதான் அவர் பெற்ற அருட்சீரின் பெருமையாகும். இதுவே உலகுக்கெல்லாம் பெருமை தருவது.

## 168. உளத்திருந் தோங்கும் அலகிலா ஒளி

335. உலகெலாம் பரவவென் உள்ளத் திருந்தே
336. அலகிலா வொளிசெய் அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) உலகப் பெருவெளி அளவிடற்கரியது. அந்தப் பெருவெளி முற்றும் பரிபூரணமாக நிரம்பியுள்ளதுதான் அருட் பெருஞ்ஜோதி. இந்த நிறை பெருஞ் ஜோதி நிலை, ஓர் குறிப் பிட்ட இடத்தில் தோன்றித் திக்கெல்லாம் அளவில்லாக் கதிர் களை வீசி பரப்பிக்கொண்டிருக்கிறதா என்றால், அப்படி ஒன்றும் இல்லை என்றறிவோம். அப்படி இருக்கவே முடியாதாம். ஏனெனில், ஒரு குறிப்பிட்ட பெருஞ்ஜோதி, இந்த அகண்ட பெரு வெளியில் எங்கோ ஓரிடத்திலிருந்து ஒளிபரப்பினால் அது, அவ் வகண்ட வெளி முற்றும் பரவி விளங்க முடியாதாம். மேலும்

அவ்வொளியின் ஆற்றல், அணுக்கத்தில் மிகமிக அதிகமாயும் நெடுஞ்சேய்மையில் அருகி அருகி காண்பரிதாகியும் விடும். ஆகையால் அருட்பெருஞ்ஜோதி அப்படிப்பட்ட ஒன்றல்ல என்பது உண்மை.

இங்கு, வள்ளல் உள்ளத்தில் ஒளிசெய்து நிற்கின்ற அருட்பெருஞ்ஜோதி, உலகெலாம் பரவ உள்ளதென உரைக்கப்படுகின்றது. இது எப்படி முடியும்? இவரது உள்ளம்பரத்தில் விளங்கும் சிற்சோதி, எவ்வளவு பெரிய ஜோதியாய் இருந்தாலும் கூடத் தன்னொளியைத் திசை திசைதோறும் பரப்பி உலகெல்லாம் நிரம்பிடச்செய்ய எப்படி முடியும்? முடியாதென்றே பலரும் பகர்வர்! ஆனால், இங்கு, இவர், இப்படி ''உலகெலாம் பரவவென் உள்ளத்திருந்தே அலகிலா வொளிசெய் அருட்பெருஞ்ஜோதி'', என்று கூறியிருக்கின்றாரே. இக் கூற்று சரியா, பொருந்துமா என்ற ஐயம் பலருக்கும் எழலாம். திருவருளாலே உண்மையை உள்ளபடி உணரும்போது ஐயமெல்லாம் நீங்கி முற்றும் இக் கூற்று சரியானதே, பொருத்தமானதே என்று அறியலாகும்.

உண்மை இதுவாகும்: இவரது உள்ளத்திருந்து விளங்குகின்றது, அணுத்துவமாயுள்ள, மிகச் சிறிய அளவுடைய ஜோதியே ஆகும். ஆனால், அது பேரருளால் விளங்குகின்றது. அதனால் அது அலகிலாததாய், அருட்பெருமை கொண்டதாய் உள்ளதாம். இப்படியிருந்தாலும் இந்த அருட்பெருமை கொண்ட மிகச் சிறிய ஜோதி உலகெலாம் ஒளிபெறச் செய்தல் எப்படி? இந்தச் சிற்றணு ஜோதியின் உண்மை யாதெனில், அகண்ட வெளிமுற்றும், எங்கும் பரிபூரணமாய் விளங்கும் அருட்பெருஞ்ஜோதியின் சிற்றுருவேயாகும். அதாவது, பெருவெளி எங்கும், எந்த ஒரு சிறிய கூறிலும் இந்த அருட்பெருஞ்ஜோதி தன் முழு நிறைவோடு அனுபவப்படுவதாயிருக்கின்றதாம். ஆகவே, இவரது ஆன்ம சிற்சபையில் திகழ்கின்ற அருட்பெருஞ்ஜோதி இங்கு பூரண இயல்போடு வெளிப்பட்டுள்ளதேபோல, இந்த மாபிரபஞ்சத்தில் எவ்வுலகத்துள்ள எவ்வெவர் ஆன்மசிற்சபையின் கண்ணும் முழுநிறைவோடே எப்பொழுதும் விளங்கிக் கொண்டிருப்பது முழு உண்மையாகும். இதனால், ஒரு குறிப்பிட்ட ஆன்ம அணுவில் வெளிப்பட்டு விளங்கும் உண்மை அதே நொடியில் எங்கெங்குமுள்ள எல்லா ஆன்மாக்களிலும் வெளியாகி விளங்

குதல் அருளின் பேரியல்பாகும். ஆகையால், வள்ளலாரின் உள்விளங்கும் அருட்பெருஞ்ஜோதி, தன் நெடுங்கதிர்களை அகண்ட வெளியில் நீட்டிச்சென்று, பரவச்செய்ய வேண்டிய தில்லை. புறத்திருந்து பரவாமலே எங்கும் பூரணமாய் நிரம்பி யுள்ளதாக அறிகின்றோம். இப்படி அருட்பெருஞ்ஜோதியே எங்கும் எவர் உள்ளும் பூரணமாய்ச் செல்லாமற் சென்று நிலவும் போது, இவர், ''என் உள்ளத்திருந்தே உலககெலாம் பரவ,'' என ஏன் சொல்லுகிறார்? இங்கு ''பரவ'' என்பதற்குக் கொள்ளப்பட வேண்டிய பொருள், சென்று படர்ந்து, விரிந்து அடைந்து பரவச் செய்தல் என்ற பொருளில் கொள்ளக்கூடாது: அதற்குப் பதிலாக, பரவுதல் என்பதற்குரிய, போற்றுதல், துதித்தல் புகழ்தல் என்ற பொருள்படக் கொள்ள வேண்டும். அதாவது உலகெங்குமுள்ள ஆன்மாக்கள், இந்த இவர் உளம்கொண்ட அருட்பெருஞ் ஜோதியையே தத்தம் உளங்களிற் கண்டு போற்றி புகழ்ந்து பயனுறச்செய்ய வேண்டும் என்பதே திருவுள்ளமாம்.

எனவேதான் இப்படி, உலகெலாம் பரவ (போற்றிப் பணிந் தேத்திப் பயனுற) என் உள்ளத்திருந்தே ''அலகிலா ஒளி செய் அருட்பெருஞ்ஜோதி,'' என்று துதித்துள்ளார் என்பது உண்மை யும், ஐயம் திரிபுக்கு இடமில்லாததுமான விளக்கமாம்.

இதுவரை இரண்டிரண்டடிகளாகத் தொகுத்து ஓர் ஒரு தலைப்புடன் உரை விளக்கம் செய்யப்பட்டது. இதற்குமேல் தொகுநிலை வேறு வேறு விதமாய் வரும், அங்கங்கு இரண்டு அடி களுக்குமேலும் கூடிவரும். அடுத்துவரும் அடிகள் ஐம்பூத இயல் விளக்கம் கொண்டனவாம். அதுவும் ஆரம்பத்தில் விண்ணிலை நின்று விரிந்து விளங்கக் காணுவோம்.

## 169. விண்ணிறைந்த ஜோதி

337. விண்ணினுள் விண்ணாய் விண்ணடு விண்ணாய்
338. அண்ணி நிறைந்த அருட்பெருஞ் ஜோதி

339. விண்ணுறு விண்ணாய் விண்ணிலை விண்ணாய்
340. அண்ணி வயங்கும் அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) அகண்டமான பெருவெளி அனாதியாகவே யுள்ளது. இப் பெருவெளி''யின் அளவு இவ்வளவுதான் என்று, எவராலும்,

எவ்வகையிலும் கணக்கிட்டுச் சொல்லிவிட முடியாது. இந்த அளப்பரிய பெரிய வெளியில் அனாதி இயற்கையாகவே நிரம்பி யுள்ளது. ஆகாசம், வான், விண் எனப்படுவது. இதுவே ஐம் பெரும் பூதத்தில் முதலாவ்து ஆகும். இது மிக நுண்ணியதாய், அதி சூக்குமமாயிருந்தாலும் அலைவும் அசைவுமில்லாது மலை போல நிலையாக இருந்துகொண்டுள்ளதாம். பிற பூதங்களைப் போல் இது, காணக்கூடாததாய் இருத்தலின் இருப்பு விளங் காததால், ஆகாசபூதம் என்று ஒன்று இல்லை என்றே கூறுவர் சிலர். நம் கருத்தை ஒப்புக்கொண்ட சில மேனாட்டார், இந்த விண் பூத இருப்பை ஒருவாறு ஏற்றுக்கொண்டு ஓரளவு விளக் கமும் தந்துள்ளனர். அது, வெளிமுழுவதும் நிரம்பியுள்ளதாகக் கருதப்படும் மிக நுண்ணிய ஊடகப் பொருளாம் (the subtle medium supposed to fill all space) என்கின்றனர்.

இங்கு அந்த விண்ணின் விளக்கம் அருட்பெருஞ்ஜோதி யோடு கூட்டி வழங்கப்படுகின்றதை உய்த்துணரலாகின்றது. வெளிநிறைவான் பொருள் ஏகமாய்த் தோற்றினும் அது முற்றி லும் அணுச்செறிவுடைய நுண்நிலைப் பொருளேயாகும். அதில் தனியொரு விண் அணுவைக் கருத்திற்கொண்டு சோதனை செய் வோம். ஓரணுவை ஆய்ந்து பார்க்கும்போது, அந்த அணுவுக்கு அகம், புறம், இடைநிலை ஆகிய முக்கூறு உளவாக உணரப் படும்.

விண் அணுவில் அகமாய் இருப்பதும், அதைச் சூழ இடை நிலையாயிருப்பதும் எது என்றால், அகம் நிறைந்த அருட்பெருஞ் ஜோதியே. இதுவே முன் இரண்டு அடிகளின் விளக்கம். அருட் பெருஞ் ஜோதியே இவ் விண்ணணு விளங்கக் காரணமாய் இருப்பதை யுணர்த்துகின்றது. அண்ணி நிறைந்தது என்றால் நெருங்கிச் செறிந்து நிரம்பியுள்ளதாம். அடுத்துள்ள இரண்டு அடிகள், அணுவின் புறநிலையையும், அது ஒன்றோடொன்று கூடிப் பெருகி நிலைகொண்டு விளங்கும் நிலையையும் குறிப்பது. இது அருட்பெருஞ்ஜோதியின் செயலாக அண்ணி வயங்குகின்றது; அதாவது கூடி விளங்குகின்றது ஆம்.

இவ்வெளி நிறைந்து நிலைகொண்டிலங்குகின்ற விண் அணுக் கள் ஒவ்வொன்றிலும் அருட்பெருஞ்ஜோதியின் விளக்கமும் செயலும் ஆதிமுதலே இருந்து வருவது உண்மையாகும். இந்த அருட்பெருஞ்ஜோதி விண்ணணுவேதான், பக்குவ காலத்தில்

நமது ஆன்மாவாக, கடவுட்ஜோதிச் சிற்றணுவாகக் கண்டுகொள் ளப்படுவது.

## 170. காற்றின் விளைவும் நிலையும்

341. காற்றினுட் காற்றாய்க் காற்றிடைக் காற்றாய்
342. ஆற்றலி னோங்கிய அருட்பெருஞ் ஜோதி

343. காற்றுறு காற்றாய்க் கானிலைக் காற்றாய்
344. ஆற்ற விளங்கும் அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) விண்வெளியாய் விளங்கும் நிலையில், அவ் வான்பூத அணுக்கள் கூடி நிலையாகித் திகழ்ந்து கொண்டுள்ள தாகும். அந்த ஆகாசபூத அணு ஒவ்வொன்றிலும் அகத்திற்கும் புறத்திற்கும் இடையில் தோற்றரிய மின்னியல் இயக்கச் சக்தியாயிருந்து சிற்றசைவை யுண்டுபண்ணுகின்றது. அந்த அசைவியக்கமே காற்றின் விளைவுக்குக் காரணமாகும். இச்சலன சக்தியையே, வாயு, காற்று என்கின்றோம். ஆகவே, காற்றினுட் காற்றாய் இருப்பது அச்சலன சக்தி எனவும், காற்றிடை காற்றாய் இருக்கின்றது அச் சக்தியின் இயக்கம் எனவும் அறியலாகும். இவ்வியக்கச் செயலால் மிக நுண்ணிதான காற்று வெளியா கின்றது. காற்றின் தொடர்நிலைதான் புறக்காற்றுக்கு அடிநிலை யாக இருக்கின்றதாம். இதனால் விண்வெளியில் இயல்பாகவே காற்று மிக நுண்ணிலையில் விளங்கிக்கொண்டே யிருக்கின்ற தாம். இவ்விண்வெளி நுண்ணியக்கக் காற்றைக் காற்றென்றே அறிய முடியாது; அதனை மின்காந்த சக்தியாக அறிவியல் காண் கின்றது.

காற்றினுட் காற்றாய்க் காற்றிடைக் காற்றாய் ஆற்றலின் ஓங்கிய அருட்பெருஞ்ஜோதி என்றதால், அக் காற்றின் அக சக்தியாயும், அகப்புறமாகிய இடையுறு இயக்கமாகவும் இருந்து விளைந்து தழைத்தோங்கியுள்ளது உண்மையில் நம் அருட்பெருஞ் ஜோதியின் ஆற்றல் இயக்கமேயாகும். அவ்வியக்கத்தால் வெளிப்பட்டு விளங்கும் வாயு இயக்கநிலை வான்வெளியில் நிரம்பி யுள்ளதாம். இது அருட்பெருஞ்ஜோதியின் காற்றியல் விளக் கமே.

விண்ணிலையைச் சிவமாகக் கற்பனை செய்கின்றபோது, அந்நிலையில் இயல்பாகத் தோற்றிச் சலன சக்தியாக விளங்கும் காற்றைச் சிவனின் அருட்சக்தியாகப் புனைந்து கொள்ளப்படு கின்றதாம். சி-பரமாகாசக் கடவுள் வடிவாயும், வ-அப்பரமா காச வடிவிற் பிரிவற நிலைகொண்ட சிவன் அருட்சக்தியாக, சிவன் திருவடியாகக் கொள்ளுகின்றனர். வாய்வு அல்லது வாயு என்பது வான்நிலை நீங்காக் காற்று ஆற்றலாய் இருந்து மேற் கொண்டு, யாவும் தோன்றி விளங்கி அனுபவப்படத் துணையா யுள்ளதாம். இதனால், அச்சக்தியால் யாவும் நடத்தலின் அதனைக் கால், காற்று, அடி என்றும், அதனால் எல்லாம் சித்தித்தலின், அதன் வழியாக வருதலின் அதனை வாய்வு, வாயு, என்றல் பொருந்துவதே. மேலும், சிவ விளக்கத்தில், வகரம் அருள்சக்தித் திருவடியாகக் கொண்டு யாவும் வாய்ந்திட (சித்திக்க)ப் பெறுவ தால், பரசிவத்தில், வ— காலும் சி-முக்காலும் இணைந்ததாய்க் கொள்ளுகின்றனர். இந்த வகரத்தால் அருள் அடி உண்மை சுட்டப்படலின், புற வான்வெளிக் காற்றுக்கும் அதன் பலவாகிய நிலைக்கொப்ப, வகர அக்கர முதலாய்க் கொண்ட சொற்கள் பல வழங்கப்படுகின்றனவாம். காற்றைக் குறிக்கும் வேறு பெயர்கள்: வாயு, வாதம், வங்கூழ், வாடை, வம்பு, வந்து,வாசி, வளி எனப் பலவாம்.

சுத்த சன்மார்க்கத்தில் அருளே கடவுளின் பேராற்றற் பெருஞ்சக்தியாக இருக்கின்றது. அந்த அருள் எல்லாம்வல்ல ஆற்றலாய்க் கடவுளோடு பிரிவறக் கூடி விளங்குதல் சத்தியம். இறைவனை எல்லாம்வல்லான் என்கின்றோம். இறைவனும் அவர் தம் இயல்பும் பிரிவற, அத்துவிதமாய் உள்ள ஒன்று அனுபவபூர்வமான உண்மையாம். ஆகாசத்தில் வாயுசக்தி கலந்திருப்பது போலும், சர்க்கரையில் இன்சுவை கலந்திருப்பது போலும்,. கடவுளில் அவரது தன்மையாக நாம் கலந்திருப்பதும் உண்மையே. இவ்வுண்மை அருள் அனுபவத்தில் அடையப் பெறுவதாம்.

## 171. அனல் விளக்க நிலையும் அருட்ஜோதியும்

345. அனலினு ளனலாய் அனனடு வனலாய்
346. அனலுற விளங்கும் அருட்பெருஞ் ஜோதி



சத்திய ஞான சபையில் உள்ள பொற்சபை



வள்ளலார் பாடிய - நீராடிய ஓடை

347. அனலுறு மனலாய் அனனிலை யனலாய்
348. அனலுற வயங்கும் அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) அனல் என்பது தீயாம். காற்றின் செயலாய் உண்டாகின்றது இத்தீ. விண்வெளியில் காற்றின் இயக்கம் நிலைத்து இருத்தலின், அவ்வியக்கத்தால் நுண்ணியதான வெப்பம் தோன்றி, தீயின் அடிநிலைக் கூறாகத் திகழ்கின்றது. ஒவ்வொரு அனல் அணுவுக்கு உள்ளும், இடையும் ஒளி விளக்கம் வெளிப்படுத்தியுள்ளது அருட்பெருஞ்ஜோதியே என்பது முன்னீ ரடியின் குறிப்பு. பின்னீரடிகளில், அந் நுண் அனலின், திரட்சி யாய் அத்தீயின் நிலை மின்காந்த ஒளி அலைகளாய் எங்கும் நிரம்பியுள்ளதைக் குறிக்கின்றார். இதனால், வான்வெளி முற்றும் நுண்ணிய ஜோதிமய மின்காந்த ஒளிநிறைவாய்த் தோற்று கின்றதாம். அறிவியல் உலகம் இந்த ஒளிநிறை வான்வெளி நிலையை, அணுசக்தி விஞ்ஞானப் பரிசோதனையால் ஒருவாறு கண்டுள்ளது. அதாவது, தாதுப் பொருள் அணுக்களை மிக ஆற்றல்வாய்ந்த பொறிகளின் உதவியால் பிளந்து சிதைக்கும் போதும், அணுக்களை மலர்த்தி ஒன்றோடொன்று இணைக்கும் போதும் அகத்திருந்து நிறை அனல் வெளியாகின்றது. சூழ் நிலைப்பொருள்களைச் சுட்டெரிக்கின்றது. இது, அணு ஈனும் பூத அனற்சக்தியின் தோற்றம். அணு குண்டு வெடித்தலின், அதிசூட்டுப் பெருந்தீ வெளியாகிச் சூழ் நிலையைச் சுட்டுப் பாழ் படுத்தும் செயனல இன்றைய உலகம் கண்டுள்ளதே. இத் தீயினால் கட்டுப்பாட்டு முறையில் பெருநன்மைகளையும் விளைவித் தல் கூடும். அன்பும் தயவும் அடிப்பண்டயான அறிவியலால் இந்த அணுவகத் தீயால் நற்பயன் பெறலாம். ஜீவதயவு இன்மையாலும், புலன் இன்ப ஆவலாலும், மாயா தேகபோக வாழ்வுக்காகவே அளவுக்குமேல் பொருள் உற்பத்தி செய்தலும், உயிர்களையும் சூழ் உலகையும் பேரளவிற் சிதைத்தலும் எங் கெங்கும் காண்கின்றோம்: இவையெல்லாம் தீயின் தீச் செயல் களேயாம். இம் மனிதப் பிறப்புத் தேகமே தீயின் கூறால் விளைவு கொண்டு விளங்குகின்றது. சோணிதத்தீ அல்லது சுரோணித அம்சமானது பெண்ணீன்ற இத் தேகம். அருட்பெருஞ் ஜோதியே, எல்லாமாய், முக்கியமாக இம்மனிதப்பிறப்புத் தேக மாய் விளங்குகின்றதை அறிந்து, இவ்வாழ்வில் அவ் அருட்ஜோதி பெறவேண்டும் என்பதே திருவுள்ளமாம்.

## 172. புனலின் விளக்கமும் பெருக்கமும்

349. புனலினுட் புனலாய்ப் புனலிடைப் புனலாய்
350. அனையென வயங்கும் அருட்பெருஞ் ஜோதி

351. புனலுறு புனலாய்ப் புனநிலைப் புனலாய்
352. அனையெனப் பெருகும் அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** புனல் என்பது நீர். இந்த நீர் எப்படித்தோன்றி யுள்ளது என்ற விளக்கத்தை இதன்மூலமாக ஓரளவு நன்கு தெரிந்து கொள்ளலாம். விண் அணுவிலிருந்து காற்றும், அக் காற்றிலிருந்து தீயணுவும், தோன்றினது பற்றி முன் அறிவிக்கப் பட்டன. அதற்கு மேல் இங்கு நீரின் தோற்றமும் விளக்கமும் காண உள்ளோம். காற்றினால் முன்பு உண்டான தீ அதே காற்றினால் குளிர்ந்து விடுகின்றது. அந்தத் தீயின் அகத்தே யுள்ள ஆற்றல் பலவாகிய காற்றின் தன்மை கொண்டதுவாம். அந்தத் தீயகக் காற்றில் உயிரகக் கூறும், தண்ணிய நீரகக் கூறும், உப்பின் கூறுகளும் உள்ளடங்கி இருக்கின்றன என ஆய்ந்தறி கின்றோம் இன்று. அத்தீயகக் காற்கூறுகளில் உயிர் வளியோடு, நீரக அணுக்கள் இரண்டு பங்கு சேர ($H_2O$) தண்ணீரே உண் டாகிவிடுகின்றதாம். காற்றில் நுண்ணிய ஆவிரூபமாக நீர் அணுக்கள் உண்டாம். அந்நீராவியணுவில் அகத்தே நுண்ணிய. தாய் திரவ அணுநிலை யுண்டு. இதுவே நாம் புனலினுட் புன லாய் அறிவிக்கப்படுகின்றோம். இந்த அகநிலைநின்று புறப்படும் நீரகச்சத்தே நீராவியாகி உள்விளங்குகின்றது. இது நீரை வழங்கும் சக்தி அல்லது, நீருக்கு அ(ன்)னை ஆக விளங்குகின்றது என்கிறார். இப்படி இருக்கும் அந்த நுண்ணிய சிற்றணுக்கள் கூடி நீர்த்திவலைகளாகித் திரண்டுத் திரண்டு, நீர்த்துளிகளாகி விளங்கு நிலையே புனல் நிலை என்று குறிக்கப்படுகின்றது. அந்தப் புனல் நிலையுற்ற நீர்த்துளிகள் பலகோடி சேர்ந்து நீர்ப் பெருக்காய்க் கங்கை வெள்ளமாய்ப் பாய்ந்துகொண்டிருக்கின்ற தாம். இத் தண்ணீர் உருப்பெற்றுப் பெருகி விளங்கும் நிலை யையே இங்கு 'அன்னை எனப் பெருகும் புனலாய்' என்றுள்ளார்.

அருட்பெருஞ்ஜோதியே எப் பூத அணுவுக்கும் அணுவாய் உள்ளது. உலகம் காண்கின்ற, அறிந்திருக்கின்ற, வான், வளி, தீ, நீர், மண் அல்லது கீழிருந்து காணும் மண், நீர், தீ, வளி, வான் என்பனவே, பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் எனப்படும்.

இவ்வைம்பூத தோற்றம் வெளியாவதற்கு முன்பே விண்ணள விலேயே அதிசூக்குமமாய் வாலணு, திரவஅணு, குருவணு, லகு வணு, விபுஅணு என மறைந்திருந்துதான் பின்னர் ஒவ்வொரு நிலையில் உரிய பூதமாகப் பெருகிப் பெருகி வெளியாகிக் கொண் டிருக்கின்றனவாம்: இப்படித்தான் இங்கு நீரின் பெருக்குத் தோற்றம் ஏற்பட்டுள்ளதை அறிகின்றோம்.

நம் அருட்பெருஞ் ஜோதி நீரின் பெருக்கை இவ்வுலகில் நன்கு வெளியாக்கி உயிர் வாழ்வுக்கு நன்கு உதவி இருக்கின்றது. அருளனுபவத்திற்கு, உயிர் வாழ்வு அவசியம். அவ்வுயிர் வாழ் வுக்குக் குறைவற்ற நீர்ப்பெருக்கு இன்றியமையாதது. நிலவுலகு, மக்கள் வாழ்வுக்கு உகந்ததாய் இருக்கக் காரணம் இங்கு நீர் நிரம்பியுள்ளதும், அந்நீர் ஞாயிற்றின் சூட்டாலும், காற்றின் இயக்கத்தாலும், மழையாகிப் பொழிந்து பயன்படுகின்றது. மேலும், காற்றும் தீயும் அல்லது காலும் அங்கியும் (காலங்கிசக்தி) சேர்ந்து நீராகிப் பெய்து உலகம் செழிக்க உதவுகின்றதாம். கடவுட் கருணைக்கு எடுத்துக்காட்டாக உள்ளது மழை. அக் கருணையே மக்கள் பிறவிக்குத் தேர்ந்தெடுத்து வழங்கியுள்ள உலகம் இது. இதனைப் பயன்படுத்திக்கொண்டு திருவருள்பெற் றுய்யாது, அருள் வாழ்வுக்கு உதவாத வேற்று உலகங்களுக்குச் செல்ல முயல்வதும், சென்று அவத்தைப்பட் டொழிவதும், திரு வருட்சம்மதமல்ல. மனிதமனம் சதா மேலேற முயன்று கொண் டிருப்பதுதான் இயற்கை. ஆனால், தயவில்லாது புலன் அவா வோடு எவ்வளவு முயன்றாலும் நன்மையைவிடத் தீமைதான் அதிகம் வந்துசேருவது உண்மை.

நீர் என்பது குணத்தையும் தன்மையையும் குறிப்பதாம். அக்குணமும் தன்மையும், தயவும் அன்புமாகக் கண்டுகொண்டால், மனிதனின் நீர்மை இதுவெனத் தெளிவாம். புறநீர் இன்றேல் உலகியல் வாழ்வு செழிக்காது. அதுபோல் அன்பு நீர்மை இன்றேல் அகவுலகியலாகிய தயாஇன்பவாழ்வும் செழிக்காதாம். இதனால் அன்றோ அன்புச் சிவனது தலையிடம் விளங்கவைத்தனர் கங்கை அன்னையை. அருட்பெருஞ்ஜோதியின் அருளேதான் இந்தப் புனலாய்ப் பொழிந்து கொண்டிருக்கக் கண்டு கொள்ளு வோம்.

## 173. புவியின், அகம், இடை, புறம், விரிநிலை

353. புவியினுட் புவியாய்ப் புவிநடுப் புவியாய்
354. அவைதர வயங்கும் அருட்பெருஞ் ஜோதி
355. புவியுறு புவியாய்ப் புவிநிலைப் புவியாய்
356. அவைகொள விரிந்த அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** நீரிலிருந்து இந்நிலம் தோன்றியது எப்படி? நீர் அணுவில், அதன் நடு நிலையில் இருந்த சூக்குமப்பொருள்தான் மண்ணாக வெளிப்பட்டுள்ளதாம். ஒரு மண் துகளை எடுத்துக் கொண்டால், அதன் அகநடுவில் இருக்கும் ஆற்றல், அதனைச் சூழ ஓர் எதிர் மின் ஆற்றலைத் தோற்றுவித்துத் தன்னைச் சுற்றிச் சுற்றி வரவும், தன்னைவிட்டு நீங்கிச்சென்று விடாதிருக்கவும் செய்கின்றதாம். இதுவே ஓர் அணுவகத்தில், நேர் மின்சார ''புரோடான்'' நடுவும் எதிர் மின்சார ''எலக்ட்ரான்'' சூழலுமாய் விளங்க, மின்சாரமில்லா ''நியூட்ரான்'' இடைநிலையில் விளங்கு வதாம். இப்படித்தான் இந்த மண் அணு ஒவ்வொன்றும் வயங்கு கின்றது அல்லது விளங்குகின்றது என்பதை முதல் இரண்டடிகள் தெரிவிக்கின்றன.

மேற்படி புவி அணுக்கள் பலப்பல கூடி பலவேறு தனிமப் பொருள்களாய் இணைந்தும், அப்படிப் பல பொருள்கள் கூடித் திரண்டு வேறு வேறு பண்டங்களாய், உயிர்ப்பிண்ட வடிவங் களாய் விளங்குகின்றனவாம். இப் புவியணு உட்சக்தியே ஈர்ப்பு ஆற்றல் (Gravity or Gravitational force) ஆக விளைவு கொண் டிலங்குவது. இந்த அகநடு ஈர்ப்பாற்றலோடு, தன் இன அணு ஈர்ப்பாற்றல் (Cohesion or Cohesive force) தான் பலவேறு பொருள்களாய் விளங்க உதவுவனவாம்.

அருட்பெருஞ்ஜோதியின் ஐஞ்சக்திக்ளில், பொருட்சக்தியும், கிரியாசக்தியுமே இம் மண் அணுமுதல் மண்ணுலகம் முழுமையும் ஆகி விளங்கிக் கொண்டிருக்கின்றதாம். இப்படி எல்லாம் இந்தப் பொருட்சக்தி தோற்றமாகிய இந் நிலவுலகையும் இதன் ஒவ் வொரு அணுவை:யும் ஏன் தோற்றுவித்தும், ஒன்று சேர்த்தும், பிரித்தும், இயக்கியும், கொண்டுள்ளார் ஆண்டவர்? ஏன் என்ற. வினாவிற்குப் பதில், கடவுள் அருள் அல்லது தயவு, இப்படி விளங் குதல் அதற்கு இயல்பாய் இருக்கிறதால் இப்படி விளங்கிக் கொண்டிருக்கிறது ஆம். இந்த ஓயாத தடைபடாத அருட்பெருஞ்

செயலால் அல்லது தயவுச்செயலால் அந்த அருள்—தயவு எல்லா மாய்த் தோற்றித் தோற்றி, நின்றும் இருந்தும், கிடந்தும் நசிந்தும் மறுபடி வேற்றுவடிவில் வருவதும் போவதுமாய் இருக்கின்றதாம். இப்படி எல்லாம் விரிவுற்றுத் திகழும் அகமன்னிய அருட்ஜோதி பதியை இந்த மனித வடிவிலிருந்து கண்டு அடைந்து வாழ்வு பெற உள்ளதாம். ''அவை கொள விரிந்த அருட்பெருஞ்ஜோதி'' என்ற ஓரடியில் எவ்வளவு பெரிய பொருள் அடங்கிக்கிடக்கிறது! அருட் பெருஞ்ஜோதி இந்த மண்ணுலகாய், மட்பொருள் பலவாய், மண்ணால் விளைந்த பலவாய பொருள்களாய், உடல் வடிவங்களாய், முடிவில் இந்த மனித தேகமாய் விரிந்து, இதனால் மன அறிவு நிரம்பி, பகுத்தறிவும் கடந்து அருள்ஞானம் விரிந்த தருணம், அது கொண்டு அருட்பெருஞ்ஜோதியையே காணச் செய்திருக் கின்றதாம். முடிவாக, இவ் அருட்பெருஞ்ஜோதியின் விரிவுச் செயலால், கொள்ள நேர்கின்றது என்னவெனில், அந்த அருட் பெருஞ்ஜோதியேதானாம். எல்லாம் அருட்ஜோதிநிலை அனுப வத்திற் கொள்ளப்பட்டற்கே இங்ஙனம் விரிந்தது ஆம்.இப்படி இம் மண்ணுடல் நிலையில் அருட்பெரும் ஜோதியை, அனுபவத் திற் கொள்ளும் போது, இந்த வுடலே அருள் ஒளி செய் சுத்த பொன்னுருவாய் என்றும் விளங்கி, அருட்சித்துடன் என்றும் வாழலாகும் என்பது சுத்தசன்மார்க்க அனுபவம்.

இது காறும், ஐம்பூதத்தின் அடி நிலைத் தோற்றமும், மேல் தோற்றமும் எப்படி அருட்பெருஞ் ஜோதியினிடமிருந்து வெளி யாகி விளங்குகின்றன வெனவும், அப்படி விரிந்துள்ளதின் முடிந்த குறிக்கோள் மனிதன் அருள் ஒளி அனுபவம் பெற்றுத் திகழ்வ தற்கே என்றும் அறிந்து கொண்டனம். இன்னும் இவ்வைம்பூதத் தோற்றத்தால் ஏற்பட்டுள்ள கற்பனா விசேடங்களும், விரிவான தோற்ற விளக்கங்களும் மேல்வரும் அடிகளில் நன்கு காண்போம். அடுத்துவரும் அடிகள், சிவநிலையும் விண்ணிலையும் அகமிருந்து கொண்டு விளக்குவதாய் இருக்கின்றதாம். முன்குறித்த விண் ணின் விளக்கத்தோடு இதனையும் சேர்த்து ஆய்ந்திட உண்மை மேலும் தெளிவாம்.

## 174. விண்ணிலை சிவம்

357. விண்ணிலை சிவத்தின் வியனிலை யளவி

358. அண்ணுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** சிவம் என்பது கடவுளைக் குறிக்க முன்னோர் அனுபவதிற் கண்டு கற்பனை செய்த ஒரு சொல்லாம். இயற்கையில் எல்லாம் வல்ல கடவுளுக்கு ஒரு குறிப்பிட்ட வடிவம் இல்லை. அது இல்லாதபோது, வடிவுக்குரிய ஒரு குறிப்பிட்ட பெயரும் இல்லையாம். ஆனால், அக்கடவுள், எங்கும் யாவுமாய்த் தோற்றி விளங்கலின் எவ்வடிவையும், ஆதற்குரிய பெயரையும் கடவுளைக் குறிப்பதாகக் கொள்ளக்கூடும். ஆனால், அந்த வடிவும் பெயரும் நிலைக்காது மடிந்து மறைந்து போகின்றன. ஆகவே, இந்தப் புற வடிவும் பெயரும் உண்மையான நித்தியமான கடவுளுக் குரியன அல்லவாம். அப்படியுள்ள நித்திய பரம்பொருள் உள்ளிருந்து யாவும் தோற்றவும் ஒடுங்கவும் செய்துகொண்டிருத்தலின் அந்த அகமெய்ப்பொருளையே கடவுள் வடிவமாகவும், அதற்குரிய பெயர், அவ்வக வடிவையே, உருவமில்லாத அருவமான ஒன்றையே சுட்டுவதாகவும் கொள்ளக்கூடும். ஆனால் அந்த அழிவற்ற நிறைபரம் பொருளை அறிவது எப்படி? எதைக் கொண்டு தெளிவது? அகமெய்யறிவைக் கொண்டு அறிய வேண்டியுள்ளது. அறிந்ததைப் புற அனுபவத்தில் கண்டு தெளியத்தான் இந்த அகண்ட பிரபஞ்சத்தை வழங்கப்பெற்றுள்ளோம்.

சிவ உண்மையைக் கண்டவன் பழந்தமிழன். தன் அரிய நுதற் கண்ணால்தான், நிறைபரம்பொருளைக் கண்டு சிவ ஜோதியாய்ப் புனைந்து கூறினான். அவன் கண்ட அக் கடவுட் ஜோதிக்கு முதலில் இயற்கையில் எந்த ஒரு பெயருமில்லை. ஆனால், அதைக் குறிக்கக் கந்தழி என்ற ஒரு பெயரை வழங்கினான். கந்தழி என்றால் கட்டுக்கடங்காத அகண்டமான பேரொளி என்பதுதான் அதன் பொருளாம். அப்படியுள்ள பேரொளிப் பொருளைத் தன் நெற்றிக் கண்ணாற் கண்டான். அக் காட்சி சாதாரணமான ஊனக்கண்ணாற் காணும் காட்சி போன்றதல்ல. மெய்யறிவாகிய ஞானக்கண்ணாற் கண்ட காட்சியாகும். அம்மெய்யறிவோ சிரநடு சிற்றணுவின் நிறைவிளக்கமாக உள்ளதாம். அதாவது, அந்தச் சிற் ஜோதியே எங்கும்நிறை பெருஞ் ஜோதியின் அம்சமாய் இருந்து, தன் உண்மையை அனுபவப் படுத்தியுள்ளதாம். அப்படி அக ஞானத்தில் விளங்கி, அகண்டமாய் விரிந்துள்ளதாய், அனுபவத்தில் தோன்றிய பேரொளிப் பரம்பொருளைத் தான் சிவம் என்று குறித்தான் அத்தமிழன். அச் சிவத்தின் உண்மையைத் தன்னில் தானே கண்டு நின்ற அவனே

அதுவாக உணர்ந்து, அச் சிவத்திற்குத் தன்னைபோல ஒரு மனித வடிவத்தையே நெற்றிக் கண்ணோடு உருவாக்கிக் கொண்டு விட்டான். அவனது சிவத்தின் அனுபவம், சி-எங்கும் நிறைந்த அளவுகடந்த பெரு வான் நிறை ஜோதியாகவும், வ—அக் கடவுட் ஜோதியின் எல்லாமான, எல்லாம்வல்ல அருள் ஆற்றற் செயலாகவும் இருந்து, அதுவே தனது மனிதவடிவில் சிற்றணு ஒளியாய்ச் சிரநடுவிருந்து ஒளிசெய்யத் தன் நெற்றி நடுக் கண்ணாற் கண்டிருப்பதாகவும், அச் சிற்றணு ஒளியே மகரமெய் என்னும்-ம்-ஆக உள்ளதென்று அனுபவத்தால் கண்டு கொண் டிருந்தான். இதுதான், ஆதி சிவரூபத் தோற்ற உண்மையாம்.

ஈண்டு, விண்ணிலை சிவம் என்றதன் விளக்கம் இப்போது ஒருவாறு புரிகின்ற தல்லவா? வான்வெளிநிறை கடவுட்பெருஞ் ஜோதியின் குறிப்பே சிவமாகியுள்ளது உண்மையாம். அப்படியுள்ள சிவஜோதியின், வியன் அளவி, அதாவது, பெருமை எல்லாம் கூடி வெளிப்படற்கு, அண்ணுற அமைத்ததாம் அருட் பெருஞ்ஜோதி. அண்ணுற என்றால், மிக நெருக்கத்தில், அதாவது நம்மோடு நாமாய் ஒன்றச்செய்து, வைத்துள்ள நிலையைக் குறிப்பது. இந்தச் சிவ ஜோதி நம்மோடு நெருங்கி யொன்றி நாமாய் இருக்கின்றதை எங்கே நமக்கு அறியவருகின்றது என்றால், மெய்யறிவின்கண்தான் இந்தச் சிவமொன்றிய நம்நிலை உணரப்படுகின்றதாம். இந்த மெய்யறிவு நிலைதான் நமது தலைநடுவுள் விளங்குகின்றது. அது நம் அண்ணாக்கிற்கு மேலே பொருந்தியுள்ளது என்ற கருத்தையே சுட்டுகின்றது இந்த ''அண்ணுற அமைத்த'' என்ற சொற்றொடர்.

நமது அருட்பெருஞ்ஜோதிதான், அந்தச் சிவ விளக்கத்தை நம்மில் இப்படித் திகழ்வதை இன்று காட்டிக் கொடுக்கின்றதாம். இப்போது அச் சிவஜோதியையே கற்பனைகடந்த இந்த அருட்பெருஞ்ஜோதியாய்க் காண்கின்றோம். இனி உலகமெல்லாம் இந்த அருட்பெருஞ்ஜோதியையே கண்டு உய்யும்.

## 175. வளிநிலை சக்தி

*359.* வளிநிலை சக்தியின் வளர்நிலை யளவி

*360.* அளியுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) விண் அணுவில் இயல்பாகவே காற்றியக்கச் சக்தியும் பிரிவற உள்ளதை அறிவோம். அதுபோலத்தான்

சிவத்தோடு பிரிவறவுள்ளது சக்தியாம். இது சிவ என்ற சொல்லிலேயே, சி-என்பதே சிவ வடிவாகவும், வ-என்பது சக்தி வடிவமாகவும் உள்ளதை யுணர்த்த நிற்கின்றதாம்.

அசைவற இருக்கும், நிலையாக விளங்குகின்ற, ஆகாசத்தில் இந்த வாயு சக்திக் காற்றால்தான் பிற பூதத் தோற்றங்களும், பூதாணுச் செறிவால், ஐம்பூதப் பொருட்களும், பிண்டங்களும் அண்டங்களும் தோன்றியுள்ளன. இப்படித்தான் சிவமாகிய பரமாகாசத்தில், அருளாகிய ஆற்றல் வெளிப்பட்டு, அகமிருந்து யாவையும் தோன்றச்செய்துள்ளதாம். வளிநிலை புறத்ததாக இருக்க, சக்தியின் நிலை அகத்தே இருந்து யாவையும் வளர்த்துக்கொண்டிருப்பதால்தான், ''வளிநிலை சக்தியின் வளர்நிலை'' என்றுள்ளதாம். இந்த வளர்ச்சிச்செயல் எதற்காக? அதாவது இந்த மாபிரபஞ்சமே, ஏன் படைக்கப்பட்டு, காக்கப்பட்டுக் கொண்டுள்ளது? அகச்சக்தி அருள்மயமானது; அருளின் இயல்பே யாவையும் விளங்கச் செய்வதுதான். இதுபோல் புறவான் கலந்த வாயுச்சக்தியால் பிரபஞ்சத் தோற்றம் எல்லாம் ஆக்கப்படுகின்றனவாம்.

இப்படி, அகத்தும் புறத்தும் அருட்சக்தியாலும் வாயுவின் ஆற்றலாலும் உலகுயிர்ப் பொருள்கள் எல்லாம் தோற்றுவிக்கப் பட்டு, வளர்ச்சி பெற்று வருகின்றனவாம். இந்த செயல்களும் அமைப்பும் எதற்கு? எதற்கு என்றால், ''அளி'' உறவாம். அளி, என்றால், அன்பு, அருள், கனிவு ஆம். அதாவது ஆன்மாக் கள் பரிபாக பக்குவம் அடைந்து, அன்பு வளர்ந்து, அருள் அனுபவம் பெருகவும், நிறை அருளால் பேரின்பக் கனிப்பயன் உண்டாகவுமேயாம்.

முன்னர்கண்ட சிவம், ஞானக்கண்ணாற் கண்டதேயாம். அறிவாற் கண்டுகொள்ளப்பட்ட அப் பெருஞ்ஜோதிப் பரம் பொருள், அருள் ஆற்றல் கொண்டது என்பதும் அறிவால் உணரப்பெற்றதேயாகும். அதனால் அந்தப் பரம்பொருளைச் சார்ந்துகொள்ள, உள்ளொளியோடு மனத்தால் ஒன்றி, அந் நிலையிற் பிறழாது நின்றுவிட்டால் போதுமானது என்று அப் படியே நின்றுவிட்டனர். அப்படி நின்று சூழ்நிலை யுலகைப் பற்றாது இருந்தாலே, அக்கடவுள் மயமாகி வாழ்ந்திடலாம் என்று எண்ணிவிட்டார்கள். ஏனெனில், அப்படித்தான் கடவுள் அகநிலையிற் பற்றற இருந்துகொண்டு தன் சங்கற்பத்தால் உல

குயிர்ப்பொருள்கள் எல்லாவற்றையும், ஆக்கியும், காத்தும் அழித்தும், மறைத்தும், அருள்பாலித்தும் கொண்டுள்ளார் என்பது அவர்களின் முழு நம்பிக்கை. ஆகையால், அவர்கள் தம் அகநிலையிற் பதியொளியில் ஒன்றி நின்று, சாட்சிமாத்திர மாய் யாவையும் பார்த்துக்கொண்டு, செயலற இருந்துவிட்டார் கள். அப்படிச் செயலற இருந்ததினால், புறச் செயலற்று வாழ்வு மற்று உள்ளொடுங்கி முற்றும் மறைந்தே போனார்கள். இதுவா கடவுளைச் சார்ந்து வாழும் முறை? இதுவல்ல முறை! செயலற இருந்ததே பெருந் தவறு. கடவுள் பற்றற இருந்து கொண்டு வெற்றுச் சங்கற்பத்தால் யாவையும் ஆள்கின்றதாக எண்ணியதும் பெருந்தவறே. அகமிருக்கும் ஆண்டவர் தன் பேரருளையே ஐஞ்சக்திச் செயலாக்கிப் புறவுலகில் சதா ஆக்க லாதி ஐந்தொழில் புரிந்து கொண்டிருக்கின்றார் என்பதுதான் உண்மை. இதனால், கடவுள் வாழ்வு பெறக் கருதும் மனிதனும், அக நிலையில் இருந்துகொண்டு, இவ்வுலகிடை விருப்பு வெறுப் பின்றி தயவுச்செயல் புரிந்து கொண்டே இருப்பதுதான் முறை யாகும்.

ஆகவேதான், இங்கு, வளிநிலை, சக்தியின் வளர்நிலை ஆகிய இரண்டையும் கொண்டு, இந்தப் பிரபஞ்ச காரியத்தை நடத்து கின்றார் நம் பதி. இந்தச் செயலால், அறிவாற் கண்ட கடவுள் உண்மையின் அன்புச்செயல் உணர்ந்து, தானும் அப்படி இருந்து கொண்டு அன்புச்செயல் வெளிப்பட வாழவேண்டும் என்பதை பல ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின் இப்போதுதான் அறிந்து கொண்டுள்ளான் மனிதன். கடவுள் அன்புருவானவர், அருள் ஒளி வடிவினர் என்றால், அவரது, திருவருளைப் பெற வழி, அன்பு மயமாவதேயன்றி, நினைத்துக்கொண்டிருப்பதாலோ, துதிப்ப தாலோ, மனத்தால் பாவித்து இருப்பதாலோ, மற்றும் யோகம், தவம், தானம் முதலியன செய்வதாலோ அக்கடவுளை அடைந்து விடமுடியாது. ஆகவேதான் இவ்வுலகக் காரியப்பாட்டை இடை யறாது செய்துவருவது, அந்த அளியுறத்தான், அன்பு நிறைநிலை யுற்று, அருள் நிலைபெற்று இன்பநிலை அடையத்தான் என்று அருட்பெருஞ்ஜோதியால் இன்று அறிகின்றோம்.

அறிவினால் கண்டுகொள்ளப்பட்ட ஜோதியின் அனுபவம், அன்பு இன்மையால், நித்தியவாழ்வுக்கு உதவ வில்லையாம். அந்த அன்புநிலை வளர்ந்து முழுப்பயன் வழங்க ஆயிரம் ஆயிரம்

ஆண்டுகள் செல்லவேண்டியிருந்தன போலும்! கடவுளை அன்பு வடிவினர் என்று அன்று கண்டனர். இன்று அந்த அன்பே கடவுள்வடிவமாகவும், தன்மையாகவும், இன்பப்பயனாகவும் கண்டு கொள்கின்றோம். அன்பின் விளைவு இப்போது அருட் பெருஞ்ஜோதியைக் காட்டிக் கொடுத்துள்ளது. இதனால் கற்பனை கடந்த அன்பே கடவுளின் உண்மை வண்ணமாக இருக் கின்றதாம். அன்பு எப்படிக் கடவுளாய் விளங்குகின்றது என்பதற்கு ஓர் அரிய விளக்கம்: ''அன்பு'' என்ற சொல்லில், அகரம் - கடவுளின் அகண்டாகாசத் தோற்ற வெளிநிலையாயும், ன்-அக்கடவுளின் உண்மை யுணரப்பெறும் முடிந்த ஞானநிலையாக நம்மில் விளங்குவதைச் சுட்டுவதும், பு - அப்படி அடிமுடி அளாவி நிற்கும் கடவுட்ஜோதி, நமது பகர வடிவ மெய்ஞ்ஞான பீடத்தில், பகரமெய்வண்ணமாகி, உகர ஐந்தியல், ஐவண்ணச் சக்தியாய்ப் பேரின்பவாழ்வை வழங்குவதாய் இருக்கின்றதாம். இதுதான் அருட்பெருஞ் ஜோதி கண்டு விளைவு கொண்டிலங்கும் அன்பின் உண்மை விளக்கமாகும்.

## 176. நெருப்பு நிலை அளவியது

*361.* நெருப்பது நிலைநடு நிலையெலா மளவி

*362.* அருப்பிட வகுத்த அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** முன்பு அனலின் விளக்கநிலை பொதுவாகச் சொல்லப்பட்டது. இங்கு அவ்வொளியால் ஏற்பட்டுள்ள நம் ஆன்ம விளக்கநிலை இசைக்கப்படுகின்றது.

ஐம்பூதங்களின் நடுவுள்ளது தேயு அல்லது தீ என்னும் நெருப்பேயாம். நெருப்பது நிலைநடுநிலை எனப்பட்டதின் கருத்து அதன் சிறப்பான நடு நின்றாளும் தன்மையும் ஆற்றலும், விளைவும் வெளிப்படுத்துவதற்கேயாம். எந்த அணு வாயினும் எந்த பூதப்பொருளாயினும், உயிர் வடிவாயினும் அதன் அதன் நடுவில் இருந்து ஆள்கின்றது இந்த நெருப்புச் சக்தியின் செயலேயாம். இந்த அகத்தீயின் செயலால் உட் சுழற்சியும் வேகமும் பெருகப் பெருகத்தான் ஒவ்வொரு கூறு பூத வடிவம் கொள்ளுகின்றதாம். பூதம் என்றாலே உள்ளொளி பெருகித் தடித்து விரிந்து மலர்ந்தநிலையைச் சுட்டுவதாம். சாதாரண அணு அகத்தில் தீச்சக்தி இருப்பது போல், இந்த

நிலவுலகின் நடுவிடத்தும் அக்கினியின் ஆற்றல் விளங்குவதாம். உள்ளிருக்கும் தீயின்கூறு அடங்கிக் கிடக்கும்போது அறியமுடி கின்றதில்லை. நெருப்புக்கு ஒளிவீசி விளங்கும்போது கலை 64 ஆம், ஆனால் பொருள் வடிவங்களில் மறைந்து கிடக்கும் நிலையில் பத்து கலைகளோடுதான் இருப்பதாம். ஒரு விறகுக் கட்டையை எரித்தால், உள்ளிருக்கும் தீக்கலை வெளிப்பட்டு முழுக் கலை சக்தியுடன் கொழுந்து விட்டெரியும். இயற்கையில் ஒவ்வொரு பொருளின் அகத்திருந்தும் தீயின் சக்தி மிக மிக சிறிய அளவில் வெளியாகிக்கொண்டேயுள்ளது. ஆகையால், கால எல்லையில் சூடு குறைந்து குளிர்ந்து விடுவதாம். இதுபோல சில தாதுப்பொருட் களே கூட நெடுங்காலத்தில் வேறு ஒரு தாதுப்பொருளாய் புற வண்ணம் கொள்ளுகின்றதை அறிகின்றோம். கீழான உலோகம் பொன்னாகவும் மாற்ற முறுவது இயற்கையின் இரசவாதச் செய லாம். இந்தப், புற உலகப்பொருளின் அக நிகழ்ச்சியால் உறும் மாற்றம் இப்படியிருக்க, அகமாகிய உள்ளுலகில் அகநிகழ்ச்சிச் செயலால் விளையும் தோற்றமும் பயனும் யாவை என்பதை ஈண்டு காண வேண்டியுள்ளனவாம்.

ஆன்ம அணுவின் அகத்தே அருள்சக்தியே தீயின் ஆற்ற லாய் இருந்து புற விளைவுக்குக் காரணமாய் உள்ளதாகும். அக அருட்சக்தியின் ஏகதேசக் கூறே, அது விரிவுற விரிவுற சடபூதப் பொருள் வடிவாகியும், பின்னர், அது அவ்வணுவில் கிரியா உயிர் சக்தியாக வெளிப்பட்டும், உயிரிலிருந்து ஞானசக்தியாகவும், அந்த ஞானசக்தியால், யோகசித்தி ஆற்றல்களாய், முடிவில் அவ் வக நிலையிலிருந்து அருட்சக்தியே வெளியாகின்றதாம். இந்த நிலையில்தான் கடவுளான்ம உண்மை உள்ளபடி கண்டு கொள்ளப்படுகின்றது. ஆன்மாவின்கண், இந்த அருளான்மக் கடவுள் ஞானம் பக்குவகாலத்தே அரும்பிடத்தான் அந்த நடு வளர்தீயின் செயலாய் இவ்வளவு காரியங்களாய், இவ்வளவு காரியங்களும் தோற்றங்களும் விளைந்துள்ளனவாம். அருட் பெருஞ்ஜோதியின் செயல்தான், உள்ளிருந்து இயக்கி இந்த அருளின் அரும்பாக ஆன்மாவை வெளிப்படுத்தி இருக்கின்ற தாம். இவ்வுண்மைகொண்டு அகநின்று வாழ்கின்றபோது, அகம்கண்ட அரும்பு மலர்ந்து விரிந்து அருட்பெருஞ்ஜோதி அணி மலராக அழியாச் சுத்த சன்மார்க்கவாழ்வு கொண்ட மனிதனாய் விளங்குவதாம்.

## 177. நீர், திரைநிலை யளவியது

363. நீர்நிலை திரைவளர் நிலைதனை யளவி
364. ஆர்வுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** நீரின் தோற்றம் முதலில் எப்படி உண்டானது என்பது, காற்றிலும் தீயிலும், கலந்திருந்த நுண்ணிதாய நீரக வளியும் (Hydrogen) உயிர் வளி (Oxygen) இணைந்தபோது நீரின் ஆவிவண்ணமாகத் தோன்றிக் குளிர்ந்து நீரணுக்களாக ஆகி, அவ் அணுக்கள் பல சேர்ந்து திரவரூபத் தண்ணீராக விளங்கு கின்றதாம். அந்த நீரின் பெருக்கு, நிலமீது பள்ளம் நோக்கிப் பரவும் தன்மையுடையது ஆகையால், வானிலிருந்து மழையாய்ப் பொழிகின்ற நீர், மலைமுதலான உயர் இடங்களிலிருந்து சிறு கால்களாக, அருவிகளாக, ஓடிக்கலந்து, ஆறுகளாகிப் பெருக் கெடுத்து வெள்ளமாகிப் பாய்ந்து சென்று கடலிற்கலந்து கடலாய் விளங்குகின்றதாம். இதுதான் நீர்நிலையின் தோற்ற விளக்கமாம்.

இனி, நீரில் திரைவளர்நிலைபற்றி ஆராய்வோம். நீரின் பரவும் தன்மையால், ஓட்டமும், எப்பக்கமும் அழுத்தும் ஆற்ற லும், சமநிலை அடைதலும், சூட்டாலும், தன்மையாலும் விரிந்து ஆவியாதலும், சுருங்கியும் உறைந்து பனிக்கட்டியாக ஆதலும் உண்டு என்பது பற்றி அறிவியல் எவ்வளவோ கண்டுள்ளதாம். நீர் ஓட்டத்தினால் வீழ்ச்சியும் எழுச்சியும் ஏற்படுவதோடு, நீர் நிலைகளில் காற்றாலும், ஞாயிற்றின் சூட்டாலும் சிற்றலைகள் தோன்றியும் அடங்கியும் கொண்டிருக்கின்றனவாம். நீர்ப் பெருக்கின் பெருநிலையாகிய கடலிலும், இம்மாதிரி அலைகள் பெரிதாகத் தோன்றி மடிகின்றனவாம். மேலும் இக் கடல் அலை களின் வேகமும் உயர்வும், நிலநடு ஈர்ப்புச் சக்தியாலும், ஞாயிற் றாலும் பிற கோட்களாலும் ஏற்படும் கவர்ச்சியாலும், சுழற்சியின் ஆற்றலாலும், பெரும்பெரும் அலைகள் உண்டாகின்றன. காற்றின் வேகத்தாலும், சுழற்சியாலும் பெரும் புயல்அலைகளைப் பயங்கர மாகத் தோற்றுவிக்கின்றனவாம், அலைகளில், ஆண் அலை, பெண் அலை (Positive & Negative waves) தரைமீது ஏறி உயர்ந்து வருவது ஆண் அலை என்றும், பின்நோக்கித் தாழ்ந்து செல்வது பெண் அலை என்றும் கூறுவர். பெரும் புயலால் பேரலை ஏற் படும்போது, ஒரு கண்டத்தின் ஒரு கரையில் இருந்து, மறு

கண்டத்தின் எதிர்க்கரைவரை, உயர்ந்து சென்று கடலோரப் பகுதியில் நெடுந்தூரம் நீர் பரவித் தாக்கி பலத்த சேதத்தையும் விளைவித்துவிட்டுப் பின் செல்லும். இம் மாதிரிப் பேரலையைச் ''சுனாமி'' (Tsunami) என்பர். இது அடிக்கடி தோன்றுவதில்லை, எத்தனையோ ஆண்டுகால இடைவெளியில் தோன்றுவதாம்.

நீர் உயிரினவாழ்வுக்கு மிக இன்றியமையாததாய் இருத்தலின், அதனை எவ்விடத்தும், எப்பொருட்கும் பயனுறச் செய்ய வேண்டியே, இத்தனை ஆற்றல்களாலும், செயல்களாலும் விளங்கச் செய்யப்படுகின்றதாம். இப்படிச் செய்யப்படுவதாலே இந்நீரின் பயன் உலகெங்கும் ஏற்படுகின்றதாம். ''அளவி ஆர் வுற வகுத்த'' என்ற தொடரால், நீரினை இப்படி எல்லாம் அளவி, (இயக்கி) ஆர்வுற (நிறைவு கொள்ள) வகுத்த (அமைத்து) உள் ளதாம். இவ்வளவும் அருட்பெருஞ்ஜோதியின் பெருஞ்செய லேயாம்.

அக ஆன்ம உலகில், நீர்-அன்புத்தன்மையாய் இருக்கின்ற தாம். ஆனால் இவ்வன்புத்தன்மை பூதப்பொருட்களிடத்தும், இயற்கை ஆற்றல்களினிடத்தும் விளங்குவதில்லை. கீழின உயிர் களிடத்தில் புலப்பற்றாய்த் தோற்றி வளர்ந்து மனிதப்பிறவியில் பாசமாயும், அவாவாயும், வேட்கையாயும், முடிவில் வேண்டுதல் வேண்டாமை அற்ற இடத்தில் சுத்த அன்பாய் வெளியாகின்ற தாம். கடவுளின் அருள் ஆற்றலே, இப்படி அன்பாய் வெளிப் பட்டு விளங்கவே, இவ்வளவு மாற்றமும் அடைந்து ஆகவேண்டி யிருக்கின்றதாம். நிறைமனிதனில் இந்த அன்பு நிறைவுபெற்று விளங்குவதாம். இவனே அகநிலைநின்று அன்புவடிவமாய், கடவுளோடு கடவுளாய் எங்கும் இருக்கக் காண்பதோடு, அங் கங்கிருந்து, பிறர்க்கும் அவ் அன்புநிறை இன்பவாழ்வைப் பெறச் செய்கின்றவனாகின்றான். இதுவே அருட்பெருஞ்ஜோதி, நீரை ஆர்வுற வகுத்துள்ள பெருஞ்செயலாகும்.

## 178. புவி நிலை, சுத்த பொற்பதி

365. புவிநிலை சுத்தமாம் பொற்பதி யளவி
366. அவையுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) இந்த மண் பூதத்தின் மாண்பு எப்படிப்பட்டது என இங்கு அறிந்துகொள்ளவும், அதனால் பெரும்பயன் அடையவும் உதவுகின்றன இவ்விரு அடிகள்.

மண் பூத அணு எப்படித் தோன்றியுள்ளது? நீர் அணுவின் அகத்திருந்து, அந்நீரிற் கலந்திருந்த உப்புச்சத்துக்களும், இரசாயனப் பொருட்களும், மின்னியலாற்றல்களும் வெளிப்பட்டு இணைந்துதான் பிருதிவியின் சிறு துகள் ஏற்பட்டுள்ளதாம். இந்த மண்பூத அணுவின் அகக்கூறு சுத்த பொன்னொளியாய்ச் சுடர் செய்து கொண்டுள்ளதாம். இப்பொன்நிலை, இந்த மண்ணிலை ஏற்படுமுன்பே, ஆதி வான் நிலையிலேயே நிறை ஜோதிப் பொருள் ஆக அருகிக் கிடந்துள்ளதாம். ''காற்றனல் ஆகாயம் எல்லாம் கலந்த வண்ணப் பொன்னே,'' என்கின்றார் பிறி தோர் இடத்தில். ஐம்பூதத்திலும் கனத்து மிகுந்துள்ளது இந்த மண் கூறே. இந்த மண்கூறு செறிந்த நிலவுலகும், இதினின்று மண்கூறே மாற்ற தோற்றம் கொண்டுள்ள இந்த மனிதப்பிறப்பு தேகமும் அக அருட்பேரனுபவத்திற்கு மிக முக்கியமாக உள்ளன என்பது உணரப்படுகின்றதாம்.

விண்பூதத்திருந்து விரிந்து பெருகிய காற்றும், தீயும், நீரும், வாழ்வுக்குப் பயன்படும் வகையில் அமைந்து விளங்குமிடம் இந்த மண் உலகேயாம். இந்த உலகத்திலே மண்கூறாக விளங்கும் பொருட்கள் பலப்பலவாகும். மண்ணே முற்றிலும் மாற்றம் அடைந்து, வேறு வேறு பொருட்களைத் தோற்றுவித்துள்ளது என்பது எளிதில் புரிந்துகொள்ளக்கூடாதபடி இருக்கின்றதாம். மண், மணலாகவும், கல்லாகவும், பெரும் பாறையாகவும் ஆகி யுள்ளதைக் கண்டுகொள்ளுதல் கடினமன்று. ஆனால், அம் மண்ணே, தாவரப் பொருட்களாகவும், தாதுப்பொருட்களாகவும் உயிர்களின் தேக வடிவங்களாகவும் உள்ளதை இலேசாகப் புரிந்து கொள்ள முடிகின்றதில்லை. மண்ணும், பெண்ணும், பொன்னும் ஒன்றின் தோற்றங்களே என்று யாரால் அறிந்து கொள்ளமுடியும்? அருள்ஞானியே அகநிலை நின்று அருட் கண்ணால் கண்டால்தான் இம்மூன்றும் ஒன்றன் மாற்ற தோற்றமே என்பதை யுள்ளபடி அறிவான்.

வெற்று மண்ணை வைத்துக்கொண்டு, இப்பேருலகில் இத்தனை உருவுடைய பொருள்களையும் தேகங்களையும் தோற்று வித்து விளங்கச்செய்துள்ள பெருஞ்செயலை உண்மையறியாதார் மாயாசாலத் திருவிளையாடல் என்பர் சிலர். காரணம் காணக் கூடாத இயற்கையின் விளைவுகளே என்பர் சிலர். ஏதோ ஒரு காரணத்தினால் நடைபெறுகின்ற அற்புதகாரியம் என்பர் சிலர்.

அருள்ஞானமுடையோரே, இவ்வுலகக் காரியப்பாடுகள் எல்லாம், திருவருளின் உண்மை வெளிப்படுத்தப்பட்டு மனிதனுடைய அனுபவத்தில் விளங்கச் செய்வதற்கே என்பர். இக்கூற்று உண்மையே.

அருட்பெருஞ்ஜோதிப் பொன்னின் உண்மை இந்த மண்ணான மனிதப் பிறப்பு வடிவில்தான் பக்குவத்தே கண்டுகொள்ளப் படுவதாயிருக்கின்றது. அசுத்தமாகிய புவிநிலையில் சுத்தமாகிய பொன்னை, உட்பொருளாய் உலவாது வைத்திருக்கும் இறைவன், அப்பொன் வெளிப்படுமாறு தான் யாவையும் புரிந்து கொண்டுள்ளார். அருட்பொன்னையே மிக மதித்து அடையமுயலுகின்றோன் புறத்தே பொருட்பொன்னை மதியான், பற்று கொள்ளவும் மாட்டான்.

''அருளார் ஜோதி என்னுள் விளங்க அளித்த காலத்தே
அடியேன் குறைகள் யாவுந் தவிர்ந்தேன் இந்த ஞாலத்தே
பொருளா யெனையு நினைக்க வந்த புதுமை என்னையோ
பொன்னென்றைய மதிப்ப துதவாத் துரும்பு தன்னையோ.''

என்ற மெய்யருள் வியப்பால். அருட்ஜோதிப் பொன்னை, அம்பலத்திலே கண்டு, குறையெலாம் ஒழித்து நிறைபெற்று விளங்கும் ஒருவர் புறப் பொன்னிடத்து சிறிதும் பற்று கொள்ளார், அதனைத் துரும்பாக எண்ணி மதியாதிருப்பார்.

பக்குவியின் இந்த மண்ணுடலே, அகத்திற் சுத்தமாம் பொற்பதியை அளவி (பொருந்தி)யுள்ளதாம். இந்த நிலை இவன் அறியாத காலமெல்லாம், அறியப்படா வண்ணம் மறைந்தே கிடந்துள்ளதாம். அது வெளிப்பட்டு விளங்கற்கே, மனிதவாழ்வின் விதிமுறைச் சட்டம் எக்காலத்தும், எவராலும் மாற்றமுடியாதபடி வகுத்துக்கொடுத்துள்ளார். அந்நியதி முறைக்கு ஒப்பத் தான் ஒருவனுக்கு இவ்வுலகவாழ்வில் சுக துக்கச் சூழ்நிலைகள் வந்து வந்து சாதகபாதகமாய்த் தோற்றி விருப்பு, வெறுப்பு கொள்ளச் செய்கின்றனவாம். தயாபக்குவம் ஏற்படும்போது அவ்விருப்பு வெறுப்பு மாறி யாவையும் தயவோடு ஏற்று அன்புச் செயலே புரிகின்றவனாகின்றான். இங்கு, ''பொற்பதி அளவி அவையுற,'' என்றதன் கருத்தைப் புரிந்துகொள்ள வேண்டும். பொற்பதி என்பது சகல கேவலமற்ற சுத்த ஆன்ம நிலையாம். சுத்த சத்விசாரத்தால் அந்நிலையை அடைந்து நிற்றல்தான்,

பொற்பதி அளவி எனப்பட்டுள்ளது. ''பொய் கொடுத்த மன மாயைச் சேற்றில்விழா தெனக்கே, பொன்மணி மேடையில் ஏறிப் புந்தி மகிழ்ந்திருக்க,'' என்ற மற்றோர் அடிக்குறிப்பால்கூட இந்தப் பொற்பதி அளவிய நிலை இது வெனத் தெளியலாகும். இதற்கு மேல், அவையுற வகுத்த என்றதன் விளக்கத்தைப் புரிந்து கொள்ளவேண்டும். இங்கு, அவை என்பது பலவற்றைக் குறிக் கும் பன்மைச் சுட்டு அல்ல. இந்த அவை, சபை அல்லது அம்பல மாம். அகப் பொற்பதியிற் கண்டு நின்ற மெய்ப்பொருளை வெளி அனுபவத்திற்கொண்டு விளங்கச் செய்வதுதான், அவையுற, சபைக்குக் கொண்டுவர, அம்பலப்படுத்த என்ற கருத்தில் வழங் கப்பட்டுள்ளதால், ''திருஅம்பலவன் திருநோக்கம் பெற்றார்க்கு'' உரு அம்பலத்தே என்று உன்,'' என்றபடி மனிதன் இந் தப் பொன்னம்பல வாழ்வு பெற்றுய்யவே இம் மண்ணிலையை இப்படி வகுத்துள்ளதாம் அருட்பெருஞ்ஜோதி. நம் வள்ளல் அடிகள் இந்த அம்பல வாழ்வு ஏற்றிருந்ததாலே, மண்ணாலான உடம்பையே அருட்ஜோதிப் பொன் உருவாக மாற்றிடப்பெற்று மகிழ்ந்துறைகின்றார்.

இதுவரை ஐம்பூதங்களின் பொதுவகை விளக்கம் அருள் நிலைகொண்டு விரிக்கப்பட்டது. அடுத்துப் புவிநிலையின் தொட ராகவே, ஐம்பூதங்களின் விரிநிலை தனித்தனி எடுத்து விளக்கப் படுகின்றது.

## 179. மண்ணியல் விரி (1)

**367. மண்ணினிற் றிண்மையை வகுத்ததிற் கிடக்கை**

**368. அண்ணுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி**

**(உ-வி)** மண்ணினது அக, புற, குண, ஆக்க, செயல்திறம் முதலியனவும், அவற்றின் காரண காரிய பயன் விளைவு முதலிய னவும் விரித்துக் கூறவே இந்த ஐம்பூதங்களின் விரி இயல் மேற் கொள்ளப்பட்டுள்ளது. இதில் முதலாவது மண்ணின் இயல் 36 அடிகளால் அல்லது 18 இணையடிகளால் விரித்துக் கூறப்பட் டுள்ளதாம். இவற்றில் ஒவ்வொரு இரண்டாம் அடியும் அருட் பெருஞ்ஜோதியின் புகழ் இயல் விளக்கமாக இருக்கின்றது. ஆதலின் முதல்வரும் ஒவ்வோரடியினும் மண்ணியலின் விளக்கம் குறிக்கப்பட்டுள்ளதைக் காண்போம்.

மண்ணினில் திண்மை, கடினத்தன்மை அல்லது கனம் இயல்பாகவே இருக்கின்றது. இது அணுச்செறிவின் இறுக்கத்தால் உண்டாகியுள்ளது. இவ்வணுச் செறிவோடு புவியீர்ப்பினால் கனம் அதிகரிக்கின்றது. நிலவுலகுக்கு அப்பால் வான்வெளியிற் செல்லும்போது, பூமியைவிட்டு அதிகத்தொலைவு செல்லச் செல்ல ஈர்ப்புச் சக்தி குறைந்து ஒரு குறிப்பிட்ட எல்லையில் கனமே இல்லாததுபோல ஆகிவிடுகின்றது. இதுபோல பூமையத்தை நோக்கிக் கீழே செல்லச் செல்ல கனம் அதிகரிக்கும். உடன் சூடும் மிகுந்து குறிப்பிட்ட எல்லைமேல் தன்னியல் கெட்டுவிடுவது அறியலாகும். இப்படி ஏற்படும் கனம் இயற்கையானது அல்ல, ஈர்ப்பு ஆற்றலால் உண்டாவதே. ஆனால், இங்கு குறிக்கப்பட்ட திண்மை, மண்ணணுக்களின் நெருக்கச்செறிவால் ஏற்பட்டதாம். இத்திண்மை நிலையை நிலவுலக வாழ்வுக்கான முறையில் வகுத்திட்டுள்ளார் நம் பதி என்பதை அறிந்துகொள்ள வேண்டியுள்ளதாம். மட்பொருட்களில் இந்த அணுச் செறிவுத் திண்மை இயல்பாய் இருத்தலின், அப்பொருட்கள் இடம்பெயராது நிலைத்திருக்கும் தன்மை கொண்டிருப்பதாகும். இந்த இயல்பே கிடக்கை எனப்படுவது. ஆங்கிலத்தில் இக் கிடக்கை நிலைத் தன்மை (INERT) என்பர்.

மண்ணுக்குரிய இத்திண்மையும் கிடக்கையும்தான், மண் பூதப்பொருட்களும், உடல் வடிவங்களும், நிலைத்து நின்று வளர்ச்சி பெற்று அகப்பக்குவத்தால் அண்ணுற, அனுபவத்தில் உள்ளொளி பெற்றிடக்கூடியதாயுள்ளதாம்.

### *(2)*

**369. மண்ணினிற் பொன்மை வகுத்ததி லைமையை**
**370. அண்ணுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி**

**(உ-வி)** மண்ணில் அகநிலையிற் பொருந்தியுள்ள சுத்த பொருட்சக்திதான் பொன்மையாய் இருந்து, பக்குவத்தே மலர்ச்சி பெற்று விளங்குவதாம். அந்தப் பொன்மையிலே ஐமையும் உண்டு என்பதைக் குறிக்கின்றார் இங்கு. பொற்றன்மை எல்லாவற்றிற்கும் உள்ளீடாய் இருப்பது. அதனை வெளிப்படுத்தும் முன், அதற்கு மேலாய் நானிலைச்சூழல் இருக்கின்றனவாம். அடிநிலையில் பொன்னும், அதற்குமேல் வெள்ளி, ஈயம், செம்பு,

இரும்பு உள. மண்ணின் இவ்வைமை சக்தி மறைந்து கிடந்து, இயல்பாகக் காலத்தே வெளிப்படும். செயற்கைமுறையால் தாதுப்பொருட்களை உருக்கிப் பிரித்தும் பஞ்ச உலோகங்களாக வார்த்துக்கொள்ளப்படுகின்றன. அருட் பெருஞ்ஜோதி அனுபவ முற்று அகநிலையுற்றோர் திருவருளாலே கீழான உலோகத்தைத் தீண்டலாலே பொன்னாக மாற்றிவிடக்கூடும். இது சுவர்ணசித்தி என்றும், இரசவாதசித்தி என்றும் கூறுவர். வேண்டுதல் வேண் டாமையற்ற சுத்த சித்தர்க்கு இச்சித்தி இறையருள் பெற்ற மைக்கு அடையாளமாகக் கண்டு கொள்ளப்படும்.

## (3)

371. மண்ணினி லைம்பூ வகுத்ததி லைந்திறம்
372. அண்ணுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) மண்ணில் உள்ள உப்புச்சத்து ஐம்பூவாக, ஐந்திறம் கொண்டு மலர்ந்து விளங்குவது. உப்பு, பாஷாண வகையில் முப்பூ என்பதும் ஒன்றாம். இவை எல்லாம் மண்ணிற்கலந்து பக்குவமுற்றபோது, தாவரத்திடை சத்தாக விளைந்து பூவாய் மலர்கின்றபோது அனேகமாக ஐந்திதழ் கொண்டு, அல்லது அகவிதழ் ஐந்து, புறவிதழ் ஐந்து ஆக மலர்கின்றதாம். இம் மண் தரு ஐம்பூவில் அடங்கிக் கிடப்பது ஐந்திறம் ஆம். அது இந்த ஆற்றலை மனித மண்ணுடலில் வெளிப்படுத்திக்கொண்டுள்ளதாம். இத்தேகம் தூல பஞ்சாக்கர வடிவாயும், அகத்தே சூக்கும பஞ்சாக்கரப் பொருளாயும், அகத்துறையில் அகப்பொருள் அனு பவநிலை ஐந்தாயும், சுத்த அனுபவத்தில் சாக்கிராதி ஐந்தாயும் உள்ளனவாம். புற உலகிலும் நெய்தல், மருதம், முல்லை, பாலை, குறஞ்சி நிலப் பகுதி ஐந்தாயும், அதில் உண்டாம் அனுபவம் இறைநிலைக் குரித்தாயும் அமைத்துள்ளதாம் நம் அருட்பெருஞ் ஜோதி.

## (4)

373. மண்ணினி னாற்றம் வகுத்தது பல்வகை
374. அண்ணுறப் புரிந்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) மண்ணுக்கு, மணம் ஒரு குணம் ஆம். மணம் என்ற சொல்லே, மண்+அம் எனப் பிரித்தறியப்படும்போது, உண்மை

விளங்கும். மண்ணில் அமைந்த, கந்தக பாஷாணப் பொருள் களால், காரசார உப்புக்களால் மண்ணின் மணக்குணம் வெளி யாக்கப்படுகின்றது. நாற்றம் என்பதே பழந்தமிழில் வழங்கி வந்த சொல்லாகும். இப்போது மணம் என்பதே நன்மணத்தைக் குறிப்பதாயும், நாற்றம் என்பது கெட்ட வாசனை வாடையைக் குறிப்பதாயும் அறிவோம். மணத்தை, வாசனை, வாடை, கந்தம் முதலியனவாய்க் குறிக்கின்றனர் இன்றைய மக்கள். மண்ணி லிருந்து பலவகைத் தாதுப்பொருட்களும், தாவரப்பொருட்களும், திரவப்பொருட்களும் வெளியாக்கப்படுகின்றன. அவைகளில் எல்லாம் எத்தனையோ வகையான மணம் உளவாகக் காண்கின் றோம். மலர்களின் மணம் எல்லோரும் அறிந்ததே; மூலிகைகளி லும் உயிரினங்களிலும்கூட மணம் உண்டு. மக்களுக்கும் ஓர் வகை மணம் உண்டு. தேவ, ஆவி வடிவங்கட்கும் மணம் உண் டென்பது அனுபவத்தில் சிலர் அறிவர். அருட்பெருஞ் ஜோதி சித்திபெற்ற நம் திருவருட்பிரகாசர்க்கே அழியாத பசுங்கற்பூர நறுமணம் உண்டென்பது அனுபவ உண்மையே. இதுதான், மண்ணில் மணம் அமைத்த ஆண்டவரின் அருட்பெருஞ்செயலா கும். இதனால் அவர்மயமாகி வாழுநர்க்கு அருட்கற்பூர மணம் உண்டாவது இயற்கை என்று அறியலாகும்.

மண்ணில் மறைந்துகிடக்கும் மணம், புறச்சூழலால் அகமிருந்து பெருகிய பக்குவகாலத்தே வெளியாகின்றது. இதுபோன்று பெண்கூறாகிய மண்ணான உடம்பு வளர்ச்சி பெற்றுப் பக்குவ முறும்போது, அகமிருந்து சத்துப்பொருள் மலர்ந்து மணக் கின்றது. அம்மணத்தால் பாலுணர்ச்சியும் இனக்கவர்ச்சியும் பெருகிய சமயம், உலகியல் வாழ்வும் இனவிருத்தியும் சிறக்க வேண்டி, இருபாலார் இணையும் புறத் திருமணம் புரியப்படுகின் றது. இந்த மணவாழ்வு தயவு அடிப்படையில், புலனின்ப நுகர்ச்சிக்காக அல்லாது, அகநின்று அருண்மணம் கமழ்ந்து பரவச் செய்து பேரின் பானுபவத்தைக் கொடுக்க வேண்டும் என்பது திருவருள் ஆணையாம்.

நம் அடிகளார் தயவு நிரம்பிய உள்ளப் பண்பாட்டால், படி யாத படிப்பால், அகத்தே கற்றது அருட்பெருஞ்ஜோதியாகும். அது அக ஆன்மநிலை நின்று கல்வி எடுத்து, அல்லது கற்று வெளியாக்கிக்கொண்ட (கல்+பூர)= கற்பூரஜோதியாகும்.

''கற்பூரஜோதி மருந்து, பசுங்கற்பூர நன்மணம் காட்டும் மருந்து,'' என்கின்றார். அந்த அருட்ஜோதியாம் திருவினைத் தான், அக அருளனுபவமாம் இரண்டரை நாழிகையில் திருமணம் செய்துவைக்கப் பெற்றார் என்பது சத்தியம். அவரது அனுபவம் இது:

''கற்பூரம் மணக்கின்ற தென்னுடம்பு முழுதும்
கணவர்திரு மேனியிலே கலந்தமணம் அதுதான்
இற்பூத மணம்போல மறைவதன்று கண்டாய்
இயற்கை மணம் துரியநிறை இறைவடிவத் துளதே
பொற்பூவும் நறுமணமும் கண்டறியார் உலகர்
புண்ணியனார் தம் வடிவி னண்ணியவா றதுவே
நற்பூதி அணிந்ததிரு வடிவுமுற்றுந் தோழி
நான்கண்டேன் நான்புணர்ந்தேன் நானதுவா னேனே.''

என்றதால், அவர் பெற்றுக்கொண்ட அழியாத் தெய்வ மணத்தின் உண்மை அறியலாகும். மற்றுமொரு பாவில்,

''அம்பலத்தே திருநடஞ்செய் அடிமலர்என் முடிமேல்
அணிந்துகொண்டேன் அன்பொடுமென் ஆருயிர்க்கு மணிந்தேன்
எம்பரத்தே மணக்குமந்த மலர்மணத்தைத் தோழி
என்னிசைப்பேன் இசைக்கவென்றால் என்னளவன் றதுகாண்
வம்பிசைத்தேன் அன்றடிநீ என்னருகே இருந்துன்
மணிநாசி அடைப்பதனைத் திறந்துமுகர்ந் தறிகாண்
நம்புறுபார் முதல்நாத வரையுளநாட் டெவரும்
நன்குமுகர்ந் தனர்வியந்தார் நன்மணமீ தெனவே.''

என்றதாலும், இந்த அருண்மண உண்மை அறியலாம்.

இதுதான், ஆண்டவர், மண்பூதத்தில் மணத்தை வகுத்து, அதனைப் பலவகையால், சிறிது சிறிது வெளியாக்கி முடிவில் இந்த அருள்ஞான நிறைமனிதனில் அண்ணுறக் காட்டி, அனக முற நிறைத்து இவனைத் தன்மயமாய் விளங்கச்செய்கின்ற பெருஞ்செயலாகும்.

**(5)**

375. மண்ணினிற் பற்பல வகைகரு நிலையியல்
376. அண்ணுறப் புரிந்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) மண்ணில் கருநிலையின் விளக்கம் ஈண்டு உணர்த்தப்பெறுகின்றதாம். அருட்பெருஞ்ஜோதியின் ஒரு கூறான, பொருட்சக்தியால் விளங்குகின்றது அனந்தவண்ண தோற்றப் பொருளுலகு. மண்ணணுவின் கருநிலை என்பது, அவ்வணு நடுவமைந்த இடமாகும். இது (Nucleus) நியூக்ளியஸ் எனப்படும். இந் நடுநிலையில் விளங்கும் நுண்பூதப் பெருஞ்சக்தியே (Proton) ''புரோடான்'' எனப்படுகின்றது. நீரக வாயு (Hydrogen) அணுக் கருவில் ஒரே ஒரு புரோட்டான் மட்டுமே உண்டு; தனிமங்களிலே (Elements) இதுதான் மிகமிக இலேசானதாகக் கண்டு, இதனையே அளவையாகக்கொண்டு பிற தனிமங்களைக் குறிக்கின்றனர். ஆக்ஸிஜன் அணுக் கருவில் 8 புரோட்டானும் 8 நியூட்ரானும் சம எடையினவாய்க் கூடியுள்ளதால், ஆக்ஸிஜன் அணு, ஐட்ரஜன் அணுவைப்போல், 8+8=16 மடங்கு எடையுள்ளதாகும். தண்ணீரில் அதாவது நீர்மூலக்கூறில் (Molecule) ஒரு பங்கு ஆக்ஸிஜன், இரு ப்ங்கு ஐட்ரஜன் உடன் கூடியுள்ளதாம். இதனால்தான் தண்ணீரை ($H_2O$) ஆகக் குறிக்கின்றனர் அறிவியலார். ஒவ்வொரு தனிமத்தின் கருவிலும் புரோட்டான் எண்ணிக்கை வெவ்வேறாக இருக்கின்றது. இந்தக் கருநிலைப் புரோட்டான் மாற்றத்தால்தான் எத்தனையோ வேறுவேறான தனிமங்களும், அத் தனிமங்களின் வேறுவேறான அளவுச் சேர்க்கையால் எண்ணரிய பொருட்களும் தோன்றியுள்ளனவாம்.

சடபூதமான மண் அணுவில், அதன் கருவிடத்தேயே யாவும் அதி சூக்குமமாக அருகியநிலையில், தோன்றாதே மறைந்து கிடந்து, தக்க பலனளிக்கக் காலத்தே யாவையும் உலகில் பிறப்பித்துக் கொண்டுள்ளதாம். மண்கருவிலிருந்து உயிர்ச் சக்தியும் தான் வெளியாகி தக்க வடிவை ஏற்று வளர்ச்சி அடைந்து அகத்தே விளக்கமும் அடைந்து வருகின்றதாக அறிகின்றோம். உயிர்ச்சக்தி கருவிலிருந்து விரிவதும், சுருங்குவதும் பிறப்பு இறப்பு என உலகம் காண்கின்றதாம். இந்த மண்ணியற் கருநிலையைத் தெரிந்து கொள்வோமேயானால், இந்நிலவுலகில் ஆதியிலே உயிரினங்கள் எப்படித்தோன்றின என்பதைப் பற்றிய சந்தேகம் எல்லாம் தீர்ந்துவிடும். முதற்சிருஷ்டியில் அகமிருந்து ஆண் பெண் உயிர்கள் யாவும் தோன்றிப் பின்னர் இனச்சேர்க்கையால் பலவாகிய உயிரினங்களும் பல்கிக்கொண்டுள்ளனவாக அறிந்துகொள்வோம். இன்றைய அறிவியல், சடபூத அணுவி

விருந்து உயிர்க்கரு வெளிப்பட்டு வளர்வதையும் பரிசோதனை மூலம் கண்டு தெளிந்துள்ளது.

செயற்கைக் கரு வளர்ச்சி பெண்ணினத்திடமே ஏற்படு கின்றது. ஆண் இனம் அக் கருவைத் தோற்றுவிக்க உதவுகின்ற தாம். இச்சேர்க்கை கருநிலையியல்தான் பொது விதி. பக்குவ மனிதன் சிறப்பு விதியால், மருந்து வகையாலும், வாக்காலும், யோகவிசேட ஆற்றலாலும், அருட்சக்திச் செயலாலும் பெண் ணிடத்திருந்தும், புறநிலையிருந்தும் கருவளர்ந்து வெளிப்பட்டு விளங்கச் செய்கின்றான். இப் பற்பலவாகிய கருநிலையுண்மையை எல்லாம் உணர்ந்து, முடிவில் அண்ணுற (அக அனுபவநிலையுற)ச் செய்து கருவுருவையே அழியாத்திருவுருவாக ஆக்கிக்கொண்டு என்றென்றும் விளங்கச்செய்வது அருட்பெருஞ்ஜோதியின் செயல்.

## (6)

**377. மண்ணினி லைந்தியல் வகுத்ததிற் பல்பயன்**
**378. அண்ணுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி**

**(உ-வி)** மண்ணிற் கருநிலை பற்றிக் கூறியவர், அடுத்து அக் கரு நிலை மிசையுறு ஐந்தியல் விளக்கத்தையும், அதனால் அடையப்பெறும் பலவாகிய பயன்கள் பற்றியும், குறிக்க இவ் வடிகள் வழங்கியுள்ளார்.

கருநிலை, கரு, என்றெல்லாம் இதுவரை கருதப்பட்டு வந்த அந்த அக உண்மைப்பொருள் யாது என்று ஆழ்ந்துநோக்கும் போது தோன்றுவது இதுதான்: ஒன்றான கடவுளே தான் யாவற்றிற்கும் கருவாக இருந்து அனந்த வண்ண பேத தோற்றங் கொண்டு வெளியாகின்றதாய் அறிவோம். அனந்தவண்ணத் தோற்றங்களும் ஐந்தில் அடங்கி கருவாய் உள்ளதாம். அதாவது கரு என்பதே 1-ம் 5-ம் (15) ஆக உள்ளதாம். ஒன்றான கடவுள் ஐவண்ணங்கொண்ட கருவாக இருப்பது என்பது தெளிவாக்கு வது இது. வானாகிய விண்கருவிலிருந்து ஐம்பூதப்பொருளால் இந்தப் பெரும் பிரபஞ்சமே தோன்றி விளங்குகின்றது. மனிதப் படைப்பும் முதலில் ஓர் ஆன்மக்கருவாய்த் தோன்றித் தூல பஞ் சாக்கர வடிவாய் விளைவுற்றிருக்கின்றதாம். இத்தேகத்திலும் ஐம்பொறிவாயிற் புலன் விரிவதும், சாக்கிராதி ஐந்நிலையுற்றுள் ளொடுங்குவதும் கருவைப் பதினைந்து என்று எண்ணில் குறிக்கும்

போது பதியாகிய ஒன்றன் ஐந்தியல் உண்மை கொண்டதைச் சுட்டுவதாய்க் கொள்ளலாகும். கடவுளான்மா என்பதுவும் ஒன்றும் ஐந்துமாகவே விளங்குகின்றதாம்.

மனிதனில் கடவுளான்மாவே அழிவற்ற நித்தியக் கருவுருவாய்த் தோற்றிவிளங்குவதும், அவ்வான்மாவின் மீது தோன்றி வ்ளரும் தூலக்கரு வளர்வதும் சுருங்கியொழிவதுமாயுள்ளதாம். இக்குறிப்பை,

"முற்பதி னைந்தில் முளைத்துப் பெருத்திடும்
பிற்பதி னைந்திற் பெருத்துச் சிறுத்திடும்
அப்பதி னைந்தும் அறியவல் லார்க்கு
செப்பரி யான்கழல் சேர்தலு மாமே."

என்ற திருமந்திரத்தால், முதல் பதினைந்து ஆன்மக்கருவையும், மேற் பதினைந்து தேகக்கருவையும் உணர்த்துவதாய் உணர்கின்றோம். ஆன்மக்கருவில் உயிர்ச்சக்தி தோன்றி வளரும்போது புற வடிவம் வளர்வதும் சுருங்குவதுமாய் இருப்பதே, பிற் பதினைந்தில் பெருத்துச் சிறுத்திடும் என்றுள்ளார் திருமூலர். இக்கரு உண்மையை அறியவல்லார்க்குச் சுட்டவொண்ணாத கடவுளர் திருவடி ஆடையாமல் அடைந்திருத்தல் அனுபவமாம்.

மண்ணின் இந்த ஐந்தியல், கடவுளர் ஐஞ்செயல் வெளிப்பட்டு மனிதனில் கடவுள் அனுபவம் ஏற்படுவ்தற்கே என்பதை உணர்த்தப்படுகின்றோம்.

**(7)**

**379. மண்ணிடை யடிநிலை வகுத்ததிற் பன்னிலை**
**380. அண்ணுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி**

(உ-வி) விண்ணை முடியாகக் கொள்ளுவதால், இந்த மண்ணை அடியாகக் கொள்ள நேருகின்றது. இவ் வடிநிலை மண்ணிடையாகிய நிலவுலகில்தான் அனுபவத்திற்குரிய பலவாகிய நிலைகள் வழங்கப்பட்டுள்ளனவாம். மேலும், ஐம்பூதங்களில் மிகக் கடினமும் கனமும் உடையது மண்ணே, ஆதலின் அது தாழ்ந்து அடிநிலையாக நிலைத்து விடுகின்றதாம். இடம் பெயராது கிடக்குந் தன்மையால் நிலம் நிலை கொண்டு நிற்கின்றதாம். இதைவிட இலேசானதாய், நிலையற்றதாயுள்ள நீர் நிலத்தைச் சார்ந்து அசைந்தும் அலைந்தும் ஓடிக்கொண்டும் இருக்கின்றது. மூன்றாவதாகிய நெருப்பு, மண்ணையும் நீரையும் சார்ந்தும் சாராமல்

இருந்து, மேல் நோக்கி எரிந்துபோய்க் கொண்டிருக்கிறது. நீரினும் இலேசானது இத் தீ ஆதலின் அப்படி மேலெழுகின்ற தாம். இதனினும், காற்று மென்மையானதாகையால் எதனை யும் பற்றிச் சார்ந்து நில்லாது, வான்வெளிநிலையிற் சலித்துக் கொண்டேயிருப்பதாம். நிலைத்திருப்பது நிலம் என்றால், நிலை யற்று அசைந்தோடிக்கொண்டிருக்கும் காற்று அநிலம் எனப்படும். அநிலம் என்ற சொல் கீற்று என்று பொருள்படக் காரணம் இதனால் தெளிவாம். இந்தக் காற்றினும் விரிந்து பரவியுள்ளது வான்பூதமாகும். இது எங்கும் நிரம்பியுள்ளதாம். இப்படி ஐம்பூதங்களில் மண்ணே அடிநிலையாக நிலை கொள்ள, அதன்மீது, சார்ந்தும் சாராமலும், மேலெழுந்தும், படர்ந்தும் நிரம்பியும் உள் ளனவாம் மற்ற பூதங்கள் நான்கும். ''ஐந்துக்கு இரண்டு பழு தில்லை'' என்ற உலக வழக்குரை, உண்மையில் ''ஐந்தில் இரண்டு பளு இல்லை'' என்றதாகக் கொள்ளப்படுவதாம். வானும் காற்றும் பளு (கனம்) இல்லை என்பது உலகறிந்ததே. அன்றி யும், விண்ணும், விண்ணைப் பிரியா வளியும் ஒழிவற இருப்பது போல், மண்ணும், நீரும், தீயும் நிலவாது சர்வ பிரளய காலத் தில் அழிந்து பாழ்பட்டுப் போம். ஆகையால்தான் ஐந்துக்கு இரண்டு பழுதில்லை என்பதும் பொருந்துவதே. அதாவது, மண்ணும், நீரும், தீயும் பாழ்பட்டுப்போக, வானும் காலும், அப் படிப் பாழ்படாது இருப்பன என்பதும் உண்மையே.

விண்ணினின்று மண்ணைத் தோற்றுவித்தது எதற்காக என்றால், அண்ணுற என்று தான் (அதாவது நாம் உண்மையை யறிந்து, அதனை அண்மி அடைந்து ஒன்றி வாழ்வு பெறத்தானாம்.) அகண்டவெளியில் விண் தோன்றியது எப்போது என்றால், அது அனாதியாகவே, அருட்பெருங்கடவுள் எப்படி நித்தியமாக உளரோ, அப்படியே இந்தக் காற்றைப் பிரியா விண்பூதமும் இருக்கின்றதாம். அந்த விண்வளித் தோற்றநிலை கடவுளான்ம நிலையாய், மனிதனின் நித்திய சொரூபமாய் இருக்கின்றதாகும் மேற்படி விண் எங்கும் அசைவற இருப்பதுபோல இந்த நில வுலகில் நிலைத்து விளங்குவது மலை, கற்பெரும் பாறையாம். இக்கல் நிலையே மண்ணடு உருகிக் கிளம்பி நீர் நிலைக்கு மேற் றிகழும் உயர் கன்மலைகளாகக் குளிர்ந்து இறுகியுள்ளனவாம்.

மண் தோன்றாமுன்னே மனிதன் தோன்றினதாகக் கூறப் படுவதின் உண்மை யாதெனில், மனிதன் கடவுளான்ம நிலையில் அனாதியாகவே யுள்ளவன். ஆகையால் இந்த மண் (உலகு)

தோன்றுமுன்பே தோன்றியுள்ளவன் என்பது உண்மையேயாம். இக் கருத்தையே, ''கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே, வாளொடு முன்தோன்றி மூத்த பழங்குடி மக்கள்,'' என்று பழந் தமிழ் மக்களைச் சுட்டுகின்றார் கல்லாடர் என்ற கல்லுண்மையைக் கல்லாதே கற்றுணர்ந்திருந்த ஒரு தமிழ்ப் பெரும்புலவர். இந் நிலவுலகில் கன்மலை தோன்றி எத்தனையோ கோடி ஆண்டுகளில் அக்கல்நிலை வெடித்து வெடித்துச் சிதைந்து சிதைந்து சல்லி சல்லிகளாகி, பெருமணலாய் நுண்மணலாய்ப் பின்புதான் மண்ணாகின்றதை உலகம் ஆய்ந்தறிந்துள்ளது. இந்த மண்ணிலை தோன்றி நெடுங்கால எல்லையில் உயிரினங்கள் தோன்றி அதன் முடிவில்தான் இம் மக்களினம் தோன்றியுள்ளதையும் எவரும் அறியக்கூடும். இதனால், இம் மண்தோன்றாக் காலத்தே மனிதன் தோன்றியிருந்தான் என்பது, அந்த உண்மை மனிதனாகிய கடவுளான்ம நிலையையே குறிப்பதாய் அறிந்துகொள்ள வேண்டும். மேலும், அந்த, ''கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே, வாளோடு, முன்தோன்றி மூத்த பழங்குடி மக்கள்'' என்றதில், ''வாளோடு'' என்ற சொல்லால் ஒளியுண்மை குறிக் கப்படுகின்றதாம். வாள் - ஒளியாம். கடவுளான்மா இறையொளி மயமாய்த் திகழுவது குறித்து இப்படிக் கூறப்பட்டதாய்க் கொள்ளத்தகும்.

ஆகவே, மண்ணிடை பன்னிலை வகுத்ததன் காரணம் மனிதன் தன் உண்மையை அறிந்து அருளால் அழியா இன்ப வாழ்வு பெறற்கேயாம். இப்படி இவனுக்காக அண்ணுற அமைத்தது அருட்பெருஞ்ஜோதியின் செயலேயாம்.

## (8)

**381. மண்ணிலைந் தைந்து வகையுங் கலந்துகொண்**

**382. டண்ணுறப் புரிந்த அருட்பெருஞ் ஜோதி**

*(உ-வி) விண்-1, வளி-2, தீ-3, நீர்-4,* மண்-5 ஆகக் குறிக்கப் படுவது முறையாம். இவற்றில் விண்ணிலேயே மற்ற பூதங்கள் அருகிமறைந்திருந்த நிலையைப் பின்னால் விரிவுற்று விளைவுற்று விளங்கியபோதுதான் அறிந்துகொள்ள முடிகின்றது. இது போல், ஒவ்வொன்றும் விரியுறும்போது, அதற்கதற்குக் கீழுள்ள வற்றைத் தோற்றுவித்து விளங்கச்செய்கின்றதாம். ஒவ்வொரு

பூதத்தும் ஐந்தும் அடங்கியுள்ளது இயல்பாகும். இப்போது மண்ணில் ஐம்பூதமும் அடங்கிநிற்கும் நிலையை யுணர்த்தப்படு கின்றோம்.

மண்பூதம் மிகக் கடினத்தன்மை யுடையது. இதற்குள் ளிருக்கும் ஐம்பூதக்கூறுகள் நுண்ணிதாக உள்ளவையாம். அவை, வாலணு, திரவாணு, குருவணு, லகுவணு, விபுவணு என்பர். வால் அணு என்பது வலிமையான, கடினத்தன்மையுடைய சூக்கும மண்கூறு ஆகும். இதுபோல், திரவாணு நீரின் சூக்கும அணுநிலையாயும், குருவணு (ஒளிவுடைய) தீயின் சூக்கும அணு வாயும், லகுவணு (இலேசான) காற்றின் சூக்கும சக்தியணு வாயும், விபு அணு நுண்ணிய விண்ணணுவாயும் உள்ளனவாம். இப்படி மண்ணிலே ஐம்பூத நுண்நிலை அடங்கியிருந்து வெளிப் படுவதால், திருவருள் பெற்றோர் அல்லது எல்லாம்வல்ல கடவுள் எதிலிருந்து வேண்டுமானாலும் எதையும் தோற்றுவிக்கலாம். இச்செயல் சாலவித்தைச் செயலன்று, அருட்சித்துச் செயலே யாம். ஜீவ தயவு மிக்குடைய அருட்செல்வர்கள் திருவருள் ஆணைப்படி, மண்ணிடையே வற்றா நீரை வருவித்தல், மண்ணியற் பொருள்களை வருவித்தல், மண்ணுடற் பிணிகளைப் போக்குவித் தல், மண்ணரசுக் குறைகளைத் தீர்த்து விண்ணரசு வாழ்வைக் கொண்டு வருதல், முடிவாகமண்ணுடம்பையே அழியாப் பொன்னு டம்பாக மாற்றிடப் பெற்று விளங்கல் யாவும் நிறைவேற்றப்படு வனவாம்.

## (9)

383. மண்ணியற் சக்திகள் மண்செயற் சக்திகள்

384. அண்ணுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) மண்ணில் உள்ள இயற்கைச் சக்திகளும் மேற் கொண்டு- செயற்கையால் ஏற்படும் சக்திகளும் உலகில் எப்படி நமக்கு உண்மை கண்டடைய உதவுகின்றன என்பதை உய்த் துணரச்செய்வது இவ்வடிகள்.

மண்ணின் இயற்கைச் சக்தியால் எத்தனையோ இயற்கைப் பொருள்கள் நிலத்தடியில் உண்டாகி இருந்து, மண்வளம் ஏற் படுத்தி, உயிர்வாழ்வுக்குத் தேவையான எத்தனையோ பொருள் களை வழங்குகின்றன. மண்ணிலிருந்து வெளிப்படும் இயற்கை

ஆற்றல்கள் உலகத்தில் இந்த இந்திரசாலம் போன்ற இயறகைக் கவின் தோற்றங்களையும், சத்துப்பொருட்களையும் மற்றும் பலவும் தந்துகொண்டுள்ளனவாம். எப்படியோ ஒருவகையில் இவை யெல்லாம் மக்களுக்குப் பயன்படவே தோற்றுவிக்கப்பட்டுள் ளனவாம். மண்ணின் இந்த இயற்கைச் சக்தியை நன்குணர்ந்தே மனிதன் தனக்குத் தேவையான வகையில், பலவாகிய மண்ணியற் பொருள்களை இணைத்து, செயற்கைப் பொருள்களையும் ஆக்கிக் கொண்டு பயன்களையும் பெறவேண்டியுள்ளது. கடவுள் நியதிப் படி, உயிர்கள் வாழ்வதற்கும் பல்குவதற்கும் எவ்வளவோ வகை யில் இயற்கைச் சக்திகளை அமைத்துள்ளார், வெளிப்படுத்திக் கொண்டும் உள்ளார். மக்களுக்கும் இந்த நியதிமுறைப்படி உயிரையும், உடம்பையும் இயற்கைச் சூழலையும் அமைத்துக் கொடுத்திருப்பதும் உண்மையே. ஆனால் மனிதன் மட்டும் இயற்கை வழங்கும் உதவியைக் கொண்டு வாழ்வதோடு, தயா முயற்சியால் கடவுள் அருளையும் சம்பாதித்துக் கொண்டு, இறை இன்ப வாழ்வும் பெற ஆணைசெய்யப்பட்டுள்ளான். இதனால் இந்த உலகில் மனிதன் தயாமுயற்சி மேற்கொண்டு தன்னின மக்களையும், பிற வுயிர்களையும் நலம்பெற' உதவவேண்டியுள்ளான். ஆனால், தயவின்மையாலும், புலபோக வேட்கையாலும் மனிதன் மண்ணின் செயற்கைச் சக்தியால் அளவுக்குமேல் பொருட்களை உற்பத்திபண்ணியும், அழிவுபடுத்தியும் ஆற்றல்கை ளயும், உயிர்ப் பொருள்களையும் நட்டப்படுத்துகின்றான். பெருமுயற்சியால் வாழ்வுக்கு மேன்மை ஏற்படாது, தாழ்வு உண்டாகும்படி செய்து கொள்ளுவது எவ்வளவு அறியாமை! தயவோடு இலேசான முயற்சிசெய்து, மண்ணுலகச் செயற்கை விளைவையும், மக்கள் வாழ்வில் உண்மை இன்பத்தையும் தோற்றுவித்தல் மனிதனின் கடமையாக இருக்கின்றன. கடவுள் இந்த மண்ணின் இயற்கை, செயற்கைச் சக்திகளால் மனிதன் மேலான வாழ்வுபெறவே ஏற் பாடு செய்துள்ளார் என்பது இவ்வடிகளின் குறிப்பு.

## (10)

**385. மண்ணுருச் சக்திகள் மண்கலைச் சக்திகள்**

**386. அண்ணுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி**

**(உ-வி)** இந்த நிலவுலகைத்தான் மண்ணுலகம் என்றும், பெரிதாய மண்கோள வடிவம் என்றும் பலர் கருதுவர். இதுமட்டு

மல்ல, இதுபோல சூரிய ஜோதி கோளத்தைச் சுற்றிக்கொண்டுள்ள பிற கோட்களும் மண்ணுருக் கோளங்களேயாம் என்பதை இப்போது உலகம் நன்கு அறியமுடிகின்றது. எனினும், இந்நிலவுலகுபோல் இந்த மக்கள் வாழ்வுக்குப் பொருந்தும் வகையில் அமைந்தவை அல்ல அக்கோளங்கள் எல்லாம் என்பது காலத்தே தெரியவருவனவாம்.

இங்கு, மண் உருச்சக்தியும் மண்கலைச்சக்தியும் பேசப்படுகின்றன. இந்த மண்பூதத் தோற்றத்தைப்பற்றி யாவரும் எளிதில் காணும்படிப் பருப்பொருளாய், அமைந்திருப்பது மிக உதவியாய் இருக்கின்றதாம். மண்உருவை ஒரு பிண்டக்கட்டி வடிவிலோ, 'பொருள் வடிவிலோ காணும்போது அது எப்படி உருவாகியுள்ளது என்று சற்று ஊன்றிப்பார்த்தால் மனக் கண்ணுக்கு நன்கு விளங்கும். பலகோடி அணுத்துகள்கள் இணைந்து அந்தக் குறிப்பிட்ட வடிவாய் விளங்குகின்றதென அறியலாகும். இதுபோன்றே மற்ற எந்த மண் இயற்பொருளும் அணுச்சேர்க்கையின் அமைப்பே என்பது உண்மையாம். இயற்கையில் மண் வடிவங்கள் பல அளவில், பல வடிவில், பல காலமாக விளங்கிக்கொண்டிருப்பதும் உண்டு. இப்படி மண் வடிவங்கள் சிறு துகள் உருவம் முதல் பெருமலை அளவினதாக இருக்கக் காண்கின்றோம். இவையெல்லாம் மண்உருச்சக்தியால் இப்படி விளங்கிக்கொண்டிருப்பது இயற்கையாம். இவ்வியற்கை வடிவங்கள் அல்லாது, மண்ணும் மண்ணின் இனமான கல் முதலியனகொண்டு பலப்பலவாகிய வடிவங்களையும் பொருள்களையும், பொம்மைகளையும், சிறிய பெரிய குடிசைமுதல் கோயில் வரையான கட்டிடங்களையும் செயற்கைமுறையில் மனிதனால் உருவாக்கப்பட்டுள்ளன. இவையும் மண்ணுருச் சக்தியின் செயற்கைத் தோற்றங்களாம்.

மேற்படி மண்உருவச் சக்தி இயற்கையாலும், செயற்கையாலும் தோற்றுவிக்கப்பட்டுள்ளன வெல்லாம் அழிவுற்றொழியும் போது, உருவம் சிதைந்து சிதைந்து முடிவில் அணுத்துவமாய்ப் போய். மறைந்துவிடுகின்றனவாம். இப்படி உருவமெல்லாம் கரைந்து மறைந்து போவதையும் அறிவோம். இப்படி உருவைக் கலைத்து ஒழியச் செய்யும் சக்தியைத்தான் இங்கு மண்கலைச் சக்தி என்கின்றார். ஆகவே உலகில் மண்ணின் இரு சக்தியால், உருவாகித் திகழ்வதும், உருக்கலைந்து ஒழிவதும் நடைபெறு

கின்றனவாம். இப்படி மண் உருவாகி விளங்கிக்கொண்டிருப் பதும், சிதைந்து கலைந்து ஒழிந்துபோய்க்கொண்டிருப்பதும் எதற்கு என்றால், அக அருள் உண்மை அனுபவவாழ்வுக்கு அருள் வாழ்வு வருவதற்கேயாம்.

(11)

**387. மண்ணொளிச் சக்திகள் மண்கருச் சக்திகள்**
**388. அண்ணுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி**

**(உ-வி)** இதற்குமுன் அடிகளில், மண்ணின் நேரான தோற்றத்தையே உருவாகியும், கலைந்தும் விளங்கும் சக்திச் செயலாய்க் கண்டோம். இங்கு மண்ணொளிச் சக்தியும், மண் கருச் சக்தியும் குறிக்கப்படுகின்றன. இது மண்ணின் நேரடித் தோற்ற நிலை அல்ல, இது மண்ணின் மறைமுக மாறுபாட்டுத் தோற்றநிலையாகும். மண்கூறே தாதுப்பொருள் வடிவங்கள், தாவரப்பொருள் வடிவங்கள், ஜீவரூப வடிவங்கள். முக்கியமாக மக்களின் உடல்வடிவங்கள் எல்லாம் மண்ணின் அம்சமானவையே. இவை மண்ணொளிச் சக்திகள் எனப்படும். மண்ணே இப்படி யெல்லாம் மாற்றதோற்றம் கொண்டுள்ளது மண்ணொளியின் ஆற்றல் செயலேயாம். இப்படி மண்ணொளித் தோற்றவடிவம் ஏற் படுவதற்கு, முதலில் மண் அணுக்கருவிலேயே அந்தந்த சக்தி சூக்குமமாய் வெளிப்பட்டிருந்து வளர்ச்சிபெற்றுப் புறத்தோற்றம் கொள்ளுகின்றனவாம். தாதுப்பொருட்சக்தியின் கருவில் குறிப் பிட்ட சூக்குமதாது மண்ணணுவில் கலந்து, பின் அந்தத் தாதுப் பொருள் வடிவாக அமைந்துவிடுவதாம். தாவரவிதை முதலிய வற்றிலும் மண்கூறு, அத்தாவர சூக்கும அம்சமாயிருந்து உருவாகி வளர்கின்றதாம். இவைபோல மனிதக் கருவாகிய ஆன்மக் கூறிலும், தாய்சத்தின் மண்கூறு சார்ந்து தேகமாக உருவாகி விளைவுற்றுள்ளதாம். இதனால், மண்ணொளி சக்திகளும், மண்கருச் சத்திகளும் இந்த மனிதப்பிறப்பு வடிவில் திருவருள் வெளிப்படும் போது அனுபவத்திற்கு வருவனவாம்.

(12)

**389. மண்கணச் சக்திகள் வகைபல பலவும்**
**390. அண்கொள வமைத்த அருட்பெருஞ் ஜோதி**

(உ-வி) கணம் என்பது பலவின் கூட்டம். இந்த உலகின் புறத்தோற்ற நிலையில் எத்தனை எத்தனைவிதமான மண்பகுதி கள் காணப்படுகின்றன. இந்த மண்ணின் பலவாகிய தொகுதி கள் அங்கங்கு கூடி விளங்கக் காண்கின்றோம். இந்தப் புறத் தோற்றங்களுக்கு அடிநிலையாக உள்ளவை மண்ணின் இயல், உரு, ஒளி நிலையாம். ஆகவே, இந்த இயல், உரு, ஒளி, கணம் ஆகிய நான்கும் மண்ணின் அகம், அகப் புறம், புறம், புறப் புறம் ஆகிய நான்கிடங்களில் அமைந்து தத்தம் சக்திகளை வெளிப் படுத்தி விரிக்கின்றனவாம். அப்படி விரிக்கின்றதாலேதான் நம் புறஉலகில் மண்ணியல் மாண்பெல்லாம் கண்டும், பயன் கொண் டும் அனுபவிக்க முடிகின்றதாம்.

மனிதவாழ்வில், மனிதப் புறத்தோற்ற நிலையில் இந்த மண் கணச் சக்திகளால்தான், பலப்பலவாகிய தோற்றங்கொண்டு, உலகின் பற்பல பகுதிகளில் இருந்து வாழ்ந்து வருகின்றார்கள் மக்கள் சமூகத்தினர். மண்கண சக்தி அல்லது மண்திரள் தொகுதிகள் போல், மக்கள் சமூகங்களின் திரள்கள் உலகில் விளங்குகின்றன. மண்கூறு முழுதும் சேர்ந்து இந்த நிலவுலகம் ஆகித்திகழ்கின்றதுபோல், மக்கள் சமூகங்கள் முழுவதும் சேர்ந்து ஒன்றாகிய உலக மக்கட்சமுதாயமாக இருக்கின்றதாம். அகப் பக்குவத்தால், ஆன்மநேய உரிமை கொண்டு வாழ்ந்து பெருநலம் காணவே, திருவருள் இப்படி உலகை அமைத்துள்ளது என்னும் கருத்தே இந்த இரண்டடிகளின் மூலம் அறியக் கிடக்கின்ற தாம். இங்கு, மண்கணச் சக்திகள் வகை பலபலவும் அமைத் தது, ''அண்கொள'' என்ற குறிப்பு, அக ஆன்ம ஞானத்தால், அண்டி ஆன்மஉறவு கொள்ளவும், அண்ணத்தின் மேல்வளர் அருள்ஒளியிற் கலந்துகொண்டு அதுவாகி, அருளொடு வாழ என்பதையும் சுட்டுவதாகவும் கொள்ள முடிகின்றதாம்.

## (13)

*391.* மண்ணிலைச் சத்தர்கள் வகைபல பலவும்
*392.* அண்ணுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) சக்தி அல்லது ஆற்றல் தனித்து இருக்கமுடியாது. அது ஒன்றினை ஆதாரமாய்க்கொண்டுதான் தன்னை வெளிப் படுத்திக்கொள்ளும். சக்தியைக் கொண்டுள்ளவை சத்தர்கள்

ஆம். இவ்வுலகத்தில் உள்ள மண்ணான பொருள்கள் எல்லா முமே மண்ணிலையின் பலவாகிய ஆற்றல்களை யுட்கொண்டு விளங்கும் பலவாகிய சத்தர்களாகக் கூறப்படுகின்றன.

மக்கள் உலகில் பலரும், பலவாகிய, கரண இந்திரிய, ஜீவ ஆன்ம ஆற்றல் கொண்டு வாழ்ந்துவருகின்றனர். இவர்கள் எல்லாம் தம்மைத் தேக வடிவினராகத்தான் கருதிக்கொண்டுள் ளனர். ஆன்மஞானியும்கூட அழிவுறு மனிதவடிவில் இருக்கும் அவ் ஆன்மாவைத் தன் உண்மை உரு அல்லது சுயரூபம் எனப் பாவனையாற் பற்றிநின்று ஆன்மசக்தியும் ஓரளவு பெற்று அற் புதசித்தி புரிய வல்லவனாக இருக்கின்றான். இந்த ஞானியை யும், ஏனை யோரையும் அவரவர்கள் கொண்டுள்ள ஆற்றல்களையும் வைத்து ஒவ்வொருவரையும் சத்தர்கள் என்று குறிப்பிடலாகும். இந்தச் சக்தி, சக்தர்களின் இயல்முற்றும் மண்ணிலை நின்று கண்டு கொள்ளப்படுவனவே. இவ்வளவையுங் கடந்து அருணிலை யுற்று யாவரையும் அருட்ஜோதியின் கூறாகவே கண்டு அன்பு செய்து, இன்புற அமைத்ததே இவ்வமைப்பு என்பது அறிந்து கொள்ளப்படவேண்டிய ஒன்றாகும்.

## *(14)*

***393.*** **மண்கரு வுயிர்த்தொகை வகைவிரி பலவா**

***394.*** **அண்கொள அமைத்த அருட்பெருஞ் ஜோதி**

**(உ-வி)** புறத்தேகம் மண்கூறு என்பதை முன்பே அறிந் துள்ளோம். இதனால் இந்தக் கருப்பிண்ட வடிவம், மண்கரு என்றே இங்கு குறிக்கப்பட்டுள்ளது. இந்தக் கரு உயிர்த் தொகை, நால்வகை யோனி, ஏழ்வகைத் தோற்றங்களில் அடங் குவனவாம். நால்வகை யோனி ஆவன: 1. சராயுஜம் (கருப் பையில் தோன்றுவன) 2. உற்பீஜம் (விதைகளில் தோன்றுவன) 3. அண்டஜம் (முட்டையில் தோன்றுவன) 4. சுவேதஜம் (வியர்வை அழுக்கில் தோற்றுவன) மேலும், உயிரினங்களை எழுவகைத் தோற்றங்களில் அறிவுவிளக்கமுறையில் பிரித்துள்ளனர். அவை எல்லாம் ஓரறிவுப் புல்பூண்டுகள் முதல் ஆறறிவு மனிதனும், மேல் தேவநிலைப்பிறவி யொன்றுமாக ஏழ் பிறப்பு என்றல் வழக்கு. இப்படியுள்ள வகைகள் ஒவ்வொன்றிலும், பலபலவான தொகையும் விரிவுகளும் உளவாம். நால்வகை யோனி, ஏழ்வகைப்

பிறவி, எண்பத்து நான்கு லட்ச ஜீவ பேதத்தோற்றங்கள் என் பர். இவைகளிலும் உட்பிரிவுகளாகவும், புதியனவாகவும், சேர்க்கைமுறையிலும் இன்னும் எத்தனையோ தோற்றம் விளங்கும்.

உலகம் கண்டுள்ளனவெல்லாம் உயிரினங்களின் ஒரு சிறு கூறே என்னலாம். இன்னும் எத்தனையோ புதியனவும், அரி யனவும், வேற்று இடங்களில் உள்ளனவும், புலனுக்குப் புலனா காதனவும், பேராற்றல் கொண்டனவாகவும் எவ்வளவோ தோன்றக்கூடும். இவ்வளவு உயிர் வடிவங்களும் மண்ணின் கரு நிலையுருவே என்பது உண்மை. இக் கருக்கள் யாவும் அக மிருக்கும் பதிசக்தியின் அருட் சார்பால்தான் வெளியாகின்றன. எப்பூத அணுவுக்கும் உள்ளகத்தே யிருக்கும் அருட்சக்தியின் சிற்றசைவால், கிரியா சக்திதோன்றிப் புறச்சுழற்சியால் பிரணவ நாதஜோதி ரூபமாக் எக்கருவும் அமைகின்றது. இதனால் எந்த ஒரு கருப்பிண்டவடிவத் தோற்றத்தையும் ஆரம்பநிலைகளில் பார்த்தால், ஓங்கார வடிவமாகவே விளங்கக் காண்கின்றோம். இதனால் எல்லாம் கருநிலையில், ஒரு தன்மை கொண்ட ஆன்மாக் களாய் இருத்தல் அறியலாகும்.

மனிதன் ஒன்றான அருள் வண்ண ஆன்மக் கருவை, இந்த மண்ணான கருப்பிறவியிலிருந்து காணவல்லவனாகின்றான். கண்டு தன் அகநிலைக் கருவை, ஆன்மவடிவைக் கூடாமற்கூடி அதுவாகி அண்கொள (அனுபவநிலையில்) நிற்கின்றான். இவன் எங் கெங்கும் காண்பது மண்கருவுக்குள்ளான கடவுளான்ம ஒளியையேதான். இப்படிக் கண்டு நின்று அருட்பெருவாழ்வு பெறுதல் சுத்தசன்மார்க்க அருட்செயலாலேயாம்.

## (15)

395. மண்ணினிற் பொருள்பல வகைவிரி வெவ்வே(று)
396. அண்ணுறப் புரிந்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) மண்கரு வடிவங்கள் உயிரினத்தைக் கொண்டு விளங்குவனவாம். உயிரற்ற சடப்பொருள் எல்லாமும் பெரு வாரியாக மண்ணின் கூறாகவும், மண்ணின் வேற்றுத் தோற்றங் களாகவும் உள்ளனவேயாம். உயிர்களின் வாழ்வுக்குப் பல

வாகிய பொருள்கள் தேவைப்படுகின்றன. உலகில் அறிந்தும் அறியாததுமான பொருள்களின் எண்ணிக்கை இத்தனைதான் என்று கணக்கிட்டுச் சொல்லவே முடியாதாம். இவ்வளவு பொருள்களையும் எதற்காகக் கடவுள் தோற்றுவித்துள்ளார்? இவ் வளவும் அவசியம்தானா? தேவையான ஓர் அளவு மட்டும் இருந் தால் போதாதோ? இவ்வளவு இல்லாமல் மனிதனுக்கு நிறை வாழ்வு ஏற்படாதா? என்றெல்லாம் பல வினாக்கள் கேட்கப்பட லாம். இவற்றிற்கெல்லாம் சரியான விடை மன அறிவுக்கு விளங்காது. திருவருளாலே அருள்ஒளிநிலை நின்று உணரும் தருணம் உண்மை விளங்கும். கடவுளின் பேரருட்பெருந்தன்மை அறிதற்கரியது; அதன் ஆற்றலும் செயலும், தோற்றமும் அகண்டமான பிரபஞ்சநிலை முற்றும் நிரம்பியுள்ளனவாம். அப்படி யுள்ள அருளின் முழு இயல்பை வெளிப்படுத்திக் காட்டப் பட்டுள்ளதே இப் பெரும் பிரபஞ்சமும் அதன் எண்ணிறந்த பொருட்களுமாம். கடவுள் யாவையும் மனிதனுக்காகப் படைத் துள்ளார் என்பதின் உண்மை, இந்த அருட்பெருஞ் சக்தியின் பெருமையை எல்லாம் உணர்ந்து தெளிந்து அருள்வாழ்வு கொண்டு விளங்குதற்கேயன்றி, பொருட்களையும், உயிர்களையும், ஆற்றல்களையும் தன் புலனின்ப வாழ்வுக்குப் பயன்படுத்த அல்லவாம் இவன் தானே அருள் ஒளி வண்ணமாய் இருந்துகொண்டு , எப்பொரு ளும் அவ்வொளியின் அம்சமாய் இருப்பதுகண்டு நிற்கும்போது, எதையும் தனக்கு வேறானதாக இல்லாததால், வேண்டும் என்று விரும்பாமலும், வேண்டாமென்று வெறுக்காமலும், அருள் உள்ளத் தோடு அன்புச்செயலோடு வாழ்கின்றான். உலகத்து அத்தனை பொருளும், பலவாகிய உயிரினங்களின் வாழ்வுக்கு வேண்டுவனவே என்பதையும் உணர்கின்றான். எதுவும் அவசியம் இல்லாதது என்று சொல்லூற்கில்லையாம். ஒருவன் ஓரளவு பொருளைக் கொண்டேனும், உலகைத் துறந்து தவநிலையில் இருந்துகொண் டேனும் வாழக்கூடும். அப்போது, அவனுக்கு எல்லாம் வல்ல அருட்பெரும்பதியின் பேரருள் விளக்கமும் தெரியவராது. அருளனுபவத்தோடு கூடிய எங்கும் என்றும் நிறைந்து விளங்கும் பெருவாழ்வும் அறியவும் பெறவும் முடியாதாம்.

இதனால் இவ்வுலகையும் மண்ணியற் பொருள்கள் பல வற்றையும் விருப்பு வெறுப்போடு நோக்காது அகமிருந்து அருட்ஜோதியாற் கண்டு, அன்புச் செயல் புரிந்துகொண்டிருத் தல் அருட்பெருஞ்ஜோதியின் ஆணையாகும்.

## (16)

397. மண்ணுறு நிலைபல வகுத்ததிற் செயல்பல
398. அண்ணுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) மண்ணிலே எத்தனையோ நிலைகள், படிவங்கள், அமைப்புகள், தோற்றங்கள், இணைந்திருக்கக் காண்கின்றோம். நிலத்தைத் தோண்டி ஆழ்ந்து செல்லச்செல்லப் பலவாகிய தோற்றங்களும், அமைப்புகளும், படிவங்களும், நிலைகளும் அடங்கிக் கிடப்பதைக் காண்கின்றோம். இவையெல்லாம் எவ்வளவோ காலமாக ஏற்பட்ட இயற்கைத் தாக்குதல்களால், அழுத்தத்தால் உண்டான சூட்டால், சுழற்சி, ஈர்ப்பு ஆற்றல்களின் வேகத்தால் ஏற்பட்டுள்ளனவாம். இப்படிப்பட்ட செயல்களால் உண்டானவைகளே உலோகத் தாதுக்கள், உப்பு வகைகள், பாஷாண வர்க்கங்கள் எல்லாமும். இவைகள் ஒவ்வொரு நிலையில் ஒவ்வொரு தோற்றத்தோடும், ஆற்றலோடும், வீரியத்தோடும், செயலோடும் விளங்குகின்றனவாம். இந்தச் செயல்கள் ஏற்படுவதால் நிலப்பரப்பின் மீது வளமும், விளைவிற் செழுமையும், பொருள்களில் தூய்மையும் ஆற்றலும் நன்கு விளங்கும். இவை கொண்டு மனிதன் தயாவொழுக்க வாழ்வு நடத்தி மேலான இன்ப நலம் காணலாகும்.

ஆனால், இன்றைய புலனிச்சைப் பெருக்கால், இயற்கை தரும் பொருள்களை வீணாக்காமலும், சிக்கனமாகவும் கொண்டு வாழமுடியாமல் மண்நிலைகளைப் பாழ்படுத்துகின்றான் மனிதன். நிலப்பரப்பின் கீழே வெகு ஆழத்திற்குக் குடைந்து சென்று அங்கங்குள்ள தாதுக்கனிகளையும், எண்ணெய் ஊற்றுகளையும், நிலக்கரிப் படிவங்களையும், உப்புப் பாறைகளையும் பெருவாரியாக வெட்டி எடுத்து எடுத்து வெளியிற் கொண்டு வந்து தேவைக்கு மேல் பல பொருள்களை ஆக்கி, வீணாக்கிக்கொண்டிருக்கின்றான். இதனால், மண்ணிலைகளில் பலவாகிய மாற்றங்கள், அழுத்தக் குறைவால், உள் ஆற்றல் குறைவால் ஏற்பட்ட நில நடுக்கங்களும், எரிமலைகளும், நில வெடிப்புகளும், சரிவுகளும் அதிகம் உண்டாகின்றன. மேலும் நிலத்தின் விளைபொருள்களில் வளமும் சத்தும் குறைந்துபோவதால் பலவாகிய நோய்நொடிகள் உலகில் தோன்றி மக்களினத்தையும் பிற உயிரினங்களையும் அதிகம் பாதிக்கின்றனவாம். இக்கேடுகள் எல்லாம் ஏன்?

மக்கள் தயாவொழுக்கமும், சத் விசாரமும் மேற்கொண்டு நல்ல முறையில் வாழப் பழகிக்கொள்ளாததால் என்பது விளங்கும்.

இப்பொழுது அருட்ஜோதி உதயமாகிவிட்டுள்ளதால், அக இருள் நீங்கிட உள்ளொளி பொங்கி செயல்படுவதாயிருக் கின்றதாம். ஆகையால், மண்ணின் இயல் நிலைகளையம், ஆற்றல் களையும் வீணாக்காமல், தேவைகளை மிக அதிகமாக வேண்டாமல் பெரும் பிரயத்தனமும் பொறிகளின் உதவியும் அதிகம் நாடாமல் உடல் உழைப்பால் உள்ளத்தில் அன்பொளி பெருக, புறவாழ்வில் நல்லின்பம் தழைக்க வாழ்தல் திருவருட்சம்மதமாம்.

## *(17)*

*399.* மண்ணிடைப் பக்குவம் வகுத்ததிற் பயன்பல
*400.* அண்ணுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** எந்த உயிரும், எந்தப் பொருளும் ஆரம்பத் திலேயே தன் நிறை நிலையோடு தோன்றி விடுவதில்லையாம். இதற்கு விதி விலக்காக உள்ளது ஒன்றே ஒன்று உண்டு! அது தான், பரம்பொருளாம் அருட்பெருங் கடவுள் ஆம். அக்கடவுள் அனாதிகாலமாகவே முழுநிறைவோடு, நிறை அருளோடு எங்கும் பரிபூரணமாக இருக்கின்றது உண்மையாம். உலகியலார்க்கு இந்த மெய்ப்பொருள் பற்றித் தெரிந்து கொள்ள முடிகின்ற தில்லை. இதனால்தான் இவ்வுலகிடை தோன்றிடும் எவ்வுயிரும், எப்பொருளும் நுண்ணிலையிலிருந்து சிறிது சிறிதாகப் பெருகி வளர்ந்து மாற்றம் அடைந்துகொண்டிருக்கின்றனவாம்.

இம்மண்ணுலகில் தோன்றிடும் உயிரும் பொருளும் மண்ணின் கூறினால் ஏற்பட்ட புறவடிவங்களை ஏற்று வளர்ந்து கொண்டுள் ளனவாம். இந்த மண்ணிலைத் தோற்றங்கள், அபக்குவம், பக் குவாபக்குவம், பக்குவம் என்ற நிலைகளை அடைந்து வருகின்றன என்பது அறியலாகும். ஒரு மலரை எடுத்துக்கொண்டால், அது முதலில் சிற்றரும்பாக உள்ள நிலை அபக்குவமாம்; அது பேரரும் பாகி மொட்டாகி முகிழ்த்திருக்கும் நிலை பக்குவாபக்குவமாம். மேல் மொட்டவிழ்ந்து இதழ்கள் விரிந்து நிறைமணங் கமழ விளங்கும் நிலையே அம்மலரின் பக்குவநிலையாகும். இதுபோல், ஒரு கனியை எடுத்துக்கொண்டு பார்த்தால், அது சிறிய

பிஞ்சாக இருந்த நிலை அபக்குவமாயும், பெருத்துக் காயாக இருந்த நிலை பக்குவாபக்குவமாயும் பழுத்துக் கனிந்த நிலையே பக்குவ நிலையாயும் அறியலாகும். இதேபோன்று மனிதப் பிறப்பு வடிவை எடுத்துக்கொண்டு நோக்கின், கருவிலேயே அபக்குவம், பக்குவாபக்குவம், பக்குவம் அடைந்து · குழந்தை யாய்த் தோற்றுவதும், இந்தக் குழந்தை நிலையே அபக்குவமாக வும் பின்னர் அறியாத சிறுபிள்ளைப்பருவம் பக்குவாபக்குவமாக வும், நல்ல வயதுவந்த முதிர்ச்சிப்பருவம் பக்குவ நிலையாகவும் விளங்கும். இதுவுமல்லாமல், மனிதன் பொறிபுலன் இச்சைவழி யில் வாழ்ந்துவரும் நிலை அபக்குவமாகவும், பகுத்தறிவுகொண்டு நல்லொழுக்க வாழ்வு மேற்கொண்டு விளங்கும் காலம் பக்கு வாபக்குவநிலை எனவும், முடிவில் மெய்யறிவும் மெய்யன்பும் கொண்டு மெய்யின்பம் பெருக வாழ்கின்ற பருவமே, பக்குவ மான நிறை மனித நிலை என்றும் அறியலாகும்.

மேற்படி, அபக்குவம், பக்குவாபக்குவம், பக்குவம் ஆகிய மூன்று நிலைகளிலும் அகத்தும்புறத்தும் பலவித மாற்றங்களும் செயல்களும், பயன்களும் உண்டாக்கிக்கொண்டுள்ளனவாம். இப்படி உண்டாகும் நிலைகளில் பெரும்பயன் எதுவெனில், மனிதன் சுத்தசன்மார்க்க பக்குவநிலை எய்தும் சுத்த சுகானந்தப் பேரின்பப்பெருநிலை வாழ்வே ஆகும். இவ் அருட்பெரும் வாழ்வு மனிதனுக்கு வழங்குவித்தற்பொருட்டே இந்த மண்ணிடைப் பக்குவநிலைகளை எல்லாம் வகுத்து அதற்கதற்கான பயன்களையும் விளைவித்து, முடிவில் அப் பெரும்பயன் தரும் நிறை அருட்பெருஞ் ஜோதியையே அண்ணுற அமைத்துக் கண்டடையும் பக்குவநிலை யையும் ஏற்படுத்தியுள்ளார் இப்பொழுது. இதனால், இந்த இறை அருட்பெரும்பயன் பெறத்தக்க முறையில் மனிதன், தன் அகத்தே அக்கடவுட் பூரணத்தைச் சார்ந்து நின்று நீங்காது அனகவாழ்வு மேற்கொண்டு ஒழுகவேண்டும். இம்மாதிரி பக்குவ நிலையே சுத்தசன்மார்க்கத்தினர் அடையவேண்டிய நிலையாம். இதுகொண்டு உலகமெல்லாம் அருளின்பில் ஓங்கும்.

**(18)**

**401. மண்ணியல் பலபல வகுத்ததிற் பிறவும்**
**402. அண்ணுற வமைத்த அருட்பெருஞ்ஜோதி**

**(உ-வி)** மண்ணின் இயல்விளக்க, இப்படிப் பதினெண் இணையடிகள் கொண்டு குறித்துள்ளவர், ஈண்டு தொகுத்துரைக் கின்றதோடு, மேல்விரி நிலைக்கும் வித்திடுகின்றார் இங்கு. மண்ணியல் விரி என்ற தலைப்பில், 1. மண்ணினில் திண்மையும் கிடக்கையும், 2. மண்ணில் பொன்மையும் ஐமையும், 3. மண்ணின் ஐம்பூவும் ஐந்திறமும், 4. மண்ணிற் பலவகை நாற்றமும், 5. மண் ணிற் பலவகை கருநிலையும், 6. மண்ணில் ஐந்தியலும் பயனும், 7. மண்ணில் அடிநிலையும் பன்னிலையும், 8. மண்ணில் ஐந்தைந்து வகைக் கலப்பும், 9. மண்ணியற் சத்தியும், மண்செயற்சத்தியும், 10. மண் உரு, மண்கலை சத்தியும், 11. மண் ஒளிச்சக்தி மண் கருச்சக்தியும், 12. மண்ணகச்சத்திகள் பலவகை, 14. மண்கரு வுயிர்த்தொகை வகை விரியும், 15. மண்ணினிற் பொருள் பல வகை விரியும், 16. மண்ணுறு நிலையும் செயலும், 17. மண் ணிடைப் பக்குவமும் பயனும், 18. மண்ணியல் பலபலவும் பிறவும் ஆக மண்ணியலை விரித்துக் காட்டியுள்ளதை யீண்டு அறி கின்றோம்.

மண்ணியலைப்பற்றி இவ்வளவு விரித்துக் கூறியும், இவை மட்டுமல்ல இன்னும் விரிவு உள்ளது என்ற குறிப்பை, பிறவும் என்ற சொல்லாற் சுட்டியுள்ளார். அப்படி மற்ற விரிவுகள் ஏற்தனு ம உளவாயினும், அல்லது இனிமேற்கொண்டு புதிதாகத் தோற்றுவதாயினும்கூட அவை எல்லாமும் அருள்அனுபவத் திற்கே உரியனவாய் அண்ணுற அமைத்துள்ளதாம் அருட்பெருஞ் ஜோதி. ஆண்டவர் நிறைபரம்பொருளாக என்றும் இருத்தலின், அதனிடத்து இல்லாதது என்று ஒன்றும் இருக்கமுடியாது; ஒரு வேளை வெளிப்படாமல் இருக்கலாம். அப்போது குறிப்பிட்ட ஒன்று, இல்லாததுபோலிருக்கலாம். பின்னர் வெளியாகும்போது புதிய தோற்றமாய்க் கொள்ளக்கூடும். இந்த மண்ணியலில் ஹீலியம் என்ற தாது (Helium) இல்லாதிருந்ததும் பின்னர் அவ்வுலோகத்தாது ஞாயிற்றினிடத்திலிருந்து கிடைக்கப்பெற்ற தாகக் கூறப்படுகின்றது. சூரியனை ''ஹீலியாஸ்'' (Helios) என்ற ஜெர்மானியச் சொல்லால் குறிக்கப்படுவதிலிருந்து, அச் சூரியனிடமிருந்து கிடைக்கப்பெற்ற உலோகத்திற்கு ஹீலியம் என்ற பெயர் வழங்கப்பட்டிருக்கின்றதாம். இதுபோல் இன்னும் புதியபுதிய தாதுப்பொருட்களும் பிறவும், சந்திர மண்டலம் அல்லது மற்ற கோட் கோளங்களிலிருந்து பெறப் படலாம் அல்லது வேற்றுத் தொலைதூரத்து விண்மீன்களிலிருந்து

பல மண்ணியற்பொருள் கிடைக்கப்பெறலாம். இவையெல்லாம் கூட நம் அகநிலை யுண்மைக்குள் அடங்கியதாய், அருளியல் வாழ்வுக்கு உதவுவதாய்த் தெரிந்துகொள்ளுவோம். இம்மண் ணியல் விரி பெரியது ஆகையால் இவ்வளவு அதிகமாகக் குறிக்க நேர்ந்துள்ளது. மற்றவைகளின் விரிவு ஓரளவு குறைவாய் இருக்கும். என்றாலும் ஒவ்வொன்றும் வழங்கவுள்ள பயன் பெரிதேயாம்.

## 180. நீரியல் விரி (1)

403. நீரினிற் றண்மையும் நிகழு றொழுக்கமும்

404. ஆருற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) நீரின் இயல்பு விரித்துரைக்கப்படுகின்றது. முதலில் நீரின் குணம் இவை எனப் பகரப்பட்டுள்ளது; யாதெனில், தண்மை அல்லது குளிர்ச்சிதான் முக்கியமானதாம். இதனாலேயே, இதனைத் தண்ணீர் என்றே பொதுவாகக் கூறப் படுகின்றது வழக்கம். தீயின் சூடு தணிந்துபோகும்போது குளிர்ச்சி அடைந்துவந்து நீரகவாயும் உயிர்வளியும் கூடும்போது தண்ணீர் தோன்றிடுவது இயற்கையாகும். தண்ணீரின் இத் தண்மைக்குணம் ஒரு குறிப்பிட்ட நிலையில்தான் அளவும் கனமும் ஒருநிலையில் இருக்கின்றதாம். அதாவது தண்ணீர், 4° சென்டி கிரேடு நிலையில், ஒரு கன சென்டி மீட்டருக்கு 1 கிராம் கனம் இருக்கின்றது. இத்தண்மை நிலை 4° க்குக் குறைந்தாலும் அல்லது அதிகமானாலும் ஒரு கன சென்டி மீட்டரின் எடை குறைந்துவிடு கின்றது. இதனால் தண்ணீர் குளிர்ந்து 0° க்குக் கீழே போகும் போது நீர் உறைந்து பனிக்கட்டியாக மாறினாலும் தண்ணீரை விடக் கனக்குறைவாய் இருப்பதனால், தண்ணீரில் மிதக்கின்றது. சூடு அதிகரிக்கும்போது நீரின் அணுச்செறிவு அகன்றுவிடுவதால் அப்போதும் கனம் குறைகின்றது. ஆவியாக மாறி மேலெழுந்து காற்றில் செல்லுகின்றதாம். இத்தண்மைக் குணத்தோடு, நெகிழ்வு, ஊறுதல், செல்லுதல் இவையே இங்கு (நிகழ், ஊறு, ஒழுக்கம் எனக்) குறிக்கப்பட்டுள்ளன. இவற்றால் தண்ணீர் கடினமான மண் இயலை, இளக்கியும் குழைத்தும் பதப்படுத்தியும் வளம்பெற உதவுகின்றது. தண்ணீரின் கசிவுத்தன்மையும் பரவும் குணமும் கூட மண்ணிடை வள விளைவுகளுக்குக் காரணமா யுள்ளனவாம்.

நீரின்றி அமையாது இவ்வுலகவாழ்வு என்பது எவ்வளவு உண்மை என்பது, இன்றைய மனிதன் சந்திரமண்டலத்தில் சென்று அனுபவவாயிற் கண்டுள்ள உண்மையாகும். நீருக்கு இங்கு குறிக்கப்பட்டுள்ள குணங்கள் இல்லையானால், நிலவுலகில் எங்கும் போதிய அளவு தண்ணீரின் சத்து பரவி, வள நிலத்தில் தாவரங்கள் செழித்து ஓங்கி மக்கள் வாழ்வுக்குக் கிடைக்காமல் போய்விடும். ஆகவேதான், மனிதன் அருள்நெறி பற்றியொழுகி மெய்யின்ப வாழ்வு அடையவேண்டியே, இக்குணநலம் நிரம்பிய தண்ணீரை இவ்வுலகின்கண் நிறையவே தோற்றுவித்துள்ளார் என்று அறியலாகும். ஆர் என்றால் நிறைவு என்று பொருளாம்.

### (2)

405. நீரினிற் பசுமையை நிறுத்தி யதிற்பல
406. ஆருற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** பசுமையும் நீரின் இயல்பே. இப் பசுமை என்பது பச்சை, இளமை, செழுமை, செவ்வி, பொன்னிறம் என்றெல்லாம் பொருள் பெறும். இக்குணக் காரணமாகவே நீர் கொண்டு வளரும் தாவரங்கள் யாவும், மென்மையாகவும், செழுமையாகவும் அழகாகவும் தோன்றி முதிர்ந்து பழுப்பாகும்போது மஞ்சள் நிறமாக மாறுவது இயல்பாய்க் காண்கின்றோம். மேலும் தண்ணீர் நிலைகளில் பச்சைப் பாசம் உண்டாவதும், பாசிபடர்ந்து குளநீர்கள் மூடுண்டு கிடப்பதும் அறிவோம். பசுமையும் கருமையும் கலந்த நீலநிறமான கடல் நீர்த்தோற்றம், நீரின் இப்பசுந்தன்மையாலும் நீலவான் கொண்ட நிறத்தாலும் விளங்குவதாம்.

உலகில், வளம் உண்டாகி, உயிர் விளங்கி, அருள் அனுபவம் பெற, நீரின் இப்பசுந்தன்மை பொருத்தமாய் அமைந்திருக்கின்றதாம். மண்ணில் மறைந்துகிடக்கும் பலவாகிய இயல்புகளை வெளிப்படுத்திப் புறவுலகில் தோற்றுவித்து, நற்பெரும் பயன்களை எல்லாம் விளைவிக்க இந்த நீரின் இயல்புதான் பெரிதும் உதவுகின்றதென அறியப்படும். நீரற்ற பிற கோள் மண்டலங்களில், மண்ணியல் வெளிப்பட மார்க்கமுமில்லை, மற்றும் உயிரினங்களின் வாழ்வுக்கு வசதியும் இல்லை. ஆகையால், அவ்விடங்களில் மனிதன் வளம்பெற வாழவும் நலம்பெற்று விளங்கவும்

முடியாது எனலாம். ஆகவே கடவுட்படைப்பில் இவ்வுலகும், இதில் வாழவந்துள்ள மக்களினமும் சிறந்தனவாகக் கொள்ளப் படுகின்றன.

### (3)

407. நீரிடைப் பூவியல் நிகழுறு திறவியல்
408. ஆர்தர வகுத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) பூவியல் என்பது விரிந்து படரும் தன்மையாம். விரிந்து மலர்ந்த மலரையும் இதனால் பூ என்கின்றோம். தண்ணீர் இந்த விரிகுணத் தன்மையால், எங்கெங்கு எப்பக்கம் அழுத்தப் படுகின்றதோ அப்பக்கம் நெகிழ்ந்தும் பாய்ந்தும் பரவுகின்ற தாம். இந்த நீரின் அழுத்தும் திறல், கீழ், மேல் பக்கங்கள் எல்லாம், ஒருபடித்தாய் இருக்கின்றது என்பதை விஞ்ஞான உலகம் பரிசோதித்து நன்கு அறிந்துள்ளது. இக்குண இயல் நன்கு ஆய்ந்துகண்ட அறிவியற் பொறியியல் வல்லுநர்கள், பெரிய பெரிய நீர்த் தேக்கங்களையும், ஆறு அருவிகளின் போக்கு களையும் நன்கு பயன்படும் முறை அமைத்து உலக வாழவுக்கு உதவுகின்றனர்.

நீருக்கு இந்த அருங்குணம் ஆண்டவர் அமைத்துள்ளது, பல வகையிலும் இங்கு மக்கள் வாழ்வு செழித்து நிறைவு பெறு வதற்கேயாம். ஆனால் அருள் ஒழுக்கம் பூணாத மக்களினம் இந் நீரின் இயலும், திறலும் அறிந்தும் அறியாமலும், பெரு முயற்சி யாலும், முயற்சியின்மையாலும் அவத்தையே அடைந்துகொண் டிருக்கின்றனர். இயற்கையில் மழை பொழிகின்றது, பருவங்கள் சுற்றிச் சுற்றி வருகின்றன, நீரின் இயல்பால் வளமெல்லாம் பெருகுகின்றன. இவ்வளமெல்லாம் இருந்தும் மக்கள் நல்ல உள்ளத்தோடு, அருள்நாட்டத்தோடு, வீண்பாடு படாமல் முறையாக உழைத்தாலே போதும். திருவருளால் யாதொரு குறைவுமில்லாது உலகியலையே அருளியலாக ஆக்கிக் கொண்டு வாழ்ந்து ஆனந்தமுறலாம். மருள் மனத் தீச்செயலால் எவ்வளவு முயற்சி செய்தும் வேண்டியன பெற்றும் முடிவில் அமைதியும், இன்ப வாழ்வும் அடையாதுபோவது கடவுள் ஆணைக்கு மாறான தாகும். அருட்பெருஞ்ஜோதியின் திருவுளம், நாம் இந்த நீரிய விலே கடவுளர் அருளியலைக் கண்டு நிறைவுறுவதற்கேயாம்.

இதுவே ஈண்டு, "நீரிடைத் திறவியல் ஆர்தர வகுத்த அருட்பெருஞ்ஜோதி", என்று குறித்துள்ளார்.

(4)

409. நீரினிற் சுவைநிலை நிரைத்ததிற் பலவகை
410. ஆருறப் புரிந்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) எந்தக் கரைசலும் சேராத சுத்த ஆவி நீரில் (Distilled Water) சுவை இல்லை என்பர். இதுபோல் ஐட்ரஜன், ஆக்ஸிஜன் கூட்டிப் பெறப்படும் நீரிலும் சுவை இல்லையாம். வான்பொழி மழை நீரில் காற்றிற் கலந்த சிலவகை உப்புச் சேர்க்கையால் நற்சுவை யேற்படுகின்றது. மேலும் அம்மழை நீர் பல்வகை நிலங்களில் வீழ்ந்து அங்கங்குள்ள மண்ணியல் சத்துகள் கலப்ப தால் பலவித சுவையும் தன்மையும் பெறுகின்றதாம், மக்களுக்குக் கிடைக்கும் நீர் எல்லாம். நீரில் இந்தச் சுவைகள் எல்லாம் எதற்கு அமைக்கப்பட்டிருக்கின்றன? பொதுவாகச் சுவைகளை எல்லாம் அறுசுவை என்ற தொகுப்பில் அடக்கிக் கூறுவர். இச்சுவைகளை அறிய மனிதனுக்கு நாக்குதான் உரிய கருவியாய் இருக்கின்றது. இந்நாவினைக் கொண்டு சுவையறிந்து உடல்நல வாழ்வுக்கு உகந்ததை அளவாக ஏற்பதும், பொருந்தாததை அருந்தாதிருப்பதும் மனிதன் கடமையாம். சுவை விரும்பா திருத்தல், உண்மைநெறி ஒழுக்கத்தில் முக்கியம் கொள்ளப் பட வேண்டிய ஒன்றாம். நீரை அமுதம் என்பர். இது உடல் வளர்ச்சிக்குத் தேவையான ஒன்றாம். நீர் நிலையில் இந்த அமுத சத்து அடிபாகத்தில் பொருந்தி நிற்கும், இதற்கு மேல் பூத பாகமும், விஷ பாகமும் மறைத்துக் கொண்டிருக்கும். மேல் இரு கூறையும் நீக்கிவிட்டு அமுத பாகத்தை ஏற்பது நன்று என்று வள்ளலார் கூறியுள்ளார். தண்ணீரைச் சூடாக்கிவிட் டால் தண்ணீரின் நச்சுப் பகுதியும், பூத சக்திப் பகுதியும் நீங்கி விடுவதால் வெந்நீரை அருந்தல் நன்று என்பர். இல்லாவிட்டால் அருள் அமுத ஜோதியை சிந்தித்து நீரை அருந்தினால், அதுவும் அமுதமயமாகி நலம் பயக்கும்.

மண்ணியற் பொருள்களில் கலந்து பலவகை சத்துக்களும் நீரின் சேர்க்கையால் பல சுவை ரசமாய் மாறி பண்டங்களில் இடம் பெறுகின்றனவாம். இனிப்பு, கைப்பு, கார்ப்பு, துவர்ப்பு,

புளிப்பு, உப்புச் சுவைகள் உள்ள காய்,கனி, கொட்டை முதலானவற்றை அறிவோம். அவற்றின் கருநிலை ஆகிய விதைகள், கிழங்குகள் முதலியவற்றை ஒரு நிலத்தில் பயிரிட்டு, நீர்வார்த்து விளைவிக்கும்போது, அவைகளிலிருந்து விளைகின்ற கனி வர்க்கம் அதற்கதற்குரிய சுவையிற் கொஞ்சமும் மாறுபாடின்றி இருப்பதைக் காண்கின்றோம். எல்லாவற்றிற்கும் மண்ணும் நீரும் ஒரே மாதிரிதானே வழங்கினோம். அப்படியிருக்க, அவற்றின் கனிகள் வேறுபட்ட சுவையுடன் விளைவு கொண்ட தெப்படி? என்பதைச் சற்று ஊன்றி உணரின் நன்கு அறியலாகும். ஒவ்வொரு விதைக் கருவிலும், அதற்கே உரிய, வேர் முதல் பழம் வரை தேவையான எல்லா அம்சங்களின் சூக்குமச்சத்துகளும் அடங்கியிருந்து, மண்ணியலாலும், நீரியலாலும் விளைவு கொள்ளும்போது அது தனக்குரிய மணமும் சுவையும் கொண்ட கனியை யீன்றளிக்கின்றது உண்மையாம். ஆகவே, நீரினால் சுவைநிலை நிரைத்திடப்பெறுகின்றதென அறிகின்றோம். இதுவே, இங்கு, நீரினிற் சுவைநிலை நிரைத்ததிற் பலவகை ஆர் உறப் புரிந்த அருட்பெருஞ் ஜோதி என்றுள்ளார். மனிதன் சுத்த சத்துவ குணம் வளர் பண்டங்களில் விருப்பு வெறுப்பின்றி ஏற்று உயிர் விளக்கத்துடன் இருந்து அன்புச் செயல் புரியப் புரிய அருள் அகநின்று சுரக்கும். அதுவே அருளமுதமாகக் கொண்டு நிறை இன்ப வாழ்வு பெற வேண்டியது கடவுள் ஆணையாம். புறச்சுவைப் பொருட்களை அறிந்தும் அவற்றில் பற்று கொள்ளாது மேல் செல்ல, அருளமுதின் சுவையை அருளால் அனுபவிக்கும்போது அறிகின்றான். இவ்வுண்மையைப் பிறிதோரிரு இடங்களில் விளக்கமாகக் கண்டுகொள்ளுவோம்.

## (5)

**411. நீரினில் கருநிலை நிகழ்த்திய பற்பல**
**412. ஆருற வகுத்த அருட்பெருஞ் ஜோதி**

(உ-வி) நீரைப் பற்றி உலகம் எவ்வளவோ தெரிந்து கொண்டிருக்கின்றது. புறநீரின் குணம், ஆற்றல் செயல்திறன், பயன் எண்ணிலாதனவாம். இவ்வளவும் அந்நீரின் கருநிலையிற்றானே உள்ளுறைந்திருந்து காலத்தே சூழ்நிலைக்குத் தக்கபடி வெளியாகிக் கொண்டிருக்கின்றனவாம். கருவின்கண் யாவும் நுண்

நிலையிற் பொருந்தி நின்றுதான் பின்னர் வளர்ச்சியில் வெளிப் பட்டு விளங்குகின்றன. அவ்வக இயல் வெளிப்பட்டு விளங் கற்கே, புறச்சூழ்நிலைகள் துணைப்பொருளாய் வந்து சூழ்கின்றன. கருவில் அமையாத, இல்லாத ஒன்று, அதற்குப் புறத் தோற்றத் தில் உண்டாகாது. நீரின் கரு நிலையில், பொதுவாக ஐட்ரஜனும், ஆக்ஸிஜனும்தான் கலந்திருப்பதாக அறிந்துள்ளனர். ஆனால் அக்கருநிலையில் மிக நுண்ணியதாக, அறிவரிய பூதசக்திகளும், அவற்றின் இயல் செயல்களும் அமைந்துள்ளனவாம். இதனால், இந்த நீரக அணுவுடன், மற்ற பூதங்களின் அம்சங்கள் வேறு வேறான அளவுச் சேர்க்கையால், அனந்தவண்ணத் திரவப் பொருள்களாகப் பெருகுகின்றனவாம். பூமியிலும், கல்லிலும், தாவரப்பொருள்களிலும், காற்றிலும் இருந்துகூட எத்தனையோ விதமான, அமிலங்கள், (Acids) எண்ணெய்கள்; ஆவிகள் (Gases) கிடைக்கப்பெறுகின்றனவாம். இவற்றில் இதுகாறும் கண்டு பிடிக்கப்பட்டவையும், பயன்படுத்திக் கொள்ளப்பட்டவையும் ஓரளவுதான். இன்னும் புதிதாக எவ்வளவோ, வருங்காலத்தில் வெளிப்படும். இவைகள் எல்லாம் நமக்குத் தேவைதானா? தேவையில்லையா? என்றால், நமக்குத் தேவையில்லாதது என்று எதுவுமில்லை. எது எந்தக் காலத்தில், எவ்வளவு தேவையோ, அது, அந்தக் காலத்தில் அந்த அளவுக்குத் திருவருள் வெளி யாக்கப் பிறர் வாயிலாகக் கண்டுபிடிக்கப்படுகின்றன. ஆனால், இவற்றைப் பயன்படுத்திக் கொள்ளும் மக்கள், தயவோடு கூடிய மெய்யின்ப வாழ்வுக்கான முறையில் யாவையும் ஏற்று எவ் வளவோ சுக சௌக்கியமாக எளியமுறையில் வாழலாம். ஆவற்பெருக்காலும், தயவின்மையாலும். வீணாடம்பர வாழ் வாலும், எந்தப் புதிய அரிய கண்டுபிடிப்புக்களாலும் அமைதி யான ஆனந்தவாழ்வு கிட்டாதிருக்கின்றதாம்.

நம் இறைபரம்பொருள், நீரின் கருநிலையில், எவ்வளவோ பொருட்களையும் ஆற்றல்களையும் பொதிந்து வைத்திருந்து காலத்தே வெளிப்படுத்திக் கொண்டிருந்தும், மக்கள் கடவுளின் திருவருட்செயலை யுணராதிருப்பதும், மாறுபட நடந்துகொண்டு அவத்தைப்படுகின்றதும் இரங்கத்தக்க விஷயங்களே. அருட் பெருஞ்ஜோதியால், உண்மை கண்டு உலகெலாம் உய்வதாக.

## (6)

**413. நீரிடை நான்கியல் நிலவுவித் ததிற்பல**

**414. ஆர்தர வகுத்த அருட்பெருஞ் ஜோதி**

(உ-வி) நீரின் இயல் தொடக்கத்தில் அதன் தண்மைக் குணம் பற்றிய விளக்கமும் நிலையும் ஒருவாறு குறிக்கப்பட்டது. அதன் ஒரு விரிவுரை விளக்கமாக இங்கு அந்நீரின் நான்கு இயல்கள் பற்றி யுணர்த்தப்பெறுகின்றன. நீரின் நான்கு இயல் ஆவன: (1) சாதாரணச் சூழ்நிலையில், நீர் மிகத் தட்பமோ வெப்பமோ அடையாத நிலையில், யாவராலும் விரும்பி ஏற்றுப் பயன்படுத்திக்கொள்ளும் வகையில் அமைந்துள்ளதாம். இந்தச் சுத்த நீரே $4^{\circ}C$ சுடுகையுள்ளதாயும் 1 C.C. ஒரு கிராம் நிறை யுள்ளதாயும் விளங்குகின்றதாம். (2) இரண்டாவதாக நீர், தட்ப மிகுதியால், சுடுகை குறைந்து $0^{\circ}C$க்கும் கீழே வெப்பமானி காட்டும் நிலையில் திரவமாய் இருந்த நீர், திடநிலை அடைந்து பனிக்கட்டி ஆக விளங்குவதாம். இந்தக் கட்டி நிலையில் நீர் அணுச்செறிவு விரிவது ஒரு சிறப்பான அம்சமாகும். இதனால், பனிக்கட்டி, நீரைவிட இலேசாகினும், கனப்பரிமாணம் அதி கரித்து பருமனாக விளங்குகின்றதாம். இதுகாரணமாக பனிக் கட்டியின் ஓரள்வு நீர் மட்டத்திற்கு மேலே தெரியும்படி, மற்ற பகுதி நீரின்கீழ் மூழ்கி இருக்கக் காண்கின்றோம். நீரால் உயிரினங்கள் வாழவேண்டியுள்ளன. அந்நீரின் இயற்கை சுடுகையே யாவற்றிற்கும் பொருந்தும். சூடு மிகினும் குறையினும் சில உயிரினங்கட்குத் தாங்க்முடியாததாகிக் கேடு விளையும். நீர்வாழ் உயிர்கள் நீரிற்கலந்துள்ள உயிர்க்காற்றின் சக்தியால், பிற சிற்றுயிர்களையும் நீர்த்தாவரங்களையும் உண்டு வளரும். பனிக்கடலடி வாழ் உயிரினங்கள் அங்கேயே நெடுங்காலமாக வாழ்கின்றவையாம், நீரின் மேல் மட்டத்திற்கு வராமலே இருக் கின்றனவாம். அந்த ஆழ்கடலில் கீழ்நிலையில் பனிக்கட்டி உண்டாவதேயில்லை. ஏனெனில் கடற்பரப்பின்கீழ் ஒரு குறிப் பிட்ட அளவுக்கே நீர் பனிக்கட்டியாகி மிதக்க அதற்குக் கீழ்ப் பாகம் முற்றும் உறைநிலை (Freezing Point) அடையாதிருக் கின்றதாம். ஆகையால், கடலடிவாழ் உயிரினங்களுக்குப் பனிக் கட்டியில் உறைந்துபடும் நிலை ஏற்படாதிருக்கின்றது. ஆகவே, அங்கு அவ்வுயிரினங்கள் நீரில் கலந்துள்ள உயிர்க்காற்றின் உதவியால், ஜீவித்து வருகின்றனவாம். (3) கடல்நீர்ப்பரப்பின்

மீது, காற்றின் வேகத்தாலும், சூரியனின் சூடடாலும், ஈர்ப்புச் சக்திகளாலும் நீர் அலைகள் எழும்புகின்றன. பேரலைகளில் சிறிய பெரிய நீர்க்குமிழிகள் பேரளவிற் கூடி வெண்ணுரையாகக் கிளம்பித் திரைபோன்று உயர்ந்து எழுந்தும் சுருண்டும் விரிந்தும் பாய்கின்றனவாம். இந்த அலைகளாலும், இவற்றின் பொருள்களாலும், வேகத்தாலும் எத்தனையோ பயன் உண்டாகின்றனவாம். *(4)* பொதுவாக எல்லா நீர்நிலைகளின் மீதும் இயற்கை வெப்பத்தாலும், வெய்யிலின் சூட்டாலும் நீராவியுண்டாகி மேலெழுகின்றது. நீரின் பெருக்காகிய கடல் நீரினின்றுதான் பேரளவு நீராவி யுண்டாகி, மேலே சென்று முகிலாகிக் குளிர்ந்து மழையாய்ப் பெய்கின்றதாம். இந்நீராவியால் மேகக்கூட்டமும், வானிலையில் இரசாயன மாற்றச் செயலால், மின்காந்த அலைகள் ஏற்பட்டுப் பேரதிர்ச்சிகளும், இடியும் மின்னலும் உண்டாகின்றனவாம். நீராவியால் உண்டாகின்ற மழை ஓரளவு என்றால், இயற்கை வானிலையிலுள்ள நீரக உயிர் வளிச்சேர்க்கையாலுண்டாகின்ற நீரும் ஓரளவு கூடிப் பெருமழையாகப் பொழிகின்றதாம்.

இப்படி நீரின் நான்கு நிலைகளிலும் அனேக இயலும் செயலும் வெளிப்பட்டு உலகம் பல வகையிலும் பயன்பெறத் திருவருள் பாலிக்கப்படுகின்றதாம். இவை எல்லாம் அறிந்து, இவைகளைத் தக்க வழியில் பயன்படுத்தி, உலக வாழ்வில் எல்லோர்க்கும் நலம் ஏற்படும்படி உதவினால் திருவருளால், இன்றைய துன்ப உலகம் முற்றிலும் மாறி இன்ப உலகமாக விளங்குவது திண்ணம்.

## (7).

415. நீரிடை யடிநடு நிலையுற வகுத்தனல்
416. ஆர்தரப் புரிந்த அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** நீரின் துளியைக் காண்கின்றோம். அத் துளிநீருக்கு அடி, நடு உண்டெென அறிவோம். அப்போது, அந்த அடி நடுவுக்கு முடியாக இருப்பது, அத்துளியின் புறநிலையே எனவும் அறியலாகும். நீர்த்துளியைச் சூடுபடுத்தினால் அதன் மேற் பகுதியிலிருந்து ஆவி எழுந்து வெளியிற் பரவும். அப்போது அந்நீரினுள்ளிருக்கும் பொருள்களும் ஆற்றல்களும் வெளியா

கின்றன. அடிநிலையில் ஒருசில உப்பு வகைகள் இருந்து ஆவிசென்றபின், எஞ்சிநிற்கும். கடல் நீரிலிருந்து உப்பு எடுப் பதை யாவரும் அறிந்ததே. இதுபோல் வேறு வேறான நீர் நிலைகளிலிருந்தும், சாறுகளிலிருந்தும் மூலிகைகளிலிருந்தும் உப்பு எடுத்தல் அறியப்படும். நீரின் நடுநிலையில் உள்ள அனல் வெளிப்படுவதும் மின்னல் மூலமும், நீர் வீழ்ச்சியால் ம் வேகத் தாலும் அறியப்படும்.

ஆதியில் நீர்நிலை ஞாயிற்றினிடமிருந்து தீயாகவும், மின் னியற்சக்திகளாகவும், திரவசக்தி வாயுக்களாகவும் வந்து தீக் கோளமாய் அமைந்த பூமியில் செறிந்திருந்த சத்துக்கள் காலத்தே நீரின் அகம், அகப்புறம் ஆகிய தோற்றரிய சக்தி களாய் விளங்கிப் பின்னர் நீராக ஆகி நிரம்பியபோது, அகச் சக்திகள் அனலின் கூறுகளை யுட்கொண்டு நிலைத்துவிட்டன. அப்போது முதல் நீர் நிலையும் இப்பூமியின்மீது நிரம்பி விளங்க லாயிற்றாம். இந்நீரின்கண் இருக்கும் நெருப்பு சக்தி நிலச்சுழற் சியாலும் ஈர்ப்பாலும் வட கடலடியிலும் பிற இடங்களிலும் கீழ்நீர் ஓட்டங்க்ளாகக் காணப்படும். வடக்கு நோக்கி எழுகின்ற இத் தீயை வடவை அல்லது வடவாமுகாக்கினி என்று கூறுவர். இதுபோல் மனிதனில் பிண்டபாகத்தில் ஜடராக்கினியும் உண் டாகி விளங்குகின்றதாம். இப்படி நீரின் அகச்சக்தியால், நீரின் தீ ஆற்றலால் மனிதன் உணவைப் பக்குவப்படுத்திட உடல் வளர்ச்சிக்கு ஏற்றதாய் உதவுகின்றது இந்த நீரிடை அனல். மனிதவாழ்வுக்கு இந்நீரின் சக்தி எவ்வளவு முக்கியம் என்பதை அகநின்று காணும்போது மிக அதிகமாக அறியலாம். அருட்பெருஞ்ஜோதியின் செயல் எப்படியெல்லாம் வெளியாகி உதவுகின்றன. யாவும் பெரு வியப்பாம்.

## (8)

**417. நீரிடை யொளியியல் நிகழ்பல குணவியல்**
**418. ஆர்தர வகுத்த அருட்பெருஞ் ஜோதி**

(உ-வி) சுத்த நீருக்குச் சுவையில்லாததுபோல், சுத்த நீருக்கு நிறமும் இல்லையாம். ஆனால் பிற பொருட்களின் சேர்க்கையால், பூத சக்திகளின் சேர்க்கையால் ஞாயிற்றின் ஒளிக்கதிர்கள் பரவலால், பலவாகிய நிறங்கள் நீருக்கு

ஏற்படும். நீரணுவில் அகத்தும் புறத்தும் சில ஆற்றலும் வடிவத்தோற்றமும் உள்ளனவாம். இந்த இரண்டிற்கும் இடைநிலையில் மின் அணுக்கள் உள்ளனவாம். இவைதான் நிறங்களை ஏற்றுப் புல வண்ணங்களையும், சாயங்களையும், உயிரி னங்களிலும் பொருள்களிலும் இயற்கைவண்ணத் தோற்றங்களை யுண்டுபண்ணுகின்றனவாம். ஒளியால் நீரின் குணத்தன்மை மாற்றமடைகின்றது. நீரையோ, பாலையோ, சில மருந்து களையோ சில நிறக் கண்ணாடிப் புட்டிகளில், பாத்திரங்களில், உலோகப்பாண்டங்களில் வைத்திருந்து உட்கொண்டால் பலவித ஆற்றல்கள் கிடைக்கின்றன. ஒளி இன்மையால், இருளால் நீரில் சில கேடுசெய் ஆற்றல்கள் விளைகின்றன. இருளில் வளரும் செடிகள் நன்கு செழிக்காமல் குன்றியும் வெளுத்தும் போவதை அறிவோம். தாவரங்களில் நீர் பாய்ந்து வளரும் விதம் அற்புதமானது. செழுமையும் வண்ணமலர்களின் எழிலும் நீரின் ஒளியியலால் அமைகின்றனவாம். செடிகொடிகள் வெளிச்சத்தை நோக்கிச் சாய்ந்து சென்று வளரவும் இந்நீரின் ஒளியியலே காரணமாம். இப்படி நீரிலே ஒளி ஆற்றலையும் நிறத்தன்மையையும் அமைத்த நம் பதி, நம் அகத்தில் அன்பு நீர்மையை வளர்க்கவும் அருட்குணத்தைப் பெருக்கவும், இன்பச் செயலைப் புரிவிக்கவும் உதவுகின்றதையே தெரிந்துகொள்ள முடிகின்றதாம்.

### *(9)*

***419. நீரிடைச் சக்திகள் நிகழ்வகை பலபல***

***420. ஆர்தர வகுத்த அருட்பெருஞ் ஜோதி***

**(உ-வி)** நீரில் அநேக சக்திகள் பொதிந்து வைத்திருந்து வெளிப்படுத்தப்பட்டு வருகின்றன. ஒருவாறு நெகிழ்தல், பரவுதல், நெகிழ்வித்தல், அழுத்தல், சுழற்றல், வளப்படுத்தல், கலத்தல் சூடு, மின்சாரம், சுவை முதலான சக்திகளால் இந்தப் பரந்த உலகையும், இதிலுள்ள பலவான பொருள்களையும் உயிரினங் களையும் பல்கிப்பெருகிப் பக்குவமடைய உதவுகின்றனவாம்.

பிற வுயிரினங்கள் நியதிப்படி தோன்றி வளர்ந்து பக்குவப் பட்டு மறைந்து மேனிலைக்கு ஏறிக்கொண்டே யிருக்கின்றன. மனித இனமோ நியதிப்படி விதிமுறைக்கொப்ப தோன்றினாலும்கூட

அன்பும் அறிவும் பெருக்கிக்கொண்டு அருள்வாழ்வு மேற்கொண்டு வளரவேண்டியவனா யுள்ளது. இதற்காகவே இவனை இம் மண்ணுலகில் பிறப்பித்து அன்பறிவை வளர்க்கத் தகுந்தபடி எல்லாச் சூழ்நிலைகளையும் வழங்கியுள்ளார். இதனால்தான் இங்கேதான் இந்த நீரியலின் அற்புத ஆற்றல்களை எல்லாம் இப்படி வெளிப்படச் செய்துகொண்டுள்ளார். பிறவிடங்களில் இதுபோன்ற நீரியல் வெளியாகாததால் மக்களினம் அங்கு தோன்றி வளர்ந்து பக்குவமுறவும் முடியாதென்பது தெளிவு. ஆகையால், இங்குள்ளவன் இறையருள் நெறியை யுணர்ந்து ஏற்று ஒழுகுதலே சாலச் சிறந்தது. இதை விடுத்து, அருளறியா மருட்செயலால் உழன்றுகொண்டும், இச்சை வசப்பட்டு அழிந்து கொண்டும் இருத்தல் திருவுளச் சம்மதமன்று. அருள்முயற்சி மேற்கொண்டால், எதையும் அறியலாம், எங்கும் செல்லாமற் சென்று யாவருக்கும் நலம் புரியலாம். இது அருட்பெருஞ் ஜோதிபதியின் ஆணை.

## *(10)*

**421. நீரினிற் சத்தர்கள் நிறைவகை யுறைவகை**
**422. ஆர்தரப் புரிந்த அருட்பெருஞ் ஜோதி**

**(உ-வி)** நீரில் பல ஆற்றல்களும் தன்மைகளும் உண் டென்பது அறிவோம். அவ்வாற்றலை, தன்மையைச் சக்திகள் என்பர். அதனைத் தன் இயல்பாய்ப் பெற்று, செயலில் வெளிப் படும் பொருள்கள் அல்லது தத்துவங்கள், அல்லது உயிர் வடிவங்கள் சத்தர்கள் எனப்படும். நீரிலே எத்தனையோவகை நுண்தாதுப்பொருட்கள், பூதப் பொருட்கள், மின்னியல் சிற்ற ணுக்கள் உள்ளன ஆதலின், அவை ஒவ்வொன்றும் செயலொடு விளங்கும்போது சத்தராகக் கொள்ளப்படுகின்றது. இப்படி எத்தனையோ சத்தர்களை உள்ளடக்கிக் கொண்டுள்ளது நாம் காணும் நீர். இச் சத்தர்களால்தான் நீர்நிலை பரவுவதும் விரி வதும், சுருங்குவதும் உறைவதும் ஆகவுள்ளதாம்.

இவ்வளவு ஆற்றலையும் குணத்தையும் பொதிந்துவைக்கப் பட்டுள்ள நீர், மனிதனுக்கு எத்தனையோ வகையில் பயன்படக் கூடியதாயுள்ளதாம். இவன்தான் இவ்வளவையும் காணவும் கண்டு, தன் தேவைக்கு ஒப்பப் பயன்படுத்திக்கொண்டு வாழ்வில்

நல்லின்பம் காணவேண்டியவனாய் இருக்கின்றான். இவ்வின்ப நிலை எய்தவே திருவருள் இப்படிப் புரிந்துள்ளதைப் புரிந்து கொள்ளாமல்தான் மாந்தர்கள், அன்பென்னும் நீர்மையைப் பெருக்கிக்கொண்டு வாழாது, புலனிச்சை பெருகும் பாசத்தாலும், உலகுயிர்களை வெறுத்து வறண்ட துறவாலும், வீண்போதல் திருவுள்ளச்சம்மதமன்றாம். அருட்பெருஞ்ஜோதி வழங்கியுள்ள நீரையும் அதன் நல்ல பல பயன்களையும் துணைகொண்டு, அன்பருளின்பம் ஓங்க வாழ்தல் முறையாகும். மண்ணியல் விரியிற் சக்தி சத்தர்கள் கூறப்பட்டதுபோல் நீரியல்விரியிலும் இங்கு குறிக்கப்பட்டுள்ளதைக் காண்கின்றோம்.

## (11)

423. நீரிடை யுயிர்பல நிகழுறு பொருள்பல
424. ஆருற வமைத்த அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** நீரில் உயிரினங்கள் வாழ்ந்து வருகின்றன என்பதும், பெருங்கடல் எத்தனையோ உயிரினங்களையும் பொருள்களையும் கொண்டுள்ளது என்பதும் பலரும் அறிந்ததே. நீரில் மிகச்சிறிய பூச்சி புழு இன உயிர்கள் முதல் பெரிய திமிங்கிலம் வரை எவ்வளவோ பிராணிகள் உள்ளன. பாசிக்கொடி முதலான நீர்த்தாவரங்களும் பல உள. உப்புகள், பாஷாணப் பொருள்கள் முதலியன, இரத்தின இனங்கள், கடலடி நிலப் பகுதிக்கும் கீழிருந்தும் ''பெட்ரோல்'' முதலிய எண்ணெய்களும், எரிவாயுப் பொருள்களும் உள்ளனவாம். கடல்வளம் பற்றி இப்போது அதிகம் ஆராய்ந்து பெரும் பயன்பெற முனைந்துள்ளனர் அறிவியற் பெருமக்கள். கடல்களில் பெருமதிப்புடைய முத்து மணி முதலியன இருப்பதாலும், கடல் வளத்தால் எவ்வளவோ நலம் கிடைக்கக் கூடும் என்பதாலும் இக் கடலுக்குரிய பெயர்களில் ஒன்று இரத்தினாகரம் எனக் குறிக்கப்பட்டுள்ளதாம்.

நீரில் இவ்வளவு உயிர்களையும் பொருள்களையும் ஆற்றல்களையும் படைத்துள்ள கடவுளின் திருவுள்ளம் யாதோ. ஆண்டவர் அருளின் பெருமையும், ஆற்றலின் மிகுதியும், எங்கும் நிறைந்துள்ள இயல்பையும் அறிந்து கொள்ளும் மனிதன், திருவருளின் உண்மையை யோர்ந்து அவ்வருளைப் பெற்றுப் பெருவாழ்விற் தலைத்தற்கேயாம்.

### (12)

425. நீரிடை நிலைபல நிலையுறு செயல்பல
426. ஆர்கொள வகுத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) தண்ணீரில், மேல்நிலை, நடுநிலை, கீழ் நிலை என மூன்று நிலைகள் அமைந்துள்ளன. இவற்றில், மேனிலையில் விஷ பாகமும், நடுநிலையில் பூதபாகமும், கீழ்நிலையில் அமுத பாகமும் உள்ளனவாம். நீரணு ஒவ்வொன்றிலும்கூட இம்மாதிரி முந்நிலை யுளவாம். இம் முப்பகுதியும் பொதுவாக நன்மைக்கே தான் அமைக்கப்பட்டுள்ளன. அமுதபாகம் ஆக்கும் தன்மை யுடையது, பூதக்கூறு வளர்க்கும் தன்மை கொண்டது, விஷப் பகுதி அழிக்கும் இயல்பு கொண்டதாம். இதனால் இவ்வுலகில் நிலையியல், இயங்கியல் உயிரினங்கள் தோன்றித் தோன்றி வாழ்ந்து அனுபவப்பயன் சிறிது சிறிதாக விளைவித்துக் கொண்டே மேனிலைக்கு வந்துகொண்டுள்ளனவாம். மிக நுண்ணிய உயிரினங்கள் இந்திரிய கரணமில்லாத, ஓரறிவு இனத்திலும் சேராத சிற்றுயிர் (Amoeba virus) இனங்கள் கூட இப்பூமியில் அல்லது காற்று வெளியில் மிதந்து பரவிக்கொண்டு வாழும் (உருப்பெருக்கிக் கண்ணாடி "Microscope" மூலம் அன்றி தோற்றரிய சிறு கிருமி வகைகள்) உயிர்ப்பொருள்கள் எல்லா மும் இந்த நீரின் அருஞ்செயலால் உதவிக் கொண்டுள்ளனவாம்.

உயிரினங்கள் அளவோடு பெருகிவரவும், வேண்டாதன அழிந்து ஒழியவும், புதியன தோற்றவும் உதவுவது இந்நீரின் நிலைகளேயாம். நீரே இல்லாத அல்லது நீர் வெளிப்படற்கில் லாத பிற கோட்களில் உயிரினங்கள் வாழ்ந்து உயர்நிலை அடைய முடியாது என்பது இதனால் விளங்கும்.

### (13)

427. நீருறு பக்குவ நிறையுறு பயன்பல
428. ஆருற வமைத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) நீரினால் உண்டாகும் பயன் அனந்தம். அவை அந் நீரிலிருக்கும் வேறு வேறு பொருள்களால், சக்திகளால், செயல் திறன்முறைகளால் வெளியாவனவாம். இவை யாவும் அகத்தே பக்குவமாக்கப்பட்டு, தக்கவண்ணம் உரியகாலம், இடம், சூழ்நிலை

களில் வெளியிடப்பெறுகின்றனவாம். பொதுவாக எல்லா உயிர் களுக்கும் இந்நீர், பக்குவப்பட, நற்பயன் விளைய, நிறைவுபெற்று மேனிலைக்கு ஏற உதவுகின்றதாம். சிறப்பாக மக்கள் வாழ்வுக்கு இந்நீரின் பக்குவ ஆற்றல்களும் விளைவும் பயன்களும் உலகியல் வாழ்வினின்று அருளியற் பெருவாழ்விற்கு ஏறப் பெருந்துணை புரிகின்றதாம்.

## (14)

429. நீரியல் பலபல நிரைத்ததிற் பிறவும்
430. ஆர்தரப் புரிந்த அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** நீரினது இயலை இப்படிப் பதினான்கு ஈரடித் தொடரில் விளங்கிட விரித்துக்கூறப்பட்டிருப்பது, மனிதன் தனது அகப்புற வாழ்வின் அனுபவம் கொள்ளற்கேயாம். கடவு ளான்ம வடிவினனாய் இருந்துகொண்டுள்ள இவன், அனாதிகால மாகவே அப்படிக் கடவுள் அணுவாய் இருந்துகொண்டுதான், இறையனுபவம் கொள்ளவேண்டி ஏழ்வகைப் பிறவியிடை செலுத்தப்பட்டுள்ளான். ஒவ்வொரு வகைப் பிறவியிலும் அதற் கதற்குரிய அனுபவம் அடைய எத்தனையோதரம் அந்தக் குறிப் பிட்ட இன வரிசையில் பிறந்து பிறந்து வாழ்ந்து வாழ்ந்து பயன் கொள்ள வேண்டியுள்ளதாம். இப்படி ஓர் அறிவுநிலை நிறை வுறும் போதுதான், மேலினப் பிறவி அடைய பக்குவம் ஏற்படு கின்றதாம். ஆகவே, ஏழ்வகைப் பிறவியிலும் பன்முறை வாழ்ந்து வாழ்ந்து அக அனுபவத்தைப் பெருக்கி வரவேண்டி யுள்ளதாம். ஒவ்வொரு ஆன்மாவுக்கும் இவ்வனுபவம் நிறைத்தற் பொருட்டே இப்படிப் பலவாகிய பிறப்புகளில் சென்று சென்று கடத்தப்படவேண்டிய அவசியம் ஏற்பட்டுள்ளதாம். இப்படி முறை யாகக் கீழிருந்து மேல் வந்தால்தான் முடிவில் இந்த மனிதப் பிறப்பில் பெருநலம் காண முடியும்.

மேற்படி அடிப்படை உண்மைகளைச் சிறிதும் தெரிந்து கொள்ளாத மக்கள்தாம் இவ்வுலகப் படைப்பின் காரண காரியங் களையும், வாழ்வில் நேரும் ஆக்க அழிவுகளையும் புறத்தோற்றத் தில் காணப்படும் குறைபாடுகளையும், ஏற்றத்தாழ்வுகளையும், இயற்கையாகத் தோற்றுகின்ற சோதனைகளையும் கண்டு கண்டு குழப்பமே அடைகின்றனர், அவத்தையுறுகின்றனர். அருட்

பெருங் கடவுளைப்பற்றியும் அவரது எல்லாம்வல்ல செயல் பற்றி யும் ஐயமும் அவநம்பிக்கையும் கொள்ளுகின்றனர். கடவுள் என்பது வெற்றுக் கற்பனை, அதனை நம்பிக் கொண்டிருப்பது அறியாமை, எல்லாம் அறிவதற்கரிய இயற்கையின் செயலே என நாத்திக வாதம் புரிகின்றனர் பலர். இவையெல்லாம் நீங்கி உண்மையை உள்ளபடி அறிந்து ஏற்று அனுபவ வாழ்வு பெற வேண்டுமானால், தயவோடும் ஒருமையோடும், உலகபோகத்தில் நிராசையோடும் சத்விசாரம் செய்துவந்தால் உண்மைகள் எல்லாம் உள்ளிருந்து விரிந்து விளங்கவரும். அவ்வுண்மையைக் கண்டுவிட்டால் மட்டும் போதாது. அதற்குத் தகுந்த முறையில் அருள் அனுபவம் அகத்தே விளைவு கொண்டோங்கப் பரோப காரத் தயவுச்செயலே புரிந்துவரல் வேண்டும். இதுதான் இந்த நீரியல் விரியின் கருத்து. பிறவும் இதுபோன்றனவே என்பதை மேலும் மேலும் கண்டுகொள்வோம்.

## *181. தீ யியல் விரி (1)*

*431.* தீயினிற் சூட்டியல் சேர்தரச் செலவியல்

*432.* ஆயுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

*(உ-வி)* தீயின் தன்மை சுடுதல் என்று யாவரும் அறிவர். அந்தச் சூட்டினால் என்னவெல்லாம் ஏற்படும், எப்படியெல்லாம் செயல்படுத்தப்படுகின்றன, சூட்டின் ஆக்க இயலும், அழி இயலும் எப்படி உலகுக்குத் துணைபுரிகின்றன. கடவுள், தீயை உலகுக்கு வழங்கிச் செயல்படச் செய்துள்ளதின் நோக்கம் என்ன, என்பன பற்றி இவ் விரிவியலால் யூகித்துணரச் செய் கின்றார் நம் அடிகளார்.

எப்பொருள் அணுவிலும்கூட நடுவிடம் தீயின்சக்தி செறிந் துள்ளது. நேர், எதிர்மின்சார சக்திகளாக, மின் அணுத் துகள்களாக இருப்பதும் தீயின் இயல்பே அடிப்படையாகக் கொண்டதாம். அகண்ட வான்வெளியில், காற்றின் செயலால், மின் அணுக்களின் செறிவால் நுண்ணிய தீயணுக்கள் எங்கும் நிரம்பியுள்ளன. அத்தீ அணுக்களின் பேரளவுச் சேர்க்கையால், கனலி என்னும் ஞாயிறு அண்டம் தோன்றி யொளிர்கின்றது. இதுபோல் கோடி கோடி அண்டங்கள் வெகு தொலைவிலிருந்து மிகச் சிறிய மணிக்கற்கள் போன்று மின்னி மிளிர்ந்து கொண்

டுள்ளன. அவைகள் எல்லாமும் தீமய ஜோதி அண்டங்களே யாம். அந்தத் தீக் கோளங்களில் உள்ள அதிக அளவு சூடும் ஒளியும் சூழ்ந்துள்ள அவற்றின் கோட்குடும்பங்களுக்கும், அவை களில் உள்ள எண்ணரிய உயிர்ப் பொருள்களுக்கும் வேண்டும், புறச்சூட்டையும் ஒளியையும் கொடுத்து விளங்கச்செய்து, பக்குவப்படுத்திக் கொண்டுள்ளனவாம். அவ்வொளியும் சூடும் விரிவுற்று அகன்று செல்லச் செல்லக் குறைந்து குறைந்து மறைந்தேபோகின்றன. இதுபோல மனிதன் பிண்டானுபவத் திலும் காண உள்ளது சூட்டின் இயலும் செயலும்.

ஆன்ம அணுவே, பெருவெளி நிறை பேரொளியின் ஒரு கூறே யாம். ஆகையால் அது அக்கினிமயமானதாம். அந்தத் தீயணு வின் கண்ணின்றே உயிர்க்காற்று இயக்கச்சக்தி தோன்றி தேகத்தை விளங்கச்செய்து கொண்டும், சூட்டை நிரப்பிக் கொண்டும் இருக்கின்றதாம். இந்த உயிர்த்தீ, மூலத்தும், இதயத்தும், மூளையின் கண்ணும் உடலுக்கும், உயிர்க்கும், உணர்வுக்கும் வேண்டிய சூட்டைத் தந்து விளங்கச் செய்து கொண்டுள்ளதாம். உயிர் விளக்கத்தால் உடல் வளர, ஞானம் சேர மனிதப்பிறப்பு வழங்கப்பட்டுள்ளது. மற்ற உயிரினங் களைப் போன்று தோன்றியிருந்து மறைந்து போவது சரி அல்ல என ஞான ஒளியால் உணர்ந்து திருவருளைச் சார்ந்து மரண மில்லாப் பெருவாழ்வு பெற்றுக்கொள்ள வேண்டியதே இப்பிறப்பின் சிறப்பாம். இச்சிறப்பியலை வெளிப்படுத்தவே ஆண்டவர் தீயின் இயல்பை ஆதியிலேயே அப்படி அமைத்துள்ளார் என அறிகின்றோம். ஆயுற என்றால், நுணுகி ஆராய்ந்து அடைதல் ஆம். அக ஓர்மையோடும், தயாநெகிழ்வோடும் தீயின் இயலை ஆராய்ந்தால் அருட்பெருஞ் ஜோதியையே முடிவில் கண்டு அடையலாம் என்பது குறிப்பு.

**(2)**

**433. தீயினில் வெண்மைத் திகழியல் பலவாய்**

**434. ஆயுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி**

**(உ-வி)** தீயில் முதிர்ந்த நிலை வெண்ணெருப்பாகத் தோற் றுவதாம். எந்தப் பொருளையும் அதிசூட்டால் எரித்தால் முடிவில் நீறு பூத்து வெளுத்துப்போகும். மருந்துகளை இப்படிப்

புடமிட்டு எரித்து பற்பம் ஆக்கி வழங்கும்முறை மருத்துவர் நன்கு அறிவர். தீயின் வெண்மை நிலைக்கு முன் பொன்மையும், செம்மையுமாகத் திகழும். இயற்கையில் தீயின் நிறம் செம் மையே, செவ்வொளி, செஞ்சுடர், செஞ்ஞாயிறு, செந் தீ என்று கூறப்படுதல் அறிவோம். தீக் கொழுந்து விட்டெரியும்போது செம்பொன்வண்ணமாய்த் தோற்றும்.

அகத்தீயின் செயலால் உடலில், உட்கருவிகளில், ஊண் பொருள்களில் ஏற்படும் தோற்றமும், செயலும் விளக்கமும் ஆய்ந்து பார்த்தால் அநேக உண்மைகள் விளங்கும். ஒருவன் உட்கொள்ளும் உணவில் சூடு இருக்கிறது. அதனை இத்தனை மாத்திரை உள்ளதென்று கணக்கிடுகின்றனர். ஒரு கிராம் தண்ணீரை, ஒரு டிகிரி சூடு ஏற்றுவதற்குத் தேவையான வெப்ப அளவை ஒரு ''கலோரி'' (Calorie) என்பர். பசிக்கு ஏற்றபடி நல்ல அளவு சுடுகை தரும் உணவை ஏற்று, உடல் விளக்கமும், உயிர் விளக்கமும், ஆன்ம விளக்கமும் பெறலாகும். ஒருவன் உண்ட உணவு ஜடராக்கினியாலும், பித்தநீர் முதலியவற்றாலும் ஜீரணமடைந்து, சத்துப்பொருள் இரத்தமாகவும், அதுவும் எரிக்கப்பட்டுத் தாதுப்பொருட்களாகவும் மாறி உடற்கூறுகளுக் குப் போய்ச் சேருகின்றன. முடிவில் அந்த உணவினின்று ஆக்கப்பெற்ற வெண்பொருளாக விளங்குவது வெள்ளெலும்பாம். இவ்வுண்மையையெல்லாம் மறைத்து இறைவனைத் தீயின் வண்ண னாகக் கற்பனை செய்து வழங்கியுள்ளனர். செந்தீ வண்ணப் பொன்னார் மேனியச்சிவனையும், நீலஜோதித் திருமாலையும், வெண்ணிறப் பிரமனையும் தீபச்சுடரிலே அகநீல ஒளியும், புற வெள்ளை ஒளியும் விளங்கக் காட்டியுள்ளனர். சிவனை, நீறுபூத்த நெருப்பு போன்ற, சுடலைப் பொடி பூசிய பொன்னார் மேனியன் என்றும், வெள்ளெலும்பணி பூண்டோன் என்றும் கூறியுள்ளனர்.

இங்கு நாம் இத்தேகமாகிய தீயின் உள்வளர் சுத்த அருட் ஜோதியை சத்விசார பரோபகாரத்தால் கண்டு அடைய வேண்டியதே நம் கடமையாம். இது கடவுள், தீயின் இயலை இப்படி அமைத்ததின் காரணம் என அறியலாகின்றது.

### (3)

435. 'தீயிடைப் பூவெலாந் திகழுறு திறமெலாம்
436. ஆயுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) தீயினால்தான் யாவும் பெருகி விரிந்து பொலிந்து விளங்குகின்றன. உள்ளடங்கியிருக்கும்போது தீக்கலை முற்றும் மடங்கிக் கிடக்கும். அது கொழுந்து விட்டுத் தணலாய் எரியும் போது தீக்கலையின் கதிர்வீச்சைக் காண்கின்றோம். அப்போது தான் சூடும் ஒளியும் சூழ்ந்து பரவுகின்றது. பூ என்பது மலர்ச்சியைக் குறிப்பது, அரும்பு மலர்ந்து மலராகின்றது. தாவரங்கள் பூத்துக் குலுங்கும் காட்சியை ஒளி மலராகக் காண கின்றோம். வானிலே மின்னும் விண்மீன்களை வானப்பூ என் கின்றோம்.

அகிலமெல்லாம் நிறைந்த அருட்பெருஞ்ஜோதித் தீயே நமது அகத்தே அருள்மணம் கந்திக்கும், ஆன்மஜோதி மலராக, ஆயிரம் இதழ் பொற்கமல மலராகக் காணவும், கண்டு அதன் அருட் பெருந் திறலால் ஆனந்தவாழ்வு பெற்று அழிவில்லாது வாழலாம் என்பது அருள் வள்ளல் அனுபவம்.

## (4)

**437. தீயிடை யொளியே திகழுற வமைத்ததில்**
**438. ஆய்பல வகுத்த அருட்பெருஞ் ஜோதி**

(உ-வி) தீயின் எரிநிலை வெளிப்படும்போது, கனற் பிழம்பு அனற்ஜோதியாகச் சுடருகின்றது. இச் சுடருக்குச் சுடும் தன்மையும், ஒளிதரும் சக்தியும் உண்டு. இச்சூடு சிற்றெல்லை வரைதான் பரவும். ஒளியோ விரிந்த பெரும் எல்லைவரை திகழும். இந்தத் தீயினில் திகழும் ஒளியே உலகில் எல்லாப் பொருள் களுக்கும். உயிர்களுக்கும் ரூப சௌந்தரியத்தை அல்லது வடி வழகை வழங்கி விளங்கச்செய்கின்றதாம்.

சூரியஜோதியின் ஒளிக்கதிர்களும், அந்த ஜோதியின் பிரதி பலிப்பால் விளங்கும் கோட்களின் ஒளிவீச்சும், விண்மீன்களின் நுண்ணொளி அலைகளும் வான்வெளியிற் பரவி, நம் நிலவுலகை அடைந்து, இங்குள்ள உயிர்கள், பொருள்கள் யாவற்றையும் சூழ்ந்தும் ஊடுருவியும் சென்று, புறவடிவையும், உயிர் ஆற்றலை யும், உணர்வு அனுபவங்களையும் தாக்குகின்றன. இவற்றால் அக நிறைவான ஆன்மபரிபாகம் உண்டாக்கப்படுவதே கடவுட்சித்தம். இவ்வுண்மையை நன்கறிந்த மக்கள் தேக போக அனுபவங்களில் புலன் அவா மிகாது, சூழ்நர்க்கு அன்பு செய்து அருள் அனுபவம்

பெற்று மெய்யின்பில் ஓங்கவேண்டுவதே திருவுள்ளம். இந்த அருளியல் உண்மையை அறியாத புலனெறியாளர்கள்தாம் விண்ணூல் கொண்டு சோதிடக்கலை ஆய்ந்து, மக்களுக்கு இச் சோதிச் சூழலால் ஏற்படும் புற அக சுகாசுகங்களைப் பற்றியும், தீமைகளை விலக்கி நன்மைபெற சாந்தி பரிகாரங்களையும் கூறு கின்றார்கள். அப்படிக் கூறவும் உதவவும் ஊதியம் பெற்று அது கொண்டு பிழைத்து வருகின்றார்கள். அந்த வான் சோதியின் தாக்கல்களை விலக்கிக்கொண்டு, நலம்சூழ வாழ, நவரத்தின மணி ஒளிகளைத் தம்மில் பிரதிபலிக்கச்செய்தற்கு, அம்மணி இழை அல்லது ஆபரணங்களை அணிந்து கொள்ளுகின்றனர் சிலர். இந்தச் சிற்றொளியால் சிறுநலம் பெற்று ஒழியாது, அருட்பெருஞ் ஜோதியால், பெருநலம் பெறவேண்டியது கடவுளாணை.

அண்ட பிண்ட ஆராய்ச்சிலும், உடற்பிணிகளை ஒழிக்கும் முறையிலும் இந்த ஒளியின் உதவியைப் பல வழியில் பயன்படுத் திக்கொள்ளுகின்றனர். ஒளிப்படப் பிடிப்பு, எக்ஸ் கதிர் படப் பிடிப்பு, ஊதாக் கதிர் ஒளி சிகிச்சை, ''லாஸர்'' கதிரின் பேராற்றல் எல்லாம் நம் தீ பூதத்தின் ஒளியால் கிடைக்கின்ற பயனேயாம். இதுபோல் இன்னும் சிலபல நன்மைகளை ஒளி யினால் பெறக்கூடும். ஆனால், கடவுள் திருவுள்ளம், மனிதன் தனது அறிவு ஒளியால் உண்மையைக் கண்டு, அருள் ஒளியைப் பெற்று, அருட்பிரகாச வடிவெய்தி ஆனந்தவாழ்வில் ஓங்க வேண்டும் என்பதே. ஆதலின் அருட்ஜோதி கொண் டின்புறுவோமாக.

## (5)

439. தீயிடை யருநிலை திருநிலை கருநிலை
440. ஆயுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** தீயில், அருநிலை, கருநிலை, திருநிலை ஆகிய மூன்றுள்ளன. எது போன்றெனில், ஒரு மரத்தை எடுத்து ஆராய்ந்து பார்க்கும்போது, அம் மரத்தோற்ற வடிவம் நிறை எழிலொடு விளங்குவதால் அது திருவுருவம் எனக் கொள்ளப் படும். அம் மரத்திற்கு ஆதி ஆகிய விதையே அருவநிலையாகும். அவ்விதையினின்று வெளிப்பட்டு விளங்கும், முளை விதையின் அருவ அம்சத்தையும், மரத்தின் உருவக்கூறின் சூக்கும அம்சத் தையும் கொண்டுள்ளதால், இம்முளையே மரத்தின் அருவுருவ நிலையாம்.

ஒரு பொருள் அல்லது மரக்கட்டை எடுத்துக்கொண்டு, அதில் தீயின் நிலைகளைக் காண்போம். கட்டையில் இயற்கையாய்த் தீ மறைந்திருந்து பின்பு வெளிப்படும். அருவமாகிய தீ, கட்டையில், அருவமாயிருப்பதோடு அக்கட்டை வடிவமாகவே நிரம்பியுள்ளதாம். ஆகையால், அந்தக் கட்டையே தீயின் அருவுருவ நிலையாம். பின்னர் அக்கட்டை எரியூட்டப்பெற்றபோது, அகத்திருந்த தீயை வெளிப்படுத்தி எரியும் தழல் உருவமாய் விளங்கச்செய்கின்றது. இதுவே தீயின் உருவநிலையாம். இவைகளை மட்டும் ஆய்ந்து கொண்டதனால் பெரும்பயன் கிடைத்துவிடாது. இந்தப் புறநிலைகளைக் கண்டு அதை உதாரணமாய்க் கொண்டு நம் கடவுள்நிலையைக் கண்டு கொள்ள வேண்டுவதே முக்கியமாம். நம்மில், ஆன்மா கருநிலையாகவும், தேகம் திருநிலையாகவும் இருக்கின்றன. இவ்விரண்டிற்கும் இடையில் பக்குவவசத்தால் ஏற்பட்ட உயிர் உணர்வில்தான் கடவுளின் அருவுருவாகிய அருள்நிலை வெளியாகின்றதாம். இந்நிலை நின்று திருவருளால் தேக வாழ்வையே ஆன்ம வாழ்வாக, அதை சுத்த அருள் இன்ப வாழ்வாக ஆக்கிக்கொள்ள வேண்டும் என்பது திருவுள்ளமாம்.

## (6)

**441.** தீயிடை மூவியல் செறிவித் ததிற்பல

**442.** ஆய்வகை யமைத்த அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** ஐம்பூதங்களாகிய, வான், வளி, தீ, நீர், மண் இவைகள் 1,2,3,4,5 என்ற முறையில் தோன்றியவையாம். இத்தோற்றக் கிரமமே இவற்றின் இயல்பு எண்ணும் குறிக்கப்படும். முன்னர் மண்- 5, நீர்-4, என்பவற்றைக் கண்டோம். இங்கு தீ-3 என்றதன் விளக்கம் தெளிவாம். இங்கு குறிக்க வந்த தீயிடை மூவியலாவது, உலகப் பொருள்களையும், உயிர்களையும் ஆக்குதல், காத்தல், அழித்தலாம்.

விந்தாகிய தீயில் இயல்பாக இந்த, ஆக்கல், காத்தல் அழித்தல் ஆற்றல் அமைந்துள்ளன. ஆனால் இத் தீ இயல்கள் வெளிப்பட்டு செயல்பட்டு விளங்கத் தக்க சூழ்நிலை அமைய வேண்டியுள்ளதாம். விந்தின் ஆக்கல் சக்தி செயல்பட, நாதமாகிய சோணிதத்தீயின் சேர்க்கை தேவைப்படுகின்றது.

தீக்குச்சியிலுள்ள தீ வெளிப்பட புற மருந்துப் பட்டையின் உராய்வு வேண்டியிருத்தல் ஓர் உதாரணமாய்க் கொள்ளலாம். அப்படி, ஆக்கல் சக்தியால் தோன்றிய கருவடிவம் அவ்விந்தின் காத்தல் ஆற்றலால் அகப்புறக்கருவி கரணங்கள் எல்லாம் வளர்க்கப்பட்டு உலகிடைக் குழந்தையைத் தோற்றுவிக்கின்றது. பின்னர் கூட வளர்ச்சி தொடர்ந்து குறிப்பிட்ட காலம் வரை இருந்து பலவித அனுபவங்களை வாழ்வால் வழங்கியபின் உயிர்த்தீ உள்வாங்கப்படும் தொழிலே, அழிக்கும் செயலாகத் தோற்றுகின்றதாம்.

இம்மாதிரி இத்தீயின் மூவியலால் பலவாகிய பொருள் களிலும், உயிர்களிலும் முச்செயல்கள் தோன்றிப் பக்குவப்படுத்தி வருகின்றன. முடிவாகப் பக்குவ மனிதனில், ஆன்மஞானமாகிய தீயின் திரிநிலைத் தோற்றம் ஏற்படுகின்றது. இத்தீயின் ஆக்கச் செயலால் கடவுள் ஆன்ம உண்மை உணரப்படுகின்றது. பரோப காரச் செயலால், ஆன்மாவின்கண் அருள் உணர்வு வளர்க்கப் பட்டு வருகின்றது. முடிவில் அருட்ஜோதி அனுபவம் வெளிப் படும்போது அந்த அருட்ஜோதியே, பிறவிக்கட்டை அழித்து, இறப்பையே ஒழித்து விடுவதாம். இதுதான் அகத்தீயின் பெருஞ்செயலாய், அருட்செயலாய் அறியலாகும்.

## (7)

443. தீயிடை நடுநிலை திகழ்நடு நடுநிலை
444. ஆயுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) தீ. சுடர் விட்டெரியும்போது, பிரகாசமான ஒளியை வீசுகின்றது. அப்படி எரிந்துகொண்டு மேல்நோக்கி எழும்சுடர் காற்றோடு கலந்து மறைந்து விடுகின்றது. கற்பூரச் சுடர் அல்லது விளக்குச் சுடர் எரிந்துகொண்டு சலியாது இருக்கும்போது பார்த்தால், பொன்மயமான ஜோதியின் நடுவே தீயின் அணுத்திரள் அச் சுடருக்கு ஆதாரமாய்த் தோற்றும், அந்தத் தீத்திரளுக்கும் நடுவில் நீலஜோதிநிலை தோன்றும். இம்மாதிரி மூன்றுநிலை கொண்ட சுடர் விளக்கம் மெழுகுவத்தி எரியும்போது நன்கு காணலாம். தீயின் ஒரு சிறு கூறை எடுத்துக்கொண்டு பார்த்தாலும், சாதாரண அணுவின் புற

நிலையும், அதன் அகத்தேயுள்ள எலக்ட்ரான், புரோட்டான் போன்ற சுடருட்சுடர் நிலைகளும் யூகித்தறிய உதவும். உள் அகத்தே இருக்கின்ற சுடர்நிலை ஆற்றல் மிக்கது, மற்றவற்றிற்கு ஆதாரமானது. இடையிலுள்ள தீத்திரள் நிலை, மேல் உள்ள ஜோதிப்பிழம்பிற்கு ஆதாரமாய் இருக்கின்றது.

இப்படிச் சுடருட்சுடராய் இருந்து ஒளிருகின்ற தீயின் இயல் பறிந்து கொண்டால், இறைவாழ்வுக்கும் இதுவே ஒரு மாதிரிப் பொருளாகக் கண்டு அக அனுபவத்திற்குச் செல்லலாம். நமது அருட்பெருஞ் ஜோதியும் இந்தப் பேருலகில் எங்கும் நிரம்பியிருந் தாலும் அருள்ஞானியின் உள்ளத்தே வெளிப்பட்டு அனுப வத்தில் விளங்கும் போது, அதனால் பெறத்தக்க பெரும்பயனை நன்கறிந்து அடைய உதவுவதாம். அருட்பிரகாச வள்ளலின் அனுபவத்தில் இந்த உள்ளொளிநிலையின் கூறுகளை எல்லாம் நன்கு கண்டு தெளியலாகும்.

"ஈற்றறியேன் இருந்திருந்திங் கதிசயிப்ப தென்னீ
என்கின்றாய் நீ எனைவிட் டேகுதொறும் நான்தான்
காற்றறியாத் தீபம்போல் இருந்திடும்அத் தருணம்
கண்டபரி சென்புகல்வேன் அண்டபகி ரண்டம்
தோற்றறியாப் பெருஞ்ஜோதி மலைபரநா தத்தே
தோன்றியதங் கதனடுவே தோன்றியதொன்றதுதான்
மாற்றறியாப் பொன்னொளியோ அவ்வொளிக்குள் ளாடும்
வள்ளலருள் ஒளியோஈ(து) அதிசயிக்கும் வகையே."

மனம் அடங்கி, மெய்யுணர்வு கொண்டு அகமிருந்து அருளால் நோக்கும்போது உண்டாகும் அனுபவக்காட்சியே நன்கு தெளிவாக்கப்பட்டுள்ளதாம். முதலாவது தோற்றிய நிலை, அகண்ட பெருஞ்ஜோதி நிலையாம். இப்பேரொளிமயத்தில் சூழ் அண்ட பகிராண்ட கோடிகள் எல்லாம் இருந்தும் இல்லா ததுபோல் மறைந்துவிடுகின்றனவாம். பகல் வெளிச்சத்தில் நட்சத்திரங்கள் எல்லாம் மறைகின்றனபோல், இப்பெருஞ் ஜோதி நிலைதான் எங்கும், என்றும் கேடின்றித் திகழ்கின்ற இறைநிலையை யுணர்த்துவது. இப் பேரொளியின் அழியா நிலையை யுணர்ந்தே இதனைப் பெருஞ்ஜோதி மலையாகக் கூறு கின்றனர். இச் ஜோதி மலையின் காட்சி பரநாதநிலை கடந்தவர் களுக்கு அனுபவத்தில் தோற்றுவதாம். இதற்குமேல், அந்தப் பெருஞ்ஜோதிக்கு நடுவில், மாற்றறியாத பொற்ஜோதி வடிவத்

தோற்றம் விளங்குவதாம். அந்தப் பொன்னொளி நடுவிலிருந்து திருவருளின் பெருஞ்செயலாகக் கடவுளின் வள்ளற்பெருமை வெளியாகின்றதாம். ஆகவே, பெருஞ்ஜோதி நிலை நடு ஒன்று, அதன் நடு மாற்றறியா பொற்ஜோதி நிலை ஒன்று, அதன் நடு ஆடும் வள்ளல் அருட்ஜோதிநிலை ஒன்று ஆகவுள்ளதாம். இதனையே நம் அடிகளார், ஜோதியுட், ஜோதியுட் ஜோதி என்கின்றார் பிறிதோர் இடத்தில். இந்த அருட்பேரனுபவம் எல்லாம் வெளிப்பட வேண்டிய, தீயிடை நடுநிலை, அந் நடுநிலை திகழ்நடு நிலையை வகையாக பண்டே அமைத்துள்ளார் நம் பதி.

## (8)

445. தீயிடைப் பெருந்திறற் சித்திகள் பலபல
446. ஆயுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** தீயில் எவ்வளவு ஆற்றல் உள்ளது என்பதும், அதனால் எவ்வளவு செயல்கள் ஏற்படுகின்றன என்பதும், அவற் றால் பெறப்படும் பயன்கள் யாவை என்பதும் மக்களினம் முதலில் கொஞ்சமும் அறியாதிருந்தது. ஆதிக் கானக மக்களாக இருந்த வனவாசிகள் நெருப்பின் உபயோகத்தை அறிந்து பயன்படுத்திக் கொள்ளாது, ஏதோ குளிருக்குச் சூடுதரும் பொருளாக மட்டும் எண்ணியிருந்தனர்.பின்னர் கால எல்லையில் கொஞ்சம் கொஞ்சமாகத் தீயினால், உணவைப் பக்குவப்படுத்தி யுண்ணுதல், சுட்ட மண்செங்கல், மட்பாண்டம் முதலியன செய்து வீடு முதலி யன கட்டிக்கொண்டு வாழப் பழகினார்கள். பின்னர் உலோகங் களை உருக்கிப் பலப்பல பொருள்களாக, கருவிகளாக ஆக்கிப் பயன்கொள்ளலானார்கள். இன்றைய உலகர் தீயின் ஆற்றலால், அறிவியல், பொறியியல் துணைகொண்டு எவ்வளவோ பெரிய பெரிய காரியங்களைச் சாத்தியமாகக் கொண்டுள்ளனர். மின் சாரம், அணுசக்தி எல்லாமும் தீயிடை மறைந்திருந்த ஆற்றல் களேயாம்.

உயிர் உடம்பிலே உள்ள உயிர்த்தீ (ஜீவாக்கினி)யும், மூலாக் கினியும், ஞானாக்கினியும், அக ஆய்வினாலும், யோக சாதனைகளா லும், தவ ஆற்றலாலும் அறிந்து கொள்ளப்பட்டன. இவற்றின் மூலமாக எவ்வளவோ பயன்தரும் செயல்களும், அற்புத சித்து களும் இயற்றப்பட்டுள்ளனவாம். இவைகளுக்கெல்லாம் மேலாக

இப்பொழுது தயவோடுகூடிய ஈத்விசார சுத்த ஞானத்தால் கடவுள் உண்மையை அருட்பெருஞ்ஜோதியாகக் காணவும், அதன் தனிப்பெருங்கருணையால் அருட்பிரகாச வண்ண அழியாத் திருவுரு கொண்டு வாழவும் முடிந்துள்ளதாம. தீயினால் கண்டு கொள்ளற்கான, அருட்பெருஞ்ஜோதிக் கடவுள் உண்மையைத் தான் ஆதியில், அத்தீயின் அற்புதசித்தி ஆற்றலாக அன்றே ஆண்டவர் ஆக்கிவிட்டுள்ளார் போலும்.

## (9)

**447. தீயிடைச் சித்துகள் செப்புறு மனைத்தும்**

**448. ஆயுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி**

**(உ-வி)** சித்தி என்பது நிறைவேற்றம் அல்லது பயன் அடைவு என்பு. ஒருவன் செயற்கருஞ்செயலைப் புரிந்து வெற்றியுடன் முடித்தான் என்பதை அக் காரியசித்தி பெற்றான் என்று கூறுதல் வழக்கம். சித்து என்பது அற்புதம் அல்லது வியன் செயல் ஆம். சித்து பெயர்ச் சொல்லாகவும், அச்சித்து பெறுதலை சித்தித்தல் என்ற தொழிற் பெயராகவும் கொள்ளுவர். சித்தி என்பதற்கு ஆங்கிலச்சொல் Attainment என்றும், சித்து என்பது Miracle, Wonder என்றும் குறிக்கின்றனர்.

எவர் எந்தவிதமான சித்துச்செயல் புரிந்தாலும் அது அகத்தேயுள்ள கடவுளான்ம ஜோதியின் ஏகதேச ஆற்றல் வெளியீடே. அருட்பெருஞ்ஜோதி எல்லாம் செய்ய வல்லது. அதன் துணை இல்லையாயின், ஒரு சிறு துரும்பும் அசைக்கமுடியாது எவராலும். உண்மையறியாதாரே, தாமே எல்லாம் செய்வதாகவும், இருவினைச் செயல் தாமே புரிவதாயும் கருதுகின்றனர். அதனால் மேற்பிறப்புக்குத் தம் வினையே காரணம் என்ற எண்ணம் வலுப்பட்டுள்ளது. உண்மையில் அருட்பெருங்கடவுள் ஒருவரே எங்கும் இருந்துகொண்டு, தன் அருள் ஒளியையே எப்பொருளாயும், எச்செயலாயும் வெளிப்படுத்திக்கொண்டிருக்கிறார் என்பதைத் தெரிந்துகொள்ளும்போது, தான், தான் என்று அகங்கரித்து எழும் உணர்ச்சி யொழியும். அப்போது எச்செயலும் திருவருளின் செயலே எனக் கண்டு நிரகங்காரத்தோடு தன்னைக் காட்டிக்கொள்ளாது இருப்பான் பக்குவ மனிதன்.

தீயின் பேரற்புதப் பெருஞ்செயல்கள் உலகம் அறியாதிருக் கலாம். அறிவியல் துறை எண்ணரிய அதிசூட்டால் பல விந்தைக் காரியங்கள் புரிந்துகொண்டிருக்கக் கூடும்.இவற்றையெல்லாம் விட அருட்பெருஞ்ஜோதியின் ஆற்றல் கோடிகோடி பங்கு அதிக மாகும். அதனைத் திருவருளால் பெற்றுக்கொள்ளுவதால் பேரின்பப் பெருஞ் சித்தியே அடைந்திடலாம். அதுவே கடவுளாணை.

## (10)

449. தீயிடை சத்திகள் செறிதரு சத்தர்கள்
450. ஆய்பல வகுத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) தீயிலே தோன்றும் பலவாகிய சக்திகள், ஆற்றல் கள் யாவும் பலவேறு பொருள்களில், வடிவங்களில், தேகங்களில் பொதிந்து வைக்கப்பட்டிருக்கின்றன. பௌதிகம் என்ற சொல், தீயைத் தன் அகத்தில் பொதிந்து வைத்திருப்பது என்ற பொருள் தருவதாம். ஐம்பூதங்களும் தம் அகத்தே அடக்கிக்கொண் டுள்ளது தீயின் சக்தியே. இத் தேயு சக்தி கொண்டு திகழ் கின்ற உருவங்களில், தூல, சூக்கும, காரண தேகங்கள் தெய்வங் களாகவும் கற்பனைசெய்து கொள்ளப்படும். தேவர்கள் ஒளியுடை யோர் என்பதும் இத்தேயு சம்பந்தத்தால் ஏற்பட்டதேயாம். முக்கியமாக இத் தெய்வ ரூபிகளே சத்தர்கள் என்றும் சொல்லப் படுகின்றனர். மற்றபடி அத்தீயின் ஆற்றல் கொண்டு விளங்கும் எப்பொருளையும் எவரையும் சத்தர்கள் என்று கூறுதல் வழக்கன்று.

நமது அருட்பெருஞ்ஜோதித் தெய்வமே எல்லாம்வல்ல பூரண சக்தியைத் தன்னகம் கொண்டு விளங்கலின், மகாசக்தர் ஆகக் கொள்ளப்படும்.

## (11)

451. தீயிடை யுயிர்பல திகழுறு பொருள்பல
452. ஆய்வகை யமைத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) உயிர் இனங்கள் எண்ணிலாதனவாம். அறிவு அளவைக் கொண்டு இனம் பிரித்தறியப்பட்டன. ஓரறிவு முதல்

ஆறறிவு பெற்றுள்ள மனித இனம் வரைதான், அறிவறியா உயிரினங்கள பலப்பல உண்டென்பது ஓரளவு யூகித்திடத்தான் முடிந்துள்ளது, நுண்ணிய பரிசோதனைகளால் சின்னஞ்சிறிய உயிரின இருப்பு தெரியவந்துள்ளது. நிலத்திலும், நீரினும், காற்றினும், வெளியினும் கூட உயிர்கள் இருக்கின்றன என்பதும் ஒப்புக்கொள்ளப்படுவதே. தீயிடையும் உயிரினங்கள் உண் டென்பது இப்பொழுது ஏற்றுக்கொள்ளப்படுகின்றது. சில உயிர்கள் அதிக அளவு சூட்டையும் தாங்கிக்கொண்டு இறவா திருக்கின்றன. எவ்வணு வகத்திலும் தீயுண்டென்பது யாவரும் அறிந்ததே. அதே அணு அகத்திலிருந்து உயிர்ச்சக்தியும் தோன்றி உருவேற்று வளர்கின்றன என்றறியும்போது தீயிடை உயிர் உண்டு என்பதும் தெளிவாம்.

அருட்பெருஞ் ஜோதியில் எவ்வுயிரும், எப்பொருளும் உண் டென்பது சாத்தியானுபவநிலையில் தெளியலாகும். உண்மை யில் அந்நிலை பொருந்தி வாழும் சன்மார்க்கி எப்பொருளையும் எவ்வுயிரையும் தனக்கு அன்னியமாகக் காணான்; தானே யாவுமாய் இருந்து நிறைவாழ்வில் நிலவுவான்.

## *(12)*

**453. தீயிடை நிலைபல திகழ்செயல் பலபயன்**
**454. ஆய்பல வகுத்த அருட்பெருஞ் ஜோதி**

**(உ-வி)** தீயின், நிலை, செயல் பயன் பலப்பலவாம். தீயானது மறைந்து கிடக்கும் அகநிலையில், உறக்கத்தில் ஆழ்ந்து கிடக்கும் பெரும்பூதம்போல் இருக்கின்றதாம். அதனை இலே சாக உசுப்பி எழுப்பிவிட்டால், அடக்கி ஆண்டால் பல நற் செயல் புரியும் நல்ல நல்ல பயன் விளையக் காண்போம். அத்தீயை மிகத் தூண்டி வேகங்கொள்ளச் செய்துவிட் டால் பின்னர் அடக்கக்கூட முடியாதுபோம். அதனால் பயங்கர மான தீமை விளையக்கூடும்.

ஒரு விதையுள்ளிருக்கும் அகத் தீயானது சூழ்நிலைக்குப் பொருந்த விரிகின்றது. அவ் விரிவுக்குச் சரியாய் புறநிலையும் மாற்றமடைந்து வருகின்றதாம். தீயின் நிலையால், விதையி லிருந்து முளையும், செடியும், மரமும், காய்கனியும் தோன்றுகின்

றன. மேலும், ஒரு காய் தன் உள் கொண்டுள்ள தீயின் நிலைமாற்றத்தால் பழுக்கின்றதும், கனிகின்றதும், பின்னர் அழுகிக் கெட்டுப்போவதும் காண்கின்றோம். மனிதனில் அருட்ஜோதியாம் தீ பெருகப் பெருக ஒவ்வொரு நிலையிலும், அகமும் புறமும் பக்குவம் அடைந்து வந்து நிறைவுறும்போது ஆனந்தவாழ்வு சித்திக்கும்.

***(13)***

**455. தீயினிற் பக்குவஞ் சேர்குண மியற்குணம்**
**456. ஆய்பல வகுத்த அருட்பெருஞ் ஜோதி**

(உ-வி) தீயின் இயற்கைத்தன்மை எரிப்பதும், எரிவதுமாம். ஆனால், அந்த இயற்கைக் குணத்தோடு இயற்கையிற் செயற்கையாக தண்மை தோன்றி ஓரளவில் அடக்கிவைக்கின்றது. நெருப்பானது எரியும்போது சூடு வெளிப்படுகின்றது. சூழ்பொருளைப் பாதித்துச் சுடச்செய்கின்றது. ஆனால் எவ்வளவு தான் எரித்தாலும் புறச்சூடு ஓர் குறிப்பிட்ட நிலைக்குமேல் போவதில்லை. சூழ்நிலையை ஒரு சிற்றெல்லையில் அடக்கி சுடச் செய்தால், சூடு எல்லையற்ற சக்தியால் எதையும் உருக்கும் நிலைக்கும், மேலும் ஆவி நிலைக்கும் கூடக் கொண்டுபோம்.

வான்கதிர் ஆகிய சூரியன் தன் சூட்டால் நிலவுலகையும் மற்ற கோள்களையும் அங்கங்குள்ள பொருள்களையும், உயிர்களையும், ஆற்றல்களையும் விளங்கச் செய்கின்றதாம்; முக்கியமாக இவ்வுலகுயிர்களைத் தோற்றுவித்து வளர்த்துப் பக்குவப்படுத்திக் கொண்டிருக்கின்றதாம். சூரியனின் இயற்கை சூட்டியலுடன், தண்மைத்தன்மை இயற்கையிற் செயற்கையாய்த் தோன்றுகின்றது. இதுவே சந்திர ஒளியாக் தண்கதிர் என விளக்கி, உயிர்ப்பொருள்களுக்குச் சூட்டைச் சமனப்படுத்தி வழங்குகின்றதாம். அகநிலை அனுபவம்கொண்ட அருளாளன், இந்தச் சூட்டையும் தண்மையும் கொண்டு உலகினர்க்குப் பலவிதத்திலும் உதவுகின்றான். இது அருட்பெரும்பதியின் கருணைச்செயலேயாம்.

***(14)***

**457. தீயிடை யுருக்கியல் சிறப்பியல் பொதுவியல்**
**458. ஆயுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி**

(உ-வி) தீ, உருக்குந்தன்மையுடையது. பொதுவாக உலோகப்பொருள்களையே உருக்கும். மற்றபடி மண்ணீர் காற்று முதலியன சூட்டால் உருகி ஓடாது, இவற்றிலுள்ள அணுச் செறிவின் விரிவால் இப்பொருள்கள் விரிவுற்றுத் தோன்று கின்றனவாம். பருப்பொருள்களில் அதிகசூடு ஏற்றினால், அப் பொருள் எரிந்து குறுகி முடிவில் நீறாகி விடுகின்றதாம். அக அனுபவத்தில் ஞானத்தீ மனக்கருங்கல்லையே தயவால் உருக்கி விடுகின்றது. அஞ்ஞானத் தீ, மூடத்தால் ஜீவ கரணேந்திரியங் களையே சுட்டுப்பொசுக்கி பாழ்படுத்தி விடுகின்றதாம். தீயின் சிறப்பியலால் யாவையும் பக்குவப்படுத்திக் கொள்வதுபோல, அருட்ஜோதியாம் தீயால் உண்மை கண்டு அடைவதுதான் சிறப் புடைத்தாம்.

### *(15)*

**459. தீயியல் பலபல செறித்ததிற் பலவும்**

**460. ஆயுறப் புரிந்த அருட்பெருஞ் ஜோதி**

**(உ-வி)** தீயினுடைய பலவாகிய இயற்கைத் தன்மைகளும், செயற்கையால் உண்டாகும் தன்மைகளும் செறிவிக்கச்செய்து அதாவது உள்ளடங்கியிருக்கச்செய்து, அவற்றினால், பலவாகிய ஆற்றல்களும், விளைவுகளும், பயன்களும் சூழ்நிலைக்குப் பொருந்த வெளியாக்கப்படுகின்றனவாம். இதனால் மனிதனே புறத்தும் அகத்தும் வாழ்வினால் உண்மைகள் பலவற்றையும் கண்டு முடிவில் கடவுள் உண்மையைக் கண்டு திருவருளால் பேரின்ப நிலை அடைவதுதான் திருவுள்ளமாகும்.

## 182. காற்றியல் விரி

### *(1)*

**461. காற்றிடை யசையியல் கலையியல் உயிரியல்**

**462. ஆற்றலி னமைத்த அருட்பெருஞ் ஜோதி**

**(உ-வி)** வாயு பூதசக்தி, தீயின் சூட்டினால் உந்தப்பட்டு அதிகம் சலிக்கும் தன்மை அடைகின்றது. அகண்டாகாச வெளி யில் இயற்கையில் உள்ள இவ்வாயு சக்தி சூக்குமமாய் இருக்கும்

நிலையில் விளங்காதுள்ளது. அணுக்களின் அகத்திலே இயல்பாக மின்னியக்கமாக இருக்கும் ஆற்றலே, வாயுசக்தியாக வெளியாக்கப்பட்டு அதிகரிக்கும் போது வான்வெளியில் சலனம் ஏற்படுகின்றது. இது நிலவுலகச்சுழற்சி வேகத்தால் காற்று மண்டலமாகிச் சூட்டியல்போடும் வீசிக்கொண்டிருப்பதாம்.

பிண்டதேகத்தில் காற்றினுடைய அசைவியல், கலையியல், உயிரியல் ஆகிய மூன்றும் ஆற்றல்வண்ணமாக அமைக்கப்பட்டுள்ளன. அகத்தே ஆன்மாவினின்று உயிர்ச் சக்தி விரிந்து ஆற்றலோடு விளங்கும்போது, புறத்திருக்கும் காற்றை உள்ளுக்கு இழுத்து அதன் சத்து அம்சத்தை இரத்தசுத்திக்கும் ஜீவ விளக்கத்திற்கும் ஏற்று, கரியமிலாம்சத்தை வெளிக்காற்றோடு விட்டுவிடுகின்றது. வெளிவரும் காற்று நாசித்துளை வழி வலத்தில் சூரியகலை அல்லது பிங்கலை எனவும், இடது நாசி வழி சந்திரகலை அல்லது இடகலையாகவும் மூச்சுக்காற்று ஓடிக் கொண்டிருக்கின்றதாம். இதற்குமேல் இருநாசி வழி செல்லாது, இரண்டுக்கும் இடையேயுள்ள சுழிமுனை வழி சிறிதே காலம் ஓடி ஒரு கலையிலிருந்து மறு கலைக்கு மாறும். இவையெல்லாம் சேர்ந்து காற்றின் கலையியலாகக் கொள்ளப்படுகின்றது. உள்ளிருக்கும் ஆன்மாவினின்று உயிர்க்குச் சக்தி வரவில்லையானால் மூச்சு ஓட்டம் நின்றுவிடும்: அசையியல் நின்றால், உயிரியல் நிற்கும், உடன் கலைகளின் இயலும் நின்றுவிடும். இதனால் இறப்பு உண்டாம்.

இன்று திருவருளால் அருட்பெரும்பதியோ டிரண்டற இருக்கும் உண்மையைக் கண்டுள்ளோம். அப்படியே அகமிருந்து கொண்டு, உளநெகிழ் தயவுச் செயல் புரியப் புரிய, அந்த அருட் சக்தியே நித்திய ஜீவனாய் அகமிருந்து அனகமாய் விளங்கத் தோன்றிவிடுகின்றதாம். இந்த உயிர் சக்தி, பின்னர் கலைவதுமில்லை பிரிவதுமில்லையாம். நித்தியமாகவே, சுத்த உடம்போடு என்றும் திகழ்ந்து கொண்டிருப்பதாம். இதுதான் காற்றின் கூறாகிய உயிர் அனுபவத்தால் கிடைக்கக்கூடிய பெருவாழ்வாகும்.

*(2)*

463. காற்றிடைப் பூவியல் கருதுறு திறவியல்
464. ஆற்றலின் வகுத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) சூட்டால் காற்று இலேசாகி விரிகின்றது; மேல் நோக்கிச் செல்கின்றது. கனமான காற்று கீழே வரவும் லேசானது மேலே போகவும் ஓர் இயக்கம் உண்டாகி வேகம் கொள்ளுகின்றதாம். காற்றின் பூவியல் என்பது, காற்றின் மலர்ந்து விரிந்து விளங்கும் தன்மையாம். சலனசக்தி, இயக் கிடும் வேகம், பரவும் ஓட்டம் எல்லாம் அதிகரிக்க அதிகரிக்க, இளங்காற்றாய் இருந்தது, சுழல்காற்றாய், புயல்காற்றாய், சண்ட மாருதமாய், வெளியில் வீசுகின்றதாம்.

உயிர்க்காற்றின் அம்சமானது மனம். இந்த மனத்தில் அமைதியிருக்கும்போது சுவாசத்தில் மென்மையும் தண்மையும் கொண்டு தென்றல் போன்று சுகானுபவத்தைத் தரும். மனத்தில் ஆசை, கோபம், பொறாமை, கடுகடுப்பு முதலியன தோன்றும் போது உயிர்ப்பில், சுழலும், புயலும், சண்ட மாருதமும் போன்ற கேடு நேரும். ஆதலின் அருள்கொண்டு உளம் சலியாது, தயவின் திறம் விளங்க வாழ்தல் உரித்தாம்.

*(3)*

**465. காற்றினி லூறியல் காட்டுறு பல பல**

**466. ஆற்றலி னமைத்த அருட்பெருஞ் ஜோதி**

(உ-வி) காற்றினைத் தொட்டறி உணர்ச்சியாம், பரிசத்தால் அறியலாகின்றதாம். இப்பரிச சக்தியினை விரித்துக் கூற வந்தது இந்தக் காற்றின் ஊறு இயல். இவ்வூறு அறிவுணர்ச்சி ஓரறிவுயிர்களாகிய புல் பூண்டு முதலிய தாவர வர்க் கங்கள் முதல், ஆறறிவுடைய மக்களினம் வரையுள்ள எல்லா ஜீவர்களுக்கும் உண்டு. புறத்தாக்கலால் இப்பரிசம் ஏற்படும் போது அகத்திருக்கும் ஆன்மாகாசத்திலிருந்து கிளர்ந்தெழும் ஜீவசக்தியால் அனுபவிக்கப்படுகின்றது. மனிதப் பிறப்பில், பக்குவநிலையில்தான் இந்த அக அனுபவம் ஏற்பட்டு விளங்கும். காற்றே இல்லாத இடங்களில் உயிரும் வாழமுடியாது. அங்கு காற்றின் இயலும் செயலும் விளங்க வசதியில்லை. ஆகவே, இம்மண்ணுலகமும் மனிதப்பிறவியும் எவ்வளவு சிறப்புடையன எனத் தெளியலாம்.

(4)

467. காற்றினிற் பெருநிலை கருநிலை யளவில
468. ஆற்றவும் வகுத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) வெளிக்காற்றை, அதன் சாதாரண, அசாதாரண வேகங்கொண்டு பிரித்தறிகின்றோம், இவ்வுலகில் இவையெல் லாம் காற்றின் பெருநிலையாகும். ஆனால், காற்றின் கருநிலை பற்றிப் பலர் அறிந்திலர். ஏனெனில், அக் கருநிலை புறப்புலன் களுக்கு எளிதில் புலனாகாது. மிக நுண்ணிய அறிவியற் சோதனை களுக்கே விளங்குவதாயுள்ளதாம். காற்றினுடைய பிறப்பிட மாகிய கருநிலை, சிற்றணுவின் அகமாக இருக்கின்றதாம், அணு வகமிருக்கின்ற, மின் இயக்கம்தான் சிற்றசைவாய் உள்ளதாம். அதனின்று பெருகி வெளிப்பட்டு வளர்கின்றதே காற்றின் எல்லாத் தோற்றமுமாகும். அந்தச் சிற்றசைவே, மனிதனில் ஜீவசக்தி இயக்கத்திற்கு அகக்காரணமாய், உயிர்க்குயிராய் இருக்கின்றதாம். அந்தக் கருநிலையில் அளவிலாத இயல்புகளும் ஆற்றல்களும், கால வரையறைக் குறிப்புகளும் மறைந்திருந்து கிரமமாக வெளிவந்து அனுபவப்படுகின்றனவாம். இவைகளை எல்லாம் கொண்டு மனிதன் பெருவாழ்வுநிலை பெறவே நம் பதி வகுத்தளித்துள்ளார் என்பது உண்மை.

(5)

469. காற்றிடை யீரியல் காட்டி யதிற்பல
470. ஆற்றவும் வகுத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) காற்றின் இரண்டு தன்மைகள் யாவையெனில், அசைவது, யாவையும் அசைப்பது ஆம். வாயுவின் சலனமாகிய அசையும்நிலையை நன்கு அறிகின்றோம். ஆனால், அது அகத்தே அழியாதிருந்துகொண்டு, யாவையும் அசைப்பதை ஆழ்ந்து ஆய்ந்து அறியப்படவேண்டியுள்ளதாம். காற்றின் அகநிலை எங்கும் உள்ளீடாய் இருந்துகொண்டு வெளிப்பட்டு இப் பிரபஞ் சத்தோற்றக் காரியப்பாட்டை இடையறாது நடத்திக்கொண் டிருக்கின்றதாம். காற்று, கால் எனப்படும். ஆகாசத்தில் நிறைந்த காற்றால் யாவும் நடக்கின்றதேபோல் பரமாகாசசொரூபி யாகிய கடவுளின் பிரிவற்ற அருள்ஒளிச் சக்தியாம் திருவடியால்

யாவும் செயல்பட்டுக் கொண்டுள்ளதையும் அறிகின்றோம். இது நம் தத்துவநிறைவுடைய மனிததேகத்தில் புறத்து இரண்டு கால்களாகியும், இடகலை, பிங்கலைகளாகிய இருவாசிக் கால் களாயும் விளங்கி உயிரனுபவத்தை நமக்கு நல்க உள்ளதாம். இந்த உயிரனுபவத்திற்கு மேலே அருளனுபவம் உண்டாகும் போது, அந்த அருட்பெரு நிலையில் அருள் ஒளி வடிவாய் இருக் கும்போது, ஞானதேக நிலையும், சுத்ததேக நிலையுமே இரு திரு வடிகளாகக் கொண்டு நித்தியானந்த சித்தி வாழ்வில் நிறை மனிதனாய் நிலவுதல் சுத்த சன்மார்க்கக் குறிக்கோள்.

## (6)

**471. காற்றினி லிடைநடு கடைநடு வகம்புறம்**
**472. ஆற்றவும் வகுத்த அருட்பெருஞ் ஜோதி**

(உ-வி) காற்றினுடைய இருநிலை விளக்கங்களை இங்கு தெளிவு செய்யப்படுகின்றோம். அவ்விருநிலைகளாவன: ஒன்று அகம் மற்றது புறமாம். அகம் அருவமாக அறியப்படாததாய் மறைந்துகிடப்பது, புறம் உருவமாக அறியப்படுவது. காற்று ஒருவன்மீது படும்போது உணரப்படுகின்றது, அதற்குமுன் அக் காற்றின்நிலை உணரப்படாதிருப்பது. ஆகையால் முதல்நிலை தெரியவில்லை, இடைநிலைதான் தெரிகின்றது. கடைநிலை அதாவது அக்காற்று எங்கே போனது, என்ன ஆனது என் பதும் தெரிகின்றதில்லை. இதுதான் காற்றின் இடை நடு, கடை நடு என்று குறிக்கப்படுகின்றதாம்.

மனிதனில் உள்ளிருக்கும் ஆன்மாவிடமிருந்து ஜீவசக்தி செயல்படுகின்ற போதுதான் ஜீவசுவாசக் காற்று, புறத்திருந்து அகத்தும், அகத்திருந்து புறத்தும் ஓடிக்கொண்டிருக்கின்றது. அகமிருந்து இயக்குகின்ற உயிர்க்குயிரான, நித்திய ஜீவனை அறியமுடிகின்றதில்லை. அதுபோல் புறத்திருந்து வான்வெளி கலந்த நித்திய வாயு சக்திநிலையும் அறியப்படுகின்றதில்லை. ஆகவே, காற்றின் இடை, நடு நிலையே ஜீவ தேகத்தில் விளங்கக் காணப்படுகின்றது. இந்த இடைநிலை வாழ்வில் திகழும் மனிதன் பக்குவமடைந்து அருள்ஞானம் பெறும்போதுதான் காற்றின், ஆதி அந்த நிலையும், அகம் புற உண்மையும் அறிந்துகொள்ள முடியும். இவ்வுண்மையைச் செயல்படுத்த அல்லது ஆற்றவே

நம் பதி இக்காற்றினியல் அமைத்துள்ளார் என அறி கின்றோம்.

## (7)

473. காற்றினிற் குணம்பல கணம்பல வணம்பல
474. ஆற்றலி னமைத்த அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** பொதுவாகக் காற்று என்பது ஒன்றாகக் கூறப்பட் டாலும், அதன் தன்மை, வேகம், தோற்றம், பிற பொருட் சேர்க்கையால் ஏற்படும் குணம், ஆற்றல், செயல்திறன், விளை பயன் பலப்பலவாம். இவற்றால் ஒன்றான காற்று வேறு வேறான தோற்றநிலையில் வேறு வேறாகிய பெயர்கள் ஏற்று விளங்குவ தாம். புற உலகில் காற்றின் பலநிலைத் தோற்றங்களை அறி வியல் அறிந்துள்ளது. அவை, உயிர்க் காற்று (Oxygen), நீரக வாயு, (Hydrogen), உப்புவளி (Nitrogen), கரியமிலவாயு (Carbon dioxide), முதலியனவும் இன்னும் நற்பயனையும், தீய விளைவை யும் உண்டுபண்ணும் பலவாகிய காற்றுகளைக் கண்டுள்ளனர். இவைபோக, நம் இலக்கியங்களில் நாற்றிசையிலிருந்து வீசும் காற்றுகளை அவற்றின் குணச்செயல் தோற்றம் கருதிக் காரணப் பெயராக நால்விதக் காற்றைக் கூறியுள்ளனர். அவை, வடக் கிருந்து வருவது வாடைக்காற்று, தெற்கே இருந்து வருவது தென்றல், கீழ் திசையிருந்து வருவது கொண்டல், மேற்றிசைக் காற்று கோடை எனப்படும்.

நம் பிண்டதேகக்கூறில் பலப்பல வாகிய நிலைகளில் வேறு வேறான குணத்தோடு, ஆற்றலோடு, செயலோடு விளங்கும் காற்றைப்பற்றி உடற்கூறு நூற்களும் மருத்துவயோக சாத்திரங்களும் நன்கு விளக்கியுள்ளனவாம். இவற்றிற் குறிக்கப் படும் காற்றின் வகை பொதுவாகப் பத்து எனப்படும். அவை கள், பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், நாகன், கூர்மன், கிரிகரன், தேவதத்தன், தனஞ்செயன் என்பன வாம். இவைபோக இன்னுஞ் சிலவும் குறிக்கப்படும்.

ஆகவே இந்தக் காற்றின் பலவாகிய தோற்றங்களினால், குணச் செயல்களினால் உயிர் விளக்கமும், அறிவு அனுப வமும் ஏற்படுகின்றன. இவை கொண்டு அருள் இன்ப

வாழ்வு பெறுவதே நமக்கு ஆணை செய்யப் பட்டுள் ளோம். ஆன்ம இன்ப லாபம் ஒன்றே குறிக்கோளாய்ப் வைத்து ஞான யோக சாத்திரங்களைப் படைத்தனர் முன்னோர். ஆகவே, ஜீவான்ம உண்மை இந்தக் காற்றின் விளக்கத்தால் அறியப்பட உள்ள காரணத்தால்தான், வாயுவைப் பத்தாகக் கொண்டனர். ஆன்மாவே, யகரமாகவும், எட்டும் இரண்டும் இணைந்த ஒன்றாகவும், கடவுளுண்மையும் மனித உண்மை கலந்த அத்துவதைப்பொருளே இந்த ஆன்மாவாகவும் கண்டுகொள்ளச் செய்தனர். தச வாயுக்களை தச அவதாரமாகவும் பொருந்தக் காட்டியுள்ளனர். திருமாலின் பத்து அவதாரங்களில் முக்கியம், இராமன், கிருஷ்ணன் இரண்டும் உலகியலிலிருந்து பரநிலைக்கு உயர்த்தும் பெருமைகொண்டனவாய்ப் பேசுவர். அந்தக் கற்பனைகளையெல்லாம் கடந்து அருள்விசார உணர்வை, அகக் கடவுள் வடிவில் பதித்து நின்று அருள்வாழ்வு வாழ வாழ பேரின்பநிலை சித்திக்கும் என்பது உண்மையாம். இவ் அடைவின் பொருட்டே ஆண்டவர் இப்படிக் காற்றின் அமைப்பே ஆதியிலேயே ஏற்பாடு செய்திருக்கின்றார்.

(8)

475. காற்றிடைச் சக்திகள் கணக்கில உலப்பில
476. ஆற்றவும் அமைத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) காற்றிலுள்ள ஆற்றலை இவ்வளவுதான் என்று கணக்கிட்டுச் சொல்லிவிட முடியாது. பெரிய பிரபஞ்ச வெளி யில் காற்று அருகியுள்ள இடங்களில், அதன் தோற்றமும் செய லும் வெளிப்படாது மறைந்து கிடக்கின்றன. நிலவுலகம் போன்ற வுற்றில்தான் இக்காற்றின் சக்திகள் நன்கு வெளியாகின்றன. நிலக்கோளத்தைச் சூழக் காற்றின் ஆற்றல், தரையையொட்டிச் சில மைல் தூரத்திற்கு அதிக அழுத்தமாய் உயிர் வாழ்வுக்கு ஏற்றதாயுள்ளதாம். தரையைவிட்டு மேலெழுந்து உயரே செல்லச் செல்லக் காற்றின் ஆற்றல் குறைந்து அருகிப்போகின்ற தால் வான்வெளியில் அதிவுயரம் செல்லவும், சென்று வாழ்ந்து கொண்டிருக்கவும் தக்கதாய் இல்லையாம்.

ஆன்மாவில் அமைந்துள்ள உயிர்க்காற்றின் ஆற்றலும் அளவும் எண்ணடங்காவாம். இதனால், அவ்வான்மா உயிர்க்

காற்றை வெளியிடும்போது, அதனைச் சூழ ஓர் ஒரு தேக வடிவம் தோன்றி விளைவுகொண்டு அனுபவத்தை யுட்சேர்த்துக் கொண்டே வருகின்றதாம். இப்படி ஓர் ஆன்மாவுக்கு எத்தனைப் பிறப்பு உருவங்கள் வருகின்றனவோ, அதன் ஒவ்வொரு பிறப் பிலும் எவ்வளவு ஆற்றலும், செயலும், அனுபவமும் உண்டாகின் றனவோ, யாரே கணித்தறியக்கூடும்? இவையெல்லாம், முடிந்த அருள் வாழ்வுக்கு அடிநிலையாய் அமைந்துள்ளன என்பது உண்மையாம்.

## *(9)*

**477. காற்றிடைச் சத்தர்கள் கணிதங் கடந்தன**

**478. ஆற்றவும் வகுத்த அருட்பெருஞ் ஜோதி**

**(உ-வி)** காற்றின் குணம், ஆற்றல், பயன் முதலியவற்றின் வேறுபாட்டால் அளவில்லாது விளங்குகின்றது இவ்வாயு பூதம். இதனை அடக்கியாளும், பூதரூபிகள், பொருள்கள், தத்துவ தத்துவிகள் பலவாகவே வகுத்து அமைக்கப்பட்டுள்ளன. இந்த பூமிப் பரப்பிலும், சூழ்நிலையிலும், உயிருடம்புகளின்,கருவி, கரண, ஜீவ, ஆன்ம தத்துவங்களிலும் இக்காற்றின் ஆற்றல் அமைந்துள்ளது. இவை ஒவ்வொன்றும் மேற்படி சக்திகளைக் கொண்டுள்ளதால், இவையே சத்தர்கள் எனப்படுகின்றனர். இந்தச் சத்தர்களாகிய இயக்கிகளை முற்றிலும் அறிவதே கடினம். ஒருவன், தன்தேக கரணத்திலும், உயிரிலும், இச் சத்தர்களாகிய இயக்கிகளை அறிந்து, அருளாலே அடக்கியாளும் ஆற்றலும் பெற்றுவிட்டால், அருட்சித்தியோடு அனந்தானந்த வாழ்வைப் பெற்றுக்கொள்ளலாம்.

## *(10)*

**479. காற்றிடை யுயிர்பல கதிபல கலைபல**

**480. ஆற்றலி னமைத்த அருட்பெருஞ் ஜோதி**

**(உ-வி)** காற்றில் பலவாகிய உயிர்த்தோற்றத்திற்கான ஆற்றல் அமைந்துள்ளது. உயிர்ச்சக்தி என்பது எல்லா உயிரினங்களுக்கும் பொதுவே. ஆனால், அவ்வுயிர்ச்சக்தியின்

வெளியீட்டு விளக்கம், ஒவ்வொரு உயிரினத்திலும் மாற்ற நிலையில் இருக்கின்றதாம். இதனால் உயிரினங்களின் வாழ்க்கை முறையும், அவற்றின் கலையுணர்வும் செயல்திறனும், அனுபவமும் பலவாக விளங்குகின்றனவாம். இவற்றையெல்லாம் அறிகின்ற மனிதன் திருவருளின் பெருமையை உள்ளபடி யுணர்ந்து, மக்க ளுயிர்க்கு அருள் விளக்கம்செய்து, மேலேற்ற வேண்டியவனாயிருக் கின்றான். மக்கள்பால் ஜீவ கருணைத்தொண்டு புரிய வேண்டி யதே மிக அவசியம். மற்றபடி பிற உயிர்களிடத்தில் விருப்பு வெறுப்பின்றி, வாழ்வுக்கு உதவும் வகையில் தயவோடு நடந்து கொள்ள வேண்டியதே கடமையாம். இப்படி தயவோடு கூடிய உயிரனுபவத்தால் அருளனுபவம் பெறவேண்டியதே முறையாம்.

## (11)

**481. காற்றிடை நானிலைக் கருவிக ளனைத்தையும்**
**482. ஆற்றுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி**

**(உ-வி)** வான்நிலை முழுவதும் பிரிவறக் கலந்துள்ளது காற்று. ஆனால், அது வானிலும், தீயிலும், நீரிலும், பாரிலும் ஒரு படித்தாயில்லாது, வேறுவேறான நிலையில், வேறுவேறான வண்ணமாக இருந்து செயல்படுத்துகின்றது. ஆதலால் பயனும் வேறு வேறாகத் தோற்றுகின்றதாம். இதுபோலவே ஜீவனும் காற்றம்சமாய் இவ்வுடலில் விளங்குகின்றதும்கூட நானிலையில் உளவாம். ஆன்மா, ஜீவன், கரணம், இந்திரியம் ஆகிய நான்கி லும் காற்றின்கூறு, வேறு வேறான நிலையில், இயலில், செயலில் உள்ளதாம். இந்திரியத்தில் அதாவது கண் முதலான கருவியில் காற்றானது இரத்தத்தோடு சேர்ந்து இயங்கிக் கொண்டுள்ளது. மனமுதலான கரணத்தில், காற்று, எண்ணம், சிந்தனை யுணர்வாக எழுந்து சுழலுகின்றதாம். ஜீவனில் மூச்சுக்காற்று சுவாசமாக ஓடிக்கொண்டிருக்கின்றது. ஆன்மாவில் காற்றானது அன்பறிவின்ப சக்தியாக உள்ளுணர்வில் விளங்குகின்றதாம். இவைபோக மனமே காற்று அம்சம் என்பர். அதுவும், மனம், புத்தி, சித்தம் அகங்காரம் என்னும் நானிலைகளிலும் சலனம், சலித்தலற்று நிற்றல், தெளிவு நிலை, மேலோங்கி எழுதல் ஆகிய நான்கு முறை யில் முறையாக விளங்கும். அன்றியும் இக்காற்றின் செயலால் சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம் ஆகிய நானிலைகளில், இந்திரிய, கரண, ஜீவ, ஆன்ம விளக்கம்தரு முறையில் செயல்

படுகின்றதும் காற்றின் ஆற்றலே. இப்படி எல்லாம் காற்றின் ஆற்றலும் செயலும் வகுத்தமைத்த நம் பதி இவைகொண்டு அருட்பெருநிலை பெறவே வழிசெய்துள்ளார்.

(12)

483. காற்றிடை யுணரியல் கருதிய லாதிய
484. ஆற்றுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) இங்கு காற்றின் காரணமாக விளைகின்ற உணரியல் அதாவது உணர்ந்துகொள்ளும் தன்மை ஒன்றும், கருதியல் ஆகிய எண்ணுதல், நினைவுகூர்தல், சிந்தித்தல் என்னும் செயற்குக் காரணமாயும் இக்காற்று உள்ளதாம்.

பொதுவாக உயிரினங்களில் உள்ள ஜீவ காற்று உயிர் உணர்வாக விளங்குகின்றது. அது பொறிபுலன் உணர்வாகவும், பசி, துயில், சோர்வு, விளக்கம் ஆகவும் இருக்கின்றதாம். உயிரினங்களிலே சிறந்த இம்மனிதனில்தான் காற்றினால் உணர்வு இயலும், உடன் கருதும் இயலும் விரிந்து விளங்குகின்றதாம். இக் கருதியல் பிறஉயிர்களில் மறைந்துகிடந்து, ஓரளவு சுபாவ குணச் செயலாக விளங்கும்; மனிதனிலோ இக் கருதியல் சிந்திக்கவும், பகுத்தறியவும், தெளிவுபெறவும், நினைவில் ஒன்றை முறைப்படி இருத்திக்கொள்ளவும், மனம் இளகி இரக்கம் கொள்ளவும் செய்கின்றதாம். இதற்குமேல் இக் கருதியலே ஆன்மநிலையில் சத்விசாரம் செய்து உண்மையை அறிந்து சார்ந்துகொள்ளவும், ஜீவர்களில் கடவுளுண்மை கண்டு ஜீவ காருண்யம் மேற்கொண்டு வாழ்ந்து கட்வுட் கருணை பெற்று கழி வில்லா இன்பில் ஓங்கவும் உதவுவதாம்.

(13)

485. காற்றிடைச் செயலெலாம் கருதிய பயனெலாம்
486. ஆற்றவும் வகுத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) காற்றினால்தான், அசைந்தும் இயங்கியும், சுழன்றும், சுற்றியும் கொண்டிருக்கின்றன எல்லாப் பொருள்களும், உயிர்களும்; காற்றின் செயலால் உண்டாகின்றன இவை. இச்

செயல்களோடு மனிதனில் கருதும் செயலைத் தூண்டிவிட்டு அதனால் பல நல்ல பயன்களை விளைவிக்கின்றதாம்.

மனிதன் கருதிய பயன் பெற, பல வழிகளில் முயற்சிக்கின்றான். திண்ணிய மனத்தால் எண்ணிய காரியம் கையுறப் பெற முடிகின்றதாம். உலகியல் வாழ்விற்கான காரியசித்திகளைப் பெற்று மகிழ்ந்திருந்து முடிவில் மடிந்துபோவது பெரிய காரியமன்று. ஆக இயல் வாழ்வுக்கான, சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கு நிலைகளில் முயற்சித்துச் சித்தி பெறுவது விசேடமாய்க் கருதுகின்றனர் சிலர். அதிலும் சிலர், யோகசாதனையால் அட்டசித்துநிலை பெற்று விளங்க விரும்புகின்றனர். அந்த யோகநிலையோ எட்டு நிலைகள் கொண்டதாம். அவை: இமயம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பனவாம். இவற்றை முறைப்படி மேற்கொள்ளுகின்றவர் அரிதே. ஆசனம் பிராணாயாமம் ஓரளவு பயின்று அற்பசித்தி பெற்று ஒழிகின்றார்கள். இவற்றிற்குமேலே ஞானத்தால் ஆன்மநிலை யோர்ந்து பற்றி நின்று சில சித்தி பெற்று முத்தி முடிவெய்தி யொழிகின்றனர். இவ்வளவுக்கும் காற்றின் கருதியல்பயன் விளைசெயலே காரணம் என்பர்.

இன்று தோன்றியுள்ள சுத்தசன்மார்க்கம் வழங்க உள்ள சித்தி இன்பவாழ்வு மிக உயர்ந்ததாம். அதுவே, கடவுள் அருளாணையாகவுமிருக்கின்றது. இந்த மார்க்கி இக்காற்றை அருள் திருவடியாகவே காண்கின்றான். வேகாத காலாதி கண்டு கொண்டு எப்பொருளும் விளைய விளைவித்த தொழிலே இன்னான் செயலாகும். வேகாக்கால், சாகாத்தலை, போகாப்புனல் என்பன சாகாக்கல்வியின் பயனாம் திரிதேகசித்தி நிலையேயாம்.

## (14)

487. காற்றினிற் பக்குவ கதியெலாம் விளைவித்

488. தாற்றலின் வகுத்த அருட்பெருஞ்ஜோதி

(உ-வி) அண்ட பிண்டங்களையெல்லாம் தாங்கியும், ஈர்த்தும், இயக்கியும், சுழற்றியும் வேகம் கொடுத்து மிக விரைந்து சுற்றிச் சுற்றி வரச் செய்கின்றது காற்றின் செயலே. கோட்

களையும் நாட்களையும் பலவாகிய நிலைகளிற் சூழ்ந்துள்ள காற்று அவற்றைத் தத்தம் கதிகளில் தவறாது செலுத்திக்கொண் டுள்ளதாம். இவற்றால், அண்ட பிண்டங்களிலுள்ள பொருள்களும் உயிர்களும், சக்திகளும், விளைவுகளும், பக்குவமடைந்துகொண் டுள்ளன. இப்பக்குவவிளைவால் மனிதனில் மெய்யறிவும், மெய் யன்பும் ஏற்பட்டு முடிவில் நற்கதியாகிய இறவாப் பேரின்ப வாழ்வும் சித்திப்பதாம்.

## (15)

489. காற்றினிற் காலம் கருதுறு வகையெலாம்
490 ஆற்றவும் வகுத்த அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** காற்றே கால் எனவும் படுவதாம், இக் காலின் அடியாகப் பிறந்ததே காலம்ஆம். மனிதப் பிண்ட தேகத்தில் காற்று, மூச்சுச் சுவாசமாக இயங்கிக்கொண்டுள்ளது. ஒவ் வொரு மூச்சிலும் தசமாகிய ஆன்மசக்திக்கலை வெளிப்படு கின்றது. அப்போது அக்காற்று, ஆறாதாரச் சக்கரங்களையும் சுழற்றி, அவற்றில் வெளிப்படும் சிறிதளவு ஆற்றலையும் ஆன்ம சக்திக். கலையுடன் வெளியேற்றிவிடுகின்றதாம். இந்த ஆன்ம ஆதார சக்திக் கலையே, பத்தும் ஆறும் பெருக்கிய *(10 x 6 = 60)* அறுபதாகத் தெரிவிக்கப்படுகின்றது. இம்மாதிரி ஒவ்வொரு நாளிலும் உயிர்க்கலை வெளியிற் கழிந்து போய்க்கொண்டேயுள்ள தாம். தினசரி மூச்சு 21600 என்று அறிகின்றோம். இம்மூச்சில் ஒவ்வொன்றும் ஆன்மாவின் பத்து கலை மட்டும் போக, ஆதாரங் களில் ஆறு கலை வேலை செய்து கொண்டேயிருப்பதாம். இதனால், ஒரு நாளில் 21600 மூச்சில் 21600 x 10 = 2,16,000 கலை கழிகின்ற தாய்க் கொள்ளப்படும். இந்த 216000 கலைகளே ஒருநாளாக இருப்பதாம். இதனை 60 ஆல் வகுக்க $\frac{2,16,000}{60} = 3600$ ஆம். இவை வினாடி[illegible]ளாம். இதனையும் 60 ஆல் வகுக்க $\frac{3600}{60} = 60$ நாழிகை ஆகும். இப்படித்தான், 60 கலை = 1 விநாடி, 60 விநாடி = 1 நாழிகை, 60 நாழிகை = 1 நாள் என்ற வாய்ப்பாடு ஏற் படுத்தப்பெற்றுள்ளது. இதற்குமேல், அக ஆன்மா அனுபவத்தின் பொருட்டே சதுர்யுகக் காலக் கணக்கையும் நம் உயிர்கலையே

கொண்டு கண்டுள்ளனர். அதாவது, கலியுகம், துவாபரயுகம், திரேதாயுகம், கிருதயுகம். இவை, ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு என்ற பொருளில் கொள்ளப்படுவது. ஒவ்வொரு யுகத் திற்கும் இருண்டு நாட்கலையே உரிய வருடங்களாகக் கற்பித் துள்ளனர். அதாவது கலியுகத்திற்கு, 2,16000 x 2 = 4,32000 வருடங்களாம். துவாபர யுகத்திற்கு 4,32000 x 2 = 8,64000 ஆண்டுகளாம். திரேதாயுகத்திற்கு 4,32000 x 3 = 12,96000 வருடங்கள். கிரேதாயுகம் அல்லது கிருத யுகம் 4,32000 z 4 = 17,28000 வருடங்களாம். இவைகளின் மொத்தம் 4,32000 + 8,64000 + 12,96000 + 17,28000 = 43,20000 ஆண்டுகள் ஒரு சதுர்யுகம் ஆகும். இவ்வளவும் உயிர்கலையே. இதனை ஒருநாளுக் குரிய 2,16000 கலைகளால், வகுக்க வருவது 20 நாளாம். ஆன்மா 10 எனப்படுவதால், ஆன்மவிசாரம் முதற்பத்தாகவும், ஆன்ம இன்ப வாழ்வு இரண்டாம் பத்தாகவும் கொண்டு, இந்த சுத்த சன்மார்க்கச் சித்தி வாழ்வு அனுபவம் குறிப்பது இச் சதுர்யுக தத்துவ இருபது நாள் சுட்டுவதாம். நம் அருட்பெருஞ்ஜோதிபதி இந்தக் காலாதீத மரணமில்லாப் பெருவாழ்வை வழங்கவே இக் கால தத்துவத்தை காலாகிய காற்றினுட் பொதிந்துவைத்து வெளியாக்கியுள்ளார் என்பது உண்மையாம்.

## (16)

**491. காற்றியல் பல பல கணித்ததிற் பிறவும்**
**492. ஆற்றவும் வகுத்த அருட்பெருஞ் ஜோதி**

(உ-வி) காற்றினுடைய அகப்புறத் தன்மைகள், ஆற்றல்கள், வகைகள், தோற்றங்கள் பலபலவாக அமைத்து, அவற்றால் விளையும் செயல்களும் பயன்களும் அனந்தமாக வெளி யாக்கப்படுகின்றன. இவைகளேயல்லாமல் அருளால் ஆன்மானு பவம் வெளிப்படற்காக, சூக்கும தெய்வ வடிவங்களையும், ஆவி வடிவங்களையும், பூத, பிரேத, பைசாச, காற்றுக் கறுப்பு வடிவங் களையும், சுர, அசுர, தேவ, சித்த கணங்களையும், சகல, பிரளையா கல, விஞ்ஞானகல ஆன்மபேத மனிதர்களையும், திரிமலபரிபாக திரிதேக சித்தி நிலைகளையும் இந்த வாயு சக்தியினால் வெளிப்படுத் தற்கே தொடக்கத்தில் இவைகளை எல்லாம் திருவருளால் அடக்கிவைத்திருந்து தேவையானபோது தேவையானபோது

கொஞ்சம் கொஞ்சமாக வெளிப்படுத்திக்கொண்டுள்ளார் நம் பதி. காற்றின் முழுமையான விரிநிலையை இன்னும் மனிதன் காண வில்லை, காணவேண்டியது-எவ்வளவோ: காலத்தேயாவும் வெளி யாகிக்கொண்டேயிருக்கும். பிறவும் வருங்காலத்தில் வெளியாகிக் கொண்டிருக்கும். அருணிலை பெறுவோர் காலக் கணக்கு கடந்து என்றும் அருள் வாழ்வுடன் திகழ்வார்கள்.

## 183. வெளியியல் விரி

### (1)

493. வெளியிடைப் பகுதியின் விரியியல் அணைவியல்
494. அளியுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) இங்கு, வெளி என்பது வெற்றுச் சூனியவெளி யன்று. மேலும், அப்படிச் சூனிய வெளியே உண்மையில் இருக்க முடியாது. எப்போதும் அவ்வெளி முற்றிலும் ஆகாசபூதம் நிறைந்தே இருப்பது இயல்பாகும். ஆகவே ஈண்டு வெளியியல் விரி, ஆகாசநிலைத் தோற்றத்தைப் பற்றியே விளக்கிக் கூறவந்த தாகப் பொருள் ஆக்கிக்கொள்ள வேண்டும். இந்த வெளியும் இடமும் ஆகாசமும் (Space and ether) எனப்படுகின்றது. ஆனால் இவற்றின் உண்மையை அறிவியலாற் காணக்கூடாததாயிருக் கின்றது.

பெருவெளிநிலை எல்லையற்றதாய் அகண்டமானதாயுள்ள ஒன்றாகும். இந்த முழுமையான பெருவெளித் தோற்றத்தைக் கண்ணாலோ, கருவிகளாலோ காணமுடியாது. நாம் காணக் கூடியது அந்த அகண்டத்தின் ஒரு சிறிதளவேயாம். இவ் அற்பப் பகுதி வெளியையே முழுமையானதாகக் கருதிக்கொண்டுள்ளனர் பலர்.

நாம் காணுகின்ற பகுதி வெளி, நிலப்பரப்புக்கு மேலே வான்வெளி கவிந்து பெரு வட்டக் கூடாரம்போல் தோற்று கின்றது. வான்வெளியில் நிலமும், பிற கோட்களும், நாட்களும் சுழன்று சுழன்று சுற்றிக்கொண்டேயிருப்பதால் உருண்டை வடிவாக அமைந்துள்ளன. மேலும், கண்ணாற் சூழ நோக்கும் போது, எல்லையில்லாப் பெருவெளியின் பகுதியும் வட்ட வடி வாகவே தோற்றுகின்றது. இவ்வெளியில் சூரிய, சந்திர, நட்சத் திரங்கள் வானவிதானத்தில் அந்தரத்தே இருந்து ஒளிரு கின்றனவாய்க் காண்கின்றோம். தரைமட்டத்திற்கு மேலே

சென்று பார்த்தால் வானக் கவிகை தணிந்தும், சுருங்கியும் தோற்றும்,

மனிதனில் நிரம்பியுள்ள வெளி நிலை, உச்சந்தலை முதல் உள்ளங்கால்வரையுள்ள தேக வடிவம் முழுதுமாம். இத்தேக நிலை குழவிப்பருவத்தில் மிகச் சிறிதாயிருந்து வளர்ச்சியுறும் போது விரிகின்றது. உயிர் நீங்கினால், உடலுருச் சிதைந்து, பூத அணுக்கள் பிரிந்து விரிந்துபோய் விடுகின்றன. உரு வளர்ச்சி யில் பூத அணுக்கள் அணைந்து அல்லது கூடிப் பெருவடிவ மாகின்றதாம். தேகத்தின் இந்த விரிவதும் சுருங்குவதுமான நிலை களை, வான்வெளி வடிவின் விரிவும் சுருக்கமும் ஆகக் கொள்ளப் படும்.

புறத்தேகம் தோன்றி விளங்கும் நிலையில், அகத்தே ஆன்மா காசம் விரிந்து 'அறிவு அனுபவ விளக்கம் கொண்டு திகழு கின்றதும், புறவுடல் நீங்குவதால் அகத்திருந்த ஆன்மாகாசம் சுருங்கி அருகி அறிவனுபவம் கெட்டு மறைகின்றதாம். மறுபடியும் அவ்வான்மாணுவைச் சூழப் புதிய ஒரு தேகம் தோன்றிடுங்கால் அவ்வாகாசம் விரிகின்றது. இப்படி இவ் வான்நிலை விரிவதாலும், சுருங்குவதாலும், பிறப்பும் இறப்பும் உண்டாகி ஆன்மபரிபாகம் அடையக்கூடியதாயுள்ளதாம். இதுதான் அளியுற எனப்பட் டுள்ளது. அளிதல் என்றால் கனிதல் எனப் பொருளாம். ஆன்மா வின் கனிவுநிலை இரக்கமே வடிவான அன்புருவமாகும். இதனால், அளிதல் என்பதற்கு அன்புமயமாதல் என்று பக்குவத்தே காணலாகும். இக் காரணத்தாலே அளி என்ற சொல்லுக்கு அன்பு என்ற பொருளும் வழங்கப்பட்டுள்ளதாம்.

### *(2)*

**495. வெளியிடைப் பூவெலாம் வியப்புறு திறனெலாம்**
**496. அளியுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி**

**(உ-வி)** அகண்டமான வெளியிடத்தே வான்பூதம் நிரம்பி யிருந்து, அதனின்றே காற்றாகிய வாயுபூதம் தோன்றி நிரம்பிட அதிலிருந்தே மேலும் தீயும், நீரும், மண்ணும் தோன்றிப் படர்ந்து நெகிழ்ந்தும், இறுகியும் ஐம்பூதங்களாகி, இவ்வைம் பூதத்தாலான அண்ட பிண்ட சராசரங்கள் யாவுமாகிப் பிரபஞ்சம் முழுதுமாய்த்

தோற்றியுள்ளதாம். இந்த மா பிரபஞ்சத் தோற்றம் வியத்தகு வண்ணம் விளங்கிக்கொண்டும், பலவாகிய ஆற்றலை வெளிப் படுத்தி மனிதனில், இப் பிரபஞ்சத்திற்கெல்லாம் முழுமுதற் காரணமாகிய கடவுளையே காணவும் அருள்ஞானம் தோற்று விக்கப்பட்டுள்ளதாம். அந்தக் கடவுளின் அருள்விளைவே இன்று மெய்யன்பாகக் கண்டு கொண்டு விளங்கவும் செய்கின்றதாம்.

*(3)*

**497. வெளியினி லொலிநிறை வியனிலை யனைத்தும்**
**498. அளியுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி**

**(உ-வி)** சாதாரண ஒலி, காற்றைத்தான் ஊடகமாய்க் கொண்டு பரவுகின்றது. காற்றை எதிர்த்து அதிகம் செல்லாது, காற்றின் போக்கிலே தான் சென்று பரவும். இதுவும் ஒரு விநாடிக்கு 1200 அடி தூரம்தான் சென்று பரவும். சில விநாடி தூரத்திற்குமேல் செல்ல முடியாததால் குறிப்பிட்ட எல்லைக்கு மேல் செவிப்புலனாவதில்லையாம். ஒலியின் ஆற்றல் இம் மட்டோடு நின்றுவிடவில்லை. ஒலியானது, வெளிநிறை ஆகாச பூதத்தில் கலந்துள்ள மின் அலை மூலம் பரவுகின்றதை இன்றைய அறிவியல் கண்டுள்ளது. இம் மின்னலையின் வேகம், ஒளிக்கதிர் பரவும் வேகத்திற்கு ஒப்பாம், இது ஒரு விநாடிக்கு 1,86000 மைல் அல்லது 3,00000 கிலோமீட்டர் செல்லுவதாம். இதனால் இந்த மின்காந்த அலைகளை ஊடகமாகக் கொண்டு, உலகெங்கும் ஒரு விநாடியில் ஏழில் ஒருகூறு நேரத்தில் ஒலிபரப்பப்படு கின்றதை இன்று வானொலிக் கருவி (Radio) மூலம் காண் கின்றோம். வெளிநிறை ஒலியின் சிறப்புத் தன்மையில் இந்த ஒலிப்பரவல் ஒன்றாகும்.

ஒலியாக வெளிப்படுகின்ற பேச்சுக்குரல் கொண்டு ஒருவன் தன் கருத்தை பிறர்க்குத் தெரிவித்து எத்தனையோ விஷயங் களைப் புரிந்துகொள்ளச் செய்கின்றான். இம்முறையால் மாந்தர்க்கு எவ்வளவோ நன்மை ஏற்படுகின்றதாம். இப்படிப் புறஒலியால் உண்டாக்கப்படும் நன்மையைவிட, அகநின்று உள் ளொலியான் அருட்சக்திமூலம் பிறர் உள்ளத்தே பரப்பப்படும் உண்மைவிளக்கத்தால் பெருநன்மை விளைவது சன்மார்க்கியின் அனுபவம்.

ஒலியின் மற்றொரு வியன்நிலை யாதெனில், வான்வெளியில் ஆகாசம், வாயு, தீ இம்மூன்றின் இயலாய், அகர, உகர.மகரம் தோன்றி ''ஓம்'' ஆகி எங்கும் பரநாத இயக்கத்தோடு பெருஞ் ஜோதிமயமாய்த் திகழ்ந்து கொண்டுள்ளதாம். இதனால், பிரபஞ் சத்தில் உருவாகும் அண்டபிண்ட உயிர்ப்பொருள்கள் யாவும், பிரணவத்தால் தாக்கப்பட்டு, ஓவண்ணமாய்த் தோன்றி, வேறு வேறு வடிவாய் விளைவுற்றுத் திகழ்கின்றனவாம். இதுவும் நிறையொலியின் வியன்நிலைத்தோற்றமேயாம். இவை எல் லாம் இந்த மனிதப்பிறப்பு வடிவில் வெளிப்பட்டு விளங்கி, அருட் பக்குவம் ஏற்படுத்தி அன்பின்ப வடிவில் வாழ்வித்தற்கேயாம்.

### *(4)*

499. வெளியிடைக் கருநிலை விரிநிலை யருநிலை
500. அளிகொள வகுத்த அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** வெளிநிறை வான் அணுவில் மற்ற பூதங்கள் அதி சூக்குமமாய் ஒடுங்கிக்கிடக்கின்றன. இதனால் இந்த வான்பூதக் கரு நிலையில் பிற பூத சக்திகள் இருப்பனவாய்க் குறிக்கப்படுகின்றன. அக் கருநிலைவிட்டு வெளிப் போந்து விரிநிலையுற்றுத் திகழ்கின்ற நிலையில்தான் ஐம்பூதங்களையும் காண்கின்றோம். அந்த ஐம்பூதங் கள்தாமே, பலவகை இரசாயன மாற்றங்களால் எத்தனையோ பொருள்களாயும், உயிரின வடிவங்களாயும் தோன்றியுள்ளன வாம். இதனால் எந்தப் பொருளிடத்தும், உயிரிடத்தும் ஐம்பூதங் களை நேரடியாகக் காணமுடிகின்றதில்லையாம். இது அப்பூதங்க ளின் அருநிலை எனப்படுகின்றது.

தத்துவநிறை மனிதப்பிறப்பு வடிவிலேயும் ஐம்பூத அருநிலை யுண்மை உண்டென்பதைத்தான் இன்று கண்டுகொள்ளவும், தெளிந்து பயன்பெறவும் முடிகின்றதாம். சுத்த அன்பு அனுபவம் எப்படி வெளியாகின்றது என்பதைக் காண்போம். காயம் என் பது ஆகாயம் என்றறிந்திடல் வேண்டும். இது அகர ஆகாசமே. இதில் உள்ளீடாய், இறையொளியாய் இருக்கின்றது ஆன்ம சிற்றணுவே, (ன்) னகர மெய்யாக இருக்கின்றது. இந்த அகர வுகரம் அடிமுடியாகி, மனிதனில், ப்+உ வண்ணமாய் தலைநடு நின்று ஒளிர்கின்றது. இது ''அன்பு'' ஆகின்றது.

இந்த அன்பு உண்மையை அகத்திற்கண்டு, சொல்லிலும் செயலிலும் அன்பே வெளிப்பட வாழ்ந்து சுத்த இன்பானுபவத்தில் ஓங்கவே திருவருள் இப்படி இசைத்துள்ளதாம்.

(5)

501. வெளியிடை முடிநிலை விளங்குற வகுத்தே
502. அளிபெற விளக்கும் அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) புறவான் வெளிநிலையில், வான், வளி, தீ ஆகிய மூன்றையும் தோற்றுவித்து விளங்கச்செய்துள்ள கடவுள், அதனையே முடிநிலையிற் கொண்டுள்ளார் என்பதை, அகவான், சிதாகாசத்தில், அன்பருளின்ப ஜோதியுருவாய் அருளாற் காண்கின்றோம். இதனால் வெளி என்பது புற ஆகாசநிலையையும், அகச் சிதாகாசநிலையையும் குறிப்பதாய் அறிகின்றோம். அண்டத்திலுள்ளது பிண்டத்திலும் உண்டு என்பது உண்மையே.. புறத்தே இயற்கையாய் வெளிப்படுத்தி விளங்குறச் செய்துள்ளதை அகத்தே விளக்கியுணர்த்தி அளிபெறச் செய்ததற்கே இந்த அருட்பெரும் செயலாக யாவும் விளங்குகின்றனவாம்.

(6)

503. வெளியினிற் சக்திகள் வியப்புற சத்தர்கள்
504. அளியுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) உருவெளித் தோற்றத்தில் உணரப்படுகின்ற ஆற்றல் படைத்த சத்தர்களும் அவ்வாற்றல்களாகிய சக்திகளும் மிக அற்புதமானவைகளாம். அவ்வுருவெளித் தோற்றங்களே சிற்சில சமயங்களில் பூதாம்சம்கொண்டு, தேவர், சித்தர், முனிவர், இயக்கர் காற்று, கறுப்பு ஆவேசங்களாக வெளிப் பட்டுப் பல அரிய பெரிய காரியங்கள் புரிகின்றனவாம். இக் காரியப்பாடுகள் எல்லாம் எதற்காக என்னில், நம் அருட்பெரும் பதியின் பெருமையை நாம் அறிந்து, அன்பு மயமாகி அருள் அடைந்து உய்யவேயாம். பலவாகிய ஆற்றல்களே சக்தியாக அறிகின்ற போது, அந்தச் சக்திகளை தவ முயற்சிகளால் கொண்டு விளங்குகின்றவர்களைச் சத்தர்கள் என்கின்றோம்.

இதுகாறும் வெளியிடத்திலே இருந்து வந்தும், செயல்பட்டு விளங்காத காரணத்தால் எந்தவிதப் பெருமையும் பயனும் உண்டாகவில்லை' மனிதனுக்கு. இதனால் அச்சக்திகளும் பெருமையுற்று விளங்கவில்லையாம். இது சமயம்தான் அச்சக்தி களைக் கொண்டிருந்த சத்தர்கள் மனித வடிவேற்று வாழவந்துள் ளார்களாம். அவர்கள்தான் இன்று அளிவுற்றுத் திகழ்கின்றார்கள். அதாவது அன்புவடிவச் சுத்ததேகிகளாய் விளங்குகின்றார்களாம். இந்நிலை எய்தற்பொருட்டே யாவையும் அன்றே வகுத்திருக் கின்றார் நம் பதி.

## (7)

505. வெளியிடை யொன்றே விரித்ததிற் பற்பல
506. அளியுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** விண் ஒன்று என்று கூறியுள்ளனர். அகண்டா காசம் முழுவதும் ஒன்றேயாக இருக்கின்றது. அந்த ஒன்று மிக மிகப் பெரிதாய், அளவிடற்கரியதாய் உள்ளதால், அதனைப் பகுதி பகுதியாகப் பலப்பலவாகத் தோற்றுவித்துள்ளார் நம் பதி. ஒரு பகுதியையே நாம் நமது சிற்பிரபஞ்சமாகக் காண்கின்றோம். இதில் ஒரு சூரியனும் ஒரு சந்திரனும், பலவாகிய நட்சத்திரங் களும் விளங்குகின்றன. இத் தோற்றமுடைய பிரபஞ்சத்தை ஒரு பிரமன் அண்டமாகக் கொள்ளுகின்றோம். இதைப் போன்ற பிரமாண்டங்கள் எண்ணடங்காதன, எண்ணடங்கா விண்மீன் ஆகிய சூரியர்களைச் சுற்றியுள்ளனவாம். அங்கங்குள்ள நிலவுலகங் களிலிருந்து காண்போர்க்குத் தனித்தனி ஒவ்வொரு பிரபஞ்சம் சூரிய, சோம, உடுக்களோடு விளங்கும். ஆகவே எண்ணற்ற பகுதிப் பிரபஞ்சங்கள் கொண்டு விளங்குவதுதான் மா பிரபஞ்ச மாய் நிறைவுடைத்தாம்.

இப்படி பிரம்மாண்ட கோடிகள் கொண்ட மாபிரபஞ்சத்திற் கெல்லாம் தனித் தலைமைப் பெரும்பதி ஆக விளங்குகின்ற கடவுள் ஒரே ஒருவர் தான் என்பதைத் திருவருளால் இன்று அறிந்து கொண்டுள்ளோம். இந்தத் தன்னேரில்லாப் பெரும்பதி ஆகிய கடவுள், எவ்வுலகத் தெவ்வுயிர்க்கும், எப்பொருட்கும் என்றென் றும் அன்புசெய்து கொண்டுள்ளாராம். தனியொருவராய் இருந்துகொண்டு எப்படி யாவையும் அன்புற விளக்கம் செய்ய

முடிகின்றது? எப்படி என்றால், அவர் ஒருவர்தான் என்றாலும், அருள்விசேடத்தால் எங்கும், தன் இயல் உண்மை அறிவின்ப நிலை முழுமையாக விளங்க்ச்செய்தற்பொருட்டு, பரிபூரணராகவே விளங்கிக்கொண்டுள்ளார். எனவே, அவரேதான், அவர் ஒருவரேதான், யாவற்றிற்கும் உள்ளீடாய் இருந்துகொண்டு, அனந்தவண்ண பேதத்தோடு புறத்தே விளங்கிக்கொண்டுள்ளார் என்பது தெளிவாம். இந்த உண்மை வெளிப்படவுள்ள மனிதப் பிறப்பு வடிவங்களில் எல்லாம் அந்த ஒன்றான கடவுளே இருந்து கொண்டு வேறு வேறான தோற்றத்தோடு விளங்கிடுகின்றார் என்று அறியப்படுகின்றதாம். இதனால், அவ்வொன்றான கடவுள் தானே, நாம் ஒவ்வொருவருமாய்ப், பிறருமாய், மற்ற உயிர்கள், பொருள்கள் எல்லாமுமாய் விளங்குகின்றார் என்று சத்தியமாகக் கண்டு தெளியவேண்டும். இவ்வுண்மை விளங்கினால்தான், நாம் பலவாகிய புறவடிவினராகவோ, ஒருவண்ண ஆன்ம ஒருமைச் சகோதரர்களாகவோ இல்லை, உண்மையில், எவருமாய் விளங் கிக்கொண்டுள்ள கடவுள் தானே நாம் ஒவ்வொருவருமாவோம். ஆகவே, நாம் இத்தேக வடிவில் இருந்துகொண்டு, பக்குவஞான வசத்தால் உண்மையை அறிந்து, அந்த ஒன்றான கடவுளே அல்லாது வேறாக இல்லாதிருக்கும் நம் மெய் இயலைக் காண் கின்றோம். இந்நிலையினின்று வாழ்வதுதான் இனி ஒவ்வொரு வரும் அடைய வேண்டிய நிலையாகும். ''ஒன்றே விரித்ததிற் பற்பல அளிவுற வகுத்த'' என்றதன் கருத்து, ஒன்றான கடவுள் அகமிருந்துகொண்டு, அன்பு செய்து இன்பம் விளைவிக்கவேண் டித்தானே யாவுமாய் எவருமாய் வெளிப்பட்டுச் சூழ்ந்து வந்து விளங்குகின்றதாம். இவ்வுண்மையை அறிந்துகொண்டுள்ள மனிதனும் அக்கடவுள் மயமாய் இருத்தலின், அப்படியே அன் பின்ப வாழ்வு மேற்கொள்ளுதலே அமைகின்றதாம்.

## (8)

507. வெளியிடை பலவே விரித்ததிற் பற்பல
508. அளிதர வமைத்த அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** கடவுள் ஒருவர்தான் உண்மையில் எப்போதும் இருந்துவருகின்றார். ஆனால், அந்த ஒருவரே இந்தப் பேருலகில் புறவடிவில் எல்லாம், உள்ளிருந்தபடி வேறுவேறாய்த் தோற்றிக்

கொண்டிருக்கின்றார். அனந்த ஆன்மாக்களாய் விளங்குகின்றார். இது ஆண்டவர், வெளியிடைப் பலவாய் விளங்குகின்ற நிலை யாம்.

கங்கில கரையில ஜீவான்மாக்கள் என்பர். உண்மை யாதெனில், கடவுள் ஒருவரே, பரமான்மாவாக எப்போதும் இருந்துகொண்டுள்ளார். அவர்தானே ஒவ்வொரு மனித வடி விலும் தனித்தனி ஒவ்வொரு மனிதனாய்த் தோற்றி விளங்கிக் கொண்டிருக்கிறதை உணர்கின்றோம். அந்த ஒரு கடவுளே இத்தனை ஜீவதேக சம்பந்தங் கொண்டு தனித்தனி ஒவ்வொரு ஜீவான்மா என விளங்குகின்றார். இப்படி ஒன்றான பரமான்ம பதியே, கோடிகோடி ஜீவான்ம பசுக்களாயுள்ளனர் ஆம். அந்த ஜீவான்மாக்கள் பலவேறு தேகபோக வாழ்வில், பாசச் சூழலில் விளங்குகின்றதாக அறியப்படுவதும், ஒரே கடவுள் உண்மை வெளியாவதற்கேயாம்.

ஜீவான்மாக்கள் எத்தனை கோடி இருந்தாலும் சரி, அவ்வளவு மாய்த் திகழ்ந்துகொண்டுள்ளது அந்த அகமுடைய ஒரு பரமான் மாவே என்பது சத்தியம். ஆகையால், ஒரு ஜீவான்மா சித்தி யுறுங்கால், பரமான்மாவாகவே யுள்ளிருந்து விளங்குகின்றதாம். இதற்குமேல் அந்த பரமான்மாவாயுள்ள ஒன்றே, எந்த ஒரு ஜீவான்மாவாயும் இருந்துகொண்டு, நிறை சித்தியோடு விளங் கக் கூடியதாயுள்ளதாம். இதனால் ஜீவான்மாக்கள் ஒவ்வொன் றிலும் கூட, கடவுள் பற்பல சக்தி, ஆற்றல், செயல்களோடு வெளிப்பட்டு விளங்கி அன்பைப் பெருக்கி அருளைக் கொடுத்து வாழ்விக்கின்றார் என்பது உண்மையாம்.

## *(9)*

**509. வெளியிடை யுயிரியல் வித்தியல் சித்தியல்**
**510. அளிபெற வமைத்த அருட்பெருஞ் ஜோதி**

**(உ-வி) .** ஆன்மாகாசத்தில் கடவுட்சக்தி நிரம்பியுள்ளது இயற்கை. ஒவ்வொரு ஆன்மாவிலும் சூக்குமமாக அனந்த ஆன்மாக்கள் அடங்கியுள்ளனவாம். ஓரான்மாவிலிருந்து உயிர்ச் சக்தி வெளியாகிச் செயல்படும்போது, அவ்வான்மாவுக்குரிய தனு, கரண, புவன, போகங்களைச் சூழ வருவித்துப் பக்குவம்

உண்டு பண்ணுகின்றதாம். இதனால், ஆன்மாவின் உயிரியல் விளக்கம் தோன்றுவதும், மறைவதுமாயுள்ளதாம். இதுபோல் ஒரு விதையிலும் அதற்குரிய தாவரவியல் முற்றுமே ஒடுங்கி, யிருப்பதும், வெளித்தோன்றி விளங்குவதும் காண்கின்றோம். இவைகளே உயிரியல், வித்தியல் என்று கூறப்பட்டுள்ளன. மேலே சித்தியல் என்பது யாதெனத் தெரிந்துகொள்வோம்.

ஓரான்மா, அபக்குவநிலையில், தன்னையுணராது, தான் பெண் சத்தம்சமான தேகியாகக் கருதிக்கொண்டிருக்கும் காலம், பெண்ணாகவே, ஒருத்தி' எனக் குறிக்கப்படுகின்றது. சற்று பக்குவாபக்குவமுற்றுத் தன்னை ஆண் அம்சமான ஆன்ம சொரூபியாய் உணர்ந்து, சித்திநிலை எய்தி விளங்கும் காலம், தன்னை ஒரு சித் சொரூபியாக, சித்தனாக அறிந்திருக்கின்றான். இது இருத்திநிலை எனப்படுவது. இருத்தி என்றாலே சித்தி என்பது பொருள். சக்தியும் சித்தியுமே இரண்டு தி-உடைமை யால் இருத்தி என்றார் போலும். இதற்குமேல் அந்த ஆன்மா திருவருளாலே கடவுள் மயமாகி விளங்கும் நிலையே முத்திநிலை எனப்படுவது. இந்த முத்திநிலையே ஆன்மாவுக்கு முடிவான ஆனந்தநிலை ஆகும். இவ்வளவையும் ஆன்மவெளியிடை வைத் திருந்து பக்குவகாலத்தே வெளியாக்கி அனுபவமுறச் செய்கின் றது அருளாளன் பெருஞ்செயலாம்.

## *(10)*

**511. வெளியி னனைத்தையும் விரித்ததிற் பிறவும்**
**512. அளியுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி**

**(உ-வி)** புறவெளியிலுள்ளது பூதகாசம். அதிலிருந்து பிர பஞ்சம் உதித்துத் தழைத்துள்ளது. இதுபோல் அகமாகிய ஆன்மாகாச வெளியில், மற்ற ஜீவாகாசம், கரணாகாசம், இந்திரிய ஆகாசம் ஆகியவற்றை இப்பிண்ட பிரபஞ்சமாகிய தேகத்தில் வெளிப்படுத்தியுள்ளார். இந்த அண்ட பிண்டப் பிரபஞ்ச உண்மைகளை எல்லாம் இப்பொழுது தன் அருள் வெளியிலிருந்து வழங்கியுள்ளதை அவ்வருள் நிலை நின்றே அறிகின்றோம். எல்லாம் அருள்வெளியில், பிரணவஜோதி வடிவுடன் நவமணி பீடத்திலிருந்து புரிகின்ற அருள் ஐந்தொழில் என்னும் திருநடனச் செயலின் விளைவேயாகும். அருள்வெளியிலிருந்து இதுவரை

வெளியாக்கப்பட்டவை எவ்வளவோ, அவ்வளவுதான் என்பதில்லை; இன்னும் எத்தனையோ கோடி யுகத்திற்கும் வெளிவரவிருக்கும் பிறவும்தான் அடக்கிவைக்கப்பட்டுள்ளனவாம். இவை எல்லாம் ஏனென்றால் மனிதனை, மக்களினத்தை, எவ்வுலகத்து எதுவரையும் சுத்த அன்புடையவராக ஆக்கி நிறையின்போடு நிலவச் செய்தற்கேயாம்.

## 184. அகப்புற விரி

### (1)

513. புறநடு வொடுகடை புணர்ப்பித் தொருமுதல்
514. அறமுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) பொதுவாக ஐம்பூத விரிவியல் விளக்கம் முன்னடிகளில் தெரிவிக்கப்பட்டது, இனிமேலே அப்பூதப் பிண்டாண்டங்களின், அகம், புறம், எப்படி எல்லாம் விளங்கிச் செயல்பட்டுக் கொண்டிருக்கின்றன என்பது குறித்து அகப்புற விரி என்ற தலைப்போடு விளக்கிக் கூறப்படுவதாம்.

இங்கு, புறம், அகம் யாவையெனில், மனித உடலுக்குப் புறம்பாயிருக்கும் யாவும் புறம் என்றும், தேகத்திற்குள் இருப்பவை அகம் என்றும் கொள்ளப்படுவனவாம். ஆகையால், புற நடு என்பது, வானாதி ஐம்பூதங்களில் நடுவிருக்கும் தீயைச் சுட்டும். இவ்வொளியே சூக்கும கடவுட்ஜோதியைக் கொண்டு விளங்குவது. கடை என்பது ஆன்மாவாம். ஒரு முதல் என்பது ஒப்பற்ற முழுமுதற் பரம்பொருள் ஆம் பரமான்மாவேயாம். அதாவது வான்ஜோதியில் ஒவ்வொரு சிற்றணுவும் ஆன்மாவாய், பரமான்மாவோடு இரண்டறப் புணர்ப்பித்து வைக்கப்பட்டுள்ளதாம். யாதெனில், ஒன்றாம் பரமான்மபதியே, ஒளிமய ஆன்ம சிற்றணுவுடன், ஒன்றாதே யொன்றி எங்கும் எப்பொழுதும் இருந்துகொண்டிருக்கிறபோதிலும், மனிதக் கருப்பிண்ட சிருஷ்டி ஆரம்பத்தில் வெளியாகி விளங்குகின்றதாம்.

இப்படித் தீவண்ண ஜோதி அணுவைக் கடவுளான்ம சொரூபமாய் ஏன் தோற்றுவித்துள்ளார் எனில், மனித மனத்தறிவில், அருள் அறம் அல்லது அருள் விளக்கம் ஏற்பட்டு, அருளின்ப நிறை வாழ்வு உண்டாவதற்கேயாம்.

(2)

515. புறந்தலை நடுவொடு புணர்ப்பித் தொருகடை

516. அறம்பெற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) புறந்தலையாவது புற ஆகாசமே. அகம் தேகத்திற்கு உள்நிலையாம். ஆகவே, புறத்திற்கும் அகத்திற்கும் நடுவாய் இருப்பது இந்த உடலேயாம். இது காயம் என்றால், அகண்டமாய் விரிந்துள்ளது, ஆ-காயம் என்று கூறப்படுதல் பொருத்தமன்றோ. இந்த ஆகாயத்தையும் காயத்தையும் இணைத்துவைத்து இத் தேகத்தின் அகமாகிய கடையில், ஒப்பற்ற உள்ளத்தில் அறம்பெற வகுக்கப்பட்டுள்ளதாம். அருள் ஒழுக்கத்தால் அகத்தே அருள்ஒளி பெறப்படுவதாம்.

நம் வள்ளலார் தம் அக அனுபவத்தில் கிடைக்கப்பெற்ற ஒப்பற்ற அருட்பெருஞ் ஜோதியை விரித்துக் கூறிப் பிறர்க்கு வழங்க முயன்றார். ஆனால், சூழ இருந்தோர் அகத்தே அருட் பக்குவம் அடையாதவர்களா யிருந்தது கண்டு, மக்களிடத்தில் பரிதாபமும் இரக்கமும் கொண்டு, ''கடையை விரித்தோம், கொள் வாரில்லை கட்டிவிட்டோம்,'' என்று அன்று குறிப்பிட்டார். அவரது உள்ளமே உண்மைக் கடை. பிறருடைய அறியாமை யாம் மாயை என்னும் நீலத்தை வாங்குபவராக, ஓர் சமயம் தன்னை ''நீல வியாபாரி'' என்றும் குறிப்பிட்டுள்ளார். இந்த நீலம், இறப்பென்னும் விஷத்தையே சுட்டுவதாகவும் கொள்ள உள்ளதால், மரணத்தையே வாங்கிடும் அல்லது இறப்பையே ஒழித்துவிடும் வணிகனாகத் தன்னைக் கூறிக்கொண்டார் என்றலும் அமைவதாம். அவர் தமது கடையை மூடிவிட்டு எங்கோ சென்றுவிடவே யில்லை. உண்மையில் நம் ஒவ்வொரு வரின் உள்ளத்திலும் அக்கடையை வைத்துக் காத்துக்கொண் டிருக்கிறார்; பக்குவம் எதிர்பார்த்துக்கொண்டும் மறைமுகமாக உதவிக்கொண்டும் இருக்கின்றார். நாம் பக்குவமுற்று உளக்கடைக் குச் சென்றால், அவரது அருட்சரக்கைக் கொடுத்து நம் நீலத்தை வாங்கிவிடத் தான் தயாராக இருக்கின்றார் என்பது உண்மை யாம்.

(3)

517. அகப்புற நடுக்கடை யணைவாற் புறமுதல்

518. அகப்பட வகுத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) புறமுதல், என்பது வெளி ஆகாயமாம். அப்படிப் புறத்தேயுள்ள ஆகாயம் முதலான ஐம்பூதங்களும், நம் பிண்ட வடிவில் அகம், புறம், நடு, கடை ஆகியவற்றில் ஆன்மாகாசத் திலிருந்து விரிந்துள்ளனவாம். அதாவது, ஆன்மாவிலிருந்து, உள்ளம், உயிர், (மனோகரண) உணர்வு, உடல் யாவும் தோற்றிச் சூழ்ந்துள்ளனவாம்.

புறத்துள்ள வானாதி ஐம்பூதமும், மனிதனில் இணைந்து உயிர் உணர்வையும் அறிவனுபவத்தையும் விளைவிக்க உதவு கின்றனவாம். அகப்பட என்றால் கிடைக்க என்று பொருளாம். அகத்திலே அனுபவம் ஏற்பட என்று விரித்துப் பொருள் காண லாகும்.

**(4)**

**519.** அகப்புற நடுமுதல் அணைவாற் புறக்கடை
**520.** அகப்பட வமைத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) இதில் நடுமுதல், அதாவது தேகநிலையை முதலாகக் கொண்டு அகப்புறம் உள்ளும், புறக்கடை வெளியுமாகக் கூடிப் பொருந்தியுள்ளதாம்.

இந்த மனித உடலை, புறத்திருந்தும், அகத்திருந்தும், நெருக் கிப் பக்குவப் படுத்துகிறது திருவருள். முடிவில் திருவருளாலே தேகமே அருள்ஒளி யுருவாகிடச் செய்யவே பல பிறவியும் அணைந்துகொண்டேயுள்ளனவாம். உடல் சுத்தநிலை பெற்று அழி யாதிருக்க இம்மார்க்கம் வழிகாட்டுகின்றது. பழநெறி, உடலை நீக்கிவிட்டுப் பிறவாமலிருக்க வழிகூறுகின்றது:

"ஒளிறேந்து மருப்பு களிறு மாறு பற்றிய
தேய் புரிப் பழங்கயிறு போல
வீவதுகொல் என் வருந்திய உடம்பே."

என்று தேய்புரிப் பழங்கயிற்றினார் கூற்றாக மொழியப்பட் டுள்ளது. முதிர்ந்த தேகம், தேய்ந்துபோன, பலபுரிகளால் திரிக்கப்பட்டுள்ள பழைய கயிறு போன்றிருப்பதாகக் கூறப்படு கின்றது. இப்படியுள்ள உடலாகிய கயிற்றை இருபுறத்தும் இரு கொம்பன் யானைகள் பற்றி இழுத்தால் என்னவாகும்!

விரைவிலே அறுந்துபோகும் என்பது உலகறிந்ததாம். இம்முறை சன்மார்க்கம் அல்ல, கடவுள் திருவுள்ளமுமல்ல. அருட்பெரும் பதியே அகமும் புறமுமிருந்து, விளக்கத்திற்குத் தகுந்த உடலும், உடலுக்கு ஏற்ற விளக்க அனுபவமும் ஏற்று ஏற்று வந்து, நிறை பக்குவம் உண்டாம்போது இடையில் அருள்ஒளி உடம்பும் அகமும்புறமும், ஞானசுத்த தேகமும் சேர்ந்து நித்தியவாழ்வுக்கு வழிசெய்து விடுகின்றனவாம்.

**(5)**

521. கருதக நடுவொடு கடையணைந் தகமுதல்
522. அருளுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** இதிற் கருது அகம், கருதுகின்ற அகம் அதாவது உள்ளம், சுத்தமனமாம். இந்த அகமும், நடுவும் கடையும் முறையே உள்ளம், உயிர், உடல் ஆகிய மூன்றைக் குறிப்பதாம். இம்மூன்றும் ஒன்றுகூடி மனிதவாழ்வில் பெருநலம் விளைந்திட வுள்ளதாம். அதற்காகவே, திருவருள் அகமுதல் வெளிப்பட்டு விளங்கச் செய்யப்படுகின்றதாம். இதுவே, ''அகமுதல் அருளுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி'', என்று போற்றிக்கொள்ளப் பட்டுள்ளதாம். உள்ளத்தில் தோற்றிடும் அருள்ஒளி, உயிரிலும், உடலிலும் சார்ந்து நிறைந்து கொண்டிடவேண்டும் என்பது குறிப்பு.

**(6)**

523. தணியக நடுவொடு தலையணைந் தகக்கடை
524. அணியுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** தணிஅகம் என்றது, தயவினால் பக்குவப்பட்ட உள்ள நிலையாம். இவ்வுள்ளத்திற்கும் உடலுக்கும் நடுவுள்ளது உயிர் உணர்வு. அவ்வுயிருணர்வு ஒருமையினால் தலையிடத்தைச்சார்ந்து அகக்கடையாகிய ஆன்மாவின்கண், இன்பானுபவம் உண் டாகவே இப்படி வகுத்து வழங்கப்பட்டுள்ளனவாம்.

## (7)

525. அகநடு புறக்கடை யணைந்தகப் புறமுதல்
526. அகமுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) அகநடு-உயிர்நிலையாம். புறக்கடை வான்பூத நிலை யாகும். புறமுதல் இங்கு உடலாயுள்ளது. உயிருணர்வானது சத்விசாரத்தால் புறக்கடையாகிய வான்பூதநிலையை அடை கின்றது. பின்னர் உடலை முதலாகக் கொண்டு அகம் உற ஆன்மானுபவ நிலை அடையவே வழிசெய்துள்ளார் நம் பதி. இந்தப் புறமுதல் என்றது தேகமாம். இது அக அனுபவத்தில் புறப்புறமாக விளங்குவதும் இதற்குள்ளீடான மற்ற முந்நிலைகள், புறம், அகப்புறம், அகம் ஆம். முடிந்த ஆன்மானுபவமே குறிக் கோளாயிருக்கின்றதாம்.

## (8)

527. அகநடு புறந்தலை யணைந்தகப் புறங்கடை
528. அகலிடை வகுத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) உயிர்ச்சக்தியானது உள்ளத்திற்கும் உடலுக்கும் நடு உள்ளதாம். இந்த உயிர்ச்சக்தி இவ்வுடலின் தலைப்பகுதி யைச் சார்ந்துநின்று, புறங்கடை யாகிய வான்நிலையை அகலிடை யான பெருவெளியில் விளங்கக் காண்கின்றது. இத்தேக பிண்டத்தில், அகம் ஆன்மா, உயிர் அகப்புறம், கரணம் புறம், இந்திரியம் புறப்புறமாம். புறத்திருந்து விசாரவசத்தராய்ப் புறந்தலையைச் சார்ந்துகொள்ளவேண்டும். அப்படியிருந்து கொண்டு, அகமிருந்தே அனகமாக விரிந்து பிண்ட அகநிலை யிலிருந்து புறஅண்டக் கடைநிலை வரை மெய்யனுபவம் பெற யாவும் வகுக்கப்பட்டுள்ளன.

## (9)

529. அகநடு வதனா லகப்புற நடுவை
530. அகமற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) ஆன்மாவே அகம் எனப்படுவது. அவ்வான்மாவின் நடுவிலிருந்து வெளியாகின்ற உயிர்ச்சக்தியே அகப்புறமாம்.

அவ்வுயிரிலிருந்து அல்லது உயிர் நடுவிலிருந்து எழுவதுதான் மனோகரணம். இதில்தான் நான் என்ற தற்போத உணர்வாகிய ''நான்'' என்பது இருக்கின்றது. இந்த அகமாகிய தற்போத உணர்ச்சி பல பிறவிகளிலும் தொடர்ந்து வந்துகொண்டே இருத்தலின், இலேசிலே ஒழிவதில்லை. ஆதலால் ஒவ்வொரு பிறப்பிலும் பலபல சுகதுக்க அனுபவம் ஏற்பட்டு ஏற்பட்டுத் தெளிவுண்டாகி முடிவில், அருள்நாட்டம் அடைந்து, தான் அருள் ஒளிப் பதி வண்ணமாய் இருப்பதை யுணரும் ஒருவன், தேகம் தான் என்றிருந்தமை அகற்றிவிடுகின்றான். இதுதான் அகங்கார ஒழிவாகும். இதனையே இங்கு அகம் அற என்று குறிக்கப்பட்டுள்ளதாம். கடவுள் உயிர்களின் அகப்புற ஆற்றல்களைப் படைத்து வாழ்வில் செலுத்திவருவது இந்த அருட்பக்குவம் அடைவித்தற்கே என்பது கருத்து.

## (10)

531. அகப்புற நடுவா லணிபுற நடுவை
532. அகப்பட வமைத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) அகப்புறமாவது உயிர். இந்த உயிரின் நடுவிலிருந்து புறநடு, அதாவது கரண நடுவை பக்குவப்படுத்தவே இவண் வருவித்துள்ளார் நம் பதி. புற என்றது மனம்: அதுதான் மனிதனைக் கடவுள் அனுபவத்திற் கொண்டுசேர்ப்பது. மனமே கடவுள் அருளின் கூறுதான். உண்மைக்கு அடுத்துள்ள குறிப்பை யுணர்த்தவே அணி என்னும் அடை புறம் என்பதுடன் வந்துள்ளதாகும். இங்கேயும் மனோபோத நாசம் குறித்து அகப்பட என்ற சொல்லை வழங்கியுள்ளார். அகமற என்றதைப் போன்று அகம்பட என்றால் அகங்காரம் ஒழிய என்றும் கொள்ளலாம். அல்லது நேரடியாக, மனோகரணத்தில் அருள்அனுபவம் அகத்திருந்து உண்டாக அமைக்கப்பட்டுள்ளதாய்க் கொள்ளலாம்.

## (11)

533. புறநடு வதனாற் புறப்புற நடுவை
534. அறமுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) உலகவெளியில் புறநடு என்பது அண்டத்தில் சந்திரனாகவும், பிண்ட தேகத்தில் மனோகரணமாகவும் உள்ள தாம். சந்திரனின் இயல்செயல்களை யோர்ந்து புறப்புறமாகிய ஐம்பொறியுடம்பில், புறவாழ்வில் ஏற்படும் நன்மை தீமைகளை அறிந்து கொள்ளக்கூடும். இது சோதிட முறையால் காணும் வழியன்று. அகத்தேயுள்ள அருட்ஜோதியைத் திடமாகக் கண்டுகொண்டு வாழ்வில் அறமுற இன்பம்பெற விளங்கும் வழி யாகும். சுத்த சன்மார்க்கர் அருள்நாட்டம் உடையவர்கள், ஆகையால் புறக்கலைக் கொள்கைகளில் நாட்டம் கொள்ளார்.

## (12)

535. புகலரு மகண்ட பூரண நடுவால்
536. அகநடு வகுத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) அகண்ட பூரணம், கடவுளின் நிறைபெரு வடிவ மாகும். புகலரும் அகண்டம் என்று கூறப்படுவதின் கருத்தை நாம் முன்பே ஓர்ந்து கொண்டுள்ளோம். ஆனால் அந்த அகண் டத்தின் நடுவைப்பற்றி அறிதல் எளிதல்ல, அகண்டாண்டம் ஒரு நடுவைக் கொண்டிருக்கவேண்டும் என்பது எப்படி எனில், சிற்பிரபஞ்சம் ஞாயிற்றை நடுவாகக்கொண்டு விளங்குவதும், அண்டம்முதல் அணுவரை யாவற்றிற்கும் ஓர் ஒரு மையம் இருப் பது போல் அகண்டவெளிக்கும் ஒரு நடு இருக்கவேண்டுவது அவசியமாம். இதனையே "மகாமேரு" என்று உண்ணின்று கண்டோர் உரைக்கின்றனர். மகாமேருவைச் சூரியன் வலம் வருகின்றதாகக் கூறியுள்ளது இந்த உண்மை கொண்டதேயாம்.

புறநடு மேருவைப் புனைந்துருவாக்கிக் கொண்டது, அகநடு வாகிய ஆன்மாவின் அகத்தேயுள்ள அருள்ஒளிக் கடவுளைக் குறிப்பதாக உணர்வோம். அகண்டமான எல்லாம்வல்ல பரம் பொருளின் அனுபவத்தை நமது அகநடுவே கண்டு அனுபவத்தில் பெறவே இப்படி யாவையும் வகுத்துத் தொகுத்து வைத் துள்ளார் நம்பதி.

## (13)

537. புறப்புறக் கடைமுதற் புணர்ப்பாற் புறப்புற
538. அறக்கணம் வகுத்த அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** நட்சத்திரங்களின் சக்தி அவற்றின் ஒளிவழி படர்ந்து, இவ்வுலகின் மீது பரவி, நமது தேகேந்திரியங்களை உருப்படுத்த உதவுகின்றதாம். எனவே, அவ்வண்ட ஒளியின் ஆற்றலால் நம் பிண்ட வடிவங்கள் விளங்குகின்றன என்பதும் உண்மையே. அண்டஜோதி சக்தியின் முடிநிலையாகப் பழுத் துள்ளவை இப்பிண்ட இந்திரியங்கள். ஆதலின், முன்னதன் கடைநிலையே பின்னதன் முதல்நிலையாக மொழியப்படுகின்ற தாம்.

அண்டனாகிய கடவுள் உண்மையைப் பிண்டனாகிய மனிதன் கண்டடைவோனாய்த் திருவருளே யாவையும் அகமுதல் புறப்புற மீறாக அமைத்து வைத்திருக்கின்றதாம். ஆகையால், எப் பொருளும், உயிர்களும், கடவுளரின் அறக்கணமாக, அருட்சக்தித் தோற்றத்தின் தொகுதிகளாக அமைக்கப்பட்டுள்ளதாம். இவற் றால் ஆன்மபரிபாகம் அடைந்து அருட்பேரின்பநிலை எய்துகின்றது உண்மையாகும்.

## *(14)*

**539. புறத்தியல் கடைமுதற் புணர்ப்பாற் புறத்துறும்**
**540. அறக்கணம் வகுத்த அருட்பெருஞ் ஜோதி**

**(உ-வி)** புறப்பிரபஞ்சத்தில், மண்கூறுதான் முதலிடம் பெற்றுள்ளது. அம்மண்ணோடு சேர்ந்து கலந்து உருவாகிய வடிவங்களே உலகெங்கும் சூழ்ந்துள்ளனவாம். இந்த வடிவங்கள் வெற்று பூதப்பொருள்களால் ஆனவையல்ல. பூதப்பொருள்கள் இரசாயன மாற்றத்தாலும் இயற்கைச் செயல்களாலும் எண் ணற்ற வேற்றுப்பொருட்களாய், உயிரின வடிவங்களாய், ஆற்றல் களாய்த் தோற்றிச் சூழ்ந்துள்ளன. இவற்றையே இங்கு அறக்க ணம் என்றுள்ளார். அருளனுபவம் உண்டாக இவை புறத்துணை யாய் உள்ளனவாம்.

## *(15)*

**541. அகப்புறக் கடைமுதல் அணைவா லக்கணம்**
**542. அகத்துற வகுத்த அருட்பெருஞ் ஜோதி**

**(உ-வி)** அகப்புறமாகிய சூரியன் ஈன்ற சக்தியை முதலாகக் கொண்டு தோன்றியது மனிதனின் உயிராகிய பிண்ட ஜீவ சக்தி. புறவெளியில் மின்மயமாய் இருந்து கொண்டுள்ள சிற்றொளி அணு, மனிதக் கருவிலே வெளிப்பட்டுப் பிண்டமாய் வளர்கின்றதாம். இக்கருப் பிண்டத்தில் அச்சூரிய ஜோதி அணுவுயிர் தொடக்க முதல் இருந்து வளர உதவினாலும், கருப் பிண்டத்தின் ஆறுமாத வளர்ச்சிக்குப்பின்தான் உயிரியக்கமாக விளங்குவதாம். அதுவும் அச்சிசுவுக்குத் தனியுயிர் வாழ்வு தாயின் கருப்பை விட்டு நீங்கி, உந்திக்கொடி துண்டிக்கப்பட்ட பின்னேதான் தொடங்குகின்றதாம். அவ்வுயிர்க்கு முடிந்த அருளனுபவம் ஏற்படும் வகையில் யாவையும் முன்கூட்டி அக நிலையிலேயே அமைத்துள்ளார் நம் பதி.

### *(16)*

**543.** அகக்கடை முதற்புணர்ப் பதனா லகக்கணம்
**544.** அகத்திடை வகுத்த அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** இதில், அகத்திடை, அகக்கடை, அகக்கணம் என்று மூன்றைக் குறித்துள்ளார். முதலாவதான அகத்திடை என்பது, ஆன்ம அணுவில் என்று பொருளாம். அகக்கடை என்பது புற வுடல் வடிவம் (ஆன்மாவின் கடைநிலைத் தோற்றம் இத்தேகம் என்பது குறிப்பு) அகக்கணம் என்பது ஆன்மசக்திக் கூட்டங் களாம். அதாவது, இம்மனித தேகத்தில், ஆன்மாவின்கண் பல வாகிய ஆன்மசக்திக் கூட்டத்தை அடக்கிவைத்துள்ளார் நம் பதி. இத்தேக வாழ்வில் அகமுதலான நிலையில் பல சக்திகள் வெளி யாகி உண்மை அனுபவம் உண்டாகத் திருவருள் கூட்டிவைத் துள்ளது இங்கு அறிகின்றோம்.

இங்கு குறிக்கப்பட்ட அகப்புற விரிவால், பிண்ட அண்ட தோற்றமும், செயலும், அறிவும் விளக்கமும், பக்குவமும் ஏற்பட்டு அருட்ஜோதி அனுபவம் தழைப்பதாம்.

## 185. ஐம்பூதக் கலப்பின் விரி

### *(1)*

**545.** வானிடைக் காற்றுங் காற்றிடை நெருப்பும்
**546.** ஆனற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** ஆன் அற, ஆன்ம உண்மையை நன்றாகத் தெரிந்து தெளிந்து அனுபவத்திற் கொள்ளும்படியாக, நம் தேகாதி பிரபஞ்சம் யாவும் வகுத்தளிக்கப்பட்டுள்ளனவாம். பிரபஞ்சம் ஆகிய திருவோங்கு ஐந்தாகிய பூதங்களின் கலப்பு உண்டான விதம் இவ்வண்ணம் என்பதைப்பற்றி விரித்துக் கூறப்படுகின்றது இத் தலைப்பின்கீழ்.

அகண்ட வெளிநிறை வானில் வாயுசக்தி பிரிவறக் கலந்து நின்று இயக்கலால் காற்று அடிக்கின்றது. அக்காற்றின் வேகத்தால் தீ தோன்றி வெளியெல்லாம் காலங்கி மயமாகத் திகழ்கின்றதாம்.

''நிரவி யழலுருவாய் நீண்டவெளி காணில்
அரவணையா னாகும் உடம்பு'' — ஔவை குறள்

ஒருவன் தேகத்தினிடத்தும், தேகபோகப் பொருள்களினிடத்தும், புலனின்ப உணர்விலும் பற்று கொண்டிருந்தால், கடவுளான்ம அனுபவத்தைச் சிறிதும் பெற முடியாது. ஆகையால், அந்தப் பற்று முற்றும் அற்று, உள்ளொளியில் நாட்டம்வைத்து உளநெகிழ் அன்போடு ஊன்றிநின்றால், பரநாத நிலையதன் மேற்சென்று பெருஞ்ஜோதிக் காட்சியைக் காண்பான். இதுதான், அழல்உருவாய் நீண்ட வெளிக் காட்சியாகக் கண்டு கொள்ளக்கூடும். அவ்வொளியைக் கண்டு அதன்மயமாய் இருக்கும் ஒருவன் அரவணையானாகிய, பாப்பணையிற் பள்ளி கொண்ட பரந்தாமனாய்த் திகழ்கின்றானாம். வெளிநிறையொளியே திருமால் எனவும், அவ்வொளி வான்கலந்த காற்றே பாம்பாகவும், அக்காற்றின் பத்தியல் விளக்கமே, அதுதாங்கும் திருமாற் ஜோதிக்குரிய தச அவதாரம் எனவும் புனைந்து கூறியுள்ளனர். இதனால், ஒருவன் அக அனுபவ நிலையுற்றால், விஷ்ணுவின் இயல்புகொண்டு திகழ்வான் எனப்படுகின்றது. அம் மால் உண்மையில் நம் கடவுளான்ம ஜோதி நிலையே ஆம். அதனால், வானும், காற்றும், தீயும், சுத்த பிரணவ ஞான தேகமாய்ச் சுத்த சன்மார்க்க அனுபவத்தில் விளங்கும்.

**(2)**

547. நெருப்பிடை நீரும் நீரிடைப் புவியும்
548. அருப்பிட வகுத்த அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** முன்னடிகளில், வானின்று வளியும், வளிநின்று தீயும் தோன்றி, வெளிநிறை ஜோதியாய்க் கலந்திலங்கும் காட்சி யாய் விளங்கிடக் காண்பதைக் குறித்துள்ளார். அடுத்து, அத்தீயினின்று நீரும், நீர்நின்று மண்ணும் உருவாகித் திகழ் கின்றதைக் குறிக்கின்றார்.

இடை என்ற சொல்லுக்குக் கண்ணின்று அல்லது இடத்தி லிருந்து என்ற பொருள் கொள்ள வேண்டும். அருப்பிட என்பது, அரும்பிட என்ற சொல்லின் வலித்தல் விகாரநிலை, எதுகைக் காரணமாக இப்படி நெருப்பிடை, அருப்பிட என வந்தனவாம். மேற்படி பூதத் தோற்றங்கள், அணுக்களாக இருந்து, சிறிது சிறிதாக ஒன்று கூடித் திரண்டு, உருப்பெறுவ தால் அரும்புவதாக மொழியப்பட்டது. அருட்பெருஞ்ஜோதி மலர், பூதாணுக்களுக்குள்ளிருந்து, உயிருடம்புள் அரும்பி, அருளனுபவத்தில் மலர்கின்றதாகும்.

*(3)*

**549. நீர்மேல் நெருப்பும் நெருப்பின்மேல் உயிர்ப்பும்**
**550. ஆர்வுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி**

**(உ-வி)** காற்று, தீ, நீர், என்ற முறையில் தோற்றி விரிவது புற அண்ட உலக அமைப்பாம். இவை ஒன்றிலொன்று ஒடுங்கும் போது, நீர், தீ, காற்று எனக் கலந்து ஒன்றுவதாம். பிண்ட வடிவப் படைப்பில் இந்த நீரும் நெருப்பும் உயிர்ப்பும் முறையே சுக்கில சுரோணித நிலை நீராகவும், இவற்றின் கலப்பால் தோன்றிய முதல் ஒளிஅணு நெருப்பின் நிலையாகவும், அவ் வொளியிலிருந்து பிண்டோற்பத்தியானதும், உள்ளிருந்து உயிர்ப்புச்சக்தி தோன்றுவதும் அதுவே உடல்வாழ்வில் ஜீவக் காற்றாகத் திகழுநிலையுமாம். இதுதான் நீர்மேல் நெருப்பும், நெருப்பின்மேல் உயிர்ப்பும் எனக்குறிக்கப்பட்டுள்ளதாம். இப்படி அமைத்துள்ளதின் இரகசியம் என்னவெனில், ஆர்வுற அதாவது நிறை இன்பானுபவம் உண்டாவதற்கேயாம். திருவருள் நிறை வால், பெறப்படும் இறைநிலை அனுப்வத்தில் மேற்படி, நீரும், நெருப்பும், காற்றும், போகாப்புனல், சாகாத்தலை, வேகாக்கால் ஆகத்தோற்றி முடிவில், சுத்த, ஞான, பிரணவ, தேகசித்திப் பேரின்ப வாழ்வை வழங்கி நிற்பதாம்.

## (4)

551. புனன்மேற் புவியும் புவிமேற் புடைப்பும்
552. அனன்மேல் வகுத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) உலகப் படைப்பில் இம் மண்ணான நிலப்பகுதித் தோற்றம் நீரிலிருந்து உயர்ந்து அந்நீர் மட்டத்திற்குமேல் விளங்குகின்றதாம். பூமி கோளம், தீக்குழம்பாயிருந்து ஆறிஆறி, மேனிலை நீராக மாறிச் சுழன்று கொண்டிருந்தபோது, பூமத்திய கோட்டுப் பகுதியில் அதிக வேகமும், துருவப் பகுதிகளில் சுழற்சி வேகம் மிகமிகக் குறைந்தும் இருந்தன. ஆகையால், நில நடுக்கோட்டுப் பகுதியில் முதலில் நிலப்பரப்பு எழுந்து தோன்றியதாம். நிலநடுச் சூட்டு நிலையால் உருக்கு நிலையிலிருந்த உலோகக் குழம்புகள் மேலே உந்தப்பட்டு, நிலமட்டத்திற்கு மேல் எறியப்பட்டுப் படிந்து கற்பாறைகளாகவும் மண்மலைகளாகவும் இறுகிப்போயின. பின்னர் அம்மண் பண்பட்டபோது அதிலிருந்து எல்லா உயிர்ப்பொருள்களின் படைப்பும் தோன்றினவாம். ஆகவே, நம் நடுக்கோட்டுப் (Equator) பகுதியில்தான் புனல்மேல் புவியும், புவிமேற் படைப்பும் முதல் முதலில் உண்டாயினவாய் அறியலாகும். எவ்வளவோ காலத்திற்குப் பின்னரே இக்கோளத்தின் பிற பகுதிகளில் நீர்மேல் நிலமும், நிலமேல் படைப்புகளும் தோற்றமுடிந்தனவாம். மேலும் ஆதி மக்களினமே நம் பகுதியிலேதான் தோன்றிப் பின்பு எங்கும் வசதிகள் தேடிச் சென்று குடியேறி அங்கங்கு பல ஆயிரம் ஆண்டுகள் வாழ்ந்து பழக்கப்பட்டுத் தோற்றம், பழக்க வழக்கம் எல்லாவற்றிலும் மாறுபட்ட மக்கட் பிரிவினராய் விளங்கலாயினர் என்பது உண்மையாம்.

இந்த நீரும் நிலனும், உயிர்ப்பொருட் படைப்புகளும் எதிலிருந்து தோற்றுவிக்கப்பட்டனவென்றால், நெருப்பிலிருந்தேயாம். இதுதான் அனன்மேல் என்றுள்ளார். அனற்குழம்பாய் இருந்த இவ்வுலக கோளம்தான் பக்குவமுற்று மேற்படி நீரும், நிலமும் உயிர்ப்பொருள்களும் தோன்றக் காரணமாகியுள்ளன என்பது உண்மையே ஆம்.

மற்றொரு விளக்கம்: அனல், அகமாகிய ஆன்மஜோதியாம். இந்த ஆன்மாவின் கண்ணின்றே, உயிரும், உடலும், மேற்செயல்களும் தோன்றியுள்ளனவாம். ஆன்ம உண்மை கண்டு அனக

வாழ்வு கொண்டு விளங்கவே இவ்வளவும் செய்யப்பட்டுள்ளன வாம்.

## (5)

553. பகுதிவான் வெளியிற் படர்ந்த மாபூத
554. வகல்வெளி வகுத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) நாம் காண்கின்ற அகன்ற வான்வெளித் தோற்றம் ஓர் எல்லையில் அடங்கியுள்ளதே போன்றுதான் தோன்றுகிறது. உண்மையில் நமக்குப் புலனாகிக்கொண்டுள்ளது மிகச் சிறிய பகுதி வான்வெளியே யாகும். இந்தப் பகுதி வெளியிலே தோற்றிப் படர்ந்துள்ள ஐம்பூதங்களும் நமது பிரபஞ்சத்தில் நாமே நம் நிலவுலகே நடுவிருப்பதாகவும், மற்ற ஞாயிறும் கோட் களும், நாட்களும் நம்மைச் சூழ்ந்துள்ள வானில் சுற்றிக்கொண் டிருப்பனவாயும் தோற்றுகின்றன. உண்மையில் நம் பகுதிப் பிரபஞ்சத்திற்கு ஞாயிறே நடுநாயகமாயுள்ளது. இதன் ஒளியும் ஆக்கமும் கொண்டு விளங்கும் பூமியும் பிற கோட்களும் சூரிய னைச் சுற்றியே வந்துகொண்டிருக்கின்றனவாம். நிலவுலகிலிருந்து வானைப்பார்க்கும் நமக்கு, ஞாயிறும், திங்களும், செவ்வாயும், புதனும், வியாழனும், வெள்ளியும், சனியும் வானவிதானத்தில் குறிப்பிட்ட இராசிகளில் இருப்பனவாய்த் தோற்றுகின்றன. வானின்று ஒத்த மண்ணாதி ஐம்பூதங்களும் நம்பகுதி வான்வெளி யில், புதன, வெள்ளி, செவ்வாய், வியாழன், சனி, (பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம்) என்னும் வரிசையிலுள்ளனவாம். இவ்வரிசைமுறையில்தான் சூரியன் உள்ள சிங்கராசி முதல், கன்னி துலாம், விருச்சிகம், தனுசு, மகரம் வரையும் வலமாக அமைந்தும், சந்திரன் இருக்கும் கடகம் முதல், மிதுனம், ரிஷபம், மேஷம், மீனம், கும்பம், வரையும் இடமாக அமைந்தும் ஐங்கோட்களின் ஆட்சி நடக்கின்றதாம். இந்த அகண்டாண்ட நிலையிற்போன்றே நம் பிண்ட தேகத்திலுமச் மண்முதலாம் ஐங்கோட்குரிய பகுதிகள் ''நமசிவய'' என்னும் தூலபஞ்சாக்கர வடிவிற் பொருந்தியுள்ளன வாம். இவ்வுடல் நடுவாம் சிகரஜோதிநிலை இதயத்திருந்து, தலைநடுவுற்று சிவானுபவசித்தி பெற்றிருத்தல் முன்னோர் குறிக் கோள். இப்போது நம் வழியில், நாம் கடவுட்ஜோதியாகவே உள்ளிருந்து விளங்குவதாய் அறிகின்றோம். அறிந்து அக மிருந்தே அனகமாக வாழ்வதுதான் உய்யுநெறியாம். அகல்

வெளி எங்கும் நிரம்பியுள்ள பெரும்பூதப் பொருட்களால் உண்டான ஐம்பூதக்கோட்கள் ஆகி, இவ்வுலகில் தோற்றுகின்ற மக்கள் வடிவிலும் அவ்வைம்பூதத் தத்துவமும் நிரம்பியுள்ளன. இவ் அண்ட பிண்ட இரகசியங்களை யோர்ந்து சோதிடப்பலன் காண்பதற்கன்று இவை; இவற்றைக்கொண்டு அகத்தே அருட் ஜோதியைக் கண்டு அழியாவாழ்வுப் பெரும்பயன் பெறற்குத் தான் ஆண்டவர் யாவையும் இசைத்துள்ளார் என்பது உண்மை.

## 186. வெளிவகை விரி

### (1)

555. உயிர்வெளி யிடையே உரைக்கரும் பகுதி
556. அயவெளி வகுத்த அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** வெளி என்பது வெற்றிடம் (Empty or Vacuum Space) என்பர். பிரபஞ்சப் பெருவெளி அகண்டமானதாம். இதில் நாம் காண்கின்றது ஒரு மிகச் சிறிய பகுதிப் பிரபஞ்சமேயாம். இதுபோல் எண்ணடங்காப் பகுதிகள் கொண்டது அகண்ட பெருவெளியாம். ஆனால் இந்தப் பெருவெளியும் இதன் கூறுகளும் வெற்றிடமன்று, பலப் பலவகையான அண்ட கோளங்கள், ஆற்றல் சக்திகள், பொருள்கள், உயிரினங்கள் எவ்வளவோ நிரம்பியிருக்கின்றனவாம். இவற்றின் வடிவமைப்பிலும், அகத்திலும், புறத்திலும் எங்கும் இடையீடின்றி நிரம்பியுள்ளது ஆகாசமேயாம். இவ்வாகாசவெளியில் பூர்ண நிறைவோடும் ஆற்றலோடும் விளங்கிக்கொண்டிருப்பது இறையொளியாம் அருட்ஜோதியே: இவ்வுண்மை கண்டு அடையவே வகுக்கப்பட்டுள்ளனவாம். சூனிய வெளியாய்த் தோற்றும் இடத்தும் எல்லாம்வல்ல அருட்ஜோதி நிரம்பியுள்ளதாம்.

பிண்ட தேக வடிவில், நிரம்பியுள்ள வான்கூறு, இந்திரிய ஆகாசம், கரணாகாசம், ஜீவாகாசம், ஆன்மாகாசமாம். இவ்வெளி நிலைகளில் பலவகையான சக்திகள் தோன்றிக் காரியப்படுகின்றன. அப்படியுள்ள வெளிவகைகளை விரித்து உரைப்பது இப் பிரிவு.

ஜீவ ஆன்மவெளியில் முக்கியமான ஆற்றல் உயிர்சக்தியாம். இவ்வெளிப் பகுதியிலிருந்து உயிர் ஆற்றல் விரிந்து செயல்படும் போதுதான் ஜீவதேகம் உருவாகி வளரத் தொடங்குகின்றதாம். அவ்வுயிர்ச்சக்தி உள்ளடங்கும்போது உடற்பிரிவு ஏற்படும். இந்த ஜீவாகாச வெளியில் உயிர்ச்சக்தியின் தோற்றமும் மறைவும், ஏன், எப்படி ஏற்படுகின்றது என்பது மன வாக்குக்கு எட்டாத இரகசியமாம். அயவெளி என்பது உயிர்சக்தி நிலை, வாசி அல்லது பிராணநிலையாம். ஜீவான்மாவில் மறைந்து கிடக்கும் உயிர்நிலை அறிவரிதாம். ஆம், அறிவரிய இதனை அருள்வெளி (ஆன்மாவுக்கு அகமானது) உறுவோர் அனுபவத்தில் கண்டு கொள்ளுவர்.

## (2)

**557. உயிர்வெளி யதனை யுணர்கலை வெளியில்**

**558. அயலற வகுத்த அருட்பெருஞ் ஜோதி**

(உ-வி) உயிர்ச்சக்தி நிலையைத்தான் உயிர்வெளி அல்லது ஜீவவெளி என்கின்றோம். இவ்வுயிர்ச்சக்தி நிலையை எதனால் தெரிந்து கொள்ளுகின்றோம் என்றால், சுவாசக் காற்றியக்கத்தால், இட பிங்கலை மூச்சுக்காற்றால் அறிகின்றோம். இந்த மூச்சு சுவாசம், வாசி என்பதும் உயிர்ச்சக்தி என்பதும், ஜீவ வெளியில் ஒன்றாக வேறு பிரித்து அறிய முடியாதபடி இருக்கின்றதாம். உயிர் உணர்வோடு மன உணர்வும் ஒன்றியுள்ளதால் மனம் காற்றின் கூறாகக் கூறப்படும். இதனால் மனோ சலனமற்று விளங்குமிடத்து அதற்கு வேறாயில்லாத உயிர்ப்புக் காற்றும் அடங்கிநின்று கலையறிவை வளர்க்கின்றது. இக்கலை வெளிக்கு அப்பால் சென்றால்தான் அருள்வெளி யனுபவம் கைகூடும். அருட்பெருஞ்ஜோதி விளங்கும்.

## (3)

**559. கலைவெளி யதனைக் கலப்பறு சுத்த**

**560. அலர்வெளி வகுத்த அருட்பெருஞ் ஜோதி**

**(உ-வி)** சுத்த ஞானமாகிய தயவு அல்லது அருள் விளங்குவது, கலையறிவு கலவாத ஒரு நிலையாகும். கலைவெளியில் அருள் வெளி ஒருபோதும் கலவாது. ஆனால் அந்த அருள்வெளியிலோ, எல்லாம் ஆனவராயும், எல்லாம் வல்லவராயும் திகழும் நமது அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் விளங்கிக் கொண்டிருத்தலால், அவரது சந்நிதியில் சகல கலைகளும் தோன்றாது தோன்றி அனுபவம் வழங்குதல் சாத்தியமாம். சுத்த அலர்வெளியாவது, மனத்தின் நினைப்பு மறப்பு நீங்கி சுத்த அருள்உணர்வு மயமாகி விரிந்து விளங்கும் நிலையாம்.

## *(4)*

**561.** சுத்தநல் வெளியைத் துரிசறு பரவெளி

**562.** அத்திடை வகுத்த அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** பரவெளியாவது, மேலான சத்விசார உண்மை விளங்கும் உயர்நிலையாகும். இப்பரவெளிதானே மனோகரண வெளியின் அவாமுதலான மாசறுப்பதாம். அபரமாகிய இகலோக விசாரத்தில் அழுந்திக் கிடக்கும் சாதாரண மனிதமனம் தான் மாசுடைய அசுத்தவெளி கொண்டதாம். பரலோக விசாரத்தில் ஓங்கும் மனம், நல்ல, சுத்த அன்புணர்வு கொண்டதாம். இச்சுத்த மனவெளியில் துரிசாகிய மலம் இல்லையாம். அத்து, என்பது எல்லையாம். அதாவது மனம் சுத்தமுற்றால் பரவெளி எல்லையில் நின்று அறிவரும் பொருளை அருளால் உணர வல்லதாகின்றதாம்.

## *(5)*

**563.** பரவெளி யதனைப் பரம்பர வெளியில்

**564.** அரசுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** விசார உண்மை விளங்கும் அப்பரவெளி நிலையைத் தனது, வெளிப்பட்டிலங்கும் இடமாக ஆக்கிக்கொண்டுள்ளார் நம் பரமர். பரவெளியிலிருக்கும் இப்பரமர், பரம்பர வண்ணர் ஆவர். இவரது உருவம் அப்பரம்பர வெளியாகவே உள்ளதால், இதிலிருந்துதான் நமது ஜீவ தேகாதி பிரபஞ்சத்தை யெல்லாம்

ஆள்கின்றார்: சத் விசாரத்தில் விளங்கும் அருள் வண்ணக் கடவுள் உண்மையே அருட்பெருஞ்ஜோதி சொரூபமாக, பரம்பர வெளிநிறை யொளியாகத் திகழக் கண்டு கொள்ளுவோம்.

## (6)

**565. பரம்பர வெளியைப் பராபர வெளியில்**
**566. அரந்தெற வகுத்த அருட்பெருஞ் ஜோதி**

**(உ-வி)** கடவுள் வெளியாகிய பரம்பரநிலையே, இரு கூறாகிப், பரம், அபரம், என இரண்டு நிலைகளாய்ப் பிரிந்து பராபர வெளியென விளங்குவதாம். இந்தப் பிரிவு சொல்லள வில்தானே யொழிய இரண்டுபடக் காண்டற்கில்லையாம். அவ் விரு நிலையும் ஒருபடித்தாய் விளங்குவதை ஊன்றிக் கவனித்தால் காணலாம். அருள் ஒளியில், அருளும் ஒளியும் இரண்டாகச் சொல்லளவில் தோன்றினாலும், அது, குண குணியாக உள்ள ஒன்றே யாம். அருள்-குணம், ஒளி-அருட்குணத்தையுடையது-குணி எனப்படுவதாம். பரம் - அருள் ஆக உள்ளிருந்து விளங்க. அபரம் ஒளியாகப் புறத்திருந்து இலங்குவது. அகமும் புறமும் நீக்கமற நிரம்பிய கடவுள்தான் இன்று, பராபர வெளியில் அருளாயும் ஒளியாயும் விளங்கிக்கொண்டுள்ளார். இவ்வருள் ஒளியின் பராபர உண்மையை நம் மெய்யுணர்விலே வெளிப் படுத்தி விளங்கச் செய்து கொண்டுள்ளார். இச்செயலே அரம் தெற எனப்பட்டுள்ளது. அராவுதல் அல்லது உராய்தல் அக வுணர்வில் தொட்டுக்காட்டுதல் ஆம். தெறல் ஒளியுற விளங்கச் செய்தலாம். ஆகவே, அரம்தெற என்றது நம் மெய்யுணர்வில் ஒளிவிளங்கச் செய்தல் என்பது கருத்து.

## (7)

**567. பராபர வெளியைப் பகர்பெரு வெளியில்**
**568. அராவற வகுத்த அருட்பெருஞ் ஜோதி**

**(உ-வி)** ஆன்மாக்களின் அகத்தே பரவெளியாம் நிலையும், புறத்தே அபர வெளியாம் நிலையும் பொருந்தி ஒவ்வொரு பிறவி யிலும், உள்ளுணர்வு பெருக, புற வடிவு வளர உதவிக்கொண் டிருக்கின்றதாம் அப்பராபர வஸ்து. இதைப்போன்றுதான்,

அகண்டாகாரப் பெருவெளியில் அண்டகோடிகளையும் ஒன்றோ டொன்று அராவற முட்டி மோதிக் கொள்ளா வண்ணம் வேகத் தோடு இயக்கிவருதல் திருவருளின் பெருஞ்செயலேயாம். இப் பெருவெளி நிகழ் பெருஞ்செயலும்கூட, ஆன்மபரிபாகம் உண் டாக்கும் அருஞ்செயலே என அருளால் அறிந்து கொள்ளு கின்றோம்.

## (8)

569. பெருவெளி யதனைப் பெருஞ்சுக வெளியில்
570. அருளுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) மா பிரபஞ்சவெளி மிகப்பெரிது. அதில் அடங்கி யுள்ள அண்டகோடிகள் எண்ணில் அடங்காதனவாம். ஆகை யால், இந்தப் பேருலகின் முழுமையான தோற்றத்தைக் கருவி கரணங்களால் எவ்வளவு முயன்றாலும் காணவும் கருதவும் முடி யாதாம். திருவருள் ஒன்றாலே இந்தப் பெருவெளி நிறை பொருளை அனுபவத்தால் உணர்ந்துகொள்ள முடிகின்றதாம். அது எப்படியெனில், அந்த அகண்ட பிரபஞ்சம் முழுவதையும தன் அருளால் நமது ஆன்ம சிற்றணுவில் அடக்கிவைத்துள்ளார் நம் பதி. ஆகையால், இந்த ஆன்மாவில் நிரம்பியுள்ள அருளாகிய பெருவெளியில், அந்தப் புறப் பிரபஞ்ச உண்மையெல்லாம் அருளாலே அனுபவபூர்வமாக அறிந்துகொள்ளக்கூடிய தாயிருக் கின்றதாம். இவ்வருள் வெளியில் பெறும் அனுபவம் பெருஞ்சுக வாழ்வாக விளங்குவதாகும். ஆகையால், இந்த அக அருள் வெளியே பெருஞ்சுக வெளியாகக் குறிக்கப்படுகின்றது

## (9)

571. குணமுதற் கருவிகள் கூடிய பகுதியில்
572. அணைவுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) ஒன்றன் தன்மை அல்லது இயல்பே அதன் குண மாகும். அத்தன்மையால் தான் எல்லா அனுபவமும் பயனும் விளைகின்றனவாதலின், அக் குணத்தைக் கருவியாகவும் கொள்ள லாகின்றது. பலவாகிய பொருள்களுக்கு, தத்துவங்களுக்கு,

இயல்களுக்குக் காரணமாயுள்ள அல்லது துணையாயுள்ளவை குணம் முதலான கருவிகளேயாம். புறப்பொருள்களில் உயிர் களில் பல தன்மைகள் உள்ளனபோல், மனிதனில் அவனது அக வுணர்வில் முக்குணங்கள் தோன்றுகின்றன. முடிவில் அக் குணமெல்லாம் சுத்த அன்பு அல்லது அருளில் அடங்குகின்றதாம். அகத்தில் அன்பென்னும் நற்குணம் விளையுங் காரணமாய்க் கடவுள் அருளே அங்கு காரணக் கருவியாக இருந்து துணைபுரி கின்றதாம். இதனால், அவ்வகவெளியில் முக்குணம் நற்குணமாகி முடிவில் நிர்க்குணமாகி நிமலானந்தம் சித்திக்கச் செய்வதாம்.

### (10)

**573. மனமுதற் கருவிகள் மன்னுயிர் வெளியிடை**

**574. அனமுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி**

(உ-வி) மன்னுயிர் என்பது ஆன்மா, இவ்வான்மாவில், அதன் இயல்குணமாம் அருளே மனமுதற் கருவிகளாய் அமைந் துள்ளது. ஆன்மாவில் அருட்சக்தி நித்த நிறைவுடையதாய் இருக்க, அவ்வான்மாவிலிருந்து ஜீவசக்தி தோன்றி, யொடுங்கு வதாகவுள்ளதாம்.

மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் தத்துவக் கருவிகள் அருளால் சுத்த முற்று, மன்னுயிர் வெளியாகிய ஆகாசத்தில் லயமடைவதாம். இப்படி யொடுங்குவது (அனம்—அன்னம்—சோறு முத்தியாம்) இம் முத்திநிலை எய்தும் பொருட்டே இம்முத்தி முடிவும் முடிவல்ல என்பது சுத்த சன்மார்க்க அனுபவம். சுத்த சன்மார்க்கத்தில் இந்த, அனம், அன்னம் (அ-ன்-அம் மூன்றும், சுத்த, ஞான, பிரணவ தேகத் தைக் குறிக்கும்.) திரி தேக சித்தி வாழ்வைக் குறிப்பதாம்.

### (11)

**575. காலமே முதலிய கருவிகள் கலைவெளி**

**576. ஆலுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி**

(உ-வி) மனவெளியில் அறிவு உணர்வு விளங்கிட, அது தேகேந்திரியத்தில் காரியப்பட்டு வெளியுலகத் தொடர்பு கொண்டு விரிகின்றதாம். இந்த நிலையிலிருந்து, காலம், தூரம்

வண்ணச்சூழ்நிலையாகிய, சூக்கும தூலக் கருவிகளின் துணையால் பலவாகிய கலைகள் தோன்றியுள்ளனவாம். இக்கலைகளின் முடிந்த குறிக்கோள் கடவுணிலை அடைவேயன்றி, கலை பொழுது போக்குக்காக எனவும், கலை பொருளுக்காக எனவும், கலை கலைக் காகவே எனவும் கருதுதல் அபக்குவ மனநிலையாம். அரும் கலை யாவும் தங்கும் இடம் அகவெளியே ஆம். ஆலுதல் என்றால் தங்குதல் என்று பொருளாம். அகண்டமாயுள்ள வெளி ஒன்றே எனினும், அது பல நிலைகளில், பலபல ஆற்றலொடு விளங்கிப் பலபல பயன்களை வழங்கலின் பலவான வெளியாகக் குறிக்கப் படும். காலமே முதலிய கருவிகள் என்றதால், காலம், தூரம், சூழ்நிலை எனக் கொள்ளப்பட்டதாம். இக்கலை வெளியில் மனம் பக்குவப்பட்டுச் சுத்தமுற உள்ளதாம்.

## *(12)*

577. துரிசறு கருவிகள் சுத்தநல் வெளியிடை
578. அரசுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** உலகிடைத் தோற்றுகின்ற அணுஜீவன் முதல், மனிதன் வரையும் உள்ள பிறவிகளுக்கு உள்ளீடாய் அமைந்த ஆன்மாக்கள், இயற்கையில் ஆணவ்மாம் ஒரு மலத்துரிசு உடைய தாம். அவ் ஆணவமலத்துரிசைப் போக்க, முள்ளை முள்ளால் எடுத்தல் போலும், அழுக்கை அழுக்கால் போக்குவது போலும், நஞ்சை மற்றொரு மாற்று நஞ்சால் ஒழிப்பது போலும், ஆண வத்தை, மாயா கன்ம மலங்களாலேயே போக்கவேண்டியுள்ள தாம். உண்மையில் மலமாசும் கடவுளின் அருள்ஒளியேயாம்: அபக்குவத்தில் மலமாசாகவுள்ளதுவே பக்குவத்தில் அருள்தேக மாக விளங்கும். எப்படியெனில், நம் அருட்பெருஞ்ஜோதிக் கடவுள் ஒருவரே, தன் அருள்நிறைவோடு என்றும் விளங்கிக் கொண்டிருக்கின்றது உண்மை நிலையாம். அக்கடவுள்தானே, தனித்தலைமைப் பெரும்பதியாய் உள்ளார். அப்படியுள்ள அவர், இந்த மனிதப் பிறப்பு வடிவத்திலே, மெய்யருள் ஞானத் துடன் வெளிப்படும் இடம் தலைநடுத் தலமாகும். இக்கடவுள் அருள், தன்னையே உணர்த்திக் கொண்டிருக்கிறதை, அதுவே தானாகியுள்ள மனிதன் அவ்வருள் ஞானத்தால் உணர்கின்றான். இந்தக் கடவுள் உண்மையும் மனிதன் உண்மையும் ஆன சிரநடு அருள்ஒளி அணுவே ஆன்மா ஆக இருக்கின்றதாம். இக் கடவு

ளான்ம உண்மையை அறியா அபக்குவ மனிதன், தான் வேறு கடவுள் வேறு எனக் கருதிக் கொண்டிருக்கின்றான். தான் கடவுளுக்கு வேறான ஆன்மா என்பதுதான் ஆணவமலம் எனப் படுவது. மலமாவது மறைப்பு, திரை, பாசம் முதலியனவாகக் கூறப்படுவது. இந்த மறைப்பை போக்கி, இவ்வான்மா என்பது கடவுளின் சிற்றுருவே என உணர்த்தப்படவேண்டி, அவ்வான்மாவைச் சூழவிருக்கும் ஒளியையே பலவாகிய உரு வொடு, ஆற்றலொடு விளங்கச்செய்யப்படுகின்றதாம். அந்த ஒளிச்சூழலும், ஆற்றல் செயலுமே பலபல வடிவங்களாகவும் ஆற்றல்களாகவும் மாறி மாறி வந்து, முடிவில் இம்மனித வடிவும் அருள்ஞான உணர்வுமாகியுள்ளதாம். இந்த நிலையில்தான் இப்பொழுது அந்த அருள் ஒளிக் கடவுளே ''தான்'' ஆக உள்ளதை அறிந்து கொண்டிருக்கின்றான் மனிதன். இப்பொழுது அந்த உண்மையறியாமை ஆணவம் என்பது தெளிவாம். அருளால் ஆணவம் நீக்கப்படுவது இப்போது விளங்கும். இதற்குமேல் சூழ்ந்துள்ள தேகாதியும் அருள்ஒளி என்று அறியப்படலால், மாயையும் கன்மமும் இந்த அருள் ஒளியே என்புதில் ஐயமில்லை. இதிலிருந்து பதி, பசு, பாசம் என்ற முப் பொருளும் ஒன்றான அருள் ஒளிதான் என்பது நன்கு விளங்கும். சுத்த நல்வெளிதான் அருள் ஒளிக் கடவுணிலையமாம் அருள் அம் பலமாம். இதிலிருந்து கொண்டுதான் உலகுயிர்ப் பொருள்களை எல்லாம் ஆள்கின்றார் நம் அருளம்பலத்தரசர்.

## *(13)*

**579. இவ்வெளி யெல்லாம் இலங்கவண் டங்கள்**
**580. அவ்வயின் அமைத்த அருட்பெருஞ் ஜோதி**

**(உ-வி)** இவ்வெளி என்றது, நம் அகத்தே செறிந்துள்ள பிண்டநிலையில் விளங்கும் அருவவெளிப் பகுதிகளாம். இவ் வருவப் பகுதி வெளியோடு அடுத்துள்ள அருவுருவ அருள் ஒளிப் பகுதியுமாம். இவற்றால் பேரின்பத்தை அடையச் செய்யவே நம் பதி புறத்தே பெரும் பிரபஞ்ச வெளியைத் தோற்றுவித்து, அதிலே அனந்த மாகிய சிற்பகுதிப் பிரபஞ்சங்களை வகுத்து, அவற்றுள்ளும் பலவாகிய அண்டகோளங்களையும் நாட்களாக கோட்களாக அமைத்து, அங்கங்கிருந்து ஒளிசெய்து பக்குவ

சக்தியைப் பரப்பி, நம்மைப் பண்படுத்தித் தம் அருட்பெரு நிலைக்கு ஏற்றுகின்றார்.

## 187. அண்டப் பகுதி விரி

### (1)

581. ஓங்கிய வண்டம் ஒளிபெற முச்சுடர்
582. ஆங்கிடை வகுத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) வெளியின் தோற்றம் ஓர் எல்லைக்குட்பட்டதாகக் காணப்படினும் அது உண்மையில் எல்லையற்றதாக விரிந்துள்ள தாம். ஆகையால், தோற்றுகின்றது அகண்டபெருவெளியின் ஒரு சிறு பகுதியேயாம். இதுதான் நம் பிரபஞ்சமாம் அண்டப் பகுதி. இந்தப் பகுதிவெளியில்தான், நம் சூரிய, சந்திர, அக்கினிகளின் ஒளி நிரம்பியிருக்கின்றது. இந்த ஒளியில் சூரியன் ஒன்றே பேரொளிசெய் ஜோதி கோளமாக இருக் கின்றது. சந்திரனுக்கு இயற்கை ஒளியே இல்லை; அக் கினியோ அருகியதாய், பகுதி வெளியில் நீலக்காரொளியாய்க் கலந்து இருக்கின்றதால் அதுவும் புறத்தில் சூரியன் போன்று காணக்கூடியதாயில்லை. ஆனால், இம் மூவொளிகளும் இருந்து தான் இந்த அண்டப்பகுதியின் விளக்கமும், செயலும், உயிர் களின் வாழ்வும் அறிவனுபவ விளைவும் ஏற்பட உதவுகின்றன வாம்.

அந்தப் புற முச்சுடர் விளக்கத்தால், அண்டப் பகுதியில் எல்லா உயிர்களும், பொருள்களும், தோற்றி விளக்கிப் பக்குவ மடைகின்றன. பக்குவ நிறைவில் அந்த முச்சுடர் அனுவபமே முத்தேக சித்தி நிலையாக உள்ளதாம். சூரியன், சந்திரன், அக்கினியே சுத்தசன்மார்க்க சித்தி வாழ்வில், சுத்த, ஞான, பிரணவ தேகங்களாக அனுபவப்படுகின்றனவாம்.

### (2)

583. சிருட்டித் தலைவரை சிருட்டியண் டங்களை
584. அருட்டிறல் வகுத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) இந்தப் பகுதிப் பிரபஞ்சத்தில், படைத்தற் செயல் புரிந்து வருவது பிரமன் என்பர். பிரமன் உண்மையில் ஓர்

ஆன்ம சிற்றணுவேயாம். திருவருளால், உலகெலாம் தோன்றிச் செயல்பட, பல ஆன்மாக்களையும், அவைகளுக்குப் படைப்புத் திறனும் வழங்கியுள்ளார் நம் பதி. சிருட்டித்தலைவர்கள் வாழற்கு என்றே, சிருட்டி அண்டங்களை வழங்கியுள்ளார் நம் பதி. புறத்தில் அண்டப்பகுதி பெரிது. அதிலிருந்து பிள்ளப் பட்ட பிண்டங்கள் மனித உடல் வடிவங்கள். இவ்வடிவிலும் அண்டம் தலையாகவும், த்லைக்குக் கீழ்ப்பகுதி பிண்டமாகவும் உள. இதில் பிண்டமே பெரிது. அண்டம் சிறியதாம். தலையையே அண்டமாகவும் அதன் நடுவுள்ள ஆன்ம அணுவே பிண்டமாகவும் கொள்ளும்போது பிண்டம் மிகச் சிறியதாயிருக் கின்றது. ஆனால் இந்த ஆன்ம பிண்டத்தில் பரம்பொருளின் பூரண இயல்பும் பொதிந்துவைக்கப்பட்டிருப்பதால், இந்த ஆன்ம அணுநிலை நின்றே பிரமனின் படைப்புத்தொழில் புரி கின்றதும் நம் பதியின் ஆற்றல் வெளியீடேயன்றி வேறல்லவாம்.

ஆதியில் திருவருளே படைப்புத் தலைவர்களையும் அவர் களின் அண்டங்களையும் தோற்றுவித்து இருந்தது. பின்னர், சில பல ஆன்மாக்கள் பக்குவமடைந்து தவமுயற்சியால் பிரம பதவி பெற்று படைப்புத் தொழில் நடப்பதாயிற்று. இந்தப் படைப்பு மாயையின் செயல். இதில் உண்மை விளங்காதிருந்தது இதுவரையும். இப்போது திருவருள் உண்மை வெளியாகியுள்ள தால், மாயா சிருட்டியைக் கடந்து அருள் திறலால் அருட்பெருஞ் ஜோதி அனுபவம் பெறக் கூடியதாய் இருக்கின்றதாம். இது தான், இது காறும் வெளிப்படாத சுத்த சன்மார்க்கப் பெருநெறி யின் பெருமை.

**(3)**

**585. காவல் செய் தலைவரைக் காவலண் டங்களை**

**586. ஆவகை யமைத்த அருட்பெருஞ் ஜோதி**

**(உ-வி)** காக்கும் செயல் திருமாலுக்கு உரியது என்பர். இதுபோன்ற எத்தனையோதிருமால்களையும் அவர்களுக்கான அண்டங்களையும் அமைத்துக் கொடுத்தது நம் அருட்பெருஞ் ஜோதியே. மால் பதம் பெற்ற ஆன்மாக்கள் இப்பொழுது காக்குந் தொழில் கொண்டுள்ளனர். இவர்களும் மாயையின் தொடர்பால் அருள் நிலையுறாது அழிவுறுகின்றனர். திருவருளாலே

இன்று சன்மார்க்கி, அந்த மாலையும், அம்மாலின் காவலையும் மதித்துக் கொள்ளாது அருள்ஒளி கொண்டு அழியாநிலை பெறும் வகையைக் கண்டு கொள்ளுகின்றான்.

## (4)

587. அழித்தல்செய் தலைவரை யவரண் டங்களை
588. அழுக்கற வமைத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) கடவுள் அருட்பெருஞ் செயல்களில் அழித்தலும் ஒன்றாம். பக்குவப்படாதவரை, தோன்றித்தோன்றி வளர்ந்து வளர்ந்து முதிர்வனவற்றை அழித்து அழித்துப் புத்துருவில் வருவிக்கச் செய்ய வேண்டியுள்ளது. இவ்வழித்தல் செயலும் தீவண்ண உருத்திரனின் தொழிலாகக் கருதப்படுவது. தீயால் யாவும் எரித்து நீற்றுச் சுத்தமாக்கப்படுவது இயற்கை. இச் சக்தி சித்தி பெற்ற ஆன்மாக்களையே உருத்திரர்கள் என்பர். இது காறும் அவத்தைப்பட்டு அழிந்துபோய்க் கொண்டிருந்த மனிதன், திருவருளால் அழியாமை பெற்று, அழுக்கற்ற சுத்த தேகியாகி விளங்க நேருகின்றதாம்.

## (5)

589. மறைத்திடு தலைவரை மற்றுமண் டங்களை
590. அறத்தொடு வகுத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) அபக்குவ ஆன்மாக்களுக்கு, அழிவுச் செயலால் தேக நீக்கம் ஏற்படுகின்றது. அதற்குப்பின் அவ்வான்மாக்கள் வேறு இடங்களில், வேறு வடிவங்களில் வருவிக்கப்பட வேண்டியுள்ளன. அப்படிப் புத்துரு பெறும்வரை மறைத்திருந்து பக்குவ நிலைக்கு ஏற்றுவது திரோபவச் செயலாம். இதுவே மறைத்தற் றொழில் என்பது. இந்த ஆற்றல் பெற்ற ஆன்மாக்களும் அவர் கள் உறையும் அண்டங்கள் அநேகமும் உளவாம். அவர்களின் செயலால் இன்று மனிதன் அக உண்மையை அறியும் பக்குவம் அடைந்து அருட்பெருஞ்ஜோதியின் தொடர்பு கொள்ளுகின்றான். இனி அம் மறைத்தல் தொழிலுடைய மகேசுவரன் செயல் இவ னுக்கு ஏற்படாது போகின்றதாம். அருட்பெருஞ்ஜோதியின் அறச் செயலின் மாண்பு என்னே!

## (6)

**591.** தெளிவுசெய் தலைவரைத் திகழுமண் டங்களை
**592.** அளிபெற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** ஒவ்வொரு பிறவியிலும் உயிருள் ஒளியாக அக விளக்கம் (அருள் ஒளி) வளர்கின்றது. இவ்வுள் ஒளியை வளர்க்க உதவும் ஆன்மாக்கள் சதாசிவ பதவி பெற்றவர்கள் ஆவர். அவர்களுக்குத் தனி அண்டம் உண்டாம். இந்தப் பதவியினர் கள்தாம் ஆன்மாக்களின் பரிபக்குவம் அறிந்து மேற்பிறப்புக்கு உதவுகின்றனர். இதுவே அருளல் அல்லது அனுக்கிரகச்செயல் என்ப. இன்று சன்மார்க்க பக்குவ மனிதன் அளி பெற்ற, கனி வுற்ற அருள்நிலை ஏற்றுள்ளதாலே, அழிவுறா, மேல் பிறவியுறா நித்திய அனுபவ வாழ்வு அடைகின்றான் இது திருவருளின் பெருஞ்செயலாம். இந்தப் பேறு சதாசிவன் அறியாப் பெரும் பேறாகும்.

## (7)

**593.** விந்துவாஞ் சக்தியை விந்தினண் டங்களை
**594.** அந்திறல் வகுத்த அருட்பெருஞ் ஜோதி

**(உ-வி)** பிரம்மாண்டமுதல், சதாசிவாண்டம் வரையுள்ள நிலைகளில், சில ஆன்மாக்கள் அப்பத முத்தி பெற்றிருந்து கொண்டு, உயிருடம்புக்கு வேண்டிய ஆக்கலாதி ஐந்தொழிலும் புரிகின்றன. இந்நிலைகட்குமேல், ஒளிமயமான விந்துசக்தி அண்டம் உளதாம்; இதிலிருந்து முச்சுடர்கள் அண்டாகாயத் திலும் நமது பிண்டாகாயத்திலும் தோற்றுவிக்கப்பட்டுள்ளன வாம். இவ்விந்து சக்தி பெற்ற முத்தான்மாக்களும் ஏகதேச அருட்சக்தி பெற்றவர்களே. ஆகையால், இவர்களை மதித்து, அருட்பெரும்பதி நிலையுறாது கெடல் சரியன்று. இனி நிறை யருளால் பதிநிலைநின்று வாழும்போது விந்தண்டத்து வியன் ஆற்றலை முழுமையாகப் பெறுவோம். அதனால், விந்தணுவிற் செறிந்திருந்த, ஆன்மஉணர்ச்சி, பிரகிருதி, ஆகாசம் இம்மூன்றும், ஞான, பிரணவ, சுத்த தேகக் கூறாகத் திருவருளால் ஆதியில் அமைக்கப்பட்டிருந்து இப்போது வெளியாகித் திரிதேக சித்தியை வழங்க உள்ளனவாம்.

### (8)

595. ஓங்கார சக்திக ளூற்றவண்டங்களை
596. ஆங்காக வமைத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) சிற்றணுவுக்குள் நின்று சுழித்து எழுந்து இயக்கு கின்றது தோற்றரிய ஓங்கார நாதசக்தி. இதனால், அணுவுள் அதிவேகமான மின் இயக்கம் இருந்து வருகின்றது. இவ் வியக்கக் காரணமாக அணுக்கள் திரண்டு உருவாகி அண்ட பிண்டங்களும் அவற்றின் இயக்கமும் தொற்றியுள்ளன பிரபஞ்ச வெளியில். மேலும், இவ்வெளி நிறை ஓமொலிக்கும் காரணம் இச்சக்தியேயாம். இந்த ஓங்காரசக்தி இப்பொழுது நமக்குப் பிரணவ தேகசித்தியாய் அமைந்திலங்க உள்ளதாம்.

### (9)

597. சத்தத் தலைவரைச் சாற்றுமண் டங்களை
598. அத்தகை வகுத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) ஓங்கார சக்தியால் ஒலியுண்டாகின்றது. இதுவே சகல சத்தங்கட்கும் காரணமாம். சத்த அலைகள் பதிந்து பதிந்து சத்த அண்டங்கள் பல தோற்றியுள்ளன. அவற்றில் சத்தத் தலைவர்கள் (சத்த சக்தியைத் நம்முள் அடக்கி ஆள் கின்றவர்கள்) பலர் வாழ்கின்றனர். இன்றைய அறிவியல் உலகு இந்தச் சத்த சக்தியை, ஒலியியலாகக் கண்டு, பல சாதனை களால், தொலைபேசி, ஒலிபெருக்கி, இசைத்தட்டு, வானொலி, நாடா ஒலிப்பதிவு முதலியனவாக வெளிப்படுத்தியுள்ளது. இவற் றிற்குமேல் திருவருளால் அகமிருந்து உண்மையை வெளிப் படுத்தும் சன்மார்க்கியின் உரையும் ஆற்றலும் எவ்வுலகுக்கும் செல்லாமற்சென்று பரவிப் பெரும்பயன் அளிக்க வல்லதா யுள்ளதாம்.

### (10)

599. நாதமாம் பிரமமும் நாதவண் டங்களும்
600. ஆதரம் வகுத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) ஒலி நீண்டு ஓசையாகி ஏழிசைப்பண்ணாய் விளங்கு கின்றதாம். இவ்விசைப்பண்ணில் மனம் ஒன்றிப் பரவசப்பட்டு

மண்ணில் சாய்ந்துவிடுகின்றனர் சிலர். புறத்தே இவ்விசை யொலிச் சூழலிலிருந்து கொண்டே மெய்ப்பொருள் உணர்வால் அகத்தே உள்ளொளியில் லயமாகி விளங்குவோர் சுகானுபவம் பெறுகின்றார்கள். இதனை நாதப் பிரம்மானுபவம் என்பர். இந்த நாத கீத இசையெல்லாம் மின்காந்த சக்தியால் உலக முற்றும் இமைப்பொழுதில் நிரம்பிவிளங்குவதை இன்று அறிவியல் விந்தைச் செயலால் காண்கின்றோம். இந்த நாதானு பவப் பெரியோர்கள், நவநாத சித்தர்கள் எல்லாம் ஆன்மாக் களே. இவர்களின் உலகு நாத அண்டங்களாம். இவர்களின் அனுபவத்திற்குமேல் அருள்மயமாய் அருட்பெருஞ்ஜோதியோடு இசைந்து வாழவே திருவருட்பா (ஆதரம்-அன்பு) வழி செய் கின்றது.

### *(11)*

***601. பகர்பரா சக்தியைப் பதியுமண் டங்களை***

***602. அகமற வமைத்த அருட்பெருஞ் ஜோதி***

*(உ-வி)* பராசக்தி என்பது, உயர் தெய்வச் சக்தியாம் திருவருளே. இதில் மற்ற உலகியற் சக்திகள் யாவும் தோன்றி யொடுங்கும். பக்குவ ஆன்மாவிலிருந்து அருள் ஒளிச்சக்தி வெளிப்பட்டு பிரபஞ்ச வெளியிலுள்ள ஜோதி சக்தி அண்டத்தில் பதிந்து நின்று, பின்னர் இவ்வுலகிடைத் தோன்றும் மனித ஆன்மாக்களுக்கு அருள் ஒளியைப் பரப்பிக்கொண்டுள்ளதாம். அவ்வருளனுபவம் உண்டாம்போது அகம் அறும், அதாவது அகங்காரம் ஒழியும். இப்பொழுது அருட்பெருஞ்ஜோதி சக்திச் சார்பால் பெருவாழ்வு ஏற்படுகின்றதாம்.

### *(12)*

***603. பரசிவ பதியைப் பரசிவாண் டங்களை***

***604. அரசுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி***

*(உ-வி)* அண்டநிலை விளக்கம் முற்றும் பிண்டான்மாவில் சத்துவமாய் அடங்கியுள்ளதால்தான், அகநிலையில் ஏறஏற புற அண்ட இரகசியமெல்லாம் கண்டு கொள்ளப்படுகின்றதாம்.

சமயமதச் சார்புடைய சிவம், பரசிவம் உபாயஞானத்தையும் உண்மை ஞானத்தையும் விளக்கவந்தனவேயாம். இதற்குமேல் சுத்த சிவானுபவநிலையே, சமய மதாதீத அனுபவ ஞானத்தை வழங்குவதாயுள்ளதாம். இந்நிலையிலிருந்துதான் நமது அருட் பெருஞ்ஜோதிபதி, பரசிவபதி யுண்மையையும், அவர்தம் அண் டத்தையும் ஆள்கின்றதாம்.

### (13)

605. எண்ணில்பல் சக்தியை யெண்ணிலண் டங்களை
606. அண்ணுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) பருப்பொருள்களிலிருந்து ஆற்றல் வெளிப்பட்டு, வெளியில் பரவிச் சென்று பிற இடங்களில் படிந்துத் திரண்டு உருண்டு மற்ற வடிவம் அடைந்துவிடுகின்றதாம். இவ்வண்ணம் அனந்தசக்தியும், அவற்றால் உண்டான அனந்த உலகுகளும் நமது அருட்பெருஞ்ஜோதியினிடத்திருந்தே தோற்றியுள்ளன வாம். இது சுத்த சன்மார்க்கத் தெளிவு. நமது உள்ளத் தளியில், அண்ணுற ஓங்கும் அருட்பெருஞ்ஜோதியே எல்லாச் சக்திகளையும் அவற்றிற்குரிய எல்லா அண்டங் களையும் படைத்துள்ளதை இன்று கண்டு அந்நிலை நின்று சூழ்நர்க்குத் தயவுசெய்து இன்புடன் வாழ்ந்து வருவதுதான் கடவுளாணை.

### (14)

607. அளவில்பல் சத்தரை அளவிலண் டங்களை
608. அளவற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) பலவாகிய சக்திகளைக் கைவரப்பெற்ற சத்தர் களாகிய ஆன்மாக்கள், பலவாகிய அண்டங்களில் தங்கி உறை கின்றனர். இந்த நம் ஒரு பிரபஞ்சத்திலேயே இப்படி இருக்க, அளவு கடந்து விரிந்துள்ள மகாபிரபஞ்சத்திலே உறைகின்ற சத்தர்களையும் அவர்தம் உலகுகளையும் இவ்வளவு என்று கணக் கிட்டுக் கூறுதல் எங்ஙனமாமோ? இப்பெரு நிலை நமது அருட் பெருஞ் ஜோதியின் பெருமையை யன்றோ உணர்த்துகின்றது!

## (15)

**609. உயிர்வகை யண்டம் உலப்பில எண்ணில**

**610. அயர்வற வகுத்த அருட்பெருஞ் ஜோதி**

**(உ-வி)** சிற்றண்டம் ஆகிய அணுவிலே, உலகிலே உள்ள அனந்தவண்ண பேத ஜீவர்களுக்காம் உயிர்ச்சக்தியை, அதற் கதற்காம் நிறைகுண இயல்போடு அடக்கிவைத்துள்ளார் நம் பதி. இத்னால்தான் இவ்வுலகச் சிருஷ்டியில், ஆதி உயிரினங் கள் யாவும் அவ்வணுநிலையினின்றே முதலில் வெளிப்பட்டுப் பின்னர் சேர்க்கையால் இணைகூடிக் கருவேற்றுப் பலவாகத் தோன்றிப் பல்கிப் பெருகியுள்ளனவாம். ஆகவே, உயிர்ச்சக்தி அடங்கிய அண்டங்கள் எண்ணிலி கோடியா யுள்ளனவாம். திரு வருள் லட்சிய வாழ்வில் தழைக்கும் நாம் தயவோடு உயிர்ச் சக்தியை வளர்த்தல் வேண்டுமேயன்றி உயிர்ச்சக்தியைப் புலன் இன்ப வாழ்விற்காக அழித்தல் கூடாது. இதனால், புலையண்டம் (முட்டை) கொள்ளக்கூடாது.

## 188. கடல்வகை

## (1)

**611. களவில கடல்வகை கங்கில கரையில**

**612. அளவில வகுத்த அருட்பெருஞ் ஜோதி**

**(உ-வி)** முன் அடிகளில் பொதுவாகப் பூதாண்டங்களையும் அவற்றின் ஆற்றல்கள்ளையும் தோற்றங்களையும் நம் பதி ஆதியில், அமைத்துள்ளதைப் பற்றியும் பின்னர் யாவும் பக்குவத்தே வெளிப்பட்டு வருவதைக் குறித்தும் விளக்கியுள்ளார் நம் வள்ளற் பெருமான். அவ்வண்ட வகைகளிலே சிறந்த நம் நிலவுலக அண்டத்தையும் இதுபோன்றிலங்கும் எத்தனையோ, மக்கள்வாழ் உலகங்களையும் அமைத்துள்ளார் நம் பதி. பிற கோளண்டங் களில் அபக்குவான்மாக்களே வேறு பல வாகிய உயிரின வடிவிகளாய் இருப்பனவாம் இந்நிலவுலக, உயிர்களின் நல்லின்ப வாழ்வுக்குத் தேவையான உயிர்க்காற்றுக்கு அடுத்தபடி நீரே முக்கியமாயிருக்கின்றதாம். உலகில் நீர்நிலைகள், பரவி ஆழ்ந்து பெருங்கடல்களாய் விளங்குகின்றனவாம். இப் பூ உலகில் நீர்ப்

பரப்பே அதிகமாயுள்ளது. இந்நீர்ப்பரப்பின் இடைஇடையே தான் நிலப்பகுதிகள் உயர்ந்திலங்கக் கடலால் சூழப்பட்டுள்ள னவாய்த் தோற்றுகின்றன. இக்கடல்கள் வளமிக்கவை, களவற் றவை (அதாவது வஞ்சகமின்றி) நமக்கு, மாமழையையும், கடல் படு பொருள்கள், ஆற்றல்கள் பலவையும் வழங்கி வழங்கி வாழ் விக்கின்றனவாம். மேலும் அக்கடல்கள் எல்லையும் வரம்பும் இன்றி, ஆனால் தம் எல்லையை மீறிக்கடவாது விளங்குகின்றன வாம். இப்படி எண்ணிறைந்த கடல்களை அமைத்து, நிலைபெறுத் திக் காத்து வருகின்றார் நம் அருட்ஜோதிபதி.

## (2)

613. கடலவை யனைத்துங் கரையின்றி நிலைபெற
614. அடலன வமைத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) வடவை, வடவமுகாக்கினி, வடவாக்கினி என்ற தீ, பூமியின் அக நடுவிலிருந்து மேனோக்கி அதாவது வடதுருவம் நோக்கித் தகித்துக்கொண்டுள்ளதுவாம். இதனால், பூநடு ஈர்ப் புச் சக்தியும், மின்காந்த ஆற்றலும் உண்டாகி, நிலமேற் பரப்பி லுள்ள பெருங்கடல்நீர் முழுவதையும், பிற பொருள்களையும், உயிரினங்களையும் பூமி தன்பால் வைத்து வளர்த்து வருகின்ற தாம்.

வடவனலை உள்வைத்து சப்தசாகர உலகை இலங்கச் செய் கின்றதே போல், நமது பிண்ட உடலில் உத்தரபாகத்தில் மூலாக்கினியை உள்வைத்துச் சப்ததாதுக்களாலான இவ்வுடலை நன்கு வளர்ந்தோங்கி விளங்க உதவிவருகின்றார் நமது அருட் பெருஞ்ஜோதி ஆண்டவர்.

## (3)

615. கடல்களும் மலைகளுங் கதிகளு நதிகளும்
616. அடலுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) எல்லா உயிரினங்களும் நன்கு வாழ்ந்து இன்புற என்றே, நீரை எங்கும் அடையச்செய்ய வேண்டியுள்ளது. இதனாலே, அந்நீருக்குக் கீழ்நோக்கி நெகிழ்ந்தோடிப் பரவும்

தன்மையை அமைத்துள்ளார் போலும் நம் பதி. தாழ்ந்த கடல் நிலையிலுள்ள, அசுத்த உவர்நீரை சுத்த அமுதநீராக மாற்றி உயர்மலைகளிலும், சரிவுகளிலும், நிலப்பகுதிகளிலும் தோன்றி விளங்கும் தாவரங்களையும், பிறந்து வளரும் உயிரினங்களையும் செழிக்கச்செய்ய முகில் மழையும், பனி மூட்டங்களையும் ஏற் படுத்தியுள்ளார் ஆண்டவர்.

உயர்மலைப் பிரதேசங்களில் பொழியும் மழை பல துளிப் பெரு வெள்ளமாகிப் பாய்ந்தோடி அருவிகளாயும், பெருநீர் வீழ்ச்சிகளாயும் இறங்கி ஆறுகளாக ஓடுகின்றன. அவ்வாறு களே நீர் குறைந்த காலத்தில் (ஆறு=)வழிகளாக அமைந்து, மக்கள் போக வரவும், அங்கங்கு குடியேறி வாழவும் உதவு கின்றனவாம். இப்படி ஆற்றங்கரையில்தான் மக்கள் வாழ்வும் நாகரீகமும் வளர்ந்து வந்திருக்கின்றன. அறிவும் அனுபவமும் ஏற, மனிதன் நீரின் வேகத்தினாலும், இயல்பாலும் எத்தனையோ அறிவியற் சாதனைகளால் நன்மைகளைக் கண்டிருக்கின்றான்.

அடல் உற என்றால், ஆற்றல் பெற எனப் பொருளாம். அடுதல் என்றால், சுடுதல், சமைத்தல் என்ற பொருளும் உண்டு. ஆதலின் இங்கு அடலுற என்பதனை, அகம்வளர் அருட்ஜோதி யால் அசுத்த மல உடம்பை வேதித்துச் சுத்த அருள் ஒளித் தேகமாய்ப் பக்குவப்படுத்தல் என்ற உண்மையைக் குறிக்க வந்த தாய்க் கொள்ளுதல் சிறப்பாம்.

## (4)

**617. கடலிடைப் பல்வளங் கணித்ததிற் பல்லுயிர்**
**618. அடலுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி**

(உ-வி) உப்பு வகைகளும், இரத்தின வகைகளும், பாஷாண வகைகளும் நீர்த்தாவர வகைகளும் ஆகிய பல வளங்களைக் கொண்டுள்ள கடல்களில், சங்கு சிப்பிகளும் மீனினங்களும் மற்றும் பலவான உயிரின்ங்களும் தோன்றி விருத்தியாகின்றன. வாழ்க்கைப்போரில் ஆற்றல் குன்றிய, அறிவுவிளக்கம் குறைந்த கீழான உயிரினங்கள், நியதிப்படித் தோற்றுமடிய, வென்ற உயிரினங்கள் வாழ்வில் மேலேறுகின்றன. உடன் அத் தோல்வியில் மடிந்த உயிர்களுக்கும் திருவருளால் மேல்வகைப் பிறவி வழங்கப்படுகின்றனவாம். மனிதனாகி உயிரனுபவம் மேல் அருளனுபவம் பெற வகுத்து வழங்கப்பட்டமுறை யிதுவாகும்.

## 189. மலைவளம்

619. மலையிடைப் பல்வளம் வருத்ததிற் பல்லுயிர்
620. அலைவற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

(உ-வி) பூமியின் மூலக்கனலால் உள்ளுருகிய தாதுக்களின், பிற பொருட்களின் அனற்குழம்பு மேல்நோக்கிக் கிளம்பி, புவியின் மேற்பரப்பைக் கிழித்துக் கொண்டு வேகமாக எழுந்து, பின் சற்றுத் தணிந்து நிலப்பரப்பில் மலைகளாகக் குவிந்து. கல்லாய் மண்ணாய் உறைந்துபோயுள்ளனவாம். இந்த மலை களிற்றான் பலவாகிய உயிரினங்களும் தாவரங்களும் தோன்றி யுள்ளன; உலோகத் தாதுக்களும் கலந்து படிந்து கிடக்கின்றன வாம். ஆதியில் மக்களினமும் மலையிடைத் தோன்றி பல்வளனும் கொண்டு பல்கிப் பெருகியுள்ளதாம்.

நிலநடுக்கோட்டு எல்லையில் பூமியின் சுழற்சிவேகம் அதிகம். ஆதலின், அங்குதான் முதலில் இறுக்கமும், எழுச்சியும், உறைவும் உண்டாகியிருந்தது. அதிலும் நீர்மட்டத்திற்குமேலேதான் உயர்மலையிடத்தில் யாவும் தோன்றினதாக உணர்கின்றனன் அறிவியலான் கூட. இதனால் மனித இனமும் மலைமேல் தோன் றியதே என்பது தெளிவு. மலைமீது இருந்துதான் நெற்றிக் கண்ணால் கந்தழி சோதியைக் கண்டு வழிபட்டான். அதுவே பின்னர் கந்தனாக, குறிஞ்சிக் கடவுளாக, முருகனாக விளங்கலா யிற்றாம். குன்றுதோறாடிய குமரனைத்தான் பழந்தமிழன் வழி பட்டான். அகத்தியரும் வழிபட்டு அருஞ்சித்திகள் பலவும் பெற்றார் என்ப. மலையில் சுத்தக் காற்றும், பனி நீரும், மழை நீரும் தங்கிப்பல்வளங்களை யுண்டுபண்ணியுள்ளன. மூலிகைகளும் அதிகம் தோன்றியுள்ள இடம் இம்மலையேதான். இதனால் மலை யகராதி என்ற நூலே இயற்றி மூலிகை முதலானவற்றை எவ் வளவோ விளக்கியுள்ளனர் முன்னோர்கள்.

இவ்வளவையும் கடவுள் ஏன் படைத்துள்ளார் எனின், பலவாகிய உயிர்களும் தோன்றி வளர்ந்து அறிவுப்பக்குவ மடைந்து உண்மை கண்டு அதிலே ஒன்றி அலைவற நிற்றற்கே யாம். அப்படி அலைவற் றடங்கிப்போனவர்கள் வாழ்வையும் இழந்து செயலற்றுக் கிடக்கத்தான் முடிந்ததாம். ஆனால், இத் தருணம் அருட்பெருஞ் ஜோதியின் கருணையால், அகத்தே அலைவற இருந்துகொண்டு, இவ்வுலகிலும் அலைந்தலைந்து அவத்தைப்பட்டொழியாது, அசைவற, நிலைபெற, இருந்து கொண்டு சுத்த சுகானந்தமாய் வாழ்வுபெற வேண்டுமென்பது தான் திருவருளாணையாம்.

